

உ

சிவமயம்.



ஸ்ரீலஸ்ரீ நடேச ஞான தேசிக ஸ்வாமி



உ

சிவமயம்.



ஸ்ரீலஸ்ரீ நடேச ஞான தேசிக ஸ்வாமி



தருமபுர ஆதீன குருமுதல்வர்,
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய ஸ்வாமிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

தருமபுர ஆதீன முதற்குரவர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

மன்மத ஹு வைகாசி மீ உஅ உ

11—6—1955.



தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# திரு ஞான சம்பந்த மூர்த்தி நாயனுர்

அருளிச்செய்த

# தேவாரப் பதிகங்கள்

## மூன்ருவது திருமுறை

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருவருளாணையால் வெளியிடப்பெற்றது.



உரிமைப் பதிவு　　1955　　தருமபுர ஆதீனம்

பதிப்பாளர்

வித்துவான்

ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

கட்டளை விசாரணை, திருநள்ளாறு தேவஸ்தானம்.

குறிப்புரையாசிரியர்

திரு. பண்டித. அ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

தமிழாசிரியர், ஆதீனத் தேவாரப் பாடசாலை, தருமபுரம்.

பதிப்பகம்

ஞானசம்பந்தம் அச்சகம்,

தருமபுரம்.

# பொருளடக்கம்

# படங்களின் அட்டவணை

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# முன்னுரை

இது 'திருநெறிய தமிழ்'. திரு என்பது 'திருவே என் செல்வமே தேனே' என்பதில் சிவபிரானையும், 'திருவொளி காணிய பேதுறுகின்ற திசைமுகன்' என்பதில் திருவருளையும், 'சிவமேபெறுந்திரு எய்திற்றிலேன்' என்பதில் பேரின்பத்தையும் குறிக்கின்றது. 'திருவொடும் அகலாதே அருந்துணைவனாய் ஆண்டுகொண்டருளிய அற்புதம் அறியேனே' எனத் திருவருளையும், 'என் உளம்புகுந்த திருவந்தவாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ' எனச் சிவபிரானையும், 'அடியோம் திருவைப் பரவி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என அம்மூன்றையும் குறித்தல் ஆளுடைய அடிகள் திருவாசகத்தாலும் அறியலாம்.

'செப்பரிய அயனொடுமால் சிந்தித்தும் தெரிவரிய அப்பெரியதிரு' 'சென்றடையாததிரு' என்றமையால், திருநெறி என்பது சிவநெறி, அருள்நெறி, பேரின்பநெறி என்ற பொருள் பயப்பதாகும். திருவடி, திருவருள் முதலியவற்றை இருபெயரொட்டாகக்கொள்வதே பொருத்தம். திருவாரூர், திருநள்ளாறு முதலியவற்றைப் போலக் கொள்ளல் பொருந்தாது.

துன்பம் அற, அழியாத இன்பம் உறச் செல்லும் வழியையும், அவ்வழியின் ஒழுகும் ஒழுக்கத்தையும், அவ்வொழுக்கத்தின் நீங்காத நீதியையும் நெறி என்பர். மார்க்கம், சமயம், மதம் என்ற பொருளிலே 'நெறி' என்ற பெயர் ஆளப்படுகின்றது. நெறி பல. அவற்றுள், வேதநெறியும் ஆகமநெறியுமே சிறந்த நெறி. அவ்விரண்டும் முறையே பொதுவும் சிறப்பும் ஆகும். பொதுநெறியாதலின் 'வேதநெறி தழைத்தோங்க' என்றும், சிறப்புநெறியாதலின் 'மிகு சைவத் துறை விளங்க' என்றும், அன்பே சிவமாதலின், 'பூதபரம்பரை பொலிய' என்றும் அருளினார் சேக்கிழார் பெருமானார். திருநெறி சரியை கிரியை யோகம் மூன்றும் அநுட்டித்துவந்த நல்லோர்க்கு விளங்கும் ஞான நன்னெறி. முன்னெறி சரியை, செந்நெறி கிரியை, ஒளிநெறி யோகம், திருநெறி ஞானம் எனக் கொள்ளவும் திருமுறைச் சான்றுகள் இருக்கின்றன. 'திருநெறி அருளே கண்ணாச் செல்நெறி என்றருளினார்' உமாபதிசிவனார்.

'திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிது ஆம்'. இங்குத் 'தமிழ்' திருப்பதிகத்தைக் குறிக்கும். இவ்வாறே ஏனையவற்றிலும் உணர்க. 'நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன்' என்றால் தமிழ் எது?

திருஞானசம்பந்தர் அருளிய திருமுறைகளுள் முதலாவது, வித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகர் எழுதிய குறிப்புரையுடன் ஆதீன வெளியீடாக முதலில் வந்தது. இரண்டாவது அடியேன் எழுதிய ஆராய்ச்சிக் குறிப்பு முதலியவற்றுடன் வெளிவந்தது. இம் மூன்றாவது திருமுறை திரு. பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை எழுதிய குறிப்புரையுடையதாயும், அவ்விரண்டனையும் போலத் தலங்களின் வரலாற்றுக் குறிப்பு, கல்வெட்டுச் செய்திகள் முதலியவற்றைக் கொண்டதாயும் தமிழுலகிற்குக் கிடைக்கின்றது.

திருமுறைகளுக்கு உரை எழுதலாகாது என்று பாடிய காலம்போயிற்று. இக்காலச் சைவமக்களுணர்ச்சியின் நிலையை நோக்கி உரையுடன் விளங்கவேண்டும் என்ற பேரிரக்கம், இத் தருமையாதீனத்து 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுள்ளத்தில் எழுந்தது. அப்பேரிரக்கத்தின் ஒரு சிறிதே இம் மூன்று திருமுறைகளின் உரைவடிவம் ஆகி, சைவ மக்களுக்கும் சமயவுணர்ச்சியிற் பொதுமைதவிராத ஏனைய மக்களுக்கும் மிக்கபயன் விளைக்கின்றது. விளைத்ததால் இவ்வுலகம் அவர்கள் திருவடிகளை மறவாமல் போற்றும் கடமைக்கு உரியதாகும்.

இனி, திருநாவுக்கரசு நாயனார் அருளிய திருமுறைகள் முதலியனவும் இம்முறையில் வெளிவரும் என்று ஆலவாய்ச் சொக்கலிங்கப்பெருமான் திருவருளையும் தருமைக் குருவருளையும் இடைவிடாமல் எண்ணிப் போற்றி வாழ்த்திவருகின்றேன்.

இவ் வெளியீட்டின் பாராட்டுரையை அருளியதற்கு, திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசலதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவடிமலர்கட்கு முப்பொறித்தூய்மையொடுகூடிய அடியேன் வணக்கம் உரியது. வாழ்க திருநெறிய தமிழ்!

அடியார்க்கு அடியன்,

முத்து. சு. மாணிக்கவாசகன்.

தருமபுர ஆதீனம்
11—6—1955.

உ

குருபாதம்

திருவண்ணாமலையாதீனம் குன்றக்குடி மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அருளிய

# பாராட்டுரை

*திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருமுறைகளுள்ளும் மூன்றாந்திருமுறை உச்சிமேற்கொள்ளத்தக்கது. "ஞாலம் நின்புகழே மிகவேண்டும்" என்ற விண்ணப்பத் திருப் பதிகம் இத் திருமுறையிலேயே உள்ளது. ஆம்; தமிழகத்தின் தனி நெறியான சிவநெறியே ஞாலநெறி, பலருக்கும்பொது நெறி. இம்மையேயன்றி மறுமையும் எழுமையும் இன்பந்தரும் திருநெறி. இந்நெறிநின்று உலகுயிர்கள் வாழ்தல் வேண்டும். யாண்டும் எங்கும் எல்லோரும் சைவமாம் சமயம் சார்ந்து நல்வாழ்வு பெறுதல் வேண்டும் என்று விண்ணப்பிக்கும் திருப்பதிகம் சாலவும் முதன்மை யுடைத்து. பக்திச்சுவைநனி சொட்டச்சொட்டப் பாடிய சேக்கிழார்பெருமான் வியந்து வாழ்த்தும் திருப்பாசுரத் திருப் பதிகமும் இத் திருமுறையிலேயே உள்ளது. சைவத் திருநெறியின் பெருமையைக் காப்பாற்றிய பதிகம் திருப் பாசுரம். தமிழகத்தின் தண்ணீரும் சைவத் தமிழ் நுகர்ந்து அநுபவிக்கும் தகுதி உடையனவென்பது. இருள் நீக்கி இன்பப் பெருவாழ்வுதரும் திருவைந்தெழுத்துத் திருப்பதிகம் இத்திருமுறையின்கண்ணேயே உளது. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதி உயர்வடைதற்குப் பயன்பெறும் முறையில் இத் திருமுறை ஆண்மக்களை நோக்கி வருகிறது*

பண்டித. அ. கந்தசாமிப் பிள்ளை அவர்களின் நல்ல பொருட் குறிப்புரை மிகவும் பயனுடைமை பயக்கவிருக்கிறது. பழம் புலவர் வரிசையைச் சேர்ந்த முதுபெரும் புலவர், திரு. பிள்ளை அவர்கள் ஆங்காங்கு விளக்கிக் கூறிய உரைகளும் எடுத்துக்காட்டியுள்ள மேற்கோள்களும் திருமுறைப் பாடல்களைப் பலரும் எளிதில் படித்து அனுபவிக்கத் தூண்டுகிறது. புத்தக முகப்பில் அமைந்துள்ள பெரும் பொருட் கட்டுரைகள் நூலுக்குள் நுழைய ஆற்றுப்படுத்து கின்றன. சைவசித்தாந்த தத்துவ உணர்ச்சியோடு எழுதப் பெற்றுள்ள அடியார் பெருமை சிறப்புற அமைந்துள்ளது. சிங்காரவேலவனுடைய இயற்கைப் பொருள்விளக்கக் கட்டுரை வியத்தகு முறையில் அமைந்து படிக்குந்தோறும் இன்பந்தருகிறது. இத்தகு சீரிய முறையில் திருமுறையை அச்சிட்டு வழங்கியுள்ளது திருத்தருமையாதீனம். திருத் தருமையாதீனத்தின் தொண்டுகள் பலப்பல. தருமையும் கமலையும் விரித்தமிழ்க்கூடலும் திருநகராக அமைவுற்றிருந்து மேன்மைகொள் சைவநெறியும் செந்தமிழும் புரந்தருளும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவருளுக்கு நெஞ்சங் கலந்த நன்றி. சைவத் தமிழுலகு அருளாட்சியை வாழ்த்து கிறது. இவ்வையகம் வாழ்வதற்காக வாழ்த்துகிறது.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

தருமபுர ஆதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

# திருவடி வணக்கம்

ஏவர்இது காறும்ஒரு திருமுறையின் தெளிபொருளை
எழுதச் செய்தார் ?
தேவர்முனி வரர்முதலோர் அறிவரிய மெய்ப்பொருளே
சிறியேம் உய்யச்
சேவடிஎம் முடிபடியக் குருவடிவாம் சுப்ரமண்ய
சிவமே ஆகும்.
பூவருளம் விளக்கமுறப் பொருளுரைக்கப் புரிந்தஅவர்
புகழே போற்றி.

பாரியொடு காரிஎழில் ஓரிமுத லோர்கொடையைப்
பாட்டிற் கேட்டோம்
ஓரிமியும் புலமையுணர்ந் தளிப்பார்இல் லாதொழிந்த
உலகில் இன்றும்
வாரிவழங் கிடும்பெருமான் தருமைமகே சுரகுருவாய்
வயங்கும் எம்மான்
காரிணையா காததிருக் கையர் அன்பர் முடிவாழ்பூங்
கால்கள் போற்றி.

வாழியநற் சுப்பிரம ணியபரமா சாரியர்தாள்
வணங்குந் தொண்டர்
வாழியசீர்த் தருமபுர ஆதீனம் வாழியசி
வால யங்கள்
வாழியவெண் ணீறுவிழி மணிதிருவைந் தெழுத்திறைவன்
வழிபா டெங்கும்
வாழியதண் புனல்வீழ்ந்து வேந்தோங்கித் திருமுறைகள்
மறைகள் போற்றி.

அடியார்க்கு அடியன்,

முத்து. சு. மாணிக்கவாசகன்.

உ
சிவமயம்

# நன்றியறிதலுரை

இத் திருமுறையில் உள்ள குறிப்புரையை எழுதியவர் திருவாளர். பண்டித. அ. கந்தசாமிப்பிள்ளை ஆவார். அவர் வழிவழிவந்த தமிழ்ப்புலவர். சைவப்பற்றுமிக்கவர். சிவபூசை புரியவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டித பரீட்சையில் தேர்ச்சிபெற்றவர். அரசினர் கல்லூரியில் ஆசிரியராயிருந்து ஓய்வுபெற்றவர். அவரது புலமைத் திறத்தை இதிலுள்ள குறிப்புரைகளால் அறியலாம். அவர், ஓராண்டு, இத்திருத் தருமையில் வாழ்ந்திருந்து இத் திருமுறைத் தொண்டு புரிந்தார். நம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள் திருவுள்ளக் கருணைக்கு உரியவராயிருந்து, குறிப்புரை எழுதி உதவிய அவர்கட்கு ஆதீனத்தின் நன்றியும் குருவருள் வாழ்த்தும் உரியன ஆகும்.

தல வரலாறும் கல்வெட்டுச் செய்தியும் எழுதி உதவியவர் வித்துவான், திருவாளர். வை. சுந்தரேச வாண்டையார் ஆவார். அவர் இவ்வாதீனத்திற்குத் தொண்டுபூண்ட புலவர் கூட்டத்துள் ஒருவர். அன்பு பொங்கி வழியும் இன்ப நெஞ்சினர். குருவருளால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சிப் புலவருள் ஒருவராய் வாழ்கின்றவர். அவர்க்கும், ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதிய தருமைப் பல்கலைக் கல்லூரி ஆசிரியர்கள் வித்துவான் திரு. சொ. சிங்காரவேலு அவர்களுக்கும், வித்துவான், திரு. வி. சா. குருசாமி அவர்களுக்கும், அச்சுப்பிழை திருத்தம் முதலியவற்றில் பெரிதும் உதவிபுரிந்த தருமைப் பல்கலைக் கல்லூரி முதல்வர் திரு. கி. இராமலிங்க முதலியார் எம். ஏ., அவர்கட்கும், தருமைப் பல்கலைக் கல்லூரி ஆசிரியர் வித்துவான், திரு ச. சேதுசுப்பிரமணியப் பிள்ளை அவர்கட்கும், வடமொழிப் பேராசிரியர் சிரோமணி பிர்மஸ்ரீ கே. இராஜகோபால சாஸ்திரிகள் அவர்கட்கும், தருமைத் தமிழ் உயர்பள்ளித் தமிழாசிரியர், வடமொழிச்சிரோமணி, தென்மொழி வித்துவான், திரு. வி. சபேசன் அவர்களுக்கும் ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருவருளும் தருமைக் குருவருளும் என்றும் இன்பம் பெருகத் துணைசெய்க.

அடியார்க்கு அடியன்,
முத்து. சு. மாணிக்கவாசகன்.

உ
சிவமயம்
சைவசமயகுரவர் திருவடி வாழ்க

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

எழுதியவர்

தருமபுர ஆதீன வித்துவான், பல்கலைக்கல்லூரி வைஸ்பிரின்ஸ்பால், சித்தாந்த ரத்நாகரம், மதுரகவி,

**புலவர், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்**

திருஞானசம்பந்தர் சீகாழியில் சிவபாதவிருதயர்க்கும் பகவதிக்கும் கௌணிய கோத்திர சிகாமணியாய்த் தோன்றியவர். மூன்றுவது வயதில், திருக்குளக்கரையில், திருத்தோணியப்பர் அம்மையுடன் எழுந்தருளி நல்கிய ஞானப்பால் உண்டதால் திருஞானசம்பந்தர் ஆனார். 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கிய திருப்பதிகம் பாடிச் சுட்டுதற்கு எட்டாத கடவுளைச் சுட்டிக் காட்டினார். திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்றார். பல தலங்களை அடைந்து தரிசித்துப் பாடியுள்ளார். திருநீலகண்டப்பெரும்பாணர்க்குத் தம் அருட்பாக்களை யாழில் அமைத்து இசைக்கும் வரங்கொடுத்தவர். திருநெல்வாயில் அரத்துறையில் முத்துப்பல்லக்கு, முத்துக்குடை, முத்துச்சின்னங்கள் பெற்றார். உபநயனம் புரியுங்கால், ஓதியுணர்ந்த அந்தணர்க்கு ஓதாதுணர்ந்த நம் பெருமானார் ஐயம்திரிபகற்றி, ஐந்தெழுத்தின் பெருமையெல்லாம் உபதேசித்தருளினார்.

திருநாவுக்கரசரொடு கூடியிருந்தார். அவர்க்கு 'அப்பர்' என்ற திருப்பெயர் உண்டானது, இவர் அழைத்ததால்தான். திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழவன் புதல்வியைப் பற்றிய முயலகன் என்னும் நோயை நீக்கினார். திருக்கொடிமாடச்செங்குன்றூரில் நச்சுக்காய்ச்சலைத் தவிர்த்து அடியரைக் காத்தார். திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தரைப் பெற்றார். திருவாவடுதுறையில் உலவாக்கிழியாக ஆயிரம் பொன் பெற்றார். திருத்தருமபுரத்தில் யாழ்மூரிப் பதிகம் பாடி, அருட்பாடல் கருவியில் அடங்காத சிறப்பைப் புலப்படுத்தினார்.

திருமருகலில், பாம்புகடித்திறந்த வணிகனை உயிர்த்தெழச் செய்து, பெருவாழ்வுநல்கி, அவனையேநம்பியிருந்த திக்கில்லாத

வளுக்குத் தெய்வத்துணையானார். திருச்செங்காட்டங்குடியை யும், திருப்புகலூரையும் தரிசித்தார். சிறுத்தொண்டர், முருகர் முதலிய நாயனாரைச் சிறப்பித்துப் பாடினார். அங்கும் அப்பரைக் கூடினார். திருவாரூரில் திருவாரூரைச் சிறப்புரைத்தார். திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சத்தை ஒழித்தார். திருமறைக்காட்டில் அப்பருடன் கூடி, பாடித் திருக்கதவைத் திறந்து மூடுஞ் சீருடையதாக்கினார்.

திருமதுரையில் சென்று, மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் சிறப்பித்தார். அரசன் வெப்பு நீங்கித் தப்பும்படி திருநீற்றுப் பதிகத்தை அருளினார். அங்கு, தம் மடத்தில் இட்ட தீயை அரசனுக்கு வெப்புநோயாக்கினார். தீயில் இட்ட ஏட்டைப் பச்சையாகக்காட்டினார். நீரிலிட்ட ஏடு எதிரேறிச்செல்லும்பாட்டினார் ஆனார். சைவர்மடத்தில் தீவைத்த காரணத்தால் கழுவேறியவர்களை விலக்காதிருந்தார். 'வேந் தனும் ஓங்குக' என்று வாழ்த்திப் பாண்டியன் கூன் நிமிரச் செய்தார். பாண்டிநாடு, புறச்சமய இருளின் நீங்கித் திருநீற் றொளியொடு விளங்கித் திருநெறியில் ஒழுகிற்று.

திருக்கொள்ளம்பூதூரில் ஓடம்போக்கினார். போதிமங்கை யில் எதிர்த்த புத்தநந்தியின் தலைமேல் இடிவிழ வைத்த நந்தியா யினார். சிவிகையைத் தாங்கிய அப்பரைப்போற்றிச் சின்னாள் திருப்பூந்துருத்தியில் இருந்தார். ஒருவரையொருவர் உசாவிப் பாண்டிநாடு தொண்டைநாடுகளின் தரிசன விசேடங்களை அறிந்தனர். திருவோத்தூரில் ஆண் பனைகளைப் பெண் பனை களாக்கினார். திருமயிலாப்பூரில், தமக்கென்றிருந்து பாம்பு கடித்திறந்த பூம்பாவையின் எலும்பைக்கொண்டு, திருப்பதிகம் பாடி, உயிருடைய உருவமாக்கியருளினார்; வீட்டையும் காட்டினார். திருநல்லூர்ப்பெருமணத்தில் நம்பாண்டார்நம்பிகள் திருமகளை மணம்புரியுங்கால், இவளொடும் சிவனடி சேர்வன் என்று திருக்கோயிலை உற்றுத்திருப்பதிகம் பாடினார். திருமணம் காணவந்தார் எல்லாரும் அருள்மணம் புரிந்து அழியா இன்பம் அடைகின்றனர். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடிய திருவைந்தெழுத்தின் பெருமையே எல்லா நலங்களுக்கும் காரணம். 'நமச்சிவாய வாழ்க'

திருஞானசம்பந்தர் திருவடி வாழ்க.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அருளிய

திருமுறைகளின்

# சிற்ருராய்ச்சிப்

# பெரும் பொருட் கட்டுரைகள்

தருமை ஆதீன வித்துவான்,

முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்

## க அடியார் பெருமை

திருவடியை உணராமல் அடியவர் என்னும் பெயர்ப் பொருளை உணர்வது அரிதினும் அரிதாகும். உடம்புடைய உயிர்கட்குப் பெரும்பாலும் அவ்வுடம்பின் அடிப்பகுதியை அடி என்பது வெளிப்படை. உருவம், அருவம், அருவுருவம் மூன்றும் இல்லாத கடவுளுக்கு அடி உண்டு என்ருல், உருவத்தில் கொள்ளும் அடி அல்லாத வேறு அடியே அங்குக் கொள்ளற்பாலது.

உருவத்தில் உள்ள அடி அருவுருவத்திலும் அருவத்திலும் இருத்தல் கூடாது. இருப்பின், அருவம் என்றும் அருவுருவம் என்றும் சொல்லப்பெறுமோ? உருவம் என்றே கொள்ளப் படும். அம் மூவகை வடிவங்களையும் கடந்த பெருநிலையில், உணர்ந்து வழிபடப் பெறும் அடி உண்டு. அத் திருவடியை அடையும் பொருட்டே, உருவத் திருவடியைக் கொள்ளல் வேண்டும். திருக்கோயில்களில் திருவுருவத்தில் திருவடியை வழிபடும்போதும் முடிவான திருவடியை நினைந்து போற்றுவதே வீடுபேற்றிற்குத் தலைசிறந்ததொன்ருகும். அத் திருவடியைச் சேராதார் பிறவிப் பெருங்கடலை நீந்திப் பேரின்பக் கரையை எய்தார்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடி சேரா தார்"

என்பது பொய்யா மொழி. அத் திருவடிச் சேர்வும் அதனால் எய்தும் பேரின்ப வாழ்வும் திருக்கோயில் முதலியவற்றில் உருவத் திருமேனிகளில் வைத்து வழிபடப்பெறும் திருவடியை மறவாது போற்றுவார்க்கே கிடைக்கும். ஏனையோர் எத்தனை பிறவியெடுக்கினும் போற்ருர் ஆயின் வீடு பெறல் அரிதே.

தனக்கு உவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கே மனக் கவலை மாற்றல் எளிது. மற்றையோர்க்கு அரிது. அத் தாள் சேர்ந்தாரே நிலமிசை (பேரின்பவீட்டில்) நீடுவாழ்வார். மும் மலமும் நீங்கிய உயிரின் அறிவில் தங்கி நின்று உணர்த்தும் முதன்மை யுடையவனை நம்மைப்போல ஒரு வடிவுடைய னென்று மட்டும் கொண்டு, அவனது உணர்வுருவை மறந் தால் நமக்கு உய்யும் வழியே இல்லையாம். அதுவே(சத்திரூபம்) அருளுருவம். அதுதான் மலம்நீங்கிய உயிர்கட்கு நிறையுணர்வு (வியாபக ஞானம்) விளைப்பது. அத்தகைய நிறையுணர்வு தான் உயிர்கள் அடையும் பேரின்பத்துக்கு உருவம். அப் பேரின்ப நுகர்ச்சியே 'சிவாநந்தாநுபூதி' எனப்படும். அச் சிவாநந்தாநுபூதியைத் திருவடி என்பது சைவ மரபு. "முதல் வன் திருவடியாகிய சிவாநந்தாநுபூதியைத் தலைப்படும்" என்பது சிவஞானபோதமாபாடிய (ம் சூ. 11.) வசனம் "மலவாசனை நீங்கிஞல் அன்றி முதல்வனது திருவடியாகிய சிவாநந்தத்தை அநுபவித்தல் கூடாது" (ஷை 10. அதி 1.) 'திருவருளான திருவடி' என்று அத்திருவருளுருவையும் கூறுதல் உண்டு. குண குணிகட்குப் பேதம் கொள்ளாத நிலையில் அது வழங்கும்.

'யான் எனது என்று அற, உயிரில் பரை (சிவசத்தி) நின்றது அடியாம்' என்பது உண்மை நெறிவிளக்கம். "என்னது யான் அற்ருல் இறைவனடி தாஞகும்" என்பது அநுபோக வெண்பா. அத்தகைய உண்மையில். 'யான்' 'எனது' என்னும் இருவகைப் பற்றும் அற்றுத் திருவருளாய்ச் சிவாநந்தத்தை நுகரும் அன்பரே அடியார் என்னும் திருப்பெயர்க்கு உரியவர். அதுபெறமுயலும் உண்மையாளர்க்கும் உபசாரத்தால் 'அடியார்' என்னும் அருட் பெயர் உரித்தாயிற்று.

"அடியார் சிவஞானம் ஆனது பெற்றோர்
அடியார் அரனடி ஆநந்தம் கண்டோர்
அடியார் ஆனவர் அத்தருள் உற்றோர்
அடியார் பவரே அடியார் ஆம்ஆல்."

"அடியார் பொன்னம்பலத்து ஆடல்கண் டாரே"

என்பெறும் திருமந்திரவசனத்தை உற்றுணர்ந்தால் **அடியார்** என்பதன் உண்மை வாய்மையாகும்.

"ஆரியனும் ஆசான்வந்து அருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்"

என்பது சிவஞான சித்தி வாக்கியம். அடிஞானம் ஆன்மாவில் தோன்றும். ஆயின். அந்த ஞானத்திற்கு முதலான ஞேயம் அந்த ஆன்மாவில் தோன்றுதேல், ஆன்மா, சிவத்தை அறிவது எவ்வாறு? ஞானமும் ஞேயமும் தோன்றும் இடம் ஆன்மாவே ஆகும். அப்பொழுது அடிஞானத்தால் நிறைந்த ஆன்மா முடியாகிய ஞேயமாய் நிற்கும் பேரின்பமாம்.

"முடியெனும் அதுவும் பொருளெனும் அதுவும் மொழிந்திடின் சுகம்"

"துன்னும் அவனே தானாக அடையின் முடியாம்"

"உரையிறந்த சுகமதுவே முடியாகும்"

"அடியெனும் அதுவும் அருளெனும் அதுவும்
அறிந்திடின் நிர்க்குண நிறைவு"

சிவானந்தானுபூதி பெற்றவர்க்குச் சிவபிரானும், திருவடியும், திருமுகமும், திருமுடியும், பிறவும் ஆகிய எல்லாம் இன்பமே யாய்த் திகழும். இன்பம் அன்றி வேறு இல்லை.

'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்னும் உயர்வுக்கு உரிய பெரு நிலைத் தாண்டவம் அடியார்க்குத்தான் தெரியும்.

"ஆநந்த மேசெவி அம்புயத் தாளிணை அங்கைகளும்
ஆநந்தமே திருக்கண்ணும் செவ்வாய் அருள் மேனியெல்லாம்
ஆநந்தமே அருட்சிற்றம் பலவர் அருட்பொருளும்
ஆநந்தமே அவன் தில்லையும் காழியும் ஆநந்தமே"

என்பது சிற்றம்பல நாடிகள் அருளியது.

அத்தகு முடிந்த முடிபாகிய அடிமுடிகளை அறிந்து அநுபவித்து வரும் பேரின்ப வாழ்க்கையரே அடியார் ஆவார்.

அடியார் வேறு ஆண்டவன் வேறு அல்லர். [1]மண், [2]நீர், [3]தீ, [4]கால், [5]விண், [6]செங்கதிர், [7]வெண்கதிர், [8]வேள்வித் தலைவன் என்னும் எட்டும் ஆண்டவனுடைய வடிவங்கள் ஆகும். அவற்றுள், வேள்வித்தலைவன் சித்துருவன். ஏனைய ஏழும் அசித்துருவம். அசித்துக்கும் சித்துக்கும் ஆண்டவன் வாழ்ச்சியாலும் வேறுபாடுண்டு. அவன் அசித்துக்களைத் தொழிற்படுத்தும் அளவாய் அவற்றிற் படுவன். அச் சித்துக்கோ அநந்நியமாகி அருளி வருவன். எல்லா உயிர்களும் சித்துக்களே ஆயினும், வேள்விக்கோன் ஆண்டவனை மறவாதவனுதலின், அவன் அம் முதல்வனுக்கு என்றும் நீங்காது வாழும் இடமாயினுன்.

> " தீவளி விசும்பு நிலன்நீர் ஐந்தும்
> ஞாயிறும் திங்களும் அறனும். " (பரிபாடல். 3, 4-5)

என்பதற்கு, " அவை தீ, வளி, விசும்பு, நிலம், நீர் என்னும் பூதங்கள் ஐந்தும் ஞாயிறும் திங்களும் வேள்வி முதல்வனும் என இவை" என்றுள்ள உரையை இங்குக் கருதுக. வேள்வி முதல்வன் என்றது, அவரவர் சமயத்திற்குத் தக வேறுபடும். சைவ சமயத்திற்கு வேள்வி முதல்வன் சிவாபூஜா துரந்தரன், சிவஞானி ஆவன். அவனே நடமாடக்கோயில். சிவனை வழிபடாத மாக்களை நடமாடுங் கோயில் என்பது நரகத்தை அடைவிக்கும் நாச வார்த்தையே ஆகும். அடியார்க்கே நடமாடக் கோயில்' என்னும் பெயர் உரியது. அதனை, நம் ஞானசம்பந்த பரமாசாரியர்.

> "காதலால் நினைவார்தம் அகத்தன்" (திருப்பதிகம் 373-3)

> "நிறைபெற்ற அடியார்கள் நெஞ்சுளானே" (119-4)

> "கைதொழுது ஏத்தும் அடியார்கள் ஆகம் அடிவைத்த பெருமான்" (2-9)

> "போகமும் இன்பமும் ஆகிப் போற்றி என்பாரவர் தங்கள்
> ஆகம் உறைவிடம் ஆக அமர்ந்தவர்" (205-5)

"பராவுசிவர்" (சஞ்சரிக்கும் சிவனூர் 325-6)

என்பவற்றால், அடியார் அகத்திலும் ஆகத்திலும் ஆண்டவன் பிரியாமல் உறையும் உண்மையை உணர்த்தியருளினார்.

"கலிக்காழூர் மேவிய ஈசனை எம்பிரானை விரும்பி வழிபட்டால் ஆவியுள் நீங்கலன் ஆதிமூர்த்தி அமரர் பெருமான்" (363-3). "பாவிகள் சொல்லைப் பயின்றறியாப் பழந்தொண்டர் உள்ளுருக ஆவியுள் நின்று அருள் செய்ய வல்ல அழகர்" (361-10). உணர்வினுள் நின்றவன் (361-10) என்றவற்றை உற்று உற்று நோக்கி உணர்ந்தால், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், நாம் உய்யும் வழியை வெளிப்படையாக உபதேசித்தருளும் உண்மை இதுவே என்று நமக்கே இனிது புலப்படும்.

'உச்சிமேல் உறைபவர்' 'உளங்கொள்வார் உச்சியார்' 'எங்கள் உச்சி உறையும் இறையார்' என்பவற்றால், அகத்தும் புறத்தும் நின்று அடியவர்க்கு அருளும் மெய்மை விளங்கும். சீவன்முத்தி எய்திய அடியார்க்குப் பிராரத்த தேகம் விளங்கும் அளவும், அதில் அம்மையப்பர் வீற்றிருப்பர் என்பதை, 'ஊன் அமரும் உடலுள் இருந்த உமைபங்கன்' (270:-4) 'அகன் அமர்ந்த அன்பினராய், அறுபகை செற்று, ஐம்புலனும் அடக்கி, ஞானம் புகல் உடையோர்தம் உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர்' (132:-6) 'உருகுவார் உள்ளத்து ஒண்சுடர் (245:-5) " எண் ஒன்றி நினைந்தவர் தம்பால் உள் நின்று மகிழ்ந்தவன்" (37:-2) "பாடி ஆடிப் பரவுவார் உள்ளத்து ஆடி" (28:7) என்பவற்றால் விளக்கியருளினார். அன்பு அகத்தில் அமர்ந்து பெருகுதல் வேண்டும். வேட்கை, வெகுளி, இவறுதல், மயக்கம், செருக்கு, பகை என்னும் ஆறும் அழிதல் வேண்டும். புலனடக்கம் வேண்டும். சிவஞானம் புகுதலும் அதை விரும்புதலும் வேண்டும். உருக்கம் வேண்டும். ஒன்றியிருந்து நினைதல் வேண்டும். பாடவும் ஆடவும் பரவவும் வேண்டும். அவ்வளவும் உடைய அடியார்க்கே அம்முழு முதல்வன், உள்ளிருந்து, சுடர்வீசி, மகிழ்ந்துஆடிப் பேரின்பம் விளைப்பான் என்று பயன் விரித்தருளினார்.

அடியார் சிந்தையே திருக்கோயில் என்று திருமுறைகள் விளம்புவது பலர் அறிந்த உண்மை. திருஞானசம்பந்தப் பெருமானார்,

"இறைஞ்சுவார் சிந்தையுள்ளே கோயிலாகத் திகழ்வான்" (200:4)

"நினைப்பவர் மனத்துளான்" (76-7)

என்றருளினுர்.

"நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்"

என்பது அப்பர் அருள்மொழி.

அம் மனம் மூச்சுடன் வெளிச்சென்று உலகில் அலைந்து இடர்ப்படாதவாறு, அடக்கி, இறைவனது திருவடிக்கே இடமாக்குவது அடியார் இயல்பு. ஏற்றுன் அடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்கும் இயல்புடைய அடியார் எல்லாரும் அவனுக்கே நெஞ்சத்தை இடமாக்குவர் என்பது சிறிதும் ஐயம் விளைக்காத வாய்மை. அவர்க்கு மூச்சும் பேச்சும் பிறவும் சிவமாகவே விளையும். அதனுல், அவர்க்குப் புலன் வழிச் சென்று உலகின்பம் நுகரும் பொறியுணர்வு இல்லை. அதனுல், அவர் உளத்திலும் உணர்விலும் சிவபெருமான் வீற்றிருந்து ஞான நடம் புரிகின்றுன். அதனை,

"சினமலிஅறு பகைமிகுபொறி சிதைதருவகை வளிநிறுவிய
மனன்உணர்வொடு மலர்மிசைஎழு தருபொருள்நிய தமும்உணர்பவர்
தனதெழில்உரு வதுகொடுஅடை தருபரன்உறை வதுநகர்மதில்
கனமருவிய சிவபுரம்நினை பவர்கலைமகள் தரநிகழ்வரே"

என்று, கனிச்சீர்நந் நான்கு கொண்ட நான்கடித் திருப்பாடலால் தெளியச்செய்தருளினுர் சிரபுரக்கோமகனுர். இதன் முற்பகுதியில், அறுபகையும், அப்பகையருத பொறியின் இயல்பும் அவற்றின் சிதைவும், அச்சிதைவைத் தவிர்க்கும் மூச்சடக்கமும், அம்மூச்சடக்கத்தால் எய்தும் மனவடக்கமும், அம்மன வடக்கத்தால் வளரும் ஞானமும், அந்த ஞானத்திருவுருவொடு அவ்விதய கமலத்தின் இறைவன் எழுந்தருளலும், அங்ஙனம் எழுந்தருளும் செம்பொருளையே நியதமாக உணர்கின்ற உணர்வும், அவ்வுணர்வே அடிமைத்திறம் ஆதலும், அவ்வடிமைத்திறம் உடையவரே அடியவராதலும் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தருளிய உண்மை உணர்வார்க்குப் புலனுகாதொழியாது.

**பிற்பகுதியில்,** "அடியாரிடத்தில் ஆண்டவனும் அவ் வடியார் திருக்கோலமாகவே நின்று, அவரைவழிபடுவார்க்குக் காட்சி கொடுத்தருள்வான். அருளினும், அவ்வடியார் திருவுள் ளத்தில் இருக்கும் சிவனுருவம் அருளாகிய எழிலுருவமே ஆகும். அதுதான் அவனது எழிலுரு. அதைக்கொண்டே அவ்வுள்ளத்தை அடைவான் அத்தகைய பராபரன் எழுந் தருளி விளங்கும் தலம் சிவபுரம். அதை நினைந்து போற்றுவார் சகலகலாவல்லியின் திருவருட்செல்வம் உலகு புகழ நிகழப் பெறுவர்" என்னும் வாய்மை உணர்த்தப்பெற்றுள்ளது.

சிவபெருமானே தாயினும் நல்ல தலைவன் என்று அம்முழு முதலடியைப் போற்றிசைப்பார்கள். அப்போற்றுக்களை இசைக்கும் வாயினும் அத்திருவடியை அடியார்கள் நினைந்து மறவாமலிருக்கும் மனத்தினும் அகலாமல் மருவியிருக்கும் மாண்பு அக்கடவுளுக்கு இயல்பாக உண்டு.

"தாயினும் நல்ல தலைவர்என்று அடியார்
தம்அடி போற்றிசைப் பார்கள்
வாயினும் மனத்தும் மருவிநின்று அகலா
மாண்பினர் காண்பல வேடர்." (381:- 5)

இதில், அடியவரடிகளைப் போற்றிசைப்பாருடைய வாயிலும் மனத்திலும் ஆண்டவன் குடிகொண்டிருந்தருள்வான் என்ற கருத்தும் கொள்ளுமாறு தொடர் அமைந்திருப்பது உணரத் தக்கது.

அடியவர்கள் போற்றுச் செய்யும்பொழுது, ஆண்டவன் அதுசெய்துவரும் வாயில் விளங்குகின்றான் என்பது அநுபவம் மிக்கவர்க்கே புலனாகும். அன்பால் உருகும் அடியவர்க்கு ஆண்டவன் அன்பனாகின்றான்.

"சொல்நவிலும் மாமறையான் தோத்திரம்செய் வாயின்உளான்"
(62:- 7)

"அன்போடு உருகும் அடியார்க்கு அன்பர்" (199:- 5)

அடியார்க்கு இலக்கணம் பல உள்ளன. அவற்றுள் தூய வெண்ணீற்றை மெய்யெலாம் சண்ணித்தல், அத் திருநீறு ஒளி வீச, கூட்டமாகக் கலந்து, திருவுலாவுடையார் பின்னர்ச்

செல்லுதல், இசை பாடிப் பரவுதல், சிவபூசை செய்தல், மாலை தொடுத்தல், மாலையாற்புனைதல், தோளும் கையும் குளிரத் தொழுதல், அக்கு மாலைகொண்டு அங்கையில் எண்ணுதல், மறையோதுதல், உள்ளுருகுதல், சீலம் உடைமை, பற்றறுத்தல், அன்புருவாதல், திருவடியே தொழுதல், திருவடி நினைவன்றி வேறு நினைவுறாமை, சிவதலங்களை வழிபடுதல், புலனடக்கம், அடியார்க்கு அடியாரை வழிபடுதல், அடியார்க்கு உணவளித்தல், திருவைந்தெழுத்தை ஓதுதல், காலை மாலைகளில் கோயிலை அடைந்து வழிபடுதல், நண்பகலிலும் மாலையிலும் கூட்டமாகச் சேர்ந்து சிவச்சார்பாகப் பொழுதுபோக்குதல், தேவாரம் (தேவாராதநம்) புரிதல் முதலிய பல, திருஞானசம்பந்தர் திருப்பாடல்களில் காணக்கிடைக்கின்றன.

பெரியபுராணத்துள் விரித்துணர்த்தப்பெறும் வரலாறுகட்கு உரியவரும் திருஞானசம்பந்தர் திருப்பதிகங்களுள்ளே கிளந்தோதப்பெற்றவரும் ஆகிய நாயன்மார் திருப்பெயர்களாவன :-

1. சண்டேசுர நாயனார்
2. கண்ணப்ப நாயனார்
3. குலச்சிறை நாயனார்
4. கோச்செங்கட்சோழ நாயனார்
5. சிறுத்தொண்ட நாயனார்
6. தண்டியடிகள் நாயனார்
7. திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார்
8. திருநீலநக்க நாயனார்
9. நம்பிநந்தியடிகள் நாயனார்
10. புகழ்த்துணை நாயனார்
11. மங்கையர்க்கரசியம்மையார்
12. முருக நாயனார்
13. அமர்நீதி நாயனார்
14. தில்லைவாழந்தணர் (கூட்டம்)
15. நின்றசீர்நெடுமாற நாயனார்

இவ்வடியவர்களை ஆங்காங்குப் பாடியுள்ள பகுதிகளையும் அவற்றின் கருத்துக்களையும் அறிதல் அடியார்அடிக்கு அன்பினை நம் உள்ளத்தில் விளைக்கும்.

## 1 சண்டேசுர நாயனார்

(அ) "பீரடைந்த பாலது ஆட்டப் பேணாதவன் தாதை
வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந்தான் றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்த தென்னே
சீரடைந்த கோயில்மல்கு சேய்ஞலூர் மேயவனே." (48:- 7)

(ஆ) "வந்தமணலால் இலிங்கம் மண்ணியின்கண் பாலாட்டும்
சிந்தை செய்வோன்." (62:- 4)

என்பவற்றாலும் பிறவற்றாலும் சண்டேசுர நாயனாரைப் போற்றி யுள்ளார்.

## 2 கண்ணப்ப நாயனார்

(க) "கானலைக்கும்மவன் கண்இடந்து அப்பநீள்
வானலைக்கும் தவத் தேவுவைத்தான்." (293:- 7)

(கா) "வாய்கலசம் ஆகவழி பாடுசெயும் வேடன்மலராகும் நயனம்
காய்கணையினால் இடந்து ஈசனடிகூடு காளத்திமலையே."
(327:- 4)

(கி) "கண்ணப்பர்க்கு அருள்செய்த கயிலையெங்கள்
அண்ணலாரூர் ஆதி ஆனைக்காவே." (367:- 7)

(கீ) "ஈண்டுதுயிலமரப்பினனே இருங்கண் இடந்துஅடி அப்பினனே."
(371:- 8)

எனக் கண்ணப்ப நாயனாரைப் போற்றிக் குடுமித்தேவரைக் கும்பிட்ட பயன் கண்டருளினார்.

## 3 குலச்சிறை நாயனார்

௩எஅ-ஆவது திருப்பதிகத்தில், 2, 4, 6, 8, 10, 11 ஆகும் திருப்பாடல்களில், குலச்சிறை நாயனாரைப் புகழ்ந் திருத்தல் எல்லாராலும் போற்றத்தக்க பெருமையுடையது.

(ங)"வெற்றவே அடியார் அடிமிசைவீழும் விருப்பினன்வெள்ளை நீறணியும்
கொற்றவன் றனக்கு மந்திரி ஆய குலச்சிறை குலாவிநின் றேத்தும்
ஒற்றைவெள் விடையன்"

(ஙா) “ கணங்களாய் வரினுந் தமியராய் வரினும்
அடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங்
கோபுரஞ் சூழ்மணிக் கோயில் ”

(ஙி) “ நலம் இலர் ஆக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற
குலம் இலர் ஆகக் குலமதுண்டாகத் தலம்பணி குலச்சிறை பரவும்
கலைமலி கரத்தன் ”

(ஙீ) “ நாவணங்கு இயல்பாம் அஞ்செழுத்து ஓதி
நல்லராய் நல் இயல்பாகும்
கோவணம் பூதி சாதனம் கண்டால்
தொழுதெழு குலச்சிறை போற்ற
ஆவணம் கொண்ட சடைமுடி யண்ணல்
ஆலவாய் ஆவதும் இதுவே. ”

(ஙு) “ தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறும்
தொழுதுதன் குணத்தினைக் குலாவக்
கண்டுநாள் தோறும் இன்புறு கின்ற
குலச்சிறை கருதி நின்றேத்த

அண்டநாயக ன்தான் அமர்ந்து வீற்றிருந்த
ஆலவாய் ஆவதும் இதுவே. ”

(ஙூ) “ பன்னலம் புணரும் பாண்டிமாதேவி குலச்சிறை
எனும் இவர் பணியும்
அந்நலம் பெறுசீர் ஆலவாய் ஈசன். ”

## 4 கோச்செங்கட்சோழ நாயனார்

(ச) “ சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தானை ” (199:- 7)

(சா) “ செம்பியன் கோச்செங்கணான் செய் கோயிலே ” (276:- 4)

(சி) “ செய்யகண் வளவன்முன் செய்த கோயிலே ” (276:- 2)

என்பவற்றிலும் பிறவற்றிலும் வளவர் கோமகனார் திருப்பெயரைக் கூறியருளினார்.

## 5 சிறுத்தொண்ட நாயனார்

321 ஆவது திருப்பதிகத்தின் எல்லாத் திருப்பாடல் களிலும் சிறுத்தொண்ட நாயனார் புகழ் பாடப்பெற்றுள்ளது. அவற்றால், அவர் வரலாற்றுக் குறிப்புக்கள் சிலவற்றை அறியலாம்.

“திருச்செங்காட்டங்குடி – கணபதீச்சரம் – சிறுத்தொண்டர் – செருவடிதோட் (பொருவன்மை) – தேனமர்தார்க்கல் நவில் தோள், சீராளன் – சிறப்பு உலவான் – வெந்தநீறணி மார்பன். சீர் உலாம் சிட்டன். பணிசெய்யப் பெருமான் விளையாடும் உரிமை. சிறுத்தொண்டன் அவன் வேண்ட, காழியடிகளையே அடிபரவும் சம்பந்தன் தமிழ் உரைப்போர் தக்கோர்” என்னும் தொகுப்பு, நுண்ணுணர்விற்கு விருந்து.

“**சிறப்புலவான்** சிறுத்தொண்டன் செங்காட்டங்குடி மேய
பிறப்பிலிபேர் பிதற்றிநின்று இழக்கோ எம்பெருநலமே” (321:- 9)

என்பதில், பலபதிப்புக்களில் கால்தான் போயிற்று. அதனால் ஆனது யாது? ‘சிறப்புலவன்’ என்பதன் பொருள் யாது? நாளடைவில் சிறப்புளவன் எனத் திருத்தி விடுவரே!

## 6 தண்டியடிகள் நாயனார்

“அண்டர்தொழு சண்டிபணிகண்டு அடிமை கொண்டஇறை”

என்று (326-10) பின் வந்த பதிப்புக்களில் இருக்கின்றது. அதனால், ‘**தண்டி**’ என்பது தண்டியடிகள் நாயனாரைக் குறிப்பதாகக் கொண்டுரைப்பர் அறிஞர். தண்டி என்பது சண்டேசுர நாயனாரையும் குறிக்கும்.

“அண்ணலங் தண்டிதன் அடிகள் போற்றுவாம்”

(தணிகைப்புராணம், கடவுள் வாழ்த்து)

## 7 திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார்

(கு) “தானுளனை ஆளுடையான் தன் அடியார்க்கு அன்புடைமை
பாணன் இசைபத்திமையால் பாடுதலும் பரிந்தளித்தான்”

(62:- 9

எனத் திருக்கோளிலியிற்பாடிய திருப்பாடலில்வரும் 'பாணன்' என்பது, திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாரைக் குறித்தது என்பர் பலர்.

(ஞா) " தக்கபூமனைச்சுற்றக் கருளொடே தாரமுய்த்தது
பாணற்கருளொடே " (373:- 6)

என்பவற்றால், தம் திருப்பாடல்களை யாழிலிசைத்து இன்புறுத்திய நாயனாரைப் பாடி, நன்றியறிந்தருளினார்.

## 8 திருநீலநக்க நாயனார்

(ட) " கடிமணம் மல்கி நாளும் கமழும் பொழில் சாத்தமங்கை
அடிகள் நக்கன் பரவ அயவந்தி அமர்ந்தவனே "
... ... ... ... ... ... ... "மன்னும் (216:- 1)

(டா) " நிறையினார் நீலநக்கன் நெடுமாநகர் என்று தொண்டர்
அறையும் ஊர் சாத்தமங்கை அயவந்தி " (316:- 11)

என்று, திருநீலநக்க நாயனாரையும் அவர் வாழ்ந்தருளிய நெடுமாநகராகிய சாத்தமங்கையையும் அவ்வூர்த் திருக்கோயிலாகிய அயவந்தியையும், அதைத் தொண்டர் புகழ்வதையும் குறித்தருளியவாறு உணர்க. "மன்னும் நிறையினார்" என்று நாயனாரைப் புகழ்ந்தது கருதற்பாலது.

## 9 நம்பிநந்தியடிகள் நாயனார்

நம்பிநந்தி என்பது நமிநந்தி என மருவிற்று, திருநாவுக்கரசு நாயனார் அருளிய திருப்பாடலில், "நாரூர் நறுமலர்நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி நீரால் திருவிளக்கு இட்டமை நீள் நாடு அறியும் அன்றே" (4-102-2) என்று உள்ளது, அதனால், நமி என்பது நம்பி என்பதன் மரூஉ எனல் உறுதியாயிற்று. அவரே, "அடித் தொண்டன் நந்தி என்பான் உளன் ஆரூர் அமுதினுக்கே" (4-102-4) என்றும், "ஊனம் இல்லா அடிகளும் ஆரூரகத்தினர் ஆயினும், அம்தவளப்பொடி கொண்டு அணிவார்க்கு இருள் ஒக்கும் நந்தி புறப்படிலே" (4-102-6) என்றும் அருளியவற்றால், 'நந்தி' என்று வழங்கும் அதுபற்றிச் சிறிதும் ஐயம் இல்லை. அதற்கு முன்மொழியான

'நமி' என்பது யாவது? அதன் தொல்லுருவம் யாது? இவ் வினாக்கள் எழுமுன் இறுத்த விடையாக, அவர் திருவாயி னின்றே 'நம்பிநந்தி' என்று தோன்றியிருக்கின்றது. தொண் டர்க்கு ஆணியெனும்பேறு திருநாவுக்கரசு விளம்பப்பெற்ற பெருமையினார்'' என்று குறித்தருளிய அருள்மொழித்தேவர், 'நம்பிநந்தியடிகள்' என்றது, 'நமிநந்தியடிகள்' என்றதன் காரணம் தொகையிலும் வகையிலும் 'நமிநந்தி' என்று இருப்ப தற்குச் சிறிதும் வேறுபடாதவாறு பெயரைக் குறிப்பதுதான், அறிவார்க்கு மயக்கம் விளைக்காது என்று திருவுளங் கொண்ட தாகும். சேக்கிழார் நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், நம்பி யாண்டார்நம்பி மூவரும் 'நமிநந்தி' என்று குறித்தமையால், நம்பிநந்தி திருநாவுக்கரசர் குறித்தது வழுவாய்விடுமோ? அவரது திருப்பாடலில், 'நமிநந்தி' என்று இருந்ததை எவரோ 'நம்பிநந்தி' என்று திருத்தியிருக்கலாம் எனில், அஃது செய்யுளியலறியார் கூறுதலும், திருத்தியவர்க்குப் பேரறிவைத் தோற்றுதலும் ஆகும். 'வேலைமெனக்கெட்டு' என்பதுபோல 'நம்பி நமிநந்தி' எனத் திருத்தொண்டத் தொகையில் அமைந்திருப்பது வியக்கத் தக்கது. (வினைக்கெட்டு - வெனைக்கெட்டு - வெனக்கெட்டு - மெனக்கெட்டு - வேலைமெனக்கேட்டு. என மருவியவாறும் மரூஉ மொழிப்பொருள் தெரிய அப்பொருளுடையதொரு சொல் முன் நின்றவாறும் உணர்க. நமக்கு நம்பி என்ற அதன் தொல்லுருவமே முன்நின்றது. அரைஞாண்கயிறு எனப் பின் நிற்றலும் அறிக. வேலைமினுக்கிட்டு என்று ஒரு வெண்பாவில் உள்ளது. அது பட்டினத்தார் பாடியதென வழங்குகின்றது.)

## 10 புகழ்த்துணை நாயனார்

" அலந்த அடியான் அற்றைக்கு அன்று ஓர்காசு எய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே. " (199:- 7)

என்று, புகழ்த்துணை நாயனார் வழிபாட்டினையும் திருவருட் பயனையும் குறித்தருளினார். இதில், 'அலந்த அடியான்' என்பது நன்கு நோக்கி உணரத் தக்கது.

புகழ்த்துணை நாயனார், சிவபெருமானைத் தவத்தால் தத்து வத்தின் வழிபடும் நாளில், கறுப்பால் பசித்துன்பம் பெருக லுற்றது. உலகம் வருந்தியது. [1]தாமும் பெரிது வருந்தினார்.

என் "அப்பனை என் கண் பொருந்தும் போதத்தும் கைவிட நான் கடவேனோ? 'விடுவேன் அல்லேன்' என்று [2]இராப் பகலும் மலர் புனல் கொண்டு அருச்சிப்பாராய், அப்போராட லாற்கு நீராடல் புரியுங்கால், "சாலவுறு பசிப்பிணியால் வருந்தி, நிலைதளர்வு எய்தி, குடம் தாங்கமாட்டாமை ஆலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்து அயர்வார்" ஆனார். கொடிய நஞ்சினைத் திருக்கழுத்தில் அடக்கியதினும் பொறுமை பெரிதும் உண்டோ? அருளால் ஒரு துயில் வந்தது. அங்கணன் கனவில் அருளினான்; கறுப்பொழியும் அளவும் [3]நாள்தோறும் ஒரு காசு வைக்கப்பெறும் என்று. சிவபீடத்தில் காசு கிடைக்கப்பெற்று, சிற்றுணர்வு ஆகிய பசியும் இன்றி, முற்றுணர்வாகிய உணவும் கொண்டு முகமலர்ந்து அகம் உவந்தார். அங்கு அவ்வண்ணம் (அங்கனம்) கறுப்பொழியுங் காலம் வரையிலும் பெற்று, பசி யின்றி மெய்யடிமைத் தொழில் செய்து புனிதரடி நிழல் சேர்ந்தார். இவ்வரலாற்றை எண்ணி, [1]'அலந்த அடியான்' என்றும், [2]'அற்றைக்கு அன்று ஓர் காசு எய்தி' என்றும், [3]'காலையும் மாலையும் போற்றி வழிபட்டார்' என்றும் உணர்த்தி அருளினார் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். அச்சிவபாதம் வந்து அணையும் மனத்துணையாராகிய புகழ்த்துணை நாயனாரை "அலந்த அடியான்" என்றாரே அன்றிக் கிளந்து உரைத்தா ரல்லர். அவர் வரலாற்றை நோக்கி உணர்வது மிக எளிது.

### 11 மங்கையர்க்கரசியம்மையார்

"மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக் கைம்மட மானி......
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாள்தொறும் பரவி"

என்பது முதலிய பாடல் சிவனைக் கூடல் விளைத்தலும் ஒல்லும். குலச்சிறை நாயனாரைக் குறித்த இடத்தில் உள்ள திருப்பாக் களைப் பாடிக் களித்தல் சைவர் எல்லோர்க்கும் தனிக்கடனாம்.

### 12 முருக நாயனார்

"தொண்டர் தண்கயம் மூழ்கித் துணையலும் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டு அடிபரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டுகண்டு கண்குளிரக் களிபரந்து ஒளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமானீச்சரத் தாரே." (228:-2)

"பூம்புகலூரில் மூசுவண்டுஅறை கொன்றை முருகன் முப்போதும்செய்
முடிமேல் வாசமாமலர் உடையார் வர்த்தமானீச்சரத் தாரே." (ஷ 5)

என்றவற்றால், முருக நாயனார் திருப்புகலூர் உடையவரை ஆட்டல் சூட்டல் முதலிய வழிபாட்டினைச் செய்து முப்போதும் முடிசாய்த்துத் தொழுதுநின்ற ஆதிசைவர் என்றுணரலாம். "குறிப்பு அறி முருகன்" என்றதால், இறைவன் திருக்குறிப் பினை அறியும் ஆற்றலும் அன்பும் மிக்கவர் என்பது புலனாகும். திருநாவுக்கரசர்க்குத், தில்லைச்சிற்றம்பலத்து நட்டத்தைச் சென்று தொழுதகாலத்தில், எம்பெருமான் திருக்குறிப்பு 'என்று வந்தாய்' என்று உசாவுவதாயிருந்தது. அவர், திருக்கச்சி யேகம்பத்தில்,

"அரியயன் இந்திரன் சந்திரா தித்தர் அமரர்எல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யார்உணங்காக் கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர் புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப என்னே திருக்குறிப்பே."

என்று, ஒருமாநிழலுடையார் திருமாண்குறிப்பினை உசாவியரு ளினார். மாணிக்கவாசகப்பிரானும், 'சிவனே, தென்தில்லைக் கோனே உடையானே உன்றன் திருக்குறிப்புக் கூடுவார்நின் கழல்கூட, ஊனார் புழுக்கூடு இதுகாத்து இங்கு இருப்பதா னேன்' (59) என்றுணர்ந்து உணர்த்தியருளினார். அவரும், 'தில்லைச் சிற்றம்பலத்துச் செல்வம், கவித்த கைம் மேலிட்டு நின்று ஆடும்' திருக்குறிப்பினை அப்பர்க்கு முன்பே அறிந் திருப்பார் என்று அறியக்கிடக்கின்றது. "என்போல் வினை உடையார் பிறர்ஆர்? தினையின் பாகமும் அடிநாயேனைப் பிறிவது உடையான் திருக்குறிப்பு அன்று" (41) என்று, உடையானது திருவுள்ளக் குறிப்பினை ஓதியருளியதொடு அமையாது, அம் முழுமுதல்வனது திருக்குறிப்பினையே குறிக் கொண்டும் கடைக்கொண்டும் இருக்கும்படி அடியரை ஏவுதலையும் கருதின், அடியார் கடமைகளுள் முதன்மையும் இன்றியமையாமையும் உடையது எது என்றும் அஃதுஇறைவன் திருக்குறிப்பே அறிந்துகொண்டிருத்தல் என்றும் புலப்படும். அதுதான் அடியார்க்குரிய குறிக்கோள் ஆகும். ஆண்டவனது திருவுள்ளத்தது "திருக்குறிப்பு" ஆகும். அடியவரது திரு வுள்ளத்தது "குறிக்கோள்" ஆகும். அது 'குறி' எனவும் படும். இறைவனது குறிப்புள்ளார் அடியாராவர்.

" பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளுங் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே." (4,67,9.)

" ............பிரமன்றன் சிரமொன்றைக் கரமொன்றினுகிரால்
கொய்தானைக் கூத்தாட வல்லான் றன்னைக்
குறியிலாக் கொடியேனை அடியே னாகச்
செய்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே." (6, 66, 8.)

" செறிவிலேன் சிந்தை யுள்ளே சிவனடி தெரிய மாட்டேன்
குறியிலேன் குணமொன் றில்லேன் கூறுமா கூற மாட்டேன்
நெறிபடு மதியொன் றில்லேன் நினையுமா நினைய மாட்டேன்
அறிவிலேன் அயர்த்துப் போனேன் ஆவடு துறையு ளானே."
(4, 57, 7.)

" தாமே தமக்குச் சுற்றமும்
தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார்
என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே."

என்னும் திருவாசகத்துள் (605) இரண்டும் அமைந்தவாறு அறியலாம்.

" அடியார் ஆனீர்! எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்
கடிசேர் அடியே வந்தடைந்து
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்
செடிசேர் உடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூவார் கழற்கே புகவிடுமே."

எனப் புயங்க (பாம்பின்கால்) முனிவரால் வழிபடப்பெற்ற புயங்கன் திருவடிக்குப் புகவிடும் மணிவாசகர், அடியாரை ஏவுந்திறத்தால் ஆண்டவன் திருக்குறிப்பைப் புலப்படுத்தியது நன்கு விளங்குகின்றது.

13 அமர்நீதி நாயனார்

" கொடிறனார் யாதும் குறைவிலார் தாம்போய்க்
கோவணம் கொண்டு கூத்தாடும் படிறனார். " (379:- 1)

என்பதில், அமர்நீதி நாயனார் திருத்தொண்டு குறிக்கப்பெற்றுள்ளது என்பது சிலர் கருத்து.

14 தில்லைவாழந்தணர்

அந்தணர் பிரியாத சிற்றம்பலம், கற்றுங்கு எரி ஓம்பிக் கலியை வாராமே, செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம். சீலத்தார் கொள்கைச் சிற்றம்பலம். எரி ஓம்பும் சிறப்பர் மறையோர் தில்லை நல்லவர். நீலத்தார்......சடையார்...... சீலத்தார் (80. 259)

15 நின்றசீர்நெடுமாற நாயனார்

தமிழ்ப்பாண்டியன், தென்னவன், பங்கம் இல்தென்னன். பஞ்சவன், பண்டிமன், பட்டிமன், பத்திமன், வெள்ளைநீறணியுங் கொற்றவன், தென்னன் உற்ற தீப்பிணியாயின தீரச்சாற்றிய பாடல்கள் பத்தும். (309, 203)

சிவபெருமானை வழிபட்டுப் பேறுஎய்திய பலர் இத் திருமுறைகளுள் குறிக்கப் பெற்றுளர்:- அநுமான், அயன், அரி, இந்திரன், இமையோர், இயக்கர், உருத்திரர், கின்னரர், சடாயு, சந்திரன், சம்பாதி, சரசுவதி, உபமன்யு, கொச்சைமுனி, கௌதமர், சண்பைமுனி, சூதமுனி, சனகாதியார், நீரின் மாமுனிவன், பராசர முனிவர், வியாக்கிரபாதர், பதஞ்சலிமுனிவர், சித்தர், சிபி, சுக்கிரீவன், சூரியன், திக்குப் பாலகர், நளன், பிருகற்பதி, பூரூரவா, மறவாளர், மார்க்கண்டேயர், முநிகணங்கள், யானை, இராகுகேது, இராமர், இலக்குவர், வருணன், வாலி, விஞ்சையர் முதலியோர் ஆவர். விரிவஞ்சி இவ்வளவில் நிறுத்தலாயிற்று.

" சுண்ணவெண் ணீறு துதைந்திலங்கு
நூலுடையான் இமையோர் பெருமான்
நுண்ணறிவால் வழிபாடு செய்யுங்காலுடையான் " (5:- 4)

# உ திருவைந்தெழுத்து

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச்செய்த திருமுறை மூன்றனுள்ளும், நான்மறைக்கு அருங்கலமாகிய நமச்சிவாயத்தின் அரும்பெருமைகளைத் தெளித்துச் செல்லும் இடங்கள் பல உள்ளன அவற்றுள், இரண்டு திருப்பதிகங்கள், திருவைந்தெழுத்தின் சீர்த்தியை விளக்குதற்கே அருளப் பெற்றிருக்கின்றன. அவை 'பஞ்சாக்கரத் திருப்பதிகம்' 'நமச்சிவாயத் திருப்பதிகம்' என்று குறிக்கப்பெறுவன. அவ் இரண்டனுள் முன்னது, 'துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும் நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும் .....அஞ்செழுத்துமே' என்னும் முதற்றிருப்பாடலைக் கொண்டது, ஐந்தெழுத்து என்று மட்டும் உணர்த்திற்று. அதனால், 'பஞ்சாக்கரத்திருப் பதிகம்' என்னும் பெயர் எய்தலாயிற்று. பின்னது, திருவைந் தெழுத்து வகையுள், தூலபஞ்சாக்கரமாகிய நமச்சிவாயத்தை வெளிப்படக் கூறியதால், 'நமச்சிவாயத் திருப்பதிகம்' என்னும் குறிகொள்ளலாயிற்று. அவற்றின் பொருள்களைத் தொகுத்து உணர்த்து முன்னர், சில உண்மைகளைக் குறிக்க விழை

1. "நம்மான மாற்றி நமக்கு அருளாய் நின்ற பெம்மான்." (147:- 2)

என்பதில், நம் குற்றங்களை மாற்றி என்று பொருள் கூறுவதே பொருந்தும் எனினும், அருட்பெரியார் ஒருவர் ந - ம என்னும் ஈரெழுத்தையும் மாற்றி வகாரம் (அருள்) ஆகின்ற பெருமான் (சிகாரம்) என்று உபதேசித்தருளியது யாவரும் அறியத்தக்கது. ந + ம + ஆன = நம்மான என்று பிரித்தார். 'ப + அந்தம் = பாந்தம்' (நன்னூல் 145) என்றதைக்கொள்ளும் புலவர்க்கு இது பொருந்துவதே.

2. "நக்கர்தம் நாமம் நமச்சிவாயவ் வென்பார் நல்லரே." (267:- 9)

இவற்றால், தூலபஞ்சாக்கரம் உணர்த்தப்பெற்றதை அறிக.

3. "நண்பாற் சிவாய எனு நாலூர்மயானத்தே
இன்பாயிருந்தானை ஏத்துவார்க்கு இன்பமே." (182:- 10)

என்பதில், முத்திபஞ்சாக்கரம் உணர்த்தப் பெற்றுள்ளது.

4. (அ) " வசிவல அவனது இடம்.....கழுமல வளநகரே." (126:- 2)

(ஆ) " வசி ஆற்ற மாமதியும் ஆய்வலியாம்
மழபாடி......நாதன் நற்பாதமே." (306:- 2)

(இ) " மாதர் மனைதோறும் இசைபாடி வசிபேசும்
அரனுர் மகிழ்விடம்." (335:- 2)

(ஈ) " கலந்தருள் பெற்றது மாவசியே காழியரனடி மாவசியே."
(371:- 10)

என்பவற்றில், பிஞ்செழுத்தும் பேரெழுத்தும் ஆகிய திருவைந்தெழுத்து உணர்த்தப்பெற்றமை உபதேசம் உற்றார்க்கே உள்ளவாறு காணலாகும்.

இத்திருமுறைகளுள் ஆங்காங்குத், திருவைந்தெழுத்தின் சீரும் சிறப்பும் நயனும் பயனும் பலபடக் குறித்திருத்தலை, திருமுறைப் பாராயணத்தைப் பொருளுணர்ச்சியொடு புரிந்து வரும் மெய்யன்பர் பலரும் அறிவர். அவற்றைத் தொகுத்துக் காட்டும் வன்மை அடியேனுக்குச் சிறிதும் இல்லாமையால், ஒரு சிறிது, இக்கட்டுரையால் குறிப்பதற்கு அவாவி, என் சிற்றறிவின் பெற்றிமையைப் புலப்படுத்திவிட்டேன்.

உறக்கத்திலும் விழிப்பிலும் உள்ளம் உருகி நாள்தொறும் நினைந்து சிவபிரான் திருவடி மலர்களை வஞ்சமில்லாத நெஞ்சத்தால் வாழ்த்துவோரை, மாய்க்கவந்த கூற்று அஞ்சுமாறு உதைத்தன. (க)

எமதூதர் கொல்லவேண்டிக் கொண்டுபோகும் இடத்திலும், உற்ற நற்றுணையாய் வந்து, அவ்வல்லல் அகற்றிக் காத்தருள்வன. (ச)

உடம்பில் மூச்சை ஒடுங்கச்செய்து, (உள்ளப் போக்கைத் தடுத்து) உணர்வொளிச் சுடர் விளக்கினை ஏற்றி, மெய்யறிவாகிய மற்றை வழியைத் திறந்து ஏத்துவோர்க்கு இடர்களைக் கெடுப்பன. (ரு)

அழிவிற்கு அடியாகிய பிறவியை அறுத்து, அன்புசெலுத்தும் அடியவர் துயரங்களைக் கெடுப்பன. (எ)

எந்நாளும் செல்வம் கொடுப்பன. (எ)

நிலத்த பெருங் கூத்து ஆடி உயர்வன. உவப்பன. (எ)

தம்மைக்கொண்டு துதித்துவரும் தொண்டர்க்கு அண்டம் அளித்துவருவன. (அ)

ஞான விபூதியை அணிவார்தம் வினையாகிய பகையைக் கொன்று வென்றியுறுதற்குப் பெரிய படைக்கருவியாவன. (கo)

தும்மல், இருமல் தொடர்ந்தபோழ்திலும், கொடிய நரகம் குறுகியபோழ்திலும், இப்பிறவியில் பழவினைகள் வந்து வருத்தும் போழ்திலும், மறுபிறவியிலும் திருவைந்தெழுத்தே உயிர்த் துணையாய் நின்று காக்கும். (சு)

நான்மறையும் மந்திரமும் ஆகி வானவர் சிந்தையுள் நிலைத்து அவரை ஆள்வன. (உ)

செந்தீயோம்பும் செய்ய வேதியர் சந்திதொறும் உருவேற்றும் திருமந்திரமாவன. (உ)

புத்தர் சமணர் முதலிய புறப்புறச்சமயத்தவர் பொய்களைப் பொருட்படுத்தாத சித்தத்தவர்கள் தெளிந்து தேறியன. (கo)

இராவணனும் அவன் மனைவி வண்டோதரியும் பாடிப் பேணிப் பயன்பெற்று உய்யச் செய்தன. (அ)

மாலும் நாலுமுகனும் காணவொண்ணாத சேவடிச் செவ்வி உணர்ந்து திருப்பெயர் வண்ணங்களைப் பேசியும் பிதற்றியும் திருவருட் பித்துக்கொளிகளாகிய மெய்யடியவர்களுக்கு உள்ளமும் உணர்வும் நிறையும் வண்ணம் ஆவன. (கூ)

நல்லவர் தீயர் என்று பிரிவுசெய்யாமல், விரும்பி உருவேற்றிவரும் அன்பர் எல்லவர்க்கும், செல்லல் ஒழியச் சிவமுத்தியைக் காட்டுவன. (ச)

திருவைந்தெழுத்தே காமபாணம், பிருதிவியாதிபூதம், பாம்பின்படம், கைவிரல் முதலியவை ஐந்தைந்தாக அமைந்திருக்கும் (உலகத்) தோற்றத்திற்கு அடியாகும். (ரு)

இத் திருவைந்தெழுத்துப் பதிகத்தை ஓதியுணர வல்லவர் உம்பர் ஆவர். (கக)

இத்தகைய சீரிய கருத்துச் செல்வங்களைப் பஞ்சாக்கரத் திருப்பதிகம் வாரி வழங்கி நிற்கின்றது. நாதன், நம்பன், நக்கன், நெற்றிநயனன், நல்லார், நந்தி, வரதன், நஞ்சுண்கண்டன் என்னும் திருப்பெயர்களையுடைய சிவபிரானது திருநாமம் நமச்சிவாய என்பது. (1-11) அதுவே, நான்மறை மெய்ப் பொருள் ஆவது. எல்லாவுலகிற்கும் அதுவே செம்பொற்றிலகம். ' நமக்குண்டாகும் நலங்கொள் நாமம். ' அதனை ஓதும்போது உள்ளம் காதலாகிக் கசிதல் வேண்டும். கண்ணில் நீர்மல்கல் வேண்டும். நா நவிற்றல்வேண்டும். உள்ளம் நெக்குருகி நினைய ஆர்வம் மிகப் பெருகிவர, கையிற் கண்மணிமாலை கொண்டு உருவேற்றல்வேண்டும். ஓதுவதில் நயம் தானுக வரல்வேண்டும். நமச்சிவாயத் திருப்பதிகத்தையும் சிந்தை மகிழச் சிவபுராணமென்று உணர்ந்து ஏத்துதல்வேண்டும். நைந்த உளத்தொடு நாவில் ஓதும்போதெல்லாம் பூந்தேனைப் போலினிக்கும் திருவைந்தெழுத்து, தம்மை விதிப்படி ஓதுவார் எல்லாரையும் நன்னெறியிற் செலுத்தும்; தக்க வானவராகத் தகும் வகை செய்யும்; எல்லாத் தீங்கையும் நீக்கும்; வல்வினை களையும் வாட்டும்; வாராத செல்வமும் வருவித்தளிக்கும்.

நாளும் ஓதுவோரிடம் புகுதர இயமதூதரும் அஞ்சுவர். ஓதுவார் பல நல்ல குணங்கள் இல்லாராயினும் ஆகுக; கொலை செய்வாராயினும் ஆகுக. அவர் எல்லாத் தீங்கும் நீங்கி இன்புற்றிருப்பர்.

மந்தரகிரியை ஒக்க மிகப் பெரும் பாவங்களைச் செய்த வரும் திருவைந்தெழுத்தை ஓதுவாராயின், புண்ணிய சொரு பராய் மாறிவிடுவர். ஏழு நரகமும் எட்டிப் பார்க்கும் இழிஞ ராயினும் அவர் வாயில் ஒருமுறை திருவைந்தெழுத்து ஓத வாய்த்தால் உருத்திரகணத்துள்ளே ஒருவராக்கிவிடும்.

கைலாயத்தைத் தூக்கிக் கலக்கமுற்ற காலத்தில் அக் கலக்கம் விலக்கி இராவணனைக் காத்தது திருவைந்தெழுத்தே யாகும்.

அயனும் அம்புயநயனனும் தேடி அலைந்தும் காணுமல் அலந்து ஓதி உய்ந்ததும் திருவைந்தெழுத்தே. அதுவே உயிர் களின் பந்த பாசம் அறுக்கவல்ல ஒப்புயர்வில்லாத திப்பியத் திருமந்திரம்.

# இயற்கைப்பொருளின்பம்

தருமைப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், வித்துவான்,

திரு. சொ. சிங்காரவேலனார்

## இயற்கை நலம்

இயற்கை நலம் மனித உள்ளத்தை ஈர்க்கும் தகையது. இயற்கையில் உள்ளம் தோயாத மனிதர் உலகிலேயே இல்லை. அந்த அளவுக்கு இயற்கையைச் சுவைக்கும் மனப்பாங்கு மனிதரிடத்தில் செறிந்திருக்கின்றது. பரந்து விரிந்த பனிக் கடலையும், பச்சைப்பசேரென்று வனப்பொடு விளங்கும் வயலை யும், விண்ணை முட்டும் வியன் மலையையும், மொய்த்து நிற்கும் முல்லைக் காட்டையும், நீல வானத்தையும், கோல வெண்மதி யையும், பால்மதி பக்கத்திலே விண்மீன்களோடு வானில் உலாவரும் ஒப்பற்ற மாண்பையும் கண்டு நெஞ்சு பறிகொடுக் காதார் யாரே உள்ளனர்? அவை உள்ளத்தைத் தம்வயமாக்கி உலகையே மறக்கச் செய்யும் மட்டிலா ஆற்றல் படைத்தவை. இயற்கையான சம அறிவு படைத்த மனிதர்களே இவ்வாறு இயற்கை நலத்துக்கு முன்னர் ஆயின், அறிவு முதிர்ந்து, அருள் முறுகி, அன்பு பெருகி, உலகின் தட்ப வெப்ப உணர்ச்சிகளுக் குக் கலங்காத உரம் வளர்ந்து, உண்மையொளி வீசும் ஒப்பற் றோராகிய தெய்வக் கவிஞர்களுக்கும் இயற்கைக் காட்சி களுக்கும் உள்ள தொடர்பை உரைத்தலும் ஒல்லுமோ? அந்த இயற்கை நலம் ஆண்டவன் படைப்பு. அவனருளின் செழிப்பே இயற்கையின் செழிப்பு. அவனருளின் தழைப்பே இயற்கை யின் தழைப்பு. அவனருளின் விரிவே வானத்தின் விரிவு. நீலக் கடலின் விரிவு. அவனருளின் உயர்ச்சியே மலையின் உயர்ச்சி. அவனருளின் ஆழமே ஆழ்கடலின் ஆழம். எனவே இயற்கை நலம் இறைவனின் நலம். இயற்கை அழகு இறை வனின் அழகு. இயற்கையினிடத்து இதயத்தைச் செலுத்து வோன் இறைவனிடத்து நெஞ்சு கொடுப்போன். இயற்கை யின் துடிப்புக்குச் செவிசாய்ப்போன் இறைவன் பேச்சுக்குச் செவிகொடுப்போன். கைபுனைந்து இயற்றுத வனப்பு இயற்கை வனப்பு. அவ்வனப்பைச் செவ்விதின் உணர்ந்தவர்கள் நம் நாட்டு மெய்ஞ்ஞானியர்.

சங்க காலமும் திருமுறைக் காலமும்

சங்ககாலம் இயற்கையின் நாப்பண் இறைவனைக் கண்டு இன்புற்ற காலம். அக்காலத்து வாழ்ந்த மெய்ப்பொருளியற் புலவர்களான வள்ளுவர், நக்கீரர், கபிலர், பரணர் போன்றோர் இயற்கையை உடலாகக் கொண்ட பேராஇயற்கைப் பெரியோனும் இறைவன் புகழை எடுத்தேத்தினர். இதனை ஆங்கு அவர்தம் வாக்குகளில் பரக்கக் காணலாம். பிற்காலத்தே-திருமுறை ஆசிரியர்கள் வாழ்ந்த காலத்தே இறைவனைத் தனித்தும், இயற்கைக் கண்ணும் கண்டு போற்றுகின்ற பண்புகளைக் காணுகின்றோம். இது அவர்தம் திருமொழிகளை இனிது நோக்குவார்க்கு எளிதில் புலனும். நக்கீரர் திருமுருகாற்றுப் படையில், இழுமென இழிதரும் அருவியை எழுதிக்காட்டியுள்ளார். அவரது திருவுள்ளம் அருவியை வருணிப்பது மட்டுமன்று; அதனோடு ஆண்டவனது அயராத ஆரருள் வெள்ளத்தை – அதன் வேகத்தை உரைப்பதுமாகும். கபிலர் ‘புலனழுக்கற்ற அந்தணாளன்’ எனப் பாராட்டப்பெற்றவர். மும்மலம் என்று மொழியப்படும் ஆணவம், கன்மம், மாயை என்பவை புலனைப்பற்றும் அழுக்குகள் அன்றோ? அந்த அழுக்குகள் இன்றிச் செந்தண்மை கொண்டொழுகும் அந்தணராக அப்பெரியார் வாழ்ந்தனர். அவர் தூய வாழ்வு வாழ்ந்து தூய்மை வளர்த்துச் சிவம் பெருக்கும் தவச் செயல் தலைப்பட்டமைக்கு இதனினும் வேறென்ன சான்று வேண்டும்? கபிலரது வாக்கில் இயற்கை வருணனை எழிலுற்று விளங்குகிறது. அவர் தம் ‘குறிஞ்சிப் பாட்டு’ ஒன்றே அவர் இயற்கையைச் சுவைத்த எழிலை இனிது விளக்கும்.

அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் கொண்ட மலையும் சாரலும், அளந்தறிய இயலாத அளவு அரும்பொருளாகத் தோற்றக் கேடின்றி நித்தமாய்த் தன்னை ஒன்றும் கலத்தலின்மையின் தூய்தாய்த் தானெல்லாவற்றையும் கலந்து நிற்கும் முதற்பொருளை யன்றோ மனித மனத்துக்குக் காட்டுகின்றன! இதனைக் கருக்கொண்டு விரிந்து நிற்பது இக்குறிஞ்சிப் பாட்டு என்பது உற்றுணர்வார்க்குப் புலனும். திருமுறை ஆசிரியர்கள் அவ்வத்தலங்கள் தோறும் கால்நடையாகச் சென்று பெருமானை உள்ளமுருகிப் பணிந்ததோடன்றி, ஆங்காங்குக் கண்ட இயற்கை வளங்களையும்

பாராட்டிப் போந்தனர். கண்டது கண்டவாறே கவிதையில் அமைத்துவைத்துள்ள மாண்பு கருதுவார்க்குச் சுவைபயப்ப தொரு விருந்தாம்.

### சம்பந்தர் திருமொழி

திருமுறை ஆசிரியர்களுள் முதல்வராகத் திகழ்பவர் திருஞானசம்பந்தர் சம்பந்தர் திருமொழி மூன்று திருமுறை களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவற்றைத் தலமுறையாகவும், பண்முறையாகவும் தமிழுலகம் அறிந்து வருகிறது. திருமுறை வெளியீட்டைத் தமிழகத்துக்கு நல்கிவரும் திருத்தருமை யாதீனத்து இருபத்தைந்தாவது குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிர மணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் தக்கதொரு நிலையான திருமுறைப் பணி ஆற்றி வருகிறார்கள். அந்தப்பணியின் முகிழ்ச்சியே இந்தச் சிற்றாராய்ச்சியும். சம்பந்தர் திருமுறையில், இயற்கையைச் சுவைத்த பாங்கை எடுத்துக்காண்பது இக்கட்டுரையின் குறிக்கோள்.

### இயற்கை வளமும் சம்பந்தரும்

சம்பந்தர் ஞானச்சிறு குழவி. திருநெறிய தமிழைப் பொழியவந்த இளந்தமிழ் ஞாயிறு. இயற்கைக் காட்சிகளை வருணிப்பதில் இப்பெருந்தகையார் மற்றை யாவரினும் மேம்பட்டு விளங்குதல் அறிவாளர் பெரிதும் அறிந்த செய்தி யாகும்.

சங்ககாலத்து, ஓரோவொரு திணையைச் சிறக்கப் பாடு வதில் ஒரொவர் இருந்தனர். இதனைப் பாலைபாடிய பெருங் கடுங்கோ என்ற பெயராலும், மருதன் இளநாகனார் என்ற பெயராலும், இன்னும் பல புலவர்களின் அடைச் சிறப்புக் களாலும் அறியலாம் ஆனால் திருஞானசம்பந்தரோ குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை ஒழுகலாற்றையும், திணைச்சிறப்பையும் பாடுவதில் வல்லவ ராகத் தோற்றுகிறார். ஒவ்வொரு திணையில் அமைந்த தலத்தையும் பாடுங்கால் அவ்வத்திணைமரபின் உச்சநிலையில் சென்று வடுகிறார் இப்பெருந்தகையார், எனவே இப்பெருந் தகையாரின் திருமுறை காட்டும் இயற்கை வருணனையை

ஆராய வேண்டுமென்றால், திணை வரிசையாக இவர்தம் திறத்தினைக் காண்டல் தக்கதாகும். குறிஞ்சி நிலத்தமைந்த தலங்களை வருணிக்கப் புகுங்கால் இவர்தம் வருணனைப் பகுதி குறிஞ்சி நிலத்தையே நம் கருத்தில் கொண்டு வந்து நிறுத்தும். மருதத்தைப் பற்றிய இவர்தம் கவிதை மருத நிலத்தையே மனத்தில் கொண்டுவந்து மகிழ்நடமாடவைக்கும். முல்லையைப்பற்றி மொழிய முற்பட்டனராயின் முல்லை நிலத்திலே நாம் உலவுதலை ஒத்த உணர்ச்சியில் ஈடுபடுவோம். நெய்தனிலத்தை நவிலலுற்றாராயின் கடற்காற்று நம்மேனியைத் தொட்டலைக்கும், அலைமுழக்கம் நம் செவிகளில் அலைமோதும். கண்ணுக்கு விருந்தளிக்கும் கருந்திரைகள், ஆம்; அத்துணை அரும்பாங்கு இவர்தம் வருணனையின் வனப்பு எனலாம். எனவே இவர்தம் வருணனைப் பகுதியை நான்கு நில வகையாய்ப்பிரித்து ஆராய்தல் பெரிதும் பொருந்துவதாகலின் அவ்வாறே ஈண்டு ஆராயலாமென்று அமைகின்றனன்.

## க குறிஞ்சி

### மழைத் துளி

உயர்ந்த மலை. விண்ணை முட்டும் சிகரங்கள். மேகங்கள் உச்சி மலையை முத்தமிட்டு நிற்கின்றன. காட்டு மரங்கள் மலைக்கு அணிசெய்வன போன்று நிமிர்ந்து, பூவும் கொத்துமாகப் பொலிவுற்று நிற்கின்றன. அதோ அந்த மரக்கிளைகளில் அந்தக் கடுவன் எவ்வளவு கடிதாக ஓடித் தாவுகிறது! அந்த மாமரத்தின்மேல் பரபர என்று ஏறுகிறது அது. உச்சிக்கிளைக்குச் சென்றுவிடுகிறது. உச்சிக்கிளையிலிருந்து ஒரு உந்து உந்தி மற்றொரு கிளைக்குத் தாவுகிறது அந்த ஆண் குரங்கு! என்ன வேகம்! மாங்கிளையில் கனிந்திருந்த கனி ஒன்றும் அந்தக் கடுவன் கையில் சிக்கிக்கொள்கிறது. இழுத்துவிட்ட மாங்கொம்பு உச்சி மலையை நச்சி முத்தமிட்ட பச்சைமேகத்தை ஒரு அசைப்பு அசைக்கிறதாம். அதுவோ சூல்கொண்ட கருமுகில். உடன் மழைத் துளி பொல பொலவென்று பொற்றைக்கல் மேல் பொழிகிறதாம். காட்டுப் பெண் மான்கள் மழைத் துளிக்கு மனந் தடுமாறி மலைச் சோலைகளில் அங்குமிங்கும் ஓடி அலைகின்றன. இத்துணை எழில் நலம் எங்கு காணுகிறோம்? திருவண்ணாமலை என்னும் திருத்தலத்தில்தான். காட்சி அழகாக உள்ளதன்றோ?

நெஞ்சில் கவலை, இன்னல், பிணி, பெருகிய துன்பம் இவை ஏது ? எங்கும் அமைதி ! இயற்கை அன்னையின் எழிலார்ந்த படைப்பு ! குற்றாலநாதரின் குறுமுறுவலில் குவலயத்தையே மறந்துவிடுவோம். நம் பெருமான் பாடுகிறார்கள்; "கூதல்மாரி நுண்துளி தூங்கும் குற்றாலம்." ஆம்; சம்பந்தப்பெருமான் அவ்வனப்பில் சிந்தையைப் பெரிதும் செலுத்தியிருப்பார்கள் போலும்.

## அன்புக் காட்சி

கிளைகள் தோறும் மந்திகள் நெருங்கிப் பாய்கின்றன. அப்பெண் குரங்குகள் பலா மரத்தின் மீது ஏறிப் பழங்களை விண்டு உண்கின்றன. உண்ணும்போது பழங்களும் சுளை களும் தவறிக் கீழேயும் விழுந்துவிடுகின்றன. ஆண்குரங்குகள் அவற்றை மகிழ்வோடு எடுத்து நுகர்ந்து இன்புறுகின்றன. இந்த அரிய அன்புக் காட்சியைச் சம்பந்தப்பெருமான் கண்டு, சுவைத்துக் கவியுருவம் கொடுத்திருக்கும் அழகைக் கற்றறிந் தோர் என்றும் மறக்க இயலாது.

"கீட்பலவும் கீண்டு கிளைகிளையின் மந்திபாய்ந்து உண்டுவிண்ட
கோட்பலவின் தீங்கனியை மாக்கடுவன் உண்டுகளும் குறும்பலாவே."
(207-2)

## அருவி

குற்றாலத்து அருவி ! மணியும் வயிரமும் கொழித்துப் பாய்கிறது ! கோயிலுக்கு அருகில் நீர் ததும்பி ஓடிவருகிறது !

"மணி கொழித்து வயிரம் உந்திக்
குன்றத்தருவி அயலே புனல் ததும்பும்." (207-7)

## வேழப்பூசை

மற்றொரு காட்சி. மலையிலிருந்து இறங்கி வருகிறதாம் ஒரு மழகளிறு. பக்கத்தில் தன் அன்புப்பிடி வருகிறது. மலை உச்சியிலிருந்து குறும்பலாவீசரைப் பணியும் குறிக்கோளோடு வருகின்றனவாம் அவை. சார்த்த மலர் வேண்டுமே ? வரு கின்ற வழியிலே உள்ள வேங்கைமரத்துப் பூங்கொத்துக்களை

ஒடித்து மத்தகத்திலே சூடிக்கொண்டு வருகின்றனவாம். வந்து குறும்பலாவீசர் குரைகழல் பணிகின்றனவாம் அக்கூந்தற் பிடியும் கொடுங்களிறும். விலங்குகளே இவ்வாறு பணியு மாறுல் மனிதர்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ ?

" பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலியவேந்திக்
கூந்தற்பிடியும் களிறும் உடன்வணங்கும் குறும்பலாவே. " (207-8)

## செவ்வழி

வண்டுகள் அந்த மலைச் சாரலிலே வாழ்பவை. பெடை களும் சுரும்புகளுமாக அங்குமிங்கும் அலைகின்றன. அவற்றுள் இரண்டு வண்டுகள் குருந்தமரத்தின்மேல் ஏறிநின்று செவ்வழிப் பண்ணைச் செவ்வையாக இசைக்கின்றனவாம்.

" பெருந்தண்சாரல் வாழ்சிறை வண்டு பெடைபுல்கிக்
குருந்தம்மேறிச் செவ்வழிபாடும் குற்றாலம். "

சம்பந்தப்பெருமான் அஃறிணைகளெல்லாம் ஆணும் பெண்ணு மாக வந்து அடிபணியுமாறே அருளுதல் ஆழ்ந்து இன்புறத் தக்கதொன்ருகும். இன்னும் ' கொம்பார் சோலைக் கோல வண்டுயாழ் செய்குற்ருலம் ' என்றும், ' கோலமஞ்ஞை பேடை யொடாடும் குற்ருலம் ' என்றும் பாடுகிருர்கள். இந்த அளவில் குற்ருலத்துக் குறிஞ்சி வளத்தை விட்டு இனி ' முதுகுன்று 'க் குச் செல்ல முற்படுவோம்.

## முதுகுன்றம்

திருமுதுகுன்று என்ற தீந்தமிழ்ப்பெயர் விருத்தாசலமாக மாறி வேதனைதரும் இக்காலத்து, அந்த முதுகுன்று என்னும் பெயரை மொழிந்தாலே மூண்டெழும் இன்ப உணர்வை என்னென்பேன் !

## சில கற்பனைகள்

மணிமுத்தாறு மகிழ்ச்சி நடை போட்டுப் பாய்கின்றது. சந்தனமும் குங்குமமும் ஆற்றுவெள்ளத்திற் கலந்து மணம் வீசி வருகின்றன. சம்பந்தப்பெருமான் திருவுள்ளம் ஆற்றழகில் ஈடுபட்டுவிடுகிறது;

"கொத்தார்மலர் குளிர்சந்தகில் ஒளிர்குங்குமம் கொண்டு
முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடைவோமே." (1-12-1)

அந்த மலையில் மூங்கில்மரங்கள் தோறும் இளமைமிக்க மந்திகள் இருக்கின்றன. அவை தம் மகவினொடும் அமர்ந்துள்ளன. மழை பொழியத் தொடங்குகிறது. அவை அஞ்சி ஓடி மலைக் குகையில் ஒளிகின்றன. மலைக்குகையிலிருந்தோ மால்யானை புறப்பட்டு மலைச்சாரலில் இரைதேடி அலைந்துகொண்டிருக் கிறது. (1-131-5) அதுமட்டுமா? அம்மந்திகள் மலைமீது ஏறுகின்றன கூட்டங்கூட்டமாக. மலர்களைப் பறித்துக்கொள் கின்றன. முந்திச்சென்று முதுகுன்றமர்ந்த முதல்வனைத் தொழுது பணிகின்றன. (2-200-2) அதனுடன் நின்றுவிட வில்லையாம் அந்த மந்திகள். திருகல் வேய்கள் வளையும் வண்ணம் மூங்கில் நடமும் ஆடத்தொடங்கிவிடுகின்றனவாம் அச்சிறு மந்திகள். (2-200-10) அழகான காட்சி. நகை விளைக்கும் காட்சி. முதுகுன்றத்தில் இயற்கைச் சூழலிலும் ஒரு ஈகைக் காட்சி. காந்தள் மலர்கள் கையேந்துகின்றன. குறைவில்லாத முதிய மூங்கில்கள் அவை நிறைய முத்துக்களை உதிர்க்கின்றனவாம். 'காந்தள்மலர் நிறைய' என்றும், 'குறைவில்லா முதுவேய்கள்' என்றும் பெருமானார் பேசி யருள்வது அறிவுக்கொரு விருந்து அல்லவா? (1-12-8).

**காளத்திக் காட்சிகள்**

திருக்காளத்தியை - அதன் இயற்கை நலத்தைப் பெரு மானார் சொல்லும்போது நாம் மிக்க ஈடுபாடுகொள்ளவேண்டி யிருக்கிறது. கருமந்தியின் ஆட்டமும், கன்றினொடு விளையாடும் பெண் யானையின் விளையாட்டலும் நம்மைப் பெரிதும் கவர்ந்து விடுவன அன்றோ?

"கல்லதிரநின்று கருமந்தி விளையாடு காளத்திமலையே." (3-327-3)

"கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளையாடு காளத்திமலையே." ஷை

என்று நெஞ்சு நிரம்பிப் பாடுகிறார்கள் செஞ்சொற் குழுவியார்.

**மந்தியும் ஊடலும்**

திருச்சிராப்பள்ளிக் குன்றுடையானை ஞானப்பிள்ளையார் பாடுங்கால் சிராப்பள்ளிச் சிகரத்தில் ஈடுபட்டுவிடுகிறார்கள்.

அந்த மலையில் மந்திகள் நிகழ்ச்சிதான் முந்திவருகிறது அவர்கள் தம் சிந்தையிலே. அந்தக் காட்சி சிந்தைக்கு விருந்தாக அமையத்தக்கதாகும்.

மந்திகள் மலைமேல் பரக்கப்பரக்க ஏறுகின்றன. அவற்றின் வயிற்றோடு ஒன்றி அவற்றுடன் செல்கின்றன இளங்குட்டிகள். மூங்கில் மரங்கள் மேல் பாய்ந்து பாய்ந்து மலை உச்சிக்குச் செல்கின்றனவாம் மந்திகள். இந்த இடத்துத் தமிழ் மரபு ஒன்று சிந்திக்கத்தக்கது. வரைபாய்ந்து உயிர்நீத்தல் ஒரு வழக்கு. உயிர்நீப்போர் சிலர் மலை உச்சியிலேறி அங்கிருந்து வீழ்தல். மடல் ஏறுதல் என்று ஒன்றும் உண்டு. இவை புலனெறி வழக்காகப் பண்டுபயின்றவை. இப்படி ஏறும் மந்திகள் தங்களோடு மணம் புணர்ந்த கடுவனோடு ஊடல் கொண்டவை என்று முடிவுகட்டுகிறார்கள் முத்தமிழ் விரகனார். கணவனோடு ஊடிக் கைக்குழவியோடு தற்கொலை புரியச் செல்ல முற்படும் தையலர் போலக் கைம்மகவேந்தி கடுவனோடு ஊடி வரைபாய்ந்து உயிர்துறக்க வந்தன அம்மந்திகள் என்று எண்ணிப் பாடுகிறார்கள்.

“ கைம்மக வேந்திக் கடுவனோடூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரை ஏறும் சிராப்பள்ளி. ” (1-98-2)

**காதல் களிறு**

உய்யக்கொண்டான் என வழங்கும் கற்குடி மலையில் சில காட்சிகள்; அங்கே வண்டுகள் பின்னணிப்பாடல் பாடுகின்றனவாம். அதற்கேற்ப அழகு மயில்கள் ஆடுகின்றனவாம். குறமகளிர் குழந்தைகளை ஏந்தி வெளியில் உலாவுகிறார்கள். அவர்கள் கையில் ஏந்தியிருக்கும் மைந்தர்கள் அம்புலியை அண்ணுந்து பற்றுகிறார்களாம். மலையின் உயரத்தை அப்படிச் செல்லுகிறார்கள். இன்னுமொரு அன்புக் காட்சி. ஒரு பெண் யானை. நல்ல பசி. அதனுடைய களிறு தன் துதிக்கையால் மூங்கில் முளைகளை வாரிப் பெண் யானைக்கு ஊட்டுகிறதாம்! இதுவன்றோ காதல்! “ பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே! ’ என்ற சங்க இலக்கியம் நினைப்புக்கு வருகிறதன்றோ? பல்லாற்றானும் நலம் சிறந்த அக்காதற் காட்சியைப் படம்போல எழுதிக் காட்டுகிறார்கள் பைந்தமிழ்க் காவலனார்.

"மருங்களியார் பிடிவாயில் வாழ்வெதிர் இன்முளை வாங்கிக்
கருங்களியானை கொடுக்கும் கற்குடி மாமலையாரே." (1-43-4)

திருக்கயிலாயத்தைப்பற்றிய வருணனைப்பகுதியோடு குறிஞ்சிப் பகுதியை முடித்து மேலே செல்வோம்.

**கன்றும் பிடியும்**

திருக்கயிலாயம் சைவர்க்குத் தலைநகர். திருக்கயிலாயத்திலிருந்தே சித்தாந்த சைவச் செந்நெறி பரவியது. திருக்கயிலாய பரம்பரையில் வந்த அருள் தேக்கங்களே ஆதீனங்கள். திருக் கயிலாயத்தைச் சம்பந்தப் பெருமான் கண்டுகளிக்கும்போது அவர்கள் உள்ளத்தில் ஞான அநுபவம் ததும்புகிறது. சிவ ஞான அமுதம் பொங்குகிறது. தெய்வத் தீந்தமிழாக வழிகிறது. 'பொடிகொள் உருவர் புலியின் அதளர் புரிநூல்திகழ்மார்பில்' என்று தொடங்கித் திருமுறையாக முகிழ்கிறது அருளின் தெளிவு. கயிலாயமலையில் இடி முழங்குகிறதாம். அம்முழக் கம் கேட்டு அஞ்சி இரிகின்றதாம் சிங்கம். மலைப்பாம்புகள் ஆனையையும் விழுங்கும் சிறப்பினவாம். உழுவைப்புலி இரை தேடிச் சினம்கொண்டு அங்குமிங்கும் அலைந்து திரிகிறது. இருட்டு வேலையில் களிற்றைக் காணவில்லையாம். திகைத்துத, தேடுகின்றனவாம் பிடியும் கன்றும். மலைச்சாரலில் ஓடு கின்றனவாம், ஓடிக் கயிலாயத்தின் அடிவாரம் சேர்கின்றன வாம் அவை, கன்றும் பிடியுமாகிய அஃறிணைச் சாதியே அவ்வாறானல் ஆறறிவு படைத்த மனித இனம் அடிவாரம் சேரத் தயங்குவது ஏன்? என்று கேட்பதுபோலப் பிறங்கு கின்றது பெருமானர் திருமொழி.

"தென்றி இருளிற் திகைத்தகரி தண்சாரல் நெறிஓடிக்
கன்றும் பிடியும் அடிவாரம் சேர் கயிலைமலையாரே" (1-68-5)

## உ மருதம்

**வண்டின் இசை**

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்கிறது, தமிழ் வழி. நம் பெருமானர் வருணனைகளில், மருத நிலத்தைச் சார்ந்தனவாக உள்ளவை இப்பகுதியில் ஆராயப்பெறும். [மருதத்தைப்பற்றிய சம்பந்தப் பெருமானர் வருணனைகளில்,

வண்டு பண்ணிசைத்தல் பன்முறையும், பல்காலும், பேசப் பெறும் ஒன்றுகும். எனவே அவ்வாறு வருகின்ற இடங்களை முன்னே குறித்துப் பின்னே பிறவற்றின்மேல் செல்வோம்.

" குழலின்னிசை வண்டின்னிசை கண்டு குயில்கூவும்
நிழலின் எழில் தாழ்ந்த பொழில் சூழ்ந்த நின்றியூரே " (1-18-5)

" நிழலார்சோலை நீலவண்டினம்
குழலார் பண்செய் கோலக்கா உளான் " (1-23-7)

" கண்ணின்றெழு சோலையில் வண்டு
பண்ணின் றொலிசெய் பனையூரே " (1-37-2)

" வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப்பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும் அளிஅரசு " (1-60-1)

" மண்ணார்சோலைக் கோலவண்டு வைகலும் தேனருந்திப்
பண்ணார் செய்யும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே " (1-65-2)

." பண்தான் கொண்டு பாடும் சண்பை நகராரே " (1-66-9)

" பண்தான் கெழும வண்டு யாழ் செய்பழனநகராரே " (1-67-10)

" வண்டெலாம் நசையால் இசைபாடும் வலஞ்சுழி " (2-138-2)

" வண்டுகள், துத்தம்நின்று பண் செயும் சூழ்பொழில்
துருத்தி " (2-234)

" வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம்
காவிவாய்ப் பண் செயும் கானப்பேரண்ணலே " (3-284)

" வண்டு பண்முரலும் சோலைத்
திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி " (3-350-7)

இவ்வாறு தம் திருமொழியுள் வண்டுகள் பண்ணிசையைப் பன்முறை சொல்லிச் சொல்லி இன்புறுதல் நம்பெருமானார் பண்புநலமாகும். இனி மருதக் காட்சிகளிற்சில.

**வயலில் திருமணம்**

திருவீழிமிழலை நீர்வளமும் நிலவளமும் அமைந்த ஒரு அரும்பதி. பச்சைப்பசேரென்ற பைங்கழனிகள். நல்ல

வளமான வயல்களல்லவா? தாமரைகள் பூத்திருக்கின்றன. சங்குகள் அங்குமிங்கும் அலைந்து மிதக்கின்றன. வயலுக்குப் பக்கத்தில் புன்க மரமொன்று பொலிவுற்று நிற்கின்றது. புன்க மரத்தின் பூக்களோ பொரிபோன்று பூத்திருக்கின்றன. பூத்திருக்கும் தாமரையோ தீப்பிழம்பைப்போல. காற்று அசைகிறது. புன்கமரம் வளைந்து ஆடுகிறது. அதன் பூங்கிளைகளிலிருந்து பொரிபோன்ற பூக்கள் தீயைப்போல மலர்ந்த பூந்தாமரையில் உதிர்கின்றன. பக்கத்திலே சங்குக் கூட்டங்கள். இது திருமணக் காட்சி போல அன்றோ உள்ளது! தாமரையே அக்கினி குண்டம். புன்கமலர்களே பொரிகள். சுற்றத்தார் கூட்டமே சங்குகள். இப்படித் திருமணம் செய்கிறதாம் திருவீழிமிழலை. அழகிய - இனிய - நெஞ்சைக் கொள்ளை கொள்ளத்தக்க உருவகம். பெருமான் பாடுகிறார்கள்:

"தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்கத்திகழச் சலசத்தீயில்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணஞ்செய்யும் மிழலையாமே."

(1-132-6)

### சிவந்த வண்டு

மற்றொரு காட்சி. செங்கழுநீர்ப்பூக்கள் சிவந்து மலர்ந்திருக்கின்றன. ஒய்யெனப் பறந்துவந்த வண்டு அச்செங்கழுநீரைச் சூழ்ந்து, முரன்று, அணவி, வாசம் துதைந்தாடித் தாழ்ந்து மது நுகர்ந்து தாதருந்தியதாம். சிவந்த மகரந்தத்திற் படிந்த வண்டு கருநிறம் நீங்கிச் செந்நிறம் பெற்றுவிட்டதாம். அங்கிருந்து செவ்வழிப்பண்ணைச் சிறந்தமுறையில் இசைக்கிறதாம். செவ்வழி ஒரு பண் வகை. அதிலும் ஒரு நயம். பாடுவது சிவந்த வண்டு. பண்ணும் செவ் (சிவந்த) வழியாம்.

"சேறுடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்தவண்டு
வேறாய உருவாகிச் செவ்வழிநற் பண்பாடும் மிழலையாமே."

(1-132-7)

### அன்னமும் அரசும்

வயலிலேயே மற்றொன்று. அன்னம் அரசுவீற்றிருக்கின்றதாம். மன்னனுக்கு இருக்கையாம் மாணிக்கத்தவிசு தாமரை; இலைக்குடை; மருங்கிலே நெற்கதிர்கள் கவரிவீசுகின்றன. இள அன்னம் இளவரசனாக வீறுடன் வீற்றிருக்கிறது இவற்றுக்கு இடையில்;

"செறிஇதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும்
இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரை யிரட்ட இளவன்னம்
வீற்றிருக்கும் மிழலையாமே." (1-132-2)

சில காட்சிகள்

கழனிகளில் சங்குகள் ஈன்ற முத்துக்கள் பரவிக்கிடக்கின் றன. தாமரைகள் மிகுதி. கயல்கள் துள்ளுகின்றன. பவளம் வேறு கிடக்கின்றன. முத்துக்கள் பாவையர் பல்லைக் காட்டு கின்றன. தாமரைகள் தையலர்தம் முகத்தைக் காட்டுகின்றன. துள்ளிவிழுந்த கயல்கள் தோகையர்கள் விழிகளைத் தோற்று கின்றன. பவளம் பணிமொழியார் வாயழகு காட்டுகின்றன. இவ்வாறே கழுமலத்தைப் பற்றி வருணிக்குமிடத்தும் கவுணியர் பெருந்தகை கவின்பெறக் கவியிசைக்கின்றார்கள். (1-124-1) இப்படி எல்லாம் மிழலை நகரின் கழனிவளத்தை விரித்துப் பாடிக்கொண்டே போகின்றார்கள் பைந்தமிழ் விரகனார். திருவீழிமிழலைச் சோலைச் சிறப்பைச் சொல்ல முற்படுகிறார்கள். சோலைக்குப் பக்கத்திலுள்ளசாலையிலே பல கலைகளையும் கற்றுணர்ந்த பண்டிதர்கள் வேதங்களை ஓதிக் கொண்டிருப்பார்களாம். சோலைக்கிளிகள் அதனைப் பன்னாளும் கேட்டுக்கேட்டு வேதங்களுக்கும் பொருள் சொல்லு மாம். (1-132-1) ஈதலும் ஏற்றலும் அதுமட்டுமா? சோலை களிலே தமிழ் நாட்டு மரபு பற்றிய மற்றொரு நிகழ்ச்சியை மறக்கமுடியுமா? கலைக்குத் திறமறிந்து பரிசளித்தார்கள் தமிழ் நாட்டின் முன்னைய புரவலர்கள் என்று ஏட்டில் அறிந்துள் ளோமேயன்றிக் கண்டதில்லை; அதனோடொத்த ஒரு நிகழ்ச் சியை நாம் திருவீழிமிழலையில் காணமுடிகிறது; முகில்களின் இடிமுழக்கமே முழவு. மயில்கள் ஆடுகின்றன. வண்டுகள் பாடுகின்றன. இப்படிச் செவ்வையாக நிகழும் ஆடல் பாடற் கலைகளுக்கும் பரிசு வழங்க நினைக்கின்றதாம் கொன்றை. கொன்றை பொன்போலப் பூக்கும் தகையதன்றோ? கலகல என உதிர்க்கிறதாம் அழகு மலர்களை. காந்தள் கையேந்தி வாங்குகிறதாம். என்னே இயற்கைக் காட்சி கற்பனையொடு கலந்து இன்பம்பயக்குமாறு! பெருமானாரது அக்காட்சியைக் கருத்திற் கண்டு சுவைமின்;

"வரைசேரும் முகில்முழவம் மயில்கள்பல நடமாட வண்டுபாட
விரைசேர் பொன்னிதழிதர மென்காந்தள் கையேற்கும் மிழலையாமே."
(1-132-4)

கடைசியாகத் திருவீழிமிழலையில் இனி நாம் காண வேண்டிய இடம் பொய்கை. அங்கே ஒரு பொற்பார் காட்சி. அதன் மாட்சி உள்ளுந்தோறும் உவகை பயப்பது.

அன்னம்

தாமரைகள் தளதள என மலர்ந்திருக்கின்றன அத்தாமரைப் பொய்கையில். இள அன்னம் அத்தாமரைகளில் நடை பயில் கின்றது. அதனால் வெண்டாமரையின் பொகுட்டு செந்தாது உதிர்க்கின்றதாம். இந்தக் காட்சியை வியந்து பாடலாக்கு கிறார்கள் சிவஞானப்பிள்ளையார்.

மருதத்தில் மற்றும் சில

திருவலிதாயம் என்ற தலத்தில் மந்திகள் வந்து கடுவ னொடு வணங்கித் தொழுகின்ற மாண்பார் காட்சியைச் சொல் லுகிறார்கள். (1-3-5) திருக்காட்டுப்பள்ளியில் வாழைமரங் களின் வளத்தை வனப்புற இசைக்கிறார்கள். கையருகே கனிகளை ஈன்று தலைநிமிர்ந்து தழைத்து நிற்கின்றனவாம் வாழைகள். (1-5-1) திருஆவூர்ப்பசுபதி ஈச்சரத்தைப் பாடுங் கால், வாழைத்தாறுகளில் பாய்ந்த கூழைமந்திகள் கனிகளை உண்டு மிண்டிட்டு, இனத்தையெல்லாம் அழைக்கின்ற எழிலைச் சுவைபட இயம்புகிறார்கள். (1-8-7) வேணுபுரத்தை விளம்புமிடத்து, அதன் பொழிற் சிறப்பையும், கமலமலர்சாய இளவாளை குதிகொள்ளும் பொய்கைப் பொலிவையும் (1-9-6) வருக்கமார்தரு வான்கடுவனொடு மந்திகள் தருக் கொள் சோலையில் தருக்கொடு பாய்கின்ற தாவாத எழிலையும் (2-137) சொல்லிப்போகின்றார்கள். திருநின்றியூரின் மருத வளத்தைச் சிறப்பிக்க வருகிறார்கள். நிழலின் எழில் நிகழ்கின்ற நீள்மரச் சோலைகளாம் அங்கு. குழலின்னிசை வண்டின்னிசை கண்டு குயில்கள் ஓவாது கூவுகின்றனவாம். அந்தக் கூவிய குரலில் மேவிய நெஞ்சால் பாவியல்மாலை பாடிச் சிறப்பிக் கிறார்கள். (1-18-5) அரிசிலாற்றங்கரையில் அமைந்த திருப் பாம்புரத்தில், அரிசிலாறு பருமணி சிதறுகிறதாம். மடக்கொடி

யவர்கள் வருபுனலாடுகின்றனராம். (1-41-8) பெருந்துறை பற்றிப் பேசும்போது, கமுகினின்று பாய்ந்திழி தேறல் மல்கு கின்றதென்றும், (1-42-3) கயல் பாய்வதால் நீலமலர் கண் போல் மலர்கின்றதென்றும் (1-42-4) கூறுகிறார்கள். திருப் பழன நகரம் மருதவளத்தில் சிறந்து விளங்குவது. படுகரில் தெங்கின் பழம், கமுகில் விழுந்து, வாழையில் வீழ்கின்ற வளம் சிறப்பாகப் பேசப்படுகிறது. (1-67-6) திருஇடைச்சுரத்தை எண்ணுங்கால், வயலில் வளமான வாளையும், கயலும், போரிடு கின்ற காட்சியை நின்று செவி ஓர்க்கின்ற செம்முக மந்திகள் வயற்பக்கமாக ஆண் குரங்குகளோடு ஓடிவந்து வேடிக்கை பார்க்கின்ற வியத்தகு காட்சியைப் பேசாமல் இருக்க முடியுமா? (1-78-2) திருவாரூரில் அக்காலத்தும் ஆலைகள் இருந்தன. ஆலையின் வெம்புகைபோய் முகில் தோய்ந்ததாம். (1-105-2)

திருவையாற்றில் கண்ட சில காட்சிகளைக் கவி இசைக் கும்போது சம்பந்தப்பெருமான் நம்மையெல்லாம் நகைச்சுவை வெள்ளத்திலும் ஆழ்த்திவிடுகிறார்கள். திருக்கோயிலில் வலம் வந்த மடவார்கள் நடமாடுகின்றார்கள். முழவதிர்கின்றன. இடியின் முழக்கம்போன்றிருக்கிறது. மழை வருமென்று அஞ்சி சில மந்தி அலமந்து மரமேறி முகில் பார்க்கின்றனவாம். (1-130-1) மான் பாய்கின்றனவாம். வயல் மருங்கில் மரத் தில் ஏறிய மந்திகள் மடுக்களில் பாய்கின்றனவாம். தேன் பாய்கின்றனவாம். மீன் பாய்வதால் தாமரை அரும்புகள் மலர்கின்றனவாம். (1-130-4) தென்னை மரத்தினின்றும் தேங்காய் விழுகிறது; விழுவது கண்ட எருமை அஞ்சி இரிந் தோடுகிறது. செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல வயல் படிகின்றனவாம் அவை. (1-130-8) கிண்ணி வண்ணமாக மலரும் தாமரையின் தாது அளவிப் பின் வண்ண நுண்மணல் மேல் வைகியிருக்கிறதாம் அன்னம். இக்காட்சி திருவலஞ் சுழியில். (2-138) மணிமாடங்களுக்கு எதிரே உயர்ந்து நிற்கிற தாம் பனை. அங்கு இருந்த அன்றில் துணையொடு இன்பவாழ்வு வாழ்கின்றது; இது ஆமாத்தூரில். (2-186-1) நாரை பிளந்த வாயோடு இருந்து ஆரல் மீன்களை வாரிவாரி உண்ணுகிறது; இது பாசூரில் மட்டுமன்று. ஆரூரிலும் நனிபள்ளியிலும் இதே காட்சியை அடிகள் நினைப்பூட்டுகிறார்கள். (2-196-9, 237-6, 220-1) திருவாலவாயை அடுத்த திருவேடகம் சிறந்த தலம்.

பொதியத்தென்றல் புகுந்து வீசுதலால் பொலிவு பெறுகிறது. வைகைக்கு வடகரையில் வயங்குகிறது இப்பதி. (3-290-6) பைங்கமுகின் செங்கனி உதிர்கிறதாம். வாளை வேறு துள்ளி விழுகிறதாம். இவற்றால் மலர்வன்றனவாம் நீர் மலர்கள். இது திருமயிலாடுதுறைக் காட்சி (3-328-3) திருநெல்வேலி யும் சிந்துபூந்துறையும் பற்றிய வருணனைப் பகுதியோடு, மருதப் பகுதியை முடித்து மேலே செல்வோம்.

### சிந்துபூந்துறை

திருநெல்வேலி மருதத்திணைவளம் திகழ்ந்து விளங்குறும் திருத்தலம். நெல்வேலி அப்பர் காந்திமதி அம்மையோடு திருவோலக்கம் கொள்ளும் இத் தலத்தின் இயற்கை வளம் இயம்பவொண்ணாது. தாமிரபரணி நதியின் தடக்கைகளால் தளராத நீர்வளம் கொண்டு உலவுவது. 'தமிழ் கண்டதோர் பொருநை' யன்றோ அத்திருநதி! இதன் வளத்தினை அழ கொழுகப் பாடுகிறார்கள் அடிகளார்.

> " வண்டு பண் முரலும் சோலைத்
> திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி. " (3-350-7)

என்று பாடுகின்றார்கள். எல்லாத்திசையும் எடுத்தேத்துகிறதாம் நெல்லைத்திருநகரை. சோலையிலே புகுந்து போதளைந்து தென்றல் வந்து உலவுகின்ற திருநெல்வேலியுறை செல்வர் என்று ஏத்துகின்றார்கள். சிந்துபூந்துறையில் பொழிலூரு பாயும் மந்திகளைப் பற்றிப் பாடிச் சிறப்பிக்கிறார்கள்:

> " கந்தமார் தருபொழில் மந்திகள்பாய்தர மதுத்திவலை
> சிந்துபூந்துறை கமழ் திருநெல்வேலி. " (3-350-8)

## டு. முல்லை

காடு சார்ந்த பகுதி முல்லை. கவுணியர் குல விளக்காகிய நம் பெருமானார் வருணனைகளில் சோலைகளைப்பற்றியும் ஒரு சார்கானகத்தைப்பற்றியும் வருவனவற்றை இப்பகுதியில் தொகுத்துச் சிந்திக்க முற்படுவோம்.

ஆணும் பெண்ணும்

இலம்பையங்கோட்டூரில் சில காட்சிகளைக் காணுகிறோம். அவ்வூர்ப் பொழில்கள் செறிந்து இலங்குகின்றன. அங்கு

ஆணும் பெண்ணுமாக அனைத்துயிர்களும் வாழ்கின்றன. பெண் மான்கள் ஆண் மான்களொடும் பிணைந்து இன்புறு கின்றன. மயில்கள் பெடையொடு மாண்புறுகின்றன. அத் தகைய சோலை சார்ந்த ஊர் என்று சொல்லுகிறார்கள்.

" கலையினார் மடப்பிணை துணையொடும் துயிலக்
கானலம் பெடைபுல்கிக் கணமயிலாலும்
இலையினார் பைம்பொழில் இலம்பையங் கோட்டூர்." (1-76-1)

ஆணும் பெண்ணுமாக ஆண்டவனைப் பணிதலே அறம் என்று குறிப்பது போன்று விளங்குகிறது. பெருமானார் திருமொழி.

பரிசு

புறவத்தைப்பற்றி நம் பெருமானார் சுவைபெறச் சொல்லும் செய்தி சிந்திக்கத்தக்கது. குருக்கத்திக் கொடிகளில் வண்டுகள் இசை பாடுகின்றனவாம். மயில்கள் ஆடுகின்றனவாம். புன்னை போதலரைச் செம்பொன்னெனக் கொடுக்கிறதாம் பரிசாக.

" மாதவி மேய வண்டிசைபாட மயிலாடப்
போதலர் செம்பொன் புன்னைகொடுக்கும் புறவம்மே." (1-97-2)

வழிபாடு

காளையார்கோயில் என வழங்கும் திருக்கானப்பேர்க்காடு களில் ஒரு காட்சி. ஆண் யானைகளும் பெண் யானைகளும் விடியற்காலமே எழுந்துவிடுகின்றனவாம். பொய்கையில் மூழ்கி விதியினால் வழிபாடு செய்ய முந்துகின்றனவாம். எத் தகைய பக்தி மனோநிலை !

" பிடியெலாம் பின்செலப் பெருங்கைமாமலர் தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பைம்பொழிற் கானப்பேரண்ணலே. " (3-284

திரளும் சாரல்

திருவண்ணாமலைச் சாரலில் ஆயர்கள் மாடுகளை ஓட்டிக் கொண்டு மேய்க்கிறார்கள். காட்டு நிலத்தில் அவை மேய் கின்றன. மாலைப்பொழுது வந்தவுடன் மாடுகளை ஓட்டிக் கொண்டு ஊர் திரும்ப எண்ணுகிறான் ஆயன். எருமை மாட்டைக் காணமல் தன் வேய்ங்குழலை எடுத்து இசை வெள்ளத்தைக் கானகமெல்லாம் பரப்புகிறான் ஆயன். 'காட் டில் விலங்கறியும் கைக்குழந்தைதான் அறியும்; பாட்டின் சுவையதனைப் பாம்பறியும் என்றுரைப்பார்' என்று பாரதி கூறுவதுபோல, ஆயன் குழலோசை கேட்டதும் மாடுகளெல் லாம் திரளுகின்றன. இசையின் ஆற்றலை இப்படி முல்லை நிலத்து வருணனையின் மூலம் மொழிகின்றார்கள் முத்தமிழ்

"கனைத்தமேதி காணாதாயன் கைம்மேற் குழலூத
அனைத்தும் சென்று திரளும் சாரல்." (1-69-6)

புறவார் பனங்காட்டூரின் காட்சி ஒன்றை இறுதியாகக் கண்டு இப்பகுதியை முடிப்போம்.

வண்டு

வண்டுகள் சோலைகளில் உள்ள நீல மலர்களில் பண் முரலுகின்றனவாம். பண்ணோடு நேரிய ஒழுங்கோடு கூடிய நேரிசைப்பண்.

"நீணமார் முருகுண்டு வண்டினம் நீலமாமலர் கவ்விநேரிசைப்
பாணில்யாழ் முரலும் புறவார் பனங்காட்டூர்." (2-1²9-10)

குறிஞ்சி வருணனைகளும் முல்லை வருணனைகளும் விரவி வருதலின் அவற்றின் பெருக்கம் நோக்கி இத்துடன் விடுத்துக் கடற்கரைக்குப் போவோமாக. அந்த அலை முழக்கிலே, கலை ஞானப் பிள்ளையாரின் கலை முழக்கின் பேரோசையைக் காது கொடுத்துக் கேட்போம்;

## ச நெய்தல்

நீலக்கடலின் கோலத்திரைகள் நெஞ்சை அள்ளும் தன்மை யன. பரந்து விரிந்த பனிக்கடலின் கரையில், பரமன் பதி

கொண்ட திருத்தலங்கள் பலவும் உண்டு. திருமறைக்காடு, திருவெண்காடு, சண்பைநகர், திருமுல்லைவாயில் முதலிய வற்றை எடுத்துக்காட்டாக நாம் கண்டு களிக்கலாம்.

**முன்றிலில் முத்து**

கண்ணுக்கெட்டிய தூரம் கருங்கடலின் நீர் வெள்ளம். கருமணல் மேடிட்டுக் கிடக்கிறது. கடற்கரையில் பரதவர் வீடுகள் சாரிசாரியாக இருக்கின்றன. கடல்நீர் வெள்ளத்தில் மிதக்கும் சங்குகள் பரதவர் இல்லங்களின் முன்வாயிலில் சென்று முத்துக்களை ஈனுகின்றன. எத்துணை வளமான நீர் வெள்ளம்! எங்கே இவ்வரிய காட்சி என்கின்றீரா? கடலில் மிதந்த சீகாழியிலேதான் இந்தக் காட்சியைக் காட்டுகிறார்கள;

> ''வங்கமேவு கடல்வாழ் பரதர் மனைக்கே நுழைமுக்கின்
> சங்கம் ஏறி முத்தம் ஈனும் சண்பை நகராரே.'' (1-66-1)

அவ்வங்நிலத்துக்கும் கருப்பொருள் விதிக்கப்பெற்றிருக்கிறது. தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களில் அக்கருப்பொருள் வழாதவாறு திருவருட்போக்கினின்றெழுந்த திருமுறைகள் திகழ்கின்றன. நெய்தனிலத்தை வருணிக்கும் நம்பெருமானார் பாடல்கள் அதன் கருப்பொருளைக்கொண்டே உருப்பெற் றுள்ளன. அது நம்மனோரால் உணர்ந்து போற்றற்குரியது ஆகும்.

**மறைக்காடு**

வேதாரணியம் என்று பிற்காலத்து மொழிக் குழப்பத்தில் பெயர் மாறிய திருமறைக்காட்டுத் தேவதேவனைத் தீந்தமிழ் இசைக்கிறார்கள். தமிழில் 'மைந்து' என்ற சொல் ஆற்றலைக் குறிக்கும். 'மைந்துடை ஆடவர் செய்தொழில் கூறலும்' என்ற புறப்பொருள் வெண்பாமாலையும் இதனைக் கூறும். உலகை ஆக்கி அளித்து அழித்துக் காத்து மறைக்கும் ஆற்றல் படைத்த ஆண்டவனை மைந்தன் என்று அழைத்தல் எத்துணை இயைபுடையது பார்மின்! நம்பெருமானார் வாக்கை நன்கு ஓர்மின்! ஓர்ந்து ஓர்ந்து உன்னுமின்! தமிழ்ச்சொற்கள் 'மைந்து' உடையவை என்பது தெளிமின்! 'மறைக்காட்டுறை மைந்தா' என்று விளிக்கிற மன்னுதமிழ்விரகர், அவ்வூர்ப் பொழிலைக் கடற்கரைச்சோலையை அருளுகிறார்கள். குரா, குருக்கத்தி, புன்னை, ஞாழல் மரங்கள் மருவும் மாண்யார் பொழில் என்று உள்ளாங்கு உரைக்கிறார்கள்.

"குரவம் குருக்கத்திகள் புன்னைகள் ஞாழல்
மருவும் பொழில் சூழ் மறைக்காட்டுறை மைந்தா" (2-173-3)

**மயக்கம்**

இயற்கையில் ஒரு மயக்கம். கடற்கரையில் தாழைகள் தழைத்து நிற்கின்றன. தாழை வெள்ளை வெளேரென்ற வெண்ணிறம் உடையது. நாரைகள் தாழையின் பக்கத்தில் இருந்து ஓடுமீன்ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்கின்றன. பெடை நாரையைக் காணாது போதுற்ற ஆண் குருகுகள் பெடைகளைத் தேடி அலைகின்றன. தாழையின் வெள்ளிய மடல்களைக் கண்டதும் தம் காமமயக்கத்தில் அவையே தம் பெடையெனக் கருதி அணைகின்றனவாம்.

"ஏழைவெண்குருகயலே இளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்கும் தண்மறைக்காடமர்ந்தார்தாம் (2-227-)

இவ்வியற்கை வருணனையோடொத்த ஒருகாட்சியைச் சங்க இலக்கியத்துள் ஒன்றான குறுந்தொகையில் நாம் காண முடிகிறது.

**சாய்க்காடு**

சாயாவனம் என்று இப்பொழுது வழங்கும் திருச்சாய்க்காடு என்ற திருத்தலம் காவிரிப்பூம்பட்டினத்தருகில் இருக்கும் நெய்தனிலத்தலமாகும். சாய் என்பது ஒருவகைக் கோரை. அது காடாக மண்டிய இடமாதலின் இப்பெயர் கொண்ட தென்பர் ஆய்வாளர். அங்கே ஒரு ஊடல். புன்னைமரங்கள் தோறும் பூக்கள் மலர்ந்திருக்கின்றன. மலர்களின் மகரந்தங் களில் வாய்வைத்து ஆடிக் கருவண்டு நிறமாறிவிடுகிறது. பெண்வண்டு தன்வண்டின் 'வண்ணம் வேறுமைகண்டு ஊடிக்கொண்டு சோலைக்குள் ஓடி ஒளிகிறதாம்'.

"மாதர் வண்டுதன் காதல் வண்டாடிய புன்னைத்
தாது கண்டு பொழில் மறைந்தூடு சாய்க்காடே" (2-174-7)

**வெண்காடு**

"சோமகுண்டம் சூரியகுண்டம் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டம்கை தொழுவார் கணவரொடும்
தாமின்புறுவர் உலகத்துத் தையலார்"

என்று இளங்கோவடிகளால் ஏத்தப்பெற்ற சிறப்புடைய முக் குளம் பொருந்திய முதுபெருந்தலம் திருவெண்காடு.

பூம்புகாரை யடுத்த நகரம் அதனைச்சிறப்பிக்கும் அருந்தமிழ் மாலை அவ்வூரின் எழினலங்களைச் சுவைபெறச் சொல்லியிருக்கின்றது. பண்மொழி கொண்டு பரமன் திருப்புகழ் பாடப் பயிசிய இளங்கிளிகள் பனையின் மேலிருந்து வாழ்கின்றனவாம். என்னே அஃறிணை உயிர்களின் அயராத பேரன்பு; ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் இறுதியாக எல்லாவுயிர்களுக்கும் அருளுகின்ற பொதுஉடைமையாக இறைவனருள் பொலிகின்றது. எறும்புக்கும், கரிக்குருவிக்கும், நாரைக்கும், பன்றிக்கும் இன்னருள் பொழிந்தவன் நம் இறைவன் என்பதை நம் புராணவாயிலாக உணரும்போது நம்மையறியாது பெருமிதம் அடைகின்றோம் அன்றோ? அப்பெருமிதம் சமய குரவராகிய சம்பந்தப்பிரானார்க்கும் இல்லாதொழியுமோ? அவர்கள் வாக்கிலே அப்பெருமிதம் உள்ளூற மலர்ந்து நிற்கிறது;

"பண்மொழியால் அவன்நாமம் பலவோதப் பைங்கிளிகள்
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே'
(2-184-6

முல்லைவாயில்

திருமுல்லைவாயில் சீகாழிப்பதிக்கருகில் இருக்கும் நெய்தனிலத்தலம். முல்லைக் கொடிகளின் எல்லையில் பெருக்கால் விளைந்த திருப்பெயர் இது. சென்னைக்கருகில் இருப்பது வட திருமுல்லைவாயில் என்பர். முல்லைவனநாதர் முழங்கு கடலை நோக்கி முகமலர்ந்து முன்வணங்கும் அடியார்தம் இடையூறு நீக்கி இன்பம் ஆக்கி இன்னருள் பொழிந்து திரு வீற்றிருக்கிறார். வீதிகள் தோறும் அங்கு முத்துக்கள் வந்து மிதக்கின்றனவாம்.†

"தெருவத்தில் வந்து செழுமுத்தலைக்கொள்
திருமுல்லைவாயில் இதுவே" (2-224-1)

மான்கள் பாய்கின்ற சோலை. மயில்கள் அங்குமிங்கும் அலைகின்றன. குயில்கள் கூவுகின்றன. தேன் பொங்கி வழியும் மாமரத்தின் மீதேறி அம்மயில்கள் ஆடுகின்றன. அந்த அழகுக்காட்சியில் அகம் கொடாதவர் இருப்பரோ?

† முத்துக்கள் கடற்கரையினின்று ஊரின் உள்ளே, வந்து பரவுதல் பற்றிய இக்கற்பனை 1-ம் திருமுறையில் 66-ம் சண்பைநகர்ப் பதிகத்தும், 3-ம் திருமுறையில் 269-ம் புனவாயிற் பதிகத்தும், 324-ம் வேட்டக்குடிப் பதிகத்தும் பெருமானாற் பேசப்பட்டிருத்தல் கண்டு களிக்கத்தக்கதாகும்.

"மானேறு கொல்லை மயிலேறிவந்து
குயிலேறு சோலை மருவித்
தேனேறு மாவின் வளமேறியாடு
திருமுல்லை வாயில் இதுவே" (2-224-6)

தென்னைகள்

இராமேச்சுரம் தென்னாட்டின் சிறந்த தலமாகத் திகழும் ஒன்று. அதன் சிறப்பை அகமார்ந்த அடியார் நன்கறிவர். எங்கு நோக்கினும் தென்னைகள். அத்தென்னை மரங்களின் பன்னருஞ் சிறப்பைத் தீந்தமிழ் வடிவாக்கிக்கொண்டு திகழ் கிறது தெய்வத் திருமுறை:

"இலைவளர் தாழைகள் விம்முகானல்
இராமேச்சுரம்" (3-208)

முடிவுரை

இயற்கைக் காட்சிகளிலே இதயத்தைச் செலுத்தி, இதயத்து உணர்ச்சியை எழுதிவைத்த இனியவர்கள் எங் கெங்கும் உண்டு. நம் நாட்டில் வாழ்ந்த முன்னோர் இயற்கைக் காட்சிகளே இறைக்காட்சியாகக் கண்டாலும், அவற்றை அழகுபெற உரைப்பதில் தவறவில்லை. அந்தப் பாதையிலே, தெய்வத் திருமுறைக்கு முதல்வராகத் திகழும் திருஞான சம்பந்தப் பெருமான் அருளியுள்ள இயற்கை வருணனைகளை எடுத்துரைக்கப் புகுந்தது இக்கட்டுரை. இது ஒரு பெரும் பொருள். அரும்பொருள். ஏனெனில் திருமுறைபாடிய ஏனை மூவரினும் இயற்கையில் தோய்ந்து ஒவ்வொரு பாடலையும் திருவாய் மலர்ந்தருளிய பெருமை நம் பெருமானுரையே சாரும் ஆதலால். ஆகவே அளவற்ற இவ்வரும் பொருளை எல்லாம் எடுத்து விளக்குவது அரிதாக இருக்குமாதலின், நான்கு பகுதிகளில் ஆராய முற்பட்டேன். மலைசார்ந்த வருணனை, கடல்சார்ந்த வருணனை, வயல் சார்ந்த வருணனை, சோலை சார்ந்த வருணனைகளாகப் பிரித்து விளக்கினேன். இதுகாறும் கூறியவற்ருல் திருஞானசம்பந்தப் பெருமானுர் இயற்கையில் தோயும் திறம் இனிது பெறப்படும்.

# இன்ப உணர்ச்சியில் திளைத்தல்

தருமைப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், வித்துவான்,

திரு. வி. சா. குருசாமி

## அழைப்பு

உயிர்கள் இன்பம் பெற விரும்புகின்றன. பெற்ற இன்பத்தை ஐம்பொறிகளாலும் நுகர்ந்து நுகர்ந்து மகிழ்கின்றன. இன்பத்திற்குத் தடையாக இருப்பனவற்றை எதிர்க்கின்றன. எதிர்ப்பில் வெற்றி கிட்டினால் இன்பம்! இன்பம்!! மிகப் பெரும் இன்பம்!!! விளைவு வேருயின் துன்பம்! துன்பம்!! மிகப் பெரும் துன்பம்!!! இன்பமும் துன்பமும் வாழ்க்கையில் மாறி மாறி வருகின்றன. துன்பமே இல்லாத நிலையான இன்பம் எது? அதைப் பெற விழைவதே தெய்வப் பெரியோர்களின் திருவுள்ளம். இவ்வின்பத்தை அநுபவித்த பெரியோர்கள் "இன்பமே எந்நாளும் துன்பமில்லை", "இன்பசுகத்துள்ளே இருக்கலாம் எப்போதும் துன்பவினை உன்னைத் தொடராது", பொங்கித் ததும்பிவழியும் பூரணனந்தத்தை நுகரச்செகத்தீரே சேரவாரும் என அறைகூவி அழைப்பர்.

அழைப்பை ஏற்றுக்கொள்வர் அறிவுடையோர். அறிவிலார் உண்மையோ பொய்ம்மையோ என ஐயுற்று "தான் கண்ட அனைத்து இவ்வுலகம்" எனத் தருக்கிநிற்பர். இவ்வாறு பேரின்பத்தை நுகர்ந்து ஏனையோரையும் நுகர அழைப்பன தெய்வத் தமிழ்ப் பாடல்களாகிய தேவாரத் திருமுறைகள். அழைப்பை விடுப்போர் அருட்கவிஞர்கள். உண்மை இன்பம் நுகர்ந்தோர்க்கு உலகில் காணும் இன்பங்கள் அத்தனையும் பொய்யும் போலியுமாகப் புலனுகும். பரம்பொருளோடு இரண்டறக் கலந்து இன்பங்காணும் இச் சிவபோகமே பெரிது எனத் தோன்றும். அதுவே உண்மையும் உறுதியும் ஆய நிலைத்த இன்பம்.

## தெய்வக் காட்சி

கடவுட் காட்சி மனித உள்ளத்தை மாசுபோக்கவல்லது. கடவுளைக் காணும் பண்பட்ட உள்ளத்திலும் பற்பல வேறுபாடுகள். கடவுளைத் தந்தை, தாய், மனைவி, மணாளன், தோழன்

முதலியோராகக் கண்டனர் நம் சமயப் பெரியோர். அவனது அருளை - அருளில் விளையும் இன்பத்தை எப்படி அநுபவித்தால் என்ன? கடவுளைக் காதலனாக, மணாளனாகக் காணும் முறை புதிய முறை; கடவுள் வழிபாட்டிலும் சிறந்த முறை. இம் முறையில் தப்பினோர் சமயகுரவர்களில் ஒருவரும் இலர். திருநாவுக்கரசு சுவாமிகளும், மாணிக்கவாசக சுவாமிகளும் இறைவனைத் தங்கள் தலைமகனாகக்கொண்டு வழிபட்டமையைத் திருமுறைகளில் காணலாம். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் இம் முறையைப் பெரிதும் விரும்பினோர். அவரது தெய்வக்காட்சியின் தொடக்கமே, தான் ஒருதலைவி, இறைவன் தலைவன் என்ற முறையில்தான் ஆரம்பிக்கிறது. அவரது அருட் பாடல்களில் அம்முறை வரும் இடங்களைத் தொகுத்தெண்ணு வதே இக் கட்டுரையின் நோக்கம்.

### அகப்பொருள்

பொருளியற்றமிழ் அகம் புறம் என இரு பிரிவுடையது. இன்பப் பகுதியை அகப்பொருளெனல் தமிழ் மரபு. சங்ககால இலக்கியங்களில் எஞ்சிநின்ற பெரும்பான்மை அகப்பொருள் பற்றியனவேயாகும். தமிழர் வாழ்வு வளங்கொழித்து இருந்த அக்கால நிலைமையை அவை நன்கு புலப்படுத்தும். எல்லா வளங்களும் நிரம்பிய பொழுதன்றோ இன்பம் சிறந்து மிளிரும்! அகப்பொருளுக்குப் பண்டைத் தமிழர் தரும் விளக்கம் புதுமையானது; பொருத்தமானது. 'நாடு நாடா யிற்று; இனி பைந்தமிழ்ப் புலவர்களை அழைப்பேன். பரிசில் பல நல்குவேன். பசி தீர்ப்பேன். அவர்களின் வளமான வாழ்வன்றோ தமிழை வளர்க்கும். சாற்றுமின் பறை! ஏற்றுமின் கொடைக் கொடி!!' எனப் பஞ்சந் தீர்ந்த தன் பாண்டி நாட்டில் பைந்தமிழ்ப் புலவர்களுக்கு அழைப்பு விடுத்தான் பாண்டிமன்னன் ஒருவன். பழமரம் கெழுமும் பறவைகளைப் போல் பரிசில் வாழ்க்கை வாழும் புலவர்கள் பாண்டிநாட்டைச் சூழ்ந்தனர். முத்தமிழ் கற்ற முதுபெரும் புலவர்களில் இலக் கணங் கற்றோர் எண்ணற்றோர்; இலக்கியங் கற்றவர்கள்தாம் எத்துணைபேர்கள்! புலவர்களின் புலமையை அறிந்தான் புரவலன். 'பைந்தமிழ்ப் பண்ணை பாண்டிநாடு' என்ற பழம் பெருமையைப் பாதுகாக்க வேண்டுமென்று மன்னன் மனம் தவித்தது. புலவர்களின் எண்ணற்ற எண்ணிக்கை இறையவன்

மனத்தை இன்புறுத்தவில்லை. எங்குங் கூடியிருந்த ஆயிரம் ஆயிரம் புலவர்களில் அகப்பொருள் இலக்கணம் கற்ருேர் அங்கொருவரும் இலர் என்ற குறை அரசனை வருத்தியது. இருந்த இலக்கண நூல்களையும் இருங்கடல் உண்டு தன் பசி தீர்த்

### செந்தமிழ்ச்சொக்கர்

அகப்பொருள் இலக்கணங் கற்ருேர் அருந்தமிழ் நாட்டில் அருகிப்போனதை எண்ணி எண்ணி அரசன் கவன்ருன். அவனது தமிழுள்ளம் தவித்தது. தமிழ் வளர்ச்சி தடைப்பட்டதை எண்ணித் தடுமாறியது. அவனது மனத்துயரைத் தீர்க்கச் சங்கம் இருந்து தமிழாராய்ந்த செந்தமிழ்ச்சொக்கர் முன் நிற்கிருர். 'சொற்றமிழ் பாடுக' என்று சுந்தரரை ஏவிச் செந்தமிழ் கேட்ட செவியன்ருே அவரது செவிகள்! மணிவாசகரைக் கோவை பாடச் செய்து இருந்து எழுதிய தமிழ்க்கரங்களன்ருே அவரது கைகள்!! தலைச்சங்கம் இருந்து தமிழாராய்ந்த தலைமைப் புலவர் வரிசையில் முன் நிற்பவரன்ருே அப்பெருமான்!!! தமிழுக்குற்ற குறையைத் தனக்குற்ற குறையாகக் கருதுகிருர். அகப்பொருளிலக்கணம் எழுதுகிருர். இறைவனது திருக்கரம் அகப்பொருளிலக்கணம் ஒன்றையும் இலக்கியமொன்றையும் எழுதியிருக்கிறது. இது தமிழுக்குக்கிடைத்த தனிப்பெருஞ் சிறப்பல்லவா? அந்த அகப்பொருள் இலக்கணத்துக்கு உரை எழுதும் தகுதி நக்கீரருக்குக் கிடைக்கிறது. அவர் அகப்பொருளுக்கு விளக்கங் கூறுகிருர் நூலின் தொடக்கத்தில். "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற கூட்டத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ் இருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனுக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருள்" என்பது அவர் தரும் அகப்பொருள் விளக்கம். அகப்பொருளுக்கும் ஆலவாய் இறைவற்கும் உள்ள தொடர்பு இம்மட்டோடு விடவில்லை. தொடர்கிறது தோணிபுரப்பெருந்தகையார் தம் தோத்திரப் பாடல்கள் மூலமாக.

### அகப்பொருள் பதிகங்கள்

இறைவனேடு கலந்துணரும் இன்பத்தை அகப்பொருள் இலக்கண அமைதிகளுக்கேற்பப் பாடினர் ஆளுடைய

பிள்ளையார். ஐந்திலக்கணங்களும் அவர்தம் திருமுறைகளில் அழகொழுக அமைந்திடக்கின்றன. தெய்வக்குழந்தையின் திருமுறை தொடக்கத்திலேயே தெய்விகக்காதலில் தொடங்கு கிறது. முதற்றிருப்பதிகமே முத்துகைய முன்பக் காட்சியை வழங்குவதை எண்ண எண்ண முன்றமிழ்வாணர் இன்புறுவர். முதல் மூன்று திருமுறைகளில் சற்றேறுப்பப் பதினோக்குபதிகங்கள் பாங்குற இன்பப் பகுதியில் இடம்பெறுவன. வியத்தகு செயலில் விளம்பிய திருப்பதிகங்களாக 'சடையாயெனுமால்', 'மட்டிட்ட புன்னை' என்பனவாயவை இன்பப் பகுதியை விளக்கும் பதிகங்கள் என்பதற்கிடமுண்டு. அகப்பொருள் இலக் கணங்களை அடியொற்றிய பதிகங்களை பொருளொற்றுமை காட்டித் தொகுத்துக் காண்போம். இவை முன்னர் எண்ணத் தகுவன. இறைவன் தலைவன். உயிர் தலைவி. சாத்திரக் கருத்திற்கியைய மற்றும் சிலவற்றைக் கருதுதல் நல்லது. ஐவகை நிலங்களையும் தலைவி, தலைவன், தோழி, தோழன், செவிலி, நற்றாய் இவர்களையும் இவ்வாறு எண்ணல் மரபு குறிஞ்சி - சுத்த சாக்கிரத் தானம், பாலை - சுத்த சொப்பனத் தானம், முல்லை - சுத்த சுழுத்தித் தானம், மருதம் - சுத்த துரியத் தானம், நெய்தல் - சுத்த துரியாதீதத் தானம் என ஐவகை நிலங்களை ஐந்து சுத்தாவத்தைகளாகக் கூறுவர் தலைவனைப் பரம்பொருளாகவும், தலைவியைப் பக்குவான்மா வாகவும், தோழியைத் திருவருளாகவும், தோழனை ஆன்ம போகமாகவும், செவிலியைத் திரோதாயியாகவும், நற்றாயைப் பரையாகவும் கூறல் மரபு. திருக்கோவையாரில் இம்முறை யைச் சிறிது மாற்றி பரம்பொருள் தலைவியாகவும் பக்குவான்மா தலைவனாகவும் கூறப்பெற்றுள்ளது.

இறைவனாகிய தலைவனை அடைந்து பேரின்பம் அடையும் முயற்சியில் பக்குவான்மாக்கள் அல்லும் பகலும் ஈடுபடு கின்றன. இறைவனை அடைதற்கேற்ற பெண்மையுள்ளம் உயிர்களுக்கு முதலில் வேண்டும்.

**உள்ளங்கவர் கள்வன்**

திருஞானசம்பந்தரின் குழந்தைப் பருவம். மழலைவாய் முத்தந்ததும்பச் சிற்றில் இழைத்துச் சிறு தேருருட்டித் தெரு வீதியில் விளையாடுகிறார். காலை நேரம். தந்தையார் நீராடச்

செல்லுகிறார். " நானும் வருவேன் " என்று பிடிவாதம் பிடிக்கிறது குழந்தை. குழந்தையின் கொஞ்சுமொழி கேட்டு நெஞ்சமிளகித் தோளில் சுமந்து செல்கிறார் தோணியப்பர் ஆலயத்திற்குள் விளங்கும் தெய்வத் திருக்குளத்திற்கு. குழந்தையைக் குளக்கரையில் இருத்தி, பெருமானைத் தியானித்து, பிள்ளையின் நினைவின்றி மூழ்குகின்றார் தந்தை. தெய்வக்குளக்கரையில் இருந்த திருஞானசம்பந்தருக்கு முன்னுணர்வு மூண்டது. தந்தையாரைக் காணாது செங்கனிவாய் துடிதுடிக்கக் கண் மலரைக் கையால் பிசைந்து அழுதார். அழுதார். பொருமிப் பொருமி அழுதார். அவர் நின்றிருந்த சூழலில் தோணியப்பர் சிகரம் அவர் கண்களுக்குப் புலனாயிற்று. 'அம்மே! அப்பா!' என அறைகூவினார். பெருமான் பெருமாட்டியுடன் எழுந்தருளிக் குழந்தையின் கண்ணீர் முத்துக்களைக் கையால் துடைத்துச் சிவஞானப்பாலமுதைச் செவ்வாய் நெறிக்காட்டி அம்மையும் தானுமாய் மறைகின்றனர். பாலளித்துச்சென்ற பரம்பொருளிடம் உள்ளத்தைப் பறிகொடுக்கிறது குழந்தை. உண்மையான தலைவன் உள்ளங்கவர்ந்துசென்றதை எண்ணி ஏக்களிப்படைகிறது குழந்தை. இறைவனின் இன்னருள் பெறுதற்கேற்ற பக்குவம் அல்லது தகுதி அக்குழந்தையால் இருக்கிறது. இந்நிலை தலைவனிடம் தலைவி நெஞ்சைப் பறி கொடுக்கும் நிலைக்கு ஒப்பாகும். பிறகு தன்னை வினவிய தந்தையார்க்கு 'தோடுடைய செவியன்' என்று தொடங்கி உள்ளங்கவர்ந்த ஒருவனியல்புகளை உணர்கிறது குழந்தை. இது திருஞானசம்பந்தர் வரலாற்றின் முற்பகுதி.

**பொருள் நலன்**

தாமரை பூத்த தடாகத்தினருகே தலைவன் தலைவியரைச் சந்திக்கச்செய்து இந்த இயற்கைக் கூட்டம் தெய்வத்தால் கூடிய கூட்டம் என்று விளக்குவர் அகப்பொருள் நூலார். " தெய்வந் தன்னின் எய்தவும் படூஉம் இயற்கைப் புணர்ச்சி " பொய்கைக் கரையிடத்து விளைந்த இந்தப் புதுக்காதலால் தலைவியின் உள்ளம் மட்டுமல்ல. உடலும் வேறுபடுகின்றது. வேறுபாடுகண்டு தலைவியின் வேற்றொழுக்கத்தைத் தோழி உணர்வாள். வேறுபாடுகளை நாற்றம் தோற்றம் முதலியவற்றால் ஆய்ந்துணர்ந்துகொள்வதிலும் மெய்யும் பொய்யும்கூறித் தலைவியின் உள்ளத்தைத் தூண்டி உண்மையை அறிவதிலும் தோழி

மிக்க திறமுடையளாயிருப்பாள் இனி மறைக்கவொண்ணாது என்று தலைவியும் தன்னுயிர்ப் பாங்கியாகிய தோழியிடம் உண்மையுரைப்பாள்.

உள்ளங்கவர்ந்த உண்மைகளை ஒன்றுவிடாமல் ஒளியாமல் தோழிக்குத் தலைவி கூறும் முறையிலமைந்தது தோடுடைய செவியன் என்னும் பீடுடைய பெரும்பதிகம். தன் அகமும் புறமும் தலைவன் கவர்ந்ததை இதோ வந்துத் தோணிபுரத்துத் திருஞானசம்பந்தத் தலைவி சொல்கிருள் பாருங்கள்;

"ஏர்பரந்த இனவெள்வளை சோரஎன் உள்ளங்கவர்கள்வன்" 1-1-3

"இறைகலந்த இனவெள்வளை சோரஎன் உள்ளங்கவர்கள்வன்" 1-1-6

இந்த இருதொடர்களில்தாம் எத்துணைநயங்கள்! பாடலின் பகுதியைப் பார்ப்போம். 'நீர் பரந்த நிமிர்புன்சடை மேலோர் நிலா வெண்மதி சூடி. ஏர்பரந்த இனவெள்வளை சோர என் உள்ளங் கவர்கள்வன்' தலைவியின் கையிலணிந்துள்ள வளையல்கள் சங்கு வளையல்கள். வெண்ணிறமானவை. ஆனல் இறைவன் தலையிலுள்ள இளம் பிறையோ வெண்மையும் தண்மையும் உள்ளது. நிலாவொளிவீசும் வெண்பிறையிருக்கவும் என் வெள்வளை கொள்ளல் விநோதமே என்ற குறிப்பை மீண்டும் வலியுறுத்துவாராய் 'இறைகலந்த என் வெள்வளை சோர என் உள்ளங்கவர்கள்வன் பிறைகலந்த பெம்மான்' என்கிறுர் தலைவி. தலைவியினது பொருள் தன்னிடமுள்ள பொருளின் தகுதி குறைந்ததாயினும் அவளது பொருளேயே அழகிது அரிது என்று நினைக்கும் தலைவனது அன்புப் போக்கைப் புலப்படுத்துகிறது இது. மற்றுமொருபொருள். 'வெண்மையெனப்படுவது அறியாமை' எனக்கொண்டு என்னிடமுள்ள அறியாமையை நீக்கி என்னுள்ளங்கவர்ந்தான் என்று கூறல் சிறப்புப் பொருளாகக் கொள்ளலாம். அம்மம்ம! அவள்தம் அமுதவாய் மொழி எப்படியெல்லாம் நம்மை இழுத்துச்செல்லுகிறது.

## நலங்கவர்ந்த நல்லியல்பு

நலங்கவர்ந்த தலைவனது நல்லியல்புகளைத் தலைவி தோழிக்குக் கூறுகிருள். திருப்பாற்றுறைக்கு எழுந்தருளிய திருஞானசம்பந்தர் முன்உள்ளங்கவர்ந்து சென்ற தலைமகன்

எழில்கொண்ட இயல்புகளை மீண்டும் கூறும் முறையில் திருப்பதிகம் அருளிச்செய்கின்றார். "ஒருகலைப்பிறை உறையும் திருமுடியினராய இறைவன் பிரிதலால் ஏற்படும் பெருந்துயரை அறியாமல் என் எழில் கவர்ந்து சென்றார்" என்பன முதலிய கருத்துக்களால் விளக்குவள்.

"விண்ணுறார் திங்கள் விளங்கும் நுதலினர்
எண்ணுறார் வந்தென் எழில் கொண்டார்" 1-56-3

"பூவுந் திங்களும் புனைந்த முடியினர்
ஓவென் சிந்தை ஒருவரே" 1-56-4

"மாகந் தோய்மதி சூடிமகிழ்ந் தெனது
ஆகம் பொன்னிற மாக்கினார்" 1-56-5

"போது பொன்றிகழ் கொன்றை புனைமுடி
நாதர் வந்தென் நலங் கொண்டார்" 1-56-6

"வெவ்வ மேனியராய் வெள்ளை நீற்றினர்
எவ்வம் செய்தென் எழில்கொண்டார்" 1-56-8

**தூது**

இது தமிழில் வழங்கும் தொண்ணூற்றுறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. தலைவி தலைவன் இருவர்களுக்குமுள்ள வேணவாவைப் புலப்படுத்த அன்னம், மயில், கிளி, மேகம், குயில், நெஞ்சு, தென்றல், வண்டு முதலியவைகளைத் தூது செல்லுமாறு கூறுதல் இதன் இலக்கணம்.

"எகினம் மயில் கிள்ளை எழிலியொடு பூவை
சகி குயில் நெஞ்சம் தென்றல் வண்டு—தொகைபத்ததை
வேறு வேறுப் பிரித்து வித்தரித்து மாலைகொண்டு அன்பு
ஊறிவா என்றல் தூது"

(பிரபந்தத்திரட்டு)

என்பது தூதிற்குரிய இலக்கணம்.

"கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே"

தொல்காப்பியம், என்னும் விதிகொண்டு அஃறிணை உயிர்களை யும் பொருள்களையும் தூது விடுத்தல் பொருந்தும். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருப்பிரமபுரத்துப் பதிகமாகிய "வண்டரங்கப்புனற் கமலம்" என்று தொடங்கும் திருப்பதி கத்தையும் திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகமாகிய "பைங் கோட்டு மலர்ப்புன்னை" திருப்பதிகத்தையும் தூது விடுக்கும் அகப்பொருள் பதிகங்களாக ஆக்கி அருளியிருக்கிறார்கள். வண்டு, குருகு, கோழி, நாரை, புறு, அன்னம், அன்றில், குயில், பூவை, கிளி ஆகியவைகளைத் தூதுவிடுத்துள்ளார்கள். உள்ளங்கவர்ந்து உடலெழில் கவர்ந்து சென்ற தோணிபுரத்துப் பெருமானிடம் தூது விடுக்கும் திருப்பதிகம் இது

வண்டு

வண்டை அழைத்துத் தலைவனிடம் தன் நிலைமை உணர்த் துமாறு அனுப்புகிறாள் தலைவி. அடைமொழி கொடுத்து வண்டையும் பெருமைப்படுத்தி அனுப்பும் அருமையை இப் பாடலில் காணலாம். வளமான பொய்கை. சேற்றுவளத்தால் செந்தேன் நிறைந்த செந்தாமரை மலர்கள் மலர்ந்துள்ளன. மது உண்டு மகிழ்ச்சியால் பெடையொடு கூடித் திரிகிறது அரச வண்டு. பெடையொடு கூடிக் களிக்கும் வண்டிற்கும் பெண்ணின் பிரிவாற்றாமை நன்கு புரிந்திருக்கும் என்பது அவள் கருத்து. எனவேதான் அழைக்கிறாள் அரசவண்டை இவ்வாறு.

"வண்டரங்கப் புனற்கமலம் மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே" 1-60-1

தூது உரைக்கவேண்டியவரின் அடையாளங்கள் அடுத்துச் சொல்லப்பெறுகின்றன. தொலைவில் செல்வாரையும் தன் னிருப்பிடம் காட்டி அழைப்புத்தரும் கலங்கரைவிளக்கம் போலத் தன் சடைமுடியில் ஒளிவிளங்கும் ஒரு கலைப் பிறையை அணிந்துள்ளான். எனவே அவனை அறிதல் எளிது. மாலையிலே உலக ஒடுக்கத்தின்போது அளித்த எலும்பு மாலைகள் விளங்கும் என்கிறாள் தலைவி. அடையாளமளிக்கும் போது வேறுயாருமணியாத எலும்பு மாலைகளைச் சுட்டிக் கூறும் அழகு அறிதற்குரியது. இசைக்கு அவனிடம் நல்ல

மதிப்புண்டு. அலைகளில் எழும்பும் ஓசையை இசையாகக் கொள்வான். எனவே ஓண்தரங்க இசைபாடும் உனக்கு நல்வரவேற்புக் கிடைக்கும்' என்று கூறி அனுப்புகிறாள்.

"ஒளிர்மதியத்துண்டர் அங்கப்பூண்மார்பர் திருத்தோணிபுரத்துறையும்
பண்டரங்கர்க்கென்னிலைமைபரிந்தொருகால் பகராயே"

தன்னை விரும்புவோர் படுந்துயரம் பொறுக்காமல் உடனே எனக்கருள் புரிவன் என்பது குறிப்பு.

## குருகு

கடற்கரைச் சோலைகளில் தங்கியிருந்து கழியிடத்தில் இரை தேர்ந்துண்பது இப்பறவை. கடலும் கடல் சார்ந்த இடங்களும் நெய்தல் என்று பெயர்பெறும். நெய்தலில் இரங்கல் பொருள் சிறப்புடையது. நெய்தல் கருப்பொருளாகிய குருகு தலைவியின் இரங்கத்தக்க நிலையை எடுத்துணர்த்தற்குச் சிறப்புடையது. பிற உயிர்களின் துன்பந்தெரியாத இப்பறவை தூதுசென்றால் அது தலைமகனை இடித்துணர்த்துவது போலவும் இருக்கும்.

சுறு மீன்கள் துள்ளிக்குதிக்கும் உப்பங்கழிக்கருகே அமைந்த சோலையில் உள்ள இளங் குருகே! வேறு யாரையும் தூதனுப்பி என் துயர் கூறாதது என் நல்வினையின் பயனே. மணங்கமழும் மலர்மாலையணிந்த தோணிபுரத்திறைவர்க்கு நானடைந்த பசலை நோயை அறிவித்து வருவாயாக.

"எறிசுறவம் கழிக்கானல் இளங்குருகே என்பயலை...
திருத்தோணிபுரத்துறையும் வெறிநிறார் மலர்க்கண்ணி
வேதியர்க்கு விளம்பாய்" 1-60-2

## கோழி

வயல் வளம் மிகுந்த மருத நிலங்கள் செறிந்த ஊர்களில் வாட்டமின்றி வாழும் பறவையே கொடுவினையேன் அடைந்த பசலையைச் சண்பகமரங்கள் செறிந்த பொழில் சூழ்ந்த தோணிபுரத்திறைவனிடம் சென்றுரைத்தால் அது பழியாமோ?' என்றாள் தலைவி.

"வாட்டமிலாச் செஞ்சூட்டு...வாரணமே. தோணிபுரத்துறையும்
பண்பழுக்கென்பரிசுரைத்தால் பழியாமோ மொழியாயே" 1-60-3.

## நாரை

சிவந்த கால்களையுடைய நாரையே 'தலைவி பசலை என்னும் பச்சிளங் குழவியைப்பெற்றெடுத்திருக்கிறாள் என்று சென்று சொல்' என்கிறாள் தலைவி

"செங்காலாண்கழி நாராய்! பொன்பயந்தாள் என்று
ஆண்டகையார்க்கு இன்றே சென்று அடியறிய உணர்த்தாய்" 1-60-1

## புறு

"பவளம் போன்ற பாதங்களையுடைய புறாவே! தேரோடும் திருவீதிகளையுடைய திருத்தோணிபுரத்து உறையும் கங்கை தங்கிய சடைமுடியார்க்கு என்காதல் மெலிவைக் கூறுவாய்"

"கபோதகங்காள்! திருத்தோணிபுரத்துறையும்
நீராரும் சடைமுடியார்க்கு என்நிலைமை நிகழ்த்தீர்" 1-60-5

## அன்னம்

சேற்றில் தோன்றிய செந்தாமரையில் செந்நெற்கதிர்கள் கவரியிரட்டஅரசு வீற்றிருக்கும் அன்னங்களே! தலைவனது கூற்றுதைத்த திருவடிகளை யான் சென்று கூடுமாறு கூறுவீராக.

"அன்னங்காள் கூற்றுதைத்த திருவடியே கூடுமா கூறீரே" 1-60

## அன்றில்

"ஆணொடு பெண்ணுறவுக்கு அன்றிலைக்கூறுவர். பிரிவின்றி இரவில் கூட ஒன்றன் தலையில் மற்றொன்று அலகைச் செருகி வாழும் இயல்புடையது. அன்றில்! தென்றல் வீசும் திருத்தோணிபுரத்துறையும் கொன்றை சூடிய சடையார்க்கு என் பசலைநோயைச் சென்று பகர்வீராக."

"அன்றில்காள்... கொன்றைவார் சடையார்க்கு
என் கூர்பயலை கூறீரே."

குயில்

மாங்குளிர் கோதும் பூங்குயிலே ! இனிதாகப் பேசும் குணம் உன்னிடம் இயல்பாக அமைந்துள்ளது. தேனுடும் பொழில்சூழ்ந்த திருத்தோணிபுரத்துறையும் தலைவனை என் னிடம் வரச்சொல்வாய்'

"இனிதாக மொழியு மெழில் இளங்குயிலே!
திருத்தோணிபுரத்துறையும் கோனுரை என்னிடத்தே
வர ஒரு கால் கூவாய்" 1-60

பூவை

'அழகிய வாயினையும் அலகினையும் உடைய பூவையே, போற்றுகிறேன் உன்னை, மழலையென இனிக்கும் வண்ணம் பேசுவதில் சிறந்த பறவைநீ' தோணிபுரத்து வில்லேந்தி நிற்கும் விகிர்தனிடம் சென்று என் நிலைமை கூறு.

"பூவை நல்லாய்! விற்பொலிதோள் விகிர்த
னுக்கென் மெய்ப்பயலை விளம்பாயே" 1-60

கணபதீச்சரம் பணிந்தெழுந்த காழிக்கவுணியர் பெருந் தகை "பைங்கோட்டு மலர்ப்புன்னை என்னும் பதிகத்தை அருளிச்செய்கின்றார்கள். இத்திருப்பதிகம் முழுதும் பறவை விடு தூதாகவே அமைந்துள்ளது. நெய்தற் சார்புடைய நில மாக்கி அந்நிலத்திற்குரிய இரங்கல் என்னும் உரிப்பொருளில் அமைந்திருப்பது தூதிற்கேற்ற மிக்க பொருத்தமுடையதாக அமைந்துள்ளது.

புன்னைப்பறவை !

'பசுமையான கிளைகளையும் முத்துப்போன்ற மொட்டுக் களையும் உடைய புன்னைமரக்கிளைகளில் உள்ள பறவைகளே! செங்காட்டாங்குடி மேயசிவன் என்கைச் சங்காட்டந்தவிர்த்துத் தீராத துன்பத்தைத் தந்தான்' என்று உரைக்கின்றாள் தலைவி. புன்னை நெய்தற் கருப்பொருள். புன்னைமரக்கிளைகளில் கடற்கரைக் கழியில் கயல் மீனுண்டு கூடுகட்டி வாழ்வன சில பறவைகள். அவை குருகு நாரை முதலியன.

"பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்து என்னைத் தவிராநோய் தந்தான்.
செங்காட்டங் குடிமேய பெருமான்" 3-21-1

**அன்னம் அன்றில்**

பூக்களால் பொலிவுபெற்ற அழகிய கழிகளை உடைய கடற்கரைச் சோலையில் பெடையொடு பிரியாது வாழும் அன்னங்களே! அன்றில்களே! கணபதீச்சரம்மேய கரும்பினு மினியானாகிய கங்கைவார் சடையானுக்கு எனதல்லலை எடுத் திசைப்பீரோ?......

" பொன்னம் பூங்கழிக்கானல் புணர்துணை யோடுடன்
அன்னங்காள் அன்றில்காள் கணபதீச்சரம்மேய வாழும்
இன்னமுதன் இணையடிக்கீழ் எனதல்லல் உரையீரே " 321-2

**நாரை**

ஆழ்ந்து தண்ணீர் தேங்கியிருக்கும் இடத்தின்கண்ணும், சிறு குழியிடங்களிலும் குளிர்ந்த பொய்கையிடத்தும் சோலை, வயல், கழி, கடல் இவ்விடங்களிலும் தாம் விரும்பியவாறு இரைதேடும் நாரையே! செங்காட்டங்குடிமேய வார்சடை யானுக்கு என் வருத்தங் கூறு.

" குட்டத்தும் குழிக்கரையும் குளிர்பொய்கைத் தடத்தகத்தும்
இட்டத்தால் இரைதேரும் இருஞ்சிறகின் மடநாராய் செங்காட்டங்குடிமேய
வட்டவார் சடையார்க்கு என்வருத்தம் சென்றுரையாயே " 3

" கானருகும் வயலருகும் கழியருகும் கடலருகும்
மீனிரிய வருபுனலில் இரைசேர்வெண் மடநாராய்
வானமரும் சடையார்க்கு என்வருத்தம் சென்றுரையாயே "

**குருகு, நாரை**

" ஆரல்மீன், சுறுமீன் இவற்றை மேய்ந்து அகன்ற கழனி யிடங்களில் சிறகுலர்த்தும் சிறுகுருகே நாரையே! என் நிலைமை சென்றுரையீர்! "

' துன்புற்றார் இடர்தீர்த்தல் பிறர் கடமையல்லவா?' குருகே! துணைபிரியாத நாரையே! செங்காட்டங்குடிப்பெருமா னின் சீரருளைப் பெறலாமோ?

'வெண்குருகே! கழிநாராய்! ஒரு அடியாள் இரந்தாள் என்று ஒருநாளேனும் சென்று சொல்வீர்!'

'தாராவே! மடநாராய்! எனக்கு ஒரு உதவி செய்வீர்; அவன் அருள் பெறத் தூது சென்றுரையீர்!'

'குருகே! உலகெல்லாம் அறப்பலிகொள்வானுக்கு என் அலர் கோடல் அழகியதோ? அவன் பேரையே பிதற்றி என் பெருநலமனைத்தும் இழப்பதுதானு என் நிலைமை?'

"ஆரலாம் சுறவமேய்ந் தகன்கழனிச் சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச் சிறுகுருகே பயில்தூவி மடநாராய்
நீருலாம் சடையார்க்கென் நிலைமைசென் றுரையீர்" 3-63-5

"குறைக்கொண்டார் இடர்தீர்த்தல் கடன்அன்றே குளிர்பொய்கைத்
துறைக்கெண்டை கவர்குருகே துணைபிரியா மடநாராய்
பெருமான்சீர் அருள்ஒருநாள் பெறலாமே" 3-63-6

"கருவடிய பசுங்கால்வெண் குருகேஒண் கழிநாராய்
ஒருஅடியாள் இரந்தாளென் றொருநாள்சென் றுரையீர்" 3-63-7

"கூராரல் இரைதேர்ந்து குளமுலவி வயல்வாழும்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
பெருமான்தன் னருள்ஒருநாட் பெறலாமே" 3-63-8

"நறப்பொலிபூங் கழிக்கானல் நவில்குருகே உலகெல்லாம்
அறப்பலிதேர்ந் துழல்வார்க்கென் னலர்கோடல் அழகியதோ
பிறப்பிலிபேர் பிதற்றிநின்றிழக்கோ எம்பெருநலமே" 3-63-10

கிளி

திருப் பிரமபுரத்துத் திருப்பதிகத்து இளங்கிளியே என அழைக்கிருள் தலைவி. இளமை ஈன்ற அணிமையதல்ல என்பதை உணர்த்தச் 'சிறையாரும்மடக்கிளியே' என அழைக்கிருள் மீண்டும். 'இங்கே வா! உனக்குத் தேனும் பாலும் மாறிமாறித் தெவிட்டாமல் உண்ணத் தருவேன். கடலருகே அமைந்து விளங்கும் காழிமாநகர் இறைவன் திருப்பெயரை காது இனிக்கக் கருத்தினிக்கக் கூவுவாயாக' என உண்ணத்தரும்

பொருளைக்காட்டி செய்யும் செயலைப் பின்பு கூறிக் கிளியிடம் வேண்டுகிறாள் தலைவி.

" சிறை யாரும் மடக்கிளியே!......பிறையாளன்
திருநாமம் எனக்கொருகால் பேசாயே " 1-60-10

ஐயமேற்கச்சென்ற அழகர்

இப்பதிகம் முழுதும் தலைமகள் தலைமகளைத் தன் எதிர்ப்படுத்திப் பேசுதல்போல் அமைந்துள்ளது.

தாருகாவனத்துள் பெருமான் பெண்கள் தரும் பிச்சை யேற்கச் செல்கிறார். ஐயமேற்கும் பொழுது அப்பெண்டிர்களின் ஆடை, அணி, வளையல், வாகுவலயம், உள்ளம், பெண்மை இவைகளைக்கவர்கிறார். அப்பெண்கள் பெருமானை நோக்கி இரங்கிக் கூறும் உரைகள் இவை.

" வரியார் வளையார் ஐயம் வவ்வாய் மாநலம்வவ்வுதியே " 1-63-1

"கயலார் தடங்கண் அஞ்சொல் நல்லார் கண்டுயில் வவ்வுதியே" 1-63-2

" பகலாப் பலிதேர்ந் தையம் வவ்வாய் பாய்கலை வவ்வுதியே " 1-63-3

" அங்கோல் வளையார் ஐயம் வவ்வாய் ஆய்நலம் வவ்வுதியே " 1-63-4

" பிணிநீர் மடவார் ஐயம் வவ்வாய் பெய்கலை வவ்வுதியே " 1-63-5

" அவர் பூம்பலியோடையம் வவ்வாயால் நலம் வவ்வுதியே " ,,

" நிலையாய்ப் பலிதேர்ந்தையம் வவ்வாய்நீ நலம் வவ்வுதியே " 1-63-6

" கருதேர்மடவார் ஐயம் வவ்வாய் கண்டுயில் வவ்வுதியே " 1-63-7

" காரிகைவார் குழலார் அவர்பூம்பலியோ டையம்
வவ்வாயானலம் வவ்வுதியே " 1-63-9

" குழலார் மடவார் ஐயம் வவ்வாய் கோல்வளை வவ்வுதியே " 1-63-10

" சிட்டார் பலிதேர்ந்தையம் வவ்வாய் செய்கலை வவ்வுதியே " 1-63-11

### அறத்தொடு நிற்றல்

அறத்தொடு நிற்றல் என்பதற்கு முறையே வெளிப்படுத்தி நிற்றல் என்பது பொருள். தலைவன் தலைவி இருவர்க்கும் இடையே உள்ள களவொழுக்கத்தைத் தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றுய்க்கும், நற்றுய் தந்தை தமையர்க்கும் அறிவித்துநிற்பர். திருக்கானூர்த் திருப்பதிகமாகிய ‘வானூர்சோதி’ என்ற பதிகம் தலைமகள் தோழிக்கு அறத்தொடு நிற்கும் வகையில் அருளிச் செய்யப்பெற்றது. இதுவும் தாருகாவனத்துத் தையலார் பேசுவனவேயாகும். ஐயம் ஏற்ற அழகரிடத்தே மனத்தைப் பறிகொடுத்த அம் மங்கையர் தோழியரிடம் கூறுகின்றனர்.

“ இறையார் வந்தென்னில் புகுந்து என் எழில் நலமும் கொண்டார் ” 1-73-3

“ எண்ணுவந்தென்னில் புகுந்தங் கெவ்வநோய் செய்தான் ” 1-73-4

“ ஊர்கள் தோறும் ஐயம ஏற்றென் உள்வெங்நோய் செய்தார் ” 1-73-5

“ எளிவந்தார் போல் ஐயம் என்றென் இல்லேபுகுந்துள்ளத்
தெளிவும் நாணும் கொண்ட கள்வர் ” 1-73-6

“ ...............முறுவல் செய் திங்கே
பூவார் கொன்றை புனைந்து வந்தார் பொக்கம் பல பேசிப்
போவார் போலமால் செய்துள்ளம் புக்கபுரிநூலார் ” 1-73-7

“ குமிழின் மேனிதந்து கோல நீர்மையது கொண்டார் ” 1-73-8

“ வந்தென்னுள்ளம் புகுந்து மாலை காலை யாடுவான் ” 1-73-9

“ ஓர்கள்வர் வெள்ளர் போல உள்வெங்நோய் செய்தார் ” 1-73-10

### இரங்கல்

இரங்கல் என்பது தலைவி தனித்திருந்து நெஞ்சொடுபுலந்து கூறுவது. இது நெய்தல் திணையாகிய கடல் சார்ந்த இடத்தின் உரிப்பொருள். இதன் பயன் ‘ மூடிவைத்த வேங்கலத்தைச் சிறிது திறப்பின் ஆவி சிறிது வெளியேறுமாறுபோல் ’ இரங்கிக் கூறும் இத் துறைகளால் தலைவியின் மனக்கவலை சிறிது

தணியும். 'மலையிருள்' என்று தொடங்கும் செஞ்சொல் மாலை தலைவன்முன் நிற்பதாக எண்ணி நெஞ்சொடு பேசும் பாடல்களை உடையன. ஒவ்வொரு பாடலின் ஈற்றடியும்,

"இலம்பையங் கோட்டூர் இருக்கையாப் பேணி
என் எழில் கொள்வ தியல்பே" 1-76

என்று முடிவுறுகின்றது.

## எழில்கவர்ந்தான் இருக்கும் இடம்

மனத்தைப் பறிகொடுத்த அம்மங்கைநல்லாள் தூதுவிடுத்தும், துன்பங்களைத் தோழிமாரிடம் கூறியும் நெஞ்சிலுள்ள ஆற்றாமையை ஒருவாறு போக்கிக்கொள்ள முயலுகிறாள். தலைவியின் உடல் வேறுபாடு கண்ட தோழி உன் உள்ளங் கவர்ந்த கள்வன் எங்குள்ளான் என வினவ அவளுக்குத் தலைவி 'கரும்பு வில்லை வளைத்து மலரரும்புகளைக் கணைதொடுக்கும் காமனை எரித்தவன். ஆனாலும் காமத்தை அழிக்கவில்லை என்பதற்கு உமையை ஒரு கூற்றிலே உடையான்' எனத் தலைவனது இயல்நலம் கூறினாள் தலைவி. தோழி அவன் எப்பொழுது உன் பெண்மையைக் கவர்ந்தான்? இப்பொழுது அவன் எங்குள்ளான்? எனக் கேட்கிறாள். அதற்குத் தலைவி,

"கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற் காரிகைமாட்டருளி
பெரும்பகலே வந்துஎன் பெண்மை கொண்டு பேர்த்தவர்சேர்ந்த
இடம் தோணிபுரந்தானே" 3-100-1

"சங்கியல் வெள்வளை சோர வந்தென் சாயல்கொண் டார்தமதூர்
தோணிபுரந்தானே" 3-100-2

"ஒத்தபடி வந்துஎன் உள்ளங் கொண்ட ஒருவர்க்கிடம் தோணிபுரம்"
3-100-3

"என் உள்ளம் கொண்டார் மேவும் இடம் தோணிபுரம்" 3-100-4

"எம் சிந்தை கொண்ட செல்வர் இடம் தோணிபுரம்" 3-100-5

இண்டைபுனைந்து எருதேறி வந்து என்எழில் கவர்ந்தார் இடம்
தோணிபுரம்" 3-100-6

என்று இத் திருப்பதிகம் முழுவதிலும் தலைவி எழில் கவர்ந்தான் இயல்புகளைக் கூறி இருக்குமிடத்தையும் தெரிவிக்கிருள்.

அடுத்துத் தாருகாவனத்துத் தையலார் மையல்கொள்ள இறைவன் பிச்சையேற்றபொழுது மயங்கிய மங்கையர் தன்னை வினவிய தோழியர்க்கு எழில்கவர்ந்தான் இருக்கும் இடம் கூறுகின்றனர். 'விண்கொண்ட தூமதி' என்று தொடங்கும் திருப்பாரிதிநியமத்துத் திருப்பதிகத்தில் இவர்கள் கூற்றுகள் வந்துள்ளன.

"பெண்கொண்ட மார்பில் வெண்ணீறுபூசிப் பேணுர்பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலோ டேர்கவர்ந்த கள்வர்க்கிடம்" 3-104-1

"இரவில் புகுந்தென் எழில்கவர்ந்த இறைவர்க்கிடம்" 3-104-2

"நாண்முகம் காட்டி நலங்கவர்ந்த நாதர்க்கிடம்" 3-104-3

"அஞ்சுரும்பார் குழல்சோர உள்ளம் கவர்ந்தார்க் கிடம்" 3-104-4

"ஏர்புல்கு சாயல் எழில் கவர்ந்த இறைவர்க்கிடம்" 3-104-5

"சங்கொடு சாயல் எழில்கவர்ந்த சைவர்க்கிடம்" 3-104-6

"இறைவளை சோர எழில் கவர்ந்த இறைவர்க்கிடம்" 3-104-7

"ஏடலர் சோர எழில் கவர்ந்த இறைவர்க்கிடம்" 3-104-8

"நல்வளைசோர நலங்கவர்ந்த நாதர்க்கிடம் பாரிதிநியமம்" 3-104-9

இத்திருப்பதிகம் முழுதும் எழில் கவர்ந்தான் இருக்கும் இடம் அறிவிக்கின்றது

### மயல் செய்வதோ மாண்பு

திருப்பாச்சிலாச்சிராமத்துத் திருப்பதிகமாகிய 'துணிவளர் திங்கள்' என்னும் பதிகம் செவிலிகூற்ருக அமைந்து விளங்குவது. செவிலி - வளர்ப்புத்தாய். தலைவியது நிலை கண்டு வருந்தி முறையிடும் முறையீடு இப்பதிகம்.

"மங்கையை வாடமயல் செய்வதோ இவர் மாண்பு" 1-44-1

"ஏழையை வாட இடர் செய்வதோ இவர் ஈடு" 1-44-2

"பைந்தொடி வாடச்சிதை செய்வதோ இவர் சீர்" 1-44-3

"தையலை வாடச் சதுர்செய்வதோ இவர் சார்வு" 1-44-5

"பைந் தொடி வாடப்பழி செய்வதோ இவர் பண்பு" 1-44-9

"பூங்கொடி வாடப்புனை செய்வதோ இவர் பொற்பு" 1-44-10

என்னும் கூற்றுக்கள் செவிலி கூறும் முறையீடுகளாக அமைந்து விளங்குபவை.

## தலைவி கூற்று

திருவீழிமிழலைத் திருப்பதிகமாகிய 'துன்று கொன்றை' என்ற திருவியமகத் திருப்பதிகத்து இடை மடக்காக வரும் பதிகங்கள் சில தலைவி கூற்றில் அமைந்துள்ளன.

"என்னிடைப் பலியிடவமே
நின்றது மிழலையுள்ளுநமே நீரெனைச் சிறிதும் உள்ளுநமே" 3-116-1

"பாதிகொண்டதும் மாதையே பணிகின்றேன்மிகும் மாதையே
காதுசேர்கனங் குழையரே காதலார் கனம் குழையரே" 3-116-2

"சூடுகின்றதும் மத்தமே தொழுத என்னை உன் மத்தமே
நீடுசெய்வதும் தக்கதே" 3-116-3

"நட்டமாடு வதுசந்தியே நானுய் தற்கிரவு சந்தியே" 3-116-4

"ஓவிலாதிடும் கரணமே உன்னுமென்னுடைக் கரணமே
ஏவுசேர்வும் நின்றுணையே அருளினின்ன பொற்றுணையே" 3-116-5

"போந்த தெம்மிடை இரவிலே புகுமிடைக்கள்வம் இரவிலே"
3-116-6

"செப்புமின் எருது மேயுமே சேர்வுமக்கெருது மேயுமே" 3-116-7

"மேய இத்துயில் விலக்கணாமிழலை மேவிய இலக்கணா" 3-116-9

'என்னிடத்திற்குப் பலிபெற வருவீராக. நீர் விரும்பி எழுந்தருளியிருப்பது திருவீழிமிழலையுள். என்னை நீர் சிறிதேனும் நினைத்தருளும்'

'திருமேனி பாதியிற் கொண்டது உமையை; பணிகிறேன் உமது மிக்க அழகை; காதில் அணிந்த கனவிய குழையை உடையவரே! காதல் செய்யும் பெண்களின் மனத்திண்மையை குழைவிப்பவரே!'

'நீர் சூடிக்கொள்வது ஊமத்தம்பூ. உன்னை வணங்கும் என்னைப் பித்தனுக்குவது தக்கதோ!'

'நடனம் ஆடுவது சந்தி என்னும் நாடக உறுப்பின் படியேயாகும். நான் காமன் வாதையினின்று பிழைத்தற்கு இராக்காலம் சந்து செய்விப்பதற்கேற்ற காலம்'

'மகாசங்காரகாலம் வரை ஓயாமல் ஐந்தொழில் நடத்தற்குக் காரணரே! என்னுடைய மனம் முதலிய காரணங்கள் உம்மையேநினைக்கும். அதனால் மன்மதபாணம் என்மேல் தைக்கும்; அதுவும் உன் ஆணையின்படிதானே! பொன் போன்ற திருவடிகளை அருளினால் நைதல் எனக்கு நேருமா?'

'எங்கள் வீட்டிற்கு வந்தது பிச்சையேற்றலை முன்னிட்டு; உம்மோடு களவொழுக்கத்தால் இரவில் புணர்வோம்.'

'உமக்கென்றுள்ள என் பெண்மை நலமாகிய விளை புலத்துள் மன்மதன் அம்பாகிய எருதுமேயலாமா? உமக்கு ஊர்தியாக எருதும் இருக்குமே'

'நான் இப்போதுற்ற பொய்த் தூக்கத்தை விலக்குவீராக! திருவீழிமிழலை மேவிய அழகியவரே'

**தோழி கூற்று**

உள்ளங் கவர்ந்ததால் உடல் எழில் சிதைந்து உருக்குலைந்து உரைதடுமாறிப் பிதற்றுகின்றாள் தலைவி. தலைவியின் நிலையைக் கண்ட தோழி அவளது நிலைமையைத் தலைவற்கு எடுத்துரைக்கின்றாள். 'களவில் அவளது கவினெலாம் கொண்டு இன்று

அவனை அருளாதிருத்தல் அழகோ ' என்கின்றாள் தோழி. இதனைச் செவிலி கூற்றெனலுமாம்.

" மழையார் மிடறா !......வெண்ணாவலின் மேவியஎம்
அழகா ! எனும் ஆயிழையாளவளே " 2-23-1

" கொலையார் கரியின் உரிமூடியனே !......வெண்ணாவலுளாய்
நிலையா ! அருளாய் எனும் நேரிழையே " 2-23-2

" காலால் உயிர்காலனை வீடுசெய்தாய் !......
ஆலார் நிழலாய் எனும் ஆயிழையே " 2-23-3

" சுறவக்கொடி......விறல்மிக்க கரிக்கருள் செய்தவனே
அறமிக்கது வென்னுமென் ஆயிழையே " 2-23-4

" செங்கட்பெயர்......வெண்ணாவலுளாய்
அங்கத்தயர் வாயினள் ஆயிழையே " 2-23-5

" குன்றே......வெண்ணாவலுளே
நின்றாயருளாய் எனும் நேரிழையே " 2-23-6

" மலையன்றெடுத்த......வெண்ணாவலுளாய்
அலசாமல் நல்காய் எனும் ஆயிழையே " 2-23-8

" திருவார்தரு......வெண்ணாவலுள் மேவியஎம்
அரவா எனும் ஆயிழையாள வளே " 2-23-9

" புத்தர் பலரோடு......வெண்ணாவலுளாய்
அத்தா அருளாய் எனும் ஆயிழையே " 2-23-10

## என்று கொள்ளுமோ ?

தலைவி தலைவனது பெருமையினையும் தன் சிறுமையினையும் எண்ணி என்று கொள்ளுமோஎன உரைக்கும் திருவாரூர்த் திருப்பதிகம் அகப்பொருட் கருத்தில் அமைந்துள்ளது. ' அலங்கல் தந்தெனை அஞ்சலெனும் கொலோ ' என்னும் தொடர்கொண்டு இதனை அகப்பொருட்பதிகமாகக் கருதலாம்.

" அந்த மாய் உலகாதியு மாயினான்......
சிந்தையே புகுந்தான் திருவாரூர் எம்
எந்தை தான் எனை என்று கொளுங்கொலோ " 3-45-1

" அருத்த! என்? எனை அஞ்சலென் றுதே " 3-45-2

" இறைவன்தான் எனை ஏன்று கொளுங் கொலோ " 3-45-3

" அல்லல் தீர்த்தெனை அஞ்சலெனுங் கொலோ " 3-45-4

" வருந்தும் போதெனை வாடலெனுங்கொலோ " 3-45-5

" ஆர்கணு எனை அஞ்சலென்றுதே " 3-45-6

" இளைக்கும் போதெனை ஏன்று கொளுங்கொலோ " 3-45-7

" அலங்கல் தந்தெனை அஞ்சலெனுங் கொலோ " 3-45-8

" அடிகள் தானெனை அஞ்ச லெனும் கொலோ " 3-45-9

" ஈசன் தானெனை ஏன்று கொளும் கொலோ " 3-45-10

### தலைவன் செய்கையும் விளைவும்

திருமூக்கீச்சரம் பணிந்தெழுந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் அவ்வூர்த் திருப்பதிகத்து ஒரு பாடலில் அகப் பொருட் செய்தி ஒன்றை உரைத்துப்போகின்றார். தலைவனாகிய பெருமான் தனியே இரவில் வந்து என்னைக் கவர்ந்தான். அதனால் என் கை வளையல்கள் கழன்றன. தலைவன் செய்த இம்மாயத்தால் நான் ஏதமடைகிறேன் எனத் தலைவி புலம்பு கிறாள்.

" வெந்த நீறுமெய்யிற் பூசுவர் ஆடுவர் வீங்கிருள்
வந்தெனு ரவ்வளை கொள்வதும் இங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன்னேரியன் செம்பிய னுக்கிய
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோ ரேதமே " 2-120-6

### இடந்தலைப்பாடு

திருவலஞ்சுழி சென்று பணிந்தெழுந்த திருஞானசம்பந்தர் 'என்ன புண்ணியம்' என்று தொடங்கும் திருப்பதிகத்து ஏழாவது திருப்பாடலில் தலைவி தலைவனது ஊரிற்சென்று தலைப்பட விழைவதாகக் கூறுவர். அதாவது இது :-

" வலஞ்சுழி அரனார் பால் சென்ற மார்தனில்
தலைப்படலா மென்று சேயிழை தளர் வாமே " 242-7

'மட்டிட்டபுன்னை'(2-47)என்றுதொடங்கும் மயிலாப்பூர்த் திருப்பதிகமும் 'சடையாயெனுமால்' (2-18) என்று தொடங்கும் திருமருகல் திருப்பதிகமும் அகப்பொருளமைதிக்கேற்ப அமைந்தவை.

**அகப்பொருட் பதிகங்கள்**

1, 56, 60, 63, 71, 73, 76, 159, 242, 256, 303, 321, 358, 359, 362, 374.

மூன்றுவது திருமுறை

# அற்புதங்களும் சிறப்புக்களும்

| அற்புதங்கள். | பதிக எண். | பக்க எண். |
|---|---|---|
| 1. உலாவாக்கிழி பெற்றது. | 4 | 262 |
| 2. சமணரைக்கழுவில் ஏற்றது (திருவேடகம்.) | 32 | 290 |
| 3. ஏடு தீயில் வேகாது பச்சையாயிருந்தது. | 87 | 345 |
| 4. சிவசோதியிற் கலந்தது. | 125 | 598 |
| 5. முத்துப்பந்தர். | 73 | 230 |
| 6. திருக்கொள்ளம்பூதூர் வெள்ளங்கடந்தது. | 6 | 33 |

| சிறப்புக்கள். | பக்க எண். |
|---|---|
| 1. தில்லை மூவாயிரவரைச் சிவகணங்களாகத் தரிசித்தது. | 1 |
| 2. இராமனது சிவபூசைச் சிறப்பு. | 10 |
| 3. கோதான பூசை. | 17 |
| 4. கோச்செங்கட்சோழர் திருத்தொண்டு. | 19 |
| 5. அந்தணர்க்கு அஞ்செழுத்துண்மை அருளியது. | 22 |
| 6. திருவாலவாயில் பெற்றோரிடம் தோணியப்பரை விறுவியது. | 24 |
| 7. வையையில் எதிர் ஏறிய ஏடு தங்கும் வண்ணம் பாடியது. | 32 |
| 8. திருவருளின் தன்மை (விளுவுரை.) | 38 |

மூன்றுவது திருமுறையின் குறிப்புரையுள்
மேற்கோளாக வந்த

# நூல்களின் பெயரும் பக்கமும்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## சிவ போக சாரம்

ஆசையறுய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்-சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

(தருமைக் குருஞானசம்பந்தர்)

## தனிப் பாடல்

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல்லாம் கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையின் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.

(தருமைச் சம்பந்தசரணாலயர்)

# அட்டவணை

| தலங்களின் எண் | தலப் பெயர்களும் பதிகத் தொடக்கங்களும் | | பதிகங்களின் எண் |
|---|---|---|---|
| 81 | திரு வேதவனம் | | |
| | கற்பொலி | ... | 76 |
| 82 | திரு வேதிகுடி | | |
| | நீறுவரி | ... | 78 |
| 83 | திரு வைகன்மாடக்கோயில் | | |
| | துளமதியுடை | ... | 18 |
| 84 | திரு வைகாவூர் | | |
| | கோழைமிடறு | ... | 71 |
| | பொது | | |
| (அ) | பஞ்சாக்கரத் திருப்பதிகம் | | 22 |
| (ஆ) | நமச்சிவாயத் திருப்பதிகம் | | |
| | காதலாகி | ... | 49 |
| (இ) | வாழ்க அந்தணர் (திருப்பாசுரம்) | ... | 54 |
| | கல்லானீழல் | ... | 40 |

## மூன்றுவது திருமுறையில்

| | |
|---|---|
| திருத்தலங்கள் | 84 |
| திருப்பதிகங்கள் | 121 |
| பொதுப் பதிகங்கள் | 4 |
| திருப்பதிகங்கள் | 125 |

றிப்பு :— தலங்களின் வரலாற்றுக் குறிப்புள் அவற்றின் எண் பிறழ்ந்துள்ளன. அவற்றை அட்டவணையில் உள்ளவாறு திருத்திக்கொள்க

# மூன்றாவது திருமுறையிலுள்ள பண்கள்

| | | திருப்பதிகம் |
|---|---|---|
| 1 | காந்தாரபஞ்சமம் | 1-24 |
| 2 | கொல்லி | 25-41 |
| 3 | கொல்லிக்கௌவாணம் | 42 |
| 4 | கௌசிகம் | 43-56,117 |
| 5 | பஞ்சமம் | 57-66 |
| 6 | சாதாரி | 67-99 |
| 7 | பழம்பஞ்சுரம் | 100-116 |
| 8 | புறநீர்மை | 118-123 |
| 9 | அந்தாளிக்குறிஞ்சி | 124-125 |

குறிப்பு:- பதிகம் 237 இல் காந்தாரபஞ்சமம் என்றதைப் பஞ்சமம் என்று திருத்திக்கொள்க. 117 ஆவது (திருமாலேமாற்றுத்) திருப்பதிகம் பண்வரிசையில் இல்லாமைக்குக் காரணம் தெரிந்திலது.



திருஞானசம்பந்த ஸ்வாமிகள்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

மூன்றாவது திருமுறையில் உள்ள

# தலங்களின் வரலாற்றுக் குறிப்பு

## கல்வெட்டு வரலாறு

### 1 திரு அம்பர்ப்பெருந்திருக்கோயில்

பெருந்திருக்கோயில் என்பது யானை ஏற முடியாதவாறு படிக் கட்டுகள் அமைத்துச் செய்குன்றுபோல் கட்டப்பெற்றதாகும் இது மாடக்கோயில் என்றும் வழங்கப்பெறும். (நன்னிலத்துப் பெருங்கோயில், வைகல் மாடக்கோயில் இவைகளின் அமைப்பு முறைகளை நோக்குக) இத்தகைய கோயில்கள் கோச்செங்கட் சோழநாயனாரால் கட்டப்பெற்றன. சைவசமயக் குரவராகிய திருநாவுக்கரசு நாயனார் காலத்தில் (கி. பி. ஏழாம் நூற்றாண்டில்) இவ்விதக்கோயில்கள் எழுபத்தெட்டு இருந்தன இச்செய்தி "பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் உறையும் பெருங்கோயில் எழுபதினோடெட்டும்" என்னும் அவரது க்ஷேத்திரக் கோவைத் திருத் தாண்டகப் பதிக அடிகளால் விளங்குகிறது. இங்ஙனம் கோச்செங்கட் சோழநாயனாரால் கட்டப்பெற்றவைகளுள் அம்பர்ப்பெருந் திருக்கோயிலும் ஒன்றாகும். இச்செய்தியை ஞானசம்பந்தப் பெருந்தகையார் 'குரிசில் செங்கண்ணவன் கோயில்' 'செங்கண் நல்லிறை செய்த கோயில்' செம்பியர் செறிகழல் இறை செய்த கோயில் என இவ்வூர்ப்பதிக அடிகளில் கூறியுள்ளனர். எனவே அம்பர் என்னும் ஊரில் யானை ஏற முடியாதவாறு படிக்கட்டுகள் அமைத்துச் செய்குன்றுபோல் கோச்செங்கட் சோழ நாயனாரால் கட்டப்பெற்ற காரணம் பற்றி அம்பர்ப் பெருந்திருக் கோயில் என்னும் பெயர் பெற்றது.

இது பேரளம் ரயில்வே நிலையத்திற்குத் தென்கிழக்கே சுமார் நான்கு மைல் தூரத்திலிருக்கும் அம்பர் மாகாளத்திற்குக் கிழக்கே முக்கால் மைல் தூரத்திலிருக்கிறது. இது காவிரியின் தென்கரைத் தலங்களுள் 54-ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் - பிரமபுரிநாதர். இறைவியின் திருப்பெயர் - பூங்குழல்நாயகி. தீர்த்தம் - பிரமதீர்த்தம். மரம் - புன்னை.

இது சோமாசி மாற நாயனார் அவதரித்த திருப்பதியாகும். இத்தலத்தை ஞானசம்பந்தர் மாத்திரம் பாடியிருக்கின்றனர். இதற்கு அவருடைய பதிகம் ஒன்று இருக்கிறது. '*அரிசிலம் பொருபுனல் அம்பர்' 'துறைபுனல் நிறைவயல் அம்பர்' 'அங்கணி விழவமர் அம்பர்' 'பைம்பொழில் நிழல் வளர் நெடுநகர்' என்னும் ஞானசம்பந்தரது திருப்பதிக அடிகளால் இவ்வூரின் சிறப்பு நன்கு விளங்கும்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இத்தலத்திற்குப் புராணம் பாடியுள்ளனர்.

இத்திருக்கோயிலில் நான்கு கல்வெட்டுக்கள் இருக்கின்றன அவற்றுள் சோமாஸ்கந்தர் கோயிலில் இருக்கும் இராசராச தேவரின் பத்தாமாண்டுக் கல்வெட்டு நீங்கலாக ஏனையவை துண்டு துண்டான கற்களில் வெட்டப்பெற்றனவாகும். மேற்குறித்த இராசராச தேவரின் கல்வெட்டு உய்யக்கொண்டார் வளநாட்டு, அம்பர் நாட்டு வைகாவூராகிய எதிரிலிச் சோழநெற்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் எதிரிலிச்சோழீச்சரமுடையார்க்கு அம்பர் என்னும் இவ்வூரிலுள்ள ஒரு வணிகன் இரண்டு விளக்குகள் கொடுத்ததைத் தெரிவிக்கின்றது. ஏனைய துண்டுக் கல்வெட்டுக்கள் இராசராச தேவரின் ஐந்து, ஒன்பது இராச்சிய ஆண்டுகளில் நிலங்கள் ஏலத்திற்கு விடப்பட்டதையும், மூன்றாங்குலோத்துங்க சோழன் மதுரையும், ஈழமும், கருவூரும், பாண்டியன் முடித்தலையும் கொண்டதையும், அம்பர் நாட்டில், மேலூராகிய அரித்துவநெற்குன்றம் என்னும் ஊர் உள்ளதையும் தெரிவிக்கின்றன.

See the Annual reporton on South Indian epigraphy for the year 1917. Number 286—289.

## 2 திரு அம்பர்மாகாளம்

இரண்டாவது திருமுறையில் உளது.

## 3 திரு அரதைப்பெரும்பாழி

இது அரித்துவாரமங்கலம் என்று வழங்கப் பெறுகின்றது. இறைவன் திருமுன்பு பன்றியாகிய திருமால் பறித்த பள்ளம் இருப்பதால் இப்பெயர் பெற்றது என்பர்.

---

* அரசிலாறு

இது தஞ்சாவூர் — நாகூர் ரயில் பாதையில், கோயில்வெண்ணி ரயில்வே நிலையத்திலிருந்து நான்கு மைல் தூரத்திலிருக்கிறது. சாலிய மங்கலம் ரயில்வே நிலையத்தில் இறங்கியும் செல்லலாம். இவ்வாறு செல்வது அதிக தூரமாகும். இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 99-ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் - பாதாள வரதர். இறைவியின் திருப் பெயர் - அலங்கார அம்மை. தீர்த்தம் - பிரம தீர்த்தம். மரம் - வன்னி.

இது, வராக அவதாரங்கொண்ட திருமாலின் கொம்பைப் பறித்துச் சிவபெருமான் அணிந்துகொண்ட தலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கிறது.

இவ்வூர்த் திருக்கோயிலில் மூன்றுங்குலோத்துங்க சோழதேவரின் பத்தாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பெற்ற கல் வெட்டு ஒன்றுதான் இருக்கிறது. அதுவும் சிதைந்த நிலையில் உள்ளது. அது அம்மன்னன் மதுரை கொண்ட செய்தியை உணர்த்துகிறது.

**See the Annual report on South Indian Epigraphy for the year 1902, Number 611.**

## 4 திரு அவளிவணல்லூர்

(அவள்+இவள்+நல்லூர்), பழங்காலத்தே இப்பதியில் எழுந்தருளி யிருக்கும் இறைவனைப் பூசித்த ஆதிசைவ அந்தணர் ஒருவர்க்கு இரண்டு பெண்கள் இருந்தனர். அவர்களில் மூத்த பெண்ணை மணந்தவர் காசி யாத்திரைக்குச் சென்றிருந்தனர். சென்றபின் அம்மூத்தபெண் அம்மை வார்க்கப்பெற்று உருவின் நிறம் மாறிக் கண் இழந்திருந்தனர். தந்தையார் இளைய பெண்ணை வேறு ஒருவர்க்கு மணஞ்செய்து கொடுத்திருந்தனர். சில ஆண்டுகளுக்குப் பின்னர் காசியாத்திரை சென்றவர் திரும்பிவந்தார். அக்காலம் இளைய பெண்ணும் கணவன் வீட்டிலிருந்து வந்திருந்தனர். மூத்த பெண்ணின் நிற வேறுபாட்டைக் கண்டு 'இளையவளே தம் மனைவி. மூத்தவளைத் தம் மனைவி என்று சொல்லி ஆதி சைவ அந்தணர் ஏமாற்றுகின்றனர்.' எனக் கூறி மூத்த பெண்ணை மணந்தவர் வழக்கிட் டனர். இறைவன் இடபவாகனத்தில் எழுந்தருளி மூத்த மகளே இவரது மனைவி என்னும் பொருளில் அவள் இவள் எனச் சுட்டிக்காட்டிய காரணத்தால், நல்லூர் என்னும் பெயரோடு, அவள் இவள் என்னும் தொடரையும் சேர்த்து அவளிவணல்லூர் என்னும் பெயர் எய்திற்று

என்பர். கர்ப்ப இல்லில் எழுந்தருளியிருக்கும் இறைவனது பின்பக்கத்தில் இவ் வரலாற்றை உணர்த்தும் பிரதிமங்கள் செதுக்கப்பெற்றிருப்பன வற்றை இவ் வரலாற்றுக்கு ஆதாரமாகக் காட்டுவர்.

இது சாலியமங்கலம் இரயில்வே நிலையத்திலிருந்து வடகிழக்கே ஆறரைமைல் தூரத்தில் இருக்கின்றது. கோயில்வெண்ணி இரயில்வே நிலையத்தில் இறங்கியும் இவ்வூர்க்குச் செல்லலாம். இது காவிரித் தென் கரைத் தலங்களுள் நூறாவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் 1. தம்பரிசுடையார். இப்பெயர் இவ்வூர்க் குரிய திருஞானசம்பந்தர் பதிகத்தில் குறிக்கப்பெற்றுள்ளது. சேக்கிழாரும் இப்பெயரைத் "தம் பரிசுடையார் என்னும் நாமமும் நிகழ்ந்திட ஏத்தி" எனக் குறித்துள்ளனர். 2. §சாட்சிநாதர். இறைவன் ஆதிசைவ அந்தணரின் மூத்த மகளின் பொருட்டுச் சான்று பகர்ந்தமையின் இப்பெயர் பெற்றார். இறைவியின் திருப்பெயர் சௌந்தரியவல்லி. தீர்த்தம் சந்திரபுட்கரணி. மரம் பாதிரி.

வராகமூர்த்தியும் காசியப்ப முனிவரும் இறைவனை வணங்கிப் பேறு பெற்றனர். அம்மையால் வருந்தி உடல் நிறம் மாறிக் கண் இழக்கப் பெற்ற ஆதிசைவ அந்தணரது மூத்த மகள் இவ்வூர்த் தீர்த்தத்தில் மூழ்கப் பெற்றதன் காரணமாக உடல் வனப்பும், கண்ணும் பெற்றுள்ளனர். இவ் ஊர்க்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

இவ்வூர்க் கோயிலில் நான்கு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டு கல்வெட்டுக்கள், மூன்றும் இராசராசசோழனுடைய மகனும், சோழமண்டலத்தைக் கி. பி. 1246 முதல் 1279 முடிய ஆண்ட வனுமாகிய மூன்றும் இராசேந்திரசோழனின் ஏழாவது, இருபத்திரண்டா வது இராச்சிய ஆண்டுகளில் பொறிக்கப்பெற்றனவாகும். ஏனைய இரண்டு கல்வெட்டுக்களில் அரசர்களின் பெயர்கள் காணமுடியாதவாறு சிதைந்துவிட்டன. அவற்றுள் ஒன்று 'தேவற்குயாண்டு பத்தாவது' என்றும், மற்றொன்று 'உடையார் தம் பரிசு' என்றும் தொடங்குகின்றன.

இக் கல்வெட்டுக்களில் இறைவரின் திருப்பெயர் தம்பரிசுடைய நாயனார் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. இக் கோயிலில் விநாயகப் பிள்ளையாரையும், அம்பெறிந்தபெருமானையும், நாச்சியாரையும், ஆட் கொண்டநாயகதேவரையும், நாச்சியாரையும், உடையார்க்குத் திருப்பள்ளி யறைநாச்சியாரையும், ஆளுடையபிள்ளையாரையும் எழுந்தருளுவித்தவன்

§ திருப்புறம்பயத்துப் பெருமானுக்கும் சாட்சிநாதர் என்னும் பெயர் உண்டு.

இவ்வூர் வியாபாரிகளில் சாத்துடையான் தம்பிசுடையான் ஆதிச்ச தேவனுன அமரகோன் ஆவன். திருமார்கழித் திருநாள், சித்திரைத் திருநாள் இவைகள் இக்கோயிலில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்று வந்தன. இதன் பொருட்டு ஏமலூருடையான் திருபங்குடையான் திருவாண்டானின் தந்தையாரான கிளியுடையான் அணுக்கன் நிலமளித்திருந்தான்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1902. Numbers 603—606 and the South Indian Inscriptions Volume VIII. Numbers 200—203.

## 5. திரு ஆரூர்

இரண்டாவது திருமுறையிற் காண்க.

## 6. திரு ஆலவாய்

இரண்டாவது திருமுறையிற் காண்க.

## 7 திரு ஆவடுதுறை

திருக்கயிலாயத்தில் இறைவி இறைவனேடு சொக்கட்டான் ஆடிக் களித்தமையால் பசு வடிவம் எய்தினர். அவர் அப் பசு வடிவத்தோடு இங்கு வந்து வழிபட்டு அவ் வடிவம் நீங்கப்பெற்றனர் என்னும் காரணம் பற்றி இப்பெயர் பெற்றது என்பர்.

இது நரசிங்கன்பேட்டை இரயில்வேநிலையத்திற்குத் தென்கிழக்கே ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் முப்பத்தாருவது ஆகும்.

பிள்ளையார் 1. துணைவந்தபிள்ளையார். 2. அழகியபிள்ளையார். இறைவரின் திருப்பெயர் மாசிலாமணியீசரர். இவரே கர்ப்பஇல்லில் எழுந்தருளியிருப்பவர். அணைத்தெழுந்தநாயகர்; இவர் உமாதேவியை அணைத்தெழுந்த கோலமாக இருப்பவர். திருவிழாவின் முடிவில் கோமுத்தி தீர்த்தத்தில் தீர்த்தம் கொடுத்தருளுபவர் இவரே. செம்பொன் தியாகர் முசுகுந்தச்சக்கரவர்த்திக்கு இறைவர் திருவாரூர் தியாகராசராகக் காட்சி காட்டியருளியமையால் இவர்க்கு இங்கே தனிச் சந்நிதி இருக்கிறது.

இவர் வீரசிங்காதனம் உடையவர். இவரது நடனம் சுந்தர நடனம். திருவிழாக்காலத்தில் திருத்தேரில் எழுந்தருள்பவர் இவரேயாவர். இறைவியின் திருப்பெயர் ஒப்பிலா முலையாள். இத்திருப்பெயர் சுந்தர மூர்த்திநாயனாரால் ‘ ஒப்பிலா முலையாள் ஒருபாகா ’ என்று இவ்வூர்ப் பதிகத்தில் எடுத்து ஆளப்பெற்றுள்ளது. தீர்த்தங்கள் கோமுத்தி தீர்த்தம், பத்மதீர்த்தம், கைலாயதீர்த்தம் என்பன.

இவை முறையே திருக்கோயிலுக்கு எதிரிலும், கொங்கணேசுவரர் கோயிலின் பக்கத்திலும், திருக்காவிரியிலும் இருக்கின்றன. மரம் அரசு. இது படர்ந்து விளங்குதலால் படர்ந்த அரசு என்றும் வழங்கப்பெறும். சபை போதி அம்பலம். தேவர்களும் முனிவர்களும் செய்த வேண்டுகோளுக்கு இரங்கி இவ் வரசமரத்தின் நிழலில் அமர்ந்த அம்பலத்தில் இறைவர் தாண்டவம் புரிந்தமையால் இப் பெயர் பெற்றது. (போதி - அரசமரம்.) நந்தி தருமநந்திதேவர். தலத்திற்கு வழங்கும் வேறுபெயர்கள் :- கோமுத்தி, கோகழி, நவகோடிசித்தபுரம் முதலியன.

முசுகுந்தமன்னனுக்கு மகப்பேறு அளித்தது. தருமதேவதையை இடபவாகனமாகக் கொண்டதன்றிச் சந்நிதியில் அரசமரத்தின் நிழலில் கோயில்கொண்டு இருக்கும்படி அருளியது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்க்குப் பொற்கிழியளித்தது. திருமூலநாயனாரைத் தடுத்தாட் கொண்டு ஆகமசாரமாகிய திருமந்திரத்தை வெளிப்படுத்தத் திருவருள் புரிந்தது. போகர் முதலிய சித்தர்களுக்கு அட்டமாசித்தியை அருளியது. இவை முதலியவை இப்பதியில் இறைவர் நிகழ்த்தியருளிய விசேடங்களாகும். இவைகளுள் ஞானசம்பந்தப்பெருந்தகையார்க்கு இறைவர் ஆயிரம் பொன் அளித்தருளியதை ஆண்ட அரசர் (திருநாவுக்கரசர்) இவ்வூர்ப் பதிகத்தில் “ கழுமலவூரர்க்கு அம்பொன் ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறையனாரே ” எனக் கூறியிருப்பது அறிதற்குரியதாகும். மூவர்களுடைய திருப்பதிகங்கள் எட்டையும், திருமூலர் திருமந்திரம் மூவாயிரம் பாடல்களையும், சேந்தனார் திருவிசைப்பாப் பதிகம் ஒன்றையும் பெற்ற பெருமையுடைய பதி இது.

திருக்கயிலாய பரம்பரையில் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகராய் எழுந்தருளியுள்ள ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளால் நிறுவப்பெற்றதும், சைவ சித்தாந்தத்திற்கும் தமிழுக்கும் நல்ல ஆக்கத்தை அளித்துவருவதும் ஆகிய பழமையும் பெருமையும் வாய்ந்த திருமடாலயம் ஒன்று திகழ்ந்து வருவது இப்பதி.

இவ்வூர்த் திருக்கோயிலில் பிற்காலச் சோழமன்னர்களுள், முதலாம் பராந்தகன் முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன், இவனது மகனாகிய விசயராசேந்திரன், முதற்குலோத்துங்கன், விக்கிரமசோழன்,

திரிபுவனச் சக்கரவர்த்தி ராஜராஜதேவன் முதலானோர் காலங்களிலும், பாண்டியர்களுள் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்துக் கல் வெட்டு மொன்றும் இருக்கின்றன.

**திருக்கோயில் கட்டப்பெற்ற காலம்:-** இத்திருக்கோயிலில் தில்லைச்சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்த முதற்பராந்தக சோழன் காலத்துப் பொறிக்கப்பெற்ற ஒன்பது கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இப்பராந்தகன் கி. பி. 907 முதல் கி. பி. 948 வரை சோழமண்டலத்தை ஆட்சி புரிந்தான். இம்மன்னன் தன் முப்பத்தெட்டாம் ஆட்சியாண்டில் அதாவது 907 + 38 = கி. பி. 945 இல் 500 கழஞ்சு பொன் கொடுத் துள்ளான். அப்பொன்னைக்கொண்டு இக்கோயில் குடப்படை பீடத் துக்குமேல் திருப்பணி செய்யப்பெற்றது. எனவே அத்திருப்பணி முடிவு பெற்று கும்பாபிடேகஞ் செய்யக் குறைந்தது இரண்டு ஆண்டு களாவது சென்றிருக்கவேண்டும். எனவே கி. பி. 947இல் அதாவது பராந்தகன் ஆட்சியின் இறுதிக்காலத்தே அல்லது இதிறைக்கு 1008 ஆண்டுகளுக்கு முன்பு இக்கோயில் கற்றளியால் ஆக்கப்பெற்றதாகும்.

See the Annual reports on South Indian Epigraply for the years. 1925-1926. Numbers 101-162, 59-72.

**கற்றளியைக் கட்டியவர்:-** பராந்தகன் காலத்தில் இக்கற்றளியை (கருங்கல்கோயிலை)க் கட்டியவர் கற்றளிப்பிச்சர் ஆவர். இவருடைய பிரதிமம் கர்ப்ப இல்லின் தென்பக்கம் அதாவது தட்சிணாமூர்த்தித் திருமேனிக்குக் கீழ்ப்புறத்தில் கைகளை மார்பிற்கு நேரே வைத்துக் குவித்துத் திருவாவடுதுறை உடையாரை வழிபடும் நிலையில் இருக் கின்றது. கற்றளிப்பிச்சன் என்று அவரது பிரதிமத்துக்குத் தலைப்பில் செதுக்கப்பட்டுள்ளது. பிச்சன் என்றால் அன்புடையவன் என்று பொருள் 'நின்கோயில் வாயில் பெரிய பிச்சனுக்கினும்' என்பது திருவாசகம்.

இக்கற்றளிப்பிச்சர் பிரதிமத்திற்குக் கிழக்குப் பக்கத்தில் கைகளைத் தலைமேல் குவித்து வழிபடும் பிரதிமம் ஒன்று இருக்கின்றது, இவர் கற்றளிப்பிச்சனார்க்கு இளைய திருநாவுக்கரைய தொண்டராவர்.

**கற்றளிப்பிச்சனார் இக்கோயிலைக் கட்டினார் என்பதற்கு ஆதாரம்:-** "ஸ்வஸ்திஸ்ரீ மதிரைகொண்ட கோப்பரகேஸரி வன்மற்கு யாண்டு இருபத்தைந்தாவது தென்கரைத் திருவழுந்தூர் நாட்டு பிர்மதேயம் சிற்றிலைச்சூர்ஸபையோம். இவ்வூர் கவிசங்கரன் மாறனிடைத்திரைமூர் நாட்டு பிர்மதேயம் சாத்தனூர் திருவாவடுதுறை கற்றளி எடுத்தபித்தன் மஹாதேவர்க்கு உவச்சப்புறமாக விலைகொண்ட நிலம் பதினொருமாச் செய்யும்" என்னும் கல்வெட்டுப்பகுதி விளக்குகின்றது (இக்கல்வெட்டு

அகத்தியர் பிரதிமத்திற்கு மேற்குப் பக்கத்தில் இருக்கிறது. உவச்சர் என்பார் சங்கு, காளம், இவைகளை ஊதுபவர். புறம் = நிவந்தம். உவச்சப்புறம் — என்பது சங்கு, காளம் இவைகளை ஊதுபவர்களுக்கு நிவந்தமாக அளிக்கப்பெற்றது எனப்பொருள்படும் )

கோயிலின் சிற்சில பகுதிகளைச் செய்வித்தவர்:- அர்த்த மண்டபத்தின் வடபால், துர்க்காதேவிக்குக் கீழண்டைப் பக்கத்தில் திருவாவடுதுறை உடையாரைத் தொழுவாராக ஒரு ஆடவரின் பிரதிமமும் அவர்க்குப் பக்கத்தில் ஒரு அம்மையாரின் பிரதிமமும் இருக்கின்றன. அவர்கள் இக்கோயிலில் ஒருபடை (ATIER) செய்வித்தவர் ஆவர். அப்பிரதிமங்களுக்கு அருகில் "இக்கோயிலில் ஒருபடை செய்வித்த இ நின்றான் வாமடூசலுடையான் எழுவன் சந்திரசேகரன் இவன் பின்பே நின்றாள் பெரிய வேளத்து வானல்லடிகள் நக்கன் என்று தீட்டப்பட்டிருக்கின்றன. அர்த்தமண்டபத்தின் தென்பாகத்தில் பிள்ளையார் திருமேனிக்குக் கிழக்குப் பக்கத்தில் "கல்கட்டுவித்தார் பல்லவமகா தேவியார் சிவகாமு" என்று செதுக்கப்பட்டுள்ளது. எனவே இவ்வம்மை யாரும் இப்பகுதியைக் கட்டுவதற்கு உதவி செய்தவர் ஆவர். கர்ப்ப இல்லின் தென்புறத்தில் தட்சிணாமூர்த்தித் திருமேனிக்கு மேற்குப் பக்கத்தில் கைகளைத் தலைமேல் குவித்து வணங்கும் வண்ணம் ஒரு பிரதிமம் இருக்கிறது. அதன்கீழ் "ஸ்ரீ திருவாவடுதுறை உடையார் அடியான் அம்பலவன் திருவிசலூரான் திருநாவுக்கரையன் என்று செதுக்கப்பட்டுள்ளது. இவனும் இத்திருப்பணிக்கு உதவி செய்தவன் ஆவன். இத்தட்சிணாமூர்த்திக்கு மேற்குப் பக்கத்தில் இருக்கும் பிரதிமம் மிறைக்கூற்றத்து வீரமாங்குடி உடையானது ஆகும். அர்த்த மண்டபத்தின் கிழக்குப்புறச் சுவரில் வாசலுக்கு வடபால், மார்பில் கைகளைக் குவித்துக்கொண்டு இறைவனை வழிபடும் நிலையில் செதுக்கப் பட்டிருக்கும் பிரதிமம் திருநறையூர் நாட்டுச்சிற்றுடியான் தாமன் அம்பல வனை நமசிவாயனுடையதாகும்.

இறைவரின் திருப்பெயர்:- இத்திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கும் இறைவர், திருவாவடுதுறை தேவர், திருவாவடுதுறை ஆழ்வார், திருவாவடுதுறை உடையார் திருவாவடுதுறைப்பெருமான் அடிகள், என்னும் திருப்பெயர்களால் இக்கோயில் கல்வெட்டுக்களில் கூறப்பெற்றுள்ளனர். மிகப் பிற்காலத்துக் கல்வெட்டு ஒன்று இறைவர் திருப்பெயரைக் கோமுத்தீஸ்வரர் என்று குறிப்பிடுகிறது.

இறைவியாரின் திருப்பெயர்:- மிகப் பிற்காலத்துக் கல்வெட்டு இறைவியாரின் திருப்பெயரை அதுல குச நாயகி எனக் கூறுகின்றது,

இத்திருக்கோயிலில் மிகப் பழங்காலத்தில் எழுந்தருளு விக்கப்பெற்ற திருமேனிகளும் பிரதிமங்களும்:- சிற்றம்பலத் திருமேனிமுதல் ஆடி அருளும்உடையாரும், ஆட்டத்திற்கு வாசிக்கும்

பூதமமைத்த பீடமும் பிரபையும் (திருவாசி) உட்பட முழ உயரத்து ஒருவர். இவர் நம்பிராட்டியார் பீடமும் பிரபையுமுள்பட இருந்த ஒருமுழமும் ஆறுவிரல் உயரத்து ஒருவர்; சந்திரசேகர தேவர் பீடமும் பிரபையும் உட்பட இருமுழ உயரத்து ஒருவர். இவர் நம்பிராட்டியார் பத்மத்தோடும் ஒருமுழ உயரத்து ஒருவர்; திரிபுவன சுந்தரர் பீடமும் பிரபையும் உட்பட மும்முழ உயரத்து ஒருவர். கணபதியார் பீடமும் பிரபையும் உட்பட ஒருமுழ உயரத்து ஒருவர்; சந்திரசேகர தேவர் பீடமும் பிரபையும் ஒரு சாணும் ஒருவிரல் உயரத்து ஒருவர்; க்ஷேத்திரபால தேவர் பீடமும் பிரபையும் உட்பட ஒருமுழ உயரத்து ஒருவர். மேற்படி தேவர் பீடம் உட்பட ஒருசாணே நால்விரல் உயரத்து ஒருவர். இடபவாகன தேவரும் பிராட்டியாரும், இடபமும் பீடமும் பிரபையுமுட்பட மும்முழ உயரத்து ஒருவர். பிச்சதேவர் மானும் பூதமும் பீடமும் பிரபையும் உட்பட இருமுழ மூவிரல் உயரத்து ஒருவர். அர்த்தநாரிதேவர் பத்மத்தொடு ஒருமுழமும் ஒட்டை உயரத்து ஒருவர் தட்சிணாமூர்த்தி ஒருமுழ உயரத்து ஒருவர். பள்ளிக்கட்டில் நம்பிராட்டியார் பீடமுட்பட இருமுழ உயரத்து ஒருவர். அஸ்திரதேவர் நடுவுமாகத் தண்டொடும் ஒருவர். இடபதேவர் பீடமுட்படத் திருக்காம்பு அளவும் ஈரொட்டை உயரத்து ஒருவர். சண்டேசுவர தேவர் பீடமுட்பட இருந்த ஒருமுழ உயரத்து ஒருவர், திருநாவுக்கரைய தேவர் ஒருமுழமும் நான்கு விரல் உயரத்து ஒருவர். சிவஞானசம்பந்த அடிகள் பீடமும் பிரபையும் உட்பட ஒருமுழமும் ஆறுவிரல் உயரத்து ஒருவர். நம்பி ஆரூரனார் பத்மத்தோடு ஒருமுழமும் ஆறுவிரல் உயரத்து ஒருவர். திருக்காளத்திப்பிச்சர் தம்மையாக வார்த்த ஒருமுழ உயரத்து ஒருவர்.

வெண்கலம், பித்தளை, செப்பு, தரா இவைகளினால் செய்யப் பெற்ற பாத்திரங்களும குத்திவிளக்கு வகைகளும் :- வெண்கலம் முதல் உரு ஐம்பத்துமூன்றினால் வெள்ளிக் கோலால் நிறை ஆயிரத்து நானூற்று இருபத்து முப்பலவரை. பித்தளை முதல் உரு மாண்டினால் மேற்படி கோலால் நிறை நூற்றேழுபலம். செப்பு முதல் உரு எழுபதினால் மேற்படி கோலால் நிறை தொள்ளாயிரத்து இருபத்தைம்பலனே கஃசு. தராமுதலுரு நாற்பத்துநாலினால் மேற்படி கோலால் நிறை இரண்டாயிரத்து எண்ணூற்று நாற்பத்தைம்பலவரை. தராகுத்திவிளக்கு கருவும் உட்பட விளக்கு முப்பது. இவ்வூர்க் கவுணியன் இங்கிலத்தானாக வார்த்த விளக்கு ஒன்று ஆக விளக்கு முப்பத்தொன்று.

அணிகலன்களும் பரிகலன்களும் :- உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழதேவர் நம்பிராட்டியார் திரைலோக்கியமாதேவியாரின் தாயாரான இராமன் அபிமானதொங்கியார், திருவாவடுதுறை உடையார்க்கு அமுது செய்தருள வெள்ளித் தளிகை ஒன்று குடிஞைக் கல்லால் எழுபதின் கழஞ்சு நிறை உள்ளதும், உடையார்க்குப் பொற்கொள்கை ஒன்று

குடிஞைநக் கல்லால் செம்பொன் நானூற்று ஒருபத்து முக்கழஞ்சரை நிறை யுள்ளதும் ஆகிய இவ்விரண்டையும் கொடுத்திருக்கின்றார். உடையார் இராசராசதேவர், பெரியவேளத்து அபிமானன் அனுக்கி, மேற்பாடு வேளத்து மற்றொரு அம்மையார் ஆகியவர்கள் கொடுத்த பொன்னைக் கொண்டு பொற்பூ இருபத்தேழு, செங்கழுநீர்ப்பூ பதினைந்து, மாங்காய் மூன்று, பட்டத்தேவர் கண்டக் காறை மூன்று, பொற்கைக் கோப்பு மூன்று இவைகள் செய்யப் பெற்று அணிவிக்கப்பெற்றுவந்தன.

**திருவிழா :-** இத் திருக்கோயிலில் புரட்டாசி மாதத்தில் ஏழு நாட் களில் திருவிழா நடைபெற்றுவந்தது. அக்காலம் மூலநட்சத்திரத்தன்று கொடியேறி பூரட்டாதி நட்சத்திரத்தன்று தீர்த்தமாடுவது வழக்கம். இச் செய்தி, ' திருமா எடுத்த நாள் மூல முதல் அடக்கடவ அரிசி அரிய சிவயோகிகளுக்கும், பத்தர்களுக்கும், மாகேசுவரர்களுக்கும் அரிசி தூணியும், பூராடத்தினன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி தூணிப் பதக்கும், பன்மாகேசுவரர்க்கு அடும் அரிசி கலமும், உத்திராடத்தினன்று சிவயோகிகளுக்கு அரிசி கலமும் பன்மாகேசுவரர்க்கு அடும் அரிசி முக்கலமும் திருவோணத்தினன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி இருகலமும், பன்மாகேசுவரர்களுக்கு அடும் அரிசி ஆறுகலமும், அவிட்டத்தினன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி முக்கலமும், பன்மா கேசுவரர்க்கு அடும் அரிசி ஏழுகலம், சதையத்தன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி நாற்கலமும், பன்மாகேசுவரர்க்கு அடும் அரிசி எண்கலமும், தீர்த்தமாடும் பூரட்டாதி நான்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி ஐங் கலமும் பன்மாகேசுவரர்க்கு அடும் அரிசி பன்னிருகலமும் ஆக இவ் ஏழு நாளும் அடக்கடவ அரிசி ஐம்பத்திருகலமும் ' என்றும் மிறைக் கூற்றத்து, விரமாங்குடி உடையான் தாயங்காடன் என்பவன், மதிரை கொண்ட கோப்பரகேசரிவர்மரின் முப்பத்தாறும் ஆண்டில் இவ் விழா விற்கு வரும் சிவயோகிகளுக்கும், பன்மாகேசுவரர்களுக்கும் ஊட்டுட்டின் பொருட்டு சிறுபுலியூரிலும், சிற்றீஞ்சூரிலும் நில நிவந்தம் அளித்துள்ள கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது.

இவ்விழா முடிவுநாளாகிய புரட்டாசிப் பூரட்டாதிநாளில் திருமூல நாயனரது நாடகமும் ஆரியக்கூத்து ஏழு அங்கமும் நடத்தப்பெற்று வந்தன. இச்செய்தி இக்கோயில் கர்ப்பஇல்லின் மேற்குப்புறச் சுவரில் பொறிக்கப்பெற்றிருக்கும், முதலாம் இராசராசசோழதேவரது ஒன்பதாம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டினால் புலப்படுகின்றது.

**மகாமண்டபத்தைக் கட்டியவன் :-** இம் மகாமண்டபத்தைக் கட்டியவன் இளங்காரிகுடையான் சங்கரதேவன் ஆவன். இத் திருப் பணிக்குத் திருவெண்காடு உடையான் அனங்கனும் உதவி செய்துள் ளான். இவைகளை இம் மண்டபத்தின் உள்பக்கத்தில் இருக்கும் தூண்

ஒன்றில் " ஸ்வதிஸ்ரீ இத் திருமண்டபம் இளங்காரிமுடையான் சங்கர் தேவன் " என்னும் கல்வெட்டாலும்; இம் மகாமண்டபத்தின் தென்பக்க முள்ள ஒரு தூணின் போதியகட்டையில் உள்ள, " இக்கல் திருவெண் காடு உடையான் அனங்கன் திருப்பணி " என்னும் கல்வெட்டாலும் அறியலாம்.

**திருமடங்கள் :-** இவ்வூரில் முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் திருநீலவிடங்கன் மடம், திருவீதி மடம், நாற்பத்தெண்ணாயிரவர் மடம் என்னும் பெயருள்ள திருமடங்கள் இருந்தன.

**அறச்சாலைகள் :-** இவ்வூரில் விக்கிரமசோழன் காலத்தில் பெருந் திருவாட்டி அறச்சாலை, சங்கரதேவன் அறச்சாலை, முந்நூற்று அறுபத்து நால்வன் அறச்சாலை என்னும் அறச்சாலைகள் இருந்தன. இவற்றுள் பெருந்திருவாட்டி என்னும் அறச்சாலை, கங்கைகொண்டசோழபுரத்து கங்கைகொண்டசோழன் திருக்கொற்றவாசலில் புறவாயில் சேனாபதியாக இருந்த இளங்காரிகுடையான் சங்கரன் அம்பலன்கோயில்கொண்டானை அனந்தபாலன் என்பவனால் நிறுவப்பெற்றதாகும். சங்கரதேவன் அறச் சாலை திருவாவடுதுறை உடையார்கோயில் சிவலோகநாயகன் திருவாச லின் முன்பக்கத்தில் இருந்தது. மேற்குறித்த மடங்களிலும் அறச்சாலை களிலும் திருவாவடுதுறை உடையார் திருநாளில் அடியார்களுக்கும், பிராமணர்களுக்கும், தபசிகளுக்கும், அநாதைகளுக்கும் அமுது அளிக்கப் பெற்றுவந்தன. முந்நூற்று அறுபத்து நால்வன் அறச்சாலையில் மருத்துவ நூல் படிப்பவர்களுக்கும், இலக்கணம் படிப்பவர்களுக்கும் அமுது அளிக்கப்பெற்றுவந்த செய்தி குறிப்பிடத்தக்கதாகும். இவைகளன்றி முதலாம் இராசேந்திரசோழன் கல்வெட்டில் சர்வதேவன் திருமடம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

**நடனசாலை :-** இத் திருக்கோயிலில் முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் நானாவித நடனசாலை என்னும் பெயருள்ள நடனசாலை இருந்தது.

**அளிக்கப்பெற்ற நில நிவந்தங்களுள் சில :-** இக்கோயிலைக் கட்டிய கற்றளிப்பிச்சன் திருப்பதியம் பாடுவார் ஒருவர்க்கும், திருமஞ்சன மட்டுவார்க்கும், உவச்சர்களுக்கும், மடத்துக்கும் சிற்றூனைச்சூரில் நிலம் வாங்கி அளித்துள்ளான். கோப்பரகேசரிவர்மர் அதாவது முதற்பராந்தக சோழன் காலத்தில் இந்நிவந்தம் செய்யப்பெற்றதாகும்.

இதை உணர்த்தும் கல்வெட்டுப் பின் வருமாறு :- ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிவன்மற்கியாண்டு ௩ (மூன்று) வது திருவாவடுதுறைக் கற்றளிப்பிச்சனேன். சிற்றூனைச்சூரனுன் விலைக்கறக்கொண்டு மேற்புலத்து

வடக்கடையத் திருப்பதியம் பாடுவாரொருவர்க்கு அரைமாவும். இதன் தெற்கடை காற்செய திருமஞ்சனமாட்டுவார்க்குக் காலும் இதன் தெற் கடையத் திரு உவச்சர்களுக்குக் காணி மடத்துக்கு காலுமாக நிவந்தஞ்செய்து குடுத்தேன். கற்றளிப்பிச்சனேன் இது பன்மாஹேஸ்வர ரக்ஷை. இக் கல்வெட்டு அர்த்தமண்டபத்தின் கிழக்குப்புறச் சுவரில் வாசலுக்கும் துவாரபாலகர்க்கும் வடபால் இருக்கின்றது.

**திருமூலநாயனாரைப் பற்றிய நாடகம் நடிப்பதற்கும் ஆரியக் கூத்து ஏழு அங்கம் ஆடுவதற்கும் அளிக்கப்பெற்ற நில நிவந்தம் :-** திருவாவடுதுறை உடையாரின் திருவிழா முடிவுநாளில் அதாவது புரட்டாசிமாதம் பூரட்டாதி நட்சத்திரத்தன்று திருமூலநாயனாரது நாடகம் நடித்தல்; ஆரியக் கூத்து ஏழு அங்கம் ஆடுதல் இவைகளைப்பற்றி முன்னர்க் கூறப்பெற்றுள்ளது. அவைகளை அக்காலத்தே நடித்தவர் வடுகமாங்குடி பாண்டிகுலாசனி ஆவர். அவர்க்குப்பின் அவைகளை நடித்தவர் சாக்கையர் குமரன் சிகண்டன் ஆவர். அவைகளின்பொருட்டு சிகண்டனுக்கு சாத்தனூர் சபையார் தங்கள் ஊரில் இருந்து அறச்சாலை அம்பலத்தில் கூட்டம் குறைவறக் கூடியிருந்து தென்கரை சாக்கைவேலி ஆன நில அளவுப்படி அரையே இரண்டுமாவும், திருஆவடுதுறை ஆழ்வார் தேவதானம் நெற்குப்பை பதிற்றுவேலியினும் கிழக்கடைய மாம் பள்ளி வாய்க்காலுக்கு வடக்கு நிலம் முக்காலும் ஆக நிலம் ஒன்றே எழுமாவை நிர்த்தபோக அளித்திருந்தனர். இச் செய்தி முதலாம் இராச ராசசோழரின் ஒன்பதாமாண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.

**விக்கிரமபாண்டியன்சந்தி :-** விக்கிரமபாண்டியன் தான் பிறந்த அஸ்தநட்சத்திரத்தில் தன்பேரால் கட்டின விக்கிரமபாண்டியன் சந்திக்கு அமுதுபடி, சாத்துபடி உள்ளிட்ட நிவந்தங்களுக்கு உடலாக விருதராச பயங்கர வளநாட்டுக் கஞ்சனூர்ப்பற்றுத் தென்கால் திரைலோக்கியான விருதராசபயங்கரச் சதுர்வேதிமங்கலத்துக் குலோத்துங்கசோழன் பெரு வழிக்கு உட்பட்ட நிறுப்பில் இருபதுவேலியும், துறைசையார் அகரமான இராசேந்திரசோழச் சதுர்ப்பேதிமங்கலத்துப் பிடாகை கூத்தனூர் கொடி யாலத்து விட்ட நிலம் பதிற்றுவேலியும், வேணவரைநல்லூரில் நான்கு வேலியும்......ராட்சதச்சதுப்பேதிமங்கலத்துப் பிடாகைபூரிலும் அனபாய சதுர்ப்பேதிமங்கலத்துப் பிடாகை கண்டியூரிலும் நிலம் இருபத்தாறுவேலி யும் ஆக நிலம் அறுபதிற்றுவேலியைக் கொடுத்திருந்தான். மேற்குறித்த இவைகளன்றித் திருவாவடுதுறை ஆழ்வார்க்கு சங்கிராந்திதோறும் முக்குறுணி நெல்லின் அரிசியால் அமுது செய்விப்பதற்கும், இரண்டு அயன சங்கிராந்திக்கும் நூற்றெட்டு கலசத்தில் ஸ்நபனம் செய்விக்கவும் வடகரை தேவதானம் கார்நாட்டுத் தனிக்கடம்பூர் உடையான் கண்ணி பூலியூர் நக்கர் அளித்த எண்கழஞ்சு பொன் கொண்டு மூன்றுமா நிலம் வாங்கி அளிக்கப்பெற்றிருந்தது. இவைபோன்று அளிக்கப்பெற்ற நில நிவந்தங்கள் பலவாகும். (ஸ்நபநம் - ஸ்நாநஞ்செய்துவைத்தல்).

வைத்தியத்திற்கு அளிக்கப்பெற்ற நிவந்தம்:- உய்யக் கொண்டார் வளநாட்டு சோழேந்திரசிங்கமலத்து சவர்னன் அரையன் சங்கரனை உத்தமசோழ அசலரையனுக்கும் அவன் வம்சத்தார்க்கும் திருவாவடுதுறையில் வைத்யஞ்செய்துகொண்டு உண்ணும் பொருட்டு, ஆழ்வார் ஸ்ரீ பராந்தக ஸ்ரீ குந்தவைப் பிராட்டியார் இராசேந்திரசிம்ம வளநாட்டு இன்னம்பர்நாட்டுப் பழையவானவன் மாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சபையாரிடத்தில் நூற்று இருபது காசு கொடுத்து நிலம் எட்டுமாக்காணி முந்திரிகைக்கீழ் அரையும் குழி ஒன்றும் மனை இரண்டும் வாங்கி அளித்துள்ளனர். இந்நிகழ்ச்சி முதலாம் இராசேந்திரசோழனது நான்காம் ஆண்டில் நிகழ்ந்ததாகும்.

திருவாவடுதுறை என்பது ஊரின் பெயரா? அல்லது கோயி லின் பெயரா? திருவாவடுதுறைக் கல்வெட்டுக்களில் "சாத்தனூர் பிரமதேயம் ஸ்ரீய் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீ திருவாவடுதுறை உடையார் கோயில் தென்கரை திரைமூர்நாட்டு பிரமதேயம் சாத்தனூர் திருவாவடு துறை உடைய ஆழ்வார்க்கு", எனக் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் பின்னதைப்பற்றிக் கல்வெட்டுத் துறையாளர் ஆண்டு அறிக்கையில் குறிப்பிட்டபொழுது, 'Thiruvavaduthurai at Sattanur' என எழுதியுள் ளனர். இவ் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கொண்டு ஊரின் பெயர் சாத்தனூர், அங்குள்ள கோயிலின் பெயர் திருவாவடுதுறை எனக் கூறுவாருமுளர். அது பொருந்துவது அன்று. தஞ்சாவூர் மாவட்டத்தில் ஐயன்பேட்டை என்னும் பெயருடைய ஊர்கள் மூன்று இருக்கின்றன. அவைகளை மக்கள் குறிப்பிடும்பொழுது வழுத்தூர்ஐயன்பேட்டை, மனைக்கால்ஐயன்பேட்டை, காட்டூர்ஐயன்பேட்டை எனக் குறிப்பிடுகின் றனர். இவ்வாறு கூறுவதால் வழுத்தூருக்கு அருகில் உள்ள ஐயன் பேட்டை மனைக்காலுக்கு அருகிலுள்ள ஐயன்பேட்டை என்று பொருள் படுமேயொழிய, வழுத்தூரில் ஐயன்பேட்டை இருக்கிறது என்று பொருள் படாது. அஃதேபோன்று சாத்தனூர் திருவாவடுதுறை என்றால் சாத்த னூருக்கு அருகில் உள்ள திருவாவடுதுறை என்று பொருள்படுமே ஒழிய ஊரின் பெயர் சாத்தனூர் என்றும் அங்குள்ள கோயிலின் பெயர் திருவாவடுதுறை என்றும் பொருள்படாது. சிறப்புள்ள ஊரைச்சொல்லி அதற்கு அண்மையில் உள்ளது என்று கூறுவது மரபாகும்.

திருவாவடுதுறைக் கோயிலிலுள்ள "ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கர வர்த்திகள் கோனேரின்மைகொண்டான்" எனத் தொடங்கும் விக்கிரம பாண்டியன் கல்வெட்டில் காணப்பெறும், துறைசையார் அகரமான இராசேந்திரசோழச் சதுர்ப்பேதிமங்கலத்துப் பிடாகை கூத்தனூர் கொடி யாலத்து விட்ட நிலம் பதிற்றுவேலியும் என்னும் கல்வெட்டுப் பகுதியால் கூத்தனூர்கொடியாலத்தில் நிலம் அளித்த செய்தி பெறப்படுகின்றது. கூத்தனூர் கொடியாலம் இவை இரண்டும் திருவாவடுதுறைக்கு வடக்கே

சுமார் மூன்றுமைல்தூரத்தில் இருக்கின்றன. இந்த இரண்டு ஊர்களுக்கும் இடைப்பட்ட தூரம் ஒன்றரைமைலுக்குமேல் இருக்கிறது. சாத்தனூர் கொடியாலம் என்றால் சாத்தனூருக்கு அருகில் உள்ள கொடியாலம் என்ற பொருளில்தான் இங்கும் அமைந்துள்ளது. திருமுதுகுன்றம் கல்வெட்டில் நெற்குப்பைத் திருமுதுகுன்றம் உடையார்க்கு எனக் குறிக்கப்பெற்றுள்ளது. ஊரின் பெயர் நெற்குப்பை. கோயிலின்பெயர் திருமுதுகுன்றம் என்று பொருள்படுமோ? அங்ஙனமாயின் சைவசமயக் குரவர்கள் " துன்னூர் கடந்தையுள் தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தே " " கொள்ளிடக்கரை கோவந்த புத்தூரில் வெள்விடைக் கருள்செய் விசய மங்கை உள்ளிடத்து உறைகின்ற உருத்திரன் " என ஊரையும் கோயிலை யும் குறிப்பிட்டுள்ளனரே. ஊரின் பெயர்கள் சாத்தனூர் நெற்குப்பை அங்குள்ள கோயிலின் பெயர்கள் திருவாவடுதுறை திருமுதுகுன்றம் எனக் குறிப்பிடாமைக்குக் காரணம் என்னை? வரலாற்றுப்பேராசிரியராகிய சேக்கிழார் பெருந்தகையராவது குறிப்பிட்டிருக்கவேண்டுமே ! அங்ஙனம் குறிப்பிடாமையால் ஊரின் பெயர் சாத்தனூர் என்பதும், அங்குள்ள கோயிலின் பெயர் திருவாவடுதுறை என்பதும் பொருத்தமுடையது ஆகாது. சாத்தனூர் திருவாவடுதுறைக்குத் தெற்கே இரண்டுமைலுக்கு மேற்பட்ட தூரத்தில் இன்றும் தனியூராக விளங்கிவருகின்றது.

**திருவாவடுதுறையைத் தன்னகத்துக்கொண்ட வளநாடு :-** இவ்வூரைத் தன்னகத்துக்கொண்ட வளநாடு உய்யக்கொண்டார் வள நாடாகும். இந்நாடு காவிரிக்கும் அரிசிலாற்றுக்கும் இடைப்பட்ட நிலப் பரப்பை உடையது. இது ஆக்கூர்நாடு, அம்பர்நாடு, குறும்பூர்நாடு, மருகல்நாடு, பாம்பூர்நாடு, தென்கரைத் திரைமூர்நாடு, திருநறையூர்நாடு, திருவழுந்தூர்நாடு, வெண்ணாடு, விளநாடு, பேராவூர்நாடு என்னும் பிரிவுகளை உடையதாய் இருந்தது.

**திருவாவடுதுறையைத் தன்னகத்துக்கொண்ட நாடு :-** திரு ஆவடுதுறை உய்யக்கொண்டார் வளநாட்டின் பிரிவுகளில் ஒன்றாகிய தென்கரைத் திரைமூர்நாட்டிற்கு உட்பட்டதாகும். நெற்குப்பை, சாத்த னூர், நடார், நல்லூச்சேரி, திருக்குரங்காடுதுறை, மகேந்திரமங்கலம் என்னும் ஊர்கள் இந்நாட்டிற்கு உட்பட்ட சில ஊர்கள் எனக் கல்வெட் டுக்கள் அறிவிக்கின்றன.

**See the South Indian Inscription Volume II. Part V.**

**பிற செய்திகள் :-** அர்த்தமண்டபத்தின் வடபுறச் சுவரில் அதாவது துர்க்காபரமேசுவரியின் திருமேனிக்குக் கிழக்குப் பக்கமாக உள்ளதும், சில பகுதிகளை சுவரில் வைத்துக் கட்டப்பெற்றதும் ஆகிய கல்வெட்டில், கோப்பரகேசரிபன்மரான உடையார் காவேரிகரைகண்ட கரிகாலசோழ தேவர் என்று ஒரு சோழ அரசர் குறிக்கப்பெற்றுள்ளனர். இக்கல்வெட்டின்

தொடக்கத்தில் " தேவற்குயாண்டு நாலாவது தென்கரை திருவழுந்தூர் நாட்டு ' வாய் தலைப்பாடி குலையரையரோம் ' உடையார் திருவாவடுதுறை உடையார்க்கு நாங்கள் கைநீட்டு இட்டுக் கொடுத்த பரிசாவது " எனக் குறிக்கப்பெற்றுள்ளது. இதில் ' வாய்தலைப்பாடி குலையரையர் ' என்பவர் ஒரு சபையினர் என்பது உறுதி. அவர்கள் எவ்வேலையைக் கண் காணித்துவந்தனர் என்பது புலப்படவில்லை. இக்கோயிலிலுள்ள பொன் ஆபரணங்கள் குடிஞைக் கல்லாலும், வெண்கல உருக்கள் வெள்ளிக் கோலாலும், பித்தளை உருக்கள் மாண்டிஞலும் நிறுக்கப்பெற்று வந்தன. "வெள்ளிக் கோலால்நிறை ஆயிரத்து நாநூற்று இருபத்து முப்பலவரை, மேற்படி கோலால் நிறை தொளாயிரத்திருபத்தைம்பலநே கைசு (கஃசு)" என்னும் தொடர்களால் அக்காலத்தில் பலம் தான் உயர்ந்த நிறுத்தல் அளவை என்பதும் கஃசுதான் மிகச் சிறியது பெறப்படுகின்றன.

கோயில்காரியங்களின் பொருட்டு ஊர்ச்சபையார், திருவாவடுதுறை உடையார் கோயில் வடப்பக்கத்து உலகளந்தான் என்று பேர் கூவப் பட்ட மாடத்தில் கூட்டங் குறைவறக் கூடியிருந்தும், **சங்கரதேவன் மண்டபத்தே** கூட்டங் குறைவறக் கூடியிருந்தும் கவனித்து வந்தனர்.

சாத்தனூர்க்கு ஸ்ரீசதுர்வேதிமங்கலம் என்ற பெயர் வழங்கி வந்ததாக முதலாம் இராசேந்திர சோழதேவரின் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இந்த ஸ்ரீசதுர்வேதிமங்கலத்துக்கு வடக்கில் சிற்றுனைச்சூர் என்னும் ஊர் இருந்தது.

**குறிப்பு:-** திருவாவடுதுறை ஆதீனத்தில் இது பொழுது இருபத் தொன்றும் பட்டத்தில் இனிது எழுந்தருளி அருளாட்சி நடத்திவரும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகளின் கட்டளைப்படி இக்கோயில் கல்வெட்டுக்களைப் படி எடுத்து எழுதி, அங்குக் குருபூசை விழாவில் ஆற்றிய சொற்பெருக்கின் சுருக்கமே இங்குக் கொடுக்கப் பெற்றுள்ளது.

## 8 திரு ஆனைக்கா

இரண்டாவது திருமுறையிற் காண்க

## 9 திரு இராமேச்சுரம்

இராமனைக் கொன்ற பெரும் பழி நீங்கும் பொருட்டு இராம பிரானுல் எழுந்தருளுவித்து வழிபடப்பெற்ற கோயில் ஆதலால் இப் பெயர் பெற்றது. (இராம + ஈச்சுரம் = இராமேச்சுரம். ஈச்சுரம் =

கோயில்.) இச்செய்தி "தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன், பூவியலும் முடிபொன்றுவித்த பழிபோயற, ஏவியலுஞ் சிலையண்ணல் செய்த இராமேச்சுரம்" என்னும் இப்பதிகப்படி ஞானசம்பந்தர் தேவார அடிகளால் இனிது விளங்குகின்றது. சேக்கிழாரும் "சேதுவின் கண் செங்கண்மால் பூசைசெய்த சிவபெருமான்றனைப்பாடி" எனக் கூறியுள்ளனர்.

இது இராமேச்சுரம் ரயில்வே நிலயத்திற்கு ஒருமைல் தூரத்தி லுள்ளது. இது பாண்டி நாட்டுத் தலங்களுள் எட்டாவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் - இராமநாதர். இராமேச்சுரத்தில் எழுந் தருளச்செய்வதற்காகச் சிவலிங்கம் கொண்டுவரக் காசிக்குச் சென்ற அநுமார் திரும்பிவரக் காலந்தாழ்த்தமையால், சீதாபிராட்டியார் மணலால் குவித்துச் செய்த இலிங்கத்தை ஸ்ரீராமபிரான் பூசித்தார். அவரே இராமநாதர் எனப் பெயர்பெறுவர். அநுமான் கொண்டுவந்த இலிங்கத்தை மூலலிங்கத்தின் வடபால் எழுந்தருள்வித்தார். அவரே விசுவலிங்கம் எனப் பெயர்பெறுவர்.

இறைவியாரின் திருப்பெயர் - மலைவளர் காதலி. இத்திருப்பெயரை ஞானசம்பந்தப்பெருந்தகையார் "ஒரு பாகம் மலைவளர் காதலி பாட ஆடிமயக்கா" என எடுத்து ஆண்டிருக்கின்றார். தீர்த்தம் - அக்நி தீர்த்தம், இராம தீர்த்தம், இலக்குமண தீர்த்தம் தனுஷ்கோடி முதலியன.

இது சோதிலிங்கத் தலங்கள் பன்னிரண்டுள் சோதிலிங்கத்தலங்கள் பன்னிரண்டாவன:- ஒன்றாகும். இப்பதிக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. இத்தலத்தைப்பற்றி "மறவாளிலங்கையிறைமகனை உதைத்த பழியால் மருண்டு, அரியன்று அறவாள் நேமியளித்தவனை யருச்சித்தகன்ற அணிநகர்" எனப் பரஞ் சோதியார், திருவிளையாடற் புராணம் அருச்சனைப்படலத்தில் கூறப் பெற்றுள்ளது.

இலங்கைக்குச் செல்ல இராமபிரான் அணைகட்டிய இடம் சேது என்னும் பெயர்பெறும். அங்கே இராமபிரான் தன் வில்லின் முனையால் தோண்டிய தீர்த்தம் தனுஷ்கோடியாகும். இது இராமேச்சுரத்திலிருந்து தெற்கே பன்னிரண்டு மைல் தூரத்தில் இருக்கின்றது. சேது ஸ்நானம் யெய்பவர்கள் இங்குத்தான் செய்தல்வேண்டும். இத்தீர்த்தத்தில் நீராடச் செல்பவர்கள், தனுஷ்கோடி ரயில்வே நிலயத்திலிருந்து செல்லுதல் நல்லது. அங்கிருந்து அதன் தூரம் இரண்டு மைலாகும். இத்தலத்திற்கு நிரம்ப அழகிய தேசிகரால் பாடப்பெற்ற சேதுபுராணம் அச்சிடப் பெற்றுள்ளது.

"நீடுதநுக்கோடியினை நினைந்தாலும், புகழ்ந்தாலும், நேர்கண்டாலும் வீடுபெற லெளிதாகும்" (சேதுபுராணம், தநுக்கோடிச் சருக்கம்) என்னும் அடிகள் இத்தநுக்கோடியின் பெருமையினை விளக்குவதாகும்.

கல்வெட்டு வரலாறு:- இத்திருக்கோயிலில் பாண்டிய மன்னர்களில் வீரபாண்டிய தேவன், திரிபுவனச்சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவன் இவர்கள் காலங்களிலும், விசயநகர மன்னர்களில் விசுவநாத நாயக்கர் வீரப்ப நாயக்கர் காலங்களிலும், வீரபூபதி காலத்தும் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகள் சகம் 1530 அதாவது கி. பி. 1608-இல் வீரபூபதி நாளில் இராமநாயகர் கோயில் கட்டி முடிந்ததையும்; சகாப்தம் 1540-இல் அதாவது கி. பி 1618-இல் சேதுபதிகாத்த தேவர் புத்திரன் தளவாய் தேவன் குலசேகரனுன சேதுபதிகாத்த தேவர், இறைவர் திருவிழாவிற்கு எழுந்தருளியிருக்க மண்டபம் ஒன்றைக் கட்டியதையும், சகாப்தம் 1540-இல் சேதுபதிகாத்த தேவர் இராமநாதசுவாமி கோயிலின் முதற் பிரகாரம், திரு நடமாளிகைப்பத்தி, ஆருட மண்டபம் கட்டியதையும், சகம் 1390 அதாவது 1468-இல் பரவதவர்த்தினி அம்மன் கோயிலின் முன்புள்ள கொடிமரம் செய்து நிறுத்தி வைக்கப்பெற்றதையும் உணர்த்துகின்றன. கன்னடத்தில் சோபகிருது வருடத்தில் செதுக்கப் பெற்ற கல்வெட்டு ஒன்று கற்கள் பதித்த கவசம் ஒன்றை அளிக்கப் பெற்றதையும் உணர்த்துகின்றது.

**See the Annual reports on South Indian epigraphy for the years 1903 Numbers 97-105. 1905 Numbers 89-90. 1915 Numbers 8.9 and the South Indian Inscription Vol. VIII Numbers 3823—91.**

**இக் கோயிலிலுள்ள கல்வெட்டுப் பாடல்கள்:-**

(கட்டளைக் கலித்துறை)

(1) சேல்கண்ட வாரி யிலிங்கேசற் செய்பழி தீரமுன்னுள்
மால்கண்ட கோயி லிராமீச ராடல்செய் மண்டபத்தை
நூல்கண்ட நற்சக ளுயிரத் தோடைந்து நூற்றிருபான்
மேல்கண்ட நாளின் முனிராம நாதன் விதித்தனனே.

(2) திருமா லரனுக் கபிடேகஞ் செய்யச் சிலையதனுல்
வருமாறு கண்டவன் கோடிப் புனற்கு மகாலயத்தைத்
தருமாயி ரத்தைந்து நூற்றுமுப் பான்செல் சகன் வருடத்
தருமா தவம்செய் முனிராம நாதன் அமைத்தனனே.

(3) [illegible]
[illegible]
[illegible]
[illegible]

## 10 திரு இன்னம்பர்

இது, கும்பகோணத்திலிருந்து சுவாமிமலைக்குச் செல்லும் பெருவழியில் இருக்கும் புளியஞ்சேரி என்னும் ஊருக்கு வடக்கே திருப்புறம்பயம் போகும் வழியில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. காவிரியின் வடகரைத் தலங்களுள் 45-ஆவது ஆகும்.

இறைவனின் திருப்பெயர்: (1) தான்தோன்றீசர் (2) எழுத்தறிந்த நாதர். இப்பெயர், அப்பர்பெருமானால் இவ்வூர்ப் பதிகத்தில் எடுத்து ஆளப்பெற்றுள்ளது. இறைவியின் திருப்பெயர் - கொந்தார்பூங்குழல் அம்மை. தீர்த்தம் - ஐராவத தீர்த்தம். சூரியன், அகத்தியர், ஐராவதம் இவர்கள் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இப்பதிக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் நான்கு, ஆக ஐந்து பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு:** இத்திருக்கோயிலில் சோழ மன்னரில் இராசகேசரி வர்மரின் நான்காம் ஆண்டிலும், விசயநகர வேந்தரில் வீர கம்பண்ண உடையார் காலத்திலும் பொறிக்கப்பெற்ற இரண்டு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் சோழமன்னரின் கல்வெட்டு, அறிஞ்சிகை விண்ணகரம் என்னும் திருமால்கோயில் இன்னம்பரில் இருந்த தென்னவன் விழுப்பேரரையருடைய மனைவி அறிஞ்சிகையாரால் ஐந்து அந்தணர்களுக்கு அன்னமளிக்க நிவந்தம் அளித்ததையும் கூறுகின்றது. வீரகம்பண்ண உடையார் கல்வெட்டு, துருக்கர் படையெடுப்பால் நாற்பது ஆண்டுகள் இக்கோயில் பூசையின்றிக் கிடந்ததையும் குறிப்பிடுகின்றது. மேற்குறித்த சோழர் கல்வெட்டு இவ்வூரை வடகரை இன்னம்பர் நாட்டு இன்னம்பர் என்று குறிப்பிடுகின்றது.

See the Annual report on South Indian epigraphy for the year 1927. Numbers 321—322.

# 11 திரு உசாத்தானம்

இராமபிரான் இலங்கைக்குச் செல்வதன் முன் இங்கு மந்திர உபதேசம் பெற்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது. இதற்குக் கோயிலூர் என்னும் வேறு பெயரும் உண்டு. தில்லைப்பதியான் இங்கு விரும்பி எழுந்தருளியிருக்கும் காரணம் பற்றிக் கோயிலூர் என்னும் பெயர் எய்திற்று என்பர். அதற்கு "நறைகமழ் தில்லையான் உறைவிடம் திருவுசாத்தானமே" என்னும் இவ்வூர் ஞானசம்பந்தப்பெருமானின் பதிக அடியைக்காட்டுவர்.

இது முத்துப்பேட்டை ரயில்வே நிலையத்திற்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 107-ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் - மந்திரபுரீசுவரர். இவர் திருமேனி வெண்மை நிறம் பொருந்தியிருக்கிறது. இறைவியின் திருப்பெயர் — பெரியநாயகி. இராமன், இலக்குமணன், சாம்புவான், சக்கிரீவன், அநுமன் இவர்கள் வழிப்பட்டுப் பேறுபெற்றதலம். இச்செய்தி, "நீரிடைத் துயின்றவன் தம்பி நீள் சாம்புவான்" எனத் தொடங்கும் இவ்வூரின் முதல் திருப்பாட்டால் விளங்கும். இதற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. இத்தல புராணம் அச்சிடப் பெற்றுள்ளது. அது சூதவனப் புராணம் எனப் பெயர் பெறும். [சூதவனம் = மாமரக்காடு]

இவ்வூர்க் கோயிலில் சோழ மன்னர்களில் விக்கிரம சோழ தேவர், மூன்றாங்குலோத்துங்க சோழ தேவர், மூன்றாம் இராசேந்திர சோழ தேவர் ஆகியோர் காலங்களிலும், பாண்டியரில் பெருமாள் சுந்தரபாண்டிய தேவர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

திருவுசாத்தானம் என்பது இவ்வூரின் பழம் பெயராய் இருப்பினும், மக்கள் இதைக் கோயிலூர் என்றே வழங்குகின்றனர். இவ்வாறு வழங்கப் பெறுவதற்கு இவ்வூர்க் கல்வெட்டுக்களில் ஆதாரம் கிடைத்திலது. ஆனால் முதலாம் இராசராச சோழரின் இருபத்தொன்பதாம் ஆண்டுவரை பொறிக்கப்பெற்றுள்ள கல்வெட்டு ஒன்று தஞ்சை இராசராசேச்சரத்தில் இருக்கிறது. அதில் காணப்பெறும் "இந்நாட்டு புறங்கரம்பை நாட்டுக் கோயிலூர் புதுக்குடியாகிய கோதண்டராமச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் இடக்கடவ திருப்பரிசாரகஞ்செய்யும் மாண் ஒன்று (South Indian Inscription Volumo II Part III Page 314) என்னும் பகுதியால் கி. பி. 1014 க்கு முன்னரே கோயிலூர் என்னும் பெயர் இவ்வூசாத் தானத்திற்கு வழங்கப்பெற்று வந்தது என்பது புலனாகிறது.

இறைவரின் திருப்பெயர்:- இவ்வூர்க் கல்வெட்டுக்களில் சிவ பெருமான் திருவுசாத்தானமுடைய நாயனார், திருவுசாத்தானமுடையார் என்னும் பெயரால் அழைக்கப்பெறுகின்றார்.

இறைவியின் திருப்பெயர்:- பெரியநாச்சியார் என்பதாகும். இச் செய்தி "பிள்ளை புரோசைக்குடையார் சாக்கானமான கேரளகுலாசனி சதுர்ப்பேதி மங்கலத்து உடையார் திருவுசாத்தானமுடைய நாயனார் கோயிலில் எழுந்தருளுவித்த திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சி யாருக்கு அமுதுபடிக்கும் சாத்துபடிக்கும் உடலாக" என்னும் திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவரின் இருபதாம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுப்பகுதியால் அறியக்கிடக்கின்றது.

இங்குக் குறிப்பிடப்பெற்ற பிள்ளைப் புரோசைக்குடையார் என்பவர் மூன்றும் இராசராச சோழனின் இரண்டாவது மகளாவார். எனவே அம்மனை இக்கோயிலில் எழுந்தருளுவித்தவர் பிள்ளை புரோசக்குடையார் ஆவர். இறைவன்கோயிலில் ஒருபகுதியைத் திருப்பணி செய்வித்தவர்:- எழுபத்தொன்பது நாட்டுப்பதினெண் பூமி காரரான கற்பகப்பிள்ளையார் ஆவர். மேற்குறித்த கற்பகப்பிள்ளையாரே யன்றி ஆண்டார் பிரசன்ன தேவரும் சில திருப்பணிகளைப் புரிந்துள்ளனர்.

**எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகளும் பிரதிமங்களும்:-** திரிபுனச்சக்கரவர்த்தி இராசராச தேவரின் முப்பதாம் ஆட்சியாண்டில் கன்றுப்பூருடையார் இக்கோயில் மேலைத்திருநட மாளிகையில் சுப்பிர மணியப்பிள்ளையாரை எழுந்தருளுவித்துள்ளார். இம்மன்னனது எட்டாம் ஆட்சியாண்டில் பைய்யூர் நாட்டுப் பைய்யுமான் பிச்சன் பல்லவராயனை சோழிய பல்லவரையன் இக்கோயில் மேலைத் திருநடமாளிகையில் பல்லவனீஸ்வரரை எழுந்தருளுவித்த செய்தியை ஒரு கல்வெட்டுக்

இக்கோயில் மேலைத் திருநடமாளிகையில் களரிக்குடையான் பொன்னம்பலக்கூத்தனை இருமுடி சோழ பல்லவரையன் புவனதிபதி நாச்சியாரையும், மும்முடி சோழபுரத்து வியாபாரிகளில் செம்பங் குடையான் திருச்சிற்றம்பலமுடையான் கூத்தாடுநாயனார், இக்கோயிலில் திருஞானம்பெற்ற பிள்ளையாரையும், திரிபுனச்சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவர் காலத்தும் எழுந்தருளுவித்துள்ளனர்.

வைகாசித்திருநாள்:- இக்கோயிலில் வைகாசி மாதத்தில் திரு விழா நடத்தப்பெற்று வந்தது. இதை இராசேந்திர சோழதேவரின் பதினொன்றும் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்துகின்றது.

**இவ்வூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள வளநாடு:-** அருமொழி தேவ வளநாடாகும் அது அளநாடு, ஆர்வலக்கூற்றம், இடையளநாடு, இங்காநாடு, மங்கலநாடு, நென்மலிநாடு, புலியூர்நாடு, புரங்கரம்பைநாடு, தக்களூர்நாடு, வலிவலக்கூற்றம், வெண்டாழை வேளூர்க் கூற்றம் என்னும் பதினொரு பிரிவுகளை உடையதாய் இருந்தது. முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் இவ்வளநாடு, இராசேந்திர சோழவள நாடு என்னும் பெயர் எய்திற்று. அப்பெயரே பிற்காலத்தும் நிலவுவ தாயிற்று. இக்காலம், தஞ்சாவூர் ஜில்லாவில் அறந்தாங்கி தாலூகா, பட்டுக்கோட்டை தாலூகா, திருத்துறைப்பூண்டி தாலூகா, நாகப்பட்டினம் தாலூகா இவைகளில் பலபகுதிகளைக்கொண்டதாகும்.

**இவ்வூரைத் தன்னகத்துக்கொண்ட நாடு.-** இவ்வூர், புறங் கரம்பை நாட்டுக்கு உட்பட்டது. பல்லவன் மாதேவி சதுர்வேதிமங்கலம், பெரும்பலமருதூர், களப்பாழ், சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலம், கெழுவத்தூர், பனையூர், வன்கொற்றங்குடி, பெருவாழ்வு தந்த பெருமான் சதுர்வேதிமங்கலம், மும்முடிசோழபுரம் என்பன இந்நாட்டில் அடங்கிய சில ஊர்களாகும்.

## 12. திரு ஏடகம்

திருஞான சம்பந்தப் பெருந்தகையார் மதுரையில் சமணர்களோடு செய்த புனல்வாதத்தில் 'வாழ்க அந்தணர்' என்று தொடங்கும் திருப் பாடலை எழுதி வைகையாற்றில் இட, அவ்வேடு ஆற்றில் எதிர் ஏறிச் சென்று தங்கிய தலமாதலின் இப்பெயர் பெற்றது. ஏடு தங்கிய செய்தியை "ஏடு சென்று அணைதரும் ஏடகத்து ஒருவனை" என்னும் ஞானசம்பந்தர் வாக்கே இதனை வலியுறுத்தும்.

இது திருச்சிராப்பள்ளி – மதுரை ரயில் பாதையில், சோழவந்தான் ரயில்வே நிலையத்திற்குத் தெற்கே மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர் – ஏடகநாதர். இறைவியின் திருப்பெயர் – ஏலவார்குழலி. இத்திருப்பெயரை இவ்வூர்ப் பதிகத்தில் ஞானசம்பந்தர் "ஏலமார் குழல் ஏழையோடு எழில்பெறும் கோலமார் திருவிடைக் குழகர்" எனக் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது.

திருமால், கருடன், சேடன், சாத்தனுர் இவர்கள் வழிபட்டுப் பேறு பெற்ற தலம். இச்செய்தி,

# 13. திருவொற்றியூர்

ஒருகாலத்தில் தலங்கள் உட்பட எல்லா ஊர்களுக்கும் இறை (Revenue Tax) விதித்து அரசன் சுற்றோலை அனுப்பியபொழுது அவ்வோலைகளிலும் ஓலை நாயகத்திற்கும் தெரியாதபடி வரி பிளந்து "இவ்வாணை ஒற்றியூர் நீங்கலாகக் கொள்க" என்று அவ்வோலையில் எழுதப்பட்டிருந்ததை வியந்து அவ்வூர்க்கு ஒற்றியூர் (விலக்கு அளிக்கப்பட்ட ஊர்) என்றும், பெருமானுக்கு எழுத்தறியும் பெருமான் என்றும் பெயர் ஆயிற்று. "ஏட்டினில் ஒற்றியூர் நீங்கல் என்ன எழுத்தறியும் நாட்ட மலரும் திருநுதலார்" என்னும் பெரியபுராணச் செய்யுளும் காண்க.

இது திருவொற்றியூர் ரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே அரைக்கால் மைல் தூரத்தில் இருக்கிறது. இது தொண்டை நாட்டுத் தலங்களுள் ஒன்றாகும்.

இறைவரின் திருப்பெயர் – (1) படர்பக்கநாதர். உபமன்யு முனிவரிடத்துச் சிவதீட்சை பெற்றுத் தம்மை வழிபட்ட வாசுகியை இறைவர் தம் திருமேனியில் ஐக்கியம் செய்து கொண்டமையால் இப்பெயர் பெற்றார். அப்பாம்பின் வடிவத்தை இறைவர் திருமேனியில் இன்றும் காணலாம்.

(உ) தியாகேசர்:- அரசனுக்குக் கொடுக்கும் பொருட்டுத் தம்பிடம் நிறைந்த அன்புடைய ஏலேலே சிங்கருக்கு மாணிக்கம் கொடுத்தருளினமையால் இப்பெயர் ஏற்பட்டது.

இவைகளன்றி, (8) ஆதிபுரீசுவரர், (4) புற்றிடங்கொண்டார், (5) எழுத்தறியும் பெருமான் என்னும் வேறு பெயர்களும் உண்டு. இவற்றுள் எழுத்தறியும் பெருமான் என்பதற்குக் காரணம் முன் கூறப்பட்டது.

இறைவியின் திருப்பெயர் – வடிவுடையம்மை. மரம் – மகிழ மரம். தீர்த்தம் – பிரம தீர்த்தம். துர்க்கையாரின் பெயர் – வட்டப்பாறையம்மை. மக்கள் இவளைச் சிறப்பாக வழிபட்டு வருகின்றனர். நந்திதேவர், திருமால், பிரமதேவர், வான்மீகி முனிவர், சந்திரன் முதலானோர் வழிபட்டுப் பேறு பெற்றனர். சுந்தரமூர்த்தி நாயனார் இங்கு எழுந்தருளி ஞாயிறுகிழாரின் மகளாய்த் தோன்றிய சங்கிலியாரை மகிழ மரத்தடியில் சத்தியஞ்செய்து கொடுத்த வரலாற்றை முன்னிட்டு இக்கோயிலில் மாசி மாதத்தில் மகிழடித்திருவிழா மிகச்சிறப்பாக ஆண்டு தோறும் நடைபெற்று வருகிறது. தைலவினைத்தொழில் மரபினராகிய கலிய நாயனார் அவதரித்து, கோயிலின் உள்ளும் புறம்பும் திருவிளக்கு எரித்து வரும் திருத்தொண்டை வறுமைக் காலத்தும் விடாது நடத்தி வந்தும், ஒருநாள்

முட்டுப்பட அது காரணமாகத் தம் கருத்தை அறிந்துகொள்ளத் தொடங்கிய பொழுது இறைவன் குறித்து அருள்செய்ததும் இப்பதியாகும். “பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல் ஆரும் துறக்கை அரிது அரிது” என்று தாயுமானவரால் பாராட்டப்பெற்ற பட்டினத்துப் பிள்ளையார் பேறு பெற்றதும் இப்பதியிலேதான். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று; திருநாவுக்கரசர் பதிகங்கள் ஐந்து, சுந்தரர் பதிகம் இரண்டு ஆக எட்டுப் பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு வரலாறு:- இவ்வூர்க்கோயிலில் சோழ மன்னர்களுள் மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மன், உத்தமசோழதேவன், முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திரசோழன், முதலாம் இராசாதிராசசோழன், முதற் குலோத்துங்கசோழன், முதலானோர் காலங்களிலும், கங்க பல்லவமன்னர்களில் விஜய அபராஜித போத்தரையர், கோவிஜய நிருபதுங்கவர்மர், கோவிஜயகம்பவர்மர், முதலானோர் காலங்களிலும் பாண்டியர்களில் ஜடாவர்மனெனிய திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவன் காலத்தும், இராஷ்டிரகூட மன்னர்களில் காஞ்சி, தஞ்சை இவைகளைக்கொண்ட கன்னர தேவர் காலத்தும், விசயநகர வேந்தர்களில், சாயண்ண உடையார், தேவராய மகாராஜா குமாரர் புக்கண்ண உடையார், வீரப்பிரதாப தேவராய மகாராயர் முதலானோர் காலங்களிலும், சம்புவராய மன்னர்களில் சகல புவன சக்கரவர்த்தி ராஜ நாராயண சம்புவராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள்

See the Annual reports on South Indian Epigraphy for the years 1892 Numbers 104-110, years 1896 Numbers 399-405, years 1911 Numbers 363-372, years 1912 Numbers 98-246, years 1933 Numbers 162-167, for 1892 Numbers 104 see the Epigraphica Indica vol VII, page 148, for 1892 Number 105 see the S. I. I. vol IV 553, for 1892 Number 106 see the S. I. I. vol III No. 61, for 1892 Number 107-8 see the S. I. I. vol IV 555-556, for 1892 Number 109 see the Epigraphica Indica vol V page 106 for 1892 Number 110 see the S. I. I. vol IV No. 558, for 1896 Numbers 399-405. see S. I. I. vol V Numbers 1354-1360, for 1912 Number 100 see S. I. I. vol III No. 108, for 1912 Number 164 see S. I. I vol III No 105, for 1912 Number 166 see S. I. I vol III No 143, for 1912 Number 245 see S. I. I. vol III No 145, for 1912 Number 246 see S I. I. vol III No. 115.

இறைவரின் திருப்பெயர்:- இக்கோயில் கல்வெட்டுக்களில் இறைவர் மகாதேவபட்டாரர், திருவொற்றியூர் மகாதேவர், ஒற்றியூர் ஆழ்வார், திருவொற்றியூருடைய நாயனார், படம்பக்க நாயகதேவர், என்னும் பெயர்களால் கூறப்பெற்றுள்ளனர். இவற்றுள் படம்பக்க நாயக தேவர் என்னும் பெயர், திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜாதிராஜ தேவரின் ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டிலும், மகாதேவ பட்டாரர் என்னும் பெயர் தெள்ளாறெறிந்த நந்திபோத்தரையர் கல்வெட்டிலும் காணப்படுகின்றன.

**திருவிழா:-** இத்திருக்கோயிலில் பங்குனி உத்திரத் திருவிழாவும், ஆனித் திருவிழாவும், மாசி மகவிழாவும் மிகச்சிறப்பாக நடைபெற்று வந்தன. பங்குனி உத்திரத்திருவிழாவின் ஆறும் நாளில் படம்பக்க நாயக தேவரைத் திருமகிழ மரத்தின்கீழ் திருவோலக்கஞ் செய்தருளுவித்து ஆளுடைய நம்பியின் ஸ்ரீபுராணத்தைக் கேட்டருளச்செய்வது வழக்கம்.

ஆனித்திருவிழாவின் ஆறும் நாளில் மூன்றுங் குலோத்துங்கசோழன் இக்கோயிலிலுள்ள இராசராசன் திருமண்டபத்தில் திருவோலக்கஞ் செய்தருளி விநோதம் கொண்டருளினான் என்று அம்மன்னனது 19-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிப்பிடப்பெற்றுள்ளது. மாசி மகவிழாவின் பொருட்டு சிறுவப்பேடாகிய மும்முடிச் சோழநல்லூர்ப் புறவுவரித்திணைக் களத்துக் கணக்காளன் நிவந்தம் அளித்திருந்தான். இந்நிவந்தம் அளிக்கப் பெற்ற காலம் மூன்றுங் குலோத்துங்க சோழ தேவரின் முப்பத்தொன்றுவது ஆண்டாகும்.

**மண்டபங்கள்:-** இக்கோயிலில் இராசராச மண்டபம் என்னும் பெயருடைய மண்டபம் ஒன்று இருந்தது. அம்மண்டபத்தில் இருந்து கோயில் கருமங்களை ஆராய்ந்து வந்தனர்.

**குலோத்துங்கசோழன் மண்டபம்:-** இதுவும் கோயிலுக்குள் இருந்த ஒரு மண்டபமாகும். இதில் நாடோறும் ஐம்பது அடியார்களுக்கு அன்னமளிக்கப்பெற்று வந்தது. இதன் பொருட்டுப் பையூர்க் கோட்டத்து அரசூருக்கு அருகில் உள்ள ஊராகிய பவனம்பாக்கத்திற்கு எழுத்தறிவார் நல்லூர் என்னும் பெயரை இட்டு அதில் ஒருபகுதியை அன்னம் அளிப்பதற்கு நிவந்தமாக முதற்குலோத்துங்க சோழன் அளித்திருந்தான். இந்த ஏற்பாட்டை முதற்குலோத்துங்க சோழன் தன் தலைநகராகிய கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து செய்தருளினான்.

**வியாகரணதான வியாக்கியான மண்டபம்.-** இதுவும் கோயிலுக்குள் இருந்த மண்டபமாகும். இது சித்தரசன் பொருட்டு துர்க்கை யாண்டி நாயக்கனால் கட்டப்பெற்றதாகும். இம்மண்டபத்திற்கும் மற்றுமுள்ள

திருப்பணிகளுக்கும் உடலாக ஒற்றியூர் வடகரை, தென்கரையில் பொன் வரி வருவாயால் உள்ள மாடை வரிப் புறக்கொடுத்து காட்டவர் அளித்துள்ளனர்.

**மண்ணைக்கொண்ட சோழன்:-** மூர்த்தியானகுன்ற மண்டபம் ஒன்று இக்கோயிலில் இருந்தது. வளவன் மூவேந்தவேளார், விக்கிரமசிங்க மூவேந்த வேளார் என்னும் இரண்டு அதிகாரிகள் இம்மண்டபத்திலிருந்து கோயில் சம்பந்தமான ஒரு வழக்கை விசாரித்ததாக முதலாம் இராசாதி ராசதேவரின் 26-ஆம் ஆண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது.

**திருமடங்கள்:-** இவ்வூரில் சதுரானன பண்டிதருக்குத் திருமடம் ஒன்று இருந்தது. அதற்குத் திருமயானமடம் என்று பெயர் வைக்கப் பெற்றிருந்தது. இச்செய்தி முதலாம் இராசேந்திர சோழதேவரின் 31-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் கூறிக்கப்பெற்றுள்ளது.

குலோத்துங்கசோழன் மடம்:- இது கோயிலுக்குள் இருந்தது. இச்செய்தி முதற்குலோத்துங்க சோழன் கல்வெட்டில் கூறப்பெற்றுள்ளது.

இராசேந்திரசோழன் மடம்:- ஆரிய தேசத்து மேகலாபுரத்து பிரா மணி நாகலக்ஷ்மைச் சானியான ஆரிய அம்மையாரால் கட்டப்பெற்றது இம்மடத்திற்கு மடப்புறமாக இவ்வம்மையார் நிலம் வாங்கி விட்டிருந்தனர்.

வெளிப்பிரகாரத்தைக் கட்டியவர்:- இக்கோயிலின் வெளிப்பிராகா ரத்துத் திருமதிலைக் கட்டியவர் ஆதிமங்கலத்து ஆட்கொண்ட நாயகனை சேதிராய தேவராவர். இது கட்டிமுடிந்தது மூன்றாங் குலோத்துங்க சோழதேவர் காலத்தில் ஆகும். விசயநகர பரம்பரையைச் சேர்ந்த ஹரிஹரர் II- காலத்துக் கல்வெட்டு, அங்கராயன் மடம் ஒன்றைக் குறிப்பிடுகிறது.

**அளவுகருவி:-** கோயிலுக்கு நெய்கொண்டு வந்து அளந்தவர்கள் அருமொழித்தேவன் நாழியால் அளந்து வந்தனர். எனவே இக்கோயிலில் வழங்கி வந்த அளவு கருவி அருமொழித்தேவன் நாழி என்னும் பெயர் பெற்றிருந்தது.

**இறைவர் திருப்பெயரை இட்டு வழங்கல்:-** படம்பக்க நாயகர் என்னும் இறைவரது திருப்பெயரை, கோயில் நாயகம் செய்துவந்த ஒருவனுக்குப் படம்பக்க நாயக பட்டன் எனவும், திரிபுவன சுந்தரத்தெரு மன்றாடிகளில் ஒருவனுக்குப் படம்பக்கன் எனவும் இட்டு அழைக்கப் பெற்றிருந்தனர். எழுத்தறிவார் என்னும் திருப்பெயரை, பையூர்க் கோட்டத்தில் உள்ள அரசூர்க்கு அருகில் இருக்கும் பவனம் பாக்கத்திற்கு எழுத்தறிவார் நல்லூர் என்று வைக்கப்பெற்றிருந்தது. விசயநகர வேந்த

னுகிய வீரப்பிரதாப தேவராயர் காலத்தில் அதாவது சகம் 1346-இல் புழல்நாட்டு மணலி என்னும் ஊரினர் ஒற்றியூருடைய நாயனுர்க்கு உப்புத் தட்டு (Salt pan) ஒன்றைக் கொடுத்திருந்தனர். அதற்குப் படம்பக்க நாயகப் பேரளம் என்னும் பெயர் வைக்கப்பெற்றிருந்தது.

**அரசர்களின் சிறப்புப்பெயர்கள்:-** கோப்பரகேசரி வர்மராகிய உத்தமசோழதேவர், சென்னிஎறிபடைச்சோழன், உத்தமசோழன்எனவும் முதற்குலோத்துங்கசோழன் ஜெயதரன் எனவும், மூன்றுங்குலோத்துங்க சோழதேவர், வீரராசேந்திர சோழதேவர், உலகுய்யவந்த பெருமாள், கோனேரின்மை கொண்டான் எனவும் இக்கோயில் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**ஒற்றியூரைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு:-** இவ்வூர், கங்கைகொண்ட காலம் முதல், முதற்குலோத்துங்கசோழன் காலம் வரையில் சயங்கொண்ட சோழமண்டலத்துப் புழற்கோட்டத்துப் புழல் நாட்டில் உள்ள ஊர்களில் ஒன்றுய் இருந்தது. முதற்குலோத்துங்கன் காலத்தில் சயங்கொண்ட சோழமண்டலத்து, இராசேந்திர சோழவள நாட்டுப் புழல்நாட்டு ஊர்களில் ஒன்றுய் விளங்கிற்று.

**பிறசெய்திகள்:-** முதலாம் இராசேந்திரனின் பிறந்த நட்சத்திரம் மார்கழித் திருவாதிரையாகும். இச்செய்தி அம்மன்னனது 31-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் காணப்பெறும். "திருவொற்றியூருடைய மகா தேவர்க்கு ராஜேந்திரசோழர் திருநாள் மார்கழித் திருவாதிரை நாளன்று நெய்யாடியருளவேண்டு மிடத்துக்கு திருவொற்றியூர் திருமயான மடமுடைய சதுரானன பண்டிதன் தேவர் பண்டாரத்து வைத்தகாசு நூற்றைம்பது" கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது.

இக்கோயிலில் வீரராஜேந்திரன் திருப்பள்ளியெழுச்சி, திரிபுவன வீரதேவன் சந்தி இவைகளுக்கு நிவந்தங்கள் அளிக்கப்பெற்றிருந்தன. இவற்றுள் திரிபுவன வீரதேவன் என்பது மூன்றுங்குலோத்துங்க சோழ னுக்குரிய சிறப்புப் பெயராகும். அவன் பேரால் ஏற்படுத்தப்பெற்ற இச்சந்திக்கு குலோத்துங்க சோழவள நாடான புலியூர்க் கோட்டத்தில் சிவபாத சேகரநல்லூராகிய குளப்பாக்கத்தில் நூறுவேலி நிலம் விடப் பெற்றிருந்தது. இவ்வூரில்சாலியர்கள்வசித்துவந்ததெருக்கள்,ஜெயசிங்ககுல காலப்பெருந்தெரு என்றும், இராஜராஜப்பெருந்தெரு என்றும், மன்றுடிகள் வசித்துவந்த தெருக்கள் திரிபுவனச் சுந்தரச்சேரி, திரிபுவனநகரத்தெரு என்னும் பெயர்களைப் பெற்றிருந்தன. மன்றுடிகள் என்பார் திருவிளக்குக் குடிகளாவார். இவர்கள் நுந்தா விளக்கினுக்கு விடப்பெறும் சாவாமூவாப் பசுக்களையோ அல்லது ஆடுகளையோபெற்று, உரிய திட்டப்படி, தவருது

நெய் அளப்போராவர். இக்கோயிலில் உத்தமசோழதேவர் காலத்தில் கணிப்பிறைக்கள் இருபத்து நால்வரும், காளம் ஊதுபவர் எண்மரும் இருந்தனர்.

இக்கோயிலிலுள்ள கிரந்தக் கல்வெட்டுக்கள், ஓற்றியூரை ஆதிபுரி என்றும், இறைவரை, ஆதிபுரீஸ்வரர் என்றும் கூறுகின்றன. கங்க பல்லவவம்சத்து விஜயகம்பவர்மனின் 19-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, ஒற்றியூரில் நிரஞ்சனீஸ்வரத்து மகாதேவருக்கு நிரஞ்சனகுரவரால் கோயில் கட்டப்பெற்ற செய்தியை உணர்த்துகின்றது. சோழ நாட்டுத் தென்கரை நாட்டு, பொய்யில் கூற்றத்து சிறுகுளத்தூருடையான் மாறன் செம்பியன் சோழியவரையன், சீட்புலியை யெறிந்து நெல்லூரை அழித்துத் திரும்பியவன் திருவொற்றியூர் மகாதேவர்க்குத் திருநுந்தா விளக்கு எரிப்பதன் பொருட்டு 96 சாவாமூவாப் பேராடுகளை அளித்தான் என்பதை மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மனின் முப்பத்து நான்காவது ஆண்டுக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

## 14 திரு ஓமாம்புலியூர்

புலிக்கால் முனிவரால் (வியாக்கிரபாதரால்) பூசிக்கப்பெற்றதால் புலியூர் என்றும், பாதிரிப்புலியூர், பெரும்பற்றப்புலியூர், பெரும்புலியூர் என்பவைகளைப்போல வேறுபாடு தோன்ற வேள்விச் சிறப்பினையுடைய என்னும் பொருளில் ஓமமாம் என்னும் அடைமொழியும் கொடுக்கப் பெற்று ஓமமாம் புலியூர் என்னும் பெயர் எய்திற்று. சம்பந்தர் தேவாரத்தில் இவ்வூர் ஓமமாம்புலியூர் என்றும், அப்பர் தேவாரத்தில் ஓமாம்புலியூர் என்றும் கூறப்பெற்றுள்ளது.

வேடன் ஒருவன் புலிக்குப் பயந்து ஓடிவந்து இக்கோயில் வில்வ மரத்தில் ஏறிக்கொண்டான். அப்புலியும் அம்மரத்தைவிட்டு அகலாது கீழிருந்தது. அது நீங்குமாறு, வேடன் வில்வ இலைகளைப் பறித்து இரவு முழுவதும் அப்புலியின்மேல் போட்டான். அவ் இலைகள் அம்மரத்தடியில் எழுந்தருளியிருக்கும் இறைவர்மீதுபட, அவர் அவ்வேடனுக்கு மறுநாட் காலையில் முத்தியளித்தார். அது காரணமாகவே இப்பெயர் பெற்றது என்பர். ஊரின்பெயர் ஓமாம்புலியூர் எனினும் அங்குள்ள கோயிலுக்கு வடதளி என்று பெயர். [தளி - கோயில்.] வடதளி என்றமையால் கோயிலுக்குக் கிழ்ப்பக்கத்தில் இருக்கும் கோயில் தென்தளி ஆதல் வேண்டும். இது சிதம்பரத்திற்குத் தென்மேற்கிலுள்ள காட்டுமன்னார் குடிக்குத் தெற்கே கொள்ளிடப்பேராற்றின் வடகரைப் பக்கத்தில் இருக் கிறது. இது காவிரியின் வடகரைத் தலங்களுள் முப்பத்தொன்றாவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் துயரந்தீர்த்தநாதர். இறைவியின் திருப்பெயர் பூங்கொடிநாயகி. தீர்த்தம் கொள்ளிடப்பேராறு. இத்தலத்து அந்தணர்ப் பெருமக்களின் பெருமையை ஞானசம்பந்தப்பெருந்தகையாரும், அப்பர் அடிகளாரும் இவ்வூர்ப் பதிகங்களில் முறையே "நான்மறை தெரிந்து நலந்திகழ் மூன்று எரி ஓம்பும் ஒள்ளியார் வாழும் ஓமாம்புலியூர்" என்றும், "ஒன்றியசீர் இருபிறப்பர் முத்தீ ஓம்பும் உயர்புகழ் நான்மறை ஓமாம்புலியூர்" என்றும் கூறியுள்ளனவற்றால் அறியலாம். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் அப்பர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு வரலாறு :- இத் திருக்கோயிலில் சோழமன்னரில் மூன்றாங் குலோத்துங்கசோழதேவரின் காலத்துக் கல்வெட்டு ஒன்றும் பல்லவரில் சகலபுவனசக்கிரவர்த்தி கோப்பெருஞ்சிங்கதேவருடைய காலத்துக் கல்வெட்டு ஐந்தும் ஆக ஆறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. சோழமன்னர் காலத்துக் கல்வெட்டில் இறைவரின் திருப்பெயர் வடதளி தளி உடையார் என்றும், பல்லவர் காலத்துக் கல்வெட்டில் வடதளி உடைய நாயனார் எனவும், வடதளி உடையார் வரும் துயரம் தீர்த்த நாயனார் எனவும் கூறப்பெற்றுள்ளது. இங்குக் குறித்த சோழர் பல்லவர் காலங்களில் இவ்வூர் வடகரை விருதராசபயங்கர வளநாட்டு மேற்கா நாட்டுப் பிர்மதேயம், ஓமாம்புலியூராகிய உலகளந்தசோழ சதுர்ப்பெதி மங்கலம் எனக் குறிக்கப்பெற்றுள்ளது.

விருதராசபயங்கரவளநாட்டின் உட்பகுதியாய் அடங்கிய நாடுகளில் காநாடு என்பது ஒன்றாகும். அது மேற்காநாடு கீழ்க்காநாடு என்னும் இருபகுதிகளை உடையது. இவற்றுள் கொள்ளிடப்பேராற்றின் வடகரையை ஒட்டிய பிரதேசமாகிய ஓமாம்புலியூர் திருக்கடம்பூர் இவைகள் மேற்காநாட்டைச் சேர்ந்தனவாகும். இவ் ஓமாம்புலியூர்க்குக் கிழக்கேயுள்ள திருக்கானாட்டுமுள்ளூர், கீழ்க்காநாட்டைச் சேர்ந்ததாகும். இவ் ஓமாம்புலியூர்க்கு அண்மையில் ஆதனூர் என்னும் ஊர் இருக்கிறது. இதுவே திருநாளைப்போவார் பதியாகும். அவர் பதியைச் சேக்கிழார் மேற்காநாட்டு ஆதனூர் என்று குறித்திருப்பதை அறிய இவ்வூர்க் கல்வெட்டுப் பெரிதும் பயன்படுகின்றது.

## 15 திருக் கச்சியேகம்பம்

N. B. இதைப்பற்றிய கல்வெட்டு வரலாறு இரண்டாம் திருமுறையில் இருக்கின்றது அத்துடன் பின்கண்டதையும் சேர்த்தருளவும்.

கச்சி ஏகாம்பரநாதர் கோயிலின் கீழக்கோபுரத்திற்கு அருகில் ஆலாலசுந்தரன் மடம் ஒன்று இருந்தது. புதுக்கோடு மருந்தவள்ளலின்

சிஷ்யருகிய திருநாவலூரர், கூடலூருடையான் தமிழக்கதரழிந்தான் நிலம் அளித்திருந்தான். அம்மடத்தைப்பற்றி, சகம் 1403-இல் குறிப்பிடப் பெற்றுள்ளது. இதுவன்றி ஈசானதேவர் மடம் ஒன்றும் இருந்தது.

பதினெறுகால் சித்திரமண்டபத்திற்கு எதிரில் உள்ள தாண்டவதேவர் கோயிலும், திரயம்பகேஸ்வரர் கோயிலும் அரசனது மகளாகிய திரயம்பக்க தேவியால் கட்டப்பெற்றதாகும். சகம் 1378-இல் ஏற்பட்ட மல்லிகார்ச்சுன தேவ மகாராயர் கல்வெட்டு, புதுப்பாக்கம், வேளியூர் இவை இரண்டு ஊர்களும் திருவேகம்பமுடைய நாயனர்க்கும், காமாட்சி தேவியார்க்கும் முறையே கொடுக்கப்பட்டன என்பதைக் குறிக்கின்றது.

## 16 திருக் கச்சிநெறிக்காரைக்காடு

இது திருக்கச்சியில் காரைவனத்தில் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது. இக்காலம் இது, திருக்காலீஸ்வரன்கோயில் என்று வழங்கப்பெறுகின்றது. இது தொண்டைநாட்டுத் தலங்களுள் ஒன்று. இது காஞ்சிபுரத்தின் வடகிழக்கில் கொல்லைவெளியில் இருக்கின்றது. இத்தலத்தில் இந்திரன், புதன் இவர்கள் வழிபாட்டுப் பேறுபெற்றனர்.

இறைவரின் திருப்பெயர் – காரைத் திருநாதர். இறைவியின் திருப் பெயர் – காமாட்சியம்மை. தீர்த்தம் – இந்திர தீர்த்தம். மரம் – காரை, திருஞானசம்பந்தர் திருவாய்மலர்ந்தருளிய ஒரு பதிகத்தை உடையது.

## 17 திருக் கடவூர்

திருமால் முதலிய தேவர்கள் தூயதோர் இடத்தில் உண்ணவேண்டு மென்று அமுதகடத்தை இங்குக் கொண்டுவந்து வைத்தமையால் இத்தலம் கடபுரி அல்லது கடவூர் என்று ஆயிற்று என்பர். இயமவாத னையைக் கடத்தற்கு உதவும் ஊர் என்றும் கூறுவர்.

இது மாயூரம் – தரங்கம்பாடி இருப்புப் பாதையில், திருக்கடவூர் ரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே அரைமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 47-ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர்:- அமிர்தகடேசர். திருமால் முதலிய தேவர்கள் தூய்மையான இடத்தில் உண்ணும் பொருட்டு இங்குக் கொண்டுவந்து வைத்த அமுதகடம் அமுதலிங்கமாகத் திருவுருவம்பெற்ற மையால் இப்பெயர் ஏற்பட்டது. இறைவியின் திருப்பெயர் – அபிராமி

அம்மை. தலப்பிள்ளையார் - கள்ளவாரணப்பிள்ளையார். மரம் - வில்வ மரமும், சாதிமுல்லைக்கொடியும். தீர்த்தம்-அமிர்தபுட்கரணி, காலதீர்த்தம் முதலியன.

மூலம் + ஸ்தானம் = மூலஸ்தானம்; அது மூலட்டானம் என வருவதுபோல, வீரம் + ஸ்தானம் = வீரட்டானம் எனவரும். இத்தகைய தலங்கள் எட்டு உள்ளன. அவை

" பூமன் சிரங்கண்டி, அந்தகன் கோவல், புரம் அதிகை.
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்,
காமன் குறுக்கை யமன் கடவூர் இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே."

என்னும் பாடலால் அறியத்தக்கன.

திருக்கண்டியூர் - பிரமன் தலைகளில் ஒன்றை அறுத்தது. திருக்கோவலூர் - அந்தகாசுரனைக் கொன்றது திருவதிகை - திரிபுரத்தை எரித்தது, திருப்பறியலூர் - தக்கன் தலையைக்கொய்தது. திருவிற்குடி - சலந்தராசுரனைக் கொன்றது. வழுவூர் - யானையைத் தோலை உரித்தது. திருக்குறுக்கை - காமனை எரித்தது. திருக்கடவூர் - இயமனை உதைத்தருளியது, இது மார்க்கண்டரைக் காக்கும் பொருட்டுக் கூற்றுவனை உதைத்தருளிய வீரம் நிகழ்ந்த தலமாதல் பற்றி வீரட்டானம் எனப்பெயர்பெற்றது. இச்செய்தியைக் "கரிதரு காலனைச் சாடினானும்", "மார்க்கண்டர்க்காக அன்று காலனை உதைப்பர்போலும் கடவூர் வீரட்டனாரே", "கொன்றாய் காலன் உயிர் கொடுத்தாய் மறையோனுக்கு" என முறையே காணப்பெறும், சம்பந்தர், அப்பர், சுந்தரர் இவர்களின் தேவார அடிகளால் அறியலாம். அதற்கு ஏற்பக் கால சம்ஹாரமூர்த்தி தனியே எழுந்தருளியிருக்கின்றார். அவர் சந்நிதிக்கு எதிரில் அருள் பெற்ற இயமனது உருவமும் இருக்கின்றது.

பரஞ்சோதியார் திருவிளையாடற்புராணத்திலும் (அருச்சனைப்படலம்.)

" கறுவிவீழ் காலன் மார்பிற் சேவடிக் கமலஞ் சாத்திச்
சிறுவனுக் காயு ளீந்த சேவகப் பெருமான் மேய
அறைபுனற் பழமன்ன மூதூர்"

எனக்கூறப்பெற்றுள்ளது.

ஏழுகன்னிகள், துர்க்கை முதலானோர் வழிபட்டுப் பேறுபெற்றதலம். இப்பதியில் அவதரித்த குங்கிலியக் கலயநாயனார் வறுமையுற்ற காலத்தும், தம் மனைவியாரின் தாலியை விற்றுக் குங்கிலியத் தொண்டைச் செய்தும், காரி நாயனார் அவதரித்து அரசனிடம் சென்று பொருள் பெற்றுப் பல திருப்பணிகள் புரிந்தும் வீடுபேறு அடைந்த பதியும் இதுவேயாகும்.

சைவப்பெருமக்களாகிய அப்பரும், சம்பந்தரும் இவ்வூர்க்கு ஒருசேர எழுந்தருளி, கூற்றுதைத்த பெருமானடிகளைத் தொழுதேத்திக் குங்கிலியக் கலய நாயனார் இவ்வூரில் தங்கியிருந்த பெருமையும் இப்பதிக்குரிய பெருஞ்சிறப்பாகும். இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகங்கள் மூன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக ஐந்து பதிகங்கள் இருக்கின்றன.

இத்திருக்கோயிலில் சோழமன்னர்களில் முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திரசோழன், முதற்குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் இராசாதிராசதேவன், மூன்றுங்குலோத்துங்கன், மூன்றும் இராசராசன் இவர்கள் காலங்களிலும்; பாண்டியமன்னர்களில் மாறவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி, எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகர தேவன், கோனேரின்மைகொண்டான், பெருமான் சுந்தரபாண்டியன் இவர்கள் காலங்களிலும்; விசயநகரவேந்தர்களில் கிருஷ்ணதேவமகாராயர், வீரவிருப்பண்ண உடையார் இவர்கள் காலங்களிலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக் கல்வெட்டுக்களில் இறைவர் திருவீரட்டானத்துப்பெருமானடிகள், திருவீரட்டானமுடையபரமசுவாமி, காலகாலதேவர் என்னும் பெயர்களால் கூறப்பெற்றுள்ளனர்.

**திருவிழா :-** இக்கோயிலில் சித்திரைமாதத்தில் பெருந்திருவிழா எட்டு நாட்களில் நடந்துவந்தது. இதன்பொருட்டுச் செலவினங்கட்கு முதலாம் இராசேந்திரசோழதேவரின் பதினெட்டாம் ஆண்டில் இராசராச மூவேந்தவேளான் நிலம் அளித்திருந்தனன்.

**திருமடம் :-** இவ்வூரில் முதல் குலோத்துங்கசோழன் காலத்தில் (கி. பி. 1070—1120) மார்க்கண்டேயர் மடம் ஒன்று இருந்தது. அம்மடத்தில் வேதம் வல்ல சிவயோகிகள் பதின்மருக்கு உணவு அளிக்கும் பொருட்டு மடப்புறமாக ஒன்றேமுக்கால்வேலி நிலம் அளிக்கப்பெற்றிருந்தது

**மண்டபங்கள் :-** இக் கோயிலில் திருச்சிற்றம்பலவேளைக்காரன் திருமண்டபம் ஒன்று இருந்தது. திருக்கடவூர் சபையார் இம்மண்டபத்தில் கூட்டங்கூடுவது வழக்கம். இதுவன்றிக் குலோத்துங்கசோழன் திருவெடுத்துக்கட்டி என்னும் மண்டபமும் இருந்தது. இதிலும் சபையார் கூட்டங்கூடுவது உண்டு.

**எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகள் :-** அரையர் இராசராசதேவராகிய வாணதரையர் இக்கோயிலில் இராசராச ஈசுவரரை எழுந்தருளுவித்திருந்த செய்தியை மூன்றுங் குலோத்துங்கசோழனுடைய கல்வெட்டு உணர்த்துகின்றது. சடாவர்மன் திரிபுவனச்சக்கிரவர்த்தியாகிய

திருக்கடவூர்



திருக்கோயில்

வீரபாண்டியத்தேவரின் பதினான்காம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயிலின் விக்கிரமசோழீச்சரமுடையாரைப்பற்றிக் குறிப்பிடுகின்றது.

**அறச்சாலை :-** இக்கோயிலில் இராசாதிராசன் அறச்சாலை ஒன்று இருந்தது. அதில் பதினேழுபேர்கள் உண்பதற்கு கோமக்குடி விசய ராசேந்திரமூவேந்தவேளானாகிய பிச்சன் ஆதித்தன் சாலாபோகமாக நிலம் அளித்திருந்தான்.

**அளிக்கப்பெற்ற நில நிவந்தம் :-** திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மைகொண்டான் தான் பிறந்த ஆனி மூலத்தில் காலகால தேவர்க்கு குலசேகரன் சந்தி என்னும் பெயரால் விசேட வழிபாட்டிற்கும் திருக்கோயிலுக்கு நாடோறும் வழிபாட்டிற்குமாக இராசேந்திரசோழ மங்கலமான ஆக்கூரினின்று வேறு பிரிந்த குலோத்துங்கசோழன் கருப் பூரில் முப்பத்தொருவேலி நிலத்தை அளித்திருந்தான். விசயநகரவேந்த னாகிய கிருட்டிணதேவமகாராயர் எட்டுவேலி நிலத்தை அளித்திருந்தார். வீரவிருப்பண்ண உடையார் நூறுவேலி நிலத்திற்குரிய வரிகள் அனைத் தையும் இக்கோயிலுக்குக் கொடுத்திருந்தனர். இவ்வூருக்கு அருகிலுள்ள எருக்காட்டுச்சேரியே இக்கோயிலுக்குச் சொந்தம் என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இக்கோயிலுக்கு அளிக்கப்பெற்ற நுந்தாவிளக்கு களைப்போல் வேறு எங்கும் அளிக்கப்பெறவில்லை. இந்த நுந்தாவிளக்குப் புறங்கள் பெரும்பான்மையும் இவ்வெருக்கட்டாஞ்சேரி மணற்குன்றுகளைத் திருத்தி நிலமாக அளிக்கப்பெற்றனவாகும். " விரும்பி நல்விளக்குத் தூபம் விதியினால் இடவல்லார்க்குக் கரும்பினில் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே " என்னும் அப்பர்பெருமான் திருவாக்கை எண்ணியே மிக ஏராளமான நுந்தாவிளக்குகளுக்கு நில நிவந்தங்கள் அளித்திருத்தல் வேண்டும்.

**பிற செய்திகள் :-** இராசநாராயணவளநாட்டுக் கரம்பூர்நாட்டுத் தில்லையாளிநல்லூரில் தில்லையாளிஈசுவரமுடையார் கோயிலில் எழுந் தருளுவித்திருந்த திருக்கடவூர் நாயகருக்கு அர்ச்சனாபோகமாக மூன்று வேலி நிலத்தைத் திருக்கடவூர் சபையார் விக்கிரமசோழதேவரின் நான் காம் ஆண்டில் விடடிருந்தனர். தில்லையாளிநல்லூரே இக்காலம் தில்லையாடி என்று வழங்கப்பெறுகின்றது. அக்கோயில் கல்வெட்டு அதைத் தில்லையாளிநல்லூர் என்றே குறிப்பிடுகிறது. இங்ஙனம் மூன்று வேலி நிலம் அளித்திருந்த செய்தியைத் திருவாவடுதுறை கோயிலின் மூன்றும் பிராகாரத்து வடபுறச்சுவரிலுள்ள கல்வெட்டும் உணர்த்துகிறது. இச்செய்தியைப்பற்றி உணர்த்தும் கல்வெட்டு திருவாவடுதுறைக் கோயிலில் இருப்பதன் காரணம் புலப்படவில்லை. விசயநகரவேந்தராகிய கிருட்டினராயர் காலத்துக் கல்வெட்டுப் பாடல் திருக்கடவூரில் வசித்து

வந்ததையும், நெய்ச்சூர் சண்டையில் கட்டுவிட்டுவந்ததையும் ஆகிய ஆபத்சகாயன் என்னும் பிராமணன் இக்கோயிலைப் புதுப்பித்ததைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. பாண்டியநாட்டார் ஒருவர் பள்ளியறைக்குச் சிம்மாசனம் கொடுத்துள்ளனர். மூன்றாங் குலோத்துங்கசோழன் காலத்தில் வீராந்தப்பல்லவரையர் என்னும் புலவர் பெருமகனார் இருந்தனர். அவரிடத்தில் சோழமன்னன் நல்லமதிப்பு வைத்திருந்தான். இப்புலவரின் விருப்பப்படி இக்கோயில் நட்டுவனிலை பாரசிவன் பொன்னாகுலிய கால விநோத நிருத்தப் பெரியானுக்கு ஆசனம் கொடுக்கப்பெற்றது.

இவ்வூரைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு:- இவ்வூர் முதலாம் இராசேந்திரசோழன் காலத்தில் உய்யக்கொண்டார் வளநாட்டு அம்பர்நாட்டுக் கடவூர் என்றும்; முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் இராசநாராயணவளநாட்டு அம்பர்நாட்டுக் கடவூர் என்றும்; மூன்றாங் குலோத்துங்கசோழன் காலத்தில் சயங்கொண்ட சோழவளநாட்டு அம்பர் நாட்டுக் கடவூர் என்றும் இக்கோயில் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற் றுள்ளன.

See the Annual repost on South Indian Epigraphy of the year 1906 Numbers 15-5?. 1925 Numbers 241-258.

## 18 திருக் கண்டியூர் (பக்கம் 162)

இது தஞ்சாவூர் ரயில்வே நிலையத்திலிருந்து திருவையாற்றுக்குப் போகும் பெருவழியில் (Road) தஞ்சையிலிருந்து, ஆறுமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவேரித் தென்கரைத் தலங்களுள் 12-ஆவதும் எட்டு வீரட்டானத் தலங்களில் ஒன்றும் ஆகும்.

இறைவர் திருப்பெயர் - வீரட்டேசர். இறைவி திருப்பெயர் - மங்கள நாயகி. இது, பிரமதேவரது தலையை அறுத்த வீரம் நிகழ்ந்த தலம். இச்செய்தி "பண்டு அங்கு அறுத்ததோர் கையுடையான் படைத்தான் தலையை" என்னும் இவ்வூர், அப்பர்பெருமான் பதிக அடியால் அறியக் கிடக்கின்றது. சூரிய பூசை நிகழும் பதிகளுள் ஒன்று. இப்பூசை ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதம் 13உ. முதல் 15உ. முடிய நிகழ் பெறுகின்றது. திருவையாறு ஐயாறப்பர் சித்திரை மாதத்தில் ஏழு ஊர் களுக்கு எழுந்தருளும் பெருந்திருவிழாப்பதிகளுள் ஐந்தாவது ஆகும். சதாநந்தர் பூசித்துப் பேறுபெற்றார். இவருடைய பிரதிமம் கோயிலில் இருக்கின்றது. இவ்வூரில் பிரமாவிற்குத் தனிக்கோயில் ஒன்று இருக் கின்றது. இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு:-** 'இவ்வூர்ச் சிவன்கோயிலில் பல்லவ மன்னரில் கோவிசைய நிருபதொங்க விக்கிரமபர்மன் காலத்தும்; சோழ மன்னர்களில் மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மன், உத்தமசோழன், பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி வர்மன், 'திருமன்னிவளர' எனத்தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய முதலாம் இராசேந்திரசோழன் இவர்கள் காலங்களிலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இறைவரின் திருப்பெயர்:- இக்கல்வெட்டுக்களில் இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருக்கண்டியூர் திருவீரட்டானத்து மகா தேவர், திருக்கண்டியூருடைய மகாதேவர் என்னும் பெயர்களால் கூறப் பெற்றுள்ளனர்.

திருவீரட்டானத்துப் பெருமானுக்கும் உமாதேவிக்கும் மூன்று சந்திக்குப் பருப்பமுது. தயிரமுது, கறிய முது, அடைக்காயமுது, இலை யமுது இவைகட்கும், இரவு, பகல் எரியும் திருநுந்தாவிளக்கு இரண்டு சிறுகாலை எரியும் சந்தி விளக்கு இரண்டு, உச்சியம்போது எரியும் சந்தி விளக்கு இரண்டு, இராவெளியும் சந்திவிளக்கு நான்கு ஆகிய இவை கட்கு எண்ணெயின் பொருட்டும், திருச்சென்னடைக்கு ஒவ்வொரு நாளைக்கும் நெய், எண்ணெய், தயிர், கறி, விறகு இவைகட்கும் தட்சிணை யனம் ஐப்பசி விஷி, உத்தராயணம், சித்திரை விஷி ஆக ஆண்டுவரை சங்கிராந்தி நான்கிற்கும், திருமெய்ப்பூச்சுக்குச் சந்தனம், திருப்புகைக்கும் குங்கிலியம் இவைகட்கும், ஆண்டுவரை திருப்பரிசட்டம் மூன்றுக்கும், திருமேற்சட்டி ஒன்றுக்கும், திருநமனிகை இரண்டிற்கும் உத்தரீயப் புடைவை நான்கினும், கிரகணமுள்ளிட்ட சிறப்புக்களுக்கும் கார்த்திகை வினக்கினுக்கும்' திருவாராதனை செய்வான் ஒருவனுக்கும், பரிசாரகம் செய்யும் மாண் ஒருவனுக்கும், கரணத்தான் ஒருவனுக்கும், திருவலகு, திருமெழுக்கு இடுவாள் ஒருத்திக்கும், ஆசாரியபோகத்திற்கும் ஆக இவைகளுக்கும் வேண்டும் ஐந்நூற்றுத் தொண்ணூற்று ஐங்கலனேபதக்கு நானாழி நெல்லுக்கு முதலாம் இராசேந்திர சோழன்காலத்தில் நித்தவிநோத வளநாட்டு முடிச்சோழ நாட்டு பட்டகள் கடம்பூர் உள்ளிறங்களில் ஐந்தேமுக்காலே நான்குமாவின் கீழ்முக்கால் நிலம் நிவந்தம் அளிக்கப் பெற்றிருந்தது. இக்கோயிலில் நட்டவம், மெய்மட்டு, மோர்வியம் இவை களின் பொருட்டு நித்தவிநோத வளநாட்டுக் கிழார்க் கூற்றத்து ஆயிரத் தளிப்பால் நிலம் விடப்பெற்றிருந்தது. இவ்வூரில் சபை ஒன்று இருந்தது. நில நிவந்தங்களும், பிறவும் இக்கோயிலுக்கு அளிக்க விரும்பியவர்கள் இவ்வூர்ச் சபையாரிடத்தே கொடுத்து வந்தனர். இவ்வூர் ஆர்க்காட்டுக் கூற்றத்துக்கு உட்பட்டிருந்தது. "அறம்மறவற்க அறமல்லது கைதராதே" என்னும் முதலாம் இராசேந்திரசோழன் காலத்துக் கல்வெட்டில் காணப் பெறும் காப்புரைகள் நம் உள்ளத்தைத் தளிர்விப்பனவாகும்.

அறியப்பெறும் பண்டைய வழக்கம்:- "திருப்புகைக்கு ஆண்டுவரை குங்கிலியம் தொண்ணூற்றுப் பலத்துக்கு காசு அரைக்கு நெல் இருகலம்"—என்னும் இக்கோயிலிலுள்ள முதலாம் இராசேந்திரசோழன் கல்வெட்டுப் பகுதியால் மிகப்பழங்காலத்தே சாம்பிராணிக்குப் பதில் குங்கிலியத்தையே உபயோகித்திருந்த செய்தி பெறப்படுகின்றது. (இன்றும் திருவையாற்றில் ஸ்ரீ ஆட்கொண்டார் சந்நிதியில் உள்ள குங்கிலியக் குழியில் மக்கள் குங்கிலியம் வாங்கி இடும் வழக்கம் இருந்து வருகிறது.)

**See the Annual report on South Indian Epigraphy for the year 1895 Numbers 13—23 and the South Indian Inscription volume III Number 134; volume VI Numbers 568—579.**

## 19 திருக் கயிலாயம் (பக்கம் 286. 520)

இது இமயமலைச் சிகரத்தில் இருக்கிறது. வடநாட்டுத் தலங்களுள் ஒன்று. நொடித்தான்மலை என்றுங் கூறப்பெறும். (நொடித்தல் - அழித்தல்) அழித்தல் தொழிலை உடைய உருத்திரமூர்த்தி வீற்றிருக்குந் தலமாதலால் நொடித்தான் மலை என்னும் பெயர் பெற்றது. நொடித்தான் மலை என்னும் இப்பெயர் சுந்தரர் தேவாரத்தில்தான் காணப்பெறுகின்றது. சம்பந்தரும், அப்பரும் இதைக் கயிலாயம் என்றே பாடியுள்ளனர். இது பூ கயிலாயம் எனவும் பெயர்பெறும். இறைவனது இருப்பிடமாய் எங்கும் பரவியுள்ள அருவமாகிய கயிலாயம் வேறு. இப்பூ கயிலாயம் தேவர்களாலும் சென்று அடைதற்கரியது. இம்மலையை உமாதேவி அஞ்சுமாறு இராவணன் பெயர்க்க முயன்றபோது. இறைவன் தன் கால்விரலால் அழுத்த மலையின் கீழ் அகப்பட்டுத் தன் பிழையை உணர்ந்து வழிபட்டு வரங்கள் பெற்றதும்; இங்கு இறைவனது திருக்கோலத்தைக் காண வேண்டி வந்த அப்பர் பெருமானின் கால்கள், கைகள், மார்பு இவைகள் தேயப்பெற்றுச் செயலற்றுக் கிடந்த நிலையில், இவரது உறுதிப்பாட்டை அறிந்து இறைவன் காட்சி தந்தருளி ஒரு திருக்குளத்தைக்காட்டி அதில் மூழ்கி, ஐயாற்றில் எழுந்தருளித் தன்கோலத்தைக் காணுமாறு திருவாய் மலர்ந்தருளப்பெற்றதும், திருஞானசம்பந்தரால் திருக்காளத்தியிலிருந்தே பாடப்பெற்றதும், சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமான் நாயனாரும் முறையே யானை, குதிரை இவைகளின் மீது வந்து கணநாதர்களாய் எழுந்தருளப்பெற்றதும், சேரமான்பெருமாள் நாயனாரால் ஆதியுலா பாடப்பெற்றதும், பிறவும், இத்தலத்தின் சிறப்புக்களாகும்.

இறைவன் திருப்பெயர் - பரமசிவன். இறைவி திருப்பெயர் - பார்வதி. தீர்த்தங்கள் - கங்கை முதலியன. இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டு, திருநாவுக்கரசர் பதிகங்கள் நான்கு, சுந்தரமூர்த்தி நாயனுர் பதிகம் ஒன்று ஆக ஏழு பதிகங்கள் இருக்கின்றன.

## 20 திருக் கருக்குடி (பக்கம் 95)

இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே மூன்றுமைல் தூரத்திலுள்ள கலயநல்லூர்க்கு (சாக்கோட்டைக்கு)த் தென்கிழக்கில் ஒருமைல்தூரத்தில் இருக்கிறது இது மருதாந்தநல்லூர் என்று வழங்கப்பெறுகின்றது. காவிரியின் தென்கரைந் தலங்களுள் ............?...ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர்–சற்குணநாதர். இவர் திருமேனி மணலால் ஆக்கப்பெற்றது. இறைவி திருப்பெயர்-சுரும்பார்குழல்அரிவை. இத்திருப்பெயரை ஞானசம்பந்தர் இவ்வூர்ப் பதிகம் மூன்றும் திருப்பாட்டில் எடுத்து ஆண்டிருக்கின்றுர். பிரமனும், இராமனும், சற்குணன் என்னும் அரசனும் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். ஒரு வணிகன் அறியாது தன் தாயாருடன் புணர்ந்த குற்றம் நீங்கப்பெற்ற பதி.

இவ்வூர்க் கோயிலில் திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராசதேவனின் இரண்டாமாண்டில் செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டு இருக்கின்றது. இக்கல்வெட்டில் சிவபெருமானின் திருப்பெயர் விழுமியநாயனுர் எனக் குறிக்கப்பெற்றுள்ளது. சென்னிமங்கலத்து விசுவேசுவரர்கோயிலின் தேவரடியாராகிய கரையேறவிட்டாள் திருநட்டப்பெருமாள் என்னும் அம்மையார் இத்திருக்கருக்குடி கோயிலில் திருவாதவூர் நாயனுரை எழுந்தருளுவித்து அவர்க்கு நாள்வழிபாட்டிற்கு நிவந்தம் அளித்ததை இக் கல்வெட்டுக் கூறுகின்றது. இவ்வூர் குலோத்துங்கசோழ வளநாட்டுத் திருநறையூர் நாட்டுக்கு உட்பட்டிருந்தது.

**See the Annual report on South Indian Epigraphy for the year ending 31st March 1927.**

## 21 திருக் கருகாவூர் (பக்கம் 192)

ஆதரவற்ற ஒரு பெண்ணிற்கு இத்தலத்து இறைவி மருத்துவம் பார்த்துக் கருவைக் காத்தபடியால் கருகாவூர் என்னும் பெயர் எய்திற்று என்பர். இது இக்காலம் திருக்களாவூர் என்று வழங்கப்பெறுகின்றது. இது தஞ்சாவூர்ச்சில்லாவில் பாவநாசம் ரயில்வே நிலயத்திற்குத் தெற்கே

நான்கு மைல் தூரத்தில் இருக்கிறது. ஜயங்கொண்டம் ரயில்வே நிலையத்திலிருந்தும் போகலாம். அங்கிருந்து தென்கிழக்கே அதன் தூரம் நான்கு மைல் ஆகும்.

தலப் பிள்ளையார் - கற்பகப் பிள்ளையார். இறைவர் திருப்பெயர் - முல்லைவனேசுவரர். மணலால் ஆக்கப்பெற்றிருக்கும் இறைவர் திருமேனியில் முல்லைக்கொடி சுற்றியிருக்கும் அடையாளம் இருப்பதால் இப்பெயர் பெற்றார்.

இறைவியின் பெயர் - (1) கர்ப்பரட்சகி. ஆதரவற்ற ஒரு பெண்ணிற்கு மருத்துவம் பார்த்துக் கருவைக்காத்து அருளியமையால், இப்பெயர் பெற்றார். (௨) கரும்பனையாள். தீர்த்தம் - பாற்குளம். தலமரம் - முல்லைக்கொடி.

இறைவர் திருமேனி மணலால் ஆக்கப்பெற்றது. சந்திரன் வழிபட்ட தலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

இவ்வூர்க் கோயிலில் மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், மூன்றாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன், இவர்கள் காலங்களில் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர், திருக்கருகாவூர் மகாதேவர், திருக்கருகாவூர் ஆழ்வார், திருமுல்லைவனமுடையமாதேவர் என்னும் பெயர்களால் கூறப்பெற்றுள்ளனர். இக்கோயில் கல்வெட்டுக்களில், மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மரின் கல்வெட்டு, இவ்வூரை, வடகரை பாம்பூர் நாட்டுத் தேவதானம் திருக்குடமூக்கில் பால் கருகாவூர் என்றும், முதலாம் இராசராச சோழனின் கல்வெட்டு நித்த விநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்துத் திருக்கருகாவூர் என்றும் குறிப்பிடுகின்றன. குடமூக்கு என்பது கும்பகோணமாகும். அதன்பால் இக்கருகாவூர் இருப்பதாக மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மன் கல்வெட்டுக் கூறுவதால், அக்காலம் சிறப்புடைய ஊரைச்சொல்லி அதன் பக்கத்தில் இருக்கும் ஊரைக் குறிப்பிடுவது மரபு என்று தெரிகின்றது. "ஒரு நொந்தா விளக்கினுக்கு நந்திபுரத்த வியாபாரி சாமுண்டன்மூர்த்தி கருகாவூர் நிலம் நான் விலைகொண்ட நிலம் இவ்வூர் உட்பலாற்றின் வடவாய் ஒரு முக்காணியும்" என்றும் இக்கோயிலிலுள்ள மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மரின் கல்வெட்டுப் பகுதியால், அக்காலம் இவ்வூர்க்கு அருகில் ஓடிய ஆறு உட்பலாறு (உப்பனாறு?) என்னும் பெயருடன் விளங்கிற்று என்பது புலனாகிறது. (இக்காலம் ஓடும் ஆறு வெட்டாறாகும்.) இக்கல்வெட்டுப் பகுதியில் குறிக்கப்பெற்ற நந்திபுரம் என்பது திருப்பட்டீச்சுரத்துக்கு

அண்மையில் உள்ள இராமநாதன் கோயிலாகும். இத்திருக்கருகாவூர்க் கோயில் கல்வெட்டுக்கள் அனைத்தும் இறைவர்க்குத் திருவமுதுக்கும், திரு நுந்தாவிளக்கினுக்கும் நிலம்விட்ட செய்திகளைக் குறிப்பிடுகின்றன. இவ்வூரில் சபை ஒன்று இருந்தது. அதற்குக் கருகாவூர்ச் சபை என்று பெயர். இக்கோயில் கல்வெட்டுக்களில் காணப்பெறும் காப்புரைகள் "இது ரக்ஷித்தார் ஸ்ரீபாதம் என்றலைமேல். இவை பன்மாஹேஸ்வரரும், பன்மாகேஸ்வரப் பெருமக்களும் ரக்ஷை." "ரக்ஷிப்பார் இவ்வூர் ஆயிரந் திருவடியுமிவர்கள் ஸ்ரீபாதத்தூளி என்றலைமேலன" என்பனவாகும்.

See the South Indian Inscription Volume III, Part III, Numbers 100, 102 and 110.

## 22 திருக் கலிக்காமூர் (பக்கம் 497)

இது அன்னப்பன்பேட்டை என்று வழங்குகிறது. சீகாழி ரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே ஒன்பது மைல் தூரத்திலுள்ள தென் திருமுல்லை வாயிலுக்குத் தென்மேற்கே மூன்றுமைல் தூரத்தில் இருக்கிறது. திரு வெண்காட்டிலிருந்தும் செல்லலாம். இது காவிரித் தென்கரைத் தலங் களுள்......?ஆவது ஆகும்.

இறைவர் பெயர் – சுந்தரேசர். இறைவி பெயர் – அழகம்மை. பராசரரால் பூசிக்கப்பெற்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கிறது.

## 23 திருக் கழிப்பாலை

இரண்டாம் திருமுறையிற் காண்க.

## 24 (மேலைத் திருக்)காட்டுப்பள்ளி (பக்கம் 129)

காட்டுப்பள்ளி என்னும் பெயர்களுள்ள பாடல்பெற்ற தலங்கள் இரண்டு இருக்கின்றன. அவற்றுள் ஒன்று காவிரியின் தென்கரையில் திருவெண்காட்டிற்கு அருகில் இருப்பது இது கீழைத் திருக்காட்டுப்பள்ளி என்னும் பெயர் பெற்றுள்ளது ஆதலின் அதற்கு மேற்கே பல மைல் தூரத்தில் காவிரியின் வடகரையில் இருக்கும் இது மேலைத் திருக்காட்டுப் பள்ளி என்னும் பெயர் பெற்றுள்ளது.

தஞ்சாவூர் – திருச்சி இருப்புப் பாதையில் பூதலூர் ரயில்வே நிலையத் திற்கு வடக்கே ஐந்து மைல் தூரத்திலிருக்கிறது. திருக்கண்டியூரி லிருந்தும், திருவையாற்றிலிருந்தும் இப்பதியை அடையலாம்.

இறைவரின் திருப்பெயர் - தீயாடியப்பர். இறைவியின் திருப்பெயர் - வார்கொண்ட முலையாள். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகம் ஒன்றும், ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

## 25 திருக்காளத்தி (பக்கம் 294)

இது ஸ்ரீ காளத்தி எனவும் கூறப்பெறும். சிலந்தி, பாம்பு, யானை இவை மூன்றும் வழிபட்டு வீடுபேறு அடைந்த தலம் ஆதல் பற்றி இப்பெயர் எய்திற்று என்பர். [ஸ்ரீ = சிலந்தி, காளம் = பாம்பு, அத்தி = யானை] பஞ்சபூத ஸ்தலங்களுள் * வாயுஸ்தலம். இறைவன் திருமுன்பு எரியும் பல திருவிளக்குகளில் ஒன்று காற்றினால் மோதப்பெற்றதுபோல் எப்பொழுதும் அசைந்து கொண்டிருப்பதே இதற்குச் சான்றாகக்காணலாம். தென் கயிலாயத் தலங்களுள் முதன்மை பெற்றது.

இறைவர் திருப்பெயர் - (1) திருக்காளத்திநாதர். (2) குடுமித்தேவர் - நாணன் என்னும் வேடனால், கண்ணப்பரிடம் கூறப்பெற்றபெயர். இறைவி திருப்பெயர் "ஞானப்பூங்கோதை. இப்பெயர் ஞானப்பூங் கோதையாள் பாகத்தான் காண்" என அப்பர் பெருமான் திருத்தாண்டகத்தில் வருவது காண்க. பிள்ளையார் - பாதாளப்பிள்ளையார். மரம் - கல்லால மரம். (விழுது இறங்காத ஆல மரமே கல் ஆலமரமாகும்.) தீர்த்தம் - (1) பொன்முகலி ஆறு. இது இவ்வூரில் வடக்கு நோக்கிச் செல்லும் சிறப்புடையது. (2) பிரம தீர்த்தம் (3) சரசுவதி தீர்த்தம். (4) சூரிய தீர்த்தம் முதலியன.

திருமால், பிரமதேவர், திருமகள், கலைமகள், திக்குப் பாலகர் முதலான தேவர்களும், அகத்தியர், வசிட்டர் முதலான முனிவர்களும், முசுகுந்தச் சக்கரவர்த்தி, நக்கீரர் முதலான பெரியோர்களும், வழிபட்டுப் பேறுபெற்ற தலம். அன்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கும் கண்ணப்ப நாயனார் வழிபட்டு இறைவனுடைய வலப்பக்கத்தில் நிற்கும் பெருஞ்சிறப்பு வாய்ந்த பதி. கண்ணப்பரது திருத்தொண்டைப்பற்றி "வாய் கலசமாக வழிபாடு செய்யும் வேடன் மலராகு நயனம், காய்கணையினாலிடந்து ஈசனடி கூடு காளத்தி மலையே" எனத் திருஞானசம்பந்தப் பெருமானும்,

* பஞ்ச பூதஸ்தலங்கள் ஆவன:- திருவாரூர் - பிருதிவி (நிலம்). திருவானைக்கா - அப்பு (நீர்). திருவண்ணாமலை - தேயு (தீ). திருக்காளத்தி - வாயு (காற்று). சிதம்பரம் - ஆகாசம் (இடைவெளி.)

M. S. M. இருப்புப் பாதையில் காளத்தி என்னும் ரயில்வே நிலையத்திற்கு வடகிழக்கே இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. தொண்டை நாட்டுத் தலங்களுள் ஒன்று.

"பொருட் பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய் குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ"

என வாதவூரடிகளும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். இத்தலத்திற்கு வீரை நகர் ஆனந்தக் கூத்தர் பாடிய திருக்காளத்திப் புராணம் ஒன்றும், கருணைப் பிரகாசர், சிவப்பிரகாசர், வேலப்ப தேசிகர் இவர்கள் மூவரும் சேர்ந்து பாடிய தலபுராணம் ஒன்றும், சேறைக்கவிராசர் பாடிய உலா ஒன்றும், நக்கீரதேவர் பாடிய கைலைபாதி காளத்திபாதி அந்தாதி ஒன்றும் ஆக நான்கு நூல்கள் இருக்கின்றன. இவைகளன்றி ஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டு, திருநாவுக்கரசு நாயனார் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.

இவ்வூர்ப் பாடல்பெற்ற கோயிலில் சோழமன்னர்களில் முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழதேவன், முதலாம் இராசாதிராச தேவன், இராசகேசரி வர்மனாகிய வீரராஜேந்திரன், முதற்குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசாதிராச தேவன், திரிபுவனச் சக்கரவர்த்தி வீரராசேந்திர சோழ தேவன், இவர்கள் காலங்களிலும், விசயநகர வேந்தர்களில், வீரப்பிரதாப ஹரிஹரராயர், வீரப்பிரதாப தேவராயர், வீரப்பிரதாப வீரகிருஷ்ண தேவ ராயர், வீரசதாசிவ மகாராயர் முதலானோர் காலங்களிலும், காகதீயவம் சத்துக் கணபதி காலங்களிலும், மற்றும், விசயகண்ட கோபால தேவன், ஆளும் திருக்காளத்தித் தேவனாகிய கண்ட கோபாலன் இவர்கள் காலங் களிலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கோயில் கல் வெட்டுக்களில் இறைவர் திருக்காளத்தி உடைய நாயனார், திருக்காளத்திச் சிவனார், ஆளுடையார் தென்கயிலாய முடையார் என்னும் பெயாகளாலும், விடங்கர் சோதி விடங்கர் என்னும் பெயராலும் கூறப்பெற்றுளளனர்.

திருவிழா:- திருக்காளத்தி உடையார்க்கு வைகாசியில் திருவிழா நடைபெற்று வந்தது. அவ்விழா முட்டாமல் நடைபெறுவதற்கு நரசிங்க காளத்தி தேவனான யாதவராசன் சயங்கொண்ட சோழமண்டலத்துத் திருவேங்கடக் கோட்டத்து, கருப்பற்று நாட்டு வெண்ணெய் நல்லூரைத் தட்டார் பாட்டம், தறிஇறை, வெட்டி, முட்டையாள், பட்டிக்காசு காணிக்கை, கன்மிப்பேறு, மற்றும் எப்பேர்ப்பட்ட வரிகளும் அகப்பட தேவதானமாக விட்டிருந்தான்.

இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சோதிலிங்கர், எட்டாந் திருநாளில் திருவீதிக்கு எழுந்தருளி, திருச்சாந்து கற்பூர வெள்ளைச் சாத்தித் திருவுலாப்புறம் செய்து, தோசை, திருக்கண்ணமுது இவைகளை அமுது செய்தருளுவது வழக்கம். அதன் பொருட்டுப் பொலிசையாக நூறு பணம் அளிக்கப்பெற்றிருந்தது. இக்கோயிலில் மாசித் திருவிழாவும் மிகச் சிறப்பாய் நடைபெற்று வந்தது. அவ்விழாவின் ஏழாம் நாளில் இமையோர்கள் நாயகர் திருவீதிக்கு எழுந்தருளி, திருக்கல்யாணம் பண்ணி, திருவுடல் தீர்த்து திருக்கோயில் வாசலில் பலிபீடத்தண்டையில் திருவாலத்தித் தட்டம் எடுத்த பிறகு அத்தேவர் தோசை அமுது செய்தருளுவது உண்டு, அதன்பொருட்டும் நிவந்தம் செய்யப்பெற்றிருந்தது.

**திருமடம்:-** திருக்காளத்தி உடையார் கோயிலில் மலைமேல் ஒரு மடம் இருந்தது. அது சசிகுல சளுக்கி வீரநரசிங்க தேவன் திருக்காளத்தி தேவனான யாதவராயனால் கட்டப்பெற்றது. அம்மடத்தில் மாகேஸ்வரருக்குச் சோறிட பெரும்பூண்டி நாட்டுப் பொன்னையன் பட்டு என்னும் ஊரின் நாற்பால் எல்லைக்கு உட்பட்ட நன்செய் புன்செய் நிலத்தை மேற்கூறப்பெற்ற வீரநரசிங்க தேவன் இராசராச தேவரின் 15-ஆம் ஆண்டில் கொடுத்திருந்தான்.

இதுவன்றித் **தியாகமேகன்மடம்** ஒன்று இருந்தது இதில் நாள் ஒன்றுக்கு முப்பது தேசாந்திரிகளுக்குச் சோறும், ஐந்து பிராமணர்களுக்கு அரிசியும் இடுவதற்கு உடலாக (மூலதனமாக) விசய கண்ட கோபால தேவரின் நான்காம் ஆண்டில் சயங்கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழவளநாட்டுப் பேரூர் நாட்டு மதுரைவாய் திருநல்லூழான் திருநட்டப்பெருமாள் தியாகமேகனன் நிவந்தம் அளித்திருந்தான்.

இக்கோயிலுக்கு வடக்குத் திருவீதியில் கூற்றுதைத்தான் சோமதேவர் மடம் என்று ஒன்று இருந்தது.

**திருநந்தவனம்:-** திருக்காளத்தி உடைய நாயனாரின் திருமலை அடிவாரத்தில் வீரநரசிங்க தேவன் திருநந்தவனம் என்னும் பெயருள்ள நந்தவனம் இருந்தது. அது சசிகுலசளுக்கி வீரநரசிங்க தேவனான யாதவராயனால் ஏற்படுத்தப்பட்டது. அதன் பொருட்டு வீரநரசிங்க தேவன் ஆற்றூர் நாட்டுக்கோன்பாக்கத்திலும், திருக்காளத்திப் புத்தூரிலும் நெல்வாயிலிலும், தனக்குக் கிடைக்கும் நன்செய் நிலத்தில் பத்தில் ஒன்றும் வந்த பாடிகாவல் கடமை, பொன் ஆயம், நெல்லாயம் இவைகளை உடலாக* விட்டிருந்தான். ஆலால சுந்தர நந்தவனம் என்று ஒன்று இருந்ததை முதற்குலோத்துங்க சோழனின் 49-ஆம் ஆண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. ஒருகமுகம் தோட்டத்திற்கு கண்ணப்ப தேவர் பெயர் வைக்கப்பெற்றிருந்தது.

**நூற்றுக்கால் மண்டபமும், பெரியகோபுரமும்:-** இக்கோயிலி லுள்ள நூற்றுக்கால் மண்டபத்தையும், பெரியகோபுரத்தையும் கட்டியவன் விசயநகர வேந்தனுகிய வீரப்பிரதாப கிருஷ்ணதேவராயர் ஆவர். இதை இக்கோயிலில் சகம் 1438-இல் செதுக்கப்பட்ட தெலுங்குக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

**கண்ணப்பர்கோயில்:-** இக்கோயில் மண்டபமும் மண்டபத்தைச் சுற்றிய தாழ்வாரமும் ஆடவல்லான் கங்கை கொண்டானுகிய இருங் கோளன் தாயாராகிய புத்தங்கையாரால் கட்டப்பெற்றது.

**இவ்வூரிலுள்ள வேறு கோயில்:-** இவ்வூரில் திருமணிக்கெங்கை யுடைய வேறு கோயில் ஒன்று உண்டு. திரிபுவனச் சக்கரவர்த்தி வீரராசேந்திர சோழதேவரின் பதினெனன்ரும் ஆண்டில், சயங்கொண்ட 'சோழமண்டலத்துக் களத்தூர் கோட்டத்து வல்லம் நாட்டுப்' பெருந் தண்டலத்துக்கோறுமான அமுதாழ்வான் மங்கை நாயகன் மழவ்ராயனுல் அக்கற்றளியும், திருமண்டபமும், சோபானமும் கட்டப்பெற்றதாகும்.

இக்கோயிலில் தனி இடத்தில் சசிகுலசளுக்கி தனிநின்று வென்ரு னுகிய வீரநரசிம்ம தேவனுகியயாதவராசன் மல்லிகார்ச்சுரைர எழுந்தருளு வித்திருந்தான்.

இவ்வூரைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு:— இவ்வூர் சயங் கொண்ட சோழமண்டலத்து, திருவேங்கடக் கோட்டத்து, ஆற்றூர் நாட்டுத் திருக்காளத்தி என இக்கோயில் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெற்றுள்ளது. திருக்காளத்தி முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் காளத்தியாகிய மும்முடிச் சோழபுரம் என்றும் வழங்கப்பெற்றிருந்தது.

**பிறசெய்திகள்:-** முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இக்கோயிலில் கிருத்திகைத்திப விழாவைப்பற்றிக் கூறப்பெற்றுள்ளது. அதற்குக் கங்கைகொண்ட சோழ மிலாடுடையான் நிவந்தம் அளித்திருந் தான். கண்ணப்பர் பிறந்த நாடு பொத்தப்பிநாடு என்று சேக்கிழார் கூறியுள்ளார். அப்பொத்தப்பி நாடு இவ்வூர்க் கல்வெட்டிலும் குறிக்கப் பெற்றுள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாட்டுத் தொகையில் புரிசை நாட்டுப்புரிசை எனக் குறிப்பிட்டுள்ளார். அப்புரிசை நாடு மணவில் கோட்டத்தில் உள்ளது என்பதையும் இக்கோயில் கல்வெட்டுத் தெரிவிக் கின்றது. அளவு கருவிக்குக் காளத்தியுடையான் மரக்கால் என்றும், ஒரு தலைவனுக்குத் திருக்காளத்தி தேவன் என்றும், திருவிளக்குக் குடிகளில் ஒருவனுக்கு மன்ருடி காரிசாத்தன் திருக்காளத்தி கோன் என்றும் பெயர்கள் வைக்கப்பெற்றிருந்தன. மூன்றும் பிராகாரத்தில் உள்ள மண்டபம் சின்னையா மண்டபம் எனப் பெயர் பெற்றுள்ளது.

திருநுந்தாவிளக்குகளுக்கும், திருமந்திர போனகபுறத்திற்கும் நிபந்தங்கள் பகுதியாக அளிக்கப்பெற்றுள்ளன. ஒரு நுந்தா விளக்கிற்கு விடப்பெறும் சாவா மூவாப்பசு 32-ஆகும். ஆடு ஆயின் 96 ஆகும். 96-ஆடு விடுபவர் பொலிகிடா இரண்டும், பொலி மொத்தை இரண்டும் விடுவது வழக்கம்.

நுந்தா விளக்கேயன்றி சந்தி விளக்கும் வைப்பதுண்டு. ஒரு சந்தி விளக்குக்கு ஐந்து நற்பழங்காசு அளிப்பதுண்டு. 32-பசுமாடு விடுபவர் ரிஷபம் ஒன்றையும் விடுவர்,

**See the Annual report on South Indian Epigraply for the years 1892 Numbers 195-202. 1892 Numbers 72-76. Numbea 166-203- 1904 Numbers 276-303. 1922 Numbers 82-181. 1924 Numbers 150-180 and the South Indian Inscription Valumes IV Numbers 648-650. Volumes VIII Numbers 377-331. Volumes VIII Numbers 463-502**

## 26 திருக் கானப்பேர் (பக்கம் 117)

இது காளையார் கோயில் என்று வழங்கப்பெற்று வருகிறது. சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான்பெருமாள் நாயனாரும் திருச் சுழியலில் எழுந்தருளியிருந்தபோது கானப் பேருடைய இறைவர், காளை வடிவங் கொண்டு, கையிற் பொற்செண்டும், திருமுடியில் சுழியமும் உடையவராய் இரவில் சுந்தரமூர்த்தி நாயனாரின் கனவில் தோன்றி யாம் இருப்பது கானப்பேர் என்று அருளிச்செய்ய, நாயனார் உணர்ந்து, "கண்டு தொழப்பெறுவது என்று கொலோ அடியேன் கார்வயல் சூழ் கானப்பேர் உறை காளையையே" என்னும் ஈற்றடியையுடைய பதிகத்தைப்பாடிக்கொண்டு வந்து வணங்கிய பதியாதல் பற்றி, இப்பெயர் (காளையார்கோயில்) பெற்றது.

மானாமதுரை – திருச்சி இருப்புப்பாதையில் சிவகெங்கை ரயில்வே நிலையத்திற்குப் பன்னிரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. பாண்டி நாட்டுப் பாடல்பெற்ற பதிகளுள் பத்தாவது பதி.

இறைவர் திருப்பெயர் – காளையீசுரர். இறைவி திருப்பெயர் – சொர்ணவல்லி. தீர்த்தம் – யானைமடு. காட்டானை வழிபட்ட தலம். இச்செய்தியை,

"மானமா மடப்பிடி வன்கையாலலகிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்"

என்னும் சம்பந்தப்பெருமானின், இவ்வூர்ப்பதிக அடிகளால் விளங்கும். இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் சுந்தரர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

இவ்வூர்க் கோயிலில், பாண்டிய மன்னர்களில் ஜடாவர்மனாகிய திரிபுனச்சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவர்; மாறவர்மன், திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவன், மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர தேவர், இவர்கள் காலங்களிலும்; வாண அரசர்களில் சுந்தரத் தோளுடையான் மாவலி வாணராயர் காலங்களிலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்களில் சிவபெருமான் திருக்கானப்பேருடைய நாயனார், திருக் கானப்பேருடைய நாயனார் காளையர் சோமநாதர் எனவும், அம்மன் திருக்காமகோட்டத்து ஆளுடைய நாச்சியார் என்றும் கூறப்பெற்றுள்ளனர். கோமாறபர்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவரின் பதினோன்காம் ஆண்டுக் கல்வெட்டு இவ்வூரில் ஆலாலசுந்தரன் திருமடம் ஒன்று இருந்ததைக் குறிப்பிடுகின்றது. இக்கோயிலில் உள்ள திருவீதி நாச்சியார் விக்கிரம பாண்டிய தேவரால் செய்து வைக்கப்பெற்றவராவர். இவ்விக்கிரமபாண்டிய தேவர் திருக்காம கோட்டத்து ஆளுடைய நாச்சி யார்க்கும், திருவீதி நாச்சியார்க்கும், அமுதுபடி, சாத்துப்படி, திருப்பரி சட்டம் இவைகளுக்கும், விஷுவயன சங்கிரமம், திருக்கார்த்திகை இவைகளும், நாச்சியார்கோயில் திருப்பணிக்கும் நிவந்தங்கள் அளித் திருந்தான். மாவலிவாணதிராயன் தன்பேரால் சுந்தரத்தோளுடையான் சந்தி ஒன்றை ஏற்படுத்தியிருந்தான். இவன் காலத்தில்தான் இறைவர் திருக்கானப்பேருடைய நாயனார் காளையர் சோமநாதர் எனக் கூறப் பெற்றுள்ளனர். இக்கோயிலிலுள்ள மேற்குத் திக்குமேல் ஸ்ரீகோமாற பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரதேவரின் 41-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் "தளியிலார் நக்கன் செய்யாளான காலிங்கராயத் தலைக்கோலிக்கு இறையிலி பிடிபாடுசெய்து கொடுத்த பரிசாவது" என்னும் தொடர் காணப்படுகிறது. இதில் தளியிலார் என்பவர் தேவரடியார் ஆவர். அவர்கள் தளிச்சேரிப் பெண்டுகள் எனவும் வழங்கப்பெறுவர். அவர் பெயர் முன்கொடுக்கப் பெற்ற நக்கன் என்னும் சொல்லால் அவர் சிவப்பணிக்கு உரியவர் என்பதும், தலைக்கோலி என்ற பட்டம் இருப்பதால் ஆடல் பாடலில் சிறந்தவர் என்பதும் பெறப்படுகின்றன. தலைக்கோல்பட்டம் அளிக்கப் பெற்றிருப்பதைச் சிலப்பதிகாரத்தாலும் அறியலாம்.

இவ்வூர் "திருக்கானப்பேர்க் கூற்றத்துத் திருக்கானப்பேர் எனக் குறிக்கப்பெற்றிருப்பதால், இது அக்காலம் ஒரு கூற்றத்தின் தலைநகராய் இருந்த செய்தி அறியக்கிடக்கின்றது,

See the Annual reports on South Indian Epigraphy for the year 1902, Numbers 575-587 and South Indian Inscription Volume VIII Numbers 166-184.

## 27 திருக்குடமூக்கு (பக்கம் 245)

இது கும்பகோணம் என்று வழங்கப்பெறுகின்றது. ஒரு பிரளய காலத்தில் எல்லா உயிர்களையும் ஒரு சேரவைத்த குடத்தின் மூக்கு இருந்த இடமாதலின் இப்பெயர் பெற்றது என்பர்.

கும்பகோணம் ரயில்வே நிலையத்திற்கு மேற்கே ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. இறைவர் திருப்பெயர் - கும்பேசர். இறைவி திருப்பெயர் - மங்களாம்பிகை. தீர்த்தம் - மகாமகத்தீர்த்தம். தம்மிடத்து மூழ்குவோருடைய பாவங்களை எல்லாம் போக்கவல்ல கங்கை முதலிய ஏழு பெருந்தீர்த்த மாதாக்களும் தங்கள் தங்கள் பாவங்களைப்போக்கிக் கொள்ளும் பொருட்டு இதில் வந்து நீராடும் பெருஞ்சிறப்புடையது. இது பற்றி, "பூமருவு கங்கை முதல் புனிதமாம் பெருந்தீர்த்தம் மாமகந்தான் ஆடுதற்கு வந்து வழிபடுங்கோயில்" எனச் சேக்கிழார் கூறியிருத்தலுங் காண்க. திருமால் பூசித்துச் சார்ங்கமும் சக்கரமும் பெற்றனர். கும்பேசுவரர்க்குச் சித்திரை மாதத்தில் ஏழூர்ப் பெருந்திருவிழா நடைபெறுகின்றது. ஏழூர்களாவன:— கும்பகோணம், கலயநல்லூர், வலஞ்சுழி, தாராசுரம், சுவாமிமலை, கொட்டையூர்க் கோடீச்சுரம், மேலைக்காவிரி என்பன. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன. திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இத்தலத்திற்குப் புராணமும், மங்களாம்பிகைமீது பிள்ளைத்தமிழும் பாடியுள்ளனர். அவைகள் அச்சில் வெளிவந்துள்ளன.

சகம் 1476 இல் அதாவது கி. பி. 1554-இல் மகாமண்டலேஸ்வரன் குருராஜருத்திர தேவசோழ மகாராஜா, ஆதிகும்பேஸ்வரருக்குத் திருவமுதுக்கும், பிராமணர்களுக்கு அன்னம் அளிக்கவும், வயலூர் இளங்கட்டளைக் கிராமம் என்னும் இரு ஊர்களைக் கொடுத்துள்ளான். தஞ்சை நாயக்க மன்னரில் சேவப்ப நாயக்க ஐயன் காலத்தில், திருமலைராசபுரத்துப் பிராமணர்கள், தாங்கள் வாய்க்கால் ஒன்றை வெட்டிக்கொள்வதின் பொருட்டு, திருவாலந்துறை புத்தர் கோயிலுக்கு உரிய நிலத்தைப் பயன் படுத்திக்கொண்டதற்கு, அப்புத்தர் கோயிலுக்கு வேறு நிலம் விட்டதை உண

## 28 திரு (வட)குரங்காடுதுறை (பக்கம் 429)

குரங்கினால் பூசிக்கப்பெற்று காவிரிக்கு வடகரையில் இருப்பதால், இது வடகுரங்காடுதுறை என்றும் பெயர் பெற்றது. இது கும்பகோணத்திலிருந்து திருவையாற்றிற்குப் போகும் பெருவழியில் (Road) 15-ஆவது மைலில் இருக்கிறது. திருவையாற்றிலிருந்து வந்தால் கிழக்கே ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர் - அழகுசடைமுடிநாதர். இறைவியின் திருப்பெயர் - அழகுசடைமுடியம்மை. தீர்த்தம் - காவிரி.

வாலி வழிபட்டுப்பேறுபெற்ற தலம். இச்செய்தி "கோலமா மலரொடு தூபமும் சாந்தமுங் கொண்டு போற்றி வாலியார் வழிபடப் பொருந்தினர்" என்னும் இத்தலப்பதிகச் செய்யுள் அடிகளால் விளங்கும். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கிறது.

இவ்வூர்க் கோயிலில் சோழமன்னர்களில் கோப்பரகேசரி வர்மன், பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி வர்மன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், மூன்றாங்குலோத்துங்க சோழன் இவர்கள் காலங்களிலும், பாண்டியரில் கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி விக்கிரமபாண்டிய தேவன் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

பரகேசரி வர்மர், பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி வர்மர் இவர்கள் காலங்களின் கல்வெட்டுக்கள் இவ்வூரை வடகரை, மிறைக் கூற்றத்து எயினனூர்த் திருக்குரங்காடுதுறை என்றும், முதலாம் இராசராசன் கல்வெட்டு, வடகரை விறைக்கூற்றத்துத் திருக்குரங்காடுதுறை என்றும், மூன்றாங்குலோத்துங்க சோழன் காலத்துக்கல்வெட்டு, வடகரை விக்கிரம சோழவளநாட்டு மிறைக்கூற்றத்துத் திருக்குரங்காடு துறை என்றும் கூறுகின்றன

இறைவர், திருக்குரங்காடுதுறை ஆழ்வார், திருக்குரங்காடுதுறை மகாதேவர் என்னும் பெயர்களால் கூறப்பெற்றுள்ளனர். இக்கோயிலில் மூன்றாங்குலோத்துங்கசோழன் காலத்தில் விஸ்வேசுரை எழுந்தருளுவித்து அவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு உடலாக விக்கிரமசோழவள நாட்டு, அண்டாட்டுக் கூற்றத்து இன்னம்பரான சோழகேரளநல்லூரில் விஸ்வேஸ்வரமயக்கல் என்று பேர் கூவப்பெற்ற மூன்றுவேலி நிலத்தை அளித்தவன் ஜெயசிங்க குலகாலவளநாட்டு மீசெங்கிளி நாட்டு ஆலங்குடையான் வேளான் பொன்னர் மேனியனான அனபாய விழுப்பரையன்

இத்திருக்கோயிலின் திருநடை மாளிகைத் திருப்பணி எழுபத் தொன்பது வளநாட்டுப் பெரிய நாட்டாரும், பதினெண் விஷயத்தாரும் வரி வசூலித்துக்கட்டியதாகும்.

## 29 திருக் குருகாவூர் வெள்ளடை (பக்கம் 596)

ஊரின் பெயர் குருகாவூர். இங்குள்ள கோயிலின்பெயர் வெள்ளடை. திருக்கடாவூர் என்று வழங்கப்பெறுகின்றது. சீகாழிக்குக் கிழக்கே தென் திருமுல்லைவாயிலுக்குப் போகும் பெருவழியில் மூன்றாவது மைலில் தெற்கே திரும்பினால் அரைமைல் தூரத்தில் இருக்கிறது. காவிரித் .........தலங்களுள்......?ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் - வெள்ளடைநாதர். இறைவி திருப்பெயர் - காவியங்கண்ணி. இத்திருப்பெயரை ஞானசம்பந்தப் பெருந்தகையார் "காவியங்கண்ணி மடவாளொடுங் காட்டிடைத் தீயகலேந்தி நின்றாடுதிர்" என இவ்வூர்ப் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளனர்.

தீர்த்தம் - பால்கிணறு. இது திருக்கோயிலுக்கு வெளியே இருக் கிறது. தை அமாவாசையில், இறைவர் தீர்த்தங்கொடுக்கும் சமயத்தில் இக்கிணற்று நீர் பால் நிறமாக மாறும் அதிசயம் பொருந்தியது.

சுந்தரமூர்த்தி நாயனார் தொண்டர் கூட்டத்துடன், சீகாழியிலிருந்து, இவ் ஊர்க்கு எழுந்தருளுகையில், நீர்வேட்கையும், பசியும் அவரை வருத்திற்று. இறைவர் அந்தணராய் அருள்வடிவங்கொண்டு வழியில் தண்ணீர்ப்பந்தல் ஏற்படுத்தி அவர்களுக்குத் தண்ணீரும் கட்டமுதும் அளித்தார். சுந்தர மூர்த்தி நாயனார் உண்டு உறங்குகையில், இறைவர் பந்தலோடு மறைந் தருளினார். சுந்தரமூர்த்தி நாயனார் தூக்கத்தினின்று எழுந்து, "இத்தனையாமாற்றை யறிந்திலேன்" எனத் தொடங்கும் பதிகம்பாடி கோயிலுக்குச்சென்று இறைவனை வழிபட்டார். இதற்கு ஏற்பப் "பாடுவார் பசி தீர்ப்பாய்" என்னும் குறிப்பும் இவ்வூர்ப் பதிகத்தில் காணப்பெறு கின்றது. தொண்டர்களுக்கு அமுது ஊட்டிய இடம் 'வரிசைப்பற்று' என்னும் பெயரால் வழங்கப்பெறுகின்றது. கட்டமுது அளித்தருளிய விழா ஒவ்வொரு ஆண்டும் சித்திரைப் பௌர்ணமியில் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றது. இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று, ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

இவ்வூர்க்கோயிலில், முதலாம் இராசேந்திர சோழன், முதற்குலோத்துங்கன், விக்கிரம சோழன், பரகேசரி வர்மராகிய குலோத்துங்க சோழன் மதுரையும் ஈழமும் கொண்டருளின இராசகேசரிவர்மனாகிய திரிபுவன சக்கரவர்த்தி ராஜாதிராஜ தேவன் இவர்களால் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கல்வெட்டுக்களில் இறைவர், திருக்கருகாவூர் திருவெள்ளடை மகாதேவர், திருக்குருகாவூர் திருவெள்ளடை ஆண்டார், திருக்குருகாவூர் வெள்ளடையப்பர் எனக் கூறப்பெற்றுள்ளனர்.

**எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனியும் பிரதிமங்களும்:-** இத்திருக்கோயிலில் சந்திரசேகர தேவரை எழுந்தருளுவித்து, அவர்க்கு நாள் வழிபாட்டிற்கு நிபந்தம் அளித்தவர், மணிகொண்ட சோழப் பட்டணத்து, சாத்தன்மண்டை ஆவர், இது நிகழ்ந்தது சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவரின் பதினைந்தாம் ஆண்டாகும். இக்கோயிலில் மூவர் முதலிகளைப் பிராகாரத்தில் எழுந்தருளுவிக்கப்பெற்ற காலம் குலோத்துங்கசோழ தேவரின் பதின்மூன்றும் ஆண்டாகும்.

**திருமடம்:-** இவ்வூரில் திருச்சிற்றம்பலமுடையான் மடம் என்னும் பெயருடைய மடமொன்றிருந்தது. அதில் மாகேஸ்வரர்களுக்கும், அபூர்விகளுக்கும், உணவளிக்கும்பொருட்டு குலோத்துங்க சோழவள நாட்டு வேளாநாட்டுப் பிரம்பூருடையான் திருச்சிற்றம்பல முடையானை விழுப்பரையனால் நிலம் அளிக்கப்பட்டுள்ளது. இச்செய்தி பரகேசரி வர்மனாகிய விக்கிரமசோழனின் ஐந்தாம் ஆண்டுக்கல்வெட்டில் கூறப் பெற்றுள்ளது.

**இவ்வூரைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு:-** இவ்வூர் ராஜாதிராஜ வளநாட்டுத் திருவாலிநாட்டுக் குருகாவூர் எனக்கூறப் பெற்றுள்ளது. இத்திருவாலிநாடு, மதுரையும் ஈழமும் கொண்டருளிய ராஜகேசரிவர்மனாகிய திரிபுவனச் சக்கிரவர்த்தி காலத்தில் எதிரிலி சோழ சதுர்வேதிமங்கலம் என்னும் பெயரையும் பெற்றிருந்தது.

**பிறசெய்தி;-** இக்கோயிலிலுள்ள ஒரு பிரதிமத்தின்கீழ் 'வெண்ணையிலுடையான் ஈழத்தங்கிள்ளை ஆரூரன்' என்னும் பெயர் தீட்டப் பெற்றுள்ளது.

**See the Annual report on South Indian Epigraphy for the year 1918. Numbers 424 to 441.**

## 30 திருக்கொள்ளம்பூதூர் (பக்கம் 33)

இது திருக்கொள்ளம்பூதூர் என்று வழங்கப்படுகின்றது. திருஞான சம்பந்தப்பெருந்தகையார் தமது அடியார் கூட்டத்துடனே, முள்ளி வாய்க்கரையை அடைந்த பொழுது, ஆறு பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. ஓடக்காரர்கள் ஓடத்தை விடாமல் கட்டிவிட்டனர். சம்பந்தர் எதிரில் தோன்றும் கொள்ளம்பூதூரை வழிபட ஆர்வங் கொண்டிருந்தமையால் ஓடத்தை அவிழ்த்து அடியார்களை ஏறச்செய்து, தாமும் ஏறி, 'கொட்டமேகமழும்' எனத் தொடங்கும் பதிகத்தைப்பாட ஓடம் அக்கரையைச் சென்று அடைய ஞானசம்பந்தரும் அடியார்களும் வழிபட்ட தலம். ஒவ்வொரு ஆண்டிலும் ஐப்பசி மாதத்தில் இவ்விழா நடத்தப்பெற்று வருகின்றது.

இது தஞ்சாவூர் – திருவாரூர் இருப்புப்பாதையில் இருக்கும் நீடா மங்கலம் ரயில்வே நிலையத்திற்கு வடகிழக்கே ஆறுமைல் தூரத்தில் வெட்டாற்றின் வடகரையில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர் – வில்வவனேசுரர். இறைவியின் திருப் பெயர்-சௌந்தராம்பிகை. இதற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

இவ்வூர்க் கோயிலில் மூன்றுங்குலோத்துங்க சோழன், மூன்றும் இராசராச சோழன் இவர்கள் காலங்களில் ஏற்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருக்கொள்ளம் பூதூருடையார் இறைவியார் அழகிய நாச்சியார் என்னும் பெயர்களால் கூறப்பெற்றுள்ளனர்.

இக்கோயிலில் குளங்கண்ட மகாதேவர், இவரது நாச்சியார் நீரளித்த மென்முலையம்மை; ஆட்கொண்ட நாயகதேவர் இவரது நாச்சியார்; அவிமுத்தீஸ்வரமுடையார், இவரது நாச்சியார்; இவர்களுக்கு வழிபாட்டிற்கு பல ஊர்களில் நிலங்கள் அளிக்கப்பட்டுள்ளன. மேற்குறித்த இத்திருமேனிகளில் நீரளித்தமென்முலை நாச்சியாரை இக்கோயிலில் எழுந்தருளுவித்தவன் பெருமூர் உடையான் சங்கரனுகிய அமரக்கோன் ஆவன்.

இக்கோயிலில் எழுந்தருளுவிக்கப்பெற்ற திருநீலகண்டத்துப் பாண ஞர்க்கு வழிபாட்டிற்கு நிலம் அளிக்கப்பெற்ற செய்தியை மூன்றுங் குலோத்துங்க சோழன் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இவ்வூர் அருமொழித்தேவ வளநாட்டுச் செல்லூர்க் கூற்றத்திற்கு உட்பட்டிருந்தது.

அம்மன் பெயர் வரும் கல்வெட்டுப் பகுதி:- திருபுவன வீர் தேவர்க்கு யாண்டு ௩௰ (30) சயங்கொண்டசோழமண்டலத்துக் காட்டூர்க் கோட்டத்து, காக்கலூர் நாட்டு பொத்தூர் மாம்பாக்கிழான் அரையன் தில்லைநாயகனான சிங்களராயன், அருமொழிதேவ வளநாட்டுச் செற்றூர்க் கூற்றத்து உடையார் திருக்கொள்ளம்பூதூர் உடையார்க்கு நான் வைத்த திருநுந்தாவிளக்கு ஒன்றும், இக்கோயில் திருக்காமக்கோட்டமுடைய அழகிய நாச்சியார்க்கு வைத்த திருநுந்தாவிளக்கு ஒன்றும் ஆக விளக்கு இரண்டும்'' .........என்பதாகும்.

See the Annual report on South Indian Eprgraphy for the year 1899 Numbers 1-2. 1917 Numbers 250-255 and the south Indian Inscription volume VI Numbers 436-437. (S. I. I. vol VI No. 437).

## 31 திருக் கொள்ளிக்காடு (பக்கம் 75)

அக்கினி வழிபட்ட தலமாதலால் இப்பெயர்பெற்றது. (கொள்ளி–அக்கினி) திருவாரூர்க்குத் தெற்கிலுள்ள திருநெல்லிக்காவிற்குத் தென்மேற்கே இரண்டரைமைல் தூரத்தில் இருக்கிறது. காவிரித் தென்கரைத் தலங்களுள் 115 ஆவது.

இறைவர் திருப்பெயர் - அக்கினியீச்சுரர். இறைவி திருப்பெயர் – பஞ்சின்மெல்லடியாள், ''பஞ்சுதோய் மெல்லடிப் பாவையாளொடு மஞ்சுதோய் கயிலையுண்மகிழ்வர்'' என்னும் இவ்வூர்ப் பதிக அடியில் இப்பெயர் குறிக்கப்பெற்றுள்ளது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கிறது.

## 32 திருக் கோகரணம் (பக்கம் 363)

இராவணன் இலங்கையில் எழுந்தருளுவித்தற் பொருட்டு இலிங்கம் ஒன்றை இறைவனிடம் பெற்றுச் செல்கையில், தேவர்களின் வேண்டுகோளின்படி ஓர் உபாயத்தால் பிள்ளையார், அதை அவனிடமிருந்து வாங்கி, இப்பதியில் எழுந்தருளுவித்தார். இராவணன் தன்னால் கூடிய வரையில் அந்த இலிங்கத்தைப் பெயர்த்தெடுக்க முயன்று இழுத்த பொழுது அது பசுவின்காதுபோல் குழைந்தமையால் இப்பெயர் பெற்றது என்பர்.

இது பம்பாய் இராசதானியில் வடகன்னடம் ஜில்லாவில் உள்ளது. மங்களூரிலிருந்து கடல் வழியாகவும் நிலவழியாகவும் செல்லலாம். மங்களூரிலிருந்து சென்றால், மங்களூரிலிருந்து உடுப்பிக்குச் சென்று, அங்கிருந்து 60-மைல் பெருஞ்சாலை (Road) வழியாகப் போகவேண்டும். மங்களூரிலிருந்து கப்பல் ஏறினால் குண்டாபூர், ஹனோவர், கும்டா, வழியாய்ச்சென்று தாட்ரி என்னும் ஊரில் இறங்கி நான்கு மைல் சென்றால் இவ்வூரையடையலாம். துளுவநாட்டுத்தலம் இது ஒன்றேயாகும்.

இறைவர் திருப்பெயர் - மகாபலநாதர். இறைவி திருப்பெயர் - கோகர்ணநாயகி. தீர்த்தம் - கோடி தீர்த்தம்.

சிவராத்திரி நாளில் இங்குக் கோடிதீர்த்தத்தில் நீராடி, வழிபாடு செய்தல் மிகச்சிறந்தது என்று சிவராத்திரிபுராணம் செப்புகின்றது. இதற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

## 33 திருக் கோட்டாறு (பக்கம் 59)

இரண்டாம் திருமுறையில் காண்க.

## 34 திருக் கோணமலை (பக்கம் 592)

இது ஈழநாட்டுத் தலங்கள் இரண்டனுள் ஒன்று. இலங்கைத்தீவில் யாழ்ப்பாணத்திற்குத் தென்கிழக்கில் இருக்கிறது. முன்னொரு காலத்தில், வாயுவுக்கும், சேடனுக்கும் யார் வல்லமையுடையவர் என்னும் வாக்குவாதம் ஏற்பட்டது. அதுபொழுது சேடன் மேருமலையைத் தன் உடலினால் பிணித்து நின்றான். வாயு தன்பலத்தினால் மேருச்சிகரங்களுள் மூன்றைப் பெயர்த்து எறிந்தான். அவைகள் திருக்காளத்தியிலும், திருச்சிராப்பள்ளியிலும், இங்கும் (திருக்கோணமலையிலும்) விழுந்தன. அங்ஙனம் வடகயிலைப்பகுதியாகிய மேருமலையின் சிகரங்கள் விழுந்த காரணத்தால் இவை தென்கயிலாயங்கள் எனப்பெற்றன. இச்செய்தியைச் செவ்வந்திப் புராணமும் குறிப்பிடுகின்றது. எனவே இத்திருக்கோணமலை தென் கயிலாயம் எனவும் பெயர் பெறும்.

இறைவர் திருப்பெயர் - கோணேசுவரர். இறைவி திருப்பெயர் - மாதுமையாள்.

திருஞானசம்பந்தரும், சுந்தரமூர்த்தி நாயனாரும், இராமேச்சுரத்திலிருந்தே பாடியுள்ளனர். தேவேந்திரன் வழிபட்ட தலம். இதற்குத்

திருஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று இருக்கிறது. இத்தலத்திற்கு ஈழநாட்டரசர் சிங்கைஜகராஜகேசரியார் இயற்றிய தட்சிண கைலாச புராணம் அச்சில் வெளிவந்துள்ளது.

## 35 திருக் கோயில் (பக்கர் 1)

கோயில் - என்பது எல்லா ஆலயத்திற்கும் பொதுப்பெயர். அதுவே சிறப்புப் பெயராகக் குறிப்பிட்ட ஒரு தலத்தைக் குறிக்குமானால் அது அதனுடைய மிக்க உயர்வைக்குறிக்கும். அங்ஙனம் உயர்வுபற்றிய காரணத்தால் இத்தலம் கோயில் என்னும் பெயர்பெற்றது.

இத்தலத்திற்கு வழங்கும் வேறு பெயர்கள்:- (1) பெரும்பற்றப் புலியூர் - பெரும்பற்றினால் புலிப்பாதன் பூசித்த ஊராதலால் இப்பெயர் பெற்றது. இது மரூஉ மொழி. மலையமான்நாடு மலாடு என்பதுபோல.

(2) சிதம்பரம் - (சித் + அம்பரம்) சித் = அறிவு, அம்பரம் = வெட்ட வெளி. ஞானகாசம் ஆதலால் இப்பெயர்பெற்றது.

(3) தில்லைவனம்:- தில்லை என்னும் மரமடர்ந்த காடாயிருந்ததால் இப்பெயர் பெற்றது. இவைகளன்றி, வியாக்கிரபுரம், புண்டரீகபுரம், பூலோக கைலாசம் என்னும் வேறு பெயர்களும் உண்டு.

கூடலூரிலிருந்து, மாயூரம் செல்லும் இருப்புப்பாதையில் இருக்கும் சிதம்பரமென்னும் இரயில்வே நிலையத்தில் இறங்கி வடமேற்கே ஒருமைல் சென்றால் இக்கோயிலை அடையலாம். இது காவிரியாற்றின் வடகரையி லுள்ள தலங்களுள் முதன்மைபெற்றது.

திருமூலட்டானக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருப் பெயர் - மூலட்டானேசுவரர். இறைவியின் திருப்பெயர் - உமையம்மை. சிற்றம்பலத்தில் ஆனந்தத்தாண்டவம்புரியும் இறைவரின் திருப்பெயர் - நடராசர், கூத்தப்பெருமான்.

இங்கு நடராசப்பெருமானை சகளம் என்றும், ரகசியதானத்தை நிஷ்களம் என்றும், ஸ்படிகலிங்கத்தை சகளநிகளன் எனவும் கூறுவர்.

இறைவியின் திருப்பெயர் - சிவகாமசுந்தரியார். இவ்வம்மை யார்க்குத் தனிக்கோயில் உண்டு. அது மூன்றும் பிராகாரத்தில் நூற்றுக் கால் மண்டபத்திற்கு வடக்கில் இருக்கிறது.

மரம் — ஆல். தீர்த்தம் — சிவகங்கை. இது மூன்றாம் பிராகாரத்தில் சிவகாமசுந்தரி அம்மன் கோயிலுக்கு எதிரில் இருக்கிறது. இது சிவவடிவம் உடையது. இதில் நீராடி சந்தியாவந்தனம் முதலியன முடிப்பது பெரும் புண்ணியம். தைப்பூசம், மார்கழித் திருவாதிரை, மாசித்திருமகம், சிவராத்திரி இவைகளில் இதில் நீராடுவது பெரும் விசேடமாகும். சிதம்பரத்திலிருந்து வேற்றூர்க்குச் செல்வோர் இதில் நீராடிச் சென்றால், தாம்தாம் நினைத்த காரியங்களில் வெற்றி எய்துவர். பூதம், பேய் முதலியவைகளினால் துன்பம் அடையார்.

**பரமானந்தகூபம்:** இது சிற்றம்பலத்திற்குக் கீழ்பால் இருக்கிறது. இது சத்திவடிவம் பொருந்தியது.

**குய்யதீர்த்தம்:** இது சிதம்பரத்திற்கு வடகிழக்கேயுள்ள கிள்ளைக்கு அருகில் கடலில் பாசம் அறுத்த துறையையுடையது. இருளில் வந்த குருவைப் பகைவன் என்று எண்ணி, வருணன் அவர்மீது பாசத்தைவிட, அதனால் அவர் இறந்தார். வருணனை, அக்கொலைப் பாவத்திற்காக ஒரு பிசாசு அவனுடைய கால்களையும் கைகளையும் கழுத்தோடு சேர்த்துக் கட்டி கடலுள் இட்டது. வருணனும் நீண்டகாலம் அங்குக் கிடந்தான். அங்ஙனம் கிடந்த வருணனுக்குச் சிவபெருமான் மாசி மாதத்தில் வெளிப்பட்டு அப்பாசக்கட்டு அற்றுப்போகும்படி அருள்புரிந்தார். ஆதலின் அத்துறை பாசமறுத்தான்துறை என்னும் பெயர் எய்திற்று.

**புலிமடு:** இது சிதம்பரத்திற்குத் தென்பால் ஒருமைல் தூரத்தில் இருக்கிறது.

**வியாக்கிரபாத தீர்த்தம்.** இது நடராசப்பெருமான் திருக்கோயிலுக்கு மேற்கே இருக்கும் இளமையாக்கினார் கோயிலுக்கு எதிரில் இருக்கும் குளம் ஆகும்.

**அனந்த தீர்த்தம்:** இது நடராசப்பெருமான் திருக்கோயிலுக்கு மேற்கே திருவனந்தேச்சுரத்துக்கு முன்பு இருக்கும் திருக்குளமாகும்.

**நாகச்சேரி:** இது அனந்தேச்சுரத்துக்கு மேல்பால் இருக்கும் திருக்குளமாகும்.

**பிரமதீர்த்தம்:** இது நடராசப்பெருமான் திருக்கோயிலுக்கு வடமேற்கே இருக்கும் திருக்களாஞ்சேரியில் உள்ள திருக்குளமாகும்.

**சிவப்பிரியை:** இது நடராசப்பெருமான் திருக்கோயிலுக்கு வடக்கேயுள்ள பிரமசாமுண்டி கோயிலுக்கு முன்புள்ள திருக்குளமாகும்.

**திருப்பாற்கடல்:** இது சிவப்பிரியைக்குத் தென்கிழக்கில் இருக்கிறது.

காணமுத்தி தரும் தலம். அர்த்தயாமத்தில் எல்லாத் தலங்களிலுமுள்ள மூர்த்திகளின் கலைகள் வந்து ஒடுங்கப்பெறுவது. வியாக்கிரபாதர், பதஞ்சலி, உபமன்யு, வியாசர், சூதர் முதலான முனிவர்களும், திருநீலகண்டர், திருநாளைப் போவார், கூற்றுவர், கணம் புல்லர், கோச்செங்கட் சோழர், மாணிக்கவாசகர், சேக்கிழார் என்னும் நாயன்மார்களும், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவாசாரியார் என்னும் சந்தான குரவர்களும், இரணியவர்மர், சேந்தனர், பெற்றான் சாம்பானுர், என்னும் அடியார்களும் வழிபட்டு, முத்திபெற்ற தலம். மாணிக்கவாசகப்பெருந்தகையார் புத்தரை வாதில் வென்று ஊமைப்பெண்ணைப் பேசுவித்து, சைவசமயமே மெய்ச் சமயம் என்பதை நிலை நாட்டியது; நம்பியாண்டார் நம்பி கனகசபையின் மேல்பால் உள்ள அறை ஒன்றில் தேவாரங்களைக் கண்டருளியது; தெய்வப்பாக்கிழாராகிய சேக்கிழார் திருத்தொண்டர் புராணமென்னும் பெரிய புராணத்தை எழுதி அரங்கேற்றியது; உமாபதிசிவம் பெற்றான் சாம்பானுர்க்கும், முள்ளிச்செடிக்கும் முத்திகொடுத்தருளியது; திருஞானசம்பந்தப்பெருந்தகையார் தில்லைவாழ் அந்தணர்களைச் சிவகணங்களாய்க் கண்டது; சுந்தரமூர்த்தி நாயனுர் பேரூர்ப்பெருமானைப் புலியூர்ச்சிற்றம்பலத்தே கண்டு வணங்கியது; இவைகளும் பிறவும் இத்தலத்தில் நிகழ்ந்த அரிய விசேடங்களாகும். "மெய்த்தவ வேடமே மெய்ப் பொருள்" என்று கொண்ட கொள்கை பிழையாது பகைவனது வாளுக்கு இலக்காகி இரத்தம் சோர வீழ்ந்த மெய்ப்பொருள் நாயனுர்க்குச் சிலம்பொலி கேட்கத் தாழ்ப்பித்து, பொன்வண்ணத்து அந்தாதியைப் பெற்றதும் ஆகிய அருட் செயல்களுடன், ஆடகப்பொதுவில் நாடகம் இயற்றும் ஏடவிழ் கூந்தல் இறைவி பாகனது பெருமையை யாவரால் எடுத்து இயம்ப இயலும்?

இத்தலத்திற்குத் தேவாரப் பதிகம் பதினொன்றும், திருவாசகப்பதிகம் இருபத்தைந்தும், திருக்கோவையாரும், திருவிசைப்பாப் பதிகம் பதினைந்தும், திருப்பல்லாண்டும், பத்தாம் திருமுறையில் சிலதிருமந்திரங்களும், பதினோராம் திருமுறையில் கோயில் நான்மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தங்களும் பெரிய புராணமும் ஆக பல அருட் பனுவல்கள் இத்தலத்திற்கு உள்ளன இவைகளன்றி கோயிற்புராணம், சிதம்பர புராணம், சபா நடேச புராணம் என்னும் புராணங்கள் தமிழிலும், சூதசம்மிதை, சிதம்பரமான்மியம், புண்டரீகபுர மான்மியம், வியாக்கிரபுர மான்மியம் முதலான நூல்கள் வடமொழியிலும் இருக்கின்றன. இவைகளேயன்றி, குமரகுருபர அடிகளால் ஆக்கப்பெற்ற சிதம்பரம் மும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை; இரட்டைப் புலவர்களால் பாடப்பெற்ற தில்லைக்கலம்பகம் என்னும் நூல்களும் இத்தலத்திற்கு உரியனவாகும்.

**கோயிலிலுள்ள ஐந்து சபைகள்:** பேரம்பலம் - இது இக்கோயிலுள்ள ஐந்து சபைகளுள் ஒன்று. இதனைத் தேவசபை என்பர். தேவாரம் முதல் திருமுறையில்

"நிறை வெண் கொடிமாடம் நெற்றிநேர் தீண்டப்
பிறைவந்திறை தாக்கும் பேரம்பலம்"

என்று சம்பந்தமூர்த்திகளாற் கூறப்படுகிறது.

**சிற்றம்பலம்:** நடராசப்பெருமான் நடம் புரிந்தருளும் இடம். இது "தூயசெம்பொன்னினால் எழுதி மேய்ந்த சிற்றம்பலம்" என்றும் "தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்" என்றும் அப்பமூர்த்திகளால் விளக்கப் படுகிறது.

**கனகசபை:** பெருமான் அபிடேகங்கொண்டருளுமிடம். சிற்றம் பலத்துக்கு முன்னுள்ளது.

**நிருத்தசபை:** பெருமான் ஊர்த்துவ தாண்டவம் புரிந்தருளுவது. கொடிமரத்தின் தென்பாலுள்ளது.

**இராஜசபை:** இது ஆயிரக்கால் மண்டபம் ஆகும்.

**கல்வெட்டு வரலாறு :-** இக்கோயிலில் பிற்காலச் சோழமன்னர் களில் முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திரசோழன், முதற் குலோத்துங்கசோழன், விக்கிரமசோழன், இரண்டாம் இராசாதிராச தேவன், மூன்றாங் குலோத்துங்கசோழதேவன், மூன்றாம் இராசராச சோழன் இவர்கள் காலங்களிலும்; பாண்டியமன்னர்களில் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியதேவன், சடாவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி சுந்தரபாண்டியதேவன், மாறவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி வீரகேரள னாகிய குலசேகரதேவன் இவர்கள் காலங்களிலும், பல்லவரில் அவனி ஆளப்பிறந்தான் கோப்பெருஞ்சிங்கதேவன் காலங்களிலும், விசயநகர வேந்தர்களில் வீரப்பிரதாபகிருட்டிணதேவமகாராயர், வீரப்பிரதாப வேங்கடதேவமகாராயர், ஸ்ரீரெங்கதேவமகாராயர், அச்சுததேவமகாராயர், வீரபூபதிராயர் இவர்கள் காலங்களிலும்; கொச்சிபரம்பரையில் சேரமான் பெருமாள் நாயனரின் வழித்தோன்றிய இராமவர்மமகாராசா காலத்திலும்; சாளுவபரம்பரையில் வீரப்பிரதாபதம்முராயர் I காலத்திலும் செதுக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளையன்றி இக்கோயிலைப் பற்றி வேற்றூர்களில் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் இருக்கின்றன. இவைகளை எல்லாம் தழுவிய வரலாறே ஈண்டுக் கொடுக்கப்பெற்றுளது.

**இவ்வூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு :-** இவ்வூர் முதலாம் இராசராசசோழன் காலத்தில் இராசேந்திரசிங்கவளநாட்டுத் தனியூர்பெரும்பற்றப்புலியூர் என்றும், முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் இராசாதிராசவளநாட்டுத் தனியூர்ப்பெரும்பற்றப்புலியூர் என்றும் கல்வெட்டுக்களில் கூறப்பெற்றுள்ளது.

**மூர்த்திகளின் பெயர்கள் :-** இப் பெரும்பற்றப்புலியூரில் மூலத்தானத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருமூலத்தானமுடையார் என்றும், பேரம்பலத்தில் எழுந்தருளியிருப்பவர் ஆளுடையார் என்றும், சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருப்பவர் திருச்சிற்றம்பலமுடையார், தில்லை நாயகத் தம்பிரானார், ஆநந்தத்தாண்டவப்பெருமாள், பொன்னம்பலக் கூத்தர், சிதம்பரேசுவரர் என்றும், அம்மன் சிவகாமசுந்தரியார் என்றும், அம்மனுக்குரிய திருக்கோயிலில் எழுந்தருளியிருப்பவர் திருக்காமக் கோட்ட முடைய பெரியநாய்ச்சியார் என்றும் கல்வெட்டுக்களில் கூறப் பெற்றுள்ளனர்

**திருமாளிகைகள் :-** திருச்சிற்றம்பலத்தைச் சூழ்ந்த முதல் திருமாளிகைக்குக் 'குலோத்துங்கசோழன் திருமாளிகை'* என்றும், இரண்டாம் பிராகாரத்தைச் சூழ்ந்துள்ள திருமாளிகைக்கு விக்கிரமசோழன் திருமாளிகை என்றும், மூன்றும் பிராகாரத்தைச் சூழ்ந்துள்ள திருமாளிகைக்கு இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை என்றும் பெயர்கள் வைக்கப்பெற்றிருந்தன. விக்கிரமசோழன் திருமாளிகை என்பது முதற் குலோத்துங்கசோழனது மகனாகிய விக்கிரமசோழன் பெயரால் கட்டப் பெற்றதாகும். இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை மூன்றுங்குலோத் துங்கசோழன் திருப்பெயரால் அமைக்கப்பெற்றதாகும். இராசாக்கள் தம்பிரான் என்பது மூன்றுங் குலோத்துங்கசோழனுக்கு வழங்கிவந்த சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**திருவிழாக்கள் :-** இத்திருக்கோயிலில் ஆனித்திருநாள், மார்கழித் திருநாள், மாசித்திருநாள் இவைகள் சிறப்பாகக் கொண்டாடப்பெற்று வந்தன. மாசித்திருநாளில் திருத்தொண்டத்தொகை விண்ணப்பஞ் செய்யப்பெற்றுவந்தது. இவைகளின்பொருட்டுமுதலாம் இராசேந்திரசோழ தேவரின் (கி. பி. 985-1014) அணுக்கிநக்கன் பரவை (பாவை என்றும் படிக்கலாம்) என்னும் அம்மையார் நாற்பத்துநான்குவேலி நிலங்களை

* இத்திருமாளிகை முதற் குலோத்துங்கசோழன் காலத்தில், மிழலைநாட்டு வேள் கண்டன்மாதவனால் கட்டப்பெற்றதாகும். இச் செய்தியைத் தஞ்சாவூர் சில்லா மாயூரந்தாலூகா பாடல்பெற்ற நீடூர் திருக்கோயிலில் பொறிக்கப்பெற்ற "தில்லையம்பலத்து வடக்கின் பால் புராணநூல் விரிக்கும் புரிசை மாளிகையும், வரிசையால் விளங்கப் பொற்பினால் விருப்புறச் செய்தான்" என்னும் கல்வெட்டுப்பகுதி அறிவிக்கின்றது. (Epigraphia Indica Volume XVIII Page 6ஶ.)

இராசேந்திரசோழதேவர் வழங்கிய அருளினை பொன்னைக் கொண்டு வாங்கி அளித்திருந்தனர். மாசித்திருநாளில் இறைவர் கடலாடி விற்றிருக்க, சிதம்பரந்தாலுகாவைச் சேர்ந்த கிள்ளை என்னும் கிராமத்தில் சயங்கொண்டசோழமண்டலத்து மணவிற்கோட்டத்து மணவில் என்ற ஊரின் தலைவனாகிய கூத்தனால் மண்டபம் ஒன்று கட்டப்பெற்றுள்ளது. மாசிக்கடலாட இறைவர் எழுந்தருளுவதற்கு ஒரு பெருவழியையும் அக்கூத்தன் அமைத்தான். அதற்கு விக்கிரமசோழன் தெற்குத்திருவீதி என்று பெயர் வைக்கப்பெற்றிருந்தது. தைப்பூசத் திருநாளும் இத்திருக்கோயிலில் சிறப்பாக நடைபெற்றுவந்தது. அப்பூசத் திருநாளில் இரண்டாம் கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் கயிலாயதேவன் என்பவன் தன் பெயரால் கயிலாயதேவன் திருப்பாவாடைப்புறம் ஒன்றை ஏற்படுத்தி அன்று அமுதுபடிக்குப் பத்துகலம் போனகப் பழவரிசி, இருகலம் மணிப் பருப்பு, நான்குநிறை சர்க்கரை, நூறு தேங்காய், இருநூறு வழுநிலைக்காய் இவைகளைக் கொண்டுவந்து இக் கோயிலிலுள்ள குலோத்துங்கசோழன் திருமடைப்பள்ளியில் சேர்ப்பதற்கு மூலதனமாக பெரும்பற்றப்புலியூர் கீழ்ப்பிடாகை கிடாரங்கொண்ட சோழப்பேரிளமைநாட்டு எருக்காட்டுச் சேரியான சோழநல்லூர்ப்பால் சோழபாண்டியன் என்ற பெயருள்ள நிலத்தையும், அங்குள்ள கொல்லைக் குளத்தில் செம்பாதி நிலத்தையும் அளித்திருந்தான். திருக்காமக்கோட்டமுடைய பெரியநாய்ச்சியார்க்கு ‘ ஐப்பசிப் பூர விழா ’ நடைபெற்றுவந்தது. அதன் செலவினங்களுக்குப் ‘ பூரப்பேட்டை ’ என்னும் ஊர் கொடுக்கப்பெற்றிருந்தது.

சில சிறப்பு நாட்கள் :- நாயகர் குலோத்துங்கசோழன் திருத்தோப்புக்கு எழுந்தருளி திருமஞ்சனம்பண்ணி அருளுதலும், திவசங்களுக்குப் பிள்ளையார் சிவபாதசேகரன் சித்தத்துணைப்பெருமாள் எதிரிலிசோழன் திருநந்தவனத்திற்குத் திருப்பாலிகை வலஞ்செய்ய எழுந்தருளுதலும் உண்டு. (திவசம் - நாள்; இங்கே சிறப்பு நாள்.)

திருமூலத்தானத்தானமுடையாரையும் அங்குத் தென்பால் எழுந்தருளியிருக்கும் தட்சிணாமூர்த்தியையும் பற்றிய கல்வெட்டுக் குறிப்பு :- திருமூலத்தானமுடையார்க்கு மூன்று சந்திகளிலும் முறையே வெண்போனகம், பருப்புப்போனகம், அப்பம் இவைகள் அமுதுசெய்விக்கப்பெற்றுவந்தன. இம் முறையே தட்சிணாமூர்த்திக்கும் அமுதுசெய்விக்கப்பெற்றுவந்தது. இரண்டாம் கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் தட்சிணாமூர்த்திக்கு முன் அமுதுசெய்தருளிவந்த சந்தி மூன்றும் நீக்கி, ஏற்றமாகப் பால்போனகம், அப்பம், வெச்சமுதுப்பயிறு, இளநீர், பால் இவைகள் அமுதுசெய்விக்கப்பெற்றுவந்தன. இவற்றின்பொருட்டு இராசாதிராசவளநாட்டுத் திருவிந்தளூர்நாட்டு வடசேமங்கலத்தில் நிலநிவந்தம் விடப்பட்டிருந்தது.

இரண்டாம் பிராகாரத்திலிருந்து மூன்றும் பிராகாரத்திற்குப் போகும் மேற்குத் திருவாயிலின் பெயர்:- இம்மேற்குத் திருவாயிலுக்கு அகளங்கன் திருவாசல் என்று பெயர். "இப்படிக்கு அகளங்க திருவாசலில் பருவாயில் புறவாயில் கல்வெட்டவும் பண்ணுவதே. இப்படி செய்யப்பண்ணுறுவதே. இவை பாண்டி மண்டலத்து............" என, இவ்வாசலின் தென்பால் உள்ள கல்வெட்டுத் தொடர்களால் இச்செய்தி அறியக்கிடக்கின்றது. இதை உணர்த்தும் கல்வெட்டு அனைத்துலகும் கொண்ட சுந்தரபாண்டிய தேவர் காலத்தது ஆகும்.

இத்திருவாயிலின் அருகாலில் "ஸ்வஸ்தி ஸ்ரீ அவனி ஆளப்பிறந்தான் கோப்பெருஞ்சிங்கற்காக இத்திருநிலைக்கல் செய்வித்தான் இவர் முதலிகளில் பெருமாள் பிள்ளையான சோழகோனார்" எனச் செதுக்கப் பெற்றிருப்பதால், இத்திருநிலைக் கல்லைச்செய்துவைத்தவர் கோப்பெருஞ் சிங்க தேவர் என்று தோன்றுகின்றது.

மூன்றும் பிராகாரத்திலுள்ள மண்டபம், கோயில் இவைகளைப்பற்றிய குறிப்புக்கள்:- இம்மூன்றும் பிராகாரத்தில் இருக்கும் நூற்றுக்கால் மண்டபத்தில் உள்ள பல தூண்களில் "விக்கிரமசோழன்" என்றும், மற்றொரு தூணில் 'விக்கிரமசோழன் திருமண்டபம்' என்றும் செதுக்கப் பட்டிருக்கின்றன. இம்மண்டபம் மணவில் கூத்தனை காலிங்கராயனால் இவ்வரசன் பெயரால் கட்டப்பெற்றதாகும்.

இம்மண்டபத்தின் தென்முகப்பு மண்டபத்திற்கு 'வீரபாண்டியன் திருமண்டபம்' என்று பெயர். இச்செய்தி அங்குப்பொறிக்கப் பெற்றுள்ள 'வீரபாண்டியன் திருமண்டபம்' என்னும் கல்வெட்டுப்பகுதியால் அறியக் கிடக்கின்றது.

திருக்காமக்கோட்டமுடைய பெரியநாய்ச்சியார் கோயில்:- இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெரியநாச்சியார், கல்வெட்டுப் பாடல்களில் 'நடங்கவின்கொள் அம்பலத்து நாயகச்செங்தேனின் இடம் கவின்கொள்பச்சை இளங்தேன் எனவும், "எவ்வுலகும் எவ்வுயிரும் ஈன்றும் எழிலழியாச்செவ்வியாள்' எனவும் பாராட்டப்பெற்றுள்ளனர். இக்கோயிலின் திருச்சுற்றையும், திருச்சுற்று மாளிகையையும் அமைத் தவன் மணவிற்கோட்டத்து மணவில் என்ற ஊரின் தலைவனாகிய கூத்தன் ஆவன்.

இக்கோயிலின் இரண்டாம் பிராகாரத்துக் கோபுரத்தின் கிழக்கு வாசல் நிலைக்கல், கோப்பெருஞ்சிங்கனால் அமைக்கப்பெற்றதாகும். இதை அவ்வருகாலில் உள்ள கல்வெட்டு உணர்த்துகின்றது. இக்கோபுர வாசலுக்கு அந்தப்புரப்பெருமாள் திருவாசல் என்று பெயர். இத்திரு

வாசலுக்கு எதிரிலுள்ள மண்டபம் திருவாவடுதுறைமலை ஆதீனம், மாயூரம் வைத்தியலிங்கத் தம்பிரானால் சாலிவாகன சகாப்தம் 1716 செல்லாநின்ற ஆனந்த வருஷம் ஆனிமாதம் 16வ. கட்டப்பெற்றதை அங்குள்ள தூண் ஒன்றின் அடிப்பாகத்தில் உள்ள கல்வெட்டு உணர்த்துகிறது. அம்மண்டபம் கட்டப்பெற்று இற்றைக்கு 161 ஆண்டுகள் ஆகின்றன.

**அண்டாபரணத் தேவரைப்பற்றிய செய்தி:-** அந்தப்புரப் பெருமாள் திருவாசலுக்கு வடபால் உள்ள கோயிலில் எழுந்தருளியிருந்தவர் அண்டாபரணதேவர் ஆவர். இதை அக்கோயில் கல்வெட்டு உணர்த்துகிறது. அவர் திருமேனி இதுபொழுது அங்கு இல்லை. அங்குக் கொற்றவை அல்லது மகுடகூர சம்ஹாரியின் திருமேனிதான் இருக்கிறது. இந்த அண்டாபரணத்தேவர்க்குத் திருப்பணிகாரப் புறத்திற்கும், சிறப்பாகத் தோள்மாலை செய்து சாத்தத் திருநந்தவனத்திற்கும், திருநந்தவனஞ்செய்து திருப்பூமண்டபத்தில் திருப்பள்ளித்தாமம் அளிப்பார்க்கு ஜீவனத்திற்கும், பெரும்பற்றப்புலியூர் பிடாகை நல்லாவியான விக்கிரமசோழநல்லூரில் ஏழுமா நிலமும், அங்கே நீருரிமைகொண்ட குழி நானூற்றுஐம்பத்திரண்டும், கோயில் பூண்டியான க்ஷத்திரிய சிகாமணி நல்லூரில் நூறுகுழியும், ஜயங்கொண்டசோழப் பட்டினத்துப் பிடாகை அளக்குடியில் விளை நிலமும், கொல்லையும் ஆகக்குழி எழுநூற்றைம்பதும் குமாரமங்கலமான அழகியநல்லூரில் வடவனுறு என்று பேர்கூவப்பட்ட நிலம் நான்குமாக் காணியும், நாற்றங்கால் நிலம் காணியும் ஆக நான்மா வரை நிலங்களும், நிவந்தங்களாக விடப்பெற்றிருந்தன

**திருத்தொண்டத்தொகை ஈச்சரம்:-** இப்பெயருள்ள திருக்கோயில் சிங்காரத்தோப்பு என்று இக்காலம் வழங்கப்பெறும். திருக்களாஞ்செடி உடையார் திருக்கோயிலின் வட புறச்சுவரில் உள்ள மூன்றாங் குலோத்துங்கசோழன் காலத்துக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. அது திருத்தொண்டத் தொகையீஸ்வரமுடையார் ஸ்ரீகோயிலும், திருமுற்றமும், திருமடை விளாகமும் திருக்குளமும் உடையதாய் இருந்ததை அக்கல்வெட்டு உணர்த்துகின்றது. அது இத்தில்லைச் சிற்றம்பலக் கோயில் மூன்றும் பிராகாரத்தில் இல்லை என்பது உறுதி.

**கோபுரங்கள்:-** தெற்குக்கோபுரம், பாண்டியனால் கட்டப்பெற்றதாகும். கோபுரவாசல் மேல்தளத்திலும், இரு அருகால்களிலும் இரட்டைக்கயல் மீன்கள் பொறிக்கப்பெற்று அவைகளின் நடுவில் செண்டும் செதுக்கப்பெற்றுள்ளன. இங்ஙனம் இரண்டுகயல் மீன்கள் செதுக்கப்பட்டிருக்குமானால் அத்திருப்பணி பாண்டியனுடைய காலத்திலேயே முற்றுப்பெற்றதைக் குறிக்கும். முற்றுப்பெறாதாயின் ஒரே கயல் மீன்தான் செதுக்கப்பட்டிருக்கும். எனவே இத்தெற்குக் கோபுரம் பாண்டியர் ஒருவரால் முதல் முதலில் கட்டப்பெற்றது என்பது உறுதி

யாகும் ஆனுல் செங்கற்பட்டுத் தாலூகா முக்தீஸ்வரர் கோயிலில் வட மேற்குப்புறச் சுவரில் செதுக்கப்பட்டிருக்கும் கல்வெட்டு, இத்தெற்குக் கோபுரம், முதலாம் கோப்பெருஞ்சிங்கதேவரால் கட்டப்பெற்றதாகக் கூறுகின்றது. அது "கோப்பெருஞ்சிங்க தேவர்க்கு யாண்டு ஐந்தாவது தனியூர் பெரும்பற்றப்புலியூர் உடையார் திருச்சிற்றம்பல முடையார்க்கு அழகிய சீயன் அவனிஆளப்பிறந்தான் காடவன் கோப்பெருஞ்சிங்கனேன். இந்நாயனுர்கோயில் தெற்குத் திருவாசலில் சொக்கச்சீயன் திருநிலை எழு கோபுரமாகச் செய்த திருப்பணிக்கு உடலாக" எனத்தொடங்குகிறது. மேலும் கர்நூல் ஜில்லா மார்க்காப்பூர் தாலூகா திருப்புராந்தகத்தில் உள்ள நாகரியிலும், தெலுங்கிலும் வெட்டப்பட்ட கல்வெட்டு இத்தெற்குக் கோபுரம் முதலாம் கோப்பெருஞ்சிங்கனுல் கட்டப்பெற்றதையும் குறிப்பிடுகின்றது. எனவே முதல் முதலில் பாண்டியர் ஒருவரால் கட்டப்பெற்றிருந்த இக்கோபுரத்தில், கோபுரவாசலின் மேல்தளம்வரை வைத்துக்கொண்டு எஞ்சிய பகுதிகளை எல்லாம் இடித்துவிட்டு, முதலாம் கோப்பெருஞ்சிங்கன் கட்டினுன் என்று கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். இங்ஙனம் இவனுல் கட்டப்பெற்ற இக்கோயில் திருப்பணிக்கு உடலாக ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்து ஆற்றூர் நாட்டு, ஆற்றூரான ராஜராஜநல்லூரில் 301¾ வேலி நிலம் இப்பல்லவ மன்னனுல் கொடுக்கப்பெற்றிருந்தது. இச்செய்தி திரு ஏகம்பம் உடையார் கோயிலிலும் செதுக்கப்பட்டுள்ளது. இத்தெற்குக் கோபுரம் சொக்கச்சீயன் திருநிலை எழுகோபுரம் என்றுபெயர்.

மேற்குக் கோபுரம், வடக்குக் கோபுரம:- மேற்குக் கோபுரம் முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியனுலும்; வடக்குக் கோபுரம் கிருஷ்ண தேவராயராலும் கட்டப்பெற்றன. இச்செய்திகளை மேற்குறித்த கர்நூல் ஜில்லா மார்க்கர்ப்பூர் தாலூகா திருப்புராந்தகத்திலுள்ள கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. வடக்குக் கோபுரத்தில் கிருஷ்ணதேவராயருடைய பிரதிமம் இருக்கிறது. "இக்கோபுரத்தில் ஸிம்ஹாத்திரை பொருட்டுப் பொத்தனூர்க்கு எழுந்தருளி ஜயஸ்தம்பம் நாட்டி, திரும்பி பொன்னம்பலத்திற்கு எழுந்தருளி பொன்னம்பல நாதனையும் சேவித்துக் கட்டுவித்த ஸேவை" என்ற கல்வெட்டும் இருக்கின்றது. இவற்ருல் இவ்வடக்குக் கோபுரத்தைக் கட்டுவித்தவர் வீரப்பிரதாப கிருஷ்ணதேவ மகாராயர் என்பது உறுதியெய்துகின்றது.

கிழக்குக் கோபுரம்:- இது இரண்டாம் கோப்பெருஞ்சிங்கனுல் கட்டப்பெற்றது. பல பேரறங்களைச்செய்து குன்ருப்புகழ்பெற்ற திரு பச்சையப்ப முதலியாரின் மனைவியராகிய ஐயாளம்மாளின் தாயாராகிய சுப்பம்மாளால் இக்கோபுரம் பழுதுபார்க்கப்பெற்றது. இவ்வம்மையாருடையவும், பச்சையப்ப முதலியாருடையவும் பிரதிமங்கள் இக் கோபுரத்தில் இருக்கின்றன.

வடக்குக் கோபுரத்தில் இருக்கும் சிலபிரதிமங்கள்:- இக் கோபுரத்தில் இருக்கும் வீரப்பிரதாபகிருஷ்ணதேவ மகாராயரின் பிரதிமத்தைப்பற்றி முன்னர்க் கூறப்பெற்றது. அத்துடன், அவர் பிரதிமத்திற்குக் கீழ்பால், இருக்கும் சில பிரதிமங்களின்கீழ், விருத்தகிரியில் செவகப்பெருமாள், அவனுடைய மகன் விஸ்வமுத்து, திருப்புறைக் கொடை ஆசாரி திருமருங்கன் அவனுடைய தம்பி காரணைச்சாரி எனச் செதுக்கப்பெற்றுள்ளன. இவ்வெழுத்துக்கள் பதினாறாம் நூற்றாண்டு எழுத்துக்களாகப் புலப்படுகின்றன. இவர்கள் இக்கோபுரத்தைக்கட்டிய சிற்பிகளாதல் வேண்டும்.

மேற்குக்கோபுரத்தில் இருக்கும் திருமேனிகள்:- காமதேவன், அகத்தியர், ஸ்ரீதேவி, தேவேந்திரன், துர்க்காதேவி இத்திருமேனிகள் கோபுரவாசலுக்குத் தென்பால் கிழக்குப்புறச்சுவரில் இருக்கின்றன. இவைகளின் தலைப்பில் மேற்குறித்த பெயர்கள் செதுக்கப்பெற்றுள்ளன, உருத்திரதேவர், இராகுகேதுக்கள், நாரதர், அளகேஸ்வரன், சந்திரன், கிரியாசத்தி, சனிபகவான், வாயுபகவான் இவர்களின் திருமேனிகள் இக்கோபுரவாசலுக்கு வடபால் கிழக்குப்புறச்சுவரில் இருக்கின்றன. இவைகளின் தலைப்பில் மேற்குறித்த பெயர்கள் தீட்டப்பெற்றுள்ளன. க்ஷேத்திரபாலப்பிள்ளையார், கங்காதேவி, தனவந்திரி, திரிபுரசுந்தரிதேவி, சுக்கிரன், வைஜாயன், நாகன், யமுனை, பத்திரகாளி ஆதிசண்டேஸ்வரர் இவைகளின் திருமேனிகள் இக்கோபுரவாசலுக்கு வடபால், மேற்குப் புறச்சுவரில் இருக்கின்றன. இவைகளின் தலைப்பிலும் மேற்குறித்த பெயர்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் க்ஷேத்திரபாலப்பிள்ளையாரின் முன்பக்கம் சிறுமண்டபமும் கட்டப்பெற்றுள்ளது. க்ஷேத்திரபாலப்பிள்ளையார் என்பவர் வயிரவர் ஆவர். நிருதி, புதன், ஞானசக்தி, அக்கிதேவன் இவர்களின் திருமேனிகளும் இக்கோபுர வாசலின் தென்பால் மேற்குப்புறச்சுவரில் இருக்கின்றன.

மேற்குக் கோபுரத்துக்கு அருகில் இருக்கும் பிள்ளையார்:- இக்காலம் இப்பிள்ளையார்க்கு வழங்கும் திருப்பெயர் கற்பகப் பிள்ளையார் ஆயினும், கோமாற பன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலசேகர தேவர்க்கு" எனத்தொடங்கும் மேலக்கோபுர வாசலின் தென்பால் உள்ள கல்வெட்டில், இப்பிள்ளையார் குலோத்துங்கசோழ விநாயகப்பிள்ளையார் என்னும் திருப்பெயரால் அழைக்கப்பெற்றுள்ளனர். அக்கல்வெட்டுப் பகுதி பின்வருமாறு:- "இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை மேலைத் திருமாளிகையில் நிலையெழு கோபுரத்திருவாசல் புறவாசல் தென்பக்கத்து எழுந்தருளியிருந்து பூசைகொள்ளுகிற குலோத்துங்கசோழ விநாயகப் பிள்ளையார்க்குச் சிறுகாலை சந்திக்கும், சுந்தரபாண்டியன் சந்திக்குப் பின்பாக அமுது செய்ய" என்பதாகும்.

தெற்குக் கோபுரத்தின் வடபால் நந்தி மண்டபத்தின் அடிப் பாகத்தில் இருக்கும் கல்வெட்டு :- இதில் ஆறு பாடல்கள் இருக்கின்றன. இவைகள் பனையூர்த் தலைவனாகிய மணியன் வல்லையன் ஆதித்தன் பாண்டியர்களின் சார்பில் சோழர்களோடு சிதம்பரத்தில் புரிந்த போரைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. இப்பாடல்களை ஆக்கியோர் புவனேக வீரத் தொண்டைமானாகிய தாய்நல்லபெருமாள் முனையதரையர் என்னும் தமிழ்ப்புலவர் ஆவர்.

கிழக்குக் கோபுரத்தின் மேல்பாலுள்ள நந்தி மண்டபத்தின் அடிப்பாகத்தில் உள்ள கல்வெட்டு :- இம்மண்டபத்தைக் கட்டியவர் செகதீசுவரன் இராசசூரிய தொண்டைமான் என்பதை இக் கல்வெட்டு உணர்த்துகிறது.

கிழக்குக் கோபுரத்திற்குத் தென்பால் இருந்த மண்டபம் :- இராசாக்கள் தம்பிரான் திருமாளிகையில் கிழக்கு எழுநிலைக் கோபுரத்திற்குத் தென்பால் ஒரு மண்டபம் இருந்தது. அதற்கு ' யானை ஏற்றுக் கூடம் ' என்று பெயர். இச்செய்தி மாறவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி விக்கிரமபாண்டியனின் நான்காம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.

திருநோக்கழகியான் திருமடம் :- இது சுந்தரபாண்டியன் திருநிலையெழுகோபுரச் சந்நிதியில் சொக்கச்சியன் குறளில் கீழ்ப்பக்கத்தில் இருந்தது. இதற்கு மடப்புறமாக நிலம் அளிக்கப்பெற்றிருந்தது.

திருஞானசம்பந்தர் திருக்கோயில் :- திருஞானசம்பந்தர்க்குச் சிதம்பரம் கோயிலில் ஒரு தனி ஆலயம் இருந்ததை மாறவர்மன்திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியதேவரின் கல்வெட்டுப் புலப்படுத்துகின்றது.

பெரிய திருச்சுற்று மாளிகை :- இக் கோயிலுக்குரிய பெரிய திருச்சுற்றுமாளிகையை அமைத்தவன் மணவில்கூத்தனான காலிங்கராயன் ஆவன். இது அவன் தில்லைக்குச் செய்த திருப்பணியைப்பற்றிக் கூறும் பாடல் ஒன்றில் குறிக்கப்பெற்றுள்ளது.

திருநாவுக்கரசு தென் திருமடம் :- இது அம்பலநாயகப்பெருந் தெருவில் இருந்தது. இத்திருமடத்துக்கு அருகில் அழகிய திருவையாறுடையார் கோயிலும் இருந்தது. இக்கோயிலின் கீழ்ப்பக்கத்து முகக் கட்டணத்தில் எழுந்தருளியிருந்த பிள்ளையாரின் பெயரும் குலோத்துங்க சோழ விநாயகப் பிள்ளையாராகும். நாயகர் இராசாக்கள் தம்பிரான் திருவீதியில் எழுந்தருளும்போது இப்பிள்ளையாரைத் திருக்கண் சாத்தி அருளுதல் உண்டு.

கீழக் கோபுரப் பாடல்களின் குறிப்புக்கள் :- சுந்தரபாண்டியன் துலாபாரம் புக்கதையும், வாணர் தலைவனைக் காட்டிற்குத் துரத்தியதையும், தெலுங்கர் சேனையைத் துகளாக்கியதையும், வெள்ளாற்றில் நடைபெற்ற போரில் புவனேகவீரன் வெற்றி பெற்றதையும் இங்குள்ள கல்வெட்டுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

மேற்குக் கோபுரத்தில் உள்ள கல்வெட்டுப் பாடல் :- விக்கிரம பாண்டியன் வேணாடு (திருவாங்கூர்) கொங்குதேசம் இவைகளை வென்றதையும் கண்ட கோபாலனைக் கொன்றதையும் குறிப்பிடுகிறது.

தெற்குக் கோபுரத்தை ஒட்டித் தென்பால் நிறுத்தப்பெற்றிருக்கும் கல்லில் உள்ள கல்வெட்டு :- வையப்ப கிருட்டிணப்பநாய்க்கர் மகன் முத்துகிருட்டிணப்பநாய்க்கரால் கொள்ளிடப் பேராற்றங்கரையில் சகம் 1520 இல் அதாவது கி. பி. 1598 இல் ஒரு மண்டபம் கட்டியதை உணர்த்துகிறது.

வீதிகள் :- இக்கோயில் கல்வெட்டுக்களில் திருநிலை எழுகோபுரப் பெருந்தெரு, முடித்தலைகொண்ட பெருமாள் திருவீதி, சுந்தரபாண்டியன் தெங்குத் திருவீதி, விக்கிரமசோழன்தெங்குத் திருவீதி, அம்பலநாயகப் பெருந்தெரு, இராசாக்கள்தம்பிரான் திருவீதி என்னும் பெயர்கள் குறிக்கப்பெற்றுள்ளன. இவைகளுள் முடித்தலைகொண்டபெருமாள் திருவீதி என்பது மேற்குவீதியின் பெயராகும் விக்கிரமசோழன்தெங்குத் திருவீதி என்பது மாசிக்கடலாட நாயகர் எழுந்தருளும் வீதியாகும். இச்செய்தி "நாயகர் திருக்கடலுக்கு எழுந்தருளும் தெங்குத் திருவீதி தென்பக்கத்து எழுந்தருளுவித்த பிடாரி திருச்சிற்றம்பல மாகாளி ஸ்ரீகோயிலும், திருமுற்றமும், திருமடைவிளாகத்திலும் அகப்பட்ட" என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது.

அறச்சாலைகள் :- சிங்களாந்தகன் அறச்சாலை :- இது இவ்வூரில் முதலாம் இராசேந்திரசோழர் அனுக்கிநக்கன் பரவையாரால் ஏற்படுத்தப் பெற்ற சாலையாகும். இதில் நாடோறும் இருபத்தைந்து பிராமணர்கள் உண்ணுவதற்கு நிவந்தமாக இப்பெரும்பற்றப்புலியூர்க்கு அருகில் பரவை நங்கை நல்லூரில் பதினைந்தரைவேலி நிலத்தை வாங்கி இச்சாலைக்கு இவ்வம்மையார் விட்டிருந்தனர். இந்நிலத்தில் ஐந்தரைவேலி நிலம் பயிர் செய்யத் தகுதியற்றதாய் இருந்தது. அது நீக்கி எஞ்சிய பதிற்றுவேலி நிலத்தால்வந்த நெல்லைக் கொண்டு இவ்வறச்சாலை நடத்தப் பெற்றுவந்தது. இச்சாலையில் சமையல்செய்து வந்தவன் 'சாலைமடையன்' என்னும் பேரால் குறிக்கப்பெற்றுள்ளான். அவனுக்கு நாள் ஒன்றுக்கு நெல் அறுநாழியும், ஆண்டு ஒன்றுக்குப் புடவைக்கு எண்கலமும் கொடுக்கப்

பட்டுவந்தன. இச்சாலை செய்தியில் நடைபெறுகின்றதா என்றதைப் பார்த்துவந்தவன் 'அறநேயன்' என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளான்.

அறப்பெருஞ்செல்வி சாலை :- மேலைவீதியாகிய முடித்தலைக்கொண்ட பெருமாள் திருவீதியில் இருந்தது. இச்செய்தியைத் திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராசதேவரின் 17 ஆம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு உணர்த்துகின்றது.

சுந்தரபாண்டியன் சாலை :- இது சுந்தரபாண்டியனுடைய ஏழாம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இதில் உணவு அளிப்பதற்கு அம்மன்னனால் நிவந்தமும் அளிக்கப்பெற்றுள்ளது.

**திருத்தோப்பு:-** இவ்வூரில் குலோத்துங்க சோழன் திருத்தோப்பு, சுந்தரபாண்டியன் திருத்தோப்பு, எதிரிலிசோழன் திருத்தோப்பு என்னும் பெயருடைய தோப்புகள் இருந்தன. இவற்றுள் குலோத்துங்க சோழன் திருத்தோப்புக்கு நாயகர் ஏறியருளுதல் உண்டு. அங்ஙனம் ஏறி அருளினால் சுவஸ்திசொல்லி சேவிக்கவும், இத்திருத்தோப்பில் திருமஞ்சனம் பண்ணி அருளும்போது அத்தியயனம் பண்ணுவதற்கும் பிறவற்றிற்குமாகப் பத்துவேலி நிலங்கள் நிவந்தமாக அளிக்கப்பெற்றிருந்தன.

சுந்தரபாண்டியன் திருத்தோப்பு :- "சுந்தரபாண்டியன் திருத்தோப்புச்செய்து ஏறி அருள வேண்டுவனவுக்கும், விருதராஜ பயங்கர வளநாட்டு ஆற்றூரான இராஜநாராயண சதுர்ப்பேதி மங்கலத்து" என்னும் சுந்தரபாண்டிய தேவரின் கல்வெட்டுப்பகுதி, இவ்வூரில் இப்பெயருடைய தோப்பு ஒன்று இருந்ததைப் புலப்படுத்துகின்றது.

எதிரிலிசோழன் திருத்தோப்பு :- இத் திருப்பெயருடைய தோப்பு ஒன்று திரிபுவனச்சக்கரவர்த்தி ராஜராஜதேவரின் இருபத்தாறும் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இத்தோப்புக்குச் செல்லும் தெருவில் ஒரு மடம் ஒன்றையும் அக்கல்வெட்டுக் கூறுகின்றது.

வழியடிமைகொண்டான் தோப்பு :- இத் தோப்பு இருபதுமா பரப்புடையது. இது விக்கிரமபுரத்தில் உள்ளது. இத்தோப்பு ஆளுடைய நாயனாற்காகக் கோப்பெருஞ்சிங்கதேவரின் 19-ஆம் ஆண்டில் விடப்பெற்றது.

பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்துள்ள ஊர்கள் தில்லைநாயக நல்லூர் :- இது கடவாய்ச்சேரி என்னும் வேறுபெயரை உடையது. இது பெரும்பற்றப்புலியூரின் தென்பிடாகை ஆகும். (பிடாகை =சிற்றூர்

இவ்வூரில் குலோத்துங்க சோழன் தெருத் திருவீதி, கோப்பெருஞ் சிங்கன் திருவீதி, ராஜராஜன் தம்பிரான் திருவீதி, எனத் தெருக்களுக்குப் பெயர்கள் இடப்பெற்றிருந்தன. இவ்வூரில் சாலியர்கள் குடியிருப்பதற்குத் திருவம்பலப்பெருமான்புரம் என்னும் பெயருடன் தெரு ஒன்று ஏற்படுத்தப் பெற்றிருந்தது. அத்தெருவில் வசித்து வந்த சாலியர்கள், கோயிலுக்கும், திருக்காமக்கோட்ட முடைய பெரியநாச்சியார்க்கும் சாத்தும் பரிவட்டத்திற்கு வழக்கத்திற்கு 25 இட்டு வந்தனர்

இளநாங்கூர் :- இது பெரும்பற்றப் புலியூரின்போல் பிடாகை ஆகும். இவ்வூர்க்கல்வெட்டில் கங்கைகொண்ட சோழப்பேரிளமை நாட்டு இளநாங்கூரான சுந்தரசோழ பாண்டியநல்லூர் எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

எருக்காட்டுச்சேரி :- இது பெரும்பற்றப்புலியூரின் கீழ்ப்பிடாகை ஆகும். இவ்வூர் கடாரங்கொண்ட சோழப்பேரிளமைநாட்டு எருக் காட்டுச்சேரியான ஜயங்கொண்ட சோழநல்லூர் எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

குமாரமங்கலம் :- இதுவும் பெரும்பற்றப் புலியூரின் கீழ்ப்பிடாகை ஆகும். இது கடாரங்கொண்ட சோழப் பேரிளமைநாட்டுக் குமாரமங்கல மான தில்லை அழக நல்லூர் எனக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

கொற்றங்குடி :- இது பெரும்பற்றப்புலியூரின் கீழ்ப்பிடாகை ஆகும். இது கொற்றங்குடி ஆனை வித்திரமாணிக்கநல்லூர் என்று கல் வெட்டில் கூறப்பெற்றுள்ளது.

நல்லாவி :- இது பெரும்பற்றப்புலியூரின் பிடாகை ஆகும். இதற்கு விக்கிரம சோழநல்லூர் என்ற வேறு பெயரும் உண்டு.

கோயில்பூண்டி :- இக்காலம் கோயிலாம்பூண்டி என்று வழங்கப் பெற்று வருகின்றது. இதற்கு க்ஷத்திரிய சிகாமணிநல்லூர் என்ற வேறு பெயரும் உண்டு.

மிதுனக்குடி :- இது பெரும்பற்றப்புலியூரின் பிடாகையைச் சேர்ந்த தாகும். இதற்குத் தானவிநோதநல்லூர் என்ற வேறு பெயரும் உண்டு.

பார்வதிநல்லூர், சண்டிகேசுவரநல்லூர், மடிபால குலகாலநல்லூர், முதலான ஊர்களும் இப்பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்து இருந்தன. இங்ஙனம் ஊர்களுக்கு இறைவன், இறைவி இவர்களுடைய பெயர்களை யும், அரசர்களுடைய பெயர்களையும் வைக்கப்பெற்றிருந்தன,

**திருநந்தவனங்கள் :-** இக்கோயிலுக்கு அளிக்கப்பெற்ற நிவந்தங்களில் திருநந்தவனப்புறங்கள்தான் மிகுதியாகும். கோப்பெருஞ்சிங்க தேவரின் பன்னிரண்டாவது ஆட்சி ஆண்டில் நடுநிலைநாடான இராசராச வளநாட்டில் வெள்ளாற்றிற்கு வடகரையில் ஆலம்பாடியான குலோத்துங்க சோழநல்லூர்ப் பிடாகை வீரநாராயணநல்லூரில் "தொடர்ந்து அடிமை கொண்டான்" என்ற திருநாமத்தால் திருநந்தவனம் செய்து திருப்பள்ளித் தாமம் ஆக்க பத்துமா நிலம் விடப்பட்டிருந்தது. பாண்டிமண்டலத்தில் தென்வளத்திருக்கை என்னும் ஊரில் இருந்துவந்த ஆட்கொண்டானுகிய நாராயணதேவன் பல்லவரையன் பெரும்பற்றப்புலியூர்ப்பிடாகை எருக்காட்டுச்சேரியில் நந்தவனத்திற்கு நிலம் வாங்கி அளித்திருந்தனன். இது வீரபாண்டியதேவன் கல்வெட்டால் புலப்படுகின்றது. மாறவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி வீரகேரளனுகிய குலசேகரதேவரின் நான்காமாண்டுக் கல்வெட்டினுல் மலையமண்டலத்துப் பள்ளிக்கோடு என்ற ஊரில் இருந்து வந்த ஒருவர் இங்கே நந்தவனத்திற்கு நிலம் அளித்திருந்த செய்தியைக் கூறுகின்றது. தெற்கு இராதாதேசத்தில் இருந்த உடையார் ஈசுவரசிவர் திருப்பள்ளித்தாமம் ஆக்க நிவந்தம் அளித்திருந்தனர். 'இராதாதேசம்' என்பது வங்காள மாகாணத்தில் உள்ளதாகும். மூன்றுங் குலோத்துங்க சோழன் காலத்தில் சயங்கொண்டசோழமண்டலத்துப் புலியூர்க்கோட்டத்துக் குன்றத்தூர்நாட்டுக் குன்றத்தூர் வெண்குளப்பாக்கிழான் அரையன் தில்லைநாயகன் தன் பெயரால் தில்லைநாயகன் திருநந்தவனம் செய்யவும், செய்யும் நால்வர்க்கு நிலமும் வாங்கிவிட்டிருந்தான். இங்ஙனம் வேற்று நாட்டார்களும் நந்தவனங்களுக்கு நிவந்தங்களை ஏற்படுத்தியிருந்தனர்.

**திருப்பாவாடைப்புறம் :-** திருப்பாவாடை என்பது கடவுள் திருமுன் ஆடையில் படைக்கும் அன்னம். புறம் என்பது நிவந்தம். இதன் பொருட்டுப் புவலோகமாணிக்கவளநாட்டுப் பார்வதி நல்லூரில் நிலம் அளிக்கப்பெற்றிருந்தது. இதுபோன்று அளிக்கப்பெற்ற நிவந்தங்கள் பல.

**திருச்சிற்றம்பலமாகாளி :-** இத் திருச்சிற்றம்பலமாகாளி பிடாரி திருச்சிற்றம்பலமாகாளி என்றும் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளனர். இவருடைய கோயில் திருமுற்றமும் திருமடைவிளாகமும் உடையதாய்த் திகழ்ந்தது. இக்காலம் திருமடைவிளாகம் காணப்படவில்லை. இவரது கோயில் நாயகர் திருக்கடலுக்கு எழுந்தருளும் விக்கிரமசோழன் தெற்குத் திருவீதித் தென்பக்கத்து பள்ளிப்படையான விக்கிரமசோழநல்லூரில் அமைந்திருந்தது. பள்ளிப்படையானது இறந்த அரச குடும்பத்தாரைப் புதைக்கும் இடமாகும். சடாவர்மன் சுந்தரபாண்டியனுடைய பதினுன்காம் ஆண்டுக் கல்வெட்டில் இது அக்கன் பள்ளிப்படை எனக் குறிக்கப் பெற்றுள்ளது. விக்கிரமசோழனின் தமக்கையார் இறந்தபின் இங்குப் புதைக்கப்பெற்ற காரணம்பற்றி இப்பெயர் பெற்றதாதல்வேண்டும். இத் திருச்சிற்றம்பலமாகாளி கோயிலிலும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

திருச்சிற்றம்பலம் பொன்வேய்ந்த வரலாறு :- திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்தருளும் நடராசப்பெருமான் சோழ மன்னர்களின் குலதெய்வமாவர். இச்செய்தி "தன்குல நாயகம் தாண்டவம் பயிலும் செம்பொன் அம்பலஞ்சூழ் திருமாளிகையும்" என்னும் திருமழபாடிச் சிவன்கோயிலில் பொறிக்கப்பெற்றுள்ள விக்கிரமசோழனின் கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது. மேலும் இச் சிதம்பரம் சோழமன்னர்களின் முடிசூட்டு நகரங்களிலும் ஒன்றாகும். இது "இராசகேசரிபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் 'தில்லைத் திருநகர் சிறப்புடைத்தாகத் திருமுடி சூடிய' ஸ்ரீகுலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு எட்டாவது" எனத் தொடங்கும் திருமாணிகுழிக் கல்வெட்டுப் பகுதியால் விளங்கும்.

இங்ஙனம் சோழமன்னர்களுக்குச் சிறப்புடையதாய் உள்ள திருச்சிற்றம்பலத்திற்கு அம் மன்னர்கள் பொன்வேய்ந்து பொலிவி செய்தனர். அங்ஙனம் முதல் முதல் பொன்வேய்ந்தவர் முதலாம் ஆதித்தசோழனின் மகனாகிய முதல் பராந்தக சோழர் ஆவர். இதற்குக் கல்வெட்டு ஆதாரம் இல்லை. ஆனால் The large Leiden Grant என்ற இருபத்தொன்று இதழ்கள் அடங்கிய 'செப்புப் பட்டயம்' ஒன்று உண்டு. அதில் முதல் ஐந்து இதழ்கள் வடமொழியிலும், ஏனைய பதினாறு இதழ்கள் தமிழிலும் இருக்கின்றன. இதில் வடமொழியில் உள்ள பகுதி மிக முக்கியமானது. ஏனெனில் பிற்காலச் சோழமன்னர்களின் வம்சாவளியை அது குறிப்பிடுகின்றது. இந்தச் செப்புப்பட்டயம் முதலாம் இராசேந்திரசோழன் (அ) கங்கைகொண்டசோழனின் இருபத்துமூன்றும் ஆண்டில் அதாவது இற்றைக்கு 918 ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டதாகும். அச்செப்பேடு நாகப்பட்டினத்தில் கடாரத்தரசனால் கட்டப்பெற்ற புத்தவிகாரத்திற்கு ஆனைமங்கலம் என்ற ஊரைப் பள்ளிச்சந்தமாகக் கொடுக்கப்பட்டதை உணர்த்துகின்றது. பள்ளிச்சந்தம் என்றால் சைன பௌத்த கோயில்களுக்கு அளிக்கப்பெற்ற நிவந்தமாகும். இந்தச் செப்பேடு இதுபொழுது ஹாலண்டு தேசத்திலுள்ள லெய்டன் பல்கலைக் கழகத்து மியூசியத்தில் இருக்கின்றது. இச் செப்பேட்டில் ஆதித்தசோழன் மகனாகிய முதல் பராந்தகசோழன் வியாக்கிர அக்கிரகாரத்திலுள்ள கோயிலைப் பொன் வேய்ந்தான் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. "He (Paranthaka) the beacon of the Solar race decked the temple of the moon crested at the Vyaghra Agrahara viilage with pure geld brought brom all regions conquered by the valour of his own arm" என்பது ஆங்கில மொழி பெயர்ப்பு. (Epigraphia Indica) இதன்பிறகு முதற் குலோத்துங்கசோழனின் (கி. பி. 1070-1120) திருத்தங்கையார் இராசராசன் குந்தவை ஆழ்வார் தில்லைநாயகர் தம் கோயில் எல்லாம் செம்பொன் வேய்ந்தாள். இச்செய்தியை,

"நானிலத்தை முழுதாண்ட ஜயதரற்கு நாற்பத்து நாலாண்டில்
மீனமிகழ் நாயற்று வெள்ளிபெற்ற உரோகணிநாள் இடபப்போதால்
தேனிலவு பொழிற்றில்லை நாயகர்தங் கோயிலெல்லாம் செம்பொன்
மேய்ந்தா
னேனவரும் தொழுதேத்தும் ராசராசன் குந்தவைப் பூவிந்தையாளே"

என்னும் முதற் பிராகாரத்து வடபுறச் சுவரில் பொறிக்கப்பெற்றுள்ள கல்வெட்டுப் பாடலால் அறியலாம். அதன்பின் திருமழபாடியில் உள்ள விக்கிரமசோழனின் மெய்க்கீர்த்தி கல்வெட்டுப் பகுதி அவன் சிற்றம்பலத்தைச் சூழ்ந்த திருமாளிகை, கோபுரவாசல், கூடசாலைகள், பலிபீடம் இவைகளுக்குப் பொன் வேய்ந்ததைக் குறிப்பிடுகின்றது.

**பேரம்பலத்திற்குச் செப்பு வேய்ந்தது :-** பேரம்பலம் என்பது எதிரம்பலம் ஆகும். இது பேரம்பலம் என்றும், எதிரம்பலம் என்றும் இக்கோயில் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்றுள்ளது. "எதிரம்பலத்துக்கு நடுபொன் செய்யுமிடத்து" என்னும் கல்வெட்டுப் பகுதி இதற்குச் சான்றாகும். செயங்கொண்ட சோழமண்டலத்து மணவிற் கூற்றத்து மணவில் என்ற ஊரின் தலைவன் இதற்குச் செப்பு வேய்ந்தான் என்று அவன்மீது பொறிக்கப்பெற்ற கல்வெட்டுப் பாடல் தெரிவிக்கின்றது.

**மணவில் கூத்தனை காலிங்கராயன் :-** இவன் செயங்கொண்ட சோழமண்டலத்து மணவில் கோட்டத்து மணவில் என்ற ஊரின் தலைவன். இவன் முதற் குலோத்துங்கசோழனது படைத் தலைவன். விக்கிரமசோழன் காலத்திலும் இருந்தான். இவன் 'அரும்பையர்கோன்' என்று இக் கல்வெட்டுக்களில் பாராட்டப்படுகின்றான். 'அரும்பைத் தொள்ளாயிரம்' என்ற நூல் இவன்மீது பாடப்பெற்றதாதல்வேண்டும். இவனது அரசியல் தொண்டைப் பாராட்டி அரசனால் இவனுக்குக் காலிங்கராயன் என்னும் பட்டம் அளிக்கப்பெற்றது. இவன் தில்லையில் அளப்பரிய தொண்டுகள் புரிந்துள்ளான். மூவர் பதிகங்களையும் செப்பேட்டில் எழுதிச் சேர்த்து வைத்தது. சம்பந்தர் பதிகம் ஓத மண்டபம் கட்டியது. தில்லைச் சுடலை அமர்ந்தார் கோயிலைக் கல்லால் கட்டியது, தில்லைப்பேரேரிக்குக் கல்லினால் மதகு அமைத்தது முதலியவைகளாம். இவன் தொண்டுகளைப் பற்றிப் பல அழகான வெண்பாக்கள் இக்கோயிலில் தீட்டப்பெற்றுள்ளன. (See the South Indian Inscription Volume IV) இவ் வெண்பாக்களுள் ஒன்றை அறிந்து இன்புற ஈண்டுக் குறிக்கப்பெற்றுள்ளது.

"நடங்கவின்கொ ளம்பலத்து நாயகச்செந் தேனின்
இடங்கவின்கொள் பச்சையிளந் தேனுக்—கடங்கார்
பருமா ளிகைமேற் பகடுதைத்த கூத்தன்
திருமா ளிகையமைத்தான் சென்று."

**பண்டாரங்கள் :-** திருப்பாவைப் புறத்திருந்து முதலாகப் போனகப் பழநெல் 'நில்லைநாயகன் பெரும் பண்டாரத்தில்' அளக்கப்பெற்று வந்தது. திருநாமத்துக்காணியாகத்தந்த பிரமாணமும், மூலப்பிரமாணங் களும், திருநந்தவனக் குடிவைப்பெல்லாம் நீட்டும், திருக்கை ஓட்டிப் பண்டாரத்தில் ஒடுக்கப்பட்டன

**கோயில் காரியங்களைப் பார்த்து வந்தவர்கள் :-** கோயில் காரியங்களைப் பார்ப்பதற்கு ஸ்ரீ மாகேசுவரக்கண்காணி செய்வார்களும், கோயில்நாயகஞ் செய்வார்களும், திருமாளிகைக்கூறு செய்வார்களும், சமுதாயஞ் செய்வார்களும் ஆகப் பலர் இருந்தனர்.

**See the Annual reports on South Indian Epigraphy for the years 1888 Numbers 115-124, 1892 170-184, 1902 455 468, 1903 390-401, 1913 260-376, 1915 1, 1918 545-551, 1930 610-616, 1935 103-109, 1936 1-18. The South Indian Inscription Volume I Number 155; Valume III Numbers 86-87; Volume IV 220-229; 618-632; Volume VIII Numbers 43-47; 706-717. Epigraphia Indica Volume V pages 103 and 105; and The Pallavas Volume XIII.**

## 37 திருச் சக்கரப்பள்ளி (பக்கம் 121)

திருமால் வழிபட்டுச் சக்கரம் பெற்ற தலமாதலால் இப் பெயர்பெற்றது. "வண்சக்கிரம் மால் உறைப்பால் அடிபோற்றக் கொடுத்தபள்ளி" என்னும் இவ்வூர்ப்பதிக அடியே இதற்குச் சான்றாகும். இது கும்ப கோணத்திலிருந்து தஞ்சாவூர்க்குச் செல்லும் இருப்புப்பாதையில் ஐயன் பேட்டை ரயில்வே நிலையத்திற்கு மேற்கே முக்கால்மைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித்தென்கரைத் தலங்களுள் 17-ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் – சக்கரவாகேசுவரர் இறைவியின் திருப் பெயர் – தேவநாயகி. இலிங்கபுராணம் முதலியவற்றில் சிறப்பித்துச் சொல்லப்பெற்ற ஏழு பதிகளுள் ஒன்று. ஏனையவை. அரிமங்கை, சூல மங்கை, நந்திமங்கை, தாழமங்கை, புள்ளமங்கை, பசுபதிமங்கை என்பனவாம். இத் தலத்தை இந்திரனின் மகனுகிய சயந்தன் வழிபட்டுப் பேறுபெற்றான். இதற்கு ஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று இருக்கிறது.

**கல்வெட்டு வரலாறு:-** இக்கோயில் கல்வெட்டுக்களில், இவ் வூர் குலோத்துங்க சோழவளநாட்டு, விளநாட்டு, இராசேந்திரசோழ சதுர்ப்பேதிமங்கலம் என்று குறிக்கப்பெற்றுள்ளது. மூன்றும் குலோத்துங்க

சோழனின் 12-ஆம் ஆட்சி ஆண்டில், இவ்வூர்ச் சபைக்கு நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்தாம் உறுப்பினராக நிற்க வேண்டுமென்றும் அவர்களும் பத்தாண்டுகள் நிற்காதவர்களாகவும் இருக்கவேண்டு மென்று விதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன இங்ஙனம் விதித்ததனால் எல்லாரும் ஊர்ச்சபையில் பங்கெடுத்துக் கொள்வதற்கு ஒருவாய்ப்பு ஏற்படும். இளம் பருவத்தினரும், அனுபவ முதிர்ச்சி இல்லாதவரும் உறுப்பினராக நிற்பதைத் தடுப்பதற்கு இது வழியாகும்

மூன்றாம் குலோத்துங்க சோழனின் முப்பதாம் ஆண்டுக்கல்வெட்டு, நிலக் குத்தகைக்கு விடப்படுவதற்குச் சில விதிகளை உணர்த்து கின்றன. இதன்படி நில உரிமை உடையவர்களும் நிலத்தை உழுது பயிரிடுபவர் களும் குழப்பமின்றி நிம்மதியாய் இருக்கலாம்.

**See the Annual Report on South Indian epigraphy for the year 1928 Numbers : 113 – 120.**

## 38 திருச் சாத்தமங்கை (பக்கம் 241)

இது இக்காலம் சீயாத்தமங்கை என்று வழங்கப்பெறுகின்றது. ஊரின் பெயர் சாத்தமங்கை. இது சாந்தை என மரூஉ மொழியாகவும் வரும். இங்குள்ள கோயிலின் பெயர் அயவந்தி பிரமனால் பூசிக்கப்பெற்ற காரணம்பற்றி அயவந்தி என்னும் பெயர் ஏற்பட்டது என்பர்.

திருநள்ளாற்றுக்குத் தென்மேற்கே ஐந்துமைல் தூரத்தில் இருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லாவில் நன்னிலம் இரயில்வே நிலையத்திலிருந்தும் செல்ல லாம். காவிரிக்குத் தென்கரையிலுள்ள தலங்களில் பதினெட்டாவது ஆகும். இறைவரின் திருப்பெயர் அயவந்தீசுவரர். இறைவியின்பெயர் மலர்க்கண்ணம்மை. இது திருநீலநக்க நாயனார் அவதரித்த திருப்பதி. "நிறையினார் நீலநக்கன் நெடுமாநகரென்று தொண்டர் அறையும் ஊர் சாத்தமங்கை அயவந்தி" என்னும் தேவாரப் பகுதியாலும், சேக்கிழார் பெரியபுராணத்தாலும் இதை அறியலாம். இந்நாயனார் தம் மனைவியா ருடன் இறைவனை வழிபடத் திருக்கோயிலுக்குச் சென்றார். அதுபொழுது ஒரு சிலந்திப்பூச்சி சிவலிங்கத்தின்மீது விழுந்தது. மனைவியார் அன்பு மேலீட்டினால் அப்பூச்சியை வாயால் ஊதி அகற்றினார். இதைப்பார்த்த நாயனார் தமது மனைவியாரின் இச் செயல் தகாதது என்று எண்ணி அவரைத் துறந்தனர். மனைவியாரும் வீடு செல்லாது கோயிலில் இருந் தார். அன்று இரவு நாயனார் தூங்குகையில் சிவபெருமான் அவருடைய கனவில் தோன்றி அவர் மனைவியார் ஊதின இடந்தவிர ஏனைய இடமெல் லாம் சிலந்தியின் கொப்புள் (கொப்புளம்) இருப்பதைக் காட்டி அவ்

வம்மையாருடைய அன்பின் பெருக்கை வெளிப்படுத்தி அவரை நாயனாரோடு கூட்டுவித்த பெருமைவாய்ந்த பதி. திருஞானசம்பந்தப்பெருந்தகையார் இப்பதிக்கு எழுந்தருளியபோது திருநீலநக்கர் அவரை வரவேற்று, அவருடைய நட்பைப் பெற்றதும் இப்பதியில்தான். சம்பந்தப் பெருந்தகையாரும் "அருகன் நக்கன்பரவ அயவந்தி அமர்ந்தவனே" எனத் திருநீலநக்கரைப் பாராட்டியிருப்பது போற்றற்குரியது. இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்த் திருக்கோயிலில் சோழமன்னர்களில் "பூமேவிவளர்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய இராசகேசரிவர்மனாகிய திரிபுவனச்சக்கரவர்த்தி குலோத்துங்கசோழ தேவர், திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராசதேவர் இவர்கள் காலங்களில் செதுக்கப்பெற்ற ஆறு கல்வெட்டுக்களும் ஒரு தமிழ்ச் செய்யுளும் ஆக ஏழு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக் கல்வெட்டுக்களில் இவ் வூரின் பெயர் சாத்தமங்கலம், சாத்தமங்கை எனவும்; திருக்கோயிலின் பெயர் அயவந்தி என்றும்; இறைவரின் திருப்பெயர் அயவந்தி உடையார் என்றும் குறிக்கப்பெற்றுள்ளன. திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராசசோழ தேவரின் பதின்மூன்றும் ஆண்டில் கணிச்சைப்பாக்கத்துத் திருவேகம்ப உடையார் இவ்வூரில் முடிகொண்டசோழப் பேராற்றங்கரையில் ஒரு தண்ணீர்ப்பந்தரை ஏற்படுத்தி அதற்கு நில நிவந்தம் அளித்திருந்தனர். அத் தண்ணீர்ப்பந்தல் நடைபெறாது இருந்தமையால், சாத்தமங்கலத்துச் சபையார் அந்நிலத்தை அத்திருவேகம்பனால் திருச்செங்காட்டங்குடியில் ஏற்படுத்திய சிறுத்தொண்டன் திருமடத்திற்குக் கொடுத்துவிட்டனர். செய்யுள் வடிவில் உள்ள கல்வெட்டு இறைவர் இறைவியாரின் புகழைப் பற்றி கூறுகின்றது. ஏனைய கல்வெட்டுக்கள் நுந்தாவிளக்குகளுக்கு நிபந்தங்கள் அளித்ததைப்பற்றிக் கூறுகின்றன. இக்கோயிலில் சிறுத்தொண்ட நாயனாரின் பிரதிமம் இருந்ததைப்பற்றி திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராச தேவரின் இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1922. Numbers 72 - 78.

## 38 திருச் சிறுகுடி (பக்கம் 458)

இது பேரளம் ரயில்வே நிலையத்திற்கு மேற்கே ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. இறைவர் திருப்பெயர் - மங்களேசுரர். இறைவி திருப்பெயர் – மங்களநாயகி. கருடனும் கந்தருவரும் செவ்வாயும் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது

## 39 திருச் சிற்றேமம் (பக்கம் 177)

இது பட்டுக்கோட்டையிலிருந்து அறந்தாங்கிக்குச் செல்லும் இருப்புப்பாதையில் உள்ள திருச்சிற்றம்பலம் என்னும் ஊராகும். இக்கோயிலிலுள்ள பழைய கல்வெட்டுக்கள் எல்லாம் இவ்வூரைச் சிற்றேமம் என்றே குறிப்பிடுகின்றன.

இறைவர் திருப்பெயர் – சிற்றேமமுடையமகாதேவர். இறைவியின் திருப்பெயர் – மானேர்விழிநன்மாது. இப்பெயர் இவ்வூர்ப்பதிகத்தில் "திருவாருஞ்சிற்றேமத்தான் 'மானேர்விழி நன்மாதொடும்' மகிழ்ந்தமைந்த நல்லானே" எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

குறிப்பு:- திருத்துறைப்பூண்டித் தாலூகாவில் பொன்னிரை என்னும் ரயில்வே நிலையத்திற்கு வடக்கே நான்கு மைல் தூரத்திலுள்ள சிற்றாய்மூரைத் திருச்சிற்றேமம் என்று மக்கள் வழங்குவது பெருந் தவறாகும். சிற்றாய்மூரிலுள்ள கல்வெட்டுக்கள் அவ்வூரைச் சிற்றாமூர் என்று கூறுகின்றன. அப்பர் சுவாமிகள் அவதரித்தருளிய திருவாமூரின் வேறு என்பதற்குச் சிற்றாமூர் என்று இது வழங்கப்பெற்றதாதல்வேண்டும்

**கல்வெட்டு வரலாறு :-** இவ்வூர்க் கோயிலில் சோழ மன்னர்களில் மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன், இராசகேசரிவர்மன், இராசேந்திர சோழதேவன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழதேவன் இவர்கள் காலங்களிலும்; பாண்டியர்களில் வரகுணமகாராசன், வல்லப தேவனுகிய தெய்வ வீரபாண்டியன், மாறவர்மனுகிய திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவன் இவர்கள் காலங்களிலும்; விசயநகர வேந்தர்களில் வேங்கடபதி ராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கோயிலில் உள்ள மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மர், வரகுணமகாராசர், முதலானேர் கல்வெட்டுக்களில் இவ்வூரின் பெயர் திருச்சிற்றேமம் என்றும், சகம் 1381 அதாவது கி. பி 1459 இல் ஏற்பட்ட கல்வெட்டில் இவ்வூரின் பெயர் திருச்சிற்றம்பலம் என்றும்; இறைவரின் திருப்பெயர் திருச்சிற்றேமத்து மகாதேவர், திருச்சிற்றேம முடையார், பழையவனத் தம்பிரானுர், பழையவனப்பெருமாள் எனவும் கூறப்பெற்றுள்ளன. இங்குக் குறித்த இறைவரின் திருப்பெயர்களுள் பழையவனப்பெருமாள் என்பது மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டிலும், பழையவனத் தம்பிரானுர் என்பது வேங்கடபதிராயர் காலத்துக் கல்வெட்டிலும் குறிக்கப்பெற்றுள்ளன. இவ்வூர், இராசராச வளநாட்டு, வெட்டாறுநாட்டுப் புன்றிற் கூற்றத்துக்கு உட்பட்டிருந்தது.

அம்மன்கோயில் மண்டபத்துத் தூண் ஒன்றில் உள்ள கல்வெட்டு, அத்தூண் முத்தன்ராமனுடைய முதுமகன் பரியாரால் கொடுக்கப்பட்டது. என்பதைத் தெரிவிக்கின்றது. வீரபாண்டிய தேவரும், இத்திருவூர்ச் சபையாரும், பிறரும் சிவபெருமானுக்கு நிலங்கள் அளித்திருந்தனர். இவ்வூர்க்குளத்திற்குத் தண்ணீர்வர, திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவர்காலத்தில் ஒரு வாய்க்கால் வெட்டப்பெற்றது.

See the Annual reports on South Indian Epigraply for years. 1926 Numbers. 176-913.

## 40 திருச் சீகாழி

இரண்டாம் திருமுறையிற் காண்க.

## 41 திருச் செங்காட்டங்குடி (பக்கம் 260)

கயமுகாசுரனை விநாயகக்கடவுள் கொன்றபொழுது இரத்தம் வெள்ளமாகப் பெருகி ஓடிய காரணத்தால் செங்காடு என்னும் பெயர் பெற்றது. இச்செய்தி,

"ஏடவிழ் அலங்கல் திண்தோள் இபமுகத்து அவுணன் மார்பில்
நீடிய குருதிச் செங்நீர் நீத்தமாய் ஒழுகும் வேலைப்
பாடுற வருங்கான் ஒன்றிற் பரந்தலின் அதுவே செய்ய
காடெனப் பெயர்பெற்று இன்னும் காண்டக இருந்தது அம்மா"

என்னும் கந்தபுராணம், கயமுகன் உற்பத்திப்படலத்திலுள்ள செய்யுளால் அறியப்படுகின்றது.

ஊரின் பெயர் செங்காட்டாங்குடி ஆயினும் அங்குள்ள கோயிலுக்குக் கணபதீச்சுரம் என்று பெயர். கயமுகாசுரனைக் கொன்ற பாவம் நீங்கும் பொருட்டுக் கணபதியால் சிவலிங்கம் ஒன்றை எழுந்தருளச்செய்து பூசிக்கப்பெற்றமையின் இப்பெயர் எய்திற்று இந்நிகழ்ச்சியைக் "கரிமுகத் தவுணற் காய்ந்து கரிமுகத் தண்ணல் பூசை புரிசிவ நகர மீது" என்னும் திருவிளையாடற்புராணம் அருச்சனைப்படலத்து அடிகளாலும் அறியலாம்

நன்னிலம் ரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே சுமார் நான்கு மைல் தூரத்திலுள்ள திருப்புகலூர்க்குச்சென்று, அங்கிருந்து தெற்கிலுள்ள முடிகொண்டான் ஆற்றைக் கடந்து, திருக்கண்ணபுரத்தை அடைந்து

அங்கிருந்து கிழக்கே ஒருமைல் தூரம் சென்றால் இவ்வூரை அடையலாம். இது காவிரிக்குத் தென்கரையிலுள்ள தலங்களுள் 79-ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் - கணபதீச்சுரர். இறைவியின் திருப் பெயர் - திருக்குழல் நன்மாது. இப்பெயர், திருகுகுழல் உமைநங்கை. என அப்பர் பெருமானால் ஆளப்பெற்றுள்ளது. மரம் - திருவாத்தி, இது உற்சவமூர்த்தி சந்நிதிக்கு எதிரில் இருக்கிறது. தீர்த்தம - சூரிய தீர்த்தம்.

சிறுத்தொண்ட நாயனார் தம் அருங்குடிக்கு ஒரு மகனாகிய சீராளன் என்னும் சிறுவனைப் பயிரவவேடம் பூண்டு வந்த சிவபெருமானுக்குக் கறியமுது ஆக்கி அளித்துப் பிறகு அப்பெருமானுடைய அருளால் அக்குழந்தை உயிர்பெற்ற தலம். சிறுத்தொண்ட நாயனார், அவரது மனைவியார் திருவெண்காட்டு நங்கை, குழந்தை சீராளர், தோழி சந்தன நங்கை இவர்களின் பிரதிமங்கள் உற்சவமூர்த்தி சந்நிதிக்கு எதிரில் இருக்கின்றன.

இவ்வூர்த் தெற்குவீதி மேலக்கோடியில் இருக்கும் சிறுத்தொண்ட நாயனார் திருமடமே முற்காலத்தில் அவர் வாழ்ந்த வீடு என்று முதியோர் கூறுகின்றனர். அம்மடத்தில் அமுதுகேட்க ;எழுந்தருளிய உத்தராபதீசு வரரின் திருமேனி இருக்கிறது. அமுதுபடையல் திருவிழா ஆண்டு தோறும் சிறக்க நடைபெற்று வருகின்றது. சிறுத்தொண்ட நாயனார்க்கும், அவரது மனைவியார் முதலானோர்க்கும் அருள்செய்யும்பொழுது இறைவர் மலைபயந்ததையலோடும், சரவணத்துத் தனயரோடும் எழுந்தருளி காட்சியளித்து, அவர்களைத் தம்சேவடிக்கீழ் என்றும் பிரியாது இறைஞ்சி இருக்க உடன்கொண்டு ஏகின பெருமைபெற்ற பதி இது. இத்தலத்துப் பதிகத்தில், திருஞானசம்பந்தப் பெருந்தகையார், சிறுத்தொண்டரை, 'செங்காட்டாங்குடிமேய சிறுத்தொண்டன்,' 'கல்நவில்தோள் சிறுத் தொண்டன்' 'சிட்டான் சீர்ச்சிறுத்தொண்டன்' 'தேனமர்தார்ச் சிறுத்தொண் டன்' சீருலாம் சிறுத்தொண்டன், 'செருவடிதோள் சிறுத்தொண்டன்' 'சீராளன் சிறுத்தொண்டன்' சிறப்புலவன் சிறுத்தொண்டன், எனச் சிறுத்தொண்டரையும், அவரது புதல்வர் சீராள தேவரையும் பாராட்டி யுள்ளனர். : இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு :-** இவ்வூர்க் கோயிலில் சோழமன்னர்களில் இராசகேசரிவர்மனாகிய இராசராசதேவன் I, இராசகேசரிவர்மராகிய உடையார் ஸ்ரீ இராசாதிராசதேவன் I, திரிபுவனச்சக்கரவர்த்தி இராச ராசதேவர் II, பரகேசரிவர்மராகிய திரிபுவனச்சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவர் III, இராசராசசோழன் III, பரகேசரிவர்மனாகிய திரிபுவனச்

சக்கரவர்த்தி இராசேந்திரசோழதேவன் இவர்கள் காலங்களிலும்; விசய நகர வேந்தர்களில் வீரவிருப்பண்ண உடையார், வீரபூபதியார், வீரப் பண்ண உடையார், இவர்கள் காலங்களிலும்; கோனேரிதேவமகாராசர் காலத்திலும் வெட்டப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல் வெட்டுக்களில் இறைவர் கணபதீச்சரமுடைய நாயனார், கணபதீச்சர முடைய மகாதேவர் என்னும் பெயர்களாலும், பிக்ஷாடனர் (ஓடேந்திச் செல்வர்) உத்திராபதிநாயகர் என்னும் பெயராலும் குறிக்கப்பெற்றுள் ளனர்.

இவ்வூர் முதலாம் இராசராசசோழனின் பத்தொன்பதாம் ஆண்டுக் கல்வெட்டில் மும்முடிச்சோழவளநாட்டு மருகல்நாட்டுச் செங்காட்டங்குடி என்றும், முதலாம் இராசாதிராசனின் முப்பத்திரண்டாம் ஆண்டுக் கல் வெட்டில் க்ஷத்திரியசிகாமணிவளநாட்டு மருகல்நாட்டுச் செங்காட்டங்குடி என்றும், மூன்றுங்குலோத்துங்கசோழன் கல்வெட்டிலும் வீரவிருப்பண்ண உடையார் கல்வெட்டிலும் செயமாணிக்கவளநாட்டு மருகல்நாட்டு திருச் செங்காட்டங்குடி என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

திருவிழா :- இக்கோயிலில் சித்திரைமாதப் பரணியில் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றுவந்தது. அன்று உத்திராபதியார் சிறுத்தொண்ட நம்பிக்கு முத்தியளிக்கும் பொருட்டு, திருமுத்துவநெறி மண்டபத்திற்கு எழுந்தருளுவது வழக்கம். அதன்பொருட்டு மூன்றும் இராசராசசோழ னின் இருபத்துநான்காம் ஆண்டில் அரசூருடையான் திருச்சிற்றம்பலம் உடையானான திருச்சிற்றம்பலப் பல்லவராயன் நில நிவந்தம் அளித் திருந்தான். சித்திரைத் திருவாதிரையிலும் இக்கோயிலில் திருவிழா நடந்துவந்தது. அன்று சீராளதேவரை சிறுத்தொண்டநம்பி மண்டபத்திற்கு எழுந்தருளச்செய்வதுண்டு. அன்று விழாவிற்கு எழுந்தருளும் அடியார் களுக்கு உணவு அளிக்கும் பொருட்டு முதலாம் இராசராசசோழன் காலத்தில் நில நிவந்தம் செய்யப்பெற்றிருந்தது.

திருப்பணிகள் :- இத்திருக்கோயிலின் மூன்றும் திருச்சுற்றையும் (பிராகாரத்தையும்) அதனைச் சூழ்ந்த திருமடவிளாகத்தையும் கட்டுவதற்கு மூன்றுங் குலோத்துங்கசோழதேவர் காலத்தில் நிலம் வாங்கப்பெற்றது. வாதாபிகணபதிக் கோயிலைக் கட்டியவன் புதுவூர் வட்டவார்சடையன் இராசசூரியபல்லவரையனுவன். சீராளதேவப் பிள்ளையாரை செங்காட் டங்குடியில் சிறுத்தொண்டதேவர் மண்டபத்திலிருந்து திருமருகலுக்கு எழுந்தருளச்செய்வதற்கு மூன்றும் குலோத்துங்கசோழதேவர் காலத்தில் ஒரு பெருவழி ஏற்படுத்தப்பெற்றது.

திருமடம்:- இவ்வூரில் சீராளன் சிறுத்தொண்டன் மடம் என்னும் பெயருள்ள மடம் ஒன்று இருந்தது. இச்செய்தி பராக்கிரமபாண்டிய தேவரின் ஏழாம் ஆண்டுக் கல்வெட்டில் கூறப்பெற்றுள்ளது.

**See the Annual report on South Indian Epigraphy for the year 1913 Numbers 51-82.**

## 42 திருச்சேறை (பக்கம் 402)

இது உடையார் கோயில் என்று வழங்கப்பெறுகின்றது. இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே ஒன்பது மைல் தூரத்தில் இருக்கின்றது. இறைவரின் திருப்பெயர் – செந்நெறியப்பர். இறைவியின் திருப்பெயர் – ஞானவல்லி. தௌமிய ரிஷி பூசித்துப் பேறுபெற்றதலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு திருப்பதிகங்கள் இருக்கின்றன.

இவ்வூர்க் கோயிலில் திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழ தேவரின் ஐந்தாமாண்டிலும் 27-ம் ஆண்டிலும் பொறிக்கப்பெற்ற இரண்டு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவரின் திருப்பெயர் திருச்செந்நெறியுடையார் என்று குறிக்கப்பெற்றுள்ளது. இறைவர் சித்திரை மாதத்துச் சுவாதி நட்சத்திரத்தில் இராசநாராயணப் பேராற்றுக்குத் தீர்த்தங்கொடுத்தற் பொருட்டு எழுந்தருளுவது உண்டு, இராசசுந்தரச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார் நிலநிவந்தம் அளித்திருந்தனர். அச்சபையாரே இக்கோயிலில் உள்ள உமாமகேஸ்வர தேவர்க்கும் இறையிலியாக நிலநிவந்தம் அளித்திருந்தனர்.

**See the Annual report on South Indian epigraphy for the year 1931-32 Numbers 141-142.**

## 43 திருத்தண்டலைநீள்நெறி (பக்கம் 207)

தண்டலை என்பது இக்காலம் தண்டலைச்சேரி என வழங்கப் பெறுகின்றது. ஊரின் பெயர் தண்டலை. இங்குள்ள கோயிலின் பெயர் நீள்நெறி. இது திருத்துறைப்பூண்டி ரயில்வே நிலையத்திற்கு இரண்டு மைல் தூரத்தில் இருக்கின்றது. மணலி ரயில்வே நிலையத்தில் இறங்கியும் இவ்வூர்க்குச் செல்லலாம். இது காவிரித்தென்கரைத் தலங்களுள் 110-ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் நீள்நெறிநாதர். இறைவி திருப்பெயர் - ஞானாம்பிகை. மரம் - குருந்தம்.

இது, ஆமை அவதாரங்கொண்ட திருமால் செருக்குற்றுக் கடலைக் கலக்கச் சிவபெருமான் அதன் செருக்கை அடக்கி, அதன் ஓட்டை அணிந்தருளிய பதி. இது கோச்செங்கட் சோழனால் கட்டப்பெற்ற மாடக்கோயில்களுள் ஒன்று. இச்செய்தி "செம்பியன் கோச்செங்கண் நிருபர் தண்டலைநீணெறி காண்மினே" என்னும் இவ்வூர்க்குரிய சம்பந்தர் பதிக அடிகளால் விளங்கும். இது அரிவாட்டாய நாயனார் சிவபெருமானுக்குச் செந்நெல் அரிசி, மாவடு, செங்கீரை, இவைகளை நாடோறும் நிவேதித்து வீடுபேறு அடைந்த தலம். அரிவாட்டாய நாயனார் அவதரித்த கணமங்கலம், தண்டலைக்குக் கிழக்கே அரை மைல் தூரத்தில் இருக்கிறது. நீள்நெறிக்கோயிலில் அரிவாட்டாய நாயனார், அவரது மனைவியார் இவர்களின் பிரதிமைகள் இருக்கின்றன. தண்டலையார் சதகம் என்னும் பழமொழியோடு பல நீதிகள் பொருந்திய நூல் அச்சில் வெளி வந்துள்ளது. அதை இக்காலம் விரும்பிப் படிப்பவர் மிகச்சிலரேயாவர். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று உள்ளது.

## 44 திருத் திருந்துதேவன்குடி (பக்கம் 113)

இக்காலம் நண்டாங்கோயில் என்று வழங்கப்பெறுகின்றது. இது திருவிடைமருதூர் ரயில்வே நிலையத்திற்கு வடமேற்கே 4½ மைல் தூரத்தில் இருக்கிறது. கும்பகோணத்திற்குக் கிழக்கில் நான்கு மைல் தூரத்தில் உள்ள திருவியலூர்க்குச் சென்று, அங்கிருந்து வடக்கே ஒருமைல் சென்றால் கோயிலை அடையலாம். திருந்துதேவன்குடி என்னும் ஊர் இக்காலத்தில் இல்லை. கோயில் மாத்திரம் இருக்கிறது. ஊர் இருந்த இடம் நன்செய் நிலங்களாக இருக்கின்றன. கோயிலைச்சுற்றி மூன்று பக்கமும் அகழிகள் இருக்கின்றன. இது காவிரி வடகரைத் தலங்களுள் 42-ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் - கற்கடேசுவரர். (கற்கடம் = நண்டு) இறைவியின் திருப்பெயர் - அருமருந்து அம்மை. நண்டு பூசித்துப்பேறெய்திய தலம். பெருமானுடைய தலையில் துவாரம் இருக்கிறது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

## திருப் பாசுரம் பொது

இது திருமதுரைக்கு உரியதே.

# 45 திருத் துருத்தியும் வேள்விக்குடியும் (பக்கம் 424)

திருத்துருத்தி - இதை இரண்டாம் திருமுறையில் உள்ளவற்றோடு இதற்கண்டவற்றைச் சேர்க்க.

**வேள்விக்குடி:** சிவபெருமானின் திருக்கல்யாண வேள்வி நடந்த தலமாதலின் இப்பெயர் பெற்றது. மாயூரம் - கும்பகோணம் இருப்புப் பாதையில் குற்றாலம் ரயில்வே நிலையத்திலிருந்து வடகிழக்கே சுமார் இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. காவிரியின் வடகரைத் தலங்களில் 23-ஆவது ஆகும்.

இறைவன் திருப்பெயர் - கல்யாணசுந்தரேசுவரர். இறைவியின் திருப்பெயர் - பரிமளசுகந்தநாயகி. இத்தலம் திருத்துருத்தியோடு சேர்த்துப் பாடப்பெற்றிருக்கிறது. இறைவர் பகற்காலத்தில் வேள்விகுடியிலும், இரவில் திருத்துருத்தியிலும் எழுந்தருளியிருப்பதாகப் பதிகத்தால் அறியக்கிடக்கின்றது.

**கோயிலைக் கட்டியவர் :-** இத் திருக்கோயிலைக் கருங்கல்லால் கட்டியவர் உத்தமசோழனது தாயாராகிய செம்பியன்மாதேவியாராவர். இச்செய்தி இக்கோயில் கருப்ப இல்லின் பின்புறச் சுவரின் கிழக்கிலும் வடக்கிலும் பொறிக்கப்பெற்றுள்ள " இத் திருக் கற்றளி எடுப்பித்து இ தேவர்க்.........ஸ்ரீ உத்தமசோழதேவரைத் திருவயிறுவாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன்மாதேவியார் கோராசராசகேசரிபன்மர்க்கு ஆண்டு எ-வதில் " என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது.

**கோயில் கட்டப்பெற்ற காலம் :-** ஈண்டுக் குறிக்கப்பெற்றுள்ள இராசகேசரிவன்மர் என்பவர் முதலாம் இராசராசமன்னராவர். இவர் கி. பி. 985 முதல் 1014 வரை சோழமண்டலத்தை ஆண்டவர். இவர் அரியணை ஏறிய கி. பி. 985 உடன் ஏழைக் கூட்ட கி. பி. 992 ஆகின்றது. எனவே கோயில் கட்டப்பெற்று இற்றைக்கு 963 ஆண்டுகள் ஆகின்றன.

**கோயில் நிலைபெற்றுள்ள இடம் :-** இத்திருக்கோயில் சிவநெறிக் குரவராகிய திருநாவுக்கரசுப்பெருந்தகையார் காலத்தில் (கி. பி. ஏழாம் நூற்றுண்டில்) காவிரியின் நடுவில் இருந்தது. இச்செய்தி " பொன்னியின் நடுவுதன்னுள் பூம்புனல் பொலிந்து தோன்றும் துன்னிய துருத்தியானை " என்னும் அவரது தேவாரப் பகுதியால் விளங்கும். அது கருதியே இதற்குத் துருத்தி என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. துருத்தி எனினும் அரங்கமெனினும் ஒக்கும். துருத்தி என்பதற்கு ஆற்றிடைக் குறை என்பது பொருள். ஒன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில்

இருந்த சுந்தரமூர்த்திநாயனார் இக்கோயில் இறைவனைக் “காவிரி வடகரை உறைவார்” எனக் குறிப்பிடுகின்றார். எனவே சுந்தரர் காலத்தில் இது காவிரிக்கரைக் கோயிலாக விளங்கிற்று. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சிபுரிந்தவனும் முதலாம் இராசராசசோழன் கல்வெட்டு இக்கோயிலைக் காவிரித் தென்கரைக் கோயில் என்றே குறிப்பிட்டுள்ளது. இச்செய்தியைப் “ [illegible] கோவிராசகேசரி பன்மற்கு ஆண்டு பதி (17) ஆவது தென்கரை உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் தேவதானம் திருத்துருத்தி சொன்னவாறு அறிவார் ஆடுகின்ற பொற்பலகைக் கிடங்குகட்கு” என்னும் கல்வெட்டுப் பகுதி அறிவிக்கின்றது.

**இறைவரின் திருப்பெயர் :-** இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர்க்குச் சொன்னவாறு அறிவார், கற்றளியுடையமகாதேவர், வீங்கு நீர்த்துருத்தியுடையார் என்னும் பெயர்கள் வழங்கப்பெற்றுள்ளன. இவற்றுள் கற்றளியுடைய மகாதேவர் என்ற பெயர் கங்கைகொண்ட சோழனது நான்காம் ஆண்டுக் கல்வெட்டில்தான் முதன்முதல் காணப்படுகின்றது.

**திருக்கோயிலின்பெயர் :-** இக்கோயில் வீங்குநீர்த்துருத்தியுடையார் கோயில், சொன்னவாறறிவார்கோயில், செய்யபாதத்தோர்கழல்வலார் பொற்கோயில் என்னும் பெயர்களால் கூறப்பெற்றுவந்தது.

**வழிபாடு :-** இத் திருக்கோயிலில் சிறுகாலை, உச்சியம்போது, அந்திப்போது, அர்த்தயாமம் என்னும் நான்கு காலங்களில் வழிபாடுகள் நடைபெற்றுவந்தன.

**திருவமுது வகைகள் :-** வழிபாடு நடக்கும் காலங்களில் பயற்றுப் பொங்கல், (கும்மாய அமுது) பருப்பமுது, தயிரமுது ஆகிய இவைகள் பொறிக்கறியமுதுகளுடன் நிவேதிக்கப்பட்டுவந்தன.

**வாத்தியங்களும் பிறவும் :-** வழிபாடு நடக்கும் நேரங்களில் பறை ஒன்று, மத்தளம் நான்கு, சங்கு இரண்டு, காளம் இரண்டு, சேகண்டிகை ஒன்று, தாளம் ஒன்று, கைம்மணி இரண்டு இவைகள் ஒலிக்கப்பெற்று வந்தன. நடனமும் இருந்துவந்தது.

**ஆண்டு விழா :-** இக்கோயிலில் வைகாசித்திங்களில் விசாகத்தில் திருவிழா நடந்துவந்தது. இச்செய்தி “இதில் உடையார் சொன்னவா றறிவார் வைகாசித் திருநாள் திருவெழிச்சிக்கு வண்ணெண்செய் நிலம் காலும், கும்பிடவந்து பூசித்தார். அமுதுசெய்கைக்கு நிலம் முக்காலே அரைமா அரைக்காணியும் ஆக நிலம் சந்திராதித்தவரை இறையிலியாக நாங்களே அநுபவிக்கக் கடவோமாகவும்” என்னும் விக்கிரமசோழனது

எட்டாம் ஆண்டிற் செதுக்கப்பெற்ற கல்வெட்டால் பெறப்படுகின்றது. முதலாம் இராசராசன் கல்வெட்டிலும் இவ்விழா குறிக்கப்பெற்றுள்ளது.

**அம்மன் கோயிலைப்பற்றிய செய்திகள்:-** சகம் 1552 இல் அதாவது கி. பி. 1630 இல் நாச்சியார்கோயில் சுற்றுமதில், உள்மதில், கோபுரம் இவைகள் பிப்பிலி சிதம்பர தீட்சதரால் கட்டப்பெற்றுள்ளன.

**பிற செய்திகள் :-** இக்கோயிலுக்குக் கல்யாண ஆலயம் என்று பெயர் வைக்கப்பெற்றிருந்தது என்பதைக் கிரந்தத்தில் பொறிக்கப்பெற்றுள்ள ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது. இவ்வூருக்கு அருகே வடபாலுள்ள கண்டியூர் இக்கோயிற் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. அது விக்கிரமசோழன் கல்வெட்டில் காணப்படுவதால் பழைமை வாய்ந்த ஊராதல் வேண்டும்.

**நாட்டின் பாகுபாடு :-** இவ்வூர் முதலாம் இராசராசசோழன் காலத்தில் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருவழுந்தூர்நாட்டில் அடங்கியிருந்தது. இவ்வளநாடு காவிரிக்கும் அரிசிலாற்றிற்கும் இடைப்பட்ட நிலப்பரப்பாகும். முதற் குலோத்துங்கசோழன் காலத்தில் இவ்வளநாட்டின் பெயர் மாற்றப்பட்டு, இராசநாராயண வளநாடு என்னும் பெயருடன் திகழ்ந்தது. மூன்றாங் குலோத்துங்கன் காலத்தில் இந்த இராசநாராயணவளநாடு சயங்கொண்டசோழவளநாடு என்னும் பெயர்பெற்றது.

**கோயிலின் நிர்வாகச் சிறப்பு:-** கோயில் குருக்கள் திருவாராதனை செய்யும் பிராமணர் என்றும், திருவாராதனை செய்யும் நம்பி என்றும், வழங்கப்பெற்றுள்ளனர். அவர்க்கு நாடோறும் நெல் லுப்பதக்கு நானாழியாக ஓராட்டைக்கு நெல் எழுபத்தைந்து கலங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. கோயில் பிராமணப்பிள்ளை திருவமுதாக்குதல், திருமஞ்சன நீரெடுத்தல், திருமெய்ப்பூச்சுத்தேய்த்தல் (சந்தனம் அரைத்தல்) விதானம் பிடித்தல் ஆகியவைகளைச்செய்து வந்தனர். அவர்க்கு நிசதம் நெல் குறுணி இருநாழியாக ஓராட்டை நாளைக்கு நாற்பத்தைங்கலங்கள் கொடுத்து வந்தனர். திருப்பள்ளித்தாமம் பறித்துத் தொகுப்பார்க்கு நிசதி நெல் குறுணி நானாழியும், திருவலகிடல் திருமெழுக்கிடல் இவைகளைச் செய்வார்க்கு நிசதி நெல் குறுணி இருநாழியும் திருமெய்க்காப்பார் இருவர்க்கு நிசதி நெல் முக்குறுணியும், கரணத்தான் ஒருவனுக்கு நிசதி நெல் பதக்கும், இராசநீதி ஓடி செய்வார்க்கு நிசதி நெல் பதக்கும், ஸ்ரீகாரியஞ் செய்வானுக்கு நிசதம்பதக்காக ஓராட்டைக்கு நெல்லு அறுபதின்கலமும், திருப்பதியம் பாடுவார் இருவர்க்கு நிலம் எழுமாவரையும் ஆகச் சம்பளங்கள் கொடுக்கப்பெற்று வந்தன. இவைகளை எல்லாம் அக்காலம் நல்ல சம்பளங்களாகக் கருதுதல் வேண்டும்.

**வேள்விக்குடி கோயில் கட்டப்பெற்ற காலம் :-** இக்கோயிலில் உள்ள பழமைவாய்ந்த கல்வெட்டுக்கள் எல்லாம் "கோப்பரகேசரி பன்மற்கு" என்று தொடங்குகின்றன. இப்பரகேசரி என்னும் சோழன் பராந்தகன் I ஆதல்வேண்டும். எனவே முதலாம் ஆதித்த சோழனது மகனாகிய பராந்தகன் I காலத்தில் இக்கற்றளி எடுப்பிக்கப்பெற்றதாகும்.

**கோயிலைக் கட்டியவர் :-** இத்திருக்கோயிலில் வாலக்காற்படை மட்டுஞ் செய்வித்துத் தாழப்படையும் பதினைந்து கல்லுஞ் செய்வித்தார் நல்லூர்நாட்டுத் திருநல்லூர் கச்சுவன் காடன் கொட்டியானை திருவையாறு யோகியாவர். இத்திருக்கற்றளியில் நாலோபாதி கற்றளியைக் கட்டியவர் திருவேள்விக்குடி நம்பியார் திருவையாறு யோகியாகும். அவரது மகனாகிய ஸ்ரீகர்ண திருக்கற்றளிப் பிச்சரும் ஆவர். மகாமண்டபத்தின் கிழக்கில் எடுத்துக்கட்டி கடலங்குடியில் இருந்த திருவரங்க தேவனென கங்கை கொண்ட சோழ விசயபாலனால் கட்டப்பெற்றதாகும். அர்த்த மண்டபத்து வாசல் நிலைக்கல்லைச் செய்வித்தான் திலைக்களத்து வாடி சாந்து எழுது கின்ற பெரிய கிழவன் பட்டன் தேவன் ஆவான்.

**கற்கள் உதவியவர் :-** சரிதன் வேளாண் சோழியும், ஆவூர்க் கூற்றத்து சூலபாணிவேள் கிழவனும், மணவில்கோட்டத்து அரும்பாக்க முடையான் சியகனுங்கனும், வீரநாராயணப் பல்லவரையர் பெண்டாட்டி குணமல்ல நாணங்கையும், இத்திருக்கோயிலைக் கட்டுவதற்குக் கற்கள் உதவியுள்ளனர். அர்த்தமண்டபத்து வாசலின் தென்பால் உள்ள மூன்று கற்கள் கண்டராச்ச தெரிஞ்ச கைக்கோளரில் ஒற்றிகண்ட ராவணன் முதலான மூவர்களால் இடப்பட்டவையாகும். இவர்களே யன்றி கொக்கை யூர் கிழவன் அமரநிதி அண்ணியூர் நக்கனும் கல் கொடுத்துள்ளான்.

**இறைவரின் திருப்பெயர்:-** இக் கல்வெட்டுக்களில் இத்திருக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருவேள்விக்குடி ஆழ்வார், மங்கலநக்கர், ஸ்ரீகோயில் தேவர், திருவேள்விக்குடி உடையார், மணவாள நம்பி என்னும் திருப்பெயர்களால் அழைக்கப்படுகின்றனர்.

**இறைவியாரின் திருப்பெயர் :-** இறைவியார் திருக்காமக்கோட்ட முடைய பெரியநாச்சியார், நாறு சாந்து இளமுலை நாச்சியார் என்னும் திருப்பெயரால் கூறப்படுகின்றனர். நாறு சாந்து இளமுலை அரிவையர் என்று அம்மையாரின் திருப்பெயரை ஞானசம்பந்தர் இவ்வூர்த் தேவாரத்தில் குறிப்பிட்டிருப்பது மகிழ்தற்குரியதாகும்.

**எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகள் :-** திருவேள்விக்குடி எங்கணதாசன் கூவண்டென் ஆடவல்லான்பட்டன் இக் கோயிலில்

திருவெழுநம்பியாரை எழுந்தருளுவித்துள்ளான். இச்செய்தி கங்கை கொண்ட சோழனாகிய கோப்பரகேசரிபன்மரான உடையார் ஸ்ரீ இராசேந்திரதேவரின் நான்காம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளது.

சில திருமேனிகளைச் செய்வித்தவர்கள் :- இக்கோயில் கர்ப்ப இல்லின் தென்புறத்தில் எழுந்தருளியிருக்கும் தட்சிணாமூர்த்தியைச் செய்வித்தவர் வளஞ்சியர்பணிசெய் மகன் காத்தரேய் சிங்கம் ஆவர். இக்கோயிலில் துர்க்காதேவியார் (கொற்றவை) இல்லை. அவர் இருக்க வேண்டிய இடத்தில் ஏடேந்திச்செல்பவரின் (பிட்சாடனரின்) திருமேனி யைப் பிற்காலத்தில் வைத்துள்ளனர். துர்க்கையின் திருமேனியைப் பழங்காலத்தில் எவர்கைக்கொண்டு சென்றனரோ அல்லது பழுதுற் றமையால் எங்கேனும் எடுத்துப் போட்டுவிட்டனரோ அறிகின்றிலம். அத்துர்க்கையாரைச் செய்வித்தவன் திருவழுந்தூர்நாட்டு நெற்குப்பை உடையான் ஆலன் பலதேயனான பாத்திரசேகர பல்லவரையன் ஆவன். அர்த்த மண்டபத்து வாசலடியில் உள்ள மகாகாளனைச் செய்வித்தவன் தென்கரை நாட்டு ஆரியபுரடையான் காரிவேப்பனாகிய மூவேந்த வேளான் ஆவன்.

திருவேள்விக்குடியைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு :- கோப்பரகேசரி வர்மன் காலத்தில் இவ்வூர் வடகரை குறுக்கை நாட்டுக்கு உட்பட்டிருந்தது. வடகரை என்பது காவிரிக்கு வடகரையாகும். குறுக்கை என்பது தேவாரம் பெற்ற தலமாகிய திருக்குறுக்கையாகும். இது திருவேள்விக்குடிக்கு வடகிழக்கே சுமார் ஐந்து மைல் தூரத்தில் இருக்கின்றது. குறுக்கை நாட்டுக் குறுக்கை என்று நாட்டுத் தொகையில் சுந்தரமூர்த்தி நாயனாரால் குறிப்பிடப்பெற்றது இவ்வூரேயாகும். முதலாம் இராசராசன் காலத்தில் இவ்வேள்விக்குடி இராசேந்திர சிங்க வளநாட்டுக் குறுக்கை நாட்டிற்கு உட்பட்டிருந்தது. இராசேந்திர சிங்க வளநாடு என்பது காவிரிக்கும், சிதம்பரத்திற்கு வடக்கே இருக்கும் வெள்ளாற் றிற்கும் இடைப்பட்ட நிலப்பரப்பாகும். இது இருபத்திரண்டு பிரிவு களைக் கொண்டிருந்தது. விஜயராஜேந்திரன் (கங்கைகொண்ட சோழனின் இரண்டாவது மகன்) கல்வெட்டில் இந்த ராஜேந்திரசிங்க வளநாடு ராஜாயிராஜ வளநாடு என்று வழங்கப் பெற்றிருந்தது. இந்த இராசேந்திர சிங்க வளநாடு முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் விருதராச பயங்கர வளநாடு என்று பெயர் பெற்றது. பிற்பட்ட காலங் களிலும் இப்பெயரே நின்று நிலவுவதாயிற்று.

திருவேள்விக்குடியைத் தன்னகத்துக் கொண்டுள்ள சதுர் வேதிமங்கலம் :- சதுர்வேதிமங்கலம் என்பது சிலசிற்றூர்களைத் தன்னகத்துக்கொண்டதாகும். அம்முறையில் இத்திருவேள்விக்குடி

கோப்பரகேசரி வர்மன் காலத்தில் விடேல்விடுகு சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்திருந்தது. கங்கைகொண்ட சோழன் காலத்தில் இது கடலங்குடி என்று பெயர் பெற்றது. விஜயராசேந்திரன் காலத்தில் (கங்கைகொண்ட சோழ சதுர்ப்பேதிமங்கலம் என்று வழங்கப்பட்டது. பின் இரண்டாம் இராஜாதிராஜன் காலத்தில் இக்கங்கைகொண்ட சோழ சதுர்ப்பேதிமங்கலம் கடலங்குடி ஆயிற்று. அதுவே இன்றளவும் நின்று நிலவுவது ஆயிற்று. இக்கடலங்குடி திருவேள்விக்குடிக்குத் தென் கிழக்கில் சுமார் ஒரு மைல் தூரத்தில இருக்கின்றது.

இவ்வூர்க் கல்வெட்டில் குறிக்கப்பெற்ற(அண்மையில் உள்ள) ஊர்கள் :- குணமலப்பாடி - இது திருவேள்விக்குடிக்கு மேற்கே ஒரு மைல் தூரத்தில் இருக்கின்றது. இக்காலம் இதை மக்கள் குணதலாப் பாடி என்றும், கொள்ளாப்பாடி என்றும் சொல்கின்றனர். கோப்பர கேசரி வர்மனின் கல்வெட்டில் குறிக்கப்பெற்றிருப்பதால் இவ்வூர் மிகப் பழமை வாய்ந்ததாகும்.

முருகவேள்மங்கலம் :- இது திருவேள்விக்குடிக்கு வடமேற்கே சுமார் மூன்று மைல் தூரத்தில் இருக்கின்றது. இவ்வூரும் கோப்பர கேசரி வர்மன் காலத்துக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இது இக்காலம் முருவமங்கலம் என்று சொல்லப்படுகின்றது.

செம்பியன் கண்டியூர் :- இது வேள்விக்குடிக்கு வடமேற்கில் சுமார் 1½ மைல் தூரத்தில் இருக்கின்றது. இக்காலம் கண்டியூர் என்று வழங்கப்படுகிறது. முதற்குலோத்துங்க சோழனின் பத்தாமாண்டுக் கல் வெட்டில் இவ்வூர் குறிக்கப்பெற்றுள்ளது. எனவே இது, இற்றைக்கு 875 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமை வாய்ந்த ஊராகும். இவ்வூரைப் பற்றித் திருத்துருத்திச் சொன்னவாறு அறிவார் கோயிலில் உள்ள விக்கிரம சோழன் கல்வெட்டிலும் குறிக்கப்பெற்றுள்ளது.

சோத்தமங்கலம்: இது திருக்குருக்கைக்கு மேல்பால் உள்ள ஊராகும். முதலாம் இராசராச சோழன் காலத்தில் நிவந்தம் அளிக்கப் பெற்று அவன் மகனுகிய கங்கைகொண்ட சோழன் காலத்தில் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டில் இவ்வூர் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வூர் இற்றைக்கு 946 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமை வாய்ந்ததாகும்.

பாண்டூர்: இது திருக்குறுக்கைக்குத் தென்பால் உள்ள ஊராகும்.

இக்கோயில் கல்வெட்டில் குறிக்கப்பெற்ற வேறு நாடுகள்: நல்லாற்றூர் நாடு: இது திருவேள்விக்குடிக்கு மேற்கே நல்லாற்றூர் என்பதைத் தலைநகராகக்கொண்ட நாடாகும். குணமலப்பாடி, ஆலங்குடி,

முதலான ஊர்கள் இந்த நல்லாற்றூர் நாட்டைச் சேர்ந்தன. திருக்கோடி காவிற்குக் கிழக்கே நல்லாத்தடி என்று ஒரு ஊர் இருக்கின்றது. இதுவே நல்லாற்றூர் ஆதல் வேண்டும். இந்த நல்லாற்றூர் நாட்டில் கோப்பர கேசரி வர்மன் காலத்தில் இருந்த சதுர்வேதிமங்கலத்திற்கு விடேல்விடுகு என்று பெயர் வைக்கப்பெற்றிருந்தது. அச்சதுர்வேதி மங்கலம் விக்கிரம சோழன் காலத்தில் பூலோக மாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர் எய்திற்று.

**உய்யக்கொண்டார் வளநாட்டுப் பேராவூர் நாடு :-** உய்யக் கொண்டார் வளநாடு என்பது காவிரிக்கும் அரிசிலுக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பாகும். இதன் பிரிவுகளுள் ஒன்றே பேராவூர் நாடு. இது திருவேள்விக்குடிக்குத் தெற்கே சுமார் 10-மைல் தூரத்தில் இருக்கிறது. இந்நாட்டைச் சேர்ந்த கூடலூர் இவ்வூர்க்கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளது. இதுவேயன்றித் திருவழுந்தூர் நாட்டு ஆனுங்கூரும், ராஜராஜ வளநாட்டுப் பரவைந ாட்டுப் பூண்டியும் குறிக்கப்பெற்றுள்ளன.

**ஊர்சபை கூடிய இடம் :-** ஒவ்வொரு சதுர்வேதி மங்கலத்திலும் ஒவ்வொரு சபை இருந்தது. அந்தச் சபையாரே கோயில் நிர்வாகத்தை நடத்தி வந்தனர். பூலோக மாணிக்கத்துச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் திருவேள்விக்குடி உடையார் கோயில் எடுத்துக் கட்டியில் கூட்டங் குறைவறக் கூடியிருந்து திருவாவடுதுறை உடையார்க்குப் பழைய அடியாராகிய ஆதிசண்டேஸ்வர தேவர்க்கு ஒரு குறிப்பிட்ட நிலத்தை இறையிலிபிரமாணம் பண்ணிக்கொடுத்த செய்தியை விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு அறிவிக்கின்றது.

**பிறசெய்தி :-** திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீஇராசராச தேவரின் 19-ஆம் ஆண்டில், இக்கோயிலில் எழுந்தருளியுள்ள நாயன்மார்களை, வாணகோவரையரும், மாகுலவரும் எழுந்தருளுவித்துக் கொடுபோய் திருச்சத்திமுற்றம் உடையார் கோயிலில் வைத்து விட்டனர். இதைக் கோயில் தானத்தார் உய்யக்கொண்டார் வளநாட்டு. அம்பர் நாட்டு அம்பர் அருவந்தை அரையன் வேதவனப்பெருமாளானான தொண்டைமா னாரிடம் கூற அவர் மீளவும் கூத்தாடி அருளும்பிரானார், இவர் நாச்சியார், வேதவனநாயகர் இவர் நாச்சியார், திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார், சுப்பிரமணியர், ஆட்கொண்ட நாயகர் இவர் நாச்சியார், இடபதேவர், ஆளுடைய பிராட்டியார், திருநாவுக்கரசு தேவர், சுந்தரர் பெருமான் பரவை நாச்சியார் இவர்களைத் திருச்சத்தி முற்றத்தினின்று வேள்விக்குடிக்கு எழுந்தருளச்செய்து திருவாபரணங்கள் வேண்டு வனவும், பரிகல பரிச்சின்னங்களும் கொடுத்துள்ளார்.

For Kuttalam See the Annual reports on South Indian Epigraphy for the years 1907 Numbers 477-425. 1926 Numbers 93-107 and for Thiruvelvikudi see the Annual report on South Indian epigraphy for the year 1926 Numbers 108-151.

குறிப்பு: இவ்விருகோயில்களின் கல்வெட்டுக்களை, தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டபடியிவ்வண்ணம் கோவில் பகுத்து சுருக்கம் எழுதலாயிற்று.

## 47 திருத் தென்குடித்திட்டை (பக்கம் 151)

இது இக்காலம் திட்டை என்று வழங்கப்பெறுகின்றது. இது கும்பகோணம் – தஞ்சாவூர் இருப்புப் பாதையில் திட்டை இரயில்வே நிலயத்திற்கு மேற்கே சுமார் ஒருமைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவன் திருப்பெயர் பசுபதிநாதர். இறைவியின் திருப்பெயர் உலகநாயகி. காமதேனு, ஆதிசேடன், வசிட்டர் முதலானோர் பூசித்துப் பேறுபெற்ற தலம். இதற்கு ஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று இருக்கின்றது.

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்க் கோயிலில் பாண்டியர்களில் மாறவர்மன் திரிபுவனச்சக்கிரவர்த்தி குலசேகரதேவர் காலத்திலும், சாளுவபரம்பரையில் நரசிம்மராயன் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. கல்வெட்டு அறிக்கையில் " Another stray stone built into the same wall which is in mo-dern characters states that Timai belongs to the (God) Teranar. " எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. இதனால் திட்டைக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவரின் பெயர் தேறனர் என்று பெறப்படுகின்றது. ஆண்டு அறிக்கை கூறுவது தவறுடையதாகும். ஞானசம்பந்தர் தேவாரத்தில் ஆறும் திருப்பாட்டில் " ஆறினர் பொய்யகத்தை யுணர்வெய்தி மெய் தேறினர் வழிபடுந் தென்குடித் திட்டையே " என்ற அடிகளால் தேறினர் என்பது அடியார்களைக் குறிப்பிடுமேயல்லாது ஆண்டவனைக் குறிப்பிடாது. அது ஒரு துண்டுக் கல்வெட்டு ஆதலால் அதைக் கொண்டும் முடிவுகட்டக் கூடாது. கர்ப்ப இல்லின் எதிரிலுள்ள மண்டபம் எதிரிலா வீரர், சத்துருகாலர் எனப் பாராட்டப்பெற்றவரும் பெருங்கோனூர் குலோத்துங்கசோழீச்சரமுடைய நாயனர் கோயிலின் பணியாளருமாகிய ஒருவரால் கட்டப்பெற்றதாகும். அம்மண்டபத்தின் சுவர் சேதிராயரின் திருப்பணியையுடையது. அம்மன்கோயில் கல்வெட்டு நாச்சியார் கோயிலை முதலியப்ப முதலியார் பழுது பார்த்ததைக் குறிப்பிடுகின்றது.

**அளிக்கப்பெற்ற நிவந்தங்கள் :-** தென்குடித்திட்டை இறைவர்க்கு தன் நட்சத்திரமாகிய ஆனி உத்திரட்டாதியில் அபிராமன் சந்தி ஒன்றை நடத்துவதற்குக் கண்டியூர் நாட்டில் குறிப்பிட்ட சில இடங்களில் ஐந்து வேலி நிலத்தைக் கொடுத்துள்ளான். பெருங்கோவநூர் ஊரவர் தங்கள் பாடிகாவல்வரியை இக்கோயிலைப் புதுப்பிப்பதற்குக் கொடுத்துள்ளனர்.

**குறிப்பு :-** இவ்வூர்க் கல்வெட்டில் (Annual report on South Indian Epigraphy for the year 1934 Number 149) 'கண்டியூர் நாடு' என்று ஒரு நாடு குறிப்பிடப்படுகின்றது. இங்குக்குறித்த கண்டியூர் தஞ்சையிலிருந்து திருவையாற்றிற்குப் போகும் பெருவழியில் உள்ள திருக்கண்டியூர் ஆகும். இவ்வூர் ஆர்க்காட்டுக் கூற்றத்துக்கு உட்பட்டிருந்தது. பதினொன்காம் நூற்றாண்டில் இக்கண்டியூரைத் தலைநகராகக் கொண்டு நாடு கண்டியூர்நாடு என்று வழங்கப்பெற்றிருந்ததை இக் கல்வெட்டுப் புலப்படுத்துகின்றது. அரசியலார் படியெடுத்துள்ள சோழநாட்டுக் கல்வெட்டுக்கள் அனைத்தும் வெளிவரின் 'கம்பநாடு' என்ற நாடு உள்ளமையும் வெளியாகலாம்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1934. Numbers 148 - 154.

## 48 திருத்தேவூர் (பக்கம் 328)

தேவர்கள் பூசித்து மந்திர உபதேசம்பெற்ற தலமாதலால் இப்பெயர் பெற்றது. கீழ்வேளூர் ரயில் நிலையத்திற்குத் தெற்கே இரண்டு மைலில் உள்ளது.

இறைவர் திருப்பெயர் – தேவகுருநாதர். இறைவி திருப்பெயர் – மதுரபாஷிணி அம்மை. தீர்த்தம் – தேவதீர்த்தம். இது கோயிலுக்குத் தென்கிழக்கில் இருக்கிறது. மரம் – கதலி. கௌதமர், பிருகஸ்பதி, இந்திரன் முதலானோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இவர்களில் கௌதமர் பூசித்த இலிங்கம் கட்டுமலையின் வடபால் இருக்கிறது. இதற்கு அப்பர் பதிகம் ஒன்றும், சம்பந்தர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு :-** இவ்வூர்த் திருக்கோயிலில் ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவர், விசயநகர வேந்தராகிய தேவராய மகாராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. சுந்தரபாண்டியன் கல்வெட்டில் கோயிலின் பெயர் ஆதித்தீச்சரம் என்றும், இறைவரின் பெயர் ஆதித்தீச்சரமுடையார்

என்றும் குறிக்கப்பெற்றுள்ளன, இவ்வூர் அருமொழிதேவ வளநாட்டைச் சேர்ந்ததாகும்.

See the Annual reporton South Indian epigraphy for the year 1905 Number 518—519.

## 49 திரு நல்லூர் (பக்கம் 388)

இரண்டாம் திருமுறையிற்காண்க.

## 50 திரு நல்லூர்ப்பெருமணம் (பக்கம் 593)
### (ஆச்சார்யர்கள்புரம்)

இதற்கு ஆச்சாபுரம் எனவும் பெயர் உண்டு. பிரமதேவர் சீகாழிக்குத் தேவர்களோடு எழுந்தருளும்போது இத்தலத்தின் பெருமையை அறிந்து நல்லூர் என்று கூறினமையால் நல்லூர் என்னும் பெயர் பெற்றது. திருஞானசம்பந்தரது திருமணத்தால் நல்லூர்ப்பெருமணம் என்னும் பெயர் எய்திற்று. இது சிதம்பரம் – மாயூரம் ரயில்பாதையில் கொள்ளிடம் ரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர் – சிவலோகத்தியாகர். இறைவியின் திருப்பெயர் – திருவெண்ணீற்று உமையம்மை. தீர்த்தம் – பஞ்சாக்கரத் தீர்த்தம். இதுவன்றி எட்டுத்திக்குகளிலும் எட்டுத் தீர்த்தங்கள் இருக்கின்றன.

திருஞானசம்பந்தப் பெருந்தகையார் திருமணம் முடிந்தவுடன் திருக்கோயிலுக்குச் சென்றார். அங்கே ஒரு ஜோதி தோன்ற அதில் தாமும், தமது மனைவியாரும், திருமணத்திற்கு வந்திருந்த திருநீலநக்க நாயனார், முருக நாயனார், திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் முதலிய திருமணத்திற்கு வந்திருந்த அனைவரும் நமச்சிவாயப் பதிகத்தை ஓதிக்கொண்டு அச்சோதியில் கலந்தருளிய தலம். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. இக்கோயில் தருமபுர ஆதீனத்திற்கு உட்பட்டது.

கல்வெட்டு வரலாறு :- இக்கோயிலில், சோழ மன்னரில் விக்கிரம சோழன், மூன்றுங்குலோத்துங்கன், இரண்டாம் இராசாதிராச தேவன், மூன்றும் இராசராசன் இவர்கள் காலங்களிலும், பாண்டியரில் மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டியன் காலத்திலும் வெட்டப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர்,

ஸ்ரீகைலாச முடையார், திருப்பெருமணமுடைய மகா தேவர், திருப் பெருமணமுடைய நாயனூர் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள் ளனர்.

**அம்மன்கோயிலைக் கட்டியவர் :-** இக்கோயிலைக்கட்டி, இதில் திருக்காமக்கோட்டமுடைய நாச்சியாரை எழுந்தருளுவித்தவர் சயங் கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க்கோட்டமான குலோத்துங்க சோழவளநாட்டு நெற்குன்றத்தில் இருந்த சந்திரசேகரன் பஞ்சநதிவாணன் ஆவர். இவர் இந்நாச்சியார்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு விருதராச பயங்கர வளநாட்டு விளத்தூர் நாட்டுச் செம்பியன் நெற்குன்றத்தில் ஐந்துவேலி நிலத்தைத் தேவதான இறையிலியாக இட்டிருந்தார். இந்நிலம் சேரவல்லாமையினல், இந் நிலத்திற்குத் தலைமாறு (பதிலாக instead of) பற்றுக்கு இடவேண்டும் நிலத்துக்கு உடலாக இராசாதிராச வளநாட்டுத் திருவிந்தளூர் நாட்டுச் செம்பியன்குடியிலே மூன்றே மூன்று மாக்காணி முந்திரிகை கீழரை நிலத்தையும், செம்பங்குடிச் செற்றூர் என்று கூடின நிலத்திலே முக்காலே மூன்றுமா நிலத்தையும் தேவதான இறையிலியாக விட்டார். இது நிகழ்ந்தது மூன்றுங்குலோத்துங்க சோழதேவரின் இராச்சிய ஆண்டு முப்பத்திரண்டு, நாள் 327 ஆகும்.

**திருஞானசம்பந்தரைப்பற்றிய செய்திகள் :-** இவ்வூர்க் கல் வெட்டுக்களில் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் ஆளுடைய பிள்ளை யார், பரசமயக்கோளரியார் என்னும் திருப்பெயர்களால் அழைக்கப் பெற்றுள்ளனர். இவருடைய நாச்சியாரின் திருப்பெயர் சொக்கியார் என்பதாகும். இச்செய்தி "இந்நாயனூர் கோயில் ஆளுடைய பிள்ளை யாரும் சொக்கியாரும் காவேரிக்குத் தெற்குவடக்கூர்களில் திருவெண் காட்டிலும், திருநனிபள்ளியிலும், திருவாக்கூரிலும் எழுந்தருளிப் பின்பு பெரும்பற்றப்புலியூரிலே எழுந்தருளுகிற இடத்து" என்னும் திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவரின் யாண்டு இரண்டாவது நாள் நாற்பத் தைந்தில் வெட்டப்பட்ட கல்வெட்டால் அறியக்கிடக்கின்றது,

**சம்பந்தப் பெருந்தகையார்க்கு இவ்வூரில் திருமணம் நிகழ்ந் ததைப்பற்றி :-** "இக்கோயில் உடைய பிள்ளையார் திருக்கல்யாணம் பண்ணிய திருமாளிகையும், திருவீதியும், திருநந்தவனமும், திருமடை விளாகமும் நிலம் ஆறு மாவும்" என்னும் கல்வெட்டுப்பகுதி தெரிவிக் கிறது இவ்வூரில் பரசமயக்கோளரிமடம் என்று ஒரு மடம் இருந்தது. இதில் பெருமணமுடையார் கோயில் மாகேசுவரர்களுக்கும், கும்பிடவந்த ஆண்டார்களுக்கும், அமுது செய்தருளுகைக்கு மடப்புறமாக நிலம் விடப்பெற்றிருந்தது. இச்செய்தி விக்கிரம சோழதேவரின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.

**ஆளுடையபிள்ளையார் திருநந்தவனம் :-** ஆளுடையபிள்ளையாரின் திருநாமத்தால், சாத்தமங்கலமான சிவசரணசேகரநல்லூரில், மூன்றுமாக்காணி அரைக்காணி நிலத்தை, திருவாரூர்ப்பிள்ளை என்பவர் வாங்கித் திருநந்தவனத்திற்கு விட்டிருந்தனர்.

**பரசமயக்கோளரிநல்லூர் :-** ஞானசம்பந்தர்க்குரிய பரசமயக்கோளரி என்னும் பெயரால் ஒரு ஊர் இருந்தது. அதற்குப் பரசமயக்கோளரி நல்லூர் என்று பெயர். இச்செய்தி "திரிபுவன வீரதேவர்க்குப் பத்தாவது நாளில் திரிபுவன வீரமங்கலம் என்று பிரிந்த நிலத்தால் செல்லுக்கும் பல........ இறையிலியாக விட்ட நிலத்தால் நெல்லுக்கும் தலைமாறு இளைதரம் பார்க்கிற இடத்து பரசமய கோளரிநல்லூர் அவனை ஊச்சந்திர வதிக்குக் கிழக்கு" என்னும் கல்வெட்டுப்பகுதியால் அறியக்கிடக்கின்றது.

**ஆயிரத்து எண்ணூற்றுவன் சந்தி :-** ஆளுடைய பிள்ளையார் அவரது நாச்சியாராகிய (consort) சொக்கியார் இவர்களின் பிரதிமங்களைத் தென்பால் உள்ள ஊர்களாகிய திருவெண்காட்டிலும், திருநனிபள்ளியிலும், திருவாக்கூரிலும் எழுந்தருளச்செய்து, பின்பு பெரும்பற்றப் புலியூரில் எழுந்தருளப் பண்ணிவந்தார்கள். அங்ஙனம் பெரும்பற்றப் புலியூர்க்கு எழுந்தருளப்பண்ணும்போது, மேற்படியார்களின் பிரதிமங்களைக் கிராமப்பிரதட்சிணமாகக் கொண்டுவந்து கைலாசமுடையார் திருக்கோயிலில் எழுந்தருளச்செய்து, அவர்களின் திருவடிகளை விளக்கி அமுது செய்தருளுவிப்பது வழக்கம் என்பதைத் திரிபுவனச்சக்கரவர்த்தி ராஜராஜ தேவரின் இரண்டாமாண்டு நாற்பத்தைந்தாம் நாள் கல்வெட்டு உணர்த்துகின்றது. அந்நாளில் சிறுகாலைச் சந்தியிலே ஆயிரத்து எண்ணூற்றுவன் சந்தி என்று பிள்ளையாரும் சொக்கியாரும் அமுது செய்தருளுகைக்கும் அவர்கள் அமுது செய்தருளியதை அபூர்விகளாய் வந்த பிராமணர்க்குத் திருமுன்பே பிரசாதிக்கக்கடவதன் பொருட்டும் நிலநிவந்தங்கள் அளிக்கப்பெற்றிருந்தன.

**இவ்வூரைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு :-** இவ்வூர், வடகரை ராஜாதிராஜ வளநாட்டு, வெண்ணெய் ஊர்நாட்டுப் பஞ்சவன் மாதேவியான் குலோத்துங்கசோழச் சதுர்வேதிமங்கலத்தில் அடங்கி இருந்தது.

**இவ்வூர்க்கு அருகில் உள்ளனவாகக் கூறப்பட்ட ஊர்கள் :-** மாணிக்கவாசகநல்லூர், ஆலாலசுந்தரநல்லூர், சிவசரணநல்லூர் முதலானவைகள் ஆகும்.

**பிறசெய்திகள் :-** இவ்வூர்க்கோயிலில் உள்ள நடராசப்பெருமான் புண்பதைக்க ஆடு நாயனார் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர்,

See the Annual report on South Indian Epigraphy for the year 1918, Numbers 522-540.

குறிப்பு:- தருமபுரம் ஆதீனம் 25 ஆம் பட்டம், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளிய வண்ணம், இக்கோயில் கல்வெட்டுக்களை எல்லாம் படித்து எழுதிய சுருக்கம் இதுவாகும்.

## 51 திரு நள்ளாறு (பக்கம் 407)

இரண்டாம் திருமுறையிற் காண்க.

## 52 திரு நாரையூர் (பக்கம் 479, 509)

இரண்டாம் திருமுறையிற் காண்க.

## 53 திரு நெல்வெண்ணெய் (பக்கம் 454)

நெய்வெண்ணெய் என மக்களால் இது வழங்கப்பெறுகின்றது. உளுந்தூர்ப்பேட்டை இரயில்வேநிலையத்திற்கு வடமேற்கே நான்குமைல் தூரத்திலிருக்கிறது. இது நடுநாட்டுத் தலம்.

இறைவரின் திருப்பெயர் வெண்ணெயப்பர். இறைவியின் திருப்பெயர் நீலமலர்க்கண்ணி. தீர்த்தம் பெண்ணையாறு. சநகர், சநகாதியர் இவர்கள் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

**கல்வெட்டு வரலாறு :-** இவ்வூர்க் கோயிலில் சோழமன்னர்களில் முதலாம் குலோத்துங்கசோழன், விக்கிரமசோழன் இவர்கள் காலங்களிலும், பல்லவமன்னரில் சகலபுவனசக்கரவர்த்தி கோப்பெருஞ்சிங்கதேவர், விசயநகர பரம்பரையில் வீரப்பிரதாபகிருட்டிணதேவ மகாராயர் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக் கல்வெட்டுக்களில் இறைவர் 'பொற்குடங் கொடுத்தருளிய நாயனுர்' என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**கூத்தாடுந்தேவர் திருமேனியை எழுந்தருளுவித்தவர் :-** இத் திருக்கோயிலில் கூத்தாடுந் தேவரை (நடராசப்பெருமானை) எழுந்தருளுவித்தவர் கங்கைகொண்ட சோழவளநாட்டுத் திருமுனைப்பாடிநாட்டுக் கிழையூரில் இருந்த இராசேந்திரசோழசேதிராயர் ஆவர். அத்திருமேனி

எழுந்தருளுவிக்கப்பெற்ற காலம் முதற் குலோத்துங்கசோழதேவரின் நாற்பத்தெட்டாம் ஆண்டாகும். இக்கோயில் கல்வெட்டுக்களில் இவ்வூர் மிலாடு ஆகிய சனநாதவளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்திற்கு உட்பட்ட ஊராகக் குறிக்கப்பெற்றுள்ளது.

See the Annual Report on South Indian Epigraphy for the year 1908. Numbers 370 - 381

## 54 திருநெல்வேலி (பக்கம் 434)

வேதசருமர் என்னும் அந்தணர் இறைவனுக்குத் திருவமுதுக்காக வைத்திருந்த நெல்லை வெள்ளங்கொள்ளாதவாறு வேலியிட்டுக் காத்தமையால் நெல்வேலி என்னும் பெயர் ஏற்பட்டது. திருநெல்வேலி டவுன் இரயில்வே நிலையத்திலிருந்து மேற்கே அரைமைல் தூரத்தில் உள்ளது. இது பாண்டிநாட்டுத் தேவாரம்பெற்ற பதிகளுள் பதினான்காவது. இதற்கு வேணுவனம் என்னும் வேறு பெயரும் உண்டு. இறைவன் மூங்கில் புதரிலிருந்து தோன்றிய காரணத்தால் இப்பெயர் ஏற்பட்டது என்பர்.

இறைவர் திருப்பெயர் 1. நெல்லையப்பர். 'நெல்லுக்கு வேலியிட்ட நெல்லையப்பர்' என்னும் வழக்கு இதை உறுதிப்படுத்தும். 2. வேணுநாதர். இறைவி திருப்பெயர் காந்திமதியம்மை. தீர்த்தம் தாமிரவருணி. துறை சிந்துபூந்துறை. சிந்திய எலும்புகள் பூக்கள் ஆயின என்பது வரலாறு. ஐம்பெருஞ் சபைகளுள் இது தாமிரசபை. பிரமதேவர், திருமால், அகத்தியர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. தலபுராணம் அச்சிட்டு வெளியிடப் பெற்றுள்ளது. இத்தலத்தைப்பற்றி " பொருநைத் துறைவாய்ப் பிறவாக் கடவுள்வேய் வயிற்றிற் பிறந்த தொன்னகரும் " எனத் திருவிளையாடற் புராணம் அருச்சனைப் படலத்திலும் கூறப்பெற்றுள்ளது.

## 55 திருப்பட்டீச்சரம் (பக்கம் 320)

காமதேனுவின் மகளாகிய பட்டியால் பூசிக்கப்பெற்றமையின் இப்பெயர் பெற்றது. பட்டீச்சரம் என்பது கோயிலின் பெயர். தலத்தின் பெயர் பழையாறை என்பது. அது பெரிய நகரமாய் இருந்த இடம். சோழ அரசர்கள் முடி சூடும் ஐந்து நகரங்களில் ஒன்று. இப்பொழுது அது பல ஊர்களாகப் பிரிந்து வழங்குகிறது. பட்டீச்சரம் என்னும்

கோயில் இருக்கும் ஊர் முன்பு (சம்பந்தர் காலத்தில்) மழபாடி* என்று வழங்கப்பெற்றது. இப்பொழுது அவ்வூரும் பட்டீச்சரம் என்றே வழங்கப் பெறுகின்றது. சம்பந்தப்பெருமான் அதை மழபாடி நகரம் என்றே பாடியுள்ளனர்.

இது கும்பகோணம் - தஞ்சாவூர் இருப்புப்பாதையில் இருக்கும் தாராசுரம் இரயில்வேநிலையத்திற்குத் தென்மேற்கே சுமார் இரண்டுமைல் தூரத்தில் இருக்கிறது. காவிரிக்குத் தென்கரையில் உள்ள தலங்களுள் இருபத்துமூன்றாவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் பட்டீச்சுரநாதர். இறைவியின் திருப்பெயர் பல்வளைநாயகி. தீர்த்தம் ஞானதீர்த்தம். மரம் வன்னி. இராமபிரான் வழிபட்டுப் பிரமகத்திதோஷம் நீங்கப்பெற்றான். இவ்விழா மார்கழி அமாவாசையில் கொண்டாடப்பெறுகின்றது. திருஞானசம்பந்தர் திருச் சத்தி முற்றத்தினின்று இப்பதிக்கு எழுந்தருளியது ஆனி முதுவேனிற் காலமாதலால், இறைவன் பூதங்களின்மூலம் முத்துப் பந்தரைக் கொடுத் தருளிய தலம். இவ்விழா ஒவ்வொரு ஆண்டும் ஆனிமாதம் முதல் தேதியில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பெற்றுவருகின்றது. கோயில் நந்திகள் திருமுன்பிற்குச் சற்று விலகியிருக்கின்றன. ஞானசம்பந்தப் பெருந்தகையார் எழுந்தருளும்போது நேரில் கண்டுகளிக்கும் பொருட் டாக இறைவன் கட்டளைப்படி நந்திகள் விலகியிருக்கின்றன என்பர். இக் கோயிலில் திருப்பணிபுரிந்த கோவிந்த தீட்சதர், அவர்தம் மனைவியார் இவர்களின் பிரதிமங்கள் எழுந்தருளுவிக்கப்பெற்றுள்ளன.

**கல்வெட்டு வரலாறு :-** இக்கோயிலில் ஐந்து கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டாம் கோபுரத்தின் உள்பக்கம் இருக்கும் கல்வெட்டு தஞ்சை நாயக்கர் காலத்தில் ஏற்பட்டதாகும். அது அவ்வூரில் திருமணம் நிகழும்போது தாம்பூலத்தை முதலில் அவ்வூரினர்களாகிய செட்டியார்கள், பட்டுநூல்காரர்கள் இவர்களுள் எவர்களுக்கு முதலில் கொடுப்பது என்றதகராறு எழுந்தது. முடிவில் இக்கோயிலில் எழுந்தருளி யிருக்கும் அம்மனுக்கு ஒரு புடைவையையும் வெற்றிலைப்பாக்கையும் முதலில் கொடுத்துவிட்டுப் பின்னர் அவ்விருவகுப்பாரும் எடுத்துக் கொள்வது என்னும் முடிவுபற்றியதாகும். கிரந்தத்தில் உள்ள கல்வெட்டு கோயிலைப் பழுதுபார்த்ததைப்பற்றிக் கூறுகின்றது. கிரந்தத்திலுள்ள இரண்டு செய்யுட்கள், புனித இடங்களாகிய விருத்தாசலம், கமலாலயம், வெண்காடு, சாய்க்காடு, கைலாசம் இவைகளைப்போல் பட்டீச்சரமும் ஒன்று என்று குறிப்பிடுகின்றன. வெளிப் பிராகாரத்தில் ஸ்ரீ பலிபீடத்தின்

* கொள்ளிடத்தின் வடபால் மழநாட்டைச் சேர்ந்த திருமழபாடி என்பது வேறு தலம்.

அடிப்பகுதியிலுள்ள கல்வெட்டு திருஞானசம்பந்தர் மடம், திருநாவுக்கரசு மடம், திருமூலதேவர் திருமடம் இவைகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1927 Numbers 257 - 261.

## 56 திருப் பந்தணைநல்லூர் (பக்கம் 584)

இறைவி ஆடிய பந்துவந்தணைந்த ஊர் என்றகாரணத்தால் இப்பெயர் பெற்றது. இது மாயூரம் - கும்பகோணம் இருப்புப்பாதையில் குத்தாலம் ரயில்வே நிலையத்திற்கு வடமேற்கே ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவர் திருப்பெயர் - பசுபதீசுவரர். இறைவியின் திருப்பெயர் - காம்பன்னதோளியார். இப்பெயர் "காம்பேய்தோளி பற்றும் பாகத்தார்" என இவ்வூர்ப் பதிகத்தில் அப்பர் பெருமானால் எடுத்தாளப்பெற்றுள்ளது. மரம் - கொன்றை.

தேவகன்னியர்களும் காமதேனுவும் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் திருநாவுக்கரசர் பதிகம் ஒன்றும் ஆக பதிகங்கள் இத்தலத்திற்கு இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு :-** இவ்வூர்ச்சிவன் கோயிலில் சோழமன்னர்களில், முதலாம் இராசராச சோழன், விக்கிரம சோழன், இரண்டாம் ராசாதிராசன், மூன்றுங்குலோத்துங்கன், மூன்றும் ராசராசன் இவர்கள் காலங்களிலும், விசயநகர வேந்தர்களின் காலங்களிலும், பொறிக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளன்றி, காலிங்கராயன் மீது பாடப்பெற்ற பாடல்களும் இருக்கின்றன. இக்கோயில் கல்வெட்டுக்களில் இறைவர் பசுபதி தேவர், பசுபதீஸ்வரர் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகள் :-** பரகேசரிவர்மரான திரிபுவனச் சக்கர்வர்த்திகள் இராசராசதேவர் காலத்துக் கல்வெட்டில் விக்கிரம சோழீச்சரமுடையாரையும், குலோத்துங்க சோழீச்சரமுடையாரையும் எழுந்தருளுவிக்கப்பெற்ற செய்திகள் கூறப்பெற்றுள்ளன. இவ்விருதிருமேனிகளும் இக்காலம் முதற்பிராகாரத்துக் கொன்றை மரத்தடியிலும் இரண்டாம் பிராகாரத்தில் இரண்டாம் கோபுரத்துத் தென்பாலுள்ள செங்கற்கோயிலிலும் எழுந்தருளியிருப்பவர்களாக இருத்தல் வேண்டும்.

**இவ்வூரைத் தன்னகத்துக்கொண்டுள்ள நாடு :-** முதலாம் இராசராசன் கல்வெட்டில் இவ்வூர் பந்தணைநல்லூர் என்றே குறிக்கப் பெற்றுள்ளது. விக்கிரமசோழனது ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டில் இவ்வூர் வடகரை விருதராச பயங்கர வளநாட்டு விளத்தூர் நாட்டுப் பந்தணைநல்லூர் என்று குறிக்கப்பெற்றுள்ளது. சுந்தரமூர்த்தி நாயனாரால் நாட்டுத் தொகையில் விளத்தூர்நாட்டு விளத்தூர் என்று கூறப்பெற்றுள் ளது. இப்பந்தணைநல்லூர்க்குப் பக்கத்தில் இருத்தல் வேண்டும்.

**இராசராச நாடகம் :-** முதலாம் இராசராசன் காலத்தில் இக் கோயிலில் நட்டுவப்பங்கு மெய்மட்டிப்பங்கு இவைகளை உடையவனாய் இருந்தவன் ஹாஸியன் விக்கிரமாதித்தன் அச்சனான ராஜராஜ நாடகப் பெரியன் ஆவன். இதில் ராஜராஜ நாடகப்பெரியன் என்பது பட்டப் பெயராகும். இப்பட்டம் இராஜராஜ நாடகத்தில் இவனுக்கு இருந்த பெரும் புலமையை விளக்குவதாகும். இந்நூல் இதுபொழுது கிடைத்திலது.

**கோயில் பொருளைத் திருடியவர் தண்டிக்கப்பட்ட விதம் :-** இவ்வூர்ப் பசுபதீச்சரர்க்குத் திருவாபரணம் செய்யக்கொடுத்து இத்தேவர் பண்டாரத்தில் ஒடுக்கியிருந்த பொன்னிலே சிறிது பொன்னை இக்கோயிற் சிவப்பிராமணர் சிலர் கூறிட்டுக்கொண்ட குற்றத்திற்காக, இச்சிவப் பிராமணரும் இவர்கள் வம்சத்தாரும் இக்கோயிலிலும், இக்கோயிலில் எழுந்தருளுவித்த விக்கிரம சோழீச்சரமுடையார் கோயிலிலும், குலோத் துங்க சோழீச்சரமுடையார் கோயிலிலும் புகுதல் கூடாதென்றும், இவர்கள் கூறிட்டுக்கொண்ட குற்றத்திற்காக நூற்றெண்பது காசை இக்கோயில் திருப்பணிக்கு உடலாக ஒடுக்க வேண்டுமென்றும், அரசன் ஆணையிட்டுள்ளான். இது நிகழ்ந்தது, "பூமருவிய பொழிலேழும் பொருப்பேழும் புனைந்தருளி" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியை யுடைய பரகேசரி வர்மனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவரின் ஆறும் ஆண்டு ஐம்பத்தைந்தாம் நாளாகும்.

**கல்வெட்டுக்களைப் பாதுகாத்தவிதம் :-** 'பழங்கல்வெட்டிற் கண்டபடி' என்று முதலில் எழுதப்பெற்று, அதன்கீழ் ஸ்வஸ்திஸ்ரீ கோராஜகேஸரிவர்மற்கு யாண்டு ய (10) பந்தணைநல்லூர்ப் பசுபதி தேவற்கு" என இக்கோயில் அர்த்தமண்டபத்தின் தென்புறத்தில் ஒரு கல்வெட்டுத் தொடங்குகிறது. இதனால் கோயிலைப் புதுப்பிக்குங்காலை அதில் கல்வெட்டு இருந்தால் அதை அவ்வாறே புதுப்பித்த கோயிலில் செதுக்கி வைப்பது பண்டைய வழக்கமென்று தெரிகின்றது.

**காலிங்கன் எல்லலைப்பற்றிய கல்வெட்டுப் பாடல்கள் :-** இப்பாடல்கள் முதற்கோபுரத்து வாசலின் வடபால் சுவரில் இருக்கின்றன.

இவைகள் காலிங்கனது புகழைப்பற்றிக் கூறுகின்றன. இவன் தமிழில் மிக்க அன்புடையவன் என்றும், கொடையில் பாரியிலும் மேம்பட்டவன் என்றும், பலவாறாகப் பேசப்படுகின்றான். இக்கல்வெட்டுக்களின் எழுத்துக்களை நோக்கின் இவன் பதிமூன்றாம்நூற்றாண்டில் வாழ்ந்தவனாதல் வேண்டும். இப்பாடல்களில் ஒன்று பின்வருமாறு :-

"நாலங்க வாளிபெற்றார் நாரியரே பாரியினு
மேலங்க மான கொடைவேளாளன் - காலிங்க
னெல்லனுக் கேபெறுமோ விக்கிரசீ லங்கருப்பு
வில்லன்கைக் கேபெறுமோ மீன்."

See the Annual report on South Indian Epigraphy for the year 193[1] Nos. 69-74. 1932 Numbers 115-120.

*குறிப்பு:* இக்கோயில் கல்வெட்டுக்களை நேரில் படித்து வரலாறு எழுதலாயிற்று.

## 57 திரு பரிதிநியமம் (பக்கம் 491)

சூரியன் வழிபட்டுப் பேறுபெற்ற காரணம்பற்றி இப்பெயர் ஏற்பட்டது. இவ்வூர் இக்காலம் பரிதியப்பர் கோயில், பரித்தியப்பர் கோயில் என வழங்கப்பெறுகின்றது. இது தஞ்சாவூர்க்குக் கிழக்கில் உள்ள சாலியமங்கலம் ரயில்வே நிலையத்திற்குத் தென்மேற்கே எட்டு மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர் - பரிதியப்பர். இறைவியின் திருப்பெயர் - மங்களநாயகி. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

## 58 திருப் பல்லவனீச்சரம் (பக்கம் 531)

பல்லவ அரசனால் கட்டப்பெற்ற கோயில் ஆதலின் இப்பெயர் பெற்றது. இது காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் எனவும் வழங்கப்பெறும். "பட்டினத்துறை பல்லவனீச்சரத்து அரசு பேணி நின்றார்" என வரும் தேவார அடியும் இதற்குச் சான்றாகும். இது திருச்சாய்க்காட்டிற்குக் கிழக்கே சுமார் அரை மைல் தூரத்தில் இருக்கிறது

இறைவரின் திருப்பெயர் - பல்லவனேசுவரர். இறைவியின் திருப்பெயர் - சௌந்தரநாயகி. தீர்த்தம் - காவிரி சங்கமதீர்த்தம்.

பட்டினத்தடிகள் இவ்வூரில் தோன்றி, சிவபிரானை மகவாகப்பெற்றுத் துறவடைந்தனர். இயற்பகை நாயனர் அவதரித்துத் தன்மனைவியைத் தூர்த்த வேடத்தோடு எழுந்தருளிய இறைவனுக்கு அளித்து வீடுபேறு அடைந்த தலமும் இதுவேயாகும். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

## 59 திருப் பனந்தாள் (பக்கம் 256)

பனைமரத்தைத் தலவிருட்சமாக உடைமையின் இது பனந்தாள் என்று பெயர்பெற்றது. ஊரின்பெயர் பனந்தாள். இங்குள்ள கோயிலின் பெயர் தாடகைஈச்சரம் என்பதாகும். தாடகையால் பூசிக்கப்பெற்றமை யின் இப்பெயர் பெற்றது. இராமாயணத்தில் கூறப்பெற்றிருக்கும் தாடகை வேறு. இவர் வேறு.

இது மாயூரம் – கும்பகோணம் இருப்புப் பாதையில், ஆடுதுறை ரயில்வே நிலையத்திலிருந்து வடக்கே சுமார் ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவர் திருப்பெயர் – செஞ்சடையப்பர். இறைவியின் திருப் பெயர் – பெரிய நாயகி. மரம் – பனை. இது முதல் பிராகாரத்தில் இருக்கிறது.

இது தாடகைக்கு வளைந்தும், குங்கிலியக் கலியர்க்கு நிமிர்ந்தும் அருள் செய்த தலம். "மாலை சாத்தும், தாடகை மானங்காப்பான் தாழ்ந்து பூங்கச்சிட்டு ஈர்க்கும், பீடுறு கலையன் அன்பின் நிமிர்ந்த எம்பிரான் ஊர் ஈதால்" எனவரும் திருவிளையாடற் புராணம் அர்ச்சனைப்படலத்து அடிகளாலும் இச்செய்தியை அறியலாம். இவ்வூரில் இத்தாடகை ஈச்சரமும், ஊருடையப்பர் கோயிலும் திருத்தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானவைகள் இந்த ஊருடையப்பர் கோயில் மிகவும் சிலமாய் இருந்தது. இதை இப்பொழுது திருத்தருமபுர ஆதீனத்தில் 25-ஆம் பட்டத்தில் எழுந்தருளி அருளாட்சி நடத்தி வருபவர்களும் அருங்கலை விநோதரும் பெருங்கொடை வள்ளலுமாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், அமைப்பு முறையில் முன்பு இருந்ததைப்போல் திருப்பணி செய்துள்ளார்கள். இவ்வூரில் ஆதிகுமர குருபர சுவாமிகளது பரம்பரையாக பட்டத்தில் வீற்றிருந்து வரும் தம்பிரான் சுவாமிகளையுடைய காசிமடம் இருக்கிறது. இக்காலம் இதன்பெருமையையும், ஆற்றிவரும் தொண்டினையும் அறியாதார் யாருளர்? தாடகையீச்சரத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக் கின்றது.

**கல்வெட்டு வரலாறு :-** **கோயிலைக் கட்டியவர் :** இத்தாடகைச்சரத்தைக் கருங்கல்லால் கட்டியவர் திருப்பணந்தான் கக்கன்நாதனி என்பவராவர். இச்செய்தி “ ஆக நிலம் [illegible] முக்காலே நான்மாவரை முந்திரிகைக்கீழ் எண்மாவரையில் [illegible] [illegible] இந்நாட்டுப் பணந்தான் கக்கன்நாதன் எடுப்பித்த திருத்தாடகைச்சரத்துத் தேவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு யாண்டு 11 ஆவது முதல் ” என்னும் கர்ப்ப இல்லின் அரைப்புறச் சுவரில் பொறிக்கப்பெற்றுள்ள கல்வெட்டுப் பகுதியால் அறியலாம்.

**கோயிலின் பரப்பு :-** “ இவ்வூர்த் திருத்தாடகைச்சரம் உடையார் ஸ்ரீ கோயில் எண்றளந்த நிலம் இருமா அரைக்காணி முந்திரிகைக்கீழ் நாலுமாவும் ” என்னும் கல்வெட்டுப் பகுதியால் இக்கோயிலின் பரப்பு இருமா அரைக்காணி முந்திரிகைக்கீழ் நாலுமா என்று பெறப்படுகின்றது.

**இறைவரின் திருப்பெயர் :-** இக்கோயில் கல்வெட்டுக்களில் இறைவர் திருத்தாடகைச்சரத்து மகாதேவர், திருத்தாடகேச்சரத்துப் பெருமான், திருத்தாடகைச்சரமுடைய நாயனார் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**இறைவியாரின் திருக்கோயிலைக் கட்டியவர் :-** இக்கோயிலைக் கருங்கல்லால் கட்டியவர் வெண்கூருடையார் அம்பர்க்கரசு மருத மாணிக்கமான வில்லவராசர் ஆவர். இச்செய்தியை “ ஸ்வஸ்திஸ்ரீ தேவியை எழுந்தருளுவித்த வெண்கூருடையான் அம்பர்க்கரசு மருத மாணிக்கமான வில்லவன்ராசன் ” என்னும் இறைவன் கோயிலின் மகாமண்டபத்து வாசலின் தென்பாலுள்ள கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

**இறைவியாரின் திருப்பெயர் :-** ‘பெரியநாய்ச்சியார்’ என்பது இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவரது திருப்பெயராகும். இச்செய்தியைத் “ திருக்காமக்கோட்டமுடைய பெரியநாச்சியார்கன்மிகள் ஆதிசண்டேசுவரதேவகன்மிக்குத் தானம் பண்ணி ” என்னும் முதற் குலோத்துங்கசோழனின் கல்வெட்டுப் பகுதி அறிவிக்கின்றது.

**குங்கிலியக்கலையரின் திருக்கோயில் :-** இக்கோயிலில் குங்கிலியக்கலையர்க்குத் திருக்கோயில் எடுப்பித்தவர் திருக்கடவூர்க் குங்கிலியக் கலையரின் திருப்பெயரையே தமக்குப்பெயராகக்கொண்ட திருப்பணந்தாள் குங்கிலியக்கலையர் ஆவர். இத் திருப்பணந்தாள் குங்கிலியக்கலையர் “ திருக்கடவூர்க் குங்கிலியக்கலையார் சீபாதத்துக்குப் பணிசெய்திருக்கும் தீயிலும் பிரியாதான் அழியாவிரதங்கொண்டவனை குங்கிலியக்கலையர் ” என இவ்வூர்க் கல்வெட்டுக்களில் பாராட்டப்பெற்றுள்ளனர். இதனால் இவரது அடியார் பத்திச் சிறப்பு இனிது விளங்குகின்றது.

**இக்கோயில் இருக்கும் இடம் :-** இக்கோயில் இரண்டாம் திருச்சுற்றுமாலையில் (பிராகாரத்தில்) மேற்குப் பக்கத்தில் இருக்கும் கோபுரத்தின் தென்பால் விமானத்துடன் கூடிய ஒரு தனிக் கோயிலாக இருக்கின்றது.

**திருக்கடவூர்க் குங்கிலியக்கலய நாயனாரது மனைவியாரின் திருப்பெயர் :-** 'நீலாயி' என்பது இவ்வம்மையாரின் திருப்பெயராகும். இச்செய்தி இரண்டாம் பிராகாரத்தின் தென்புறச் சுவரில் பொறிக்கப் பெற்றுள்ள முதற் குலோத்துங்கசோழன் கல்வெட்டால் விளங்குகின்றது. இப்பெயரைச் சைவமக்கள் கண்டு மகிழ்வுறுவர் என்பது திண்ணம்.

**எடுப்பிக்கப்பெற்ற திருவீதி :-** திரு ஆப்பாடி உடையாரும், திருத் தாடகைஈச்சரம் உடையாரும் திருநாளில் கொள்ளிடத்தில் தீர்த்தம் பிரசாதிக்க எழுந்தருளுவதற்கு இராசகம்பீரன் என்ற திருநாமத்தால் இரண்டாம் இராசராசன் காலத்தில் திருவீதி எடுக்கப்பெற்றது.

**கோயிலைச் சோழமன்னர்கள் புரந்துவந்த விதம் :-** இக்காலம் தருமபுர ஆதீனத்தில் இருபத்தைந்தாவது பட்டத்தில் இனிது வீற்றிருந்து அருளாட்சி நடத்தும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், திடீரென்று புறப்பட்டுத் திருக்கோயிலில் பூசை முதலியவைகள் சரிவர நடைபெற்று வருகின்றனவா எனச் சோதித்துவருவதைப்போல் சோழமன்னர்களும் அவர்களது சேனாபதிகளும் அடிக்கடி இக்கோயிலுக்கு எழுந்தருளி இக்கோயிலைச் சுற்றிப் பார்த்தும், பண்டாரத்தைச் சோதித்தும்வந்தனர். அவ்வாறு செய்துவந்த காலங்களில் இக்கோயில் தேவகன்மிகள் கோயில் பண்டாரத்திலிருந்து திருவாபரணம், பரிகலச்சின்னம் முதலியவைகளைத் திருடிக்கொண்டதைக் கண்டுபிடித்து அவர்களுக்கு அபராதம் விதித்து வந்தனர். அபராதத்தைக் கொடுக்க உபாயம் இல்லாதவர் அவருடைய இக்கோயில் உரிமையை விற்று அபராதத்தைச் செலுத்திவந்தனர். இச் செய்திகள் அனைத்தையும் " அதிராசேந்திரதேவர்க்குயாண்டு மூன்றாவது இராசராசமூவேந்தவேளார் இத் தேவர் பண்டாரம் சோதித்தவிடத்து ", " திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு எட்டாவது சேனாபதிகள் பல்லவ ராசாயித்தேவர் பண்டாரஞ் சோதித்த விடத்து ", " யாண்டு இருபத்தொன்பதாவது சேனாபதிகள் நந்தியராசா இத்தேவர் பண்டாரஞ் சோதித்த விடத்து ", " ஸ்வஸ்திஸ்ரீ யாண்டு கச (14) நாள் முந்நூற்றி.........டு திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழதேவர் திருப்பனந்தாளுடையாரைக் கும்பிட்டுத் திருச்சுற்று மாளிகையிலே எழுந்தருள நீலாயிகுங்கிலியக்கலயர்க்கு............சாத்தியருளும் திருவாபரணமும் பரிகலச்சின்னமும் அழித்துக்கொண்டு கடமை செய்திதெனநென்று திருவாய்மொழிந்தருள அவர்களுக்குக் காசுகொடுக்க உபாயமில்லாமையால் " எனத் தொடங்கும் கல்வெட்டுப் பகுதிகளால் அறியலாம்.

வேறு செய்திகள் :- இத்திருப்பனந்தாளுக்கு அருகிலுள்ள இடவை என்ற ஊரைப்பற்றியும் அதற்குரியாரையும் இடவைவாய்க்காலைப்பற்றியும் இவ்வூர்க் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இந்த இடவைக்குப் பாண்டியனை வென்கண்டசோழ சதுர்வேதிமங்கலம் என்ற வேறுபெயரும் உண்டு. இங்கே முதலாம் ஆதித்தசோழன் பாண்டியனோடு பொருது அவனைப் புறங்காட்டி ஓடச்செய்தான். அதுகருதியே இடவைக்கு இப் பெயர் உண்டாயிற்று. "இன்னம்பர் புரிடவை ஏமப்பேறூர்" என்ற தேவாரப்பகுதியால் இவ்விடவை ஒரு வைப்புத்தலம் என்று பெறப்படுகின்றது. திருப்பனந்தாளிலிருந்து ஆடுதுறைக்குப்போகும் பெருவழியில் இடையார்நல்லூர் என்னும் ஊர் இருக்கின்றது. அதை இடவையாகக் கொள்ளுதற்கு இல்லை. முதலாம் இராசராசசோழனின் ஓரே ஆண்டில் பொறிக்கப்பெற்ற ஓரே கல்வெட்டு இடையார்நல்லூர் வேறு, இடவை வேறு என்பதை உணர்த்துகின்றது. சகம் 1369 இல் அதாவது கி. பி. 1447 இல் விசயநகரவேந்தராகிய தேவராயமகாராயரின் மகனாகிய மல்லிகார்ச்சுனதேவர் காலத்தில் செதுக்கப்பெற்ற இக் கோயில் கல்வெட்டு இடவை என்ற ஊரிலுள்ள காராம்பிச்செட்டு நாராயணப்பட்டர் தாடகை ஈச்சரத்துப் பெருமானுக்கு வைகாசித் திருவிழாவிற்கு நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கின்றது. எனவே கி. பி. 1447 லும் இவ்வூர் இருந்தது என்று பெறப்படுகின்றது.

திருப்பனந்தாளில் மாடக்கோயில் அமைப்புடன் ஒரு சிவன்கோயில் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமாய் இருக்கின்றது. அக்கோயிலில் மிகப் பழங்காலத்துக் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவைகள் அக் கோயிலைத் திருவிசயனீச்சரம் என்று குறிப்பிடுகின்றன. அது விசயனீச் சரம் அன்று. அசனீச்சரம் என்பதை இத்தாடகை ஈச்சரமுடையார் கோயில் மடைப்பள்ளிவாசல் அருகாலில் செதுக்கப்பெற்றுள்ள குலோத் துங்கன் காலத்துக் கல்வெட்டு நன்கு அறிவிக்கின்றது. 'அசனீச்சரம்' என்றால் பிரமனால் பூசிக்கப்பெற்ற கோயில் என்று பொருள். அவ்வாசல் படியின் மற்றொரு அருகாலில் உள்ள விக்கிரமசோழன் கல்வெட்டு இவ்வூரில் வேளூர் கிழவன் திருவையாறு தேவனான இராசேந்திரசோழப் பல்லவரையனால் 'இருநூற்றுப் பதினொருவன்' என்னும் பெயருள்ள ஒரு குளத்தை வெட்டிய செய்தி பெறப்படுகின்றது. கருப்ப இல்லிலுள்ள கல்வெட்டுப் பகுதியால் இவ்வூர்க்கு அண்மையில் ஓடும் மண்ணியாற் றுக்குக் 'குஞ்சரமல்லன்' என்ற வேறு பெயரும் உண்டென்று பெறப் படுகின்றது. இவ்வூர்க்கு வடக்கே சுமார் பத்துமைல் தொலைவில் உள்ள கங்கைகொண்ட சோழேச்சரத்தில் சோழமன்னர்களுடைய கல் வெட்டுக்கள் இல்லை. எனினும் இத்திருப்பனந்தாள் கல்வெட்டு இரண் டாம் இராசேந்திரன் காலத்தில் சோழமன்னர்களுக்குக் கங்கைகொண்ட சோழபுரத்தில் வீடு இருந்ததைக் குறிப்பிடுகின்றது. இரட்டபாடி ஏழரை

இலக்கமுங்கொண்டு ஆகவமல்லனை இருமடிவென்கொண்ட உலகுய்ய வந்தருளின அண்ணற்கு யாண்டு கக (11) ஆவது கங்கைகொண்ட சோழபுரத்து வீட்டினுள்ளால்குளிக்குமிடத்துத்தானஞ்செய்தருளஇருந்து" என்பது அதைக் குறிக்கும் கல்வெட்டுப் பகுதியாகும்.

**See the Annual report on South Indian Epigraphy for the years 1908, 1914, 1932. Numbers 28, 29-47, 74-80.**

குறிப்பு :- தருமபுர ஆதீனத்தில் இருபத்தைந்தாம் பட்டத்தில் அருளாட்சி நடத்திவரும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியவாறு 1946 இல் இக்கோயில் கல்வெட்டுக்களைப் படித்துச் செந்தமிழ்ச் செல்வியில் வெளியிட்ட கட்டுரையின் சுருக்கமே இங்கு எழுதப்பெற்றுள்ளது.

## 60 திருப் புனவாயில் (பக்கம் 55)

இது மிகப்பழமை வாய்ந்தபதி என்பதை

" பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட றப்புன வாயிலே "

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வூர்ப் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளனர். இது அறந்தாங்கி ரயில்வே நிலையத்திற்குத் தென்கிழக்கே ஏழு மைலி லுள்ள திருப்பெருந்துறைக்குத் தெற்கே 14 மைல் தூரத்தில் உள்ளது.

இறைவரின் திருப்பெயர் - பழம்பதிநாதர். இறைவியின் திருப் பெயர் - கருணைநாயகி. மரம் - புன்னை. தீர்த்தம் - இலக்ஷ்மி தீர்த்தம், பிரம தீர்த்தம்.

வேதங்கள் வழிபட்டுப் பேறுபெற்றதலம். நந்தியும் மூல லிங்கமும், ஆவிடையாரும் மிகப்பெரியதாய் உள்ளன. 'இலிங்கத்திருமேனிக்கு மூன்றுமுழப் பரிவட்டமும், ஆவுடையாருக்கு முப்பதுமுழப் பரிவட்டமும் வேண்டும் என்பர். பாண்டி நாட்டில் உள்ள பதினான்கு தலங்களின் மூர்த்திகளும் இங்கு எழுந்தருளியிருக்கின்றனர். இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங் கள் இருக்கின்றன.

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்க் கோயிலில் பாண்டியர்களில், கோனேரின்மை கொண்டான் திரிபுவனச் சக்கரவர்த்தி விக்கிரம பாண்டிய தேவன், கோச்சடையபன்மரான வீரபாண்டிய தேவன், கோச்சடைய பன்மரான சுந்தரபாண்டிய தேவன், எம்மண்டலமுங்கொண்டருளிய

கோமாறபன்மரான சுந்தரபாண்டிய தேவன் இவர்களின் காலங்களில் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருப்புனைவாசலுடைய நாயனார், என்னும் பெயரால் குறிக்கப் பெற்றுள்ளனர். இவ்வூர் மறத்தூர்க் கூற்றத்துக்கு உட்பட்டிருந்தது. கோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவன், தன் ஆட்சியின் பதினான்காம் ஆண்டில் தன்பேரால் ஏற்படுத்திய வீரபாண்டியன் சந்திக்கு நித்திய அமுதுக்கு வேண்டும் அமுதுபடி, கறியமுது, திருமஞ்சனம், திருமேற்பூச்சு, எண்ணெய்க்காப்பு, திருவிளக்குக்கு எண்ணெய், திருப்பரிவட்டம், மற்றும் வேண்டிய தேவைகளுக்கும் நிலநிவந்தம் அளித்திருந்தான். கோச்சடையபன்மரான சுந்தரபாண்டிய தேவரின் காலத்தில் ஒருவருடையான் அழகிய மணவாளப்பெருமாளான காலிங்கராயன் தன்பேரால் ஏற்படுத்திய காலிங்கராயன் சந்திக்கு நிலம் விட்டிருந்தான்.

**See the Annual reports on South Indian Epigraply for the years 1902. Numbers. 162-616.**

## 61 திருப்பூவணம் (பக்கம் 91)

இது புட்பவனக்காசி என்றும் கூறப்பெறும். மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. இத்திருப்பூவணமே ஒரு ரயில்வே நிலையம். திருக்கோயில் இந்த ரயில்வே நிலையத்திலிருந்து கிழக்கே அரை மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவர் திருப்பெயர் – பூவணநாதர். இறைவியின் திருப்பெயர் – மின்னம்மை. மரம் – பலா. தீர்த்தம் – வைகை.

சிவநெறிப்பற்றுச் சான்ற பொன்னனையாள் என்னும் அம்மையாரின் பொருட்டு, மீனாட்சி சுந்தரேசுவரர் சித்தர் வடிவமாய் எழுந்தருளி இரசவாதம் செய்து, சோமாஸ்கந்தர் திருமேனி அமைக்குமாறு அருள்செய்த பதி. தமிழ்நாட்டு மூவேந்தர்களோடு சுந்தரர் வழிபட்ட பதிகளுள் இதுவும் ஒன்று.

இத்தலத்திற்குப் புராணம் ஒன்றையும் உலா ஒன்றையும் கந்தசாமிப் புலவர் இயற்றியுள்ளனர். அவைகள் அச்சில் வெளிவந்துள்ளன. இக் கோயிலின் கொடுங்கைகள் திருப்பெருந்துறையைப்போல அருமையான வேலைப்பாடுகள் பொருந்தியுள்ளன. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் இரண்டும், அப்பர் பதிகம் ஒன்றும், சுந்தரர்பதிகம் ஒன்றும் ஆக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு வரலாறு :- இத்திருக்கோயிலில் பாண்டியர்களில் கோனேரின்மைகொண்டான், பராக்கிரம பாண்டிய தேவர், இவர்களின் காலங்களில் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருப்பூவணமுடைய நாயனார் என்னும் பெயரால் குறிக்கப் பெற்றுள்ளனர் இவைகள் பொன் கொடுத்ததை உணர்த்துகின்றது.

See the Annual report on South Indian Epigraphy for the years 1891, Numbers 17, and the South Indian Inscriptions volume V. Numbers 305-306.

## 62 திரு பெருவேளூர் (பக்கம் 264)

இது இக்காலம் காட்டூர் ஐயன்பேட்டை என்று வழங்கப்பெற்று வருகின்றது. இது திருவாரூர்க்கு மேற்கே ஏழுமைல் தூரத்திலுள்ள திருக்கரவீரத்திற்கு வடமேற்கே ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரின் திருப்பெயர் – பிரியநாதர். இறைவியின் திருப்பெயர் – ஏலவார்குழலி. கௌதமர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இதற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன. இறைவரின் திருப்பெயர் பிரியார் எனச் சம்பந்தர் பதிகத்திலும், பேணினான் என அப்பர் பதிகத்திலும் காணப்படுகிறது.

## 63 திருப் பைஞ்ஞீலி (பக்கம் 67)

பசுமையான வாழையைத் தலமரமாக உடைமையால் இப்பெயர் பெற்றது விழுப்புரம் – திருச்சிராப்பள்ளி இருப்புப் பாதையில், பிட்சாண்டார் கோயில் ரயில்வே நிலையத்தில் இறங்கி இவ்வூர்க்குச் செல்லவேண்டும்.

இறைவரின் திருப்பெயர் – நீலகண்டர் இறைவியின் திருப்பெயர் – விசாலாட்சி (அ) நீள்நெடுங்கண்ணி.

அப்பர் பெருமான் நீர்வேட்கையோடும், பசியோடும் இத்தலத்திற்கு வந்து அணைந்திட, இறைவன் திருநீற்று அந்தணராய், பொதிசோறும் தண்ணீரும் கொடுத்த தலம். இத்தலத்திற்கு அப்பர் பதிகம் ஒன்றும், சுந்தரர் திருப் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன. இத்தலத்திற்கு மதுரை மெய்ப்பாத புராணிகர் புராணம் இயற்றியுள்ளனர்.

**கல்வெட்டு வரலாறு** - இவ்வூர்க்கோயிலில் "திருமன்னிவளர இருநிலமடந்தையும்" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய முதலாம் இராசேந்திர சோழதேவன், 'திங்களேர்தருதன் தொங்கல்' மெய்க்கீர்த்தியையுடைய முதலாம் இராசாதிராசன், "சீர்மன்னி இருநான்கு திசையும்" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய கோப்பரகேசரிவர்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவர், திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மைகொண்டான் இவர்கள் காலங்களில் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருப்பைஞ்ஞீலி மகாதேவர், திருப்பைஞ்ஞீலி உடையார், திருப்பைஞ்ஞீலி உடைய நாயனுர் என்னும் பெயர்களால் குறிக்கப் பெற்றுள்ளனர்.

முதலாம் இராசேந்திர சோழன் கல்வெட்டு இவ்வூரை, இராசேந்திர சிங்கவளநாட்டுத் தனியூர், திருவெள்ளறை திருப்பைஞ்ஞீலி எனவும், முதலாம் இராசாதிராசன் கல்வெட்டு இராசாதிராச வளநாட்டு வடவழி நாட்டுத் திருப்பைஞ்ஞீலி எனவும், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவரின் கல்வெட்டு இராஜராஜ வளநாட்டு வடவழி நாட்டுத் திருப் பைஞ்ஞீலி எனவும் கூறுகின்றன. இக்கோயிலுக்குக் கொடுக்கப்பெற்ற நிவந்தங்கள். இவ்வூர் மேலைச்சேரியில் இருந்த சபையாராகிய 'மூலவருடையர்' இடத்தில் கொடுக்கப்பெற்றுவந்தன. அவர்கள் தங்கள் ஊரில் இருந்த மணியம்பலத்தில், கூட்டம் குறைவறக் கூடியிருந்தும், சிலகாலங்களில் தங்கள் ஊரில் மலைமேல் கொல்லத்து இளங்கோனுர் மண்டபத்தே கூடியிருந்தும், அவைகளைப்பெற்று அறங்களை நடத்தி வந்தனர்.

இராசராச வளநாட்டுப்பாச்சில் உடையார் திருமேற்றளி உடைய நாயனுரது திருக்கோயிலின் அர்த்தமண்டபம், திருமண்டபம் இவைகள் சீரணித்து இருந்தன. இவைகளைத் தட்டோடு திருப்பணி செய்தற்கும், திருமலையில் திருமஞ்சனம் பண்ணவேண்டுகைக்குமாக இவ்வூர் ஆதி சண்டேசுவர தேவகன்மிகள் இவ்வூர்ச் சிவபெருமானுக்கு உரிய வெங்காந்தம் நிலம் நானூற்று ஒருபத்தைந்தே முக்காலே மாகாணி அரைக்கீழ் எட்டுமா நிலத்தைத் திருப்பைஞ்ஞீலி உடையார் கோயில் ஆதிசண்டேஸ்வர தேவகன்மிகளுக்கு பதினுயிரம் நற்காசுக்குக் குடிக் காணியாக விற்றுக்கொடுத்த செய்தியை, விசாலாட்சி அம்மன் கோயிலி லுள்ள திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராச தேவரின் கல்வெட்டு உணர்த்து கிறது. எனவே திருப்பைஞ்ஞீலி மேற்றளி உடையார் கோயிலின் அர்த்த மண்டபம் திருமண்டபம் இவைகளின் திருப்பணி இந்தத் திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவர்காலத்தில் மீளவும் கட்டத் தொடங்கி இருக்கவேண்டும், அல்லது கட்கு முடிவு பெற்றிருக்கவேண்டும் என்று கொள்ளலாம்.

திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டார், திருப் பைஞ்ஞீலி உடையார் கோயில் திருநிலை எழுகோபுரத் திருப்பணிக்கும், பலதிருப்பணிக்கும் உடலாக வள்ளுவப்பாடி நாட்டில் ஆதனூரில் நான்கு எல்லைக்கு உட்பட்ட நன்செய், புன்செய் நிலங்களைக் கொடுத் துள்ளார். அக்கோபுரத் திருப்பணி முற்றுப்பெறாமல் இருக்கின்றமையால், இக்கோபுரம் இம்மன்னன் காலத்தில் கட்டத்தொடங்கப்பெற்றது என்பது உறுதி.

**புகழேந்திப்புலவரை ஆதரித்த சந்திரன் சுவர்க்கியின் நாடு :-** புகழேந்திப்புலவரை ஆதரித்த சந்திரன் சுவர்க்கியின் நாடு மள்ளுவநாடு என்பதும், அவனது நகரம் முரணை என்பதும், நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 50-ஆம் பாடலாலும், சுயம்வரகாண்டம் 17-ஆம் செய்யுளாலும் முறையே அறியலாம். இந்நளவெண்பாவிற்கு உரை எழுதிய கோமளபுரம் மகாவித்துவான் இராசகோபாலப் பிள்ளையவர்கள், சுயம்வர காண்டம் 17-ஆம் பாடலின் உரையில் (1923-இல் மதராஸ் ரிப்பன்அச்சி யந்திரசாலையில் பதிப்பித்த நளவெண்பா சுயம்வரகாண்டம், பக்கம் 28 )

"உறையூரைச் சார்ந்த மள்ளுவ நாட்டிலுள்ள முரணை நகரத் தரசனாகிய சந்திரன் சுவர்க்கி என்பவன் ஆசிரியரை ஆதரித்ததும், இந் நூலைச் செய்வித்ததுமாகிய நன்றியைப்பற்றி மாவிந்தநகரம் முரணை நகரெனக் கூறினர்" என முதற்கண் மள்ளுவநாடு இருக்கும் இடத்தைத் தெரிவித்த பெருமை அவர்க்கே உரியதாகும். அம்மள்ளுவநாடு, முற்காலத்தில் வள்ளுவப்பாடி நாடு என்னும் பெயருடன் திகழ்ந்து அதுவே மள்ளுவநாடு எனத் திரிந்திருக்கவேண்டும்.

'வண்டார் வளவயல்சூழ் வள்ளுவநாட் டெங்கோமான்'

எனத் தொடர் இருப்பதே சிறந்ததாகும். இங்ஙனம், இப்பைஞ்ஞீலியில் உள்ள கோனேரின்மைகொண்டான் கல்வெட்டு இதைத் தெரிவிப்பது மகிழ்தற்குரியதாகும்.

**See the Annual report on South Indian Epigraphy for the year 1892 Numbers 90-94, and South Indian Inscription volume IV Numbers 537-541.**

## 64 திரு மயிலாடுதுறை (பக்கம் 300)

மயூரம் (மயில்) சம்பந்தம் உடையது ஆதலின் இது மாயூரம் என்று வழங்கப்படுகிறது. இறைவி மயில் வடிவங்கொண்டு இறைவரை

வழிபட்டுப் பேறுபெற்ற தலமாதலால் மயிலாடுதுறை என்னும் பெயர் பெற்றது. இது மாயூரம் இரயில்வே சந்திப்பிலிருந்து (Mayuram Railway Junction) கிழக்கே இரண்டுமைல் தூரத்தில் இருக்கிறது. மாயூரம் டவுன் இரயில்வே நிலையத்திலிருந்து சுமார் ஒரு பர்லாங் தூரத்திலிருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் மாயூரநாதர். இறைவியின் திருப்பெயர் 1. அபயாம்பிகை. 2. அஞ்சொலாள். இப்பெயரை "அஞ்சொலாள் உமைபங்கன் அருளிலே" என அப்பர்பெருமான் இவ்வூர்ப் பதிகத்தில் எடுத்து ஆளுகின்றார். தலப்பிள்ளையார் மூக்குறுணிப்பிள்ளையார். தீர்த்தம் காவிரி. காவிரியில் இருக்கும் இத்தீர்த்தத்துறைக்கு இடபதீர்த்தம் என்று பெயர். ஐப்பசிமாதம் அமாவாசைநாளில் நடேசமூர்த்தி இத்தீர்த்தத்துறைக்கு எழுந்தருளிக் கங்கையைக் காவிரியில் கலக்குமாறு அருள்புரிகின்றார். ஐப்பசிமாதத்தில் காவிரியில் உள்ள இத்துறையில் நீராடுவது மிக விசேடம் என்பர். இம்மாதத்தில் இங்கு நீராடுவதை, துலாஸ்நாநம் என்று கூறுவர். இக்கோயில் பெரிய பிராகாரத்தினுள் வடபால் பழைய கோயில் என்று கூறப்பெறும் பிரமபுரீசுவரர் கோயில் இருக்கிறது. இக்கோயிலுக்கு, சம்பந்தர் பதிகம் இரண்டு, அப்பர் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. இத்தலத்தைப்பற்றி,

"மதிநுதல் இமயச்செல்வி மஞ்ஞையாய் வழிபட்டேத்து
மிதுதுலாப் பொன்னித் தானம்"

எனப் பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம் அர்ச்சனைப் படல அடிகளால் அறிவிப்பர். இத்தலத்திற்குத் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை தலபுராணம் எழுதியுள்ளனர். அது அச்சில் வெளிவந்துள்ளது. இக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. இக்கோயிலின் உள் பிராகாரத்தின் மேல்பால் எழுந்தருளியிருக்கும் குமரக்கோட்டம் (முருகப்பெருமான் கோயில்) தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமானதாகும்.

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்க் கோயிலில் திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராசதேவரின் பதினைன்காம் ஆண்டிலும், இருபத்தாரும் ஆண்டிலும் செதுக்கப்பெற்ற இரண்டு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் இறைவர் திருமயிலாடுதுறை உடையார் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். இராசராசதேவரின் பதினைன்காம் ஆண்டுக் கல்வெட்டு திருப்பள்ளியறைநாச்சியார்க்கு நில நிவந்தம் அளித்ததைக் குறிப்பிடுகின்றது.

## 65 திரு மயேந்திரப்பள்ளி (பக்கம் 137, 520)

சிதம்பரம் – மாயூரம் இரயில்பாதையில், கொள்ளிடம் இரயில்வே நிலையத்திற்குக் கிழக்கிலுள்ள திருப்பெருமணநல்லூர் (ஆச்சார்யார்கள் புரம்) க்கு வடகிழக்கே நான்குமைல் தூரத்தில் இருக்கிறது. இது கோயிலடிப்பாளையம் என்றும் வழங்கப்பெற்றுவருகின்றது.

இறைவரின் திருப்பெயர் திருமேனியழகர். இத் திருப்பெயரை அழகன் எனவும், அந்தமில் அழகன் எனவும் இவ்வூர்ப் பதிகத்தில் எடுத்து ஆளப்பெற்றுள்ளது. இறைவியின் திருப்பெயர் வடிவாம்பிகை. சந்திரன், சூரியன், பிரமன், இந்திரன் இவர்கள் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். இதை, "சந்திரன் கதிரவன் றகுபுகழய னொடும் இந்திரன் வழிபட விருந்தவெம் மிறையவன்" என்னும் பதிக அடிகள் புலப் படுத்தும். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் இரண்டு இருக்கின்றது.

## 66 திரு மழபாடி (பக்கம் 124, 199)

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்த் திருக்கோயிலில் 'பிற்காலச் சோழமன்னர்களுள்' மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன் (முதல் பராந்தகசோழன்), முதலாம் இராசராசசோழன், இராசகேசரிவர்மனுகிய முதலாம் இராசாதிராசதேவன், விசயராசேந்திரசோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி முதலாங் குலோத்துங்கசோழன், விக்கிரமசோழன், "பூமன்னியாணர் பொழில் ஏழுலகும் தாமுன்செய் தவத்தால் பரிதிவழித் தோன்றி" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய இராசகேசரி பன்மரான திரிபுவனச்சக்கரவர்த்தி குலோத்துங்கசோழதேவன் "கடல் சூழ்ந்த பார்மாதரும் பூமாதரும்" என்னும் தொடக்கமுள்ள மெய்க்கீர்த் தியையுடைய கோப்பரகேசரிபன்மரான திரிபுவனச்சக்கரவர்த்தி ராசாதி ராசதேவர் முதலானோர் காலங்களிலும், 'பாண்டியர்களுள்' சடாவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி சுந்தரபாண்டியதேவன், சடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியதேவன், மாறவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி பாரக்கிரமபாண்டியன் ஆகியோர் காலங்களிலும்; 'ஹொய்சாலர்களுள்' சகலபுவனச்சக்கரவர்த்தி வீரராமநாதன், வீரசோமீசுவரதேவன் இவர்கள் காலங்களிலும்; விசயநகரவேந்தரில் பிரதாபராயர் காலத்திலும் வெட்டப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

முதலாம் இராசராசசோழன் காலத்தில் இக்கோயில் ஸ்ரீ விமானம் வாங்கித் திருக்கற்றளிசெய்யப்பெற்றது. அது அம்மன்னனது இருபத் தெட்டாம் இராச்சிய ஆண்டில் நிகழ்ந்தது. ஆதலின் அக்கற்றளி அமைக்கப் பெற்று இற்றைக்கு 942 ஆண்டுகள் ஆகின்றன. அதன்பின்னர் இந்த

ஸ்ரீ விமானத்தின் திருப்பணியை மாத்திரம் செய்வித்தான் தேவன் நரசிம்ம தேவன் தண்டநாயக்கன் ஆவன். இக்கோயில் பொன்னார் திருமேனியைச் செப்புத்தராவால் எழுந்தருளுவித்தவன் உடையார் இராசேந்திர சோழதேவர் அணுக்கியார் ஐயாறன்செம்பொன்நங்கைக் கூத்தன் உத்தம சீலியார் மகனார் சிறுதனப் பெருந்தரம் சேனாதிபதி அரையன் கடாரங் கொண்ட சோழன் ராஜராஜ அணிமுரி நாடாழ்வான் ஆவன். அத்திரு மேனியை அவன் எழுந்தருளுவித்த காலம் பூர்வதேசமும் கங்கையும் கடாரமுங்கொண்ட இராசேந்திர சோழதேவரின் எட்டாம் ஆட்சியாண்டு அதாவது இற்றைக்கு 933 ஆண்டுகளாகும். இக்கோயிலில் பிள்ளையார் திருஞானசம்பந்த அடிகள், திருநாவுக்கரைய தேவர், நம்பி ஆரூரனார் இவர்களின் பிரதிமங்களை எழுந்தருளுவித்தவர் திருமலரங்கனாகிய திருப்பள்ளித் தாமப்பிச்சனும் அவனது மனைவியாரும் ஆவர். இப்பிரதி மங்கள் எழுந்தருளுவிக்கப்பெற்ற காலம் முதலாம் இராசேந்திர சோழனின் இருபதாம் ஆட்சியாண்டு அதாவது இற்றைக்கு 920 ஆண்டு களாகும். இக்கோயிலில் ஜெயங்கொண்ட சோழவிடங்கரையும் அவரது நாச்சியாரையும் எழுந்தருளுவித்தவர் இக்கோயிலில் காரியம் பார்த்த ஒருவராவர். இக்கோயிலில் மகாவிஷ்ணுவையும் அவரது நாச்சியாரையும், பிரமதேவரையும் எழுந்தருளுவித்தவர் கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்துச் சபையார் ஆவர். இவர்கள் எழுந்தருளுவிக்கப்பெற்ற காலம் முதலாம் இராசாதிராச சோழனது முப்பத்துமூன்றும் ஆண்டாகும். இக்கோயிலில் நந்திதேவரை எழுந்தருளுவித்தவர் செந்தாமரைக் கண்ணனான ஸ்ரீ நந்திகேஸ்வர நம்பியாவர். இவர் இத்தேவரை எழுந் தருளுவித்தது விக்கிரமசோழ தேவரது காலமாகும். இக்கோயிலில் பிட்சாண்ட தேவரை எழுந்தருளுவித்தவர் தீனசிந்தாமணி என்னும் வியாபாரியின் தந்தையாவர். அவரை எழுந்தருளுவிக்கப்பெற்றது மூன்றாங்குலோத்துங்க சோழதேவரின் காலமாகும். திரிபுவனச் சக்கர வர்த்தி இராசராச தேவரின் ஏழாம் ஆட்சியாண்டில் திருமழபாடியில் வதிந்தவனும் உத்துங்க துங்கவளநாட்டுக் குன்றக் கூற்றத்தில் நிலம் உடையவனுமாகிய கூத்தூருடையான் தெற்றி பெரியன் எதிரிலிசோழ மூவேந்த வேளான், இக்கோயிலில் குறுகலாயிருந்த சில மண்டபங்களை விரிவுபடுத்திக் கட்டினான். இக்கோயிலில் வைத்தியநாதேஸ்வரமுடைய நாயனாரை எழுந்தருளுவித்தவர் மாகேஸ்வரர்களில் ஒருவராகிய எம்பிரான் சம்பந்தன் ஆவர். இக்கோயில் மதில் ஒன்றிற்குப் பெரிய நத்தன் திருமதில் என்றும் இக்கோயில் வாசல் ஒன்றிற்குத் தன்மகாகாளன் திருவாசல் என்றும் பெயர்கள் வைக்கப்பெற்றிருந்தன. இச்செய்திகளை முறையே இக்கோயிலிலுள்ள திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவரின் ஏழாமாண்டுக் கல்வெட்டும், திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தர பாண்டிய தேவரின் இரண்டாமாண்டுக் கல்வெட்டும் உணர்த்து கின்றன. மூன்றும் பிராகாரத்துத் தெற்குவாசலில், வழிபாட்டிற்குச் செல்பவர்கள் கைகால்களைக் கழுவிக்கொள்ள ஒரு கிணற்றைத்தோண்டு

வித்தவர் மலைமண்டிலத்து ஏரன்புரம் என்னும் ஊரில் இருந்த ஒருவராவர். இக்கோயிலில் கங்கைகொண்டசோழன் சாலை ஒன்று இருந்தது. அது அன்னமளிப்பதற்கு ஏற்பட்டதாகும்.

**சிவபெருமானின் திருப்பெயர்கள் :-** இக்கல்வெட்டுக்களில் சிவபெருமான் திருமழபாடி உடையார், திருமழபாடி பெருமானடிகள், திருமழுவாடி மாதேவர் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**அணிகல வகைகள் :-** முத்தின் பூணநூல், திருக்கைகாறை, திருவடிக்காறை, திருக்கழுத்துச் சாத்தமுத்து வடம், செம்பில் பொன் பூசின மகுடம், செம்பில் பொன்பூசின பள்ளித்தொங்கல், மகுடம், மோதிரம், பட்டம், மந்திர புஷ்பமாகச்செய்த பொற்பூ முதலியன.

**பரிகல வகைகள் :-** தயிர் போனகம் அமுதுசெய்தருளுவதற்கு வெள்ளிக்கச்சுகோரம், பரிகலம், வெண்கலத் தளிகை, வெண்கல வட்டில், வெண்கலச்சட்டுவம், தராகறிக்கால், தராவட்டில் கால் முதலியன. இவ்வணிகல பரிகலவகைகள் எல்லாம் இக்கோயில் கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கின்றன. இவைகளை எவரும் மாற்றாது இருத்தற்பொருட்டு இவைகளின் நிறைகளும் குறிக்கப்பெற்றுள்ளன.

**திருமழபாடிக்கு அருகில் இருந்த ஊர்கள் :-** இவ்வூர்க்கு அருகில் இருந்த கலைய மங்கலம், எதிரிலி சோழமங்கலம், குலோத்துங்க சோழமங்கலம், நித்தவிநோதமங்கலம், நாடறிபுகழ்நல்லூர், எடுத்தபாத நல்லூர், பொன்னூர்மேனி விளாகம், கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் முதலிய ஊர்களைப்பற்றி இக்கோயில் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இவற்றுள் பொன்னூர்மேனிவிளாகம் என்பது இவ்வூர்ப் பதிகத்தில் சுந்தரமூர்த்திசுவாமிகள் இறைவனைப் பொன்னூர் மேனியனே என்று அழைத்திருக்கும் திருப்பெயரால் வைக்கப்பெற்ற ஊராகும். இவ்வூர் கண்டராதித்த சதுர்வேதிமங்கலத்திற்கு அருகில் இருந்தது. கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் என்பது திருமழபாடிக்கு மேற்கே சுமார் ஒன்றரை மைல் தூரத்திலிருக்கிறது.

இக்காலம் இது கண்டராச்சியம் என்று வழங்கப்பெறுகின்றது. திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்த சோழதேவரின் திருப்பெயரால் இவ்வூர் அமைக்கப் பெற்றதாகும். இவ்வூரில் பெருங்குறி மகாசபை ஒன்று இருந்தது. இச்சபையார் தங்கள் ஊரில் இருந்த ஸ்ரீ உத்தம சோழன் மண்டபத்தில் கூட்டம் குறைவறக் கூடியிருந்து ஊர்க்காரியங்களைக் கவனித்து வந்தனர்.

**சரித்திரம் எழுதுவோர்க்குப் பயன்படும் செய்திகள்:-** முதலாம் இராசராச சோழனது மகனாகிய முதலாம் இராசேந்திர சோழதேவன்* சக்ரவர்த்தி என்னும் பட்டம் பெற்றிருந்ததையும், அவன் பிறந்தது திருவாதிரை நட்சத்திரமென்பதையும் ஒரு கல்வெட்டு உணர்த்துகிறது. இம்மன்னனது தேவியாரின் பெயர் வானவன்மாதேவியார்‡ என்பதையும் இம்மன்னனது மகளாரின் பெயர் அருமொழி நங்கையாரான பிரான்† என்பதையும் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. முதலாம் இராசேந்திர சோழதேவரது முதல் மகனாகிய முதலாம் இராசாதிராச சோழன் தராதலம் படைத்த ஜெயங்கொண்ட சோழனென்றும், மதிகெழு கோவிராஜ கேசரி வர்மரான உடையார் ஸ்ரீ ராஜாதி ராஜதேவர் என்றும் இக்கோயில் கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளனர். (S. I. I. Vol No. 634) சோழ மன்னர்களுக்குக் குலதெய்வம் நடராசப் பெருமானேயாவர். இதை இக் கோயிலிலுள்ள விக்கிரமசோழ தேவரின் கல்வெட்டில் காணப்பெறும் மெய்க்கீர்த்திப் பகுதியால்* அறியக்கிடக்கின்றது.

இவ்வூர் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இராசேந்திர சிங்கவள நாட்டுப் பொய்கை நாட்டுத்திருமழ பாடியென்றும், முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் தியாகவல்லி வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருமழபாடியென்றும், "பூமன்னியாணர் பொழில் ஏழுலகும் தாம்முன் செய்தவத்தால் பருதி வழித்தோன்றி" - எனத் தொடக்கமுள்ள கோவிராச கேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவரின பதினைந்தாம் ஆண்டுக் கல்வெட்டில் புவனமுழுதுடைய வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருமழபாடி என்றும், மூன்றாங் குலோத் துங்கசோழன் காலத்தில் இராசராச வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருமழபாடி என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

**பிறசெய்திகள் :-** இவ்வூரில் கண்டராதித்த சோழதேவரது தேவியாரின் திருப்பெயரால் செம்பியன்மாதேவிப் பேரேரி ஒன்று

---

* "நம்மை உடைய சக்ரவர்த்தி ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர், திருநட்சத்திரமாகிய திருவாதிரைத் திருநாள் மாசந்தோறும் திருவிழா எழுந்தருளுகைக்கும் அன்று பெருந்திருவமுது செய்விக்கவும்" S. I. I. Vol V No. 668. ‡ "உடையார் ராஜேந்திரசோழர் நம்பிராட்டியார் வானவன்மாதேவியார் திருமழுவாடி மாதேவர்க்குக் கொடுத்தருளின பொன்னின்தளிகை நிறைகுடிஞைக் கல்லால் அலகு நிலைப் படி பொன் 198 கழஞ்சு" S. I. I. Vol. V No 689. † திருமன்னிவளர என்று தொடக்கம் ராஜேந்திரசிங்கவளநாட்டுப் பொய்கைநாட்டுத் திருமழபாடி உடைய மகாதேவர்க்கு இரவும் பகலும் சந்திராதித்தவல் எரிய உடையார் இராசேந்திர சோழர் திருமகளார் பிள்ளையார் அருமொழிநங்கையரான பிரான் வைத்த நுந்தா விளக்கு சாவாமூவாப்பேராடு 180. S. I. I Vol V. No. 683. * "தன்குலநாயகன் தாண்டவம் பயிலுஞ் செம்பொன் அம்பலஞ்சூழ் திருமாளிகையும் கோபுரவாசல் கூடசாலைகளும் உலகுவலங்கொண்டு ஒளிவிளங்கு நேமிக்குலவரை உதயகுன்றமொடு நின்றெனப் பசும்பொன் வேய்ந்து"

இருந்தது. ஒருமரக்காலுக்கும் உப்பு அளக்கும் உழக்குக்கும் இவ் வம்மையாரின் பெயர் வைக்கப் பெற்றிருந்தது. இவ்வம்மையார்க்குக் குலமாணிக்கம் என்னும் பெயரும் உண்டு. இப்பெயர் பொன்னூர்மேனி விளாகத்தில் இருந்த ஒரு வாய்க்காலுக்கு இடப்பெற்றிருந்தது. இக் கோயிலில் தைப்பூசத் திருப்பாவாடைக்கு இறைவர் காவிரி ஆற்றில் எழுந்தருளலும் ஆற்றிலே திருமண்டபம் கட்டித் திருக்காவணம் இட்டு அமுதுபடி, சாத்துப்படி, வெஞ்சனம் உள்ளிட்ட பலவர்க்கத்துக்கு வேண்டும் பணத்துக்கும் நெல்லுக்கும் விறைநாட்டார் இறையிலியாக நிலம் வழங்கியிருந்தனர். இச்செய்தி கோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவரின் பதினைன்காம் ஆண்டுக் கல் வெட்டால் விளங்குகின்றது. இக்கோயிலிலுள்ள ஹோஜள அரசர் கல்வெட்டுக்கள் இறைவர்க்குத் திருமஞ்சனம் காவிரியிலிருந்து எடுத்து ஆடி அருளுமைக்குத் திருமஞ்சனப்புறமாக நிலம்விட்ட செய்திகளைக் குறிப்பிடுகின்றன. திருவாசலில் எரியும் விளக்குகளுக்கு இக்காலம் திருவாசிவிளக்கென்று மக்கள் கூறுகின்றனர். அங்ஙனம் கூறுவது தவறுடையதாகும். அவ்விளக்குகளுக்குத் தீபமாலை என்பது பெயராகும். இதைத் "தன்மகா காளன் திருவாசலில் சேவிக்க நான்பண்ணி இட்ட தீபமாலைக்கு விடும் எண்ணைக்கு" என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியலாம். இக்கோயிலில் இரவும் பகலும் எரிப்பதற்கு ஒரு நுந்தா விளக்கினுக்கு ஆடாயின் தொண்ணூறும், காசு ஆயின் நூறும் கொடுத்து வந்தனர். இங்குக் குறிக்கப்பெற்றுள்ள ஆடுகள் சாவாமூவாச் செவ்வரி ஆடுகள் எனக்கூறப்பெற்றுள்ளன. இங்ஙனம் கொடுக்கப்பெறும் ஆடு கள் தொண்ணூறு ஆயின் அவைகளுடன் ஒரு தகர்க் கிடாவும் கொடுக்கப் பெறுவதுண்டு.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1895 Numbers 70-99. 1920 Numbers 1-103 and the South Indian Inscriptions Volume III Number 70 Volume V Number 627-660.

## 67 திரு மறைக்காடு

இரண்டாந்திருமுறையில் காண்க.

## 68 திரு மாகறல் (பக்கம் 313)

காஞ்சீபுரத்திற்குத் தெற்கே பத்துமைல் தூரத்தில் இருக்கிறது. தொண்டைநாட்டுத் தலங்களுள் இது ஏழாவது ஆகும். பிள்ளையார் — பொய்யாப்பிள்ளையார். இறைவரின் திருப்பெயர் அடைக்கலங்காத்த

நாதர், அகத்தீசுவரர். இறைவியின் திருப்பெயர் புவனநாயகி. தீர்த்தம் 1. அக்கினிதீர்த்தம் இது கோயிலுக்கு அக்கினிமூலையில் இருக்கிறது. இதில் நீராடி அகத்தீசுவரரை வணங்கினால் எமலோகபயம் நீங்கி சிவலோகத்தில் எப்பொழுதும் வாழலாம் என்றும் கூறுகின்ற வடமொழியில் ஒரு சுலோகம் இருக்கிறது என்பர். 2. சேயாறு. இது இத்தலத்திற்குத் தெற்கில் ஓடுகிறது. இத்தலத்தில் சோமவார தரிசனம் விசேடமாகும். பிள்ளைப்பேறு இல்லாதவர் இக்கோயிலை உடலால் வலம் வந்தால் பிள்ளைப்பேற்றை அடைவர் என்பர். இத்தலத்தைத் தேவேந்திரன் வழிபட்டுப்பேறுபெற்றான். இறைவரின் திருமேனி உடும்பைப்போல் இருக்கின்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

**கல்வெட்டு வரலாறு:-** இவ்வூர்த் திருக்கோயிலில் சோழமன்னர்களில் "பூமேவி வளர் திருப்பொன்மாது புணர நாமேவு கலைமகள் நலம் பெரிது சிறப்ப" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய கோப்பரகேசரிவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவர், "கடல்சூழ்ந்த பார்மன்னரும் சீர்மாதரும் அடல்சூழ்ந்த போர்மாதரும் அமர்ந்துவாழ" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய கோப்பரகேசரிவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராசதேவர், மூன்றாங் குலோத்துங்க சோழதேவர், இவர்கள் காலங்களிலும்; பாண்டியரில் எம்மண்டலமும் கொண்டருளிய" சுந்தரபாண்டியதேவர் காலத்திலும் விசயநகரவேந்தர்களில் வீரதேவமகாராயர், கம்பண்ண உடையார் இவர்கள் காலங்களிலும், தெலுங்குச் சோழரில் விசயகண்டகோபால தேவன் காலத்திலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளுள் இறைவர் ஆளுடையார் திருஅகத்தீச்சரமுடையார், மாகறல் உடைய நாயனார், திருஅகத்தீச்சரமுடைய நாயனார் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர். இவ்வூர், சயங்கொண்ட சோழமண்டலத்து எயிற்கோட்டத்து மாகறல்நாட்டுக்கு உட்பட்டிருந்தது

கோச்சடைய பன்மரான எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவரின் ஏழாவது ஆண்டில் இந்த அகத்தீசுவரமுடைய நாயனாரின் சந்நிதியில் புதிதாகத் திருவீதிகளும் கண்டு, திருமடைவிளாகமும் ஏற்றினவன், மாகறல் பட்டியர் போயன் காமன் வரதன் ஆவன்.

**அளிக்கப்பெற்ற நிவந்தங்களில் சில:-** மூன்றாங்குலோத்துங்க சோழன் காலத்தில், எயில்கோட்டத்து இருமரமான குலோத்துங்கசோழ நல்லூரில் விளைநிலம் முப்பது வேலியும் ஏரியும், ஊர்நத்தமும் கொல்லை நிலம் பதினொரு வேலியும் ஆக இந்த நாற்பத்தொரு வேலியும் பழந்தேவதான இறையிலி என்று இந்த அகத்தீச்சரமுடையார்க்குத் தேவதான இறையிலியாக விடப்பட்டுள்ளது. கோப்பரகேசரிவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்கசோழதேவர் திருவிளாகம் பெரும்பற்றப்

புலியூரில் எழுந்தருளியிருக்கப் பெரியஉடையார் தேவாரத்தேகேட்டருளி இத்தேவர்க்குத் தேவநான இறையிலியாக எயிற்கோட்டத்து மாகறல் நாட்டு இருமரமான குலோத்துங்கசோழநல்லூரில் ஈராயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தைங்கலனே முக்குறுணி நெல் விளையக்கூடிய நிலத்தை விடுமாறு திருவாய்மொழிந்தருளினர் என்று ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

**முருகன் கோயிலைப்பற்றிய செய்தி:-** இவ்வூரில் திருமேற்கோயில் என்னும் திருமால் திருக்கோயில் இருக்கின்றது. அது இக்காலம் வைகுந்தப்பெருமாள் கோயில் எனக்கூறப்படுகிறது. அக்கோயில் தாயார் சந்நிதியில் உள்ள கல்வெட்டு, முருகன் திருக்கோயிலைக் கட்டியவன் அண்டம்பாக்கம்கிழான் காழன் ஆவன் என்பதை உணர்த்துகின்றது.

## 69 *திரு மாணிகுழி (பக்கம் 350)

பிராமண பிரமசாரியாய், குள்ளவடிவங்கொண்டு, மாவலிச்சக்கரவர்த்தி செய்த மங்கல வேள்வியில் மண் இரந்த திருமாலால் பூசிக்கப் பெற்றமையின் இது மாணிகுழி என்னும் பெயர் எய்திற்று. இதை,

" நித்தநியமத் தொழிலனாகி நெடுமால் குறளனாகி மிகவும்
சித்தமதொருக்கி வழிபாடு செயநின்ற சிவலோக இடமாம் "

எனத் திருஞானசம்பந்தர் இவ்வூர்ப் பதிகத்திலும்,

" போர்வலித் தோள் மாவலிதன் மங்கல
வேள்வியில் பண்டு வாமனனாய் மண்
இரந்த செங்கணவன் வழிபட்ட
திருமாணிக் குழியணைந்தார் "

எனச் சேக்கிழார் தடுத்தாட்கொண்ட புராணத்திலும் (செய்யுள் 90) கூறுவனவற்றால் அறியலாம்.

இது திருப்பாதிரிப்புலியூர் ரயில்வே நிலையத்திற்கு மேற்கே 2½ மைல் தூரத்திலுள்ள திருவகீந்திரபுரத்திற்குத் தென்மேற்கில் இருக்கிறது.

* இத்தலம் சம்பந்தப்பெருமானால் உதவிமாணிகுழி என்றே பாடப்பெற்றுள்ளது.

இறைவரின் திருப்பெயர் – மாணிக்கவரதர். இறைவியின் திருப்பெயர் – மாணிக்கவல்லி. தீர்த்தம் – கெடில நதி. இதைச் சேக்கிழார் "தென்றிசையில் கங்கையெனும் திருக்கெடிலம்" எனக்குறிப்பிட்டுள்ளார்.

இறைவன் திருமுன்பு எப்பொழுதும் திரையிடப்பெற்றுள்ளது. அத்திரையில் பிமருந்தரின் உருவம் இருக்கின்றது. இவர்க்குத்தான் முதலில் அர்ச்சனை நடைபெறுகின்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

**கல்வெட்டு வரலாறு :-** இத்திருக்கோயிலில் சோழமன்னர்களில் முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாங் குலோத்துங்க சோழன், மூன்றாம் இராசராச சோழன், இவர்கள் காலங்களிலும், பாண்டிய மன்னரில், விக்கிரம பாண்டியன் காலத்திலும், விசயநகர வேந்தரில் பிரதாபதேவ மகாராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் இறைவர், திருமாணிகுழிமகாதேவர், உதவித் திருமாணிகுழி அளுடையார், உதவித் திருமாணிகுழி மகாதேவர், திருமாணி குழி உடையநாயனர், ஊர்செறி உதவி நாயகர் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர். தேவாரத்தைப்போலவே, கல்வெட்டிலும் உதவித் திருமாணிகுழி என்று ஊரின் பெயர் குறிப்பிடப்பெற்றிருப்பது நோக்கத்தக்கது. இறைவரின் பெயர்களில் மேற்குறித்த ஊர்செறி உதவி நாயகர் என்பது விசயநகர வேந்தனுகிய ஸ்ரீ பிரதாபதேவமகாராயரின் (சகாப்தம் 1357) கல்வெட்டில் காணப்பெற்றுள்ளது.

முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் இத்திருமாணிகுழி, விருதராசபயங்கர வளநாட்டு, மேற்காநாட்டு உதவித் திருமாணிக்குழி என்றும், இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில், சயங்கொண்ட சோழவளநாட்டு உதவித் திருமாணிகுழி என்றும், மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தில் இராசராச வளநாட்டு மேற்காநாட்டு உதவித் திருமாணிகுழி என்றும், குறிக்கப்பெற்றுள்ளது. எனவே முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் இவ்வூரைத் தன்னகத்துக்கொண்ட வளநாடு விருதராசபயங்கரவளநாடு என்னும் பெயரையும், இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் சயங்கொண்ட சோழவளநாடு என்னும் பெயரையும், மூன்றுங்குலோத்துங்க சோழன் காலத்தில் இராசராச வளநாடு என்னும் பெயரையும் பெற்றிருந்த செய்தி புலனுகிறது.

இக்கோயிலிலுள்ள "பூமாலை மிடைந்து என்று தொடங்கும் விக்கிரம சோழனுடைய மெய்க்கீர்த்தி மாத்திரம் அடங்கிய கல்வெட்டு (Vol VII Number 773) சோழ மன்னர்களுக்குத் தில்லைச்சிற்றம்பலத்து இறைவன் குலதெய்வம் என்று குறிப்பிடுகின்றது. "தன்குல நாயகம் தாண்டவம்

பயிலும் செம்பொன் அம்பலஞ் சூழ்ந்த திருமாளிகையும் கோபுரவாசலில் கூடகசாலமும்.........பசும்பொன் மேய்ந்து'' என்பது இதை உணர்த்தும் கல்வெட்டுப் பகுதியாகும். (திருமழபாடியில் உள்ள விக்கிரமசோழனின் மெய்க்கீர்த்தியிலும் இச்செய்தி கூறப்பெற்றுள்ளது.)

தில்லையம்பதி, சோழமன்னர்களுக்கு முடிசூட்டும் பதிகளுள் ஒன்றாகும். இப்பதியில் இரண்டாம் குலோத்துங்கசோழன் முடிசூட்டிக் கொண்டான் என்று இவ்வூரிலுள்ள (மாணிகுழியில் உள்ள) அம்மன்னனுடைய கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. சோழமன்னர்கள் தில்லையில் முடிசூட்டிக் கொள்வதற்கு ஆதாரமாய் உள்ள இக் கல்வெட்டு முக்கியமானது. ஆகையால் அக்கல்வெட்டில் வேண்டிய அளவு கீழே குறிப்பிடுகின்றேன். "ஸ்வஸ்தி ஸ்ரீ ராசகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் தில்லைநகர் சிறப்புடைத்தாகத் திருமுடி சூடிய ஸ்ரீகுலோத்துங்க சோழதேவற்கு யாண்டு அ (எட்டு) ஆவது ஜயங்கொண்ட சோழவளநாட்டு உதவித் திருமாணிகுழி உடையநாயனார் கோயில் தானத்தாற்கு மகனார் திருநட்சத்திரமான உத்திரட்டாதி நாள் தீர்த்தம் பிரசாதிக்க எழுந்தருளுகிற சித்திரைத் திருநாளைக்கும், விக்கிரம சோழன் சந்திக்கும் அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்டு வேண்டும் நித்த நிவந்தங்களுக்கு விட்ட.........'' என்பதாகும்.

**குறிப்பு :-** இக்கல்வெட்டினால், இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய மகனாகிய இரண்டாம் இராசராசன் பிறந்த நட்சத்திரம் உத்திரட்டாதி என்று பெறப்படுகின்றது.

**திருமடம் :-** உதவித் திருமணிகுழி உடையார் திருமடைவிளாகத்தில், ஸ்ரீகாழிநாடுடையான் திருமடம் என்று ஒரு திருமடம் இருந்ததை முதற்குலோத்துங்க சோழனது 49-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது. அதற்கு மடப்புறமாக வானவன்மாதேவி நகரத்தார் நிலம் விட்டிருந்தனர்.

**தியாகசமுத்திரக்கூடம் :-** இப்பெயருள்ள கூடம் பெரும்பற்றப் புலியூர்க்கோயிலினுள் இருந்ததை விக்கிரம சோழனின் 12-ஆம் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்துகின்றது. இக்கூடத்தில் பள்ளிச்சோட்டை சோழகோனிலிருந்து, ஆறுவேலி நிலத்தைத் திருமாணிகுழி கோயிலில் எழுந்தருளுவித்த விக்கிரம சோழீச்சரமுடையார்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு இறுக்கும்படி விக்கிரம சோழன் கட்டளையிட்டிருந்தான்.

இக்கோயில் கல்வெட்டில் மூன்றாங்குலோத்துங்க சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி வீரராசேந்திர சோழதேவன், இராசாக்கள் நாயகன் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளான். வீரபாண்டியன்

கல்வெட்டு, இவ்வூரை நடுவில் மண்டலத்து திருமாணிகுழி எனக் குறிப்பிடுகின்றது. சோழமண்டலத்திற்கும் தொண்டை மண்டலத்திற்கும் நடுவில் உள்ளது ஆகையால் நடுவில் மண்டலம் எனப்பெயரெய்திய தாதல் வேண்டும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1902, Numbers South Indian Inscription Volume VII Numbers 772-797.

## 70 திரு முதுகுன்றம் (பக்கம் 147, 466)

முதல் திருமுறையில் காண்க.

## 71 திரு வக்கரை (பக்கம் 249)

வக்கராசுரன் வழிபட்ட காரணத்தால் இப்பெயர்பெற்றது, தொண்டைநாட்டுத்தலங்களுள் ஒன்று. புதுச்சேரி ரயில்வே நிலையத்திலிருந்து 11 மைல் தூரத்திலுள்ள வானூரையடைந்து அங்கிருந்து மேற்கே திண்டிவனம் செல்லும் பெருவழியில் இரண்டுமைல் தூரம் சென்றால் இப்பதியை அடையலாம். இங்கு இறைவன் மூன்றுமுகத்தோடு விளங்குகின்றான். பெரியபிராகாரத்தில் திருமால் கோயில் இருக்கிறது. இறைவரின் திருப்பெயர் சந்திரசேகரர் இறைவியின் திருப்பெயர் வடிவாம்பிகை.

## 72 திரு வலஞ்சுழி (பக்கம் 507)

ஆதிசேடன் சிவராத்திரிநாளில், ஒரு பிலத்தின் வழியாய் வந்து வலஞ்சுழி இறைவனை வணங்கினான், காவிரி இங்குப் பிலத்தின் வழியாக உள்ளே இறங்கிவிட்டது. அதுகண்ட சோழமன்னன் பெரிதும் வருந்தினான். இறைவர் ஒருசடைத்தலையாயினும் முடித்தலையாயினும் பலியிட்டால் காவிரி வெளிப்படுமென்று அசரீரியாகக் கூறினார். அதுபொழுது கொட்டையூரில் தவஞ்செய்து கொண்டிருந்த ஏரண்ட முனிவர் அப்பிலத்தில் இறங்கிக் காவிரியை வெளிக்கொணர்ந்தார். காவிரியும் வலம்சுழித்து மேலே கிளம்பிய காரணத்தால் வலஞ்சுழி என்னும் பெயர் எய்திற்று. இது கும்பகோணம்–தஞ்சாவூர் இருப்புப்பாதையில், சாமிமலை ரயில்வே நிலையத்திற்கு வடக்கே அரைமைல் தூரத்தில் இருக்கிறது, காவிரித் தென்கரைத் தலங்களுள் 25–ஆவது ஆகும்.

பிள்ளையார் - வெள்ளைப்பிள்ளையார். இறைவரின் திருப்பெயர் - கபர்த்தீசர். இறைவியின் திருப்பெயர் - வண்டுவாழ்குழல் மங்கை. இப்பெயர் ஞானசம்பந்தரால் இவ்வூர்ப் பதிகத்தில் "வண்டுவாழ்குழல் மங்கைபங்கனை" என எடுத்து ஆளப்பெற்றுள்ளது தீர்த்தம் - காவிரி.

தேவர்கள் பாற்கடலைக் கடைந்த காலத்தில் அமுதம் திரளும்படி வழிபட்ட வெள்ளைப்பிள்ளையாரை இந்திரன் இங்குக் கொண்டுவந்து எழுந்தருளுவித்துள்ளான். இப்பிள்ளையார் வீற்றிருக்கும் மண்டபம் மிக்க வேலைப்பாடு உடையது. இப்பிள்ளையார்க்குத்தான் இங்கு பிர்மோற்சவம் நடைபெறுகின்றது. ஏரண்ட முனிவரின் பிரதிமம் இக்கோயிலில் இருக்கிறது. இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் மூன்றும், அப்பர் பெருமான் பதிகம் இரண்டும் ஆக ஐந்து பதிகங்கள் இருக்கின்றன. இறைவனை வழிபட பூர்வ புண்ணியம் வேண்டும் என்னும் பொருளுள்ள "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே" எனத் தொடங்கும் பாசுரம் சைவ நன்மக்களால் அடிக்கடி எடுத்து ஓதப்பெறும் பாடல்களில் (One of the of quoted stanzas) ஒன்றாகும்.

**கல்வெட்டு வரலாறு:-** இவ்வூர்க் கோயிலில், சோழமன்னர்களில் மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மன், முதலாம் இராசராச சோழன், இரண்டாம் இராசேந்திர சோழன், முதற்குலோதுங்க சோழன், விக்கிரம சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவன், மூன்றாங் குலோத்துங்க சோழன் இவர்கள் காலங்களிலும்; பல்லவ மன்னர்களில், சகலபுவன சக்கரவர்த்தி கோப்பெருஞ் சிங்க தேவன் காலத்திலும்; செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

**இறைவர், இறைவியாரின் பெயர்கள் :-** இக்கோயில் கல்வெட்டுக்களில் இறைவர் திருவலஞ்சுழி உடையார், திருவலஞ்சுழி மகாதேவர், திருவலஞ்சுழி ஆழ்வார் என்னும் பெயர்களாலும், இறைவியார் வண்டுவார் குழலி நாச்சியார் என்னும் பெயராலும் குறிக்கப் பெற்றுள்ளனர்.

**திருப்பணிகள் :-** இக்கோயிலின் மகாமண்டபத்திற்குத் தீராவினை தீர்த்தான் திருமண்டபம் என்று பெயர். அதைக்கட்டியவன் ஆராவமுது தித்தன் பெருமாள் ஆவன். அவன் அம்மண்டபத்தை வீரமாராசன் ஜயன் வெற்றிக்காகக் கட்டினான். இச்செய்தி இம்மண்டபத்தின் வடபாலுள்ள தூண் ஒன்றில் செதுக்கப்பட்டுள்ளது. இரண்டாம் பிராகாரத்துக் கிழக்குச்சுவர் மகாப்பிரதான திப்பரசர் மகனார் தேவராய உடையாரால் கட்டப்பெற்றது. மூன்றாம் பிராகாரத்துச் சுவர் நெருப்புப்பற்றிக்கொண்டதின் விளைவாக கீழே விழுந்துவிட்டது. அது ஆர்க்காட்டுத் தலைவனும், செல்வப்பிள்ளை என்பவனும் ஆகிய சேதிராயனால் மீளவும் கட்டப்பட்டது. இத்திருக்கோயிலில் திருப்பரிகலமண்டபத்தைக் கட்டுவித்தவன்

ஆதமங்கலமுடையான் ஒற்றியூரன் பூபாலன் கருணாகரன் ஆவன். இது நிகழ்ந்த காலம் முதற் குலோத்துங்கசோழனின் நாற்பத்திமூன்றாம் ஆண்டாகும். இத்திருவலஞ்சுழி உடையார் கோயில் கீழைச்சோபானப் பீடத்து இருக்கும் மண்டபம் உத்சவமண்டபமாகும். இது கட்டத்தொடங்கப்பெற்ற காலம் வீரராசேந்திரசோழதேவரின் எட்டாம் ஆண்டாகும்.

**க்ஷேத்திரபாலரின் திருக்கோயில் :-** க்ஷேத்திரபாலர் என்பவர் வயிரவர் ஆவர். இவர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் வெளிப் பிராகாரத்தில் இராசகோபுரத்திலிருந்து இரண்டாம் கோபுர வாசலுக்குப் போகும் வழியில் தெற்குப் பக்கத்தில் இடிந்தநிலையில் கல்வெட்டுக்களுடன் கூடிய ஒரு சிறு கோயிலாக இருக்கிறது. இக்கோயில் முற்றிலும் இடிந்துவிடுவதற்கு முன் இதில் முளைத்துள்ள மரங்களைக் களைந்து கோயிலைப் புதிப்பிப்பது சைவநன்மக்களின் தனிப்பெருங்கடமையாகும். இக்கோயிலைக் கட்டியவர் முதலாம் இராசராசசோழரின் முதற்பெருந் தேவியார் தந்திசத்திவிடங்கியாரான 'ஸ்ரீ ஒலோகமாதேவியார்' ஆவர். இவ்வம்மையார் இக்கோயிலைக் கட்டியது முதலாம் இராசராசசோழனின் ஆட்சி யாண்டு இருபத்தைந்து. அதாவது இற்றைக்கு 946 ஆண்டுகளுக்கு முன்னதாகும். இச்செய்தி "இராசராசதேவர் மகாதேவியார் தந்திசத்திவிடங்கியாரான ஸ்ரீ ஒலோகமாதேவியார் உய்யக்கொண்டார் வளநாட்டுப் பாம்பூர்நாட்டுத் திருக்குடமூக்கில்பால் திருவலஞ்சுழியில் நாம் எடுப்பித்த திருக்கற்றளிப்பள்ளியார் க்ஷேத்திரபாலதேவர்க்கு" (South Indian Inscriptions Volume VIII Number 234.) என்னும் கல்வெட்டுப் பகுதியால் விளங்கும்.

**எழுந்தருளுவித்த பிரதிமங்கள் :-** "பூமருவிய திருமாதும் புவி மாதும் நாமருவிய கலைமாதும் புகழ்மாதும்" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய கோப்பரகேசரிபன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் இராசராசதேவரின் பன்னிரண்டாம் ஆட்சி யாண்டில் திருவலஞ்சுழி உடையார் திருமடைவளாகத்தில் இருந்த தேவரடியார் ஆட்கொண்டாள் தேவும் திருவும் உடையாளும், கீழ்க்கடைநின்றாளும் ஆகிய இருவரும் இக்கோயிலில் திருநாவுக்கரையதேவர், திருவாதவூராளி திருக்கண்ணப்ப தேவர் இவர்களை எழுந்தருளுவித்து இவர்களின் வழிபாட்டிற்கு நில நிவந்தம் செய்துள்ளனர்.

**சிறப்பு நாட்கள் :-** இக்கோயிலில் திருவாதிரைநாளுக்கும் தைப்பூசத் திருநாளுக்கும் வேண்டும் செலவினங்களுக்கு இரண்டாம் இராசேந்திரசோழன் நிலம் அளித்திருந்தான். அந்நிவந்தத்தை அம்மன்னன் கங்கைகொண்டசோழன் திருமாளிகையில் திருமஞ்சனச்சாலையில் பள்ளிப்பீடம் காலிங்கராசனில் எழுந்தருளியிருந்து விட்டதாக அவனுடைய கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

பள்ளியறைநாச்சியாரைப் பற்றிய குறிப்பு :- பள்ளியறையில் எழுந்தருளியிருக்கும் இறைவியார் திருப்பள்ளியறை பெரியநாச்சியார் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். இவர் திருமுன்பு எரிவதற்கு ஐந்து நிலைத் தராகுத்து விளக்குகள் இரண்டினை, திரிபுவனச்சக்கரவர்த்தி இராசாதிராசதேவர் காலத்தில் சயங்கொண்டசோழமண்டலத்து ஆமூர்க் கோட்டத்துச் சிறுகுன்றைநாட்டுக் காரிகைக்குளத்துளான்பெருமான்நம்பி ஆருடையானுன செயதரப்பல்லவரையன் கொடுத்துள்ளான்.

திருவலஞ்சுழியுடையார் தேவதானங்கள் :- கோப்பரகேசரி வன்மர்க்கு யாண்டு பன்னிரண்டாவதில் இன்னம்பர்நாட்டுத் தத்தங்குடி; ஓதியநத்தங்குடிப்பால் அழகத்துவப்பேறு இவ்விடங்களில் மூவேலியும், இராசராசதேவரின் இருபத்தொராம் ஆண்டில் இன்னம்பர்நாட்டு நாவற்குடிப்பால் நங்கையார் நிலம் மூவேலி ஆக ஆறு வேலி நிலங்கள் தேவதானமாக விடப்பட்டிருந்தன.

வெள்ளைப் பிள்ளையார் :- திருவலஞ்சுழியின் சனத்தொகை குறைந்துகொண்டேவந்தது. ஆகையால் ஊரின் நலங்கருதி வெள்ளைப் பிள்ளையார்க்கு திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராசதேவரின் பதினன்காம் ஆண்டில் நிலம் விடப்பட்டது. மற்றும் இப்பிள்ளையார்க்கு அளிக்கப் பெற்ற நிவந்தம் பலவாகும்.

இவ்வூரைத் தன்னகத்துக் கொண்ட நாடு :- "உய்யக்கொண்டார் வளநாட்டுப் பாம்பூர்நாட்டுத் திருக்குடமூக்கில்பால் திருவலஞ்சுழி" எனக் குறிக்கப்பெற்றிருப்பதால் இவ்வூர் உய்யக்கொண்டார்வளநாட்டுப் பாம்பூர்நாட்டுக்கு உட்பட்டிருந்தது என்பதை அறியலாம்.

பிற செய்திகள் :- முதலாம் இராசராசசோழன் 'சிவபாதசேகரன்' என்னும் பட்டம் பெற்றிருந்ததை இக்கோயிலிலுள்ள அவனுடைய இருபத்தொராம் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்துகிறது. முதலாம் இராசராச தேவர் திருமகளார் விமலாதித்ததேவர் மகாதேவியார் ஸ்ரீ குந்தவை நங்கையார், நடுவில் பெண்பிள்ளைநங்கையார் மாதேவடிகளார் இவர்கள் இருவர்களின் பெயர்களும் இவ்வூர்க் கல்வெட்டில் காணக்கிடக்கின்றன.

See the Annual report on South Indian Epigraphy for the years 1902, 1928 Numbers 618-634, 192-213 and South Indian Inscriptions Volume VIII Numbers 215-238.

# 73 திருவலம்புரம் (பக்கம் 485)

இது மேலப்பெரும்பள்ளம் எனவும் வழங்கப்பெற்று வருகின்றது இறைவனது திருமுடியில் பள்ளம் இருப்பதால் இப்பெயர் பெற்றது என்பர். இது பல்லவனீச்சரத்திற்குத் தென்மேற்கே இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர்-வலம்புரிநாதர். இறைவியின் திருப்பெயர்-வடுவகிர்க்கண்ணியம்மை. திருமால் வழிபட்டுச் சங்குபெற்ற தலம். இதற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகம் இரண்டும் சுந்தரர் பதிகம் ஒன்றும் ஆக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு :-** இத்திருக்கோயிலில் விக்கிரம சோழன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றுங் குலோத்துங்கன் இவர்களின் காலங்களில் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில், இறைவரின் திருப்பெயர் திருவலம்புரி உடையார் என்றும், இறைவியாரின் திருப்பெயர் தடங்கண்நாச்சியார் என்றும் குறிக்கப்பெற்றுள்ளன. இவ்வூர், விக்கிரமசோழன் கல்வெட்டில் இராசராச வளநாட்டு ஆக்கூர்நாட்டு தலைச்சங்காட்டுத் திருவலம்புரம் என்றும், மூன்றுங் குலோத்துங்கன் கல்வெட்டில் சயங்கொண்ட சோழவளநாட்டு, ஆக்கூர்நாட்டு, தலைச்சங்காட்டுத் திருவலம்புரம் என்றும் கூறப்பெற்றுள்ளது. இக்கோயிலில் கூத்தாடுந்தேவர், அவரது நாச்சியார், பள்ளியறைப் பிராட்டியார், இவர்களை எழுந்தருளுவித்து அவர்களுடைய நாள்வழிபாட்டிற்கு இரண்டேகால்வேலி நிலத்தை அளித்தவன் குலோத்துங்கசோழ வளநாட்டு, விளநாட்டு, ஆலங்குடியிலிருந்த வேளான் கண்டராதித்தன் ஆவன். இது நிகழ்ந்தது விக்கிரமசோழனின் ஆறும் ஆண்டில் ஆகும்.

இவ்வூர்ச் சபையாராகிய சபையார் மும்முடிசோழன் பேரம்பலத்தில் கூட்டங்கூடி, கோயிலுக்கு வேண்டியவைகளைச் செய்துவந்தனர். இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் சயங்கொண்ட சோழமண்டலத்து மேண்மலைப் பழையனூரார் ஒருவர் இக்கோயிலில் சில படிமங்களை எழுந்தருளுவித்துள்ளார். கோயில்களுக்கு ஆள்களை விற்கும் வழக்கம் இவ்வூர்க் கல்வெட்டுக்களில் கூறப்பெற்றுள்ளது. அம்முறைப்படி இராசாதிராச வளநாட்டு, நாங்கூராகிய ஸ்ரீபாதுளி சதுர்வேதிமங்கலத்துத் தட்டானாகிய சோமன் ஆறு மனிதர்களைப் பதின்மூன்று காசுக்கு விற்றுக் கொடுத்துள்ளான். இங்ஙனமே தலைச்சங்காட்டுத் திருவலம்புரி உடையான் கலியன் குமாரனாகிய தம்பிரான் தோழன் எட்டு ஆள்களை விற்றுக்கொடுத்த செய்திகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

## 74 திரு வான்மியூர் (பக்கம் 230)

வான்மீகி முனிவர் வழிபட்டுப் பேறுபெற்ற தலமாதலால் வான்மியூர் என்னும் பெயர் எய்திற்று. வான்மீகி முனிவரின் செப்புப்பிரதிமம் பிராகாரத்தில் இருக்கிறது. ஊர்க்கு வடமேற்கே அவர்க்குத் தனிக்கோயிலும் உண்டு. மயிலாப்பூர்க்குத் தெற்கே மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. இறைவரின் திருப்பெயர் 1. மருந்தீசர். 2. பால்வண்ணநாதர். இறைவியின் பெயர் சொக்கநாயகி. இலிங்கத்தின் திருமேனி வடபால் சற்று சாய்ந்திருப்பதோடு பால்நிறமாயும் இருக்கின்றது.

இதற்கு அப்பர் பதிகம் ஒன்றும் சம்பந்தர்பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு:-** இவ்வூரில் திரிபுரசுந்தரி அம்மன் கோயிலில் முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திரசோழன் முதலாம் இராசாதிராசதேவன் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இவ்வூர், சயங்கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க்கோட்டத்து, கோட்டூர் நாட்டுக்கு உட்பட்டிருந்தது. இவைகள் திருப்பள்ளித் தாமம் முதலியவைகளுக்கு நிவந்தங்கள் அளிக்கப் பெற்றதை உணர்த்துகின்றன.

**See the Annual Report on South Indian Epigraphy for the year 1909. Numbers 77 - 83**

## 75 திரு விசயமங்கை (பக்கம் 79)

பாண்டுவின் மகன் பார்த்தன் (அர்ச்சுனன்) வழிபட்டுப் பேறுபெற்ற தலமாதலால் விசயமங்கை என்னும் பெயர் பெற்றது. இது "பாண்டுவின் மகன் பார்த்தன் பணிசெய்து வேண்டு நல்வரங்கொள் விசயமங்கை, என்னும் திருநாவுக்கரசரது திருக்குறுந்தொகை (பாசுரம் - 8 )-ல் அறியக் கிடக்கின்றது. விசயமங்கை என்பது கோயிலின் பெயராகும். ஊரின் பெயர் கோவந்தபுத்தூர். ஒரு பசு இலிங்கத்திருமேனியின்மீது தன் மடியிலுள்ள பாலைச் சொரிந்து வழிபட்ட காரணத்தால் இப்பெயர் எய்திற்று. இது "கோதனம் வழிபடக் குலவு நான்மறை வேதியர் தொழுதெழு விசயமங்கையே" எனவுரும் இத்தலத்துக்குரிய திருஞானசம்பந்தரது பதிகத்தின் இரண்டாம் பாசுரஅடிகளால் விளங்கும். கோ வழிபட்ட ஐதீகத்தை உணர்த்தும் சுதைப்படிமம் இக்கோயில் மேற்குப்பிரகாரத்தில் வைத்துப் போற்றப்பட்டுவருகின்றது. இக்கோவந்தபுத்தூரை இப்பக்கத்துள்ள மக்கள் கோகறந்தபுத்தூர் என் வழங்குகின்றனர். ஊரின் பெயர்

கோவந்தபுத்தூர் என்பதையும், கோயிலின் பெயர் விசயமங்கை என்பதையும்,

"கொள்ளிடக்கரைக் கோவந்தபுத்தூரில்
வெள்ளிடைக் கருள் செய்விசயமங்கை,
உள்ளிடத்து உறைகின்ற உருத்திரன்
கிள்ளிடத் தலையற்றது அயனுக்கே"

என்னும் இப்பதிக்குரிய திருநாவுக்கரசரது பதிகப்பாடலால் அறியலாம். இறைவரின் திருப் பெயர் விசயநாதர். இறைவியின் பெயர் மங்கை நாயகி. தீர்த்தம் அர்ச்சுனதீர்த்தம். இது கோயிலிக்கு எதிரில் இருக்கின்றது.

இது கும்பகோணத்திற்கு வடமேற்கில் உள்ள திருவைகாவூர்க்கு வடக்கே கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் இருக்கின்றது. சுவாமி மலைக்கு மேற்கிலுள்ள அண்டக்குடி என்னும் ஊரிலிருந்தும் இவ்வூரை யடையலாம். இவ்வூர்க்கு அப்பர் பதிகம் ஒன்றும் சம்பந்தர் பதிகம் ஒன்றும் ஆக இரண்டுபதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு வரலாறு:-** இத்திருக்கோயிலில் மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன், பரகேசரி உத்தமசோழன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திரசோழன், முதற்குலோத்துங்க சோழன் மூன்றாங் குலோத்துங்க சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவன் இவர்கள் காலங்களில் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் விஜயமங்கலமுடைய மகா தேவர், விஜயமங்கலத்து மகாதேவர், விஜயமங்கலமுடைய பரமசாமி என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**இக்கோயில் விமானத்தைக் கல்லால் கட்டியவன்:-** விசயமங்கலமுடைய பரமசாமிக்கு ஸ்ரீ விமானத்தைக் கல்லால் எழுந்தருளுவித்தவன் உடையார் மும்முடிச்சோழதேவர் பெருந்தரத்து குவளாலமுடையான் அம்பலவன் பழுவூர் நக்கனான விக்கிரமசோழ மகாராஜன் ஆவன் (See the South Indian Inscriptions Volume XIII Thecholas. Number 76) பெருந்தரம் — a nobleman. இச்செய்தி முதலாம் இராசராசசோழனின் மூன்றாமாண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.

**வழிபாடுகள்:-** இக்கோயிலில் அர்த்தயாமம் உள்பட நான்கு போதுகளில் வழிபாடுகள் நடைபெற்று வந்தன. இவ்வழிபாட்டுக் காலங்களில் திருவமுதுக்கு அரிசிக்கும், பொரிக்கறியமுது, புழுக்கறியமுது ஆக கறியமுது இரண்டுக்கும் நெய்யமுது, தயிரமுது, இவைகளுக்கும், அடைக்காய் அமுது வெறுங்காய் இவைகளுக்கும், சந்தனம்,

சந்தனக்குழம்பு, கற்பூரம் இவைகளுக்கும், ஆடி அருளப்பாலுக்கும், ஆடைக்கும், நுந்தாவிளக்குகள் ஐந்தினுக்கும், சிறுகாலை எட்டு, உச்சியம்போது எட்டு, இரவுக்குப் பதினன்கு சந்திவிளக்குகளுக்கும் பிறவற்றிற்குமாக வடபிடாகை நெடுவாயிலிலும் இந்நெடுவாயிலைச்சுற்றிய பிடாகைகளிலும் உள்ள நிலங்களை நிவந்தங்களாக அம்பலவன் பழுவூர் நக்கனுக ராஜராஜப் பல்லவரையன் அளித்திருந்தான்.

**எழுந்தருளுவித்த திருமேனிகள்:-** முதலாம் இராசராசசோழனின் ஏழாம் ஆண்டில் அம்பலவன் பழுவூர் நக்கனுகிய இராஜராஜப்பல்லவரையன் இத்திருக்கோயிலில் கூத்தப்பெருமானையும், உமாபட்டாலகியையும் எழுந்தருளுவித்து, அவர்களுக்கு அணிகலன்களைக் கொடுத்துள்ளான்.

**திருமடம்:-** இவ்வூரில் திருத்தொண்டத் தொகையன் திருமடம் ஒன்று இருந்ததை திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவரின் 32-ஆம் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்துகின்றது. இவ்வூர் முதலாம் இராசேந்திர சோழன் கல்வெட்டில், வடகரை இராசேந்திர சிங்கவளநாட்டுப் பெரிய வானவன் மாதேவி சதுர்வேதிமங்கலத்து விசயமங்கை என்றும், திரிபுவனச் சக்கரவர்த்தி மூன்றுங் குலோத்துங்கசோழன் கல்வெட்டில் விக்கிரமசோழவள நாட்டு இன்னம்பர் நாட்டு விசயமங்கை எனவும் குறிக்கப்பெற்றுள்ளது.

**பிறசெய்திகள்:-** பெரியவானவன்மாதேவி சதுர்வேதிமங்கலத்தில் சபை ஒன்று இருந்தது. அச்சபையார்க்குப் பெருங்குறிப் பெருமக்கள் என்று பெயர். அவர்கள் கூட்டம் கூடுவதற்குமுன் தட்டழிகொட்டிக் காளம் ஊதச்செய்து, நடுவில் ஸ்ரீ கோயிலான விணையாபரண விண்ணகரப்பெருமானடிகள் கோயிலின் முன்பில் கூட்டம் குறைவறக் கூடியிருந்து கோயில்காரியங்களைக் கவனித்துவந்தனர். இங்குள்ள கல்வெட்டு ஒன்று "வாழ்க அந்தணர்" என்று தொடங்கும் தேவாரப்பாடலுடன் தொடங்குகின்றது. இது பாராட்டற்குரியதாகும். இப்பாடலுக்கும் அச்சில் புத்தகத்தில் வெளிவந்த பாடலுக்கும் வேறுபாடு இல்லை.

இக்கோயிலில் உள்ள முதலாம் இராசராச சோழனின் மூன்றுமாண்டுக் கல்வெட்டில் " இவ்வொட்டோலைப்படியே கல்லில் வெட்டவும் சாசனம் செய்வித்துக் கொள்ளவும் பெறுவார் ஆக ஒட்டி இறைகாவல் ஒட்டோலைஇட்டுக் குடுத்தோம்"என்னும் தொடர்கள் காணப்படுகின்றன. இத்தொடர்களில் வரும் ஒட்டோலை என்பது இக்காலம் Agreement என்னும் பொருளில் இருப்பது நோக்கத்தக்கது.

See the Annual reports on South Indian Epigraply for the years 1929. Numbers. 157-194.

குறிப்பு:— கொள்ளிடப்பேராற்றின் தென்கரையில் திருவைகாவூர்க்குக் கிழக்கில் விசயமங்கை என்று ஒரு ஊர் இருக்கிறது. அங்கு ஒரு சிவன் கோயிலும் உண்டு. இதை விஜயமங்கை என்று கொண்டாரும் உண்டு. அது தவறாகும். இந்த விஜயமங்கையை சாதாரண மக்கள் விஷமூங்கி என்று அழைக்கின்றனர்.

## 76 திரு விளமர் (பக்கம் 412)

திருவாரூர்க்குத் தென்மேற்கே இரண்டுமைல் தூரத்தில் ஓடம் போக்கி ஆற்றின் தென்கரையில் இருக்கின்றது. இறைவரின் திருப் பெயர் பதஞ்சலி மனோகரர். இறைவியின் திருப்பெயர் யாழினும்மென் மொழியம்மை. தீர்த்தம் அக்நிதீர்த்தம்; இது கோயிலுக்கு எதிரில் இருக் கின்றது. பதஞ்சலி முனிவர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். அவருடைய பிரதிமம் இங்கு இருக்கின்றது. இப் பதிக்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று உண்டு.

## 77 திரு விற்கோலம் (பக்கம் 105)

இது இக்காலம் கூவம் என வழங்கப்பெறுகின்றது. திரிபுரம் எரித்த காலத்தில் இறைவன் வில்லையேந்திய திருக்கோலத்தோடு வீற்றிருந் தமையின் விற்கோலம் எனப்பெயர்பெற்றது என்பர்.

இது சென்னைப்பட்டினத்துக்கு மேற்கேயுள்ள கடம்பத்தூர் ரயில்வே நிலையத்துக்கு மேற்கேயுள்ள கடம்பத்தூர் ரயில்வேநிலையத்திற்குத் தெற்கே ஆறுமைல் தூரத்தில் இருக்கிறது. இது தொண்டைநாட்டுத் தலங்களில் ஒன்றாகும். இறைவரின் திருப்பெயர் திரிபுராந்தகர். இறைவியின் திருப் பெயர் திரிபுராந்தநாயகி. அதிக மழைபெய்வதாக இருந்தால் இறைவரின் திருமேனியில் வெண்மைநிறம் தோன்றுவதும், யுத்தம் ஏற்படுவதாயிருந் தால் சிவப்புநிறம் படர்வதும் ஆகிய அற்புதம் பொருந்திய தலம். ஞான சம்பந்தப்பெருந்தகையார் இத்தலப்பதிகத்தில் "ஐயன் நல்ல அதிசயன்" எனக்குறிப்பிட்டிருப்பது இது கருதியாகும். இத்தலத்திற்கு ஞான சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. தலபுராணம் சிவப்பிரகாசசுவாமி களால் பாடப்பெற்று அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளது.

கல்வெட்டு வரலாறு:- (இவ்வூர்க்கோயிலைப்பற்றிய 1909 ஆண்டு அறிக்கைக் கிடைத்திலது.) பையரவு அல்குல் அம்மைக்கு வெள்ளிக் கிழமை வழிபாட்டிற்கு இம்மடி சென்னம்ம நாயக்கரும், விற்கோலம்

ஊரார்களும் நிவந்தம் அளித்த செய்தி 1912 ஆம் ஆண்டு அறிக்கையால் வெளியாகின்றது.

See the Annual report on South Indian Epigraphy for the years 1909, Numbers 322-350, 1912 Number 30.

## 78 திரு வீழிமிழலை (பக்கம்45,370,397,4625,28,558,574)

மிழலை என்பது ஊரின் பெயர். வீழி என்பது தலத்திற்குரிய கொடி. எனவே கொடியின் பெயரால் வீழிமிழலை என்று வழங்கப்பெறுகின்றது. பூந்தோட்டம் இரயில்வேநிலையத்திற்கு மேற்கில் ஒருமைல் தூரத்தில் இருக்கும் திலதைப்பதிக்கு மேற்கே நான்குமைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவரின் திருப்பெயர் நேத்திராப்பணேசுவரர். இறைவியின் திருப்பெயர் சுந்தரகுசாம்பிகை. தலக்கொடி வீழி. தீர்த்தம் விட்டுணு தீர்த்தம். சக்கரம் பெறவேண்டித் திருமால் ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு வழிபடும் பொழுது ஒருநாள் ஒரு பூ குறைவுபடத் தமது கண்ணையிடந்து சாத்திச் சக்கரத்தைப்பெற்ற தலம். இச்செய்தி,

"நீற்றினை நிறையப்பூசி நித்தல் ஆயிரம்பூக் கொண்டு
ஏற்றுழி ஒருநாள் ஒன்றுகுறையக் கண்ணிறைய விட்ட
ஆற்றலுக்கு ஆழிநல்கி அவன்கொணர்ந்து இழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழிமிழலையுள் விகிர்த ஞரே."

என்னும் இப்பதிக்குரிய அப்பர்பெருமானின் திருநேரிசைப் பாசுரத்தால் அறியலாகும். மணவாளக் கோலத்தோடு எழுந்தருளியிருக்கும் இறைவரின் திருவடியில் திருமால் தமது கண்ணைப் பறித்து அர்ச்சித்த அடையாளமாக கண்ணும், கீழே சக்கரமும் இருக்கின்றன. இறைவன் எழுந்தருளியிருக்கும் விமானத்திற்கு விண்ணிழி விமானம் என்று பெயர். இவ்விமானம் திருமால் விண்ணினின்று கொண்டுவந்து இறக்கியது என்பதை,

"தன்றவம் பெரிய சலந்தரன் உடலம் தடிந்த
சக்கரம் எனக்கு அருள் என்று
அன்று அரிவழிபட்டு இழிச்சிய விமானத்து
இறையவன் பிறையணி சடையன்."

என்னும் இப் பதிக்குரிய ஞானசம்பந்தர் பதிகப் பாசுரத்தால் (பண் - புறநீர்மை, பாசுரம் 7) அறியலாகும். சைவப்பெருமக்களாகிய அப்பர் பெருமானுக்கும் சம்பந்தப்பெருந்தகையார்க்கும் இறைவர் படிக்காசு (உணவுக்காகக் கொடுக்கப்படும் காசு) கொடுத்தருளி அவர்களின்மூலம்

அவைகளைச் சூழ்ந்திருந்த அடியார் கூட்டத்திற்குப் பஞ்சமுள்ள காலத்தில் அமுதளித்த பதி. இத்தலத்து அந்தணர்கள் ஐந்நூற்றுவர் எனத் திருவிசைப் பாவில் போற்றப்பெற்றுள்ளனர். இக்கோயிலின் முதல் திருச்சுற்றுலேயில் நூற்றுக்கால் மண்டபம் அருமையான வேலைப்பாட்டுடன் விளங்குகிறது. வடக்குவீதி கிழ்க்கோடியில் சம்பந்தப்பெருந்தகையார்க்கும், மேல்கோடி யில் அப்பர்பெருமானுக்கும் திருக்கோயில்கள் இருக்கின்றன. சிவ பெருமான் ஞானசம்பந்தர்க்குச் சீகாழியில் திருத்தோணியில் வீற்றிருக்கும் கோலத்தைக் காட்டியருளப்பெற்ற பதியும் இதுவாகும்.

இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் பதின்மூன்கும், அப்பர் பதிகம் எட்டும், சுந்தரர் பதிகம் ஒன்றும் ஆக இருபத்துமூன்று பதிகங்கள் இருக்கின்றன. சைவப்பெருமக்களாகிய அப்பருக்கும் சம்பந்தருக்கும் இவ்வூர் இறைவர் படிக்காசு கொடுத்ததன் காரணம் தமிழோடு இசை கேட்கும் இச்சை பற்றியேயாகும் என்பதை சுந்தரமூர்த்தி சுவாமிகள் " திருமிழலையிருந்து நீர் தமிழோடிசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினீர் " எனக் குறிப்பிட்டிருப்பது பாராட்டற்குரியதாகும். சிவபெருமான் சம்பந்தர்க்கு வாசியுள்ள காசையும், அப்பர்க்கு வாசியில்லாக் காசையும் கொடுத்ததன் காரணத்தைச்சேக்கிழார் " திருமாமகனுர் ஆதலினுல் காசி வாசியுடன் பெற்றூர், கைத் தொண்டாகும்படிமை யினுல் வாசி இல்லாக் காசு படி பெற்றுவந்தார் வாகீசர் " என இத்தலத்து நிகழ்ச்சியில் குறித்திருப்பது அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்க் கோயிலில் சோழமன்னர்களில் மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன், முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திரசோழன், முதலாம் இராசாதிராசன், முதற்குலோத் துங்கசோழன், விக்கிரமசோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவன், திரிபுவனச்சக்கரவர்த்தி இராசாதிராசதேவன், மூன்ருங்குலோத் துங்கசோழன், மூன்ரும் இராசேந்திரசோழன் இவர்கள் காலங்களிலும்; பாண்டியர்களில் ஜடாவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவன், திரிபுவனச்சக்கரவர்த்தி வீரபாண்டியதேவன் இவர்கள் காலங் களிலும்; விசயநகரவேந்தர்களில் வீர அரியப்ப உடையார் மகன் வீரப் பண்ண உடையார் காலத்திலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக் கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருவீழிமிழலை உடையார் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். இவ்வூர் உய்யக்கொண்டார் வளநாட்டு வேணுட்டுக்கு உட்பட்டிருந்தது.

பொன் வேய்ந்தது :- திருவீழிமிழலை உடைய மகாதேவர் கோயிலைப் பொன் வேய்ந்தவர் விசயராசேந்திரதேவர் அணுக்கியார் பல்லவன் பாட்டாளிநங்கை ஆவர்.

**இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருமேனிகள் :-** இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் நின்றருளியநாயனூர் நெறிவார்குழலி நாச்சியார் இவர்களின் திருக்கோயிலைப் பழுதுபார்த்தற்பொருட்டு ஒரு தச்சனுக்கு வீடு நிலம் இவைகள் திரிபுவனச்சக்கரவர்த்தி இராசராச தேவரின் முப்பத்தொன்றாம் ஆண்டில் கொடுக்கப்பட்டிருந்தன. திரிபு வனச் சக்கரவர்த்தி குலோத்துங்கசோழதேவரின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு அகத்தீசுவரமுடையார் கோயிலைப்பற்றியும், திரிபுவனச்சக்கர வர்த்தி இராசராசதேவரின் கல்வெட்டு முதல் பிராகாரத்தில் எழுந்தருளி யிருக்கும் திருவேகம்பமுடையாரைப்பற்றியும் இப்பிராகாரத்திலே மூன்றாம் குலோத்துங்கசோழனுடைய பதினெட்டாம் ஆண்டுக் கல்வெட்டு பார்வதிஈச்சரமுடையாரைப்பற்றியும், அதேகல்வெட்டில் திருச்சுவர்க்கம் உடையாரைப்பற்றியும், அவருடைய தேவதான நிலம் உள்ள ஊர் குலோத்துங்கநல்லூர் என்பதையும், பரகேசரி இராசேந்திரசோழதேவரின் பத்தாம் ஆண்டில் இக்கோயில் அழகிய மணவாளர் செப்புத் திருமேனி யைச் செய்து எழுந்தருளுவித்தவர் இராசேந்திரசோழ அணுக்கப்பல்ல வரையரின் தாயார் ஆவர் என்பதைப்பற்றியும் கல்வெட்டுக்கள் அறிவிக் கின்றன.

**திருமடங்கள் :-** இவ்வூரில் அழகியதிருச்சிற்றம்பலமுடையான் மடம் என்னும் பெயருடைய மடம் ஒன்று இருந்தது, அதை ஏற்படுத் தியவன் கௌசிகன் என்னும் பெயரினன் ஆவன். அவர் குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநறையூர்நாட்டு இராசராசபுரத்தில் திருச்சத்தி முற்றமுடையநாயனூர், திருக்காமக்கோட்டமுடைய பெரியநாச்சியார் இவர்களின் திருக்கோயில்களுக்குக் கிழக்கிலிருந்த திருஞானசம்பந்தர் திருமடத்து திருச்சத்திமுற்றமுதலியாரின் மாணவர் ஆவர். இச்செய்தியை மூன்றாம் இராசேந்திரசோழனுடைய இருபத்துமூன்றாம் ஆண்டுக் கல் வெட்டு உணர்த்துகின்றது.

**திருநாவுக்கரசர் திருமடம் :-** திருநாவுக்கரசர் திருமடம் என்னும் பெயருள்ள மடத்தைப்பற்றியும் அதற்குச் சொந்தமாயுள்ள நிலங்களைப் பற்றியும் மூன்றாம் இராசேந்திரசோழதேவரின் இரண்டாம் ஆண்டுக் கல் வெட்டுத் தெரிவிக்கின்றது.

**சண்டேசுவரர்கோயில் கட்டப்பெற்ற காலம் :-** ஆதிசண்டேசுவர தேவரின் திருக்கோயில் முதற்குலோத்துங்கசோழனின் முப்பத்துநான்காம் ஆண்டில் கருங்கல்லால் கட்டப்பெற்றதாகும்.

**திருக்கைக்கொட்டி மண்டபம் :-** இது திருமுறை ஓதுவதற்காக ' நரசிங்கதேவன் ' காலத்தில் கட்டப்பெற்றதாகும். இங்குத் திருமுறை ஓதுவார்க்கு நில நிவந்தம் கொடுத்ததை சடாவர்மன் சுந்தரபாண்டிய தேவனின் கல்வெட்டுக் கூறுகின்றது

**திருப்பதியம் விண்ணப்பிக்க நிவந்தம் :-** இத் திருக்கோயில் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய இவ்வூர்ச் சபையார் நிவந்தம் அளித்திருந்தனர்.

**கோயிலுக்குச் சொந்தமான ஊர்கள் :-** செயங்கொண்டசோழ நல்லூரும் திருவழுந்தூர்நாட்டிலுள்ள குமாரகுலோத்துங்கசோழநல்லூரும் திருவீழிமிழலை உடையார்க்குச் சொந்தமான ஊர்கள் என்பதை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

**பொதுச் செய்திகள் :-** இக்கோயில் மண்டபத்தில் உள்ள மூன்று தூண்களில் உக்கல்கிழான் எதிரிலிசோழன் ஆகிய பல்லவரையன் என்னும் பெயர் செதுக்கப்பட்டுள்ளது. அவன் இம்மண்டபம் கட்டுவதற்கு உதவிசெய்தவன் ஆவன். கீர்த்திமார்த்தாண்டப்பேராறு ஒன்றைப்பற்றியும், இராசராசன் காசைப்பற்றியும் இக்கோயில் கல்வெட்டுக்களில் கூறப்பெற்றுள்ளன. மாணிக்கவாசகர் திருவாதவூராளி என்னும் பெயரால் கூறப்பெற்றுள்ளனர். இக்கோயிலில் ஸ்ரீ கிருட்டிணதேவரை எழுந்தருளுவித்த செய்தியும் கூறப்பெற்றுள்ளது.

**See the Annual reports on South Indian Epigraphy for the year 1908 Numbers 382 - 449.**

## 79 திரு வெண்காடு (பக்கம் 71)

இரண்டாவது திருமுறையில் உள்ள 88 ஆவது தலவரலாற்றையும் இங்கு நோக்குக.

**இறைவியாரின் திருப்பெயர் :-** இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவியாரின் திருப்பெயர் 'வேயன்னதோளிநாச்சியார்' என்பதாகும். இச்செய்தி விக்கிரமபாண்டியதேவரின் கல்வெட்டில் கூறப்பெற்றுள்ளது. "வெண்காடுடையார்க்கும். வேயனதோளிநாச்சியார்க்கும் நம்பேரால் கட்டின விக்கிரமபாண்டியன் சந்திக்கு அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு இராசாதிராசவளநாட்டு இரண்டு காவேரி ஆற்றுக்கு நடுவுட்பட்ட ஊர்களில் நகரம் ஆளவந்த சோழபுரத்தில் பயிர் அடைப்பான நிலத்தில் இருபதிற்றுவேலி தேவதான இறையிலி" என்பது அக்கல்வெட்டுப் பகுதியாகும்.

**பிள்ளையாரின் பெயர் :-** இக்கோயிலிலுள்ள பிள்ளையாரின் பெயர் 'பெரியபிள்ளையார்' என்பதை விநாயகர் ஆலயத்திலுள்ள திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராசதேவரின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இப்பிள்ளையார்க்கு குலோத்துங்கசோழவளநாட்டு, விளநாட்டு இளஞ்சூருடையான் நில நிவந்தம் அளித்திருந்தான்.

**கல்வெட்டு வரலாறு :-** இவ்வூர்க் கோயிலில் சோழமன்னர்களில் மதுரைகொண்டகோப்பரகேசரிவர்மன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரசோழன், முதலாம் இராசாதிராசன், ஸ்ரீ வீரராசேந்திரதேவன், முதற்குலோத்துங்கசோழன், விக்கிரமசோழன், திரிபுவனச்சக்கரவர்த்தி இராசாதிராசதேவன், மூன்றுங்குலோத்துங்கசோழன் இவர்கள் காலங்களிலும்; பாண்டியமன்னர்களில் மாறவர்மன் பராக்கிரமபாண்டியன், மாறவர்மன் விக்கிரமபாண்டியன், சடாவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி (எல்லார்க்கு நாயனுர்) சுந்தரபாண்டியதேவர், ஸ்ரீ வல்லபதேவர், சடாவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி குலசேகரதேவன் இவர்கள் காலங்களிலும்; விசயநகரவேந்தர்களில் ஹரிஹரராயர் மகனுர் வீரவிருப்பண்ண உடையார், வீரப்பிரதாப கிருட்டிணதேவமகாராயர் இவர்கள் காலங்களிலும், தஞ்சை மராட்டிய மன்னரில் துக்காஜிமகாராசா காலத்திலும் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக் கல்வெட்டுக்களில் இறைவர் திருவெண்காட்டுப்பெருமாள், வெண்காடதேவர், சுவேதாரண்யநாதர் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர். இப்பெயர்களில் பின்னது வீரப்பிரதாபகிருட்டிண்தேவராயரின் (சகம் 1436) கல்வெட்டில் காணப்படுகின்றது.

**நடராசப்பெருமானைப்பற்றிய செய்தி :-** இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நடராசப்பெருமான் 'ஆடவல்லான்' என்னும் தூய தமிழ்ப் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். இப்பெருமானுக்கு முதலாம் இராசராசமன்னனின் இருபத்தெட்டாம் ஆட்சியாண்டில், இம்மன்னனது மனைவியார் கூத்தன்வீராணியார் வழிபாட்டிற்குப் பொன் அளித்துள்ளனர்

**எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகள் :-** இக் கோயிலில் அர்த்தநாரிதேவரை' எழுந்தருளுவித்தவர் துப்பயர் உத்தமசோழி ஆவர். இத்தேவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு இராசேந்திரசிங்க வளநாட்டு இந்தளூர்நாட்டு அழகியசோழநல்லூரில் ஊருணிகுளத்தாலும் பிடாரிகோயிலாலும் நீங்கும் நிலத்தை தேவதானமாக முதலாம் இராசாதிராசன் விட்டிருந்தான். இந்நிவந்தத்தை இம்மன்னன் கங்கைகொண்டசோழபுரத்து வீட்டினுள்ளால் கங்கைகொண்டசோழன் மாளிகையில் வடக்கில் சோபானத்து எழுந்தருளியிருந்து இட்டான். இடபவாகனதேவரது நாச்சியாரின் செப்புத் திருமேனியை இக்கோயிலில் முதலாம் இராசராசதேவரின் இருபத்தேழாம் ஆண்டில் எழுந்தருளுவித்தவர் இராசராச சென்னுத தெரிஞ்ச பரிவாரர்களில் ஒருவராவர். பிச்சதேவரை எழுந்தருளுவித்தவர் அமலன் செய்யவாயர் ஆவர். இது நிகழ்ந்தது இராசகேசரிவர்மராகிய உடையார் ஸ்ரீ இராசராசதேவரின் முப்பதாம் ஆண்டாகும். வீரபாண்டீச்சரமுடைய நாயனுரை இக்கோயிலில் எழுந்தருளுவித்தவர் வைத்தியசக்கரவர்த்தி ஆவர். இச்செய்தி திரிபுவனச்சக்கரவர்த்தி கோனேரின்மைகொண்டானின் ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.

பெரியநாயகி அம்மன் கோயிலைப் பற்றிய செய்தி :- இவ் அம்மன்கோயிலின் சுவர்கள், தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னராகிய துக்காஜி மகாராசா காலத்தில் தண்டாயுதபாண்டாரத்தால் கட்டப்பெற்ற தாகும்.

கோபுரவாசலின் பெயர் :- வெளிப்பிராகாரத்துக் கிழக்குக் கோபுர வாசலுக்கு 'விக்கிரமபாண்டியன் திருவாசல்' என்று பெயர்.

விக்கிரமசோழன் திருமண்டபம் :- இப்பெயருள்ள மண்டபம் இக்கோயிலில் உள்ளதைப்பற்றி விக்கிரமசோழனின் பத்தாம் ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகின்றது. இம்மண்டபத்தில் படிக்கட்டுகளில் இருந்து கொண்டு இராசாதிராசவளநாட்டு அதியமங்கைநாட்டுப் பெருந்தோட்ட மாகிய கலியுக கண்ணன் சதுர்வேதிமங்கலத்தில் விக்கிரமசோழன் திருவீதியில் இருந்த மடத்திற்கு விக்கிரமசோழன் நிவந்தம் அளித்ததை இக்கல்வெட்டு உணர்த்துகின்றது.

விழாக்கள் :- முதலாம் இராசராசசோழதேவர் திரு அவதாரஞ் செய்தருளிய ஐப்பசித்திங்கள் சதயநக்ஷத்திரத்தின் பொழுது திருவெண் காடுடையார்க்குத் தீர்த்தமாடவும், அதற்கு முன்பு ஆறுநாள் திருவிழா நடத்துகைக்கும் முதலாம் இராசராசசோழனின் இருபத்தேழாம் ஆண்டில் நிவந்தம் அளிக்கப்பெற்றிருந்தது. எனவே ஐப்பசித்திங்கள் சதயத் திருநாள் விழா இங்கே சிறப்பாக ஆண்டுதோறும் நடந்துவந்ததை அறியலாம். ஸ்ரீ வீரராசேந்திரதேவர் பிறந்தருளின ஆயில்ய நக்ஷத்திரத்தில் திங்கள்தோறும் திருமஞ்சனமாடியருளித் திருவிழா எழுந்தருளுகைக்கும், பெருந்திருவமுது (வடை பாயசத்துடன் கூடிய உணவு) செய்தருளுகைக் கும் ஆக வேண்டும் நிவந்தங்களுக்கு நாங்கூர்நாட்டில் உள்ள கலைய மங்கலம், திருஞாழல்வாயில், துக்களாக்குடி, மீய்குறும்பில், அச்சங்குறுக் காடு, திருப்புத்தூர், அயிராணமங்கலம், சயங்கொண்டசோழநல்லூர், கீரன்குடி, திருக்கழுமலநாட்டு இளமங்கலம், திருவாலிநாட்டு சிறுகிழாப் பால் ஆக இவ்வூர்களால் ஊர்க்கழஞ்சும், மீன்பாட்டமும், ஆற்றுப்பாட்ட மும், தட்டாரப்பாட்டமும், உள்ளிட்ட கீழைப்பாட்டமும், தறிபுடைவை யும், தசவந்தமும், வேலிக்காசும், சேவகக்காசும், வலங்கை இடங்கை மகன்மையும், திங்கள்மோகமும், இடக்கடவபன்மையாலும், பண்டவெட் டியாலும் ஆள் ஒன்றுக்குக் காசு பத்தாக வந்த காசுகளையும் கொண்டு இவ்விழாவைச் சிறப்புற நடத்துதற்கு ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது.

விழா நடைபெறாமல் இருந்து மீண்டும் தொடங்கப்பெற்றது :- காவிரியின் வடகரையில் கோட்டைகளைக் கட்டிக்கொண்டிருந்த கன்னட ர்களோடு கோப்பெருஞ்சிங்கதேவன் சண்டையிட நேர்ந்தமையால் இக்கோயில் விழாக்கள் நடைபெறாமல் இருந்தன. பெருமாள் ஸ்ரீ வல்லப

தேவபாண்டியன் தன் ஆட்சியாண்டு முப்பத்திரண்டாவது முதல் விழாக்களை மீளவும் நடத்துவதற்கு உத்தரவிட்டுள்ளான் என்பதை அவன் கல்வெட்டு அறிவிக்கின்றது.

செம்பியன்மாதேவியார் செய்த அருந்தொண்டுகள் :- செம்பியன்மாதேவியார் என்னும் சிவபத்திச் செல்வியராகிய இவ்வம்மையார் மழவர்கோன் மகளாவர். இவர் கண்டராதித்தசோழதேவரது தேவியாரும், உத்தமசோழதேவரது தாயாரும் ஆவர். இவர் இவ்வூர்க் கல்வெட்டில் "சீரார் மழவர்கோன் பெற்ற நம் செம்பியன் மாதேவியே" எனவும், ஸ்ரீகண்டராதித்ததேவர் தேவியார் ஸ்ரீஉத்தமசோழதேவர் தங்களாச்சியார் ப்ராந்தகன் மாதேவியாரான ஸ்ரீசெம்பியன்மாதேவியார் எனவும் இவ்வூர்க் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்றுள்ளனர். இவ்வம்மையார் தம் கணவராகிய ஸ்ரீ கண்டராதித்ததேவராகிய ஸ்ரீ மும்முடிச்சோழதேவரின் இரண்டாம் ஆட்சி ஆண்டில் திங்கள்தோறும் திருவெண்காடதேவர் சங்கிராந்தி ஸ்நபநஞ்செய்துவர இவ்வூர்ச் சபையாரிடம் 400 காசை அளித்துள்ளனர்.

உத்தமசோழ தேவரின் நான்காவது ஆட்சியாண்டில் ஸ்நபநஞ்செய்ய செப்புக்கலசம், செப்புக்குடம், செப்புக்கரகம் இவைகளுக்கு மூடச் செப்பகல்கள் இவைகளையும்; இவ்வுத்தம சோழதேவரின் ஆறுவது ஆட்சியாண்டில் இவ்வம்மையார் திருவெண்காடர்க்கு ஆயிரத்து ஐந்நூற்றுக் கழஞ்சு நிறையுள்ளதும் சிகரத்திலும் நான்கு முகத்திலுமாக ஏறின மாணிக்கம் ஐந்து, வயிரம் ஐம்பத்திரண்டு முத்து மூவாயிரத்து இருநூற்று அறுபத்தொன்று இவைகளுடன் கூடிய திருக்கொள்கை ஒன்றையும், கொடுத்துள்ளனர். திருவெண்காடர் கோயில் மேல் ஆயிரத்தைநூறு கழஞ்சு எடையுள்ள பொற்குடம் ஒன்றை முதலாம் இராசராச சோழனின் மூன்றும் ஆண்டில் வைத்தனர். இவ்வாண்டிலே இவ்வம்மையார் இக்கோயிலில் 4898 கழஞ்சே முக்கால் நிறையுள்ள பொன்னால் செய்த சந்திரசேகரத் திருமேனியை வைத்துள்ளனர். இத்தேவர்க்கு இவ்வம்மையார், மாணிக்கமாலை, வாகுவலயம், முதலான ஆபரணங்களையும், வெண்சாமரை ஒன்றையும், அமுது செய்தருள வெள்ளித்தளிகை முதலியவைகளையும் அளித்துள்ளனர், இக்கல்வெட்டுக்களில் இவ்வூர், ராஜாயிராஜ வளநாட்டு நாங்கூர்நாட்டு நாங்கூர் திருவெண்காடு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பிறசெய்திகள் :- இக்கோயில் சுற்றுத்தெருவில் தனிநின்று வென்றான் மடம் ஒன்று இருந்தது. திருவிழா சேவிக்க வந்த மாகேஸ்வரர்களுக்கு அதில் உணவு அளிக்கப்பெற்று வந்தது. இச்செய்தி விக்கிரமசோழன் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இக்கோயிலில்

நெய் அளக்கும் கருவிக்கு, திருவெண்காடன்நாழி என்று பெயர் வைக்கப் பெற்றிருந்தது. இக்கோயில் கல்வெட்டுக்களின் உத்தம சோழர் தேவியாரின் பெயர் செட்டன் சொரப்பையரான திரிபுவனமாதேவியார் என்பதும், முதலாம் இராஜேந்திர சோழதேவர் (கங்கைகொண்ட சோழர்) முதலாம் இராசராச சோழனுக்கு அவர் தேவியாராகிய வானவன்மாதேவியார் வயிற்றில் தோன்றியவர் என்பதும் அறியக் கிடக்கின்றன. கல்வெட்டுகளில் வந்துள்ள திருவெண்காடுடையார் திருவுண்ணாழிகை உள்ளுத்திருப்புறக்குடையில் இவர்வைத்த நுந்தாவிளக்கு ஒன்றுக்கு" என்பனபோன்ற தொடர்களில், திருவுண்ணாழிகை என்ற தொடர் வந்துள்ளது. அதற்குக் கருப்பஇல் (bentral shrine) என்று பெயர்.

இராசகேசரி பன்மரின் இரண்டாமாண்டுக் கல்வெட்டு திருவெண்காட தேவர்க்கு நுந்தாவிளக்கின் பொருட்டு, பெருநற்கிள்ளி சோழனால் ஆடுகள் கொடுக்கப்பெற்ற செய்தியை உணர்த்துகின்றது. சோழ மன்னரின் முன்னோர் பெயர், இங்குக் குறிக்கப்பெற்ற ஒருவனுக்கு வைக்கப்பெற்றிருப்பது பாராட்டற்குரியது.

> " பொத்தப்பிச்சோழன் நிலத்துக்கு மேற்கும்
> பட்டணப் பெருவழிக்கு வடக்கும் "

என்னும் கல்வெட்டுப்பகுதி (இராசகேசரி வர்மரின் இரண்டாமாண்டு கல்வெட்டு) திருவெண்காட்டிலிருந்து காவிரிப்பூம் பட்டினத்துக்குப்போக பெருவழி (Road) இருந்ததைத் தெரிவிக்கின்றது.

**See the Annual reports on South Indian Epigraphy for the years 1896, 1918 Numbers 110-122, 442-521 South Indian Inscriptions Volume V Numbers 442-521 South Indian Inscriptions Volume 13. Thecholas Numbers 15, 16, 144.**

## 80 திரு வெண்டுறை (பக்கம் 252)

இது இக்காலம் வண்டுறை என்று வழங்கப்பெறுகின்றது. இது தஞ்சாவூர்ஜில்லா மன்னார்குடி இரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே ஆறுமைல் தூரத்தில் இருக்கின்றது. காவிரித் தென்கரைத் தலங்களுள் நூற்றுப்பன்னிரண்டாவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் வெண்டுறைநாதர். இப்பெயர் இவ்வூர்ப் பதிகத்தின் இரண்டாம் பாடலில் குறிக்கப்பெற்றுள்ளது. இறைவியின்

திருப்பெயர் வேல்நெடுங்கண்ணி. பிருங்கி என்னும் முனிவர் வண்டு உருவெடுத்து இறைவனுக்கும் இறைவிக்கும் இடையே துளைத்துச் சென்று இறைவனைமாத்திரம் வழிபட்ட பதி இதுவென்றும், கர்ப்பஇல்லின் உள்பக்கத்தில் வண்டின் ஒலி இன்னும் கேட்கின்றது என்றும் கூறுவர். இத்தலத்தை வித்யாதரரும் பூசித்தனர். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம்

## 81 திரு வேட்டக்குடி (பக்கம் 272)

இது காரைக்காலுக்கு வடகிழக்கே 5¾ மைல் தூரத்தில் இருக்கிறது. இறைவரின் திருப்பெயர் – திருமேனியழகர். இறைவியின் திருப்பெயர் – சாந்தநாயகி.

அர்ச்சுனன் தவஞ்செய்தபொழுது இறைவன் வேடரூபமாக வெளிப்பட்டு அருளியதலம் என்பர். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கிறது.

## 82 திரு வேதவனம் (பக்கம் 343)

### (திருமறைக்காடு)

திருமறைக்காட்டில் வேதவனம்என்று குறிப்பிடப்பெறும் தலக்கோயில் வேதாரண்யேசுவரர் கோயிலின் வடக்கே உள்ளது. இது தனித்தலமாகக் குறிப்பிடப்பெறுகிறது.

## 83 திரு வேதிகுடி (பக்கம் 336, 356)

வேதம் வழிபட்ட காரணத்தால் இது வேதிகுடி என்னும் பெயர் எய்திற்று. தஞ்சாவூரிலிருந்து திருவையாற்றிற்குச்செல்லும் பெருவழியில் (Road) இருக்கும் திருக்கண்டியூரிலிருந்து கிழக்கே சுமார் இரண்டு மைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரின் திருப்பெயர் – வேதபுரீசுவரர். இறைவியின் திருப்பெயர் – மங்கையர்க்கரசி. பிள்ளையாரின் பெயர் – வேதப்பிள்ளையார்.

ஐயாறப்பர் சித்திரை மாதத்தில் எழுந்தருளும் ஏழூர்ப்பதிகளுள் இது நான்காவது ஆகும். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர்

பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டிலும் பங்குனி 13உ முதல் 15உ முடிய இங்கு சூரிய பூசை நிகழ்கின்றது. இவ்வூரின் வளத்தை,

"தாறுவிரி பூகமலி வாழைவிரை நாற இணைவாளை மடுவில்
வேறுபிரியாது விளையாட வளமாரும் வயல் வேதி குடியே"

என்னும் சம்பந்தரது பதிக அடிகளால் அறியலாம்.

கல்வெட்டு வரலாறு :- இவ்வூர்க் கோயிலில் கோஇராசகேசரி பன்மர், கோப்பரகேசரி பன்மர் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருவேதிகுடி மஹாதேவர். பரகேஸரி சதுர்வேதிமங்கலத்து மகாதேவர் என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர். இவற்றுள், பரகேஸரி சதுர்வேதி மங்கலத்து மஹாதேவர் என்னும் பெயர் கோப்பர கேஸரிபன்மரின் மூன்றுமாண்டுக் கல்வெட்டில் காணப்படுகின்றது. இக்கல்வெட்டுக்கள் நுந்தாவிளக்குகளுக்கு நிவந்தங்கள் அளித்ததைக் குறிப்பிடுவதோடு, இக்கோயிலுக்குத் திருப்பள்ளித் தாமம் பறித்துத் தொடுப்பார் இருவர், திருமெழுக்கிடுவார் நால்வர், காளமூதுவார் நால்வர், நந்தவனக் குடிகள் மூவர் இருந்த செய்திகளையும் குறிப்பிடுகின்றன.

கோராஜகேஸரி பன்மரின் 25-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஈராயிரத்து ஐந்நூற்று அறுபது குழி நிலத்தைப்பற்றிக் குறிப்பிடுகிறது. (இது சிதைந்த கல்வெட்டு)

***குறிப்பு:*** கோயில் புரப்பாரற்று மிகவும் சீரணமான நிலையில் கிடக்கின்றது.

**See the Annual reports on South Indian Epigraphy for the year 1895. Numbers 65—69 and the South Indian Inscriptions Volume V. Numbers 622—626.**

## 84 திரு வைகல்மாடக்கோயில் (பக்கம் 83)

**வைகல் என்னும் ஊரில் மாடக்கோயில் அமைப்பில் அமைந்த காரணத்தால் இப்பெயர் பெற்றுள்ளது. இக்கோயில் ஊரின் மேல்பக்கத்தில் இருக்கிறது. இது கோச்செங்கட்சோழனால் கட்டப்பெற்ற பழமையும் பெருமையும் வாய்ந்தது. இச்செய்தி "வையகம் மகிழ்தர வைகன் மேற்றிசைச், செய்யகண் வளவன் முன்செய்த கோயிலே" என்னும் இத்தலத்து ஞானசம்பந்தர் பதிகத்து இரண்டாம் பாடலின் அடிகளால் விளங்குகின்றது.**

இது மாயூரம் - கும்பகோணம் இருப்புப் பாதையில் ஆடுதுறை இரயில்வே நிலயத்திற்குத் தெற்கே மூன்றுமைல் தூரத்தில் இருக்கிறது. காவிரித் தென்கரைத் தலங்களுள் இது முப்பத்துமூன்ருவது ஆகும். இறைவரின் திருப்பெயர் வைகல்நாதேசுவரர். இறைவியின் திருப்பெயர் கொம்பியல்கோதை. இதற்கு ஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று

## 85 திரு வைகாவூர் (பக்கம் 307)

இது கும்பகோணத்திற்கு வடமேற்கே சுமார் ஐந்தரைமைல் தூரத்திலுள்ள திருப்புறம்பயத்திற்கு மேற்கே மூன்றுமைல் தூரத்தில் கொள்ளிடப்பேராற்றின் தென்கரையில் இருக்கிறது. இறைவரின் திருப்பெயர் வில்வவனேசுவரர். இறைவியின் திருப்பெயர் வளைக்கைநாயகியம்மை. மரம் வில்வம். தீர்த்தம் எமதீர்த்தம். இது சிவராத்திரிக்கு விசேடமான தலம். வேடன் ஒருவன் சிவராத்திரியில் புலிக்குப் பயந்து வில்வமரத்தில் ஏறி, தூக்கம் வாராமையால் வில்வ இலையைப் பறித்துச் சிவபெருமான் மீது இட்டு முத்தியடைந்த தலம். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. சம்புவராய மன்னர்களில் சகலபுவனசக்கரவர்த்தி இராசநாரர்யணசம்புவராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.



நான்மறையின் தனித்துணையாம் ஞானத்தின் திருவுரு

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

## மூன்றாவது திருமுறை

### கோயில்

259 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருச்சிற்றம்பலத்தைப் பரவினார், அங்கு உறைதலை அஞ்சித் திருவேட்களத்தை அடைந்தார்; வணங்கினார். திருநெல்வாயிலையும் திருக்கழிப்பாலையையும் வழிபட்டு மீண்டு, திருவேட்களத்தைச் சேர்ந்தார். திருவுடை அந்தணர் மூவாயிரவர் இறைவரது திருவடிகட்கு அணுக்கராயிருக்கும் பெருவாய்ப்பினை எண்ணி வியந்து மீண்டும் தில்லைக்கு எழுந்தருளினார். தில்லைவாழந்தணர் எதிரே வந்து சண்பையந்தணரை வணங்கினர். அவர்வணங்குமுன் அவர்களை ஆளுடைய பிள்ளையார் வணங்கினார். சிவபிரானருளால், அந்தணர் பலரும் சிவகணநாதராய்த் திகழ்ந்தனர். நாயனார் அத்திருவருட் காட்சியை நோக்கி உடனிருந்த திருப்பெரும் பாணர்க்கும் அப்பரிசுகாட்டி யருளினார். பின்னர், திருக்கோயிலுக்கு ஏகினார். திருமுடிமேற் குவித்த செங்கையுடன் திருவாயிலுள் புகுந்து, வழிபட்டுப் போற்றிப் பாடியது "ஆடினாய் நறுநெய்யொடு பால் தயிர்" என்று தொடங்கும் இத் திருப்பதிகம்.

## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

### பண் – காந்தார பஞ்சமம்

### திருச்சிற்றம்பலம்

ஆடினாய்நறு நெய்யொடு பால்தயிர்
அந்தணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடினாய்இட மாநறுங் கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல் கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடினாய்அருளாய் சுருங்க எம தொல்வினையே.

1. நறுமணம் வீசும் நெய்யும் பாலும் தயிரும் ஆடப்பெற்றவனே! தில்லைவாழந்தணர் எல்லோரும் எப்பொழுதும் அகத்தும் புறத்தும் பிரியாது வழிபடும் திருச்சிற்றம்பலத்தைத் திருக்கூத்தாடும் ஞான வெளியாகக் கொண்டு வாழ்பவனே! நறிய கொன்றைப் பூமாலையை நயந்து (விரும்பிச்) சூடியவனே! நான்மறையுள் சாமகானத்துடன் பல கீதங்களையும் பாடியவனே! பலவாகிய சடைமேல், குளிர்பனியைச் சொரிகின்ற வெண்ணிலவையுடைய இளம் பிறையைச் சூடியவனே! எம் தொல்லை வினை இல்லையாம்படி திருவருள் செய்க.

எல்லாத் தலங்களுள்ளும் ஓர் ஆண்டிற்குள் ஆறுநாள் அபிடேக விசேடமுடைய தலம் சிதம்பரமேயாதலின் "ஆடினாய்" என்பது திருநடனத்தையும் கருதிய தொடக்கம் உடையதாகி நின்றது. தில்லை வாழ் அந்தணருள் நடராசப்பிரானும் ஒருவராதலின், பிரியாமை பிரியாதுளது. சிற்றம்பலம் – ஞானாகாசம், பூதாகாசத்தைப் பிரிதல் ஒல்லும், கடத்தற்குரிய தத்துவங்களுள் ஒன்று அது, ஞானாகாசத்தைப் பிரிதல் என்றும் எவ்வுயிர்க்கும் இல்லை. நாடுதல் – சங்கற்பம். நயத்தல் – விரும்புதல். மறை – சாமவேதம், பிறவும் கொள்ளப்படும். கீதம் – இசைப்பாடல். திங்கள் சூடிய கருணைத்திறம், தொல்வினைச் சுருக்கம் வேண்டுங்கால் குறித்தற் பாலது, பல்சடை எனப்பன்மையும், புன்சடை எனக்குறுமையும், நீள்சடை என நெடுமையும் பொன்சடை எனநிறமும் விரிசடை எனப் பரப்பும், நிமிர்சடை என உயர்ச்சியும் பிறவும் திருமுறையுட் காணப்படும். பொன் சடையைப் புன் சடை எனலும் உண்டு.

"அந்தணர்தம் சிந்தையானை," (6·1·1) "அரியானை என்று எடுத்தே அடியவருக்கு எளியானை, அவர்தம் சிந்தை பிரியாத பெரிய திருத் தாண்டகச் செந்தமிழ்பாடிப் பிறங்குசோதி விரியாநின்று எவ்வுலகும் விளங்கிய பொன்னம்பலத்துமேவி ஆடல் புரியா நின்றவர் தம்மைப்

பணிந்து தமிழாற்பின்னும் போற்றல் செய்வார்" (பெரியபுராணம், என்பவற்றால் சிந்தையும் சிவபிரானும் பிரியாவினைக்கு முதலாதல் விளங்கும்.

"நின்று சபையில் ஆனந்த நிர்த்தமிடுவோர்க்கு ஆளாயின் வென்ற பொறியார்க்கு ஆனந்த வெள்ளம் பெருக வுய்ப்பர்" பேரூர்ப் புராணம் நாவலன் வழிபடு படலம் 23) என்னும் உண்மையைத் தெளிவிக்க ஆடுமாய் என்றெடுத்தார். ஆடுமாய் நறுநெய்யொடு பால் "பாதமலர் சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை" என்னுந் திருவாசகத்தில் பாதமலர் என்னும் தொடர் இயைவதுபோல மீனாடும் நெய், பால், தயிர் ஆடுமாய் என்று இயைவது உணர்க.

சிவ வழிபாட்டிற்கு வாசத்திருமஞ்சனம் கூறப்படும் உபசாரங்கள் பலவற்றினும் அபிடேகமே சிறந்தது ஆதலின் அதனை எடுத்துக் கூறினார். அதனை, "சிவதருமம் பல. அவற்றுட் சிறந்தது பூசனை. அதனுள், அவையில் பல உபசாரத்தைந்து சிறந்தன." "ஆங்கவை நாம் அபிடேகம் அரிய விரை, விளக்கு, மனுத்தாங்கும் அருச்சனை, நிவேதனம் ஆகும்" என்னும் கச்சியப்ப முனிவர் வாக்கால் அறிக. (பேரூர்ப் புராணம் மருதவரைப்படலம். 29) "தேன் நெய் பால் தயிர் ஆட்டுகந் தானே" முதலியவற்றையும் நோக்குக. அந்தணர் – நில்லைவாழந்தணர். "எவ்வுயிர்க்கும் கருணைக் கடலென்பார். வேதியர் மறையோர் என்னாது அந்தணர் என்று அருளினர். மெய்ஞ்ஞானிகள் அவனருளே கண்ணாகக் கண்டு திளைக்க ஆனந்தக்கூத்தாடும் பர ஞானவெளி ஆதலின், ஊன் அடைந்த உடம்பின் பிறவி, தான் அடைந்த உறுதியைச்சார ஆதியும் நடுவும் முடிவும் இல்லாத அற்புதத் தனிக் கூத்தாடும் இடம் சிதம்பரம், ஞானகாசம் எனப்பெற்றது. "சிற்பரவியோமம் ஆகும் திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி" என்றருளிய சேக்கிழார் திருவாக்கினையும் உணர்க.

நறும் - நறுமணம் உள்ள, கொன்றை - மந்திரங்களிற் சிறந்ததாகிய பிரணவ மந்திரத்துக்குரிய தெய்வம் தாமே எனத் தெளியச்செய்யக் கொன்றைமாலை யணிந்தனர். அம்மலர் உருவிலும் பிரணவ வடிவாயிருத்தலின் பிரணவபுட்பம் எனப்படும். "துன்றுவார் பொழில் தோணிபுரவர்தம், கொன்றைசூடும் குறிப்பது வாகுமே" என்னும் திருக்குறுந்தொகையாலும் "ஓரெழுத்திற்குரியபொருள் உயர்நெடு மாலயன் என்பார் நீரெழுத்து நிகர் மொழி நின்னிலவிதழிமுன் என்னும்" என்னும் வாட்போக்கிக் கலம்பகப் பாட்டாலும் அறிக. பனிகால் கதிர்–குளிர்ச்சியைவீசும் ஒளியையுடைய, வெண்திங்கள் சூடிநாய் என்றது, "உற்றார் இலாதார்க் குறுதுணையாவன" சிவபிரான் திருவடியே என்பதைக் குறிக்கும். தொல்வினை என்றது சஞ்சித

திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

கொட்டமேகம ழும்குழ லாளொடு
கூடிஞுய்எரு தேறிஞுய்நுதற்
பட்டமேபுனைவாய் இசைபாடுவ பாரிடமா
நட்டமேநவில்வாய் மறை யோர்தில்லை
நல்லவர்பிரி யாதசிற் றம்பலம்
இட்டமாஉறைவாய் இவை மேவிய தென்னைகொலோ.

கருமத்தை. பல்சடை:- பூணூல் அபரஞானத்தையும், சடை பரஞானத்தையும் குறிக்கும் என்ப. அதனுலும், சிவசின்னங்களில் சடையே சிறந்ததா யிருத்தலைப் புகழ்ச் சோழ நாயனுர் வரலாற்றுலும், விடந்தீர்க்க வேண்டித் திருமருகற் பெருமானை இரத்தற்கண் "சடையாய் எனுமால்" என்றெடுத் தருளினமையாலும் சடையின் மாண்பு அறியப்படும்.

2. சிவகாமியம்மையாரொடு கூடியவனே, விடையேறியவனே, நெற்றிப்பட்டம் அணிந்தவனே, பூதகணங்கள் இசைபாடுவன ஆகத் திருக்கூத்தாடுவோனே, (அறிதற்கரிய) வேதங்களை ஓர்கின்ற தில்லையில் வாழும் நல்லவராய அந்தணர் பிரியாத திருச்சிற்றம்பலத்தே விருப்பொடு வாழ்பவனே ! இவ்வைந்து கருணைச் செயல்களையும் மேவியது யாது காரணம் பற்றியோ ? கூறி யருள்க.

பாரிடம் – பூதம். நட்டம் – நடனம். நவிலுதல் – பழகுதல். 'நட்டம் பயின்றுடும்நாதனே'. மறையோர் – வேதங்களை ஓர்கின்ற. ஓர்நல்லவர் – மறையோராகிய நல்லவர் எனலுமாம்: நல்லவர், சரியை கிரியாயோகங்களைச் செய்து பெறும் நன்னெறியாகிய ஞானத்தைப் பெற்றவர்.

கொட்டம் – நறுமணம் "கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்" எனப்பின்னும் வருதல் காண்க. நுதற்பட்டம் நெற்றியில் அணியும் ஓர் அணி. "பட்டநெற்றியர் நட்டமாடுவர்" வீரர் அணிவது "நுதலணி யோடை யிற் பிறங்கும் வீரப்பட்டிகை" என்பதாலறிக. இசை பாடுவ – பாரிடம் ஆ(க)–பாரிடம் இசைபாடுவன ஆக. பாரிடம் – பூதங்கள் நட்டம் நவில்வாய் – திருக்கூத்தாடியருள்வீர். "ஆளும் பூதங்கள் பாடநின்றுடும் அங்கணன்" என வன்றெண்டப் பெருந்தகையார் அருளிச் செயலும் காண்க. நல்லவர் – நல்லொழுக்கின் தலைநின்றவராகிய தில்லைவாழந்தணர், நன்னெறியாகிய ஞானத்தையுடையாருமாம். இவை மேவியது என்னைகொலோ ? – என்று வினவுகின்றுர், அவை,— பெண் விருப்புடையான் போற் பெண்ணேடு கூடியிருத்தலும், ஊர்தியாக ஏறுஏறுதலும், அணிவிருப்புடையான் போல் நெற்றிப்பட்டம் அணிந்த

தில்லை



திருக்கோயிலும் திருக்குளமும்

நீலத்தார்கரிய மிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடி நீறணி வார்சடையார்
சீலத்தார்தொழு தேத்துசிற்றம்பலம்
சேர்தலால்கழற் சேவடி கைதொழக்
கோலத்தாய்அருளாய் உன காரணம் கூறுதுமே.

மையும், கண்டார் அஞ்சத்தக்க பூதங்களோடு கூடியாடுதலும், உலகில் எத்தனையோ தலங்களிருக்கத், தில்லைச் சிற்றம்பலத்தை இடமாக விரும்பி, யதும் அறிக.

3. நீலநிறத்தைப் பொருந்திய கரிய திருக்கழுத்தினர் (திருநீல கண்டர்), அழகிய நெற்றிக்கண்ணினர், திரிசூலம் பற்றியவர், காடுடைய சுடலைப் பொடிபூசியவர், சடையினர், சீலம் மிக்கவர் ஆகிய தில்லைவாழந் தணர் வணங்கியேத்தும் திருச்சிற்றம்பலத்தை இடைவிடாது நினைந்து சேர் தலால், திருக்கோலம் உடைய நடராசப் பெருமானே! நின் கழலணிந்த சேவடியைக் கையால் தொழ அருள் செய்தாய். உன்னுடைய காரணங் களை(முதன்மை) க் கூறுவோம்.

இத்திருப்பாடல், தில்லைக்குச் செல்லுங்கால், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனூர்க்கு எதிர்வந்து தில்லைவாழந்தணர்கள் சிவகணநாதர் களாகத் தோற்றம் அளித்த உண்மையை உணர்த்திற்று.

நீலத்து – நீலமணியைப்போல, ஆர் – பொருந்திய, கரிய – கருமை யையுடைய, (நீலம், கறுப்பு, பச்சை இவற்றுள் ஒன்றைப் பிறிது ஒன்றுகக் கூறும் வழக்கு உண்மையை இவற்றானும் "பச்சைப் பசுங்கொண்டலே" என்னும் குமரகுருபர அடிகள் வாக்கானும் அறிக.) மிடற்றார்–கண்டத்தை யுடையவர், பற்று சூலத்தார்–கையில் சூலம் பற்றியவர், சேர்தலால் – பற்றுக்கோடாக, நாங்கள் சேர்ந்தமையாலும், உன காரணம் கூறுதும் – எல்லாவற்றிற்கும் நீயே காரணனும் தன்மைகளைக்கூறுவோம். கோலத்தாய் அருளாய் – அழகையுடையவனே, உன் சிவந்த திருவடிமலர்களைத்தொழ எமக்கு அருள்வாயாக. சேவடி(யைத்) தொழ அருளாய் எனக் கூட்டுக. "அவனருளாலே அவன் தாள்வணங்கி" என்றல் கருத்து. நீலகண்டம், முக்கண், சூலம், திருநீற்றுப் பூச்சு, வார்சடை இக்கோலத்தோடும் தில்லைவாழந்தணரைத் தாம் கண்டமை குறித்தருள்கிருர். இதனைச் சேக் கிழார்பெருமான் "நீடும் திருத்தில்லை யந்தணர்கள் நீள் மன்றுள் ஆடும் கழற்கு அணுக்கராம் பேறு அதிசயிப்பார்" என்று தொடங்குவது முதலிய பாடல்களில் குறித்தருள்வது காண்க.

கொம்பலைத்தழ கெய்திய நுண்ணிடைக்
    கோலவாள்மதி போலமுகத்திரண்
டம்பலைத்தகண் ணாள் முலைமேவிய வார்சடையான்
கம்பலைத்தெழு காமுறுகாளையர்
    காதலால்கழற் சேவடிகைதொழ
அம்பலத்துறைவான் அடியார்க் கடையாவினையே. 4

4. பூங்கொம்பு தனக்கு இணையாகாவாறு அலையச் செய்து அத னழகினையும் தான் பெற்ற நுண்ணிய இடையையும் அழகும் ஒளியும் உடைய திங்கள்போலும் முகத்தில் இரண்டு அம்புகளை வருத்தி ஒப்பாகீர் என்றொதுக்கிய திருக் கண்களையும் உடைய சிவகாமியம்மையார் கொங் கைகளை விரும்பிய வார்சடையான் (நடராசப் பெருமான்) அரகர முழக் கஞ்செய்து விழுந்தெழுந்து அன்புடன் வழிபடும் காளையைப்போன்ற உடற்கட்டினர் (அந்தணர் மக்கள்) பேரார்வத்தோடு திருக்கழலணிந்த சிவந்த திருவடிகளைக் கைகளால்தொழ, பொன்னம்பலத்தில் திருக்கூத் தாடும் முழுமுதல்வன் அடியவர்க்கு வினைத்தொடர்பு இல்லை.

'கொம்பு...முலை' என்றது கங்கையைக் குறித்ததுமாம். ஆயினும், அஃது அத்துணைச் சிறப்பினதன்று. காளையர் என்பது வழிபடுவோருள் அத்தகையாரைக் குறித்ததெனலும் பொருந்தும். காளையர்க்கு முன்னும் பின்னும் உள்ள அடைமொழியால் முறையே பெருமானது திருமேனியிற் கொண்ட ஆர்வமும் திருவடிக்கண் நின்ற வேட்கையும் விளங்கும்.

கொம்பு – பூங்கொம்பை. அலைத்து (தனக்கு இத்தகைய அழகே இல்லையென வருந்த) வருத்தி, அழகு எய்திய – அழகைப்பெற்ற. நுண் இடை – சிறிய இடை, கோலம் – அழகிய, வாள் – ஒளி பொருந்திய முகத்து – முகத்தில், அம்பு அலைத்த – அம்புகளை, (அவ்வாறே) வருத்திய இரண்டு கண்ணுள் – இரு விழிகளையுடைய உமாதேவியாரின், வார்சடை நெடிய சடாபாரம். கம்பலைத்து – முக்காரம் செய்து, காமுறு – (கண்டார்) விரும்பும், காளையர் – ஏறுபோற் பீடுநடையை யுடைய தில்லைவாழ் அந்தணர் மக்கள், காதலால் – அன்போடு, கழல் சேவடி கை தொழ – கழலையணிந்த சிவந்த திருவடிகளைத்தொழ. அடையாவினை – துன்பங்கள் அடையமாட்டா. இறைவனைப் போற்றும் வீறுடைமையால் பெருமித நடைக்குக் காளை உவமம். "ஏறுபோற் பீடு நடை" என்றார்வள்ளுவரும். (திருக்குறள் 59) தில்லைவாழந்தணர்களின் துதித்தல், பாடுதல், புகழ் பாராட்டுதல் ஆகிய செயல்களின் ஓசைக்கு முக்காரம் செய்தல் ஆகிய உவமையும் பெறப்படும், ஏற்றின் ஒலி முக்காரம்எனப்படும். கம்பலைத்து– கம்பலை யென்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். கம்பலை – ஓசை.

தொல்லையார்அமு துண்ணநஞ்சுண்டதோர்
தூமணிமிடறு பகுவாயதோர்
பல்லையார்தலையிற் பலிஏற்றுழல் பண்டரங்கா
தில்லையார்தொழு தேத்துசிற்றம்பலம்
சேர்தலால்கழற் சேவடிகைதொழ
இல்லையாம்வினை தான்எரியம்மதில் எய்தவனே. 5

ஆகந்தோய்அணி கொன்றையாய்அனல்
அங்கையாய்அம ரர்க்கமராவுமை
பாகந்தோய்பகவா பலியேற்றுழல் பண்டரங்கா
மாகந்தோய்பொழில் மல்குசிற்றம்பலம்
மன்னினாய்மழு வாளினாய்அழல்
நாகந்தோய்அரையாய் அடியாரை நண்ணா வினையே. 6

"கம்பலை அரம்மை, கலியே, அழுங்கல் என்றிவை நான்கும் அரவப் பொருள" (தொல். சொல். உரி. 22) காதலான்; ஆனுருபு ஒடுப்பொருளில் வந்தது. "தூங்குகையான் ஓங்குநடைய" என்புழிப்போல.புறம்.53.

5. திரிபுரத்தை எரித்தொழிக்க மலைவில்லால் தீக்கணையை எறிந்தவனே, பழந்தேவர் எல்லாரும் அமுதுண்ண வேண்டிக் கருணைப் பெருக்கால், நஞ்சினை உண்டதொரு தூய நீலமணிபோலக் கறுத்த திருக்கழுத்தினனே! பற்கள் நிறைந்த பிளந்த வாயுடையதொரு தலையில் பலியை ஏற்று உழலும் பாண்டரங்கக் கூத்தனே! தில்லை வாழந்தணர் வணங்கி ஏத்தும் திருச்சிற்றம்பலத்தைச் சேர்ந்து வழிபடுதலாலும் கழலணிந்த சேவடியைக் கைகளால் தொழுதலாலும் இருவினையும் பற்றறக் கழியும்.

தொல்லையார் – தொன்மையுடைய தேவர்கள், தூ – தூய, (கலப்பில்லாத) மணி – நீல ரத்தினம் போன்ற. மிடறு–கண்டத்தையுடையவனே! பகுவாய் – பிளந்த வாய். தலை – மண்டையோடு. பண்டரங்கம் – பாண்டரங்கக் கூத்து எனவும், "மதில் எரிய எய்தவனே" எனவும் (உன்) சேவடி கைதொழ வினை இல்லையாம் எனவும் கூட்டுக. திரிபுரதகனம் செய்த் மகிழ்ச்சியால் நேரே நாடக மேடையாக நின்று சிவபெருமான் ஆடிய கூத்தைப் 'பாண்டரங்கம்' என்பர். அது "திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் தேரே யரங்கமாக ஆடிய கூத்தே பாண்டரங்கமே" என்பதால் அறிக.

6. திருமேனியில் தோய்ந்த அழகிய கொன்றை மாலையையுடையவனே, தீ ஏந்திய திருக்கையனே, தேவதேவனே, அம்பிகைபாகமுடைய பகவனே, பலி ஏற்றுத்திரியும் பாண்டரங்கக் கூத்தனே, வானளாவிய

சாதியார்பளிங் கின்னொடுவெள்ளிய
சங்கவார்குழை யாய்திகழப்படும்
வேதியாவிகிர்தா விழவாரணி தில்லைதன்னுள்
ஆதியாய்க்கிடம் ஆயசிற்றம்பலம்
அங்கையால்தொழ வல்லடியார்களை
வாதியாதகலும் நலியாமலி தீவினையே. 7

சோலைகள் நிறைந்த திருச்சிற்றம்பலத்தே நிலைபெற்றவனே, மழுவாளை ஏந்தியவனே, நச்சுத் தீயையுடைய அரவக்கச்சணிந்த திருவரையினனே, உன் அடியவரை வினைகள் அடையா. (ஆதலின், உனக்கு அடிமை பூண்ட எமக்கும் வினை இல்லை என்றவாறு.)

ஆகம் – மார்பில், தோய் அணிகொன்றையாய் – தோயும் அழகிய கொன்றை மாலையையுடையவனே! அனல் அங்கையாய் – உள்ளங் கையில் அனல் ஏந்தியவனே! அமரர்க்கு அமரா – தேவதேவனே! (அமரர் – தேவர்; மரணம் இல்லாதவர்) பகவா – பகவனே! ஐசுவரியம், வீரியம், ஞானம், புகழ், திரு, வைராக்கியம், என்னும் இவ்வாறு குணங் களையும் உடையவன் பகவன். அது சிவபெருமானையன்றி, மற்றெவனையுங் குறிக்காது. மாகம்தோய் – ஆகாயத்தை அளாவிய. பொழில் – சோலை, மல்கு – வளம் நிறைந்த, அழல் நாகம் – விடத்தையுடைய பாம்பு. தோய்– சுற்றிய, அரையாய் – இடுப்பையுடையவனே! (அரை – அளவையாகு பெயர்) உன் அடியவரை வினை நண்ணுதலொழியும்.

7. நல்ல இனத்துப் பொருந்திய பளிங்கொடு வெண்சங்குகொண்டு செய்யப்பட்ட குண்டலத்தை உடையானே, விளங்குகின்ற மறையோனே, விகிர்தனே, திருவிழாக்கள் நிறைந்த அழகிய தில்லையுள் முதல்வனாகிய நினக்கு இடமான திருச்சிற்றம்பலத்தை அழகிய கைகளால் தொழவல்ல அடியார்களைத் தீவினைப் பெருக்கம் வாதிக்காது; வருத்தா தொழியும்.

சாதியார் பளிங்கின் ஓடு – உயர்ந்த சாதிப்பளிங்கு போலும், வார் – தொங்கும், சங்கக்குழையாய் – சங்கினாலாகிய காதணியை யுடையவனே. இன் – சாரியை, ஓடு ஒப்புப் பொருளில் வந்தது. "ஈன்றாளோடு என்ன கடவுளும் இல்" என்புழிப்போல. திகழப்படும் வேதியா – வேதங்களில் விளங்க எடுத்துப் பேசப்படுபவனே. விகிர்தா– மாறானவனே. அம்கையால் – அழகிய கைகளால், அழகியகைகள் என்னப்பட்டன. "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே.... வழிபடும் அதனாலே" யென்றபடி சிவபெருமானைக் கும்பிட

வேயினார்பணைத் தோளியொடாடலை
வேண்டிணுய்விகிர் தாஉயிர்கட்கமு
தாயிணுய்இடு காட்டெரி யாடல்அமர்ந்தவனே
தீயினார்கணையால் புரம்மூன்றெய்த
செம்மையாய் திகழ்கின்ற சிற்றம்பலம்
மேயினாய்கழலே தொழு தெய்துதும் மேலுலகே. 8

"எத்தனைகோடி யுகமோ தவம் செய்திருக்கின்றன" என்று பாராட்டற்குரிய தன்மைபற்றிக் 'கைகளால் தொழ' - என வேண்டாது கூறினார், வணங்கத் தலைவைத்து வார்கழல் வாய் வாழ்த்த வைத்து என்பது போலக் கைபெற்றதன்பயன் அவனைக் கும்பிடற்கே யெனல் தோற்றுவித்தற்கு. அதனை, "கரம் தரும் பயன் இதுஎனஉணர்ந்து.... பெருகியதன்றே" என்னும் சேக்கிழார் பெருமான் திருவாக்கானும் உணர்க. (திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம் 7.) மலி - மிக்க. நலியா - துன்புறுத்தாதன ஆகி, வாதியாது - எதிரிட்டு நில்லாமல், அகலும் - நீங்கும். "வாதியா வினை மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம் வந்தடையாவே" (திருமுறை2, பதிகம் 11)என்ற இடத்தும்( வாதியாது-பாதியாது) இப்பொருளில் வருதல் காண்க. வல்ல - குறிப்புப் பெயரெச்சத்தின் ஈறு தொக்கது.

8. மூங்கிலைப்போன்ற பருத்த தோளுடைய காளியொடு திருக்கூத்தாடுதலை விரும்பினவனே, விகிர்தனே, வணங்கிய உயிர்கட்கு அருளமுதமாகியவனே, இடுகாட்டின் தீயில் ஆடுதலை விரும்பியவனே, தீக்கடவுளைக் கூரிய முனையாக்கொண்ட திருமாலாகிய கணையால் திரிபுரத்தை எய்திட்ட செம்மையனே, திருவருளாகி விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தைத் திருநடங்கொள்ளும் இடமாக விரும்பியவனே, நின் கழலடிகளையே தொழுது சிவலோகத்தை அடைவோம்.

வேயின் - மூங்கில் போல. ஆர் - பொருந்திய பணைத்தோளியோடு - திரட்சியாகிய தோளையுடையவளாகிய காளியுடன், ஆடலை வேண்டினாய் - ஆடுதலை விரும்பியவனே! (தோள்+இ; இகரம் பெண்பால் விகுதி) உண்ண இனித்து மரணத்தை யொழிக்கும் அமிர்தம்போல் "சிறந்தடியார் சிந்தனையுள் தேன் ஊறிநின்று பிறந்த பிறப்பு அறுக்கும் பெருமான் ஆனவனே!" தீயின் ஆர்கணையால் - தீயாகிய அம்பினால், திரிபுரம் எரித்த அம்பின் நுனிப் பாகம் தீயாயிருந்தமையால், தீயினார் கணை எனப்பட்டது. அம்பின் அடிப்பாகம் காற்று; நுனி தீ; அம்பு திருமால் என்பவற்றை,

தாரினார்விரி கொன்றையாய்மதி
    தாங்குநீள்சடை யாய்தலைவாநல்ல
தேரினார்மறுகின் திருவாரணி தில்லைதன்னுள்
சீரினால்வழிபா டொழியாததோர்
    செம்மையால்அழ காயசிற்றம்பலம்
ஏரினால்அமர்ந்தாய் உன சீரடி யேத்துதுமே. 9

"கல்லானிழற் கீழாய் இடர் காவாயென வானோர்
எல்லாம் ஒருதேராய் அயன் மறைபூட்டி நின்றுய்ப்ப
வல்லாய் எரி, காற்று, ஈர்க்கு, அரி, கோல், வாசுகி, நாண், கல்,
வில்லால் எயில் எய்தானிடம் வீழிம்மிழலையே" (1 - 11 - 6)

என்னும் இடத்தில் காண்க. மேயினாய் - மேவினாய். கழலே - திருவடிகளையே, எய்துதும் - அடைவோம்.

9. மலர்ந்த கொன்றைப் பூமாலையைச் சூடியவனே, பிறையைத் தாங்கும் நீண்ட சடையவனே, தலைவனே, அழகிய தேர்களாலே பொலிவு நிறையப்பெற்ற திருவீதிகளையுடைய செல்வம் நிறைந்த திருத்தில்லையுள், ஞான கானத்தால் வழிபடுதலை ஒழியாததொரு செம்மையால் அழகான திருச்சிற்றம்பலத்தைத் திருக்கூத்தெழுச்சியால் விரும்பினவனே, உன் சீரடிகளை ஏத்துவோம். ஒழியாத வழிபாடு இன்றும் உண்டு.

விரி - மலர்ந்த. மறுகு - வீதி. திரு - செல்வம். அணி - அழகிய. சீரினால் - சிறந்தநூல் முறைப்படி. வழிபாடு - நித்திய நைமித்திகமாகிய பூசை. ஒழியாதது - ஒருகாலமும் நீங்காததாகிய. செம்மை - செந்நெறி. உன - உன்னுடைய. சீர் அடி - சிறந்த அடிகளை, ஏத்துதும் - துதிப்போம். தேரின் ஆர் மறுகு - "தேருலாவிய தில்லையுட் கூத்தனை" எனத் திருநாவுக்கரசு நாயனாரும் அருளுவர். தலமோ 'அணிதில்லை' கோயிலோ 'அழகாய சிற்றம்பலம்', அங்கு அமர்ந்த பெருமானோ 'ஏரினாலமர்ந்தான்' இவ்வழகிய கூத்தப்பெருமானது பேரழகில் திளைத்த எமது வாகீசப் பெருந்தகையார், "கச்சின் அழகு கண்டாற் பின்னைக் கண் கொண்டு காண்பதென்னே" "சிற்றம்பலத்து அரன் ஆடல் கண்டாற் பின்னைக் காண்பதென்னே," என்பன முதலாக அருளினமையும் காண்க. (திருமுறை கோயில் திருவிருத்தம்)

வெற்றரையுழல்வார் துவர்ஆடைய
வேடத்தாரவர்கள் உரைகொள்ளன்மின்
மற்றவருலகின் னவலம்மவை மாற்றகில்லார்
கற்றவர்தொழு தேத்துசிற்றம்பலம்
காதலாற்கழற் சேவடிகைதொழ
உற்றவர்உலகின் உறுதிகொள் வல்லவரே. 10

நாறுபூம்பொழி லண்ணியகாழியுள்
நான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறும்இன்தமிழால் உயர்ந்தார்உறை தில்லைதன்னுள்
ஏறுதொல்புகழ் ஏந்துசிற்றம்பலத்
தீசனைஇசையாற் சொன்ன பத்திவை
கூறுமாறுவல்லார் உயர்ந்தாரோடும் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. ஆடையில்லாத அரையினராய்த் திரிவாராகிய சமணருரைகளையும் துவரூட்டிய ஆடையால் கொள்ளும் வேடத்தவராகிய தேரருரைகளையும் ஒரு பொருளுரையாகக் கொள்ளாதீர்கள். அவர்கள் உலகத்து அவலங்களை மாற்றவல்லாரல்லர். சிவாகமங்களைக் கற்றும் நாற்பாதங்களையும் வல்ல சைவர் தொழுது ஏத்தும் திருச்சிற்றம்பலத்தைக்கண்ட ஆராத காதலால், கழலணிந்த சேவடிகளைக் கைகளால் தொழ உற்றவரே உயிர்க்குஉலகினுள் உள்ள உறுதி (ஆன்மலாபம்) கொள்ளவல்லவராவர்.

வெற்றரையர் (வெறு+அரையர்) ஆடையணியாத இடுப்பினர், சமணர். துவர் ஆடையர் - மருதம் துவர் தோய்ந்த (காவி) ஆடையையுடையவர், பௌத்தர். (ஆகிய) அவர்கள் உரை(யைக்) கொள்ளன்மின் - கேளாதீர்கள். அவர், உலகின் அவலம் - உலகிற் பிறந்திறந்து உழல்வதாகிய துன்பத்தை, மாற்றகில்லார் - போக்கும் வலியற்றவர். (ஆகலின் அவற்றை விடுத்து) கற்றவர் தொழுது ஏத்து சிற்றம்பலத்தில், காதலால் - அன்போடு, கழல்சேஅடி - கழலையணிந்ததால் சிவந்த குஞ்சித பாதத்தை. கைதொழ உற்றவர் - கையால் தொழுதல் உறுவோர், உலகின் உறுதி கொள வல்லார் - உலகில் மானிடப் பிறவியிற் பிறந்த பயனை அடைய வல்லவர் ஆவர். அது "மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம் ஆனிடத்தைந்தையும் ஆம். அரன் பணிக்காகவன்றோ" என்றது (சித்தியார் சூ-ம் 2-92). "ஆக்கையாற் பயனென் அரன்கோயில் வலம் வந்து பூக்கையால் அடிபோற்றி யென்னாத இவ்வாக்கையால் பயனென்"

11. மணம் நாறும் பூஞ்சோலைகள் பொருந்திய சீகாழியுள் நான்கு மறைகளிலும்வல்ல திருஞானசம்பந்தர் ஊறும் இனிய தமிழால் சொன்ன

வையும், வேதசிவாகமங்களையுணர்ந்த அந்தணர் மூவாயிரவர் வாழும் தில்லையுள் மேன்மேல் ஏறும் தொன்மைப்புகழ் தாங்கும் திருச்சிற்றம் பலம் உடையானைப் பண்ணிசையால் சொன்னவையும் ஆகிய இத்திருப் பதிகத்தை இசையுடன் பாடுமாறு வல்லவர் தேவரொடுங் கூடி இன்பம் அடைவர். (3 - 6 - 11; 3, 31, 31, 11; 3 - 52 - 11)

நாறுபூம்பொழில் நண்ணிய காழி-மணக்கும் பூக்களையுடைய சோலை பொருந்திய காழியுள் 'ஞானசம்பந்தன்'. ஊறும் இன் தமிழால் - இனிமை ஊறும் தமிழால், ஏறு தொல் புகழ் ஏந்து - பழமையான மிக்க புகழைத் தாங்கிய. சிற்றம்பலத்து ஈசனைச் சொன்ன இவை வல்லார் உயர்ந்தா ரொடும் கூடுவர் - உயர்ந்த சிவனடியாரோடுங் கூடும் பேறு பெறுவர். அடியாரொடு கூடிவணங்குவோர் உள்ளத்தில் இறைவன் உமாதேவியா ரோடும் எழுந்தருள்வானுதலால் இங்ஙனம் கூறியருளினர். " அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் " என்ற திருவாசகத் தும் காண்க. பூம்பொழில் நண்ணிய காழியுள் நான்மறைவல்ல ஞான சம்பந்தன் உயர்ந்தார் உறை தில்லையுள், புகழ் ஏந்து சிற்றம்பலத்து ஈசனை, ஊறும் இன்தமிழால், இசையாற் சொன்ன இவை பத்து(ம்) கூறுமாறு வல்லார் உயர்ந்தாரொடும் கூடுவர் என்க. கோயில் முதல்திருப்பதிகம் 1 இப்பதிகத்தின் 8-ம் பாடலில் இராவணனையும் 9-ம் பாடலில் பிரம விட் டுணுக்களையும் குறிக்கவில்லை.

# 2. திருப்பூந்தராய்

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பந்துசேர்விரலாள் பவளத்துவர்
வாயினாள்பனி மாமதிபோன்முகத்
தந்தமில்புக ழாள்மலைமாதொடும் ஆதிப்பிரான்
வந்துசேர்விடம் வானவர் எத்திசையுந்
நிறைந்துவலஞ் செய்துமாமலர்
புந்திசெய்திறைஞ்சிப் பொழிபூந்தராய் போற்றுதுமே. 1

காவியங்கருங் கண்ணினாள்கனித்
தொண்டைவாய்க்கதிர் முத்தநல்வெண்ணகைத்
தூவியம்பெடை அன்னநடைச்சுரி மென்குழலாள்
தேவியுந்திரு மேனியோர்பாகமாய்
ஒன்றிரண்டொரு மூன்றொடுசேர்பதி
பூவிலந்தணன் ஒப்பவர்பூந்தராய் போற்றுதுமே. 2

---

பந்துசேர் விரலாள் – பந்து பொருந்திய விரலையுடையவள். "பந்தணை விரலியும் நீயும்" (திருவாசகம் திருப்பள்ளியெழுச்சி.8) "பந்தணை விரலாள் பங்க" (வாழாப்பத்து 8) எனத் திருவாசகத்தில் வருதலும் காண்க. துவர்– செந்நிறம், பவளத்துவர் வாயினாள்–பவளம்போலும் செந்நிறம் பொருந்திய வாயையுடையவள். பனிமாமதி போன்முகத்து–குளிர்ச்சி பொருந்திய சிறந்த சந்திரனைப்போன்ற முகத்தையுடைய. அந்தம் இல்புகழாள் – அள வற்ற புகழையுடையவள். விரலாளும், வாயினாளும் ஆகிய அந்தமில் புகழாள். அளவில் புகழையுடைய உமாதேவியாரோடும். ஆதி – சிவனுக் கொருபெயர் "ஆதியே .... .... அருளாயே" ஆதிப்பிரான் – பெயரொட்டு. "சத்தியும் சிவமுமாய தன்மை .... வைத்தனன் அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கையெல்லாம்" என்பதால் (சித்தியார் சூ–ம் 1–39) அந்தமில் புகழாள் என்றனர். வந்து, சேர்வு இடம் – சேர்தலையுடைய இடம். புந்தி செய்து இறைஞ்சி:– புந்தி மனம், இறைஞ்சி – வணங்கி, மனம்கூடாத வழிச் செய்கை பயன்தராது ஆகலாற் புந்திசெய்து இறைஞ்சியென்றனர். "செய்வினை சிந்தையின்றெனின் யாவதும் எய்தாது" (மணிமேகலை. மலர்வனம்புக்ககாதை) எனப் பிறர் கூறுதலும் காண்க. வானவர் எத் திசையும் நிறைந்து வலஞ்செய்து இறைஞ்சி மாமலர்பொழி பூந்தராய் என்க. போற்றுதும் – வணங்குவோம்.

2. காவி – நீலோற்பலம், கனித்தொண்டை – தொண்டைக்கனி. கொவ்வைப்பழம்போன்ற வாய், கதிர் – ஒளி, முத்தம்வெண்நகை–முத்துப்

பையராவரும் அல்குன்மெல்லியல்
பஞ்சின்நேரடி வஞ்சிகொள்நுண்ணிடைத்
தையலாள்ஒரு பாலுடைஎம்மிறை சாருமிடம்
செய்யெலாங்கழு நீர்கமலம்மலர்த்
தேறலூறலிற் சேறுலராதநற்
பொய்யிலாமறை யோர்பயில்பூந்தராய் போற்றுதுமே. 3

போன்ற வெள்ளிய பற்கள், தூவியம்பெடை அன்னம் நடை - இறகுகளையுடைய பெண்ணன்னம்போலும் நடை, இவற்றோடு சரிமென் குழலாள் - சரிந்த மெல்லிய கூந்தலையுடையவள். ஆகிய தேவியும் திருமேனியோர் பாகமாய்(ச் சேர்பதி). ஒன்று இரண்டு ஒரு மூன்றொடு சேர்பதி (1+2+3=6)ஆறுவது திருப்பெயராகிப் பொருந்திய பூந்தராயைப் போற்றுவோம். சீர்காழிக்குரிய திருப்பெயர்கள் பன்னிரண்டும் ஒன்றன்பின் ஒன்றாக இன்னமுறையாக வழங்கவேண்டும் என்னும் மரபு உண்டு. அம்முறையினால் ஆறுவதாக வழங்கப்படுவது திருப்பூந்தராய் என்னும் திருப்பெயராம். அம்முறையைப் பின்வரும் சான்றுகளால் அறிக. இம்முறையைப் பின்பற்றுக என இப்பாசுரத்தால் ஆணைதந்தனர் காழியர் பெருமான். "பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த்தோணி, புரமன்னு பூந்தராய் பொன்னஞ்சிரபுரம் புறவஞ்சண்பை, அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங்காதியாய பிரமனூர் பன்னிரண்டாய் நின்ற திருக்கழுமலம் நாம் பரவும் ஊரே". திருமுறை 2. "பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப், பொருஇல் திருத்தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன், வருபுறவம் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம். பரவு திருக்கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்" திருஞானசம்பந்தர் 14. இது சேக்கிழார் சுவாமிகள் பாடல். சேர்பதி என்ற தொடரினைத் தேவியும் திருமேனியோர் பாகமாய்ச்சேர்பதி யெனவும் எடுத்தும் இயைக்க.

3. பைஅராவரும், வஞ்சிகொள் நுண்ணிடை - என்னும் தொடர்களிலுள்ள பைஅரா - படத்தையுடைய பாம்பு, வரும் கொள் - என்ற சொற்கள் உவம வாசகம், பஞ்சின் ஏர்அடி - பஞ்சைப்போன்ற மெத்தென்ற அழகிய அடி, இன் என்ற உருபு உவமப்பொருளில் வந்ததனால், பஞ்சின் நேர்அடி எனப் பிரிக்கலாகாமை யறிக, இன் தவிர் வழிவந்த சாரியையெனக் கொள்ளின் பஞ்சு(இன்) நேரடி எனப் பிரித்துப் பஞ்சை யொத்த அடியெனக் கொள்ளலாம். கழுநீர் - செங்கழுநீர், தேறல்-தேன், மலர்த்தேன் ஊறிப் பாய்ந்துகொண்டே யிருப்பதால் வயலிற் சேறுலராத நல்ல வளம்பொருந்திய பூந்தராய் என்றும் பொய்யிலா மறையோர்பயில் பூந்தராய் என்றும் இயைக்க.

முள்ளிநாண்முகை மொட்டியல்கோங்கின்
அரும்புதேன்கொள் குரும்பைமூவாமருந்
துள்ளியன்றபைம்பொற் கலசத்தியல் ஒத்தமுலை
வெள்ளிமால்வரை அன்னதோர்மேனியின்
மேவினார்பதி வீமருதண்பொழிற்
புள்ளினந்துயின் மல்கியபூந்தராய் போற்றுதுமே. 4

பண்ணியன்றெழு மென்மொழியாள்பகர்
கோதையேர்திகழ் பைந்தளிர்மேனியோர்
பெண்ணியன்றமொய்ம்பிற் பெருமாற்கிடம் பெய்வளையார்
கண்ணியன்றெழு காவிச்செழுங்கரு
நீலமல்கிய காமருவாவிநற்
புண்ணியருறையும் பதிபூந்தராய் போற்றுதுமே. 5

4. முள்ளி – தாமரை, தாமரைத்தண்டிலுள்ள கேசரங்கள் முள்ளைப் போலக் காணப்படுவதால் முள்ளியெனப்பட்டது. (முளரி – தாமரை) காரணப்பெயர். (காரண இடுகுறிப்பெயரெனக). முகை – காயரும்பு. மொட்டு – முற்றிய அரும்பு. மொட்டு இயல் கோங்கு – மொட்டாகப் பொருந்திய கோங்கு. கோங்கமொட்டு. அரும்பு தேன்கொள் குரும்பை – ஊறும் தேனைக்கொண்ட குரும்பை இல்பொருளுவமை. அரும்புதல் – இங்கு ஊறுதல் என்னும் பொருட்டு. இச்சொல் "கவர்வரும்ப" எனப் பிறபொருளில் வருதலும் காண்க. மூவாமருந்து – மூவாமைக்குக் காரண மான மருந்து. எதிர்மறைப் பெயரெச்சம் – ஏதுப்பொருள் கொண்டது. விமருபொழில் – மலர்கள் பொருந்திய சோலைகளில். புள்ளினம் துயில் மல்கிய – பறவைக் கூட்டங்கள் தூங்குதல் மிகுந்த (பூந்தராய்). தங்களுக்கு வேண்டிய உணவு முதலிய வகைகளெல்லாம் எளிதிற் கிடைத்தலால் கவலையின்றித் தூங்குகின்றன. இதனால் தலத்தின் சிறப்புக் கூறியவாறு. தாமரையரும்பு, கோங்குமொட்டு, தேனூறுகுரும்பை, அமிர்தம்உள் இயன்ற செம்பொற் கலசம்போன்ற தனபாரம் என்பது பல்பொருள் உவமை (தண்டியலங்காரம்.)

5. பண்ணியன்று எழும் – பண்ணின் இசையொடு பொருந்தி வெளிப்படும், மென்மொழியாள் – மெல்லிய மொழியை உடையவள். பெண்டிர் மென்மொழியர் என்பதனை 'மென்மொழிமேவலரின் னரம்புளர' என்னும் திருமுருகாற்றுப் படையாலும் அறிக பகர் – "ஞானப்பூங் கோதையாள்" என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, கோதை– கூந்தலை யும், ஏர்திகழ் – அழகு விளங்குகின்ற. பைந்தளிர்மேனி – பசிய தளிர் போன்ற மேனியையுமுடையவளுமாகிய உமாதேவியார், இயன்ற–கூடிய

வாணிலாமதி போல்நுதலாள்மட
மாழையொண்கணாள் வண்டரளந்நகை
பாணிலாவிய இன்னிசையார்மொழிப் பாவையொடும்
சேணிலாத்திகழ் செஞ்சடையெம்மண்ணல்
சேர்வதுசிகரப் பெருங்கோயில்சூழ்
போணிலாநுழையும் பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 6

காருலாவிய வார்குழலாள்கயற்
கண்ணிளுள்புயற் காலொளிமின்னிடை
வாருலாவிய மென்முலையாள்மலை மாதுடனாய்
நீருலாவிய சென்னியன்மன்னி
நிகரும்நாம முந்நான்குநிகழ்பதி
போருலாவெயில் சூழ்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. 7

மொய்யின் தோளையுடைய சிவபெருமானுக்கு, இன்சாரியை சாவி. செழும் கருநீலம் நீல நிறத்தையுடைய – செங்கழுநீரோடு கூடிய செழிய கரிய நீலோற்பலமலர், "காவியிருங் கருங்குவளை" என்றதும் காண்க. (திருக் கழுமலம் 1) மல்கிய – மிகுந்த. காமரு – அழகிய. (காமர்மருவு) மருஉ. காமம் – வரு, என்ற தொடரின் மருஉ எனக்கொண்டு விரும்பத்தக்க எனப் பொருள்கூறலும் ஆம்.

6. வாணிலா மதிபோல் நுதலாள் – ஒளிபொருந்திய நிலவினை வீசுகிற பிறைச்சந்திரனையொத்த நெற்றியையுடையவளும், மடமாழை ஒண்க(ண்)ணாள் – மாம்பிஞ்சு போன்ற ஒள்ளிய கண்களையுடையவளும், வண்தரளநகை – வளம்பொருந்திய முத்துப்போன்ற பற்களையும், பாண் நிலாவிய – பாட்டின்கண் விளங்குகின்ற, இன் இசைஆர்மொழி – இனிய இசைபோன்ற மொழியையுமுடைய பாவை போன்றவள், மதிநுதலாளும், கண்ணிளுளும், பாவையுமாகிய அம்பிகையென இயையும். சேண் – வானம். வானத்தில் இயங்கும் நிலா – உருபும் பயனும் தொக்க தொகை. போழ் – பிளவு; கூறிடுதல். வட்டமான ஒருபொருளைச் சரிகூறிட்டால் பிறை வடிவு தோன்றுதலின், அதனைப் பிறைக்கு உவமை கூறுவர். "போழிளங்கண்ணியினானை" என்ற அப்பர் வாக்கில் உவமையாகு பெய ராய்ப் பிறையையுணர்த்தலும் காண்க.

7. கார் – மேகம், உலாவிய – போன்ற (உவம வாசகம்) புயல்கால் மின் இடை – முகில் வெளிவிடும் மின்னல் போலும் இடை "அல்வழி யெல்லாம் உறழெனமொழிப" என்ற தொல்காப்பிய (எழுத்து. சூ-ம்) விதிப் படி புயல் + கால் = புயற்கால் என்றாயிற்று. நிகரும் – தமக்குத் தாமே

காசைசேர்குழலாள் கயல்ஏர் தடங்
கண்ணிகாம்பன தோள்கதிர்மென்முலைத்
தேசுசேர்மலை மாதமருந்திரு மார்பகலத்
தீசன்மேவும் இருங்கயிலையெடுத்தானை
அன்றடர்த்தான் இணைச்சேவடி
பூசைசெய்பவர் சேர்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 8

கொங்குசேர்குழ லாள்நிழல்வெண்ணகைக்
கொவ்வைவாய்க்கொடி யேரிடையாள்உமை
பங்குசேர்திருமார்புடையார்படர் தீயுருவாய்
மங்குல்வண்ணனும் மாமலரோனும்
மயங்கநீண்டவர் வான்மிசைவந்தெழு
பொங்குநீரின் மிதந்தநற் பூந்தராய் போற்றுதுமே. 9

யிணை யான, நாமம் முந்நான்கும் – பன்னிரண்டு திருப்பெயர்களும், நிகழ் – (திருப்பிரமபுரம், முதலாக……திருக்கழுமலம் ஈறாக முறைப்படி) வழங்கப்படுகிற. போர் – போர்ப் பொறிகள். உலா – உலவுகின்ற. எயில் – மதில். மதிலில் அமைக்கப்பட்ட பொறிகள் பகைவர் வருவரேல் அவர்களையழித்தற்கு அங்குமிங்கும் திரிவனவாக இருக்கும். போர்ப் பொறிகளைப் போர் என்றது காரிய ஆகுபெயர்.

8. காசை – காயாம்பூ; நீலநிறமுடைமையால் இது குழலுக்கு உவமை கூறப்பட்டது. கயல் ஏர்தடங்கண்ணி – மீனைப்போன்ற அழகிய அகன்ற கண்களையுடையவள். காம்பு அ(ன்)னதோள் கதிர்மென்முலை–மூங்கில் போன்ற தோளையும் கதிர்வீசும் மெல்லிய தனங்களின் ஒளியைபு முடைய. மலைமாது – இமைய அரையன் புதல்வியாகிய அம்பிகை. மார்பு அகலம் – இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அமரும் – தங்கும். மார்பு அகலத்து ஈசன் மேவும். இரும் – பெரிய.

9. கொங்கு – வாசனை. நிழல் – ஒளி. கொவ்வைவாய்–கொவ்வைக் கனி போன்றவாய். கொவ்வை – முதலாகுபெயர் கொடிஏர் இடை – பூங் கொடிபோன்ற இடையுடையவளுமாகிய. உமைபங்குசேர் திருமார்புடை யார் – உமாதேவியார் ஒருபாகம் பொருந்திய சிறந்த மார்பையுடையவர், படர்தீ – படருகின்றதீ. மங்குல்–மேகம். வான்மிசை – ஆகாயத்தின் இடம் வரை. வந்து பரவி - வந்து எழும்பிய. பொங்கும்நீரில் – பொங்கிய ஊழி வெள்ளநீரிலே. மிதந்த நற்பூந்தராய் என்க.

கலவமாமயி லார்இயலாள்கரும்
பன்னமென்மொழி யாள்கதிர்வாள்நுதற்
குலவுபூங்குழ லாள்உமைகூறனை வேறுரையால்
அலவைசொல்லுவார் தேர்அமண் ஆதர்கள்
ஆக்கினான்றனை நண்ணலும்நல்குமநற்
புலவர்தாம்புகழ் பொற்பதி பூந்தராய் போற்றுதுமே. 10

தேம்பல்நுண் ணிடை யாள்செழுஞ்சேலன
கண்ணியோடண் ணல் சேர்விடம்தேன்அமர்
பூம்பொழில்திகழ் பொற்பதிபூந்தராய் போற்றும்என்
றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை
ஞானசம்பந்தன் ஒண்டமிழ்மாலைகொண்
டாம்படிஇவை ஏத்தவல்லார்க்குஅடை யாவினையே. 11

திருச்சிற்றம்பலம்

10. கலவம் - தோகை. மயில்ஆர் - மயில்போன்ற. இயலாள் - சாயலையுடையவள். குலவு பூங்குழலாள் உமை - பூங்குழலையுடையவளாகிய குலாவும் உமை. கூறனை - உமாதேவியாரை ஒருபங்கு உடைய சிவபெருமானை, வேறு உரையால் - மாறுபட்ட சொற்களால். அலவை - தகாத சொற்கள். தேரமண் - தேரர் அமணர்களாகிய (மருஉ.) ஆதர் - பயனற்றவர்கள். அலவை ... ஆக்கினான் - புத்தரும் சமணரும் ஆகிய பயனிலிகளை, அலவை சொல்லுவாராக ஆக்கினவன். முன்வினைப் பயனால் புறமதத்திற் பிறந்து அநன்பயனைச் சிவபெருமானைப் பழித்துரைத்து மேலும் தீவினைக்கே முயல்கின்றனர். அவ்வாறு அவர்கள் செய்வது கன்மவசத்தினால் ஆவதெனினும் அதுவும் சிவன் செயலே என்றுணர்த்துவார், 'ஆக்கினான்' என இறைவன் மேல்வைத்தோதினார். ஆக்கினான்தனை நண்ணலும் நல்கும் ... பூந்தராய் - தன்னையடைந்த அளவில் சிவப்பேற்றை யளிக்கவல்ல (பெருமைவாய்ந்த) பூந்தராய் எனத் தலத்தின் பெருமை கூறினார். கேட்டல், சிந்தித்தல், தெளிதல்களால் நிட்டை கூடுதலுறுவார் எய்தும்பேற்றை அளிக்கவல்லது இத்தலமென்க.

11. தேம்பு நுண்இடை - இளைத்தசிற்றிடை; "தேம்பலஞ் சிற்றிடையீங்கிவள்" எனத் திருக்கோவையாரில் வருதலுங்காண்க. ஓம்பு தன்மையன்-அப்பதியின் பெருமையைப் பாதுகாக்கும் தன்மையையுடையவன். ஒண் தமிழ்மாலை - சிவஞானம் ததும்பும் தமிழ்ப்பாசுரங்களாலாய மாலையாகிய இப்பதிகம். ஒண்மை - அறிவு: சிவஞானம், ஆம்படி இவை ஏத்தவல்லார்க்கு அடையாவினையே-தமக்குப் பயனாகும் வண்ணம் பாசுரங்களாகிய இவற்றைக்கொண்டு துதிக்கவல்லவர்களுக்கு மேல்வரக் கடவனவும் எஞ்சியனவுமாகிய வினைகள் அடைய மாட்டா. வினை - பால் பகா அஃறிணைப் பெயர்.

# 3. திருப் புகலி

## 261 பதிகவரலாறு

இப்பதிகத்து ஒவ்வொரு பாசுரத்திலும் முதலிரண்டடி அம்பிகையின் திருவுருவைச்சிறப்பித்து அவளோடும் உறைவானெனும் பூந்தராயின் பல்வகைச் சிறப்புக்கள் அமைந்த தனிச்சிறப்பு ஈற்றடியில் ஊன்றி உணரத்தக்கது. பன்னிரண்டு திருப்பெயரையுடைய பதி இது எனக் கூறுகிறது. பிரமபுரம் முதல் கழுமலம் ஈறுக வரிசையாற் கூறப்படும் தலப் பெயரடைவு கடைப்பிடித்து வழங்கற்பாற்றென்பதனை "ஒன்றிரண்டொரு மூன்றுறுசேர்" பதிகள் என்ற பாசுரத்தான் ஆணைதந்ததாயும், இப்பதிகத்தே இம்முறையைத் தாம் ஓம்பியதாயும் ஞானசம்பந்தப்பெருமானே அருளிச்செய்கிறார். திருக்கடைக்காப்பில் வரும் "ஓம்புதன்மையன்" என்ற தொடருக்கு இப்பொருளைத் தவிர வேறு பொருள் சிறவாமையும் அறிக.

திருத்தலத்தின் சிறப்பு:—பூம்பொழில்கள் சூழ்ந்தது; போர்க் கருவிகளையுடைய மதில் சூழ்ந்தது; வானவர் போற்றுவது; புண்ணியர் வாழ்வது; பொய்யில்லா மறையோர் வாழ்வது; சிவபூசை செய்பவர் வாழ்வது; நீரின் மிதந்தது எனக் கூறப்படுவது. (பெரிய புராணம். 2176)

### நாலடிமேல்வைப்பு பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இயலிசை எனும்பொரு ளின்திறமாம்
புயல்அன மிடறுடைப் புண்ணியனே
கயல்அன வரிநெடுங் கண்ணியொடும்
அயல்உல கடிதொழ அமர்ந்தவனே
கலன்ஆவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்
நிலன்நாள்தொறும் இன்புற நிறைமதி அருளினனே. 1

1. இயல் இசை எனும் பொருளின் திறமாம் புண்ணியனே – இயற்றமிழ் இசைத்தமிழ் (நாடகத்தமிழ்) என்னும் இவற்றில் கூறும் பொருளின் பயனாகிய புண்ணிய மூர்த்தியே. புயல் அனமிடறு உடைப் புண்ணியனே – முகில்போன்ற கரிய கழுத்தை உடைய புண்ணிய மூர்த்தியே.

நிலையுறும் இடர்நிலை யாதவண்ணம்
இலையுறு மலர்கள்கொண் டேத்துதும்யாம்
மலையினில் அரிவையை வெருவவன்றோல்
அலைவரு மதகரி யுரித்தவனே
இமையோர்கள்நின் தாள்தொழ எழில்திகழ் [பொழிற்புகலி
உமையாளொடு மன்னினை உயர்திரு வடியிணையே.

கலன் ஆவ்து வெண்டலை – உமக்கு அணிகலமாவது நகுவெள்தலையாம். அத்தகைய அடிகளீரே! நிலன் நாள்தொறும் இன்புற நிறைமதி அருளினனே – நில உலகத்தில் உள்ளார் நாடோறும் இன்பமடையும்படி நிறைந்த அபரஞான பரஞானங்களை அடியேனுக்கு அருளிச் செய்தவ ராவீர்.

இயல் இசை எனவே உபலக்கணத்தால் நாடகத் தமிழும் கொள்ளப்படும். ''கற்றல் கேட்டல் உடையார்'' என்புழிப்போல முத் தமிழ் நூல்களை யறிவதின் பயன் – சிவனே பதியென்றுணர்ந்து வீடுபேறு எய்தலாம். அல்லாத வழி அந்நூல்களை யறிவதாற் பயனில்லையென்பது கருத்து. இதனை ''மந்திபோல் திரிந்து ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன் அறிகிலா அந்தகர்'' எனப் பிறிதோரிடத்து அருளிச் செய்ததலையும் காண்க. கலனாவது வெள்தலை யென்பதற்கு உண்கலமாவது பிரமகபாலம் என உரைக்கினும் அமையும். 'அமர்ந்தவனே' விளி. அமர்ந்தவனே நிறைமதி யருளினனே – அமர்ந்தவராகிய நீரே எனக்கு நிறைமதி யருளினீராவீர். இடவழுவமைதி; இவ்வாறு கூறுவதே பின்வரும் பாசுரங்களுக்கு ஒப்பக் கூறுவதாகும். திருஞானசம்பந்தர் பெற்ற ஞானம் உலகம் இன்புறற் பயனைவிளைத்தது. மதி – இங்கு அறிவின்மேல் நின்றது. இனி, அமர்ந் தவனே, நிறைமதி யருளினவனே என்பதற்கு அமர்ந்தவன் எவனோ அவனே எனக்கு நிறைமதி யருளினவனுமாவான் என்றுரைத்தலுமொன்று.

2. இப்பாட்டிற்கு, மதகரியுரித்தவனே...புகலி மன்னினை நிலையுறும் இடர் நிலையாதவண்ணம் இலையுறுமலர்கள் கொண்டு (நின்) உயர் திருவடி யிணையை ஏத்துதும் யாம் – எனப் பொருள்கோள் கொள்க. நிலையுறும் இடர் – (நீக்க முடியாமையால்) நிலைத்துள்ள துன்பங்கள். நிலையாத வண்ணம் – நிலையாதபடி. இலையுறும் மலர்கள்கொண்டு – பத்திர புட்பங் களால். ஏத்துதும் – (துதித்து) வழிபடுவோம். மலையினில் அரிவையை வெருவ – இமயமலையில் (அவதரித்த) உமாதேவியாரை அஞ்சுவிக்க. வல்தோல் – வலியதோலையுடைய. மதகரி – மதங்கொண்ட யானையை உரித்தவனே. வெருவ என்ற சொல்லில் பிறவினை விகுதி தொக்கது.

பாடினை அருமறை வரன்முறையால்
ஆடினை காணமுன் அருவனத்திற்
சாடினை காலனைத் தயங்கொளிசேர்
நீடுவெண் பிறைமுடி நின்மலனே
நினையேஅடி யார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்
தனையேயிட மேவினை தவநெறி அருள்எமக்கே. 3

நிழல்திகழ் மழுவினை யானையின்தோல்
அழல்திகழ் மேனியில் அணிந்தவனே
கழல்திகழ் சிலம்பொலி அலம்பநல்ல
முழவொடும் அருநடம் முயற்றினனே
முடிமேன்மதி சூடினை முருகமர் பொழிற்புகலி
அடியாரவர் ஏத்துற அழகொடும் இருந்தவனே 4

3. வரன்முறையால் – இசையிலக்கண முறைப்படி; பாடினை அருமறை – அரிய வேதங்களைப் பாடியருளினீர். அருவனத்தில் – அரிய தாருக வனத்தில். காண – (முனிவர் மகளிர்) காணும்படி, ஆடினை – ஆடியருளினீர். பெருமான் தானே வலியச்சென்று அருள்புரிந்த இடமாதலின் அதன் அருமைப்பாடு தோன்ற அருவனம் என்றார். காண என்ற வினைக்கு வினை முதல் வருவித்து உரைக்கப்பட்டது. தக்கன் சாபத்தினால் உடல் குறைந்து அருகி இருந்த பிறை. இறைவனைச் சரணம் புகுந்து வளருந்தன்மை பெற்று அழியாதிருந்ததனால் நீடு வெண்பிறை யெனப்பட்டது. நின்மலன்– இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் – தன்னைச்சார்ந்த ஆன்மாக்களின் மலத்தை யொழிப்பவனென்றுமாம். புகலிந்நகர்; இசையினிமைப் பொருட்டு நகரம் மிக்கது. இடம்மேவினை – இடமாக விரும்பியருளினீர், நின் மலனே பாடினை, ஆடினை, சாடினை, மேவினை எமக்கு அருள் எனக் கூட்டுக. ஆடினை முதல் நான்கும் முன்னிலைவினையாலணையும் பெயர்; அண்மை விளியாய் நின்றன. நினையே அடியார் தொழ என்ற தொடரில், ஓகாரம் பிரிநிலை, "மற்றத்தெய்வங்கள் வேதனைப்படும், இறக்கும், பிறக்கும், வினையும் செய்யும், ஆதலால் இவை இலாதான் அறிந்தருள் செய்வ னன்றே" என்ற பிரமாணத்தால். முன்னிலை வினைஎனலே நன்று.

4. நிழல் திகழ் மழுவினை – ஒளிவிளங்குகின்ற மழுப்படை உடையீர்! அழல் திகழ்மேனி – அக்கினியாய் விளங்குகின்ற உடம்பு. கழல் திகழ், சிலம்பு ஒலி அலம்ப…அரும் நடம் உயற்றினனே–வீரகண்டை யின் ஒலியும், விளங்குகின்ற சிலம்பின் ஒலியும் (கலந்து) ஆரவாரிக்க அரிய நடனம் புரிந்தருளிய பெருமானே. முருகு அமர்பொழில் – வாசனை பொருந்திய சோலை. அடியார் அவர் ஏத்துற – 'அவர்' பகுதிப்பொருள் விகுதி. வணங்க உறு துணை. முயற்றினன் எனல் சிறந்தது.

கருமையின் ஒளிர்கடல் நஞ்சம் உண்ட
உரிமையின் உலகுயிர் அளித்தநின்றன்
பெருமையை நிலத்தவர் பேசின்அல்லால்
அருமையில் அளப்பரி தாயவனே
அரவேரிடை யாளொடும் அலைகடன் மலிபுகலிப்
பொருள்சேர்தர நாள்தொறும் புவிமிசைப் பொலிந்
[தவனே 5

அடையரி மாவொடு வேங்கையின்றோல்
புடைபட அரைமிசைப் புனைந்தவனே
படையுடை நெடுமதிற் பரிசளித்த
விடையுடைக் கொடிமல்கு வேதியனே
விகிர்தாபரமா நின்னை விண்ணவர் தொழப்புகலித்
தகுவாய்மட மாதொடுந் தாள்பணிந் தவர்தமக்கே. 6

5. கருமையின் ஒளிர் கடல் நஞ்சம் - கருமையினால் ஒளிர்கின்ற நஞ்சம், கடலில் உண்டாகியநஞ்சம். நஞ்சம் உண்ட உரிமையின் உலகத்து உயிர் அளித்து நின்றனன்.

பெருமை...ஆயவனே - நிலத்தவர், பூமியிலுள்ளவர்கள் உன் பெருமையைப் பருப்பொருட்டாக ஒருவாறு பேசினாற் பேசலாமே தவிர, அருமையான எவ்வித ஆராய்ச்சித்திறத்தினாலும் அளந்தறியப்படாதவனே. அருமையில் - சிறப்புஉவமை விகாரத்தால் தொக்கது. அரவு ஏர் இடையாள் - பாம்புபோன்ற இடையையுடைய உமாதேவியார். கடல்மலிபுகலி- கடல்வளம் நாடோறும் மிகுந்த திருப்புகலியின் கண். புவிமிசைப் பொருள் சேர்தரப் பொலிந்தவனே - இப் பூமியின்கண் நாள்தோறும் அறம்பொருள் இன்பம் வீடு எனனும் நால்வகைப் பொருள்களும் சேரும் படி. பொலிந்தவனே.

6. அரிமாவோடு - சிங்கத்தின் தோலோடு, வேங்கையின்தோல் புடைபட - பக்கம்பொருந்தும்படி, அரைமிசைப் புனைந்தவனே - இடுப்பில் அணிந்தருளியவரே. படையுடை நெடுமதில் - சேனைகளையுடைய நெடிய திரிபுரம். பரிசு அழித்த - திறன்களைத் தொலைத்த. விகிர்தா - வேறுபட்டவனே. பரமா - மேலானவனே. நின்னை...தாள் பணிந்தவர் தமக்கே - நின்னை விண்ணவர்தொழத் தாள் பணிந்தவர்களாகிய அவர் களுக்குப் புகலியின்கண் அம்பிகை சமேதராய்க் காட்சி கொடுக்கத்தக்க வராகி யிருப்பீர்.

அடியவர் தொழுதெழ அமரரேத்தச்
செடியவல் வினைபல தீர்ப்பவனே
துடியிடை அகல்அல்குல் தூமொழியைப்
பொடியணி மார்புறப் புல்கினனே
புண்ணியா புனிதா புகர்ஏற்றினை புகலிந்நகர்
நண்ணினாய் கழல்ஏத்திட நண்ணகிலா வினையே. 7

இரவொடு பகலதாம் எம்மான்உன்னைப்
பரவுதல் ஒழிகிலேன் வழியடியேன்
குரவிரி நறுங்கொன்றை கொண்டணிந்த
அரவிரி சடைமுடி ஆண்டகையே
அனமென்னடை யாளொடும் அதிர்கடல் இலங்கை
[மன்னை
இனமார்தரு தோளடர்த் திருந்தனை புகலியுளே 8

உருகிட உவகைதந் துடலினுள்ளால்
பருகிடும் அமுதன பண்பினனே
பொருகடல் வண்ணனும் பூவுளானும்
பெருகிடும் அருள்எனப் பிறங்கெரியாய்
உயர்ந்தாய்இனி நீஎனை ஒண்மலரடி யிணைக்கீழ்
வயந்தாங் குறநல் கிடுமதிற் புகலிமனே. 9

7. செடிய – துன்பம் தருவனவாகிய; வல்வினை – உயிர்க்கொலை, செய்ந்நன்றி மறத்தல், சைவநிந்தனை முதலிய பெரும் பாவங்கள். துடியிடை....தூமொழி அன்மொழித்தொகை; பன்மொழித்தொடர். தூய்மையான மொழியையுடைய அம்பிகை. வினை நண்ணகிலா – கன்மங்கள் அடையமாட்டா. ஆகவே இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் முறையே எய்திச் சிவப் பேறு அடைவர் என்க.

8. இரவு ஒருபகல் அது ஆம் எம்மான். குரா – குராமலரும், விரிநறும் கொன்றை – விரிந்த நறுமணமுடைய கொன்றை மலரும். இனம் ஆர்தருதோள் – கூட்டமாகிய இருபது தோள்களையும். குரா – குரஎன நின்றது. கடையில் அ(ன்)னம் மெல் நடையாளொடும் புகலியுள் இருந்தனையே என முடிக்க.

9. உருகிட உவகை தந்து உடலின் உள்ளால் பருகிடும் அமுது அ(ன்)ன பண்பினனே – என்பதனை "அனைத்து எலும்பு உள்நெக

கையினில் உண்பவர் கணிகைநோன்பர்
செய்வன தவமலாச் செதுமதியார்
பொய்யவர் உரைகளைப் பொருளெனாத
மெய்யவர் அடிதொழ விரும்பினனே
வியந்தாய்வெள் ளேற்றினை விண்ணவர் தொழுபுகலி
உயர்ந்தார்பெருங் கோயிலுள் ஒருங்குடன்
[இருந்தவனே. 10

புண்ணியர் தொழுதெழு புகலிநகர்
விண்ணவர் அடிதொழ விளங்கினனை
நண்ணிய ஞானசம் பந்தன்வாய்மை
பண்ணிய அருந்தமிழ் பத்தும்வல்லார்
நடலையவை இன்றிப்போய் நண்ணுவர் சிவனுலகம்
இடராயின இன்றித்தாம் எய்துவர் தவநெறியே 11.

திருச்சிற்றம்பலம்

ஆநந்தத் தேன்சொரியும் குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என்ற திருவாசகத்தோடு ஒப்பிடுக. கடைசி இரண்டு அடிக்கும், திருமாலும் பிரமனும் (தம்முட்கொண்ட) பெருகிய செருக்கு எவ்வளவு பெரியதாய் உயர்ந்திருந்ததோ அவ்வளவு பெரியதாகிய ஒளிப்பிழம்பாய் உயர்ந்தருளியவரே! வயந்து - விரும்பி. மலரடியிணைக்கீழ் ஆங்குற. நல்கிடு - அருள்புரிவீராக.

10. கணிகை நோன்பர் - போலியான நோன்பு நோற்பவர். செய்வன தவமலாச் செதுமதியர் - செய்வன அனைத்தும் தவம் அல்லாததாகப் பெற்ற அற்ப மதியையுடையவர்கள்; பொருள் எனாத - உண்மையென்று கொள்ளாத; "இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார்" என்ற திருக்குறளில் பொருள் - உண்மை யென்னும் பொருளில் வருதல் காண்க.

11. நடலையவை - பிறவித் துன்பங்கள் (அவை - பகுதிப்பொருள் விகுதி) வைப்பு ஆகிய இரண்டடிக்கும் - அருந்தமிழ்பத்தும் வல்லார் பக்குவராயின் சிவனுலகம் நண்ணுவர்; அபக்குவராயின் தவநெறி யெய்துவர். அதன் பயனாகச் சிவனுலகமும் நண்ணுவர் என அடிமாற்றி யுரைப்பினுமாம்.

திருவாவடுதுறையில் :



கோயில் முன்பார்வை.



கோயில் உட்பார்வை.

திருவாவடுதுறையில் :



உலவாக்கிழிபெற்றது.

# 4 திருவாவடுதுறை

## 262 பதிகவரலாறு

ஆவடுதுறை எந்தையார் அடித்தலங்களே அந்தமில்பொருள் என்று எண்ணித் திருக்கோயிலை அடைந்து, 'ஈயநிதி இலேன் உன் அடி அல்லது ஒன்று அறியேன்' என்று பேரருள் வினவிய செந்தமிழ் இத்திருப்பதிகம்.

நாலடி மேல்வைப்பு. பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 1

வாழினும் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை அரனே. 2

1. இடரினும் – துன்பத்திலும்; தளரினும் – தளர்ச்சியிலும்; நோய் தொடரினும் - வினைத் தொடர்ச்சியிலும், உனகழல் தொழுது எழுவேன் – உம்முடைய திருவடிகளைத் தொழுது எழுவேன். இங்குத் தளர்ந்தாலும், நோய் தொடர்ந்தாலும்-எனக்கூறின் இடர் என்பதோடு ஒத்து, தளர்தொடர் என்பன முதனிலைத் தொழிற்பெயராய் நின்றன.

2. வீழினும் உனகழல் விடுவேன்அலேன் என்பது – 'வழுக்கி வீழினும் திருப்பெயரல்லால் மற்று நானறியேன் மறுமாற்றம்' தாழ் – தங்குகின்ற; "வெள்ளம் தாழ்விரி சடையாய்" என்ற திருவாசகத்திலும்

நனவினும் கனவினும் நம்பாஉன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனல்எரி அனல்புல்கு கையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 3

தும்மலொ டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்றுதென்நாக்
கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதிள் எரிஎழ முனிந்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 4

கையது வீழினும் கழிவுறினும்
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 5

இப்பொருளில் வருகிறது. தடம் புனல் – பரவிய புனல். போழ் இள மதி – இங்கு இத்திருமுறை இரண்டாம் பதிகம் – 6 ஆம் பாசுரத்தில் உரைத்தது கொள்க.

3. மூன்றும் அடிக்குப் புனலையும் விரிந்த நறுமணமுடைய கொன்றைப் பூவையும் அணிந்த என்க. கனல் எரி அனல் புல்கு கையவனே– சுடுகின்ற பற்றி யெரிவதான நெருப்புத் தங்கிய திருக்கரங்களையுடையவனே.

4. தும்மல் – அடிக்கடி தும்முவதாகிய ஒரு நோய். "தும்மல்இருமல் தொடர்ந்த போதினும்" (இத்திருமுறை. பதிகம் 22. பாசுரம் 6.) என்பதிலும் காண்க. 'கணை ஒன்றினால் மும்மதிள் எரியெழ முனிந்தவனே –' என்பதில் அம்பு ஒன்று; எரிந்த மதில் மூன்று என ஓர் நயம் வந்தவாறு. "ஈரம்புகண்டிலம் ஏகம்பர்தம் கையில் ஓர் அம்பே முப்புரம் உந்தீபற" என்ற திருவாசகத்திலும் காண்க.

5 கையது – கையிலுள்ள பொருள். கொய் அணி நறுமலர் குலாய சென்னி – கொய்யப்பட்ட அழகிய நறிய மலர்கள் விளங்கும் தலை. மையணி மிடறு – கருமை பொருந்திய கழுத்து.

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாய் உன்னடியலால் ஏத்தாதென்நா
ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின்னருள் ஆவடுதுறை அரனே. 6

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் அடியலால் அரற்றாதென்நா
ஒப்புடை ஒருவனை உருவழிய
அப்படி அழலெழ விழித்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின்னருள் ஆவடுதுறை யரனே. 7

பேரிடர் பெருகிஓர் பிணிவரினும்
சீருடைக் கழல்அலால் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி யிராவணனை
ஆரிடர் படவரை அடர்த்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 8

6. ஓர் வெருவு உறினும் – ஓர் அச்சம் உண்டானாலும்: வெருவு வெருவுதல்; முதனிலைத் தொழிற்பெயர். வெரு:- முதனிலை.

7. ஒப்புடை ஒருவனை – அழகில் தனக்குத் தானே யொப்பாகிய மன்மதனை. அப்படி அழல் எழ விழித்தவனே என்ற தொடரில் அப்படி யென்ற சொல் – வியப்புப்பொருள் தந்தது. “ அப்படி நல்ல நல்ல. அவை நல்ல நல்ல ” (கோளறு திருப்பதிகம்) என்புழிப்போல.

8. இராவணனை ஆரிடர் படவரை அடர்த்தவனே – பொறுத்தற்கரிய துன்பமுறும்படி கைலை மலையின்கீழ் அடர்த்தருளியவரே. ஆரிடர் – அருமை + இடர்.

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் நின்
ஒண்மல ரடியலால் உரையாதென்நாக்
கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளால் ஆவடுதுறை யரனே. 9

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன்னடி அரற்றுதெந்நாப்
புத்தரும் சமணரும் புறன் உரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை அரனே. 10

அலைபுனல் ஆவடுதுறை அமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலமிகு ஞானசம்பந்தன் சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் ஏறுவர் நிலமிசை நிலையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

9. உண்ணினும் பசிப்பினும் நின்மலர் அடி அலால் உரையாது என்நா – "நலம் தீங்கினும் உன்னை மறந்தறியேன்" என்பதனை நினை

10. பித்து – பித்தம். புத்தரும் சமணரும் புறன் உரைக்கப் பத்தர்கட் கருள் செய்து பயின்றவனே – இவ்வடிகளில் வரும் உரைக்க என்னும் செய என் எச்சம், காரண, காரிய, உடனிகழ்ச்சி யல்லாத பொருளின் கண் வந்தது "வாவி தொறும் செங்கமலம் முகங்காட்டச் செங்குமுதம் வாய்கள் காட்ட" என்புழிப்போல.

11. இலை நுனை வேற்படை – இலைபோன்ற நுனியையுடைய திரிசூலம்; "இலைமலிந்த மூவிலைய சூலத்தினனை" என்புழியும் (திருமுறை 7) காண்க. 'விலையுடை அருந்தமிழ்மாலை' இப்பதிகம். தந்தையார் பொருட்டுப் பொன்பெறுவது. ஈவது ஒன்று எமக்கு இல்லையேல் எனப் பாடினமையால் இங்ஙனம் விலையுடை யருந்தமிழ்மாலை எனப்பட்டது.

# 5 திருப் பூந்தராய்

## 263 பதிகவரலாறு

திருப்புகலியிலிருந்து திருத்தோணியப்பரைத் தொழுது பாடிய விகற்பச் செய்யுள்மாலைகளுள் ஒன்று இத்திருப்பதிகம்.

ஈரடிமேல்வைப்பு. பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்க செம்மை விமலன் வியன்கழல்
சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி
நன்ற தாகிய நம்பன் தானே. 1

புள்ளி னம்புகழ் போற்றிய பூந்தராய்
வெள்ளம் தாங்கு விகிர்தன் அடிதொழ
ஞாலத் தில்உயர் வார் உள்கும் நன்னெறி
மூலம் ஆய முதலவன் தானே. 2

வேந்த ராய் உலகாள விருப்புறின்
பூந்த ராய்நகர் மேயவன் பொற்கழல்
நீதி யால்நினைந் தேத்தி உள்கிடச்
சாதியா வினை யான தானே 3

1. தக்கன் வேள்வி தகர்த்தவனாகிய பூந்தராய் நிமலனது பெருமை பொருந்திய திருவடிகளை என முதலிரண்டடிக்குக் கூட்டியுரைக்க. மிக்க செம்மை – மேலானவீட்டு நெறியை அருளும். விமலன் – அமலன். தன்னைச்சார்ந்த உயிர்களின் மலத்தை யொழிப்பவன் என்றும், இயல் பாகவே பாசங்களினின்று நீங்கியவன் என்றும் பொருள்.

2. புள்ளினம் புகழ்போற்றிய பூந்தராய் – அடியார்கள் பூந்தராயைப் போற்றிப் புகழ்ந்து பாராட்டலைக் கேட்டிருந்த கிளி, பூவை முதலிய பறவையினங்களும் புகழைப் போற்றுவன ஆயின. "தெள்ளுவாய்மைத் திருப்பதிகங்கள் பைங்கிள்ளை பாடுவ கேட்பன பூவையே"

3. மாந்தரீர் நீங்கள் அரசராகி! உலகை ஆளவிரும்பினால், பூந்தராய் நகர் மேவியவன் பொன்னார் திருவடியே தரும். பின்னும் அத்திருவடியை ஆசான் உணர்த்திய முறைப்படி நினைந்து துதிப்பின் நிட்டை கூட வினை

பூசு ரர்தொழு தேத்திய பூந்தராய்
ஈசன் சேவடி யேத்தி யிறைஞ்சிடச்
சிந்தை நோயவை தீர நல்கிடும்
இந்து வார்சடை யெம் இறையே. 4

பொலிந்த என்பணி மேனியன் பூந்தராய்
மலிந்த புந்தியர் ஆகி வணங்கிட
நுந்தம் மேல்வினையோட வீடுசெய்
எந்தை யாயஎம் மீசன் தானே. 5

பூதம் சூழப் பொலிந்தவன் பூந்தராய்
நாதன் சேவடி நாளும் நவின்றிட
நல்கும் நாள்தொறும் இன்பம் நளிர்புனல்
பில்கு வார்சடைப் பிஞ்ஞகனே. 6

யாயினவை தம் தொழிலைச்செய்யா. ஆகவே பிறவியறும்; வீடு பேறு உண்டாம்; என்பதே வைப்பு அடிகளின் பொருள். நினைந்தேத்தல் - "மனத்தொடு வாய்மை மொழிதல்" என்புழிப் போலக்கொள்க. ஆன - சொல்லுருபு. தான், ஏ; இரண்டும் ஈற்றசை. வைப்பு முதலடியில் உள்கிட என்பதற்குச் செயப்படு பொருள் - பொற்கழல். இங்ஙனம் இருவாக்கியங்களாகக் கொள்ளாத இடத்து வினை முடிவு காண்டல் அரிது.

4. பூந்தராய் மேவிய ஈசன் மலரடிகளை யேத்தி வணங்கச் சந்திரனை யணிந்த நெடிய சடையை யுடையவனாகிய அவ்விறைவன் மனக்கவலை கள் மாற அருள்புரிவன். நோயவை என்பதில் அவை பகுதிப்பொருள் விகுதி. நல்கிடும் - அருள் புரிவான்.

5. பந்தி - மனம். மலிந்த புந்தியராதல் - உளன் பெருங்களன் செய்தல். நுந்தம் - உங்கள். மேல் - காலப்பொருளில், முற்பிறப்புக்களில் ஈட்டி எஞ்சிய சஞ்சிதவினையையும்; இடப்பொருளில், இனி ஈட்டும் வினையாகிய ஆகாமிய வினையையும் குறிக்கும். வினையோட வீடுசெய் எந்தை...ஈசன்தானே - சிவபெருமான் ஒருவனே நமக்கு உற்ற துணை யாவன் என அவாய்நிலை வருவிக்க.

6. நளிர்புனல் பில்குவார் சடைப்பிஞ்ஞகன் - குளிர்ந்த கங்கை நீர் சொட்டும் நெடிய சடையில் மயிர்ப்பீலியை யணிந்தவனாகிய சிவ பெருமான்.

புற்றின் நாகம் அணிந்தவன் பூந்தராய்
பற்றிவாழும் பரமனைப் பாடிடப்
பாவம் ஆயின தீரப் பணித்திடுஞ்
சேவ தேறிய செல்வன் தானே. 7

போத கத்துரி போர்த்தவன் பூந்தராய்
காத லித்தான் கழல்விரல் ஒன்றினால்
அரக்கன் ஆற்றல் அழித்தவ னுக்கருள்
பெருக்கி நின்றஎம் பிஞ்ஞகனே. 8

மத்தம் ஆன இருவர் மருவொணா
அத்தன் ஆனவன் மேவிய பூந்தராய்
ஆள தாக அடைந்துய்ம்மின் நும்வினை
மாளு மாறருள் செய்யுந் தானே. 9

பொருத்த மில்சமண் சாக்கியப் பொய்கடிந்
திருத்தல் செய்தபிரான் இமை யோர்தொழப்
பூந்த ராய்நகர் கோயில் கொண்டுகை
ஏந்து மான்மறி யெம்இ றையே 10

7. சே அது ஏறிய செல்வன் - விடையேறிய சிவபெருமான். பரமனைப்பாட - பரமனாகிய தன்னை நாம்பாட. பாவமாயின தீரப்பணித்திடும் - நம்மைப் பற்றியிருக்கும் பாவங்களானவை பற்று விட்டொழிய ஆணைதருவான்; அது பகுதிப்பொருள் விகுதி. பரமன் - ''யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்'' (திருவாசகம்). தீர்தல் - பற்றுவிடல். தீர்தலும் தீர்த்தலும் பற்றுவிடற் பொருள.''

8. போதகம் - யானை. பூந்தராய் காதலித்தான் - திருப்பூந்தராயை இருப்பிடமாக விரும்பினவன். அரக்கன் ஆற்றல் அழித்து அவனுக்கே மீள அருளும் பெருக்கி நின்ற கடவுளே பூந்தராய் காதலித்தவன்.

9. மத்தம் - மயக்கம்; செருக்கு. இருவர் - தொகைக்குறிப்பு. நீங்கள் ஆள் (அது) ஆக அடையுங்கள். அவன்தானே வந்து உம்மைத் தலையளித்து உம்வினை மாறுமாறு அருள்செய்யும்.

10. பொருத்தம் இல் சமண் சாக்கியப் பொய்கடிந்து - அளவை நூலுக்குப் பொருததமில்லாத சமணநூலும் சாக்கியநூலும் சொல்லும் பொருளை நீக்கி. இமையோர் தொழ இருத்தல் செய்த பிரான் - இமை

புந்தி யான்மிக நல்லவர் பூந்தராய்
அந்தம் இல்எம் அடிகளை ஞானசம்பந்
பந்தன் மாலை கொண் டேத்தி வாழும்நும்
பந்த மார்வினை பாறிடுமே. 11

திருச்சிற்றம்பலம்

யோர் தொழ இருந்தபிரான். கைமான்மறி ஏந்தும் எம் இறை - அவனே கையில் மான்மறியேந்தும் எம் இறை. கைஏந்தும் மான் மறி எந்தை - இலாத வெண் கோவணத்தான் என்பதுபோல நின்றது.

11. எம் அடிகளை ஞானசம்பந்தன் மாலைகொண்டேத்தி வாழ்வோம். அதனால் ஒளிபுக்க இடத்தில் இருள் தானாக நீங்குதல்போல நம்மைப் பந்தித்து நின்ற பழவினைகள் மாறிவிடும். அந்தம்இல் அடிகள் - முடிவில்லாத எம்கடவுள்.

திங்கட் கொழுந்தொடு பொங்கரவு திளைக்கும்
கங்கைப் பேரியாற்றுக் கடுவரற் கலுழியின்
இதழியின் செம்பொன் இருகரை சிதறிப்
புதலெருக்கு மலர்த்தும் புரிபுன் சடையோன்
திருவருள் பெற்ற இருபிறப் பாளன்
முத்தீ வேள்வி நான்மறை வளர
ஐவேள் வுயர்த்த அறுதொழி லாளன்
ஏழிசை யாழை எண்டிசை அறியத்
துண்டப் படுத்த தண்டமிழ் விரகன்
காழி நாடன் கவுணியர் தலைவன்
மாழை நோக்கி மலைமகள் புதல்வன்
திருந்திய பாடல் விரும்பினர்க் கல்லது
கடுந்துய ருட்புகக் கைவிளிக் கும்மிந்
நெடும்பிற விக்கடல் நீந்துவ தரிதே.

—மும்மணிக்கோவை. 1

திருக்கொள்ளம்பூதூரில் :



வெள்ளங்கடந்தது.

# 6 திருக்கொள்ளம்பூதூர்

## 264 பதிகவரலாறு

திருக்கொள்ளம் பூதூரைப்பணியச் சென்றூர். ஆற்றுவெள்ளம் பெருகி, ஆள்இயங்கவும் ஓடக்கோல் நிலைக்கவும் இயலாவாறு ஓடிற்று. நீர்வாழ்நர் தம்தொழிலைத்தவிர்ந்து போயினர். காவலஞர் ஓடத்தின் கட்டினை அவிழ்த்தார். திருத்தொண்டர்களை ஏற்றிஞர். நா வலமே கோலாகத்தாமும் அதன்மேல் நின்று பாடியருளியது இத்திருப்பதிகம்.

ஈரடிமேல்வைப்பு பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கொட்ட மேகமழுங் கொள்ளம் பூதூர்
நட்டம் ஆடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 1

கோட்ட கக்கழனிக் கொள்ளம் பூதூர்
நாட்ட கத்துறை நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 2

1. கொட்டம் - வாசனை. நம்பனை உள்க செல்ல உந்துக. சிவபெருமானை நாங்கள் தியானிப்பதனுல் அதன்பயனுக இந்த ஓடமானது ஆற்றைக்கடந்துசெல்லத் தனக்குத்தானே தள்ளப்படுவதாக. ஆண்டவனே! அகமும் உம்மைத் தொழுதுகொண்டிருக்கும். அகத்திலும் அன்றிப் புறத்திலும் கண்டு தொழுவதற்கு அருள்புரிய வேண்டும். அவ்வருள் புரிதற்கு முன் இவ்வோடம் வந்தணையும் படியாகத் திருவருள் புரியவேண்டும் என விரும்பினுர். சிந்தையார், சிந்திக்கும் அடியார் எனலும் ஆம்.

2. கோட்டகம் - வயலின் புறத்தே நீர்தேங்கி நிற்கும் இடம். கொள்ளம் பூதூரைச் சேர்ந்த நாடு - கொள்ளம் பூதூர் நாடு.

குலையினார் தெங்குசூழ் கொள்ளம் பூதூர்
விலையி லாட்கொண்ட விகிர்தனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 3

குவளை கண்மலருங் கொள்ளம் பூதூர்த்
தவள நீறணி தலைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 4

கொன்றைபொன் சொரியுங் கொள்ளம் பூதூர்
நின்ற புன்சடை நிமலனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 5

ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஆடல் பேணிய அடிகளை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 6

3. குலையின் ஆர்தெங்கு - குலையினால் நிறைந்த தென்னை. விலையில் ஆட்கொண்ட விகிர்தன் - விலைகொடுத்துப் பெற்ற பொருளைப் போல் என்னை ஆட்கொண்டருளியவன். அதாவது "இருந்து என்னை ஆண்டு கொள் விற்றுக்கொள் ஒற்றி வை யென்னின் அல்லால் விருந்தினனே விடுதி கண்டாய்" என்றபடியாம். ஆகவே "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றபடி தன்வயமிழந்து கூறின படியாம்.

4. குவளைகள், கண்களைப்போல மலரும் கொள்ளம்பூதூரில் வெண்மையான நீறுபூசிய தலைவன்.

5. கொன்றை மரங்கள் மஞ்சள் நிறமான மலர்களையுதிர்ப்பது பொன்சொரிவது போற் காணப்படுகின்றது.

6. பதிகம் முற்றுப்பெறு முன்னமே ஓடம் கொள்ளம் பூதூரை யடைந்து விட்டதாதலால் 'ஓடம் வந்தணையும் கொள்ளம் பூதூர்' என்று அருளினார்.

ஆறுவந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 7

குரக்கினம் பயிலுங் கொள்ளம்பூதூர்
அரக்கனைச் செற்ற ஆதியை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தையார் தொழ
நல்கு மாறருள் நம்பனே. 8

பருவரால் உகளுங் கொள்ளம்பூதூர்
இருவர் காண்பரி யான்கழ லுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 9

நீரகக் கழனிக் கொள்ளம் பூதூர்த்
தேரமண்செற்ற செல்வனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 10

---

7. ஆறுவந்தணையும் கொள்ளம் பூதூர் என்று பாடப்பட்டது. இவ்வாறே மயிலாப்பூரில் அங்கம் பூம்பாவையானபோது பதிகம் முற்றுப் பெறுமுன்னமே பூம்பாவை வெளிப்பட்டமையையும் அறிக. (பெரிய புராணம்.)

8. குரக்கினம் - குரங்குக் கூட்டம். சிலப்பதிகாரம் போன்ற தொடர். நிலைமொழி மெல்லெழுத்து வல்லெழுத்தாயிற்று. செற்ற - கோபித்த. ஆதிமுதல்வன்.

9. பருவரால் - பருத்த வரால் மீன்கள். உகளும் - துள்ளும்.

10. நீர் அகம் - நீரைத்தன்னிடத்தே உடைய. நீரகக்கழனிஎன்றதால் கொள்ளம் பூதூரின் நீர்வளம் நிலவளம் இரண்டையும் புலப்படுத்தினர். தேர் அமண் - தேரரும் அமணரும், தேரர் - சாக்கியர், அமணர் - சமணர் உம்மைத்தொகை.

கொன்றைசேர் சடையான் கொள்ளம்பூதூர்
நன்று காழியுள் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

11. நன்று காழி - புண்ணியம் பொருந்திய காழி. ஞானசம் பந்தன் இன்று சொன்ன பாடல்களைக்கொண்டு, இன்னும் பிற்பட்ட பல்லாயிர ஆண்டுகளிற் கூறுவாரேனும், என்றென்றைக்கும் தமக்கு வந்த ஆபத்தினின்றும் நீங்கி வானவரோடு இருப்பார்.

அரசினைக் கடகரி யதுபட உரித்த
படர்சடைக் கடவுள் தன் திருவருள் அதனாற் பிறந்தது
கழுமலம் என்னுங் கடிநக ரதுவே வளர்ந்தது
தேங்கமழ் வாவிச் சிலம்பரை யன்பெறு
பூங்குழல் மாதிடு போனகமுண்டே பெற்றது
குழகனைப் பாடிக் கோலக்காப் புக்கு
அழகுடைச் செம்பொற் றாளம்அவையே தீர்த்தது
தாதமர் மருகற் சடையனைப் பாடிப்
பேதுறு பெண்ணின் கணவனை விடமே அடைத்தது
அரைசோ டிசையா அணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக் கதவேஏறிற்(று)
அத்தியும் மாவுந் தவிர அரத்துறை
முத்தின் சிவிகை முன்னாட்பெற்றே பாடிற்று
அருமறை ஓத்தூர் ஆண்பனை அதனைப்
பெருநிறம் எய்தும் பெண்பனை யாவே கொண்டது
பூவிடு மதுவிற் பொறிவண் டுழலும்
ஆவடு துறையிற் பொன்னா யிரமே கண்டது
உறியொடு பீலி யொருகையிற் கொள்ளும்
பறிதலைச் சமணைப் பல்கழு மிசையே நீத்தது
அவிழ்ச்சுவை யேஅறிந் தரனடி பரவுந்
தமிழ்ச்சுவை அறியாத் தம்பங்களையே நினைந்தது
அள்ளற் பழனக் கொள்ளம் பூதூர்
இக்கரை ஓடம் அக்கரைச் செலவே மிக்கவர்
ஊனசம் பந்தம் அறுத்துயக் கொளவல
ஞான சம்பந்தன்இஞ் ஞாலத் திடையே.

—மும்மணிக்கோவை

## 7 திருப் புகலி

### 265 பதிகவரலாறு

திருப்புகலியிலிருந்து பாடியவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

**பண் :– காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

கண்ணுத லானும்வெண் ணீற்றினனுங் கழலார்க்கவே
பண்ணிசை பாடநின் றடினனும் பரஞ்சோதியும்
புண்ணிய நான்மறை யோர்களேத் தும்புக லிந்நகர்ப்
பெண்ணினல் லாளொடும் வீற்றிருந்த பெருமானன்றே. 1

சாம்பலோ டுந்தழ லாடினனுஞ் சடையின்மிசைப்
பாம்பினே டும்மதி சூடின னும் பசுவேறியும்
பூம்படு கல்லிள வாளைபா யும் புகலிந்நகர்க்
காம்பன தோளியொ டும்மிருந்த கடவுளன்றே. 2

1. திருப்புகலியுள் பெண்களின் நல்லவளாகிய உமாதேவியோடும் வீற்றிருந்தருளும் பெருமானே நெற்றிக் கண்ணையுடையவனும், வெண்ணீற்றவனும், பண்ணிசை பாட நின்று ஆடியவனும் பரஞ்சோதியும் ஆவான்.

2. பூம்படுகல் - மலர்ப்பொய்கையில். படுகர்:– போலி. காம்பு - மூங்கில், தோளியொடும் இருந்த கடவுள் - தோளியோடும் புகலிநகர் இருந்த பெருமானே சாம்பலோடு நெருப்பிலாடினவனும் சடையில் பாம்போடு சந்திரனைச் சூடினவனும் பகடு ஏறினவனும் ஆவான். மகா சங்காரகாலத்தில் உலகமெல்லாம் நெருப்புமயமாய் இருக்கும்பொழுது அந்நெருப்பின் நடுநின்று ஆடினன் சிவபெருமான் என்பது புராண வரலாறு. விடையைப் பசு என்றது சாதிபற்றி. ஏறி - ஏறினவன். இகரவிகுதி இங்கு ஆண்பாலைக்குறித்தது. "பசு ஏறும் எங்கள் பரமன்" என இரண்டாந் திருமுறையில் வருதலுங் காண்க.

கருப்புநல் லார்சிலைக் காமன்வேவக் கடைக்கண்தானும்
மருப்புநல் லானையி னீருரி போர்த்த மணாளனும்
பொருப்பன மாமணி மாடமோங் கும்புக லிந்நகர்
விருப்பினல் லாளொடும் வீற்றிருந் தவிம லனன்றே. 3

அங்கையி லங்கழ லேந்தினனும் அழகாகவே
கங்கையைச் செஞ்சடை சூடினனுங் கடலின்னிடைப்
பொங்கிய நஞ்சமு துண்டவ னும்புக லிந்நகர்
மங்கைநல் லாளொடும் வீற்றிருந்த மணவாளனே. 4

சாமநல் வேதனுந் தக்கன்றன் வேள்வி தகர்த்தானும்
நாமநூ றுயிரஞ் சொல்லிவா னோர்தொழு நாதனும்
பூமல்கு தண்பொழின் மன்னுமந் தண்புக லிந்நகர்க்
கோமள மாதொடும் வீற்றிருந்த குழகனன்றே. 5

3. கருப்பு நல் வார் சிலைக்காமன் - நல்ல நெடிய கரும்பு வில்லை யுடைய மன்மதன். கடைக்கண்டானும் - கடைக் கண்ணினால் பார்த்த வனும். மருப்பு - தந்தம். மணாளன் - சிவபெருமானுக்கு ஒரு பெயர். "நித்த மணாளர் நிரம்ப அழகியர்" (திருவாசகம் - அன்னைப்பத்து) காமனைக் கடைக்கண் விழித்து எரித்தவரும், யானைத்தோலைப் போர்த்தவரும், தம்மீது விருப்பினையுடைய உமாதேவியாரோடு திருப்புகலியுள் எழுந் தருளிய பெருமானே யாவர்.

4 உள்ளங்கையில் அழல் ஏந்தினவனும், கங்கையைச் சடையிற் சூடியவனும், கடலில்வந்த நஞ்சையுண்டவனும் திருப்புகலியுள் எழுந் தருளிய பெருமானே. அங்கையில் அங்கு அழல் ஏந்தினனும் என்ற தொடரில் அங்கு அசைநிலை. "போர்த்தாய் அங்கோர் ஆனையின் உரிதோல்" செந்நிறச்சடையில் வெண்ணிறக் கங்கையைக் கடவுள் சூடினது ஓர் அழகைத் தருகிறது என்பார் அழகாகவே கங்கையைச் செஞ்சடைச் சூடினன் என்றார்.

5. சாமவேதம் பாடினவனும், தக்கன் வேள்வியை அழித்தவனும் லட்சம்பெயர் சொல்லித் தேவர் அருச்சித்துப் பூசிக்கும் தலைவனும் (கோமளமாது) இளம்பெண்ணாகிய உமாதேவியோடுங் கூடித் திருப் புகலியில் எழுந்தருளியிருப்பவனேயாவான்.

இரவிடை யொள்ளெரி யாடினானும் இமையோர்தொழச்
செருவிடை முப்புரந் தீயெரித்த சிவ லோகனும்
பொருவிடை யொன்றுகந் தேறினா னும்புக லிந்நகர்
அரவிடை மாதொடும் வீற்றிருந்த வழகனன்றே. 6

சேர்ப்பது திண்சிலை மேவினானுந் திகழ் பாலன்மேல்
வேர்ப்பது செய்தவெங் கூற்றுதைத் தானும் வேள் விப்புகை
போர்ப்பது செய்தணி மாடமோங் கும்புக லிந்நகர்ப்
பார்ப்பதி யோடுடன் வீற்றிருந்த பரமனன்றே. 7

கன்னெடு மால்வரைக்கீழரக்கன்னி டர்கண்டானும்
வின்னெடும் போர்விறல் வேடனாகி விசயற்கொரு
பொன்னெடுங் கோல்கொடுத் தானுமந் தண்புக லிந்நகர்
அன்னமன் னந்நடை மங்கையொடும் அமர்ந் தானன்றே. 8

6. மகா சங்கார காலம் 'இரவு'. எனப்பட்டது, சூரிய சந்திரர், உடுக்கள் இவையெல்லாம் அழிந்துபட்டமையின். இப்பதிகம் 2-ம் பாடலைப்பார்க்க. மகா சங்கார காலத்தில் நெருப்பில் ஆடினவனும், தேவர்கள் தொழுது வேண்டப் போர்முகத்தில் முப்புரத்தைத் தீயால் எரியச்செய்தவனும், விடையை விரும்பி ஏறினவனும், திருப்புகலியின் கண்ணே, பாம்பு போலும் இடையையுடைய உமாதேவியோடும் எழுந்தருளினவனும் இவனேயாவன். அப்பமூர்த்திகள் திருவாக்கில் வருதலும் காண்க.

7. சேருமிடம் திண்ணிய கைலை மலையாகத் தங்கினவனும், மார்க்கண்டர்மீது கோபித்தலைச் செய்துவந்த கொடிய யமனை உதைத்தவனும், திருப்புகலியில் மலையரையன் மகளோடும் எழுந்தருளிய பெருமானும் ஆவான். சேர்ப்பது என்ற சொல்லில் "அது" பகுதிப்பொருள் விகுதி.

8. கல்லைப்போலும் திண்ணிய நெடிய பெரிய வெள்ளி மலையின்கீழ் இராவணன் துன்பம்கண்டு அருளியவனும்; வேடனாகி விசயனுக்குப் பொன்மயமான பாசுபதமென்னும் அம்பைக் கொடுத்தவனும், திருப்புகலியுள் அன்னம் அனைய நடையையுடைய உமாதேவியாரோடும் வீற்றிருந்தருளிய பெருமானும் அவனே ஆவான்.

பொன்னிற நான்முகன் பச்சையா னென்றிவர் புக்குழித்
தன்னையின் றெனெனக் காண்பரி யதழற் சோதியும்
புன்னைபொன் றூதிர் மல்குமந் தண்புக லிந்நகர்
மின்னிடை மாதொடும் வீற்றிருந்த விமலனன்றே. 9

பிண்டியும் போதியும் பேணுவார் பேச்சினைப் பேணுதஹோர்
தொண்டருங் காதல்செய் சோதியா யசுடர்ச் சோதியான்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுக லிந்நகர்
வண்டமர் கோதையொ டும்மிருந்த மணவாளனே. 10

பூங்கமழ் கோதையொ டும்மிருந் தான்புக லிந்நகர்ப்
பாங்கனை ஞானசம் பந்தன் சொன்னதமிழ் பத்திவை
ஆங்கமர் வெய்திய வாதியாக விசைவல்லவர்
ஓங்கம ராவதி யோர்தொழச் செல்வது முண்மையே. 11

திருச்சிற்றம்பலம்

9. பிரமனும் திருமாலும் இன்றேனென்று தன்னைக் கண்டறியாதபடி தழல் சோதியானவனும், மின்னல் இடையையுடைய உமாதேவியா ரோடும் திருப்புகலியுள் எழுந்தருளிய பெருமானும் இவனேயாவன். ‘எண்ணுங்காலும் அது அதன் பண்பே’ யென்ற தொல்காப்பியப்படி பொன் னிற(நான்முக)ன் - பச்சையன் என்று சொல்லப்பட்டனர்..

10. பிண்டி - அசோகமரம்; தங்கள் கடவுள் அதனடியில் இருப்பா னென்று அதனைப் போற்றுவர். போதி - அரசமரம். தங்கள் தலைமகன் அதனடியில் இருந்து ஞானம்வரப் பெற்றானென்று பௌத்தர் அதனைப் போற்றுவர்.

11. ஆங்கு - திருப்புகலியுள். ஆங்கு - அவ்விதமாக. உமாதேவி யாரோடும். அமர்வு எய்திய - எழுந்தருளிய, ஆதியாக - சிவம் ஆக. ஞானசம்பந்தன் சொன்ன பத்தும் ஓதி இவற்றை அந்தச் சிவமாகவே கொண்டு இசையாற் போற்றவல்லவர் அமராவதியோர் தொழச் செல்வர்.

# 8 திருக்கடவூர் வீரட்டம்

## 266 பதிகவரலாறு

திருவம்பர்ப் பெருந்திருக்கோயிலை வழிபட்டுத் திருக்கடவூர்க்குச் செல்கின்றார் பிள்ளையார். குங்கிலியக்கலயரும் அடியரும் எதிர்கொள்ள லாயினர். அப்பரும் உடன் போந்தார். திருக்கடவூர் வீரட்டத்தை வணங்கிப் போற்றி உய்ந்து எதிர்நின்று பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் — காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

சடையுடை யானும்நெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடையானும் மையார்ந்தவொண்கண் உமைகேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே. 1

எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே. 2

1. சடையை யுடையவன். மை ஆர்ந்த ஒண்கண் உமை கேள்வன் - மைதீட்டிய கண்களையுடைய உமை கணவனும். கடை - வாயில். கடவூரில் விடையுடையவனும் வீரட்டானத் தானல்லனோ ? வீர + அட்ட + தானம் - வீரட்டானம், மரூஉ. சிவபெருமான் வீரத்தைக் காட்டிய எட்டு இடம் - அவை "பூமன் சிரங்கண்டியந்தகன் கோவல் புரமதிகை" என்னும் பாடலால் அறிக. வீரஸ்தாநம் எனலுமாம்.

2. எரிதருவார் சடையானும் - நெருப்புப்போன்ற செந்நிறம் பொருந்திய நெடிய சடையையுடையவனும். எருது ஏறி - எருது ஏறினவன். கரிதருகாலன் - கரிய நிறத்தையுடைய இயமன்; சிவனடியார்க்குத் தீமை செய்பவனுக்கு இந்தக் கதிதான் என்று கரி (சாட்சி) யானவன் எனலுமாம். கடவூர் - இயமனை வீட்டிய வீரஸ்தானம் ஆகையால் காலனைச் சாடினானும் என வரலாறு குறித்தது.

நாதனும் நள்ளிரு ளாடினு னும்நளிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினு னும்பசு வேறியும்
காதலர் தண்கட வூரினு னுங்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே. 3

மழுவமர் செல்வனு மாசிலாத பல பூதமுன்
முழவொலி யாழ்குழன் மொந்தைகொட்ட முது காட்டிடைக்
கழல்வளர் கால்குஞ்சித் தாடினு னுங்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா னத்தர னல்லனே. 4

சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினு னுஞ்சுழல் வாயதோர்
படமணி நாகமரைக்கசைத்த பர மேட்டியும்
கடமணி மாவுரித் தோலினு னுங்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே. 5

பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னொளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லனே. 6

3. நளிர்போதின் கண் பாதனும் - அடியார்களின் குளிர்ந்த தாமரை (இருதய) மலரின்கண் தங்கும் திருவடியையுடையவனும், காதலர் - அன்பர்கள் வசிக்கும். தண் - குளிர்ச்சி பொருந்திய, கடவூரினனும் - திருக்கடவூரில் எழுந்தருளி யிருப்பவனும்.

4. மழு அமர் செல்வனும்-மழுவை விரும்பி (யேந்தி)ய செல்வனும், மொந்தை - ஒருவகை வாத்தியம். முழவொலி யாழ் குழல் மொந்தை கொட்ட - முழ வொலியும் யாழ் ஒலியும் குழல் ஒலியும் ஆகிய இவற்றோடு மொந்தை கொட்ட, குழல் ஒலி என்னுந் தொடரிலுள்ள ஒலி யென்ற சொல்லை, யாழ், குழல் என்பவற்றோடும் கூட்டுக.

5. சுடர்மணி - ஒளிர்கின்ற உருத்திராக்க மணி. சுழல்வு ஆயது ஓர் படம் மணிநாகம் அரைக்கு அசைத்த - மண்டலம் இடுகிறதாகிய ஒரு பாம்பை இடுப்பிற் கட்டியவனும். கடம் அணி - யானை மதத்தையுடைய அழகிய யானை.

6. உழல்வான் - சுற்றித்திரிவான். கண்பொலி நெற்றிவெண் திங்களான் - கண் விளங்குகின்ற நெற்றியின்மீது வெள்ளிய சந்திரனை அணிந்தவன், வெண்பொடி பூசி - வெண்மையான திருநீற்றைப் பூசியவன்.

செவ்வழ லாய்நில ஞகிநின் றசிவ மூர்த்தியும்
முவ்வழல் நான்மறை யைந்துமா யமுனி கேள்வனும்
கவ்வழல் வாய்க்கத நாகமார்த் தான்கட வூர்தனுள்
வெவ்வழல் ஏந்துகை வீரட்டா னத்தர னல்லனே. 7

அடியிரண் டோருடம் பைஞ்ஞான்கி ருபது தோள்தச
முடியுடை வேந்தனை மூர்க்கழித்த முதன் மூர்த்தியும்
கடிகம ழும்பொழில் சூழுமந் தண்கட வூர்தனுள்
வெடிதலை யேந்தியும் வீரட்டா னத்தர னல்லனே. 8

வரைகுடை யாமழை தாங்கிஞ னும்வளர் போதின்கண்
புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே
கரைகடல் சூழ்வையங் காக்கின்ற னுங்கட வூர்தனுள்
விரைகமழ் பூம்பொழில் வீரட்டா னத்தர னல்லனே. 9

தேரரும் மாசுகொள் மேனியா ரும்தெளி யாததோர்
ஆரருஞ் சொற்பொரு ளாகிநின்ற எம தாதியான்
காரிளங் கொன்றைவெண் டிங்களா னுங்கடவூர்தனுள்
வீரமுஞ் சேர்கழல் வீரட்டா னத்தர னல்லனே. 10

7. சிவமூர்த்தி - மங்களகரமான திருவுருவுடையவன். முத்தழல், ஆகவனீயம்; காருகபத்தியம்; தாட்சிஞக்கினியென்பன. ஐந்தும் ஆய - ஐவகை வேள்வியுமாகிய. "ஐவகை வேள்வியமைத்து" என வருவது காண்க. (திருவெழுகூற்றிருக்கை.) முனிகேள்வன் - முனிவரிடத்து நண்பு பூண்டவன். கேள்வன் - நண்பன். கேண்மையென்னும் பண்படியாகப் பிறந்தபெயர்.

8. ஐந்நான்கிருபதுதோள் - ஐந்நான்காகிய இருபது தோள். தசம் - பத்து. மூர்க்கு - மூர்க்கத்தன்மை. வெடி - முடைநாற்றம்.

9. வரை-கோவர்த்தன மலை. மழை தாங்கிஞன் - கண்ணஞகிவந்த திருமால். புரைகடிந்து - குற்றம்நீங்கி. நான்முகத்தான் - நான்முகத்தானும் என்க. உம்மை விகாரத்தால் தொக்கது. புரிந்து - விரும்பி. கரை - எல்லை.

10. தேரர் - பௌத்தர். மாசுகொள் மேனியர் - அழுக்குடைய உடம்பையுடைய சமணர். குளித்தால் நீரில் உள்ள சிறு உயிர்கள் இறந்து விடுமேயென்று நீராடாமையால் மாசுகொள் மேனியர் ஆவர். ஆர் அரும்

வெந்தவெண் ணீறணி வீரட்டானத்துறை வேந்தனை
அந்தணர் தங்கட வூருளா னைஅணி காழியான்
சந்தமெல்லாம் அடிச் சாத்தவல் லமறை ஞானசம்
பந்தன செந்தமிழ் பாடியாடக் கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

சொல் பொருளாகி நின்ற - நிறைந்த அரிய சொல்லும் பொருளுமாகி நின்ற. கார் இளம் கொன்றை - கார் காலத்தில் மலரக்கூடிய இளம் கொன்றை, அன்றலர்ந்த கொன்றைப்பூ. கொன்றை வெண்டிங்களானும்- கொன்றை மாலையோடணிந்த வெள்ளிய சந்திரனையுடையவனும். வீரமும் சேர் கழல் - அதுவே பின் கருணையும் செய்தது என்னும் பொருள் தரலால் எதிரது தழுவிய எச்சவும்மை.

11. சந்தம் எல்லாம் அடிச்சாத்தவல்ல - அழகிய சந்தப் பாடல்களை யெல்லாம் திருவடிக்குச் சாத்தவல்ல (ஞானசம்பந்தன்) சந்தம் - பண்பாகு பெயர். வெந்த - விதிப்படி செய்யப்பட்ட கற்பநீறு. அந்தணர் - மாதவக் கலய முதலோர். அகரம் ஆறனுருபு பன்மை. ஆடப் பாவம் கெடும்.

நிலத்துக்கு மேலாறு நீடுலகத் துச்சித்
தலத்துக்கு மேலேதான் என்பர்—சொலத்தக்க
சுத்தர்கள்சேர் காழிச் சுரன்ஞான சம்பந்தன்
பத்தர்கள்போய் வாழும் பதி.

பதிகம் பலபாடி நீடிய பிள்ளை பரசுதரற்
கதிகம் அணுக்கன் அமணர்க்குக் காலன் அவதரித்த
மதியந் தவழ்மாட மாளிகைக் காழிஎன் றுல்வணங்கார்
ஓதியம் பணைபோல் விழுவர்அந் தோசில ஊமர்களே.

—மும்மணிக்கோவை

# 9 திருவீழிமிழலை

## 267 பதிகவரலாறு

சிவபெருமானருளால் அப்பரும், பிள்ளையாரும் பெருஞ்சோற்றுப் பிறங்கல் ஈந்து, அனைத்துயிரும் துயர்நீங்கிப் புவனமெலாம் பொலிவு எய்தி விளங்கச்செய்து, இறைவனைப் போற்றி வைகிய காலத்து ஒரு நாள், திருவாஞ்சியத்தை நினைந்தபோது பாடி யருளியது இத்திருப்பதிகம் (இதன் ஐந்தாவது திருப்பாடலை நோக்குக.)

பண் - காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கேள்வியர் நாடொறு மோதுநல் வேதத்தர் கேடிலா
வேள்விசெ யந்தணர் வேதியர் வீழி மிழலையார்
வாழியர் தோற்றமுங் கேடும்வைப் பாருயிர் கட்கெலாம்
ஆழியர் தம்மடி போற்றியென் பார்கட் கணியரே. 1

1. கேள்வியர் - பலநூல்களைக் கேட்டறிந்தவர்கள் நாள் தொறும் ஓதும் நல்வேதத்தர் - நாள் தோறும் நல்ல வேதத்தை ஓதுபவர்கள். கேடு இலா வேள்விசெய் அந்தணர் - கெடுதல் இல்லாத யாகத்தைச் செய்கின்ற அழகிய கருணையையுடையவர்களாகிய வேதியர். மறை யோர் வாழும் மிழலையார் - திருவீழிமிழலையுள் எழுந்தருளியவராகிய சிவ பெருமான். உயிர்கட்கு எல்லாம் தோற்றமும் கேடும்வைப்பார் - உயிர் களுக்கு உடம்போடு கூடிப் பிறத்தலையும், அழித்தலையும் வைத்தவர் உலகத்திற்குச் சிருட்டிகர்த்தரும் சங்காரகர்த்தரும் ஆவர் எனவே - இரட்ச கர்த்தரும் - சிவபெருமான் ஒருவரேயென்க. "படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை காப்போற்காக்கும் கடவுள் காத்தவை கரப் போன்" எனவரும் சுருதி வாக்கியங்களால் அறிக. (திருவாசகம்)

கேள்வியர் முதல் வேதியர் ஈறாக உள்ளவை திருவீழிமிழலை அந்த ணர்களையும் வீழிமிழலையார் என்பது முதல் வருவன சிவபெருமானையும் குறிப்பனவாம். ஆழியர் - (ஆழங்காண முடியாத) கடல் போன்றவரா யிருந்தாலும் தம் அடிபோற்றி என்பார்க்கு - தமது திருவடியைப் போற்றி யென்று சரண்புகும் அன்பர்களுக்கு. அணியர் - மிக அணியராகிக் காட்சி கொடுப்பர்.

கல்லினற் பாவையோர் பாகத்தர் காதலித் தேத்திய
மெல்லினத் தார்பக்கல் மேவினர் வீழி மிழலையார்
நல்லினத் தார்செய்த வேள்வி செகுத்தெழு ஞாயிற்றின்
பல்லனைத் துந்தகர்த் தாரடி யார்பாவ நாசரே. 2

நஞ்சினை யுண்டிருள் கண்டர்பண் டந்தக னைச்செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழி மிழலையார்
அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங் காடிய
மஞ்சனச் செஞ்சடை யாரென வல்வினை மாயுமே. 3

கேள்வியர் எனவே, சிந்தித்து, தெளிந்து, நிட்டை உடையவர் என உபலக்கணத்தாற் கொள்ளலும் ஆம்.

முதலீரடிகளில் திருவீழிமிழலை அந்தணர்களைப்பற்றிக் கூறப்படுகிறது. தில்லை மூவாயிரம் திருவீழிமிழலை ஆயிரம் என்பது பழமொழியாகலின் நாள்தோறும் ஓதுநல் வேதத்தர் என எடுத்துக் கூறுகின்றார். இச் சிறப்பை "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே." எனத் திருஞானசம்பந்தப்பெருமான் கூறுதலும் காண்க. அந்தணர் என்ற சொல்லுக்கே திருவள்ளுவர் "எவ்வுயிர்க்கும் செந்தண்மை (சீவகாருணியம்) பூண்டு ஒழுகுபவர்" என்று பொருள் காண்கின்றார். வேத அந்தத்தை யணவுவார் என நச்சினார்க்கினியர் கூறுவர். இங்கு இச்சொல் காரண இடுகுறியாகாது காரணக்குறியாய் நின்றது.

2. அடியார் பாவநாசர் - அடியார் செய்த பாவத்தைத் தொலைப்பவர். கல்லின் நற்பாவை ஓர் பாகத்தர் - இமயமலை மகளாகிய உமாதேவியாரை யொருபாகத்தில் வைத்தவர். மெல்லினத்து நல் இனத்தார் செய்த வேள்வி - நல்லினத்தாரென்றது இகழ்ச்சிக்குறிப்பு. எழும் - ஓடுவதற்கு எழுந்த. ஞாயிற்றின் பல்லனைத்தும் - சூரியன் பல் முழுவதையும் தகர்த்தார்.

3. நஞ்சினைஉண்டு இருள் கண்டத்தர் - செய்து என்னும் வினையெச்சம் பிறவினைகொண்டது. 'வினையெஞ்சுகிளவியும் வேறுபல் குறிய' என்னும் தொல்காப்பிய விதிப்படி (சொல்) அமைந்தது.

கங்கை மஞ்சனம் ஆடிய செஞ்சடையார் எனக்கூட்டுக. கங்கையால் அபிடேகம்கொண்ட செந்நிறமான சடையையுடையவர். அங்கு - அசை. வல்வினைமாயும் - கொடிய பாவங்கள் நீங்கும்.

கலையிலங் கும்மழு கட்டங்கங் கண்டிகை குண்டலம்
விலையிலங் கும்மணி மாடத்தர் வீழி மிழலையார்
தலையிலங் கும்பிறை தாழ்வடஞ் சூலந் தமருகம்
அலையிலங் கும்புன லேற்றவர்க் கும்மடி யார்க்குமே. 4

பிறையுறு செஞ்சடை யார்விடை யார்பிச்சை நச்சியே
வெறியுறு நாட்பலி தேர்ந்துழல் வீழி மிழலையார்
முறைமுறை யாலிசை பாடுவாராடிமுன் றெண்டர்கள்
இறையுறை வாஞ்சிய மல்லதெப் போதுமென் னுள்ளமே. 5

4. கலை - மான், இலங்கும் மழு - ஒளிரும் மழு ஆயுதம். கட்டங்கம் - யோகதண்டம். கண்டிகை - உருத்திராட்சக் கண்டிகை; தலை தாழ்வடம். தமருகம் - உடுக்கை. அலை இலங்குபுனல் - அலையினுல் விளங்குகின்ற கங்கை. ஏற்றவர் - இடபக்கொடியுடையவர். இத் திருப்பாசுரத்தில் சிவ பெருமான் தன் அடியவர்களில் ஒருசார் பக்குவமுடையோர்க்கும் சாரூப் பியபதவி அளிக்குந்திறன் கூறப்படுகிறது. மேற்கூறியவை சிவபிராற்கு உரிய அடையாளங்கள். கட்டு அங்கம் - எலும்புமாலை.

விலை யேறப்பெற்ற இரத்தினங்கள் பதித்த மாடங்களால் நிறைந்த திருவீழிமிழலையி லெழுந்தருளியிருப்பவரும் இடபக்கொடியையுடையவரு மாகிய சிவபிரானுக்கு உரிய மான், மழு யோகதண்டம், உருத்திராக்கக் கண்டிகை, குண்டலம், தலைமாலை, எலும்பாலாகிய தாழ்வடம், ஆலம், உடுக்கை, கங்கை ஆகிய இவை அவன் அடியார்க்கும் உண்டு. சிவ சின்னங்களாகிய இவைகள் சாரூப்பியருக்கும் உண்டு. தலையிலங்கும் பிறை என்பதற்கு தலையில் விளங்கும் பிறை எனக்கொள்க. அதனுல் அனையவற்றிற்கும் கையிலிலங்கும் மான், மழு, கட்டங்கம், சூலம், தமருகம், கழுத்திலிலங்கும் கண்டிகை, தாழ்வடம், காதிலிலங்கும் குண்டலம், தலையிலிலங்கும் புனல் எனக்கூறலுமாம். இனி, நகுவெண்டலை என்ப தற்குக் கையிலேந்திய கபாலம் எனவும் கொள்ளலாம்.

5. பிச்சையை விரும்பி வெறியுறுநாள். பலியேற்றுத்திரி முறை திருவீழிமிழலையார், (அவருக்கு) முறை முறையாலிசை பாடுவார் ஆடி - முறையால் இசைபாடுவாராய் முறையாகவே ஆடி. முன்-முற்பட. இறை- தங்கும் இடம். உறை - உறைதல் - தங்குதல், முதல் நிலைத் தொழிற் பெயர்.

வசையறு மாதவங் கண்டு வரிசிலை வேடனாய்
விசையனுக் கன்றருள் செய்தவர் வீழி மிழலையார்
இசைவர விட்டியல் கேட்பித்துக் கல்ல வடமிட்டுத்
திசைதொழு தாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே. 6

சேடர்விண் ணோர்கட்குத் தேவர்நன் மூவிரு தொன்னூலர்
வீடர்முத் தீயர்நால் வேதத்தர் வீழி மிழலையார்
காடரங் காவுமை காணவண் டத்திமை யோர்தொழ
நாடக மாடியை யேத்தவல் லார்வினை நாசமே. 7

எடுத்தவன் மாமலைக் கீழிரா வணன் வீழ்தர
விடுத்தருள் செய்திசை கேட்டவர் வீழி மிழலையார்
படுத்துவெங் காலனைப் பால்வழி பாடுசெய் பாலற்குக்
கொடுத்தன ரின்பங் கொடுப்பர் தொழக்குறை வில்லையே. 8

6. இசை வரவிட்டு - இசை பொருந்தும்படியாகப் பாடி, இயல் கேட்பித்து - இயற்றமிழ்ப் பொருள்களை விண்ணப்பித்து. திசை நோக்கித்தொழுது ஆடிப்பாடுவார் ஆகிய அடியாரது சித்தத்தின் கண் சேர்வர்.

7. சேடர் விண்ணோர்கட்கு - தேவர்களுக்குத் தூரமானவர். தேவர்கள் பூசுரர்களாய் ஆறு சாத்திரங்களும் கற்றவர்களாய் முத்தியில் இச்சையவர்களாய் மூவகை அழலை ஓம்பி, நால் வேதங்களையும் பயின்றவர்களாகிய அந்தணர்கட்கு அணியராய்த் திருவீழிமிழலையுள் எழுந்தருளியுள்ள. நாடகம் ஆடியை - நடனம் செய்பவராகிய சிவபெருமானைத் துதிக்க வினை நசிக்கும். விண்ணுடர்கட்குச் சேடர்எனவே திருவீழிமிழலையுடையார்க்கு அணியர் என்பது சொல்லாற்றலாற் பெறவைத்தார்.

8. பெரியமலையை யெடுத்தவனாகிய (இராவணன்) மாமலைக்கீழ் அ + இராவணன். வீழ்தரவிடுத்து - விழுந்தலறவிடுத்து, அருள் செய்து இசை கேட்டவன் என்ற விடத்து இசைகேட்டு அருள் செய்தவன் என மாறிக் கூட்டுக.

வெம் காலனைப்படுத்து - கொடிய யமனைத் தொலைத்து. பால் - பக்கத்தில் நின்று வழிபாடுசெய்த பாலனுக்கு. இன்பம் கொடுத்தனர். தொழ - வணங்க "தந்த துன்றன்னை" "உன்னைக் குறுகினேற் கினியென்ன குறையே" என்பதும் காண்க. (திருவாசகம்)

திக்கமர் நான்முகன் மாலண்ட மண்டலந் தேடிட
மிக்கமர் தீத்திர ளாயவர் வீழி மிழலையார்
சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரும்
நக்கர்தந் நாம்ந மச்சிவா யவ்வென்பார் நல்லரே. 9

துற்றரை யார்துவ ராடையர் துப்புர வொன்றிலா
வெற்றரை யார்அறி யாநெறி வீழி மிழலையார்
சொற்றெரி யாப்பொருள் சோதிக்கப் பால்நின்ற சோதிதான்
மற்றறி யாஅடி யார்கள்தஞ் சிந்தையுள் மன்னுமே. 10

வேதியர் கைதொழு வீழி மிழலைவி ரும்பிய
ஆதியை வாழ்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்ஆய்ந்
தோதிய வொண்டமிழ் பத்திவை யுற்றுரை செய்பவர்
மாதியல் பங்கன் மலரடி சேரவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

9. திக்கு அமர் நான்முகன் - திக்கைப் போர் பொருந்திய நான்கு முகங்களையுடைய பிரமனும். மாலும் முறையே அண்டம் மண்தலம் தேடத் திரளாய் மிக்கவர். சொக்கம் - ஒரு கூத்து. நக்கர் - ஆடையில்லா தவர். அவர் நாமமாகிய திருவைந்தெழுத்தை உச்சரிப்போர். நல்லவர் - சிவபுண்ணியச் செல்வராவர். நான்முகன் - மால். அண்டம் மண்தலம் தேட - நிரனிறை.

10. துற்று - பொருந்திய. துவர் ஆடையார் - மருதம் தோய்க்கப் பட்ட ஆடையையுடையவர். துப்புரவொன்றில்லார் - ஒரு பயனும் அறியாதவருமாகிய சமணர். "துப்புரவில்லார் துணிவு." (பெரிய 1973.) வெறு அரையார் - ஆடையில்லாதவர்; திகம்பரர். வெற்றுச்சொல்· தெரியா - சொல்லால் அறியப்படாத சொல்லுக்கு அப்பாற்பட்ட பொருளாகிய ஒளிக்கு அப்பால் நின்ற. "சொல்லும் பொருளும் இறந்த சுடர்" என்றபடி (திருவாசகம்) சோதிதான் - பேரொளிப்பிழம்பானது. மற்று அறியா - பரமே கண்டு. பதார்த்தங்கள் பாராத. அடியார்கள் தம் சிந்தையுள் மன்னும் திருவீழிமிழலையாராகிய சோதி, சொல்லையும் பொருளையும்கடந்து நின்றதாயினும் அடியார் சிந்தையுள் மன்னும்.

11. வேதியர் கைதொழும் திருவீழிமிழலையாரை ஞானசம்பந்தன் ஆய்ந்து பாடிய ஒண்தமிழ் பத்தும் வல்லவர் அம் மாது பொருந்திய பாகனது மலர்போன்ற அடியைச் சேரவும் வல்லராவார்.

## 10 திருவிராமேச்சுரம்

### 268 பதிகவரலாறு

"இராமன் இலங்கை செற்ற பிக்க பெரும் பாதகத்தை நீக்கவேண்டிச் செய்த திருவிராமேச்சுரத்தைச் சேர்ந்து, அச் செங்கண்மால் வழிபட்ட கோயில் நண்ணி, மங்கையர்க்கு நாயகியாரும் மெய்ம்மை மந்திரியாரும் சூழ மணிநீர் வாயில்புக்கு வலங்கொண்டு போற்றிப்பாடியது" இத் திருப் பதிகம்.

**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

அலைவளர் தண்மதி யோடய லேஅடக் கிஉமை
முலைவளர் பாக முயங்கவல்ல முதல்வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகானல் இராமேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன் தானிருந் தாட்சியே. 1

தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித்த பழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய்த விராமேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தாம் மேல்வினை வீடுமே. 2

1. அலை – கங்கையை. குளிர்ந்த சந்திரனைச் சடையின் பக்கத்தே அடக்கி - தேக்கி. உமைபாகம் கூடவல்ல முதல்வன். கிளை, கொம்பு, மிளார் முதலிய வேறுமரவகைக் கிருப்பதுபோல தாழை மரங்களுக் கின்மையால் இது வளர்தாழை யெனப்பட்டது. தழைகளையுடையது - தாழை – நீளல். முதல்உயிர் நீண்டசொல். விம்மு - தழைத்த. கானல் - கடற்கரைச்சோலை. தலையாலாகிய மிகும் அழகையுடைய நல்ல மாலையை யுடையவனாகிய சிவபெருமான் இருந்து ஆட்சிபுரியும் இடம் இராமேச்சுரம் என்க. அலை - வினையாகுபெயர். ஆட்சிசெய்யுமிடத்தை ஆட்சியென்றது தொழிலாகு பெயர்.

இயலும் சிலை அண்ணல் அம்பு - அம்பைச் செலுத்தும் வில்லை யுடைய இராமன்.

2. தேவி – சீதை. வவ்விய-கவர்ந்த, தசமாமுகன், தென் இலங்கை தன்னோடியையின்மை மாத்திரை விலக்கிய விசேடணம். பூ இயலும் முடி- வெற்றிமாலை அசையும் முடியையுடைய தலையை, பொன்றுவித்த - தொலை

மானன நோக்கியை தேவிதன் னையொரு மாயையால்
கானதில் வவ்விய காரரக் கன்உயிர் செற்றவன்
ஈனமி லாப்புக ழண்ணல்செய்த இராமேச்சுரம்
ஞானமும் நன்பொரு ளாகிநின் றதொரு நன்மையே. 3

யச்செய்த. பழிபோய் நீங்குமாறு செய்த; நிருமாணித்த. இராமேச்சுரம் என்னும் பெயரையுடைய திருக்கோயில். மேவிய சிந்தையினர்கள் தம் - இடைவிடாது பொருந்திய சிந்தையை யுடையவர்களின். மேல் வினை வீடும் – முன்னை வினைகளாகிய சஞ்சிதமும், இப்பிறப்பில் ஈட்டப் படுகின்ற; இனி யீட்டப்படுவதாகிய ஆகாமிய வினையும் ஒருங்கேமாயும் என்பதாம். மேல்வினையென்பது – நுகர்ந்து கொண்டிருக்கும் பிராரத்த வினையையும் குறிக்கு மாதலின் அதுவும் அழியும் என்பதாம். வீடுமாறு துய்க்கவரும் இன்ப துன்பங்கள் சிவனருளெனக்கொண்டு விருப்பு வெறுப் பின்றி யிருத்தலாம்.

தலத்தின்பெயர் - சேது (சேதுபுராணம், சேதுமான்மியம் முதலிய வற்றால் அறிக.) இராமேச்சுரம்:- ஈச்சுரம் அத்தலமேவிய கோயிலின்பெயர். ‘திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரம்’ “பட்டினத்துறை பல்லவனீச்சரம்” என்பனவற்றால் அறிக. “தேடிமால் செய்தகோயில் திருவிராமேச்சுரத்தை நாடி வாழ்நெஞ்சமே நீ நன்னெறியாகுமன்றே” என்பது திருநேரிசை.

“ஓயாதே உள்குவாருள்ளிருக்கும் உள்ளானை” திருவாசகம். சிவ ஞானசித்தியார் “தனதாகக்கொள்வன்”. பூ - ஆகுபெயர். கோயில் மேவிய சிந்தையினர் வினைவீடும் “ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே” என்ற சிவஞான போதத்தால் அறிக.

/

3. மான் அ(ன்)ன நோக்கு இயைதேவிதன்னை - மான் போன்ற பார்வை பொருந்திய தன் அரசியாகிய சீதையை. கான் (அது) இல் தண்டகவனத்தில், அது பகுதிப்பொருள் விகுதி. கார் அரக்கன்-கரிய இரா வணன். ஓர் மான்தனால் வவ்வியது - வஞ்சமாறால் கணவனைப் பிரித்துக் கவர்ந்தது. செற்றவன் - அழித்தவன், செற்றவனாகிய அண்ணல்; கடைசி அடிக்கு இராமேச்சுரம் சிவஞானமும் அதன் பயனாகிய முத்தியின்பமும் பயப்பதாகிய, புண்ணியஸ்தானமாம் என்க. நன்பொருளும் என்று விரிக்க எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. முத்தியின்பம் நன்பொருள் எனப் பட்டது, உடனெண்ணப்படும் ஞானம் முதலியவற்றிற் சிறத்தலின் நன்மை பண்பாகுபெயர்.

உரையுணா ராதவன் காமமென் னும்முறு வேட்கையால்
வரைபொரு தோளிறச் செற்றவில்லி மகிழ்ந் தேத்திய
விரைமரு வுங்கடலோதமல் கும்இரா மேச்சுரத்
தரையர வாடநின் றுடல்பே ணுமம்மா னல்லனே. 4

ஊறுடை வெண்டலை கையிலேந் திப்பல வூர்தொறும்
வீறுடை மங்கைய ரையம்பெய்ய விற லார்ந்ததோர்
ஏறுடை வெல்கொடி யெந்தைமேய இரா மேச்சுரம்
பேறுடை யான்பெயர் ஏத்துமாந் தர்பிணி பேருமே. 5

அணையலை சூழ்கட லன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத்த பழி போக்கிய
இணையிலி யென்றும் இருந்தகோயில் இரா மேச்சுரம்
துணையிலி தூமலர்ப் பாதமேத்தத் துயர் நீங்குமே. 6

4. உரை - சாபம். தனக்கு நேர்ந்ததை உணராதவன் மிக்க காம வேட்கையான். உறு - மிக்க. மலையைப் பொருவும் தோள். பொருதோள் வினைத்தொகை. இற - சிதைய. செற்ற - அழித்த. வில்லி - இராமன். இகரம் ஆண்பாலில் வந்தது. விரை மருவும் கடல் - புலவு நாறுங் கடலை இங்ஙனம் கூறியது. இறைவனைத் தொழ உவந்து நீராடிய அரம்பை மாதர் முதலியோரது மெய்ப்பூசல் என்க. ஓதம் - அலை. அரை - இடுப்பின் கண்ணே. அரை - ஆகுபெயர். நல்லன் - நல்லவன், சிவபிரானுக்கு உரிய பெயர். "நல்லானை நான் மறையோ டாறங்கம் வல்லானை"

5. ஊறு:- திருக்கையால் தொட்டுப் பறிக்கப்பெறும் பொறி, ஐந்தனுள் அத்தலைக்குமட்டும் வாய்த்ததால் 'ஊறுடை வெள்தலை' எனப் பட்டது. 'சுவை ஒளி ஊறு' என்பவற்றில் வரும் ஊறு எனில் பொருட் சிறப் பில்லை. (உறுவது - ஊறு. பெறுவது - பேறு) வீறு - வேறு ஒன்றிற்கு இல்லாத அழகு. ஐயம் - பிச்சை. விறல் - வலி, வெற்றி. ஏறு - விடை. சிவனது கொடியில் எருதுருவம் உண்டு. பெயர் - பவாதி சிவநாமங்கள். பிணி - பிறவிப்பிணியும் அதுபற்றி வருவனவும். பேரும் - பெயரும். வந்தவழி மீண்டொழியும். (முத்து. சு.)

6. அலையையுடைய வளைந்த கடலை அணையால் அடைத்து அன்று வழி செய்தவன் என்பது முதலடிக்குப் பொருள். பொருப்பணை முரசம் தலைக்கு உவமை. இனி பணை இலங்கும் முடி எனப் பருத்து விளங்கும் முடியென்னலுமாம். அதற்கு "அறு வேறுவகையின் அஞ்சுவரமண்டி" என்ற திருமுருகாற்றுப் படையைப்போலப் பகுதியே வினையெச்சப்

சனிபுதன் ஞாயிறு வெள்ளிதிங் கட்பல தீயன
முனிவது செய்துகந் தானைவென் றவ்வினை மூடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்செய்த இரா மேச்சுரம்
பனிமதி சூடிநின் றுடவல்ல பரமேட்டியே. 7

பெருவரை யன்றெடுத் தேந்திஞன் றன்பெயர் சாய்கெட
அருவரை யாலடர்த் தன்றுநல்கி அயன் மாலெனும்
இருவரு நாடிநின் றேத்துகோயில் இரா மேச்சுரத்
தொருவனு மேபல வாகிநின்ற தொரு வண்ணமே. 8

சாக்கியர் வன்சமண் கையர்மெய் யிற்றடு மாற்றத்தார்
வாக்கிய லும்முரை பற்றுவிட்டுமதி யொண்மையால்
ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஆக்கிய செல்வனை யேத்திவாழ் மின்னரு ளாகவே, 10

பொருள்தந்தது என்க. "இணை இலி" சிவனுக்கு ஒரு பெயர். "இணையிலி தொல்லைத்தில்லோன்" என்றது திருக்கோவையார். துணை - ஒப்பு. இலி - இல்லாதவன்.

7 பல தீமை விளைவிப்பனவாகிய சனி முதலிய நவக்கிரகங்களை என்பது முதலடிக்குப் பொருள். முனிவுசெய்து - கோபித்துச் சிறையி லிட்டு. உகந்தான் - தன்னுற்றலை மெச்சியவன். இந்திரசித்துப் பிறக்கும் பொழுது சோதிடம் இன்றுள்ள கிரக நிலையில் குழந்தை பிறந்தால் தீமையே தரும் என்றுகூற இராவணன் தான்பெற்ற வரத்தின் வலியால் - அக்கிரகங்களை யொருசேரச் சிறையில் இட்டுக் குழந்தை பிறந்த பின்னர் அக்கிரகங்களை விடுதலை செய்தான் இராவணன் என்பது இராமாயணம்.

8. பெயர் - புகழ். சாய்கெட - சாய்ந்து ஒழிய. "சாய்தல்-(குறைதல்) ஒய்தல்" என்பன. தொல் "உரியியல்" உலகேழெனத் திசை பத்தெனத் தான் ஒருவனுமே பலவாகி நின்றவா தோணேக்கம் ஆடாமோ. என்னும் திருவாசகத்தோடு ஒப்பிடுக.

10. ஏ(வு)க்கு - அம்புக்கு. "கோளிலி எம் பெருமாற்கு" என்புழிப் போல இராமேச்சரம் ஆக்கி தனது தலமாகச் செய்துகொண்ட செல்வன் சிவபெருமான். அருள் ஆக - திருவருள் கிடைக்கும்படி. ஏத்தி வாழ்மின்

பகலவன் மீதியங் காமைக்காத் தபதியோன்றனை
இகலழி வித்தவ னேத்துகோ யிலிரா மேச்சுரம்
புகலியுள் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கில்லை யல்லலே. 11

திருச்சிற்றம்பலம்

11. தான் பெற்ற வரத்தின் ஆற்றலால், சூரியன் தன் நகருக்கு மேலே நேரே செல்லக்கூடாது என ஆணைசெய்த இராவணன் என்பது முதலடியில் குறித்த பொருள். இராமேச்சுரத்தை ஞானசம்பந்தன் பாடிய இத்தமிழ்ப் பாடல்களை மனத்தோடு துதிக்க வல்லவர்களுக்கு எல்லை இல்லை என்பது திருக்கடைக்காப்புச் செய்யுளின் கருத்து.

கவள மாளிகைத் திவளும் யானையின்
கவுட்டலைக் கும்பத்
தும்பர்ப் பதணத் தம்புதந் திளைக்கும்
பெருவளந் தழீஇத் திருவளர் புகலி
விளங்கப் பிறந்த வளங்கொள் சம்பந்தன்
கருதியஞ் செவ்விச் சுருதியஞ் சிலம்பில்
தேமரு தினைவளர் காமரு புனத்து
மும்மதஞ் சொரியும் வெம்முகக் கைம்மா
மூரி மருப்பிற் சீரிய முத்துக்
கொடுஞ்சிலை வளைத்தே கொடுஞ்சரந் துரந்து
முற்பட வந்த முயன்றங் குதவிசெய்
வெற்பனுக் கல்து
சுணங்கணி மென்முலைச் சுரிகுழல் மாதினை
மணஞ்செய மதிப்பது நமக்குவன் பழியே.

—மும்மணிக்கோவை.

# 11 திருப் புனவாயில்

## 269 பதிகவரலாறு

செப்பரிய புகழுடைய திருவாடானை சேர்ந்து செந்தமிழ் மாலைகள் சார்த்தியவரும் உலகுய்ய ஞானம் உண்டாரும் ஆகிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனார், சிவனார் மன்னும் ஒப்பரிய புனவாயில் போற்றிசெய்து வணங்கிப் பாடியருளியது இத் திருப்பதிகம்.

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மின்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்
பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
அன்னமன் னந்நடை யாளொா டும்மம ரும்மிடம்
புன்னைநன் மாமலர் பொன்னுதிர்க் கும்புன வாயிலே. 1

விண்டவர் தம்புர மூன்றெரித் துவிடை யேறிப்போய்
வண்ட மருங்குழல் மங்கையொ டும்மகிழ்ந் தானிடம்
கண்டலு ஞாழலு நின்றுபெ ருங்கடற் கானல்வாய்ப்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுன வாயிலே. 2

விடையுடை வெல்கொடி யேந்தினு னும்விறற் பாரிடம்
புடைபட வாடிய வேடத்தா னும்புன வாயிலில்
தொடைநவில் கொன்றையந் தாரினு னுஞ்சுடர் வெண்மழுப்
படைவல னேந்திய பால்நெய்யா டும்பர மனன்றே. 3

1. மின் இயல் - ஒளிபொருந்திய. செஞ்சடை வெண்பிறையன் - முரண்தொடை. பன்னிய - சொல்லியவற்றையே திருப்பிச் சொல்லுகின்ற. மறை - கனம் சடைபோன்றவை பல. ஊர்கள் போய் (5-ம் வே - தொகை) பல ஊர்களின்றும் போய் அமரும் இடம். மாமலர் போன்று உதிர்க்கும் - பொன்போன்ற மகரந்தத்தை உதிர்க்கும் புனவாயில் என்க.

2. பின்னிரண்டடிக்கு - பெருங் கடற்கரைச் சோலையில் தாழையும். புலிநகக் கொன்றையும் நிலைக்கப்பெற்று, தாமரை மலர்களையுடைய பாய்கயல் சூழப்பட புனவாயிலே மங்கையொடும் மகிழ்ந்தானிடமாவது.

3. வெல்கொடி - வெல்லும்கொடி. விறல்பாரிடம் புடைபட - வலிமையையுடைய பூதங்கள் சூழ. ஆடிய வேடத்தானும்-ஆடிய கோலத்தை உடையவனும். தொடைநவிலக் கொன்றை அம்தாரினுனும் - மாலையாக

சங்கவெண் தோடணி காதின னுஞ்சடை தாழவே
அங்கையி லங்கழ லேந்தின னும்மழ காகவே
பொங்கர வம்மணி மார்பின னும்புன வாயிலில்
பைங்கண்வெள் ளேற்றண்ண லாகிநின்ற பரமேட்டியே. 4

கலிபடு தண்கடல் நஞ்சமுண் டகறைக் கண்டனும்
புலியதள் பாம்பரைச் சுற்றின னும்புன வாயிலில்
ஒலிதரு தண்புன லோடெருக் கும்மத மத்தமும்
மெலிதரு வெண்பிறை சூடிநின் றவிடையூர்தியே. 5

வாருறு மென்முலை மங்கைபா டநட மாடிப்போய்க்
காருறு கொன்றைவெண் டிங்களா னுங்கனல் வாயதோர்
போருறு வெண்மழு வேந்தின னும்புன வாயிலில்
சீருறு செல்வமல் கவ்விருந்த சிவலோகனே. 6

எடுத்துச் செல்லப்படும் கொன்றை மாலையையுடையவனும், கொன்றை மலர் ஓங்கார வடிவு உடைமையால் பிரணவமந்திரத்துக்கு உரியபொருள். சிவபெருமானே (பிறரல்லர்) எனற்கு அறிகுறியாய் நிலவுவது மழுப்படை. ஏந்திய ஆடும் பரமனன்றே - புனவாயிலில் கொன்றை யந்தாரினனுமா யிருப்பவன்.

4. வெண்சங்கத்தோடு அணிகாதினன் - "சங்கக்குழையார்" என்ற சுந்தர மூர்த்திகள் தேவாரத்தாலும் காண்க. அங்கை இலங்கு அழல் ஏந்தினனும் - உள்ளங்கையில் விளங்கும் நெருப்பை ஏந்தினவனும். அரவம்மணிமார்பு விரித்தல்விகாரம், இசையின் பொருட்டு. ஓரெழுத் துக்குரிய பொருள் உயர்நெடுமால். அரிய பெயர் நீர் எழுத்து.

பைங்கண் வெள்ஏறு - பசிய கண்ணையுடைய வெள்ஏறு - இவ் ஈற்றடி திருநள்ளாற்றுப் பதிகத்திலும் ஞானசம்பந்தப்பெருமான் திருவாயில் வருகிறது.

5. கலிபடு - ஓசைபொருந்திய கடல் - இதனால் கடல் ஆர்கலி எனவும் படும். மதம் - ஒருவகை வாசனை. மத்தம் - பொன்னூமத்தை. தக்கனிட்ட சாபத்தினால் நாடோறும் ஒவ்வோர் கலையாய்க்குறைந்து ஒரு கலையோடு சிவனைச் சரண்புகுந்தமையின் 'மெலிதரு பிறை' யெனப் பட்டது.

6. மங்கை - சிவகாமவல்லி. மங்கை பாட நடமாடி. கொன்றைமரம் விசேடமாகப் பூப்பது கார்காலத்தில் ஆதலால் "காருறு கொன்றை"

பெருங்கடல் நஞ்சமு துண்டுகந்து பெருங் காட்டிடைத்
திருந்திள மென்முலைத் தேவிபா டநட மாடிப்போய்ப்
பொருந்தலர் தம்புர மூன்றுமெய்து புனவாயிலில்
இருந்தவன் தன்கழ லேத்துவார்கட் கிடர்இல்லையே. 7

மனமிகு வேலனவ் வாளரக் கன்வலி ஒல்கிட
வனமிகு மால்வரை யால்அடர்த் தானிட மன்னிய
இனமிகு தொல்புகழ் பாடல்ஆ டல்எழின் மல்கிய
புனமிகு கொன்றையந் தென்றலார்ந்த புனவாயிலே. 8

திருவளர் தாமரை மேவினு னும்திகழ் பாற்கடற்
கருநிற வண்ணனும் காண்பரிய கடவுள்ளிடம்
நரல்சுரி சங்கொடும் இப்பியுந் திந்நல மல்கிய
பொருகடல் வெண்டிரை வந்தெறி யும்புன வாயிலே. 9

எனப்பட்டது "கண்ணி கார்நறுங்கொன்றை" எனப் புறநானூற்றில் வருவதுகாண்க. சிறப்புப்பொருந்திய செல்வம் பெருகப் புனவாயிலில் இருந்தருளியவன்.

7. பொருந்தலர் - பகைவர். நஞ்சு அமுதுண்டு, நடமாடி, புரம் எய்து, புனவாயிலில் இருந்தவன் கழல் ஏத்த இடர் இல்லை.

8. மனம்மிகு – ஊக்கம் மிகுந்த. வேலன் - இங்கு வேல் முதலிய போர்ப்படைகளை யுடையவன். வேல் – உபலக்கணம். இராவணனுக்குச் சிவபிரான்தந்த வாளைத் தவிரப் பிற ஆயுதங்களும் உடையன் ஆதலால், வேலன் எனப்பட்டான். வேலன் - காரணக்குறி, காரண இடுகுறி யன்று. வலிஒல்கிட – வலிமை குறையும்படி. வனம் - சோலைகள். இனம் மிகு - பல்வகைப்பட்ட, தொல் புகழ் - சிவபிரானது பழமையான புகழைப் பாடுவதும், பாடி ஆடுவதும் ஆகிய அழகுமிகுந்த புனவாயில், அடர்த் தானது இடம் ஆகும். புனம் – காடு; முல்லைநிலம். கொன்றை முல்லைக் கருப்பொருளாதலால் 'புனம் மிகுகொன்றை' எனப்பட்டது. கொன்றை மரச்சோலையிலே தென்றல் உலாவு வாயில் என்க. இது "தென்றலார் புகுந்துலவும் திருத்தோணிபுரத்துறையும் சடையார்' என்று வேறு இடத்தும் வருவதறிக.

9. திருவளர்தாமரை - திணைமயக்கம். "உரிப்பொருளல்லன மயங் கவும் பெறுமே" யென்பது சூத்திரம். நரல்-ஒலிக்கின்ற. சுரிசங்கு - சுரிந்த முகத்தையுடைய சங்கு. பொருகடல் - கரையை மோதும் கடல். காண்பரி

போதியெ னப்பெய ராயினு ரும்பொறி யில்சமண்
சாதியு ரைப்பன கொண்டயர்ந் துதளர் வெய்தன்மின்
போதவிழ் தண்பொழில் மல்குமந் தண்புன வாயிலில்
வேதனை நாடொறு மேத்துவார் மேல்வினை வீடுமே, 10

பொற்றொடி யாளுமை பங்கன்மேவும் புன வாயிலைக்
கற்றவர் தாந்தொழு தேத்தநின் றகடற் காழியான்
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன தமிழ் நன்மையால்
அற்றமில் பாடல்பத் தேத்தவல் லார்அருள் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

யான் - காண்டல் அரியவன். காண்பு - தொழிற்பெயர். கடவுளிடம் புனவாயில் 'கடவுள்ளிடம்,' 'உந்நிந் நலம்' என்பனவும், மேலைப்பாடலில் ஆடல் லெழில் என்பதும் இசைநோக்கி விரித்தல் விகாரப்பட்டன.

10. போதி - அரசமரம். போதி எனப் பெயராயினும் என்பது புத்தரைக் குறித்தது. சமண் - சமணர். எய்தன்மின் - எய்தா (அடையா) தீர்கள். வேதன் - வேதத்தின் பொருளாயுள்ளவன்.

11. கடல்காழி - கடலுக்கு அணித்தான சீர்காழி. நற்றமிழ் - வீட்டு நெறி தரவல்ல தமிழ். "நற்றவஞ் செய்வார்க்கிடம்." அற்றம் - சொற் பொருளறவு. இல் - இல்லையாக்குகின்ற. பாடல் - அந்தம் முன் காக்கும் அஞ்செழுத்து.

பழியொன்றும் ஓராதே பாயிடுக்கி வாளா
கழியுஞ் சமண்கையர் தம்மை—அழியத்
துரந்தரங்கச் சென்றான் சுரும்பரற்றும் பாதம்
நிரந்தரம்போய் நெஞ்சே நினை.

நினையாதரவெய்தி மேகலை நெக்கு வளைசரிவாள்
தனையாவ வென்றின் றருளுதி யேதடஞ் சாலிவயற்
கனையா வரும்மேதி கன்றுக் கிரங்கித்தன் கால்வழிபால்
நனையா வருங்காழி மேவிய சீர்ஞான சம்பந்தனே.

—மும்மணிக்கோவை

# 12 திருக் கோட்டாறு

## 272 பதிகவரலாறு

முத்தமிழ்விரகர் திருநள்ளாற்றை வழிபட்டுச் சென்று திருக்கோட்டாறு சேர்ந்து, போற்றிப் பணிந்து பாடி யருளியவற்றுள் ஒன்று இத்திருப் பதிகம்.

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வேதியன் விண்ணவ ரேத்தநின்ருன் விளங் கும்மறை
ஓதிய வொண்பொரு ளாகிநின்ரு ெனளி யார்கிளி
கோதிய தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
ஆதியை யேநினைந் தேத்தவல் லார்க்கல்ல லில்லையே. 1

ஏலம லர்க்குழன் மங்கைநல் லாள்இம வான்மகள்
பாலம ருந்திரு மேனியெங்கள் பரமேட்டியும்
கோல மலர்ப்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆலநீ ழற்கீழி ருந்தறஞ் சொன்ன அழகனே. 2

இலைமல்கு சூலமொன் றேந்தினும் இமை யோர்தொழ
மலைமல்கு மங்கையோர் பங்கனுய மணி கண்டனும்
குலைமல்கு தண்பொழில் சூழ்ந்தழகார் திருக் கோட்டாற்றுள்
அலைமல்கு வார்சடை யேற்றுகந்த அழகன்அன்றே. 3

1. மறை - வேதம், ஓதிய - சொல்லப்பட்ட. ஒண்பொருள் ஆகி நின்ருன். வேதம் – பிரபலசுருதி. ஆதியிற் கூறுவதே ஏனையவற்றினும் சிறந்த பிரமாணமாகும். ஆகவே அவ்வேதத்தாற் பிரதி பாதிக்கப்பட்ட எவற்றிலும் சிறந்தபொருள் எனப்படுதலின் மறையோதிய ஒண்பொரு ளாகி நின்ருனென்ருர்.

2. ஏலம் - மயிர்ச்சாந்து. பால்-(இடம்) பக்கம். "அறம் சொன்ன அழகன்" அறம் என்பது, புருடார்த்தங்களையன்று.

3. இலை மல்கு சூலம், மல்கு உவமானம். மலைமல்கும் மங்கை - மலைகளோடு மிக்க உறவுடைய மங்கையாகிய உமாதேவி, இமயமலை, கைலை நீங்கிய ஏனையமலைகளுக்கும் அரசனுதலின் அம்மலைகளெல்லாம்

ஊனம ரும்முட லுள்ளிருந்த வுமை பங்கனும்
வானம ரும்மதி சென்னிவைத்த மறை யோதியும்
தேனம ரும்மலர்ச் சோலைசூழ்ந்த திருக் கோட்டாற்றுள்
தானம ரும்விடை யானும்எங்கள் தலைவன் அன்றே. 4

வம்பல ரும்மலர்க் கோதை பாகம்மகிழ் மைந்தனும்
செம்பவ ளத்திரு மேனிவெண் ணீறணி செல்வனும்
கொம்பம ரும்மலர் வண்டுகெண்டுந் திருக் கோட்டாற்றுள்
நம்பனெனப் பணிவார்க்கருள் செய்யெங்கள் நாதனே. 5

அம்பிகைக்கு உரியவாயின. கைலைமலை அவளுடையதேயாதலால் "மலை மல்கு மங்கை" என்பதில் யாது வியப்பு? குலை - சோலைகளின் மரங் களிற் காய்த்துத் தொங்கும் குலைகள். அலை - சினையாகு பெயராய்க் கங்கையை யுணர்த்திற்று.

உகப்பு - உயர்வு என்னும் பொருளில் வரும் உரிச்சொல். உகந்த - உவந்த, விரும்பிய என்ற பொருளில் இங்கு வந்தது. "ஆயிரம் பேருகந் தானும் ஆரூரமர்ந்த அம்மானே" என்னும் அப்பமூர்த்திகள் தேவாரம் முதலியவற்றானும் அறிக.

4. ஊன் - மாமிசம். உடலுள்ளிருந்த உமைபங்கன் என்றது, உடலில் உள்ளது உயிர். உயிரில் உள்ளது சிவம். உயிரால் உடல் இயங்குகிறது. சிவத்தினால் உயிரியங்குகிறது. "எவ்வுயிரும் ஈசன் சந்நிதியதாகும்" என்று சிவஞான சித்தியார் ஒற்றுமை நயம்பற்றி உயிரி லிருக்கும் சிவனை உடலுள் இருப்பானாகக் கூறியது இப்பாட்டு.

மறை ஓதி - வேதங்களை ஓதினவன். மழுவாள் வலனேந்தி மறை யோதீ என்பது சுந்தரமூர்த்திகள் தேவாரம்.

5. வம்பு அலரும் மலர்க்கோதை - வாசனை விரியும் மாலையணிந்த கூந்தலையுடைய உமாதேவியார். மைந்தன் - வலியவன், மைந்து - வலிமை, இரண்டாம் அடி முரண்தொடை, 'செல்வன்' - சிவபெருமானுக் கொரு பெயர். மலர் வண்டு கெண்டும் - மலரில் வண்டுகள் உளர்கின்ற. (அருள்செய் எங்கள் நாதன்) நம்பன் - சிவபெருமானுக்கு ஒரு பெயர்; விரும்பத் தக்கவன் என்பது பொருள். "நம்பும் மேவும் நசையாகும்மே" என்பது தொல்காப்பியம். பதிப்பொருளைத்தவிர பிறபொருள்களில் விருப்பம் வைத்தால் அவை துன்பமே பயக்குமாதலால் எல்லா உயிரும்

பந்தம ரும்விரன் மங்கைநல் லாளொரு பாகமா
வெந்தம ரும்பொடிப் பூசவல்ல விகிர்தன்மிகும்
கொந்தம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அந்தண னைநினைந் தேத்தவல் லார்க்கில்லை அல்லலே. 6

துண்டம ரும்பிறை சூடிநீ டுசுடர் வண்ணனும்
வண்டம ருங்குழன் மங்கைநல் லாளொரு பங்கனும்
தெண்டிரை நீர்வயல் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அண்டமு மெண்டிசை யாகிநின்ற அழ கனன்றே. 7

இரவம ருந்நிறம் பெற்றுடைய இலங்கைக்கிறை
கரவம ரக்கயி லையெடுத் தான்வலி செற்றவன்
குரவம ரும்மலர்ச் சோலை சூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அரவம ருஞ்சடை யானடி யார்க்கருள் செய்யுமே. 8

விரும்பி யடையத்தக்கவன் சிவபெருமான் ஒருவனேயாதலால் நம்பன் எனப்பட்டான். "நதிசேர் செஞ்சடை நம்பாபோற்றி" என்ற திருவாசகமும் காண்க.

6. "பந்து அமரும் விரல்". அமரும் - என்ற சொல் போலும் என்ற பொருள்தரலால் உவமவாசகம். மாதர் கைவிரல் நுனியின் திரட்சிக்குப் பந்து உவமை. வெந்து அமரும் - வெந்து தணிந்த. பொடி - திருநீறு. பொடி பூசவல்ல விகிர்தன் - மேலானவன்.

7. வண்டு அமரும் குழல்-பூவில் உள்ள தேனைவிரும்பி வண்டுகள் தங்கும் கூந்தல். அண்டமும் எண்திசையும் ஆகித் திருக்கோட்டாற்றுள் எழுந்தருளியுள்ள அழகனே! சுடர் வண்ணனும் மங்கையாளோர் பங்கனும் ஆவான். சுடர்-தீ. "சோதியே சுடரே" என்ற திருவாசகம் காண்க.

8. "கரவு அமரக் கயிலை எடுத்தான்" - திக்கு விசயம் பண்ணவந்த இராவணன், விமானத்தோடு கயிலையைக் கடக்க வேண்டியபொழுது, தன் ஆற்றல் கருதாது பொருதற்குந் தூது அனுப்பிப் போர்புரிந்து வென்று கடக்க வேண்டும்; அன்றேல், தன் எளிமை கருதி அஞ்சி விரும்பி வரம் பெற்றுச் செல்லவேண்டும்; இவ்விரண்டுமல்லாதது வஞ்சச் செயலாதலால் கரவு அமரக் கயிலை எடுத்தான் எனப்பட்டான். குரவு - ஒருவகை மரம்; அதன் பூ சிவபூசைக்குரியது.

ஓங்கிய நாரண ஞன்முகனும் உணரா வகை
நீங்கிய தீயுரு வாகிநின்ற நிமலன்னிழற்
கோங்கம ரும்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆங்கம ரும்பெரு மாஅன்மரர்க்கமரன்அன்றே. 9

கடுக்கொடுத்த துவ ராடையர் காட்சியில் லாததோர்
தடுக்கிடுக்கிச் சமணேதிரி வார்கட்குத் தன்னருள்
கொடுக்ககில்லாக்குழகன் அமருந்திருக் கோட்டாற்றுள்
இடுக்கணின் றித்தொழு வார்அமரர்க்கிறை யாவரே. 10

கொடியுயர் மால்விடை யூர்தியினுன் திருக் கோட்டாற்றுள்
அடிகழ லார்க்கநின் ருடவல்ல அரு ளாளனைக்
கடிகம ழும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
படியிவை பாடிநின் ருடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

9. ஓங்கிய - செருக்கால் மிக்க. நீங்கிய - அளவு நீங்கிய; அளவு அறியமுடியாத - தீ உரு ஆகி நின்றவன். அமரர்க்கமரன் - மகாதேவன். இவை சிவபெருமானுக்கு உரிய பெயர்.

10. சாயம் ஆடையில் பற்றுதற் பொருட்டுக் கடுக்காய் நீர் உதவலால் கடுக்கொடுத்தது. செல்லுமிடங்களில் உட்காருவதற்குப் படுக்கை இடுக்கிச் செல்லுவர். பீலி, உறித்தாழ்ந்த கரகம் முதலியன கையிற் பற்றுதலின் தடுக்கை இடுக்கிச் செல்லுவர். சமணேதிரிவார் - சமணமதத்திலே திரிபவர். இடுக்கண் இன்றித் தொழுவார் - இடுக்கண் துன்பம். இங்குச் சிரமம் என்றபொருள், எளிய முயற்சியால் வழிபடுவா ரேனும் என்றது. பித்தன் என்றொருகால் பேசுவரேனும் பிழைத்தவை பொறுத்தருள் செய்வீர். தலவிசேடத்தால் சிறு சிவபுண்ணியமும் பெரும் பயன் விளைக்கும் என்பது கருத்து.

11. கொடி உயர் மால்விடை ஊர்தியினன் - கொடியின் கண் உயர்த்திய பெரிய இடபத்தை வாகனமாகவும். உடையவன். மால்விடை யென்பதற்குத் திருமாலாகிய விடை எனலுமாம்.

# 13 திருப்பூந்தராய்

## 271 பதிகவரலாறு

பதிகம் 5 பார்க்க.

**பண் — காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

மின்னன வெயிறுடை விரவ லோர்கள்தந்
துன்னிய புரமுகச் சுளிந்த தொன்மையர்
புன்னையம் பொழிலணி பூந்த ராய்நகர்
அன்னமன் னங்நடை யரிவை பங்கரே. 1

மூதணி முப்புரத் தெண்ணி லோர்களை
வேதணி சரத்தினால் வீட்டி னாரவர்
போதணி பொழிலமர் பூந்த ராய்நகர்த்
தாதணி குழலுமை தலைவர் காண்மினே. 2

1. மின்அன்ன எயிறுஉடை விரவலோர்கள் தம் - மின்னலைப் போன்ற பற்களையுடைய பகைவர்களாகிய அசுரர்களின் துன்னியபுரம். உச்சுளிந்த தொன்மையர் - நெருங்கியபுரம் (மூன்றும்) அழியும்படி கோபித்தருளிய பழமையானவர். புன்னையம்பொழில் - பாதிரிப் புன்னை மரச் சோலைகளினழகுடைய பூந்தராய் நகரில் எழுந்தருளியிருப்பவர் - அரிவை பங்கரே. புரம் உகச் சுளிந்த தொன்மையரே திருப்பூந்தராய் எழுந்தருளிய கடவுள் ஆவர். விரவலோர் - ஆர்விகுதி ஓர் என ஆயிற்று. சுளிதல் - கோபித்தல்.

2. மூதுஅணி - பழமையான அணிவகுப்பையுடைய. முப்புரத்து எண்ணிலோர்களை - முப்புரத்திலிருந்த அளவற்ற அசுரர்களை. வேது அணி சரத்தினால் வீட்டினார் அவர் - வெம்மையையுடைய அம்பினால் அழித்தவராகிய அப்பெருமான். திரிபுரம் எரித்தநாளில் அம்பின் அடிப் பாகம் வாயு, இடைப்பாகம் திருமால், நுனிப்பாகம் நெருப்பு ஆக அமைந் தமையால், வேது அணி சரம் எனப்பட்டது. போது அணிபொழில் - மலர்களால் அலங்கரிக்கப்பட்ட சோலைகளையுடைய. தாது அணி குழல் உமை - மகரந்தப் பொடிகளைக்கொண்ட கூந்தலையுடைய உமா தேவியார்.

தருக்கிய திரிபுரத் தவர்கள் தாம்உகப்
பெருக்கிய சிலைதனைப் பிடித்த பெற்றியர்
பொருக்கடல் புடைகரு பூந்த ராய்நகர்க்
கருக்கிய குழலுமை கணவர் காண்மினே. 3

நாகமும் வரையுமே நாணும் வில்லுமா
மாகமார் புரங்களை மறித்த மாண்பினர்
பூகமார் பொழிலணி பூந்த ராய்நகர்ப்
பாகமர் மொழியுமை பங்கர் காண்மினே. 4

வெள்ளெயி றுடையவவ் விரவ லார்களூர்
ஒள்ளெரி யூட்டிய வொருவ னுரொளிர்
புள்ளணி புறவினிற் பூந்த ராய்நகர்க்
கள்ளணி குழலுமை கணவர் காண்மினே. 5

3. தருக்கிய - இறுமாந்த. திரிபுரத்தவர்கள்தாம் உக - அழியவும். பெருக்கிய - தேவர்க்கு இன்பத்தைப் பெருக்கவும். சிலை - மேருவில் பெற்றி-தன்மை. பொருகடல் - கரையை மோதும் கடல் வினைத்தொகை. பொரு+கடல் எதுகைநோக்கியது. கருக்கிய குழல்-அம்பிகை குழலுக்கு. உவமைகூறும் பொருள்களையெல்லாம் வருத்திய குழல். கருக்கிய - கருகும்படி செய்த (வருத்திய என்றவாறு.) போர்க்கு அணிவகுத்துச் செல்லுதல்.

4. நாகமும் வரையுமே நாணும் வில்லும் ஆக எனக்கொள்ள லால் இது நிரனிறை. மாகம்ஆர் - ஆகாயத்துப் பொருந்திய. புரங்களை - திரிபுரங்களை. மறித்த - அவர் வழியிற் செல்லாது தடுத்துத் தொலைத்த. மாண்பினர் - மாட்சிமையுடையவர். பூகம் - கமுகு. பாகம் ஆர்மொழி - இனிமை தங்கிய மொழி. பாகு + அமர்மொழி என்று பிரித்து, வெல்லப் பாகுபோலும் இனிமைபொருந்திய சொல் எனலே பொருந்தும். ‘பாகமார்’ என்ற பாடம் யாண்டுளது.

5. வெள் எயிறு உடைய - அரிய உடம்பில் வெள்ளைப் பற்கள் மிக வெண்மையாய்த் தோன்றுகையால் வெள் எயிறு உடைய. புறவு - பன்னிரு பெயர்களுள் ஒன்று. ஊரை எரியூட்டிய ஒருவனூர். ஒளிர் - மின்னுகிற. புள் - பறவை.

துங்கிய ருனவர் தோற்ற மாநகர்
அங்கியில் வீழ்தர வாய்ந்த வம்பினர்
பொங்கிய கடலணி பூந்த ராய்நகர்
அங்கய லனகணி யரிவை பங்கரே. 6

அண்டர்க ளுய்ந்திட வவுணர் மாய்தரக்
கண்டவர் கடல்விட முண்ட கண்டனூர்
புண்டரீ கவ்வயற் பூந்த ராய்நகர்
வண்டமர் குழலிதன் மணாளர் காண்மினே. 7

மாசின வரக்கனை வரையின் வாட்டிய
காய்சின வெயில்களைக் கறுத்த கண்டனூர்
பூசுரர் பொலிதரு பூந்த ராய்நகர்க்
காசைசெய் குழலுமை கணவர் காண்மினே. 8

6. துங்கு இயல் தானவர் தோற்றம் மாநகர் - அசுரர்களின் தோற்றத்தையுடைய பெரிய புரங்களை. ஆய்ந்த - ஆராய்ந்து செலுத்திய. அம்கயல் அ(ன்)ன கணி அரிவை - அழகிய கயல்மீனை ஒத்த கண்ணி யாகிய உமாதேவியார் (உடையவர்.)

7. மாய்தர - மாய் - பகுதி. தா - துணைவினை. கண்டவர் - செய்தவர்.

8. மாசு × இன் + அ அரக்கனை வரையின் வாட்டிய - பாவத்தை யுடைய பாவியாகிய இராவணனைக் கயிலை மலையின்கீழ் வாடச்செய்த, காய்சின - துன்புறுத்தும் கோபத்தையுடைய. கறுத்த - கோபித்த. கண்டனூர் - தண்டத்தையுடையவர். அரசன் குற்றத்தைக் கண்டித்தான் என்றதில் வரும் கண்டித்தல் என்பதுபோல. காசை - காயாம்பூ. செய் - உவமவாசகம். மாசின - பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். அடுத்த அடியிற் காய்சினம் என வருதலால் முதலடியிலும் சினமே என்று பிரித்தல் சிறப்புடைத்தன்று. வரையின் - இன் ஏழனுருபில் வந்தது.

தாமுக மாக்கிய வசுரர் தம்பதி
வேமுக மாக்கிய விகிர்தர் கண்ணனும்
பூமக னறிகிலாப் பூந்த ராய்நகர்க்
கோமக னெழில்பெறு மரிவை கூறரே. 9

முத்தர வசுரர்கண் மொய்த்த முப்புரம்
அத்தகு மழலிடை வீட்டி னரமண்
புத்தரு மறிவொணாப் பூந்த ராய்நகர்க்
கொத்தணி குழலுமை கூறர் காண்மினே. 10

புரமெரி செய்தவர் பூந்த ராய்நகர்ப்
பரமலி குழலுமை நங்கை பங்கரைப்
பரவிய பந்தன்மெய்ப் பாடல் வல்லவர்
சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

9. தாம் - தாங்கள். முகம் ஆக்கிய - முகம்போற் சிறப்புடையதாகக் கொண்ட. வேம்முகம் ஆக்கிய - வேகும் இடமாகச்செய்த. விகிர்தர் - வேறுபட்ட தன்மையையுடையவர். பூமகன் - பிரமன். முகம் - முதலடியிற் சிறப்புடையது என்னும் பொருளிலும். இரண்டாமடியில் இடம் என்னும் பொருளிலும் வந்தது. பூமகன் - இங்கு . எண்ணும்மை தொக்கது. கோமகன் - தலைவன்.

10. முத்தர அசுரர்கள் - மூன்று தரத்தினராகிய அசுரர்கள் மிகுந்த முப்புரம். அ தகும் + அழல் + இடை + வீட்டினர் - அப்படிப்பட்ட தக்க நெருப்பின் மத்தியிற் சிக்கி அழியும்படித் தொலைத்தவர். கொத்து - பூங் கொத்து. இரும்பு வெள்ளி பொன் ஆகிய மூன்று கோட்டைகளையுடைய ராதலால் முத்தர அசுரர் எனப்பட்டனர்.

11. பரம் - பாரம். கூந்தல்; அளகபாரம் எனப் படுவதால், பரம் மலி குழல் எனப்பட்டது. மிக்க கூந்தல் என்பது பொருள். சிரம்மலி - உயர்நிலையதாகிய சிவகதி.

ஒவ்வொரு பாசுரத்திலும் திரிபுரத்தை எரித்தவர், பூந்தராய் நகரில் வீற்றிருக்கும் உமாபதி என்று கூறிவந்து, திருக்கடைக் காப்பிலும் புரம் எரிசெய்தவர் பூந்தராய் நகர் பரமலிகுழலுமை நங்கை பங்கரைப் பரவிய பந்தன் மெய்ப்பாடல் வல்லவர், சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே எனத் தொகுத்துக் கூறியிருப்பது இப்பதிகத்துக் குரிய சிறப்பியல்பு.

# 14 திருப் பைஞ்ஞீலி

## 272 பதிகவரலாறு

திருப்பாச்சிலாச்சிராமத்தில் அம்மையப்பரை வணங்கி, அங்கிருந்து கும்பிடுங் கொள்கையை மேற்கொண்ட திருஞானசம்பந்தர் பிற சிவத் தலங்களைப் போற்றி ஏத்தித், திருப்பைஞ்ஞீலியைச் சேர்ந்து சிவபெருமானைப் பாடிய மண்பரவும் தமிழ்மாலை இத் திருப்பதிகம்.

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஆரிடம் பாடில ரடிகள் காடலால்
ஓரிடங் குறைவில ருடையர் கோவணம்
நீரிடஞ் சடைவிடை யூர்தி நித்தலும்
பாரிடம் பணிசெயும் பயில்பைஞ் ஞீலியே. 1

மருவிலார் திரிபுர மெரிய மால்வரை
பருவிலாக் குனித்தபைஞ் ஞீலி மேவலான்
உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத்
திருவிலா ரவர்களைத் தெருட்ட லாகுமே. 2

1. ஆரிடம் – இருடிகளுக்கு அருளிய நூலாகிய வேதத்தை. பாடிலர் – பாடலாகவுடையவர். காடு அலால் – புறங்காடு அல்லாமல். ஓர் இடம் இலர் – ஓர் இடம் குறை இலர். அதனால் ஒரு குறைவும் இல்லாதவர். நீர் இடம் சடை – தண்ணீர் இருக்கும் இடம் சடை; பாரிடம் – பூதம்; பாடுவது. வேதம், தங்குவதும் புறங்காடு. வேலை செய்வது பூதம். அத்தகையார் வீற்றிருப்பது திருப்பைஞ்ஞீலியாகும் என்பது. பயிலல், முதல் நிலைத்தொழிற்பெயர்.

2. மருவிலார் – பகைவர். பரு வில் ஆ – பருத்த வில்லாதலின். குனிதல் – வளைதல். பைஞ்ஞீலிமேலான் – திருப்பைஞ்ஞீலியில் மேவுதலையுடையவன். உருஇலான் – வடிவமில்லாதவன். அவன் பெருமையையுணர்பவர்; திருவுடையவர். உணர்கிலாதவர்; திருவிலாதவர். அவர்களை அறிவுரை கூறித்தெளிவியாது என்பது பாசுரத்தின் இறுதிப் பகுதியின் பொருள். உருவிலான் – சிவனுக்கு ஒருபெயர். உளங் கொளல் – உணர்தல்.

அஞ்சுரும் பணிமல ரமுத மாந்தித்தேன்
பஞ்சுரம் பயிற்றுபைஞ் ஞீலி மேவலான்
வெஞ்சுரந் தனிலுமை வெருவ வந்ததோர்
குஞ்சரம் படவுரி போர்த்த கொள்கையே. 3

கோடல்கள் புறவணி கொல்லை முல்லைமேல்
பாடல்வண் டிசைமுரல் பயில்பைஞ் ஞீலியார்
பேடல ராணலர் பெண்ணு மல்லதோர்
ஆடலை யுகந்தவெம் மடிக ளல்லரே. 4

விழியிலா நகுதலை விளங்கி ளம்பிறை
சுழியிலார் வருபுனற் சூழல் தாங்கினன்
பழியிலார் பரவுபைஞ் ஞீலி பாடலான்
கிழியிலார் கேண்மையைக் கெடுக்க லாகுமே. 5

3. அம் சுரும்பு அணி மலர் அமுதம் மாந்தித் தேன் பஞ்சுரம் பயிற்று பைஞ்ஞீலி - அழகிய சுரும்பு என்னும் சாதி வண்டினம் மலரை அடைந்து தேனைக்குடித்துத் தேன் என்னும் சாதிவண்டினங்களுக்குப் பஞ்சுரம் என்னும் பண்ணைப்பாடிப் பழக்கும் திருப்பைஞ்ஞீலி. வெம்சுரம் - வெப்பமாகிய காடு. மேவலான். மேவல் ஆன் - தங்குதலையுடையவன். கொள்கையே; இங்கு என்னே என்னும் பயனிலை அவாய்நிலையாற் கூடி முடிந்தது.

4. கோடல் - காந்தள் புறவணிகொல்லை முல்லைமேல் பாடல் வண்டிசை முரல் பயில் பைஞ்ஞீலி-முல்லை நிலத்தைச் சார்ந்த காடுகளில் முல்லைமலரின் மேல் பாடுதலையுடைய வண்டினம் இசைமுரலுதல் பொருந்திய திருப்பைஞ்ஞீலி. முரலுதல் மூக்கினால் - ஒலித்தல். முரலுதல் என்ற சொல் பகுதியளவாய் முரல் என்று நின்றமை முதனிலைத் தொழிற் பெயர். பயில் பைஞ்ஞீலி - வினைத்தொகை.

5. நகு வெண்டலையையும் பிறையையும் கங்கை நீரைச் சுற்றிய சடையிடத்தே தரித்தவன். சுழியில் ஆர் - சுழியோடு பொருந்திய, வேற்றுமை மயக்கம். பைஞ்ஞீலிபாடலான் - திருப்பைஞ்ஞீலியின் கண் ஆடுதலையுடையவனாகி வீற்றிருப்பவன்.

விடையுடைக் கொடிவல னேந்தி வெண்மழுப்
படையுடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவலான்
துடியிடைக் கலையல்கு லாளோர் பாகமாச்
சடையிடைப் புனல்வைத்த சதுர னல்லனே. 6

தூயவன் தூயவெண் ணீறு மேனிமேல்
பாயவன் பாயபைஞ் ஞீலி கோயிலா
மேயவன் வேய்புரை தோளி பாகமா
ஏயவ னெனைச்செயுந் தன்மை யென்கொலோ. 7

தொத்தின தோள்முடி யுடைய வன்றலை
பத்தினை நெரித்தபைஞ் ஞீலி மேவலான்
முத்தினை முறுவல்செய் தாளோர் பாகமாப்
பொத்தினன் திருந்தடி பொருந்தி வாழ்மினே. 8

6. வெண்மழு - இரும்பால் ஆகிய ஓர் ஆயுதம். தீட்டப்பெற்று வெண்மையாயிருப்பதால் வெண்மழு எனப் பட்டது. "விரவார் வெருவத்திருப்பு சூலத்தினன், ஆதலால் இரத்தக்கறை முதலியன படியாத வெண்மழு என்றார். ஒருத்தி தன்னுடம்பில் ஒருபாகத்திலிருக்கவும் சடையில் மற்றொருத்தியை நீர்வடிவமாகத் தோன்றுமாறு வைத்த சாமர்த்தியவான் அல்லரோ?

7, பாய்தல் - பரவுதல். வெண்ணீறுமேனி மேல்பாயவன் - வெண்ணீற்றை உடம்பின்மேல் பரவப்பூசினவன். பாய - இடமகன்ற (விஸ்தாரமான) பைஞ்ஞீலி. கோயில் - மரூஉ. மேயவன் - விரும்பியவன். மே - விருப்பம். "நம்பும் மேவும் நசையாகும்மே (தொல், சொல், உரி.) வேய்புரை தோளி - மூங்கில் போன்ற தோளையுடையவள். பாகமற ஏயவன் - பாகமாகப் பொருந்தியவன். சிவனாகிய என்னைச் சிவனாகச் செய்யும் பண்பு என்னே? எனக் கடைசியடிக்குப் பொருள் கொள்க. சொல் - அசைநிலை.

8. தொத்தின - கொத்தாகிய. தோள் - தோள் இருபதையும். முடியுடையவன் தலை. பத்தினை - பத்தையும். முத்தினை முறுவல் செய்தாள் - முத்தைப் பல்லாகச் செய்து கொண்ட உமாதேவியார் என்றது, முத்துப் போன்ற பல்லையுடையவள் என்றபடி. பொத்தினன்-அணைத்துக் கொண்டவன். முத்தை இகழ்ந்தவள் என்றும் ஆம்.

நீருடைப் போதுறை வானு மாலுமாய்ச்
சீருடைக் கழலடி சென்னி காண்கிலர்
பாருடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவிய
தாருடைக் கொன்றையந் தலைவர் தன்மையே. 9

பீலியார் பெருமையும் பிடகர் நூன்மையும்
சாலியா தவர்களைச் சாதி யாததோர்
கோலியா வருவரை கூட்டி யெய்தபைஞ்
ஞீலியான் கழலடி நினைந்து வாழ்மினே. 10

கண்புனல் விளைவயற் காழிக் கற்பகம்
நண்புண ரருமறை ஞான சம்பந்தன்
பண்பினர் பரவுபைஞ் ஞீலி பாடுவார்
உண்பின வுலகினி லோங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

9. நீருடைப்போது-தண்ணீரைப் பிறப்பிடமாகவுடைய தாமரைப்பூ. பிரமனும் மாலுமாய் இருவரும் கூடித்தேடியும் அடி சென்னி காண்கிலார் என்பது எதிர்நிரல் நிறையாகலின், முறையே சென்னி, அடிகாண்கிலார் எனக்கூட்டுக.

பார்உடைக் கடவுள் - உலகம் உடைமைப் பொருளாகத் தான் உடையோனாகிய (உலகத்துக்குப் பதியாகிய) கடவுள். பார் - பூமி. இங்கே உலகம் என்ற பொருளில் வந்தது. போதுறைவானும் மாலும் காண்கிலர்.

10. பீலியார் - மயிற்பீலியை யேந்திவரும் சமணர். எறும்பு முதலிய உயிர்களுக்கும் துன்பம் நேராதவாறு மெல்லிய பொருளாகிய மயில் தோகையால் வழியைச் சீத்துச் செல்வது சமணமுனிவர். செயல் பிடகர் - பௌத்தர்; புத்த தருமம் உரைக்கும் நூல் பிடகம் எனப்படும். வகைநோக்கித் திரிபிடகம் எனவும் படும். நூன்மை - நூலின் பொருள். சாலியாதவர் - சாதியாதவர்.

11. கண் - இடமெல்லாம். புனல் - நீர் நிலையையும் விளைவயல் - விளையும் வயல்களையும், உடைய. காழி - சீகாழியுள். கற்பகம் - கற்பகத் தருவாகிய. உண்பின உலகினில் - முற்பிறப்பில் செய்த வினைகளை நுகர் தற்குரியபுவனமாகிய இவ்வுலகத்தில். உண்பின - குறிப்புப் பெயரெச்சம்.

# 15 திரு வெண்காடு

## 273 பதிகவரலாறு

பொன்னிதழ்க் கொன்றை வன்னிச் சென்னியர், திருவெண்காட்டில், மன்னியசீர்ச்சண்பைமன்னரைத்துன்னிய பெருமகிழ்ச்சிஉடன் பொங்கக் கொண்டு சென்ற திருத்தொண்டர் சூழக் கோயிலுட் புகுந்து, தொழுது, முக்குளம் பாடி, கண்காட்டும் நுதலைக்கருதிப் பாடிய பதிகமாலை இத்திருப் பதிகம்.

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மந்திர மறையவை வான வரொடும்
இந்திரன் வழிபட நின்ற எம்மிறை
வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய
அந்தமு முதலுடை யடிக ளல்லரே. 1

படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்
உடைவிரி கோவண முகந்த கொள்கையர்
விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய
சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே. 2

ஸ்ரீ பஞ்சாட்சரமாகிய திவ்விய மந்திரத்தைத் தனி நடுப்பகுதியுள்ள தாகிய வேதங்களும் தேவர்களும் இந்திரனும் வழிபாடு புரிய எழுந்தரு ளிய எமது பதி. இதுமுதல் இரண்டடிகளுக்கு உரை. இறுதியாம் பொருள் எவற்றினுக்கும் இறுதியாமவரும் முதலாம், பொருள் எவற்றிற்கும் முதலானவரும் ஆவர்.

முதல் அடியில் வரும் எண் ஓடுச் சொல்லை மறையொடும், இந்திர னொடும் ஒட்டுக. மந்திர மறைகளோடும் தேவர்களோடும் இந்திரனும் வழிபட நின்ற இறை. மறை அவை - இதில் அவை - பகுதிப்பொருள் விகுதி.

2. படையுடை மழுவினர் - மழுவைப் படையாக வுடையவர். தோலின் உடை - தோலாகிய உடை, இங்கு இன் - தவிர் வழிவந்த சாரியை யென்பர் நச்சினர்க்கினியர். "முள்ளின் ஊசித்துன்னம்" - சீவக சிந்தாமணி.

பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்
தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்
மேலவர் பரவுவெண் காடு மேவிய
ஆலம தமர்ந்தவெம் மடிக ளல்லரே. 3

ஞாழலுஞ் செருந்தியு நறுமலர்ப் புன்னையுந்
தாழைவெண் குருகயல் தயங்கு கானலில்
வேழம துரித்தவெண் காடு மேவிய
யாழின திசையுடை யிறைவ ரல்லரே. 4

பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்
ஏதங்கள் பலவிடர் தீர்க்கு மெம்மிறை
வேதங்கண் முதல்வர்வெண் காடு மேவிய
பாதங்கள் தொழநின்ற பரம ரல்லரே. 5

சடையில் வைத்த திறமையை யுடையவன். இதில் திறமை என் எனில் நீரானது உச்சியிலிருந்து கீழே வழிந்து ஒருவழி நில்லாமல் பரந்து ஓடிச்செல்லும் நிலத்துக்கு ஏற்ற இயல்பையுடையது. சுவையடையும்இயல் பினது, அதனை அடக்கித் திவலையாக்கிச் சடையில் நிலையாகவைத்தல் ஒரு திறமையே யாம். அவ்வாறு செய்து பழகி அப்பழக்கத்தால் கீழ் நோக்கிப் பல்லாயிர நினைப்பாகப் பரவிச் சார்ந்ததன் வன்மையாக விரிந்து ஓடும் என் மனத்தை அணு அளவிற்சுருக்கித் தன் திருவடியை நினைக்க நிலைக்க வைத்த வல்லாளன் என்னும் கருத்து.

3. தோலொடு நூலிழைதுதைந்த மார்பினர். ஆலம் அது அமரும்-கல்லாலின் அடியில் அமரும் எம் அடிகள். இனி நஞ்சை விரும்பியுண்ட எனினும். அமையும் அது - பகுதிப்பொருள் விகுதி.

4. ஞாழல் - புலிநகக்கொன்றை. ஞாழற்பூவும், செருந்திப் பூவும் (செருந்தி - செந்நிறப் பூவையுடைய ஒரு மரம்,) புன்னைப்பூவும் ஆகிய இவைகள் விளங்கும் கடற்கரைச் சோலையில் உள்ள திருவெண்காடு மேவிய - யானையையுரித்த - இசையையுடைய - இறைவர் எனத் தனித் தனிக் கூட்டுக. ஞாழல், செருந்தி இரண்டும் முதல் ஆகுபெயர்.

5. ஏதம் - குற்றம். ஏதங்களையும் பல இடர்களையும் தீர்க்கும் எமது பதி. வெண்காடு மேவிய பரமர் பாதங்களைத் தொழ என்பதற்கு அடியார் வினைமுதல் வருவித்துரைக்கப்படும். "அடியார்கள் குடியாகப் பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலும்" என்புழிப்போல.

மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்
எண்ணிய தேவர்கள் இறைஞ்சும் எம்மிறை
விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய
அண்ணலை அடிதொழ அல்லல் இல்லையே. 6

நயந்தவர்க் கருள்பல நல்கி யிந்திரன்
கயந்திரம் வழிபடநின்ற கண்ணுதல்
வியந்தவர் பரவுவெண் காடுமேவிய
பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. 7

மலையுட னெடுத்தவல் லரக்கன் நீள்முடி
தலையுட னெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய
அலையுடைப் புனல்வைத்த அடிகள் அல்லரே. 8

ஏடவிழ் நறுமலர் அயனு மாலுமாய்த்
தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்
வேடம துடையவெண் காடு மேவிய
ஆடலை யமர்ந்தஎம் அடிகள் அல்லரே. 9

6. மண்ணவரும் விண்ணவரும், ஏனை விண்ணவர் தம்பொருட்டு எம்மிறையை வணங்குகின்றனர். அவர்கள் திருவெண்காடு மேவிய அண்ணலைக் கடிது வணங்கிப் பிறவியறுக்க அறிகிலர் என்பது இப்பாடலிற் குறித்த பொருளாகும். அது "வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான்" என்னும் திருவாசகத்தின் கருத்தாகும்.

7. கயந்திரம் வழிபட;- கஜேந்திரம் பூஜைசெய்ய. யானை (கஜங்) களுக்குத் தலைமையுடையது கஜேந்திரம்.

8. விலையுடை நீற்றர். அன்பே விலை. ஆநந்தமே பயன். வைத்த - சடையில் வைத்த.

9. ஏடு - பூ இதழ். தேடவும் தெரிந்தவர் தேரகிற்கிலார் வேடம் உடைய திருவெண்காடு ஆடலை. அமர்ந்த-விரும்பிய. எம் அடிகள் எனத் தனித்தனிக் கூட்டுக.

போதியர் பிண்டியர் பொருத்தம் இல்லிகள்
நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார்
வேதியர் பரவுவெண் காடு மேவிய
ஆதியை யடிதொழ அல்லல் இல்லையே. 10

நல்லவர் புகலியுள் ஞான சம்பந்தன்
செல்வனெம் சிவனுறை திருவெண் காட்டின்மேற்
சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்
அல்லலோ டருவினை அறுதல் ஆணையே. 11

திருச்சிற்றம்பலம்

10. நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார் - சைவத்தின் உயர்வு முதலிய நீதிகளை எடுத்துரைத்தலும் நல்லூழ் இன்மையால் அவற்றை நினைத்துப் பார்த்தலும் செய்யாதார்.

11. பிறவித் துன்பங்கள் அவற்றிற்கு மூலகாரணமான தொலைத்தற் கரிய வினைகளோடும் விட்டொழியும். நமது ஆணை மேலும் மேலும் வரக் கடவதுடன், வினையால் ஆனமையின் அல்லலோடு அருவினையறுதல் ஆணை கூறியருளினர்.

பழியொன்றும் ஓராதே பாயிடுக்கி வாளா
கழியுஞ் சமண்கையர் தம்மை—அழியத்
துரந்தரங்கச் செற்றான் சுரும்பரற்றும் பாதம்
நிரந்தரம் போய் நெஞ்சே நினை

நினையா தரவெய்தி மேகலை நெக்கு வளைசரிவாள்
தனையாவ என்றின் றருளுதி யேதடஞ் சாலிவயற்
கனையா வரும்மேதி கன்றுக் கிரங்கித்தன் கால்வழிபால்
நனையா வருங்காழி மேவிய சீர்ஞான சம்பந்தனே

—மும்மணிக்கோவை.

# 16 திருக் கொள்ளிக்காடு

## 274 பதிகவரலாறு

திருவாரூர், திருக்காறுயில், தேவூர், திருநெல்லிக்கா, கைச்சினம் ஆகிய தலங்களைத் தரிசித்து வருங்காலத்தில் திருக்கொள்ளிக்காடு போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

நிணம்படு சுடலையி னீறு பூசிநின்
றிணங்குவர் பேய்களோ டிடுவர் மாநடம்
உணங்கல்வெண் டலைதனில் உண்ப ராயினும்
குணம்பெரி துடையர்நங் கொள்ளிக் காடரே. 1

ஆற்றநல் லடியிணை அலர்கொண் டேத்துவான்
சாற்றிய அந்தணன் தகுதி கண்டநாள்
மாற்றல னாகிமுன் னடர்த்து வந்தணை
கூற்றினை யுதைத்தனர் கொள்ளிக் காடரே. 2

1. சுடலையில் எழும்பிய நீறு பூசிப் பேய்களோடு இணங்குவர். அங்குப் பெரிய கூத்து ஆடுவர். உலர்ந்த மண்டையோட்டில் உண்பர். ஆயின் அவரிடத்தில் என்ன குணம் உளதாவது என்னற்க; உயர்ந்த குணம் எல்லாம் உடையர் எனக் "கோயில் சுடுகாடு கொல் புலித்தோல் நல்லாடை தாயுமிலி தந்தையிலி தான் தனியன் காணேடி காயின் உலக னைத்தும் கற்பொடி காண் சாழலோ."

2. நல்ல திருவடிகளை மலர்கொண்டு முற்றப் பூசிப்பவனாய். சாற்றிய- அபயம் என்று சொல்லிய. அந்தணன் - மார்க்கண்டேயர். ஆற்ற ஏத்து வானாய்ச் சாற்றிய அந்தணன் என்க. தகுதி - இறுதி. மாற்றலன் ஆகி- யாவராலும் தவிர்க்கமுடியாதவனாகி. வந்து அணை - வந்து அடைந்த. கூற் றினை உதைத்தனர் கொள்ளிக்காடர். மாற்றுதல் - "மாற்றேனெனவந்த கூற் றனை மாற்றி" என்று திருவாசகத்திலும் வருதல் காண்க.

அத்தகு வானவர்க் காக மால்விடம்
வைத்தவர் மணிபுரை கண்டத் தின்னுளே
மத்தமும் வன்னியும் மலிந்த சென்னிமேல்
கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே. 3

பாவண மேவுசொன் மாலை யிற்பல
நாவணங் கொள்கையின் நவின்ற செய்கையர்
ஆவணங் கொண்டெமை யாள்வ ராயினும்
கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே. 4

வாரணி வனமுலை மங்கை யாளொடும்
சீரணி திருவுருத் திகழ்ந்த சென்னியர்
நாரணி சிலைதனுல் நணுக லாரெயில்
கூரெரி கொளுவினர் கொள்ளிக் காடரே. 5

பஞ்சுதோய் மெல்லடிப் பாவை யாளொடும்
மஞ்சுதோய் கயிலையுள் மகிழ்வர் நாள்தொறும்
வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை
குஞ்சரம் உரித்தனர் கொள்ளிக் காடரே. 6

3. அத்தகு - அப்படிப்பட்ட. மால்விடம் - கொடியவிடத்தை, மால் என்ற சொல் இங்குக் கொடுமையென்னும் பொருளில் வந்தது. இப்பொழுது நீலமணி போற்காணப் படுவதாகிய கண்டத்தின் உட்பாகத்தில் வைத்தவர். மத்தம் - பொன்னூமத்தை. மலிந்த - மிகுதியாக அணியப்பட்ட. கொத்துக் கொத்தாக அலரும் கொன்றையை அணிந்தவர்.

4. பாவ(ண்)ணம் - பாட்டின் இலக்கணம் (யாப்பு). மேவு - பொருந்திய. சொல் மாலையில் பல - சொல்லைத் தொடுக்கும் மாலைபோன்ற பாடல்களிற் பலவற்றை. நாவணம் - நாவிற்குப் பொருந்தும் விதமாக. கொள்கையின் - விதிப்படி. நவின்ற - பாடிய ஆவணம் கொண்டு - அடிமை ஓலை எழுதி. எமை ஆள்வர் - எங்களையாட்கொள்வார். ஆயினும், கோவணங் கொள்கையர் - கோவணம் உடையாகக் கொள்பவர். அத்தகையர் அடியோங்களுக்கு யாது தரற்பாலர் என்பது குறிப்பெச்சம்.

5. சீர் அணித் திருவுரு - சிறந்த அழகோடு கூடிய திருவுருவம். நார்-நாரி, நாணி, நணுகலார் - பகைவர். கூர் எரி - மிக்க நெருப்பு. கொளுவினார் - பற்றவைத்தார்.

6. செம்பஞ்சுக்குழம்பு தோய்ந்த மெல்லிய பாதத்தையுடைய பதுமை போன்ற அம்பிகை. மஞ்சு - மேகம். கொடிய சினத்தோடும் மருப்போடும் வந்தடைந்த குஞ்சரம் என்க.

இறையுறு வரிவளை யிசைகள் பாடிட
அறையுறு கழலடி ஆர்க்க ஆடுவர்
சிறையுறு விரிபுனல் சென்னி யின்மிசைக்
குறையுறு மதியினர் கொள்ளிக் காடரே. 7

எடுத்தனன் கயிலையை யியல் வலியினால்
அடர்த்தனர் திருவிர லால் அலறிடப்
படுத்தன ரென்றவன் பாடல் பாடலும்
கொடுத்தனர் கொற்றவாள் கொள்ளிக் காடரே. 8

தேடினா ரயன்முடி மாலுஞ் சேவடி
நாடினா ரவரென்று நணுக கிற்றிலர்
பாடினார் பரிவொடு பத்தர் சித்தமும்
கூடினார்க் கருள் செய்வர் கொள்ளிக் காடரே. 9

நாடிநின் றறிவில் நாணிலிகள் சாக்கியர்
ஓடிமுன் னோதிய வுரைகள் மெய்யல
பாடுவர் நான்மறை பயின்ற மாதொடும்
கூடுவர் திருவுருக் கொள்ளிக் காடரே. 10

7. இறை - முன்கை. உறும் - பொருந்திய. வரிவளை - கீற்றுக்களையுடைய வளையலையணிந்த உமாதேவியார். வரிவளை என்பது அன்மொழித் தொகை. அறை உறு - ஒலித்தலையுடைய. சிறை உறு - தடுக்கப்படுதலையுடைய. குறையுறுமதி - கலை குறைந்த சந்திரன்.

8. இயல் - தனக்கு உள்ள. வலியினால் - வலிமையினால். அலறிடத் திருவிரலால் அடர்த்தனர் என்க. 'நம்மைச் சிவன் வருத்தினன்' என்று தன்னுள் நினைத்து. அவன் - அவ்விராவணன்.

9. அயன்முடி, மால் சேவடி, தேடினார் என்க. தேடினவர்களாகிய அவர்களால் எப்பொழுதும் அணுக முடியாதவராயிருப்பர். அன்போடு பாடியவர்களாய் மனமும் ஒருமைப்பட்ட பத்தர்கட்கு நணுகுபவராய் இருப்பதன்றி அருளும் செய்வர் திருக்கொள்ளிக்காடர்.

10. அறிவில் நாண் இலிகள் - அறிவும் நாணமும் இல்லாதவர். ஆடையின்றி யிருக்கும் துறவிகளை நாணிலிகள் என்றார். "நாணமும் உடையும் நன்கனம் நீத்து" என்பது மணிமேகலை. அவர் உரைகள்

நற்றவர் காழியுண் ஞான சம்பந்தன்
குற்றமில் பெரும்புகழ்க் கொள்ளிக் காடரைச்
சொற்றமி ழின்னிசை மாலை சோர்வின்றிக்
கற்றவர் கழலடி காண வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

அனைத்தும் பொய். அவற்றை விட்டு நான்மறை பாடிய மாதோடும் கூடியி ருப்பவராகிய கொள்ளிக்காடர் உ ள ா ர். "அவரைச்சார்ந்து உய்தி கூடுங்கள்" என்பது குறிப்பெச்சம்.

11. நல்ல தவத்தைச் செய்தவர்களையுடைய சீகாழி. குற்றமில் பெரும் புகழ்க் கொள்ளிக்காடர்:- இறைவன் புகழே புகழ். ஏனையோர் புகழ் அனைத்தும் பொய்ப்புகழ் என்பதாம். "இறைவன் பொருள்சேர் புகழ்" என்ற திருக்குறட் பரிமேலழகருரையாலும் உணர்க.

தனமலி கமலத் திருவெனுஞ் செல்வி
விருப்பொடு திளைக்கும் வீயா இன்பத்
தாடக மாடம் நீடுதென் புகலிக்
காமரு கவினுர் கவுணியர் தலைவ
பொற்பமர் தோள நற்றமிழ் விரக
மலைமகள் புதல்வ கலைபயில் நாவ நினது
பொங்கொளி மார்பில் தங்கிய திருநீ
ருதரித் திறைஞ்சிய பேதையர் கையில்
வெள்வளை வாங்கிச் செம்பொன் கொடுத்தலிற்
பிள்ளை யாவது தெரிந்தது பிறர்க்கே.

—மும்மணிக்கோவை

# 17 திரு விசயமங்கை

## 275 பதிகவரலாறு

மூவுலகும் உய்ய நஞ்சம் உண்ட மூர்த்தியார் மேவிய திருவிசயமங்கையில் எய்தி, அந்தணியாலயம் சூழ்ந்து தாழ்ந்து, வணங்கி, அத்தலத்தில் வழிபட்ட கோதனத்தைச் சிறப்பித்து ஏத்திய செந்தமிழ்மாலை இத்திருப் பதிகம்.

**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
அரவமர் கொள்கையெம் அடிகள் கோயிலாம்
குரவமர் சுரபுன்னை கோங்கு வேங்கைகள்
விரவிய பொழிலணி விசய மங்கையே. 1

கீதமுன் னிசைதரக் கிளரும் வீணையர்
பூதமுன் னியல்புடைப் புனிதர் பொன்னகர்
கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விசய மங்கையே. 2

1. மரு - வாசனை. தெய்வக் கற்புடைய அம்பிகையின் கூந்தல் இயற்கை மணம் கமழ்வது ஆதலால் " மரு அமர் குழல் உமை " என்றார் வார்சடை........... எம் அடிகள் - நெடிய சடையின் கண்ணே பாம்பையும் விரும்பத்தக்க கொன்றை மாலையையும் உடைய எம் அடிகள். குரவும் ஏனைய மரங்களும் கலந்தபொழில்.

2. இசைப்பாட்டு முன்னே இசைக்க விளங்கும் வீணையை யுடையார் என்பது முதலடியின் பொருள். பூதம்...புனிதர் - பூதங்கள் முன்னால் தம்மைச்சூழ நடந்துவரச்செல்லும் தூயோர். கோதனம் - பசு. இங்கே இடபதேவரைக் குறிக்கும். "புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்" "வெள்விடைக் கருள்செய் விசயமங்கை" என்னும் அப்ப மூர்த்திகள் திருவாக்கிலும் காண்க.

அக்கர வரையினர் அரிவை பாகமாத்
தொக்கநல் விடையுடைச் சோதி தொன்னகர்
தக்கநல் வானவர் தலைவர் நாள்தொறும்
மிக்கவர் தொழுதெழு விசய மங்கையே. 3

தொடைமலி யிதழியுந் துன்னெ ருக்கொடு
புடைமலி சடைமுடி யடிகள் பொன்னகர்
படைமலி மழுவினர் பைங்கண் மூரிவெள்
விடைமலி கொடியணல் விசய மங்கையே. 4

தோடமர் காதினன் துதைந்த நீற்றினன்
ஏடமர் கோதையோ டினித மர்விடம்
காடமர் மாகரி கதறப் போர்த்ததோர்
வேடம துடையணல் விசய மங்கையே. 5

மைப்புரை கண்ணுமை பங்கன் வண்டழல்
ஒப்புரை மேனியெம் முடைய வன்னகர்
அப்பொடு மலர்கொடங் கிறைஞ்சி வானவர்
மெய்ப்பட வருள்புரி விசய மங்கையே. 6

3. அக்கு அரவு அரையினர் - அக்குப் பாசியையும் பாம்பையும் அணிந்த இடுப்பை உடையவர். அரை - அளவையாகு பெயர். சோதி - சிவனுக்கு ஒரு பெயர். வானவர்......... மிக்கவர் - வானவரும் அவர்கள் தலைவராகிய இந்திரன், பிரமன், திருமால் முதலியோரும் அவரினும் மிக்க அடியார்களும். தொழுது எழு விசயமங்கையே சோதி தொல் நகர். அக்கு - எலும்பும், உருத்திராக்கமும் ஆம்.

4. இதழி - கொன்றை. துன் - நெருங்கிய. எருக்கு - வெள் எருக்கம் பூமாலை. புடை - பாகம். படை மலி மழு - "படைமலிந்த மழு" என அப்ப மூர்த்திகள் திருவாக்கிலும் இந்தொடர் வருதல் காண்க. மூரி - வலிமை. வெள்விடை. மூரி என்ற சொல் மலையாளத்தில் - எருத்துக்கு வழங்கும்.

5. ஏடு - பூ இதழ். கோதை - கூந்தல், ஏடு அமர் கோதை - உமா தேவியார்; அன்மொழித்தொகை. பன் மொழித் தொடர். மாகரி கதறப் போர்த்தது, இங்கு (கதற) உரித்து என ஒரு சொல் வருவிக்க. கரி போர்த்தது ஓர் வேடம், யானைத்தோலைப் போர்த்த கோலம். அ(ண்)ணல் -

6. மை கருமை - கரிய நீலோற்பல மலருக்கு ஆகுபெயர்' லோற்பல மலரையொக்கும். கண் உமை - கண்களையுடைய உமாதேவியார். வண்தழல் - சிறந்த நெருப்பை. ஒப்பு உரை மேனி

இரும்பொனின் மலைவில்லின் எரிச ரத்தினல்
வரும்புரங் களைப்பொடி செய்த மைந்தனூர்
சுரும்பமர் கொன்றையும் தூய மத்தமும்
விரும்பிய சடையண்ணல் விசய மங்கையே 7

உளங்கைய இருபதோ டொருபதுங் கொடாங்
களந்தரும் வரையெடுத் திடும் அரக்கனைத்
தளர்ந்துட னெரிதர வடர்த்த தன்மையன்
விளங்கிழை யொடும்புகும் விசய மங்கையே. 8

மண்ணினை யுண்டவன் மலரின் மேலுறை
அண்ணல்கள் தமக்களப் பரிய அத்தனூர்
தண்ணறுஞ் சாந்தமும் பூவும் நீர்கொடு
விண்ணவர் தொழுதெழு விசய மங்கையே. 9

---

ஒப்பாக உரைக்கும் உருவத்தையுடைய. எம் உடையவன் - எம்மை ஆளாக உடையவன். அப்பு - நீர். இறைஞ்சி - மெய்ப்பட வணங்கி, உண்மையான தியானத்திலிருக்க. "மைப்பயந்த வொண்கண்" (பூம்பாவைத் திருப்பதிகம்) என்றதில் கண்ணின் கருமைக்கு ஒப்பாகாமையால் மை அஞ்சியதாதலின் மையைப் போன்ற கரியகண் எனலுமாம். பயன்பட்ட எனின் பொருந்தாது.

7. இரும் பொ(ன்)னின் மலைவி(ல்)லின - பெரிய பொன்மலை (மேரு) வில்லினல். எரி - நெருப்பாகிய சரத்தினல் (அம்பினல்) திரிபுரமெரித்த அம்பின் நுனிப்பாகம் தீக்கடவுளாயிருந்தமையால் " எரி சரம் " எனப்பட்டது. அ(ண்)ணல் - தலைவன்.

8. உளம் கைய (இம்மலை செல்லுதற்குத் தடையாயிருந்த தென்று) மனம் வெறுக்க. அளந்து - தன் இருபது தோளும் பத்துத்தலையும் கொண்ட தன் வலிமையை அளந்து தெரிந்துகொண்டு. அருவரை - எடுத்தற்கரிய கயிலைமலையை. விளங்கு இழை - (அம்மையாரால் அணியப்பெற்றதால்) விளங்கும் இழை, (அணி)யையுடைய அம்மையார்.

9. இப்பாடலின் முற்பகுதிக்குத் திருமால் பிரமர்கள் என்பது பொருள். அத்தன் - தலைவன்.

கஞ்சியுங் கவளமுண் கவணர் கட்டுரை
நஞ்சினுங் கொடியன நமர்கள் தேர்கிலார்
செஞ்சடை முடியுடைத் தேவன் நன்னகர்
விஞ்சையர் தொழுதெழு விசய மங்கையே. 10

விண்ணவர் தொழுதெழு விசய மங்கையை
நண்ணிய புகலியுள் ஞான சம்பந்தன்
பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர்
புண்ணியர் சிவகதி புகுதல் திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. கவணர் - மாறுபட்ட தன்மையை யுடையவர்கள், வடசொல். கஞ்சியும் கவளமும் உண்பவர், முறையே சமணரும் பவுத்தரும் ஆவார்.

11. ஞானசம்பந்தன் பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர். சிவ புண்ணியச் செல்வர் ஆவர். அவர்கள் சிவானந்தப் பெரு வாழ்வு அடைவது திண்ணம்.

அவனி தலநெரிய எதிர்எதிர் மலைஇச்
சொரிமதக் களிற்று மத்தகம் போழ்ந்து
செஞ்சே றாடிச் செல்வன வரியே எஞ்சாப்
படவர வுச்சிப் பருமணி பிதுங்கப்
பிடரிடைப் பாய்வன பேழ்வாய்ப் புலியே இடையிடைச்
செறியிருள் உருவச் சேண்விசும் பதனிற்
பொறிஎன விழுவன பொங்கொளி மின்னே
உறுசின வரையால் உந்திய கலுழிக்
கரையால் உழல்வன கரடியின் கணனே நிரையார்
பொருகடல் உதைந்த சுரிமுகச் சங்கு
செங்கயல் கிழித்த பங்கய மலரின்
செம்மடல் நிறைய வெண்முத் துதிர்க்கும்
பழனக் கழனிக் கழுமல நாடன்
வைகையில் அமணரை வாதுசெய் தறுத்த
சைவ சிகாமணி சம்பந்தன் வெற்பிற்
சிறுகிடை யவள்தன் பெருமுலை புணர்வான்
நெறியினில் வரலொழி நீமலை யோனே.

— மும்மணிக்கோவை

# 18 திருவைகன் மாடக்கோயில்

## 276 பதிகவரலாறு

திருக்கோழம்பத்தைக்கண்டு இறைஞ்சி, மன்றுளார் மகிழ் வைகல் மாடக்கோயிலைச்சார்ந்து, அதில் மன்னிய மருந்தை வழிபட்டுப் போற்றி மொழிந்த செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம்.

**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

துளமதி யுடைமறி தோன்று கையினர்
இளமதி யணிசடை யெந்தை யாரிடம்
உளமதி யுடையவர் வைக லோங்கிய
வளமதி தடவிய மாடக் கோயிலே. 1

மெய்யக மிளிரும்வெண் ணூலர் வேதியர்
மையகண் மலைமக ளோடும் வைகிடம்
வையக மகிழ்தர வைகல் மேற்றிசைச்
செய்யகண் வளவன்முன் செய்த கோயிலே. 2

1. து(ள்)ளமதியுடைமறி - துள்ளிக் குதிக்கக் கருத்து உடையமான் கன்று. உளம் - உள்ளம். வைகல் - தலத்தின் பெயர். மாடக்கோயில் ஆலயத்தின் பெயர்.

2. மெய் அகம் - உடம்பினிடத்தில். மிளிரும் - விளங்குகின்ற, வெண்ணூலர்-வேதியர்; வேதத்தாற் பிரதிபாதிக்கப்படுபவர். செய்ய கண் வளவன் - கோச்செங்கண்ணன் என்னும் சோழ அரசர். கோச்செங்கட் சோழ நாயனுர் வரலாற்றை அவர் மாடக்கோயில் எழுபதுகோடியமையும் தலவரலாற்றில் அறிக. கோச்செங்கட் சோழ நாயனுர் பெருமையைத் திருநாவுக்கரசு நாயனுர் ஐந்தாம் திருமுறையிலும், ஆருந் திருமுறையிலும் சுந்தரமூர்த்தி நாயனுர் ஏழாந் திருமுறையிலும் அருளினமை காண்க.

கணியணி மலர்கொடு காலை மாலையும்
பணியணி பவர்க்கருள் செய்த பான்மையர்
தணியணி யுமையொடு தாமும் தங்கிடம்
மணியணி கிளர்வைகன் மாடக் கோயிலே. 3

கொம்பியல் கோதைமுன் அஞ்சக் குஞ்சரத்
தும்பிய துரிசெய்த துங்கர் தங்கிடம்
வம்பியல் சோலைசூழ் வைகல் மேற்றிசைச்
செம்பியன் கோச்செங்க ணான்செய் கோயிலே. 4

விடமடை மிடற்றினர் வேத நாவினர்
மடமொழி மலைமக ளோடும் வைகிடம்
மடவனம் நடைபயில் வைகல் மாநகர்க்
குடதிசை நிலவிய மாடக்கோயிலே. 5

3. கணி - கண்ணி, அதே குறிக்கோளாகக் கருதி. அணி - அழகிய. பணி - திருப்பணியாகக்கொண்டு. அணிபவர்க்கு - காலையும் மாலையும் அணிமலர் கொணர்ந்து அணிபவர்களுக்கு. அருள் செய்த. பான்மையர் - தன்மையுடையவர். தணி - (தண்+இ) குளிர்ந்த அருள். அணி - தன் வடிவாகக்கொண்ட. உமை. மணி அணிகிளர் - இரத்தினங்களால் அழகு விளங்குகின்றவைகளில். மாடக்கோயில், பான்மையர் உமையொடும் தங்கும் இடம்.

4. கொம்பு இயல் கோதை - ஸ்தலத்து அம்பிகையின் பெயர். பூங்கொம்பு ஆசைவதுபோல் நடக்கின்ற அம்பிகை; கோதை - பெண். குஞ்சரத்தும்பி - இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை. துங்கர்-மேலானவர். வம்பு இயல் - வாசனையையுடைய. சோலை சூழ்ந்த தலத்துக்கு மேற்றிசையிலுள்ள கோயில். அடுத்த பாடலிலும் இக்குறிப்பு வருதல் காண்க. செம்பியன் - சோழன்.

5. விடம் அடைமிடற்றினர் - விடந்தங்கிய கழுத்தையுடையவர். வேதம் நாவினர் - வேதத்தைப்பாடும் நாவினையுடையவர். மடம்மொழி - குதலைச் சொல்லையுடைய. மலைமகள். மட அனம் - இளம் அன்னப் பறவைகள். நடைபயில் -மாதர் நடையைப் பழகுகின்ற. நிலவிய - விளங்குகின்ற, மாடக்கோயில் துங்கர் தங்குமிடம்.

நிறைபுனல் பிறையொடு நிலவு நீள்சடை
இறையவர் உறைவிடம் இலங்கு மூவெரி
மறையொடு வளர்வுசெய் வாணர் வைகலில்
திறையுடை நிறைசெல்வன் செய்த கோயிலே. 6

எரிசரம் வரிசிலை வளைய ஏவிமுன்
திரிபுர மெரிசெய்த செல்வர் சேர்விடம்
வரிவளை யவர்பயில் வைகல் மேற்றிசை
வருமுகில் அணவிய மாடக் கோயிலே. 7

மலையன இருபது தோளி னுன்வலி
தொலைவுசெய் தருள்செய்த சோதி யாரிடம்
மலர்மலி பொழிலணி வைகல் வாழ்வர்கள்
வலம்வரு மலையன மாடக் கோயிலே. 8

மாலவன் மலரவன் நேடி மால்கொள
மாலெரி யாகிய வரதர் வைகிடம்
மாலைகொ டணிமறை வாணர் வைகலில்
மாலன மணியணி மாடக் கோயிலே. 9

6. நிலவும் நீள்சடை. மூஎரி மறையொடு வளர்வு செய்வாணர் - மூவகை அக்கினிகளை - வேதத்தினோடு வளர்க்கின்றவர். எரிவாணர் - அக்கினியில் வாழ்பவர்; வாணர். (வாழ்+க்+அர்) திறை உடை நிறை செல்வன் - அரசர்கட்டும் கப்பத்தையுடைய நிறைந்த செல்வன்; கோச் செங்கட் சோழ நாயனூர்.

7. அக்கினியாகிய அம்பை. வரிசிலை - நீண்ட வில்லை வளைத்து. ஏவி - செலுத்தி. திரிபுரம் எரி செய்த செல்வர் என்பது இப்பாடலின் முற்பகுதிக்குப் பொருள். வரிவளையவர் - கீற்றுக்களையுடைய வளையணிந்த மகளிர். வரும் முகில் அணவிய - படர்ந்து வருகின்ற மேகங்கள் அளாவிய சோதியாரிடம் மாடக்கோயில்.

8. அன - அன்ன - போன்ற. வலி தொலைவு செய்து அருள் செய்த - வலிமையைத் தொலைத்து மீள அவனுக்கே அருளும் செய்த (சோதியார்) என்பது இரண்டாம் அடியின் பொருள். வலம்வந்து வணங்கு கின்ற மலையை ஒத்த மாடக்கோயில் என்பது நான்காம் அடியின் பொருள்.

9. மால் - (அவன்) திருமால். மால்கொள்ள - மயக்கம் கொள்ள. மால்எரி ஆகிய - நெருப்பு (மலை) ஆகிய. வரதர் - சிவபெருமானுக்கொரு பெயர். வேண்டிய வரங்களை அளிக்கவல்லவர், சிவபெருமானொருவனே

கடுவுடை வாயினர் கஞ்சி வாயினர்
பிடகுரை பேணிலார் பேணு கோயிலாம்
மடமுடை யவர்பயில் வைகல் மாநகர்
வடமலை யனையநன் மாடக் கோயிலே. 10

மைந்தன திடம்வைகல் மாடக் கோயிலைச்
சந்தமர் பொழிலணி சண்பை ஞானசம்
பந்தன தமிழ்கெழு பாடல் பத்திவை
சிந்தைசெய் பவர்சிவ லோகஞ் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

யாவர் ஏனையர், அத்தகையர் அல்லர். மறைவாணர்-மறையால் வாழ்பவர்; அந்தணர். மால் அ(ன்)ன மணி அணிமாடம் - மேகம்போலும் நிறத்தை யுடைய நீலமணிகளால் அழகுபடுத்தப் பெற்ற மாடக்கோயில்.

10. கடு - உடைவாயினர் - கடுக்காயைத் தின்பவர் (பவுத்தர்) கஞ்சிவாயினர் - கஞ்சியைக் குடிப்போர் (சமணர்). இவர்கள் சொல்லப்படுகின்ற திரிபிடகம் முதலிய அவர்கள் சமய நூல்களைப் பொருட்படுத்தாதவராகிய சிவனடியார்கள் பாராட்டும் கோயில். வடமலை - மேருமலை (போன்ற) மாடக்கோயிலாம்.

11. சந்து - சந்தன மரங்கள். சண்பை - சீகாழி. சிந்தை செய்பவர் சிவலோகத்து இருப்பர்.

மலைத்தலங்கள் மீதேறி மாதவங்கள் செய்தும்
முலைத்தலங்கள் நீத்தாலும் மூப்பர்—கலைத்தலைவன்
சம்பந்தற் காளாய்த் தடங்காழி கைகூப்பித்
தம்பந்தம் தீராதார் தாம்.

தாமரை மாதவி சேறிய நான்முகன் தண்பதிபோல்
காமரு சீர்வளர் காழிநன் ஞுடன் கவித்திறத்து
நாமரு மாதவர் போல்அழ கீந்துநல் வில்லிபின்னே
நீர்மரு வாத சுரத்தெங்ஙன் ஏகுமென் னேரிழையே.

—மும்மணிக்கோவை

## 19 திரு அம்பர்ப் பெருந்திருக்கோயில்

### 277 பதிகவரலாறு

இருக்கு மொழிப்பிள்ளையாரும் உருக்கும் மொழிவேந்தரும் செய்தவக் குழாத்தொடும் திருவம்பர்ப் பெருந் திருக்கோயிலை அணைந்தனர். கோயிலை வலங்கொண்டனர். திருமுன்பு பணிந்து ஏத்தி மலர் தூவிப் பரவி உருகும் அன்பொடும் தாழ்ந்து பாடியருளிய வண்டமிழ்மாலை இத்திருப்பதிகம்.

**பண் - காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

எரிதர அனல்கையில் ஏந்தி யெல்லியில்
நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே. 1

மையகண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல ஆடுவர்
ஐயநன் பொருபுன ல்அம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே 2

1. நெருப்பு, கையில் எரிய ஏந்திக்கொண்டு இரவில் மயானத்தில் நட்டம் (நடனம்) ஆடுவாய் என்பது முதலிரண்டு அடியின் கருத்து. அரிசில் அம்பொரு புனல் அம்பர் - அரிசில் ஆற்றின் நீர்வளம் பொருந்திய திரு அம்பர். குரிசில் - சிறந்தோன். செங்கண்ணவன் - கோச்செங்கட் சோழ நாயனுர். நட்டம் ஆடுபவராகிய சிவபெருமான் அம்பர்மா நகர்க்கோயில் சேர்ந்திருப்பர் என்பது முடிவு. மகாப்பிரளய காலத்தில் எங்கும் ஒரே இருள்மயமாய் இருத்தலின், எல்லியில் என்றூர். நரி திரிகான் - சுடுகாடு. "கோயில் சுடுகாடு" என்பதும் காண்க (திருவாசகம்)

2. மையகண் - மையை அணிந்த கண். மைய - குறிப்புப்பெய ரெச்சம். இருள்... ஆடுவர். இருளில் கையில் உள்ளதாகிய நெருப் பானது சுவாலை வீச, ஆடுவர். ஐய... அம்பர் - அழகிய நல்ல கரையை மோதும் (அரசிலாற்றின்) நீர்வளம் பொருந்திய அம்பர். செய்யகண் - செங்கண். இறை - அரசன்.

மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர ஆடுவர்
அறைபுன னிறைவய ல்அம்பர் மாநகர்
இறைபுனை யெழில்வளர் இடம தென்பரே. 3

இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவர்
அரவமோ டுயர்செம்ம ல்அம்பர்க் கொம்பலர்
மரவமல் குளழினகர் மருவி வாழ்வரே. 4

சங்கணி குழையினர் சாமம் பாடுவர்
வெங்கனல் கனல்தர வீசி யாடுவர்
அங்கணி விழவமர் அம்பர் மாநகர்ச்
செங்கணல் இறைசெய்த கோயில் சேர்வரே. 5

---

3. மறை - வேதத்தை. புனைபாடலர் - புனைந்து பாடுதலையுடையவர். சுடர் - நெருப்பானது. கைமல்க - கையிலேதங்க. அறை - ஒலிக்கின்ற. இறை - கோச்செங்கட் சோழ நாயனார். புனை - அலங்கரித்துச் செய்யப்பட்ட. எழில்வளர் - அழகுமிகும், இ' ம்.

4. மல்கு இளமதி - மிகுந்த இளமையையுடைய பிறைச்சந்திரன். ஈடுஉயர் பரவமல்கு அருமறை - (தன்) பெருமையின் உயர்வைத் துதிப்பதற்குப் பொருந்திய அரிய வேதத்தைப்பாடி ஆடுவர். ஈடு - பெயர். உயர் - (உயர்வு) 'உ' பண்புப்பெயர் விகுதி. அரவமோடு உயர் செம்மல் அம்பர் - ஆரவாரத்தோடு உயர்ந்த (அரிசில் நதியின்) மிகு வளத்தையுடைய அம்பர். செம்மல் - மிகுதி. கொம்பு...நகர் - கொம்புகளில் மலர்களையுடைய வெண்கடம்பச் சோலைகளையுடைய (அம்பர்) நகர்.

5. சங்கை அணிந்த காதையுடையவர். சாமவேதத்தைப் பாடுவார் கொடிய நெருப்புச் சுவாலிக்கத் தோளைவீசி ஆடுவர் - என்பது முதலிரண்டடியின் பொருள். சங்கு - ஆகு பெயர். "எண்தோள் வீசி நின்றாடும் பிரான்" என அப்பர் பெருமான் வாக்கில் வருவதால் வீசி என்பதற்குத் தோள்வருவித்துரைக்கப்பட்டது. அழகிய திருவிழாக்களை உடைய அம்பர். செங்கண்நல் இறை - நல்ல கோச்செங்கட் சோழர், செய்த கோயில்.

கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்
சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவர்
அழல்வளர் மறையவர் அம்பர்ப் பைம்பொழில்
நிழல்வளர் நெடுநகர் இடம தென்பரே. 6

இகலுறு சுடரெரி யிலங்க வீசியே
பகலிடம் பலிகொளப் பாடி யாடுவர்
அகலிட மலிபுகழ் அம்பர் வம்பவிழ்
புகலிட நெடுநகர் புகுவர் போலுமே. 7

எரியன மணிமுடி யிலங்கைக் கோன்தன
கரியன தடக்கைகள் அடர்த்த காலினர்
அரியவர் வளநகர் அம்பர் இன்பொடு
புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே. 8

6. கழல்வளர் - கழலோசை மிகும், காலையுடையவர். சுடர் - நெருப்பு. சுழல்... புனல் - நீர்ச்சுழிகளையுடைய கங்கை நீரைச், சூடி ஆடுவர். அழல் - நித்திய அக்கினி. நெடுநகர் - பெருந்திருக்கோயில். நகர் – கோயில். "நடுவூர் நகர்செய்து அடுபவம் துடைக்கும்" என்னும் கல்லாடத்தால் அறிக.

7. இகல்உறு - வலிமை மிக்க. அகல் இடம் மலிபுகழ் அம்பர் - இந்த உலகமெங்கும் மிகப் பரவிய புகழையுடைய அம்பர். போலும் - உரையசை

8. எரி அ(ன்)னமணி - நெருப்புப் போன்ற ஒளியுடைய இரத்தினம். கரியன – கருநிறத்தையுடையன ஆகிய. தடக்கைகள் - பருத்த கைகள். கரியன – வினைப்பெயர். அரியவர் வளநகர்... சூழவே - அருந்தவத் தோர் வாழ்கின்ற வளநகராகிய திருவம்பர்ப் பெருங்கோயிலுக்குத் தம் மைப் பிரிதலில்லாத பூதகணம் சூழ, மகிழ்வோடு போதலையுடையவர். புரிதல் – செய்தல் என்னும் பொதுவினை - போதல் என்னும் சிறப்புவினைப் பொருளைத்தந்தது. புரீ இயவர் என்பதன் மருஉ புரியவர் எனக்கொண்டு விரும்புதலையுடையவர் எனினும் ஆம். இனி, அரியவர்...நகர் - என்பதற்கு யாராலுங் காண்டற்கு அரியராய் இருப்பவர். அவர் வளநகர் அம்பர் ஆகும் எனலும் ஆகும்.

வெறிகிளர் மலர்மிசை யவனும் வெங்தொழிற்
பொறிகிள ரரவணைப் புல்கு செல்வனும்
அறிகில அரியவர் அம்பர்ச் செம்பியர்
செறிகழ லிறைசெய்த கோயில் சேர்வரே. 9

வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுனல் அம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துளர் உமையுந் தாமுமே. 10

அழகரை யடிகளை அம்பர் மேவிய
நிழல்திகழ் சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினில் ஓதுவீர் கொண்மின்
தமிழ்கெழு விரகினன் தமிழ்செய் மாலையே. 11

திருச்சிற்றம்பலம்

9. வெறி - வாசனை. வெங்தொழில்... அரவு - கொடிய கொலைத் தொழிலையுடையதாகிய அரவு. படப்புள்ளிகளையுடையதாகிய அரவு. புல்கு - பொருந்திய. அடிதேடி அறியாதவனைச் செல்வன் என்றது குறிப்பு மொழி. "அறனன்று மாதவனென்ப துலகு எந்தை தாள்காணார் நாண உட்கொள" என்ற குமரகுருபரர் வாக்கு இங்கு நினைவிற்கு வருகின்றது. செறிகழல் - அணிந்த கழல், செம்பியர் இறை - சோழ அரசர்.

10. வழிதலையவர் - மழித்த தலையை யுடையவர்கள் - புத்தர். பறிதலை யவர்கள் - மழித்ததால், மீளவும் முளைத்திடுமென்று பிடுங்கி விடப்படு தலால் 'பறிதலையவர்' எனப்பட்டனர்; சமணர் மொழியல் என்றதற்கு மொழியா தொழிதல் பொருளாகக் கொள்க. ஒருமை பன்மை மயக்கம். அழிதலைப் பொருபுனல் அம்பர். அங்குமிங்கும் சுற்றித் திரிதலையொழிந்து அம்பர் மாநகரில் உமையும் தாமுமாக. உளர்-இருப்பர். அவரை வணங்கிப் பயனெய்த வம்மின் என்பது.

11. நிழல் - ஒளி. உமிழ்திரை - வீசுகின்ற அலைகளையுடைய கடல். தமிழ்கெழுவிரகினன் - முத்தமிழ் விரகனாகிய நான் தமிழால் பாடப் பட்ட மாலையாகிய இப் பதிகத்தை. ஓதுவீர் - சிவபெருமானைப் பாடுவீர்! இப் பாடல்களைக் கொள்ளுங்கள்! இப்பாடல் குறில்வருக்க எதுகை. முதல் ஏழு பாசுரங்களிலும் ஆடுவர் என்றே கடவுளைப் பற்றிக் கூறப்படுகிறது.

# 20 திருப் பூவணம்

## 278 பதிகவரலாறு

திருப்புத்தூரிலிருந்து சிலநாள் வழிபட்டுத் திருநெல்வேலிக்குச் செல்லுங் காலை, இடையில் உள்ள திருக்கானப்பேர், திருச்சுழியல், குற்றாலம், குறும்பலா ஆகியவற்றைக்கும்பிடுமுன்னர், திருப்பூவணத்தை இறைஞ்சிப் புகழ்ந்து பாடியது இத் திருப்பதிகம்.

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலர் அரண மூன்றெய்த
நாதனை அடிதொழ நன்மை யாகுமே. 1

வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை
ஆனநல் லருமறை அங்கம் ஓதிய
ஞானனை அடிதொழ நன்மை யாகுமே. 2

1. போது அமர்பொழில் - மலர்கள் உள்ள சோலை. விரவலர் - பகைவர்களாகிய அசுரர்கள். அரணம் மூன்றும் எய்த - மதில் மூன்றையும் எய்த (நாதன்).

2. "வானணி ... பூவணம்"- வானத்தை அழகுசெய்கின்ற சந்திர மண்டலம் அளாவிய உச்சியையும், கருவண்டுகளுடன் தேன்வண்டுகளின் வரிசையையுடைய சோலைசூழ்ந்த திருப்பூவணம். ஆன - பொருந்திய. நல் அரு மறை - நல்ல அரிய வேதங்கள்; இருக்கு, யசுர், சாமம் இவையே சிறந்த வேதம் எனப்படும். இவை மூன்றுமே சிறந்தன என்பதை, "சிறந்தவேதம் விளங்கப் பாடி" என்ற மதுரைக் காஞ்சிக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையானும் காண்க. ஆறு அங்கம் - வேதத்தின் ஆறு அவயவம். அவை; சிக்கை, கற்பசூத்திரம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் என்பவை. ஞானன் - சிவனுக்கு ஒரு பெயர். "ஞானன் என்பவர்க்கன்றி நன்கில்லையே" என்ற (திருக்குறுந்தொகை) அப்பமூர்த்திகள் அருளிச் செயலாலுங் காண்க.

வெந்துயர் உறுபிணி வினைகள் தீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை அடிதொழ நன்மை யாகுமே. 3

வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழில்திகழ் பூவ ணத்துறை
ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை யடிதொழ நன்மை யாகுமே. 4

குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழிற்றிருப் பூவ ணத்துறை
அருந்திறல் அவுணர்தம் அரண மூன்றெய்த
பெருந்தகை அடிதொழப் பீடை யில்லையே. 5

3. வெந்துயர் - கொடுந்துன்பம். அதைத் தருவதாகிய பிணியும், அதற்குக் காரணமான கன்மமும் முற்றும் பற்றறத் தீர்விக்கும் புந்தியர் என்றது, தாங்கள் செய்வனவற்றைச் சிவார்ப்பணமாகச் செய்தலும், தங்கட்கு வருவனவற்றைச் சிவனருளெனக் கொண்டு அமைந்து நுகர்தலுமாகிய புத்திபண்ணுபவர். இதனை "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற திருவாசகத் தொடராலும் அறிக. தொழுது எழு - பேராசிரியர் உரை கொள்க. பிரயோக விவேகமுடையார் கருத்துக் கொள்ளற்க.

"மாலைக்காலத்தில் உதிக்கும் வெண்பிறையோடு கங்கையைச் சூடிய நந்தி" என்பது மூன்றும் அடியின் பொருள். நந்தி சிவனுக்கொரு பெயர். - "நந்தி நாமம் நமச்சிவாயவே" என்பது இத்திருமுறை. ஆறு - கங்கை. பொதுப்பெயர் சிறப்புப் பெயராயிற்று.

4. வெண்பொடி பூசனை - வெள்ளியநீறு பூசியவனை; ஈசனை. வினை - பாவம். பாவநாசனை அடிதொழ நன்றியாகும். பாவநாசன், சிவனுக்கொரு பெயர். "மன்ன ... பாவநாச நின்சீர்கள் பரவவே" என்பது திருவாசகம். பூசன் - இரண்டுறுப்பால் முடிந்த குறிப்பு வினைமுற்று.

5. அரும்திறல்-(வெலற்கு) அரிய வலிமை. பெருந்தகை - சிவனுக்கு ஒரு பெயர்; "பெண்ணினல்லாளொடும் பெருந்தகை இருந்ததே" என்பது இத்திருமுறை. பீடை - தோடம், காரணப்பெயர்; பிடித்துக் கொள்வது. தமிழ்மொழி. இதனை வடசொல் எனவுங் கூறுவர். தமிழில்

வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்
நறுமல ரடிதொழ நன்மை யாகுமே. 6

பறைமல்கு முழவொடு பாட லாடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதோர் கூறினன்
அறைமல்கு கழல்தொழ அல்லல் இல்லையே. 7

வரைதனை யெடுத்தவல் லரக்கன் நீள்முடி
விரல்தனில் அடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்
பரவிய அடியவர்க் கில்லை பாவமே. 8

நீர்மல்கு மலருறை வானும் மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவணம்
ஏர்மல்கு மலர்புனைந் தேத்தல் இன்பமே 9

அரிய பொருள் காணு வழியே வடசொல்லுக்கு ஏகல் வேண்டும். குருந்து ஒரு மரவிசேடம்; மணிவாசகப் பெருமானைப் பெருந்துறையில் ஆட்கொண்டருளியது இம் மரத்தினடியிலேதான். "பெருந்துறையில் வந்தோர் கொந்தலர் நெகுநகில் குறுந்தடி யிருந்தார்" என்பது பழைய திருவிளையாடல்.

6. கிறிபடும் - பரிகசிக்கத்தகுந்த. உடையினன் என்றது ஆடையில்லாத கோலத்தையுடையவன் என்றபடி. கேடு இல் - கெடுக்க முடியாத கொள்கையன். மலர் அடி - மலர்போன்ற அடி.

7. பாடல் ஆடலன் - பாடுதலோடு ஆடலையுடையவன், இங்குப் பாடல் - ஆடுங்காற்பாடுவது; மூன்றும் அடியிற் கூறுவது:- இருந்து பாடும் வேதப்பாடல். அறைமல்கு - ஒலித்தல் மிகுந்த; கழல்.

8. விரறனில் - விரல்+தனில். பொருபுனல் புடையணி பூவணம் - கரையை மோதுகின்ற வையையாற்றை ஒரு பக்கத்திலே யணிந்த பூவணம்.

9. நீர்மல்கும்மலர் - தாமரை; நீரஜம் என்பது வடசொல். இரண்டாம் அடிக்குப் பிரம விட்டுணுக்கள் முதற்கண் தாம் செருக்கு அழியப் பெற்றுப் பெருமானைச் சரண் புகுந்திருந்தால் இவ்வளவு துன்பங்களுக்கு

மண்டைகொண் டுழிதரு மதியில் தேரரும்
குண்டருங் குணம்பல பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணம்
கண்டவ ரடிதொழு தேத்தல் கன்மமே. 10

புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்
நண்ணிய அருமறை ஞான சம்பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

ஆளாகியிருக்க வேண்டியதில்லை என்பது பொருள். பூவணம் வணங்குவதே முத்தியின்பமாம். "ஆலயம் தானும் அரனெனத் தொழுமே" என்பது சிவஞானபோதம். "கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினர்" என்பது பெரியபுராணம்.

10. மண்டை - ஒருவகைப் பாத்திரம். வாய்பாடு இல்லாதது. உழிதரு தேரர் - அலைந்து திரிகின்ற தேரர், பவுத்தர். குண்டர் - போக்கிரிகள். குணம் அல பேசுங்கோலத்தர் - பயனில்லாத பேசுங் கோலத்தை யுடையவர்கள். திருப்பூவணத்தைத் தரிசித்து அவருடைய அடியைத்தொழுது துதிப்பது. கன்மம் - காரியம்: நமது கடமையாகும். "தன்கடன் அடியேனையும் தாங்குதல் என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அப்பமூர்த்திகள் வாக்காலும் அறிக. நான்காம் அடிக்குப் பூவணம் கண்டு அவர் அடிதொழுது என்க.

11. பண்ணிய - செய்த; இயற்றிய. "புகழ்கொண்டு மற்றிவர் செய்யும் உடம்பு" என்பதனாலும்; செய்யுள் என்னும் பெயராலும் அறிக. பறையும் - வெளிக்கிளம்பி நீங்கும் "பறையும் பாவங்களான" என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாக்கினாலும் அறிக.

வேழங்கள் எய்பவர்க்கு வில்லாவ திக்கால
மாழங் கடல்முத்தம் வந்தலைக்கும்—நீள்வயல்சூழ்
வாய்ந்ததிவண் மாட மதிற்காழிக் கோன்சிலம்பிற்
சாய்ந்தது வண்டழையோ தான்.

—மும்மணிக்கோவை. 17

## 21 திருக் கருக்குடி

### 279 பதிகவரலாறு

திருக்குடந்தை முதலியவற்றைச் சேர்தற்கு முன்போ அல்லது பின்போ திருக்கருக்குடியை அடைந்து வழிபட்டுப் பாடியருளியது இத் திருப்பதிகம்.

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

நனவிலும் கனவிலும் நாளும் தன்னொளி
நினைவிலும் எனக்குவந் தெய்து நின்மலன்
கனைகடல் வையகம் தொழுக ருக்குடி
அனலெரி யாடுமெம் அடிகள் காண்மினே. 1

வேதியன் விடையுடை விமலன் ஒன்னலர்
மூதெயில் எரியெழ முனிந்த முக்கணன்
காதியல் குழையினன் கருக்கு டியமர்
ஆதியை அடிதொழ அல்ல லில்லையே. 2

மஞ்சுறு பொழில்வள மலிக ருக்குடி
நஞ்சுறு திருமிட றுடைய நாதனார்
அஞ்சுரும் பார்குழல் அரிவை அஞ்சவே
வெஞ்சுரந் தனில்விளை யாடல் என்கொலோ. 3

1. நான் விழித்திருக்கும்பொழுதும், கனாக் காணும்பொழுதும் எந்நாளும் தன்னுடைய ஞான ஒளி வடிவு நினைவிலும் (வாக்கிலும்) எனக்குவந்து எய்தும் நின்மலன் என்பது முதலிரண்டடிகளின் கருத்து. நினைவிலும் என்ற எச்சவும்மையால், வாக்கிலும் என்பது வருவித்துக் கொண்டது. எரி ஆடும் - நெருப்பில் ஆடும்.

2. மூது எயில் - பழைமையான மதில், இங்குத் திரிபுரம். இயல்- பொருந்திய.

3. மஞ்சு - மேகம். அஞ்சுரும்பார் குழலரிவை - அழகிய வண்டுகள் ஒலிக்கும் குழலையுடைய அம்பிகை; வெம்சுரம் - கொடியகாடு. பிரள

ஊனுடைப் பிறவியை அறுக்க உன்னுவீர்
கானிடை யாடலான் பயில்க ருக்குடிக்
கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்
வானவர் தொழுகழல் வாழ்த்தி வாழ்மினே. 4

சூடுவர் சடையிடைக் கங்கை நங்கையைக்
கூடுவர் உலகிடை ஐயங் கொண்டொலி
பாடுவர் இசைபறை கொட்ட நட்டிருள்
ஆடுவர் கருக்குடி அண்ணல் வண்ணமே. 5

இன்புடை யாரிசை வீணை பூணரா
என்புடை யாரெழில் மேனி மேலெரி
முன்புடை யார்முதல் ஏத்தும் அன்பருக்
கன்புடை யார்கருக் குடியெம் அண்ணலே. 6

யத்து உலகம் வெந்து சாம்பலான இடம் வெஞ்சுரம் எனப்பட்டது. அதில் இறைவன் நடித்தது ஒரு விளையாட்டாக இருந்தது என்பார்; "வெஞ்சுரம் விளையாடல் என்கொலோ" என்றார்.

4. ஊன் - உடம்பு. அறுக்க - ஒழிக்க. உன்னுவீர் - நினைக்கும் மாந்தரீர். கான் இடை ஆடலான் - சுடுகாட்டில் ஆடுதலையுடையவன்.

5. நங்கை - பெண்களிற் சிறந்தவள். ஒலிபாடுவர் இசை - இசையை ஒலியோடு பாடுவர். "நட்டு நள்+அ+து × நள்ளது = நடுவினது; அகரச் சாரியை நீக்கினால் நள்+து = நட்டு என்று ஆகும். நட்டு இருள் - நடுவினதாகிய இருளில். நடு இராத்திரியில் ஆடுவர் "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே" என்பது திருவாசகம். அண்ணல் வண்ணம்-இது கருக்குடி அண்ணல் தன்மையாம். நடு + இருள் - நட்டிருள் என்பதே தக்கது.

6. இன்பு-வீணை - இசை வீணை பாடுதலில் மகிழ்வுடையார். பூண்-ஆபரணமாக. அரா என்பு - உடையார் பாம்பையும் எலும்பையும் உடையவர். மேனிமேல் எரிமுன்பு உடையார். முதல் - காரணம். முதல் ஏத்தும் அன்பர்-உலகமாகிய காரியத்துக்கு இறைவன் நிமித்த காரணமாம் தன்மையை அறிந்து ஏத்தும் இக்கருத்தை "கோலத்தாய் அருளாய் நின்காரணம் கூறுதுமே அன்பர்க்கு" என்னும் இத்திருமுறை முதற் பதிகத்தும் காண்க.

காலமும் ஞாயிறுந் தீயும் ஆயவர்
கோலமும் முடியர வணிந்த கொள்கையர்
சீலமும் உடையவர் திருக்க ருக்குடிச்
சாலவும் இனிதவ ருடைய தன்மையே. 7

எறிகடல் புடைதழு விலங்கை மன்னனை
முறிபட வரையிடை யடர்த்த மூர்த்தியார்
கறைபடு பொழின்மதி தவழ்க ருக்குடி
அறிவொடு தொழுமவர் ஆள்வர் நன்மையே. 8

பூமனுந் திசைமுகன் றானும் பொற்பமர்
வாமனன் அறிகிலா வண்ண மோங்கெரி
ஆமென வுயர்ந்தவன் அணிக ருக்குடி
நாமன னினில்வர நினைதல் நன்மையே. 9

சாக்கியர் சமண்படு கையர் பொய்ம்மொழி
ஆக்கிய வுரைகொளேல் அருந்தி ருந்நமக்
காக்கிய அரனுறை அணிக ருக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே. 10

---

7. காலம் இடம் முதலிய பொருள்களும் சூரியன் முதலிய கோள்களும் தீ முதலிய பஞ்சபூதங்களும், ஆயவர் - ஆனவர்.

8. கறைபடுபொழில். நன்மை ஆள்வர் - நன்மைகளையெல்லாம் உடையராயிருப்பர். அறிவொடு தொழுமவர் என்ற இலேசினுன் அபுத்திபூர்வமாகச் செய்யும் சிவபுண்ணியமும் தராதொழியாது என்பதும் கொள்க.

9. பூம(ன்)னும் - பூவில் வாழும். பொற்பு அமர் வாமனன் - அழகு பொருந்திய வாமன அவதாரமெடுத்த திருமாலும். பொற்பு அமர் என்பது குறிப்பு. கருக்குடி...நன்மையே - கருக்குடி நமது மனத்தில் வரும்படி நாம் நினைத்தல் நன்மையேயாகும். மனம் - மனன் எனப் போலியாய் ஏழனுருபுபெற்று மனனில் என்று ஆகி அதனோடு இன்சாரியை பெற்று "மனனினில் என்று ஆயிற்று.

10. சமண்படு - சமணக் கோட்பாடு. பொருந்திய. கையர்-வஞ்சகர். அருந்திரு - சைவசமயத்திற் பிறத்தல் பிறர் எவருக்குங் கிடைத்ததற்கரிய திரு - செல்வம், பாக்கியம். "நரர்பயில் தேயந்தன்னில் நான்மறை பயிலா

கானலில் விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் றன்னெறி
ஆனமெய்ஞ் ஞான சம்பந்தன் சொல்லிய
ஊனமில் மொழிவலார்க் குயரு மின்பமே. 11

திருச்சிற்றம்பலம்

நாட்டில் ... பரசமயங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணொணாதே.'' சிவ ஞான சித்தியார். அத்திருவை நமக்கு ஆக்கிய அரன். புடைபட்டு - சார்ந்து; ஒருமை பன்மை மயக்கம்.

11. மைந்தன் - சம்பந்தன். சிவனெறியே தான் ஆன மெய்ஞ் ஞான சம்பந்தம் பெற்ற வலிமையோடு கூடியவன்.

வளைகால் மந்தி மாமரப் பொங்கில்
விளைதேன் உண்டு வேணுவின் துணியாற்
பாறை யில்துயில் பனைக்கை வேழத்தை
உந்தி எழுப்பும் அந்தண் சிலம்ப அஃதிங்
கென்னையர் இங்கு வருவர் பலரே
அன்னை காணில் அலர்தூற் றும்மே பொன்னூர்
சிறுபரற் கரந்த விளிகுரற் கிங்கிணி
சேவடி புல்லிச் சில்குரல் இயற்றி
அமுதுண் செவ்வாய் அருவி தூங்கத்
தாளம் பிரியாத் தடக்கை யசைத்துச்
சிறுகூத் தியற்றிச் சிவனருள் பெற்ற
நற்றமிழ் விரகன் பற்றலர் போல
இடுங்கிய மனத்தொடும் ஓடுங்கிய சென்று
பருதியுங் குடகடற் பாய்ந்தனன்
கருதிநிற் பதுபிழை கங்குல்இப் புனத்தே.

—மும்மணிக்கோவை 19

# 22 பஞ்சாக்கரத் திருப்பதிகம்

## 280 பதிக வரலாறு

மறை முனிவராகிய பிள்ளையார் திருமுன்நின்று மறை நான்கும் தந்தோம் என்றனர் அந்தணர். அவர்க்குப் புகலிவந்த புண்ணியனார் எண்ணிறந்த புனிதவேதம் ஒப்பில்லாதவாறு ஓதினார். அவர் பலரும் அப்பெருமானே கண்முன் வரும் தியானப்பொருள் என்று வணங்கினர். முன்பேவல்ல மறைகளைக் கேட்டு ஐயம் தீர்ந்தும் வாழ்வுற்றனர். மந்திர முதலியவற்றையும் அருளப்பெற்றனர். அவர் தெளியும் வண்ணம் மந்திரங் களுக்கெல்லாம் முதன்மையுடையது முதல்வனார் திருவைந்தெழுத்தே என்று உணர்த்தியருள,“செந்தழல் ஓம்பிய செம்மைவேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே” என்பது முதலிய சிறப்பைச் சுட்டிப் பாடியது இத் திருப்பதிகம்.

**பண் - காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

துஞ்சலும் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே. 1

1. துஞ்சலும் துஞ்சல் இலாதபோழ்தினும் - தூங்கும்போதும் விழித்துக்கொண்டிருக்கும்போதும்; போழ்தின் என்ற சொல்லைத் துஞ்சல் என்பதினோடுங் கூட்டித் துஞ்சல் பொழுதினும், துஞ்சல் இல்லாத போழ்தினும் என்க. நெஞ்சகம் - மனம். நைந்து - உருகி. நாள்தோறும் மாந்தரீர் நினைப்பீர்களாக. வஞ்சம் இன்றிச் சிவபெருமான் திருவடியை மார்க்கண்டேயர் வாழ்த்தி வழிபட அவர் வாழ்நாள்மேல் வந்த யமன் அஞ்சும்படி உதைத்தன திருஐந்தெழுத்துமே. வஞ்சகமாவது, இறைவன் மேற் படரும் சிந்தையை இடையே மாற்றி வினையைப் பிறவிடங்களிற் செலுத்தி வஞ்சித்தல். இதனை “நெஞ்சினைத் தூய்மைசெய்து நினைக்குமா நினைப்பியாதே வஞ்சமே செய்தியாலோ” என்ற திருநேரிசையால் அறிக. திரு ஐந்தெழுத்தை ஓதுவார் எமவாதை நீங்குவார் என்பது இதனாற் பெற்றும்.

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே. 2

ஊனில் உயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே. 3

2. மந்திரமும் நான்கு வேதங்களும் ஆகி; திருவைந்தெழுத்தே வேதம் என்றது. மறையிற்கூறும் அனைத்தும் ஐந்தெழுத்தில் அடங்கும் என்பதுபற்றி "ஐந்தெழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்" என்ற உண்மை விளக்கம் காண்க. செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்தும் - அழல் ஓம்பிச் செந்நெறி நிற்கும் வேதியருக்கும் மூன்று சந்தியா காலங்களிலும் செபிக்கத்தக்க மந்திரம் திரு ஐந்தெழுத்தேயாம் என்க. அந்தி - சந்திவேளை மூன்று. காலை, நண்பகல், மாலை; "காலை அந்தியும் மாலை அந்தியும்" என்பது புறநானூறு. "அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில், அருக்கன் ஆவான் அரன் உரு அல்லனோ" (திருக்குறுந்தொகை) இவற்றால் அந்தி என்ற சொல் மூன்று வேளையையும் குறிப்பதை அறிக.

இப்பதிக வரலாற்றைச் செழுமறையோர்க்கருளி அவர் தெளியு மாற்றால் முந்தை முதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும் முதல் ஆகும் முதல்வனார் எழுத்து அஞ்சு என்பார். அந்தியினுள் மந்திரம் அஞ்செழுத் துமே என்று அஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார் என்னுந் திருத்தொண்டர் புராணத்தால் அறிக.

3. ஊன் - உடம்பு. உயிர்ப்பு - மூச்சு. நன்புலம் - நல்ல அறிவு. நிட்டைகூடி இருப்போருக்கு அந்நிட்டை கலையவரும் யோக சமாதியில் வாசனாமலம் முதலிய இடர்களைக் கெடுப்பதும் திரு ஐந்தெழுத்தேயாம் என்க. "பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப் பட்டு விளங்கிய ஞானத்தான் ஞேயத்தைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு, அப்பொருள் பயக்கும் திருவஞ்செழுத்து, அவ்விதிப்படி அறிந்து கணிக்கப்படும்." (சிவஞானபோத மாபாடியம். சூ. 9.)

நல்லவர் தீயர் எனாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத்
தல்லல் கெடுப்பன அஞ்செ ழுத்துமே. 4

கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமும் அஞ்ச ஐம்பொழில்
தங்கர வின்படம் அஞ்சுந் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செ ழுத்துமே. 5

தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே. 6

4. நல்லவர் - புண்ணியர். தீயவர், பாவியர், என்று பிரிக்காமல் யாவரேயாயினும் விரும்பித் திருவைந்தெழுத்தைச் செபிப்பார்களேயாயின், துன்பந்தரும் மலங்கள் நீங்கச் சிவப்பேறாகிய முத்தியின்பத்தை அடையலாம். உயிர்போகும் தறுவாயில் நினைத்தாலும் உச்சரித்தாலும் எமவாதை இல்லாதொழிக்கலாம் என்பது. இதனை "மந்தரம் அன பாவங்கள் மன்னிய பந்தனை யவர் தாமும் பகர்வரேல், சிந்தும்வல்வினை செல்வமும் மல்குமால் நந்திநாமம் நமச்சிவாயவே" என்ற பாசுரத்தாலும் "விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல் உண்ணியபுகில் அவையொன்றும் இல்லையாம், பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை, நண்ணிநின்று அறுப்பது நமச்சிவாயவே" என்னும் பாசுரத்தாலும் அறிக. கொல்ல ... இடத்து - மரணத் தறுவாயில் வரக்கடவனவாகிய துன்பங்களைக் கெடுக்கும்.

5. முதல் இரண்டடிக்கு - வல்மதன் கொங்கு அலர்வாளி ஐந்து - வலிய மன்மதனது மணத்தையுடைய மலர் அம்பு ஐந்து என்க. அகம் - இடம்; உலகம். இவ்வுலகத்தில் உள்ள பூதங்களும் அஞ்ச. (அஞ்சு+அ) ஐந்து ஆவன. ஐம் பொழில் - கற்பகச் சோலைகளும். ஐந்தாவன - தங்கு அரவின் படம் அஞ்சு, தம்முடைய அங்கையில் ஐ விரல், இறைவன் திருமேனியில் அணியாக உள்ள பாம்பின் படமும் ஐந்து, செபிப்போரது கையில் உள்ள விரலும் ஐந்து. இவற்றிற்கொப்ப மந்திரமும் அஞ்செழுத்து மாயின.

6. தும்மும்போதும் இருமும்போதும் உடலில் நீங்குவது உள்ளமையால் அப்பொழுதும், கொடிய நரகத்துன்பம் நுகரவந்தவிடத்தும், முற்

வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்
பீடை கெடுப்பன பின்னை நாள்தொறும்
மாடு கொடுப்பன மன்னு மாநடம்
ஆடிஉ கப்பன அஞ்செ ழுத்துமே. 7

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டை யிராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்டம் அளிப்பன அஞ்செ ழுத்துமே. 8

பிறப்பிற் செய்தவினை இம்மைக்கண் அடர்த்துச் சேரும்பொழுதும், உச்ச ரிக்கத் துணையாவதும் இம்மையில் ஓயாது ஓதி வந்தநின் பயனாக மறு பிறவியில் வந்து துணையாவதும் திருவைந்தெழுத்தே.

7. வீடு - இங்குச் சாதல் என்னும் பொருளில் வந்துள்ளது. பிறப்பு - பிறத்தல். சாதலும் பிறத்தலும் தவிர்த்து. மெச்சினர் - தன்னைப் பாராட்டிப் பயில்பவர். பீடை - பிறவியில் வரக்கடவ துன்பங்கள். அவை:- பிற உயிர்களால் வருவன, தெய்வத்தால் வருவன, தன்னால் வருவன என மூவகைப்படும்.

மாடு - செல்வம். கொடுப்பன. திருவைந்தெழுத்து செல்வமும் தரும் என்பதைச் "சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால், நந்திநாமம் நமச்சிவாயவே" மன்னும் - நிலைபெற்ற, மா நாடகம். பெரிய கூத்தை ஆடி மகிழ்வனவும் திருவைந்தெழுத்துக்களாம்.

அஞ்செழுத்தே நடம் ஆடி உகப்பன என்றது "சிவாயநமவென்னும் திருவெழுத்தைந்தாலே அபாய மற நின்றருடுவான்." என்ற உண்மை விளக்கச் செய்யுட்கருத்து.

வண்டுஅமர்...பேணின - வண்டுகள் விரும்பும் கூந்தலையுடைய அம்பிகையாரால் பாராட்டிச் செபிக்கப்பெற்றன. இராவணன் பாடியது இப் பஞ்சாக்கரமே என்கிறது இரண்டாம் அடி. தொண்டர்கள்-அடியார்கள். கொண்டு - தங்கள் கடமையைக்கொண்டு. துதித்தபின்-செபித்த அளவில். அவர்களுக்கு அண்டங்களையெல்லாம் அரசாளக் கொடுப்பன இவ்வைந் தெழுத்துமாம். தொண்டர்கள் கொண்டு துதித்தமை ஆனாய நாயனார் புராணம் முதலியவற்றாலறிக.

கார்வணன் நான்முகன் காணு தற்கொணுச்
சீர்வணச் சேவடி செவ்வி நாள்தொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வணம் ஆவன அஞ்செ ழுத்துமே. 9

புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திரம் ஆவன அஞ்செ ழுத்துமே. 10

9. பிரம விட்டுணுக்களால் காண முடியாத அடி என்றது. அத்தகுசீரிய அடியைக் காணுவதுமட்டும் அன்று. அத் திருவடிப் பேருகி மேல் இன்பத்தில் திளைத்தலுமாகும். பேர்வணம் - இறைவனுடைய திருப் பெயராகிய தன்மையை (அஞ்செழுத்தை). பேசி - உச்சரித்து, பிதற்றும் அதனையே எண்ணிப் பன்னிப் பன்னிப் பலதரமும் சொல்லும் பத்தருக்கு ("பிடித்தொன்றை விடாதுபேசல் பிதற்றுதல் என்று மாமே" என்பது சூடா மணி நிகண்டு.) ஆர்வணம் - ஆர்தல்; திளைத்தல். பித்தர் - இங்குப் பேரன்பினர் என்னும் பொருளில் வந்தது. "நின்கோயில் வாயிலிற் பிச்ச ஞுக்கினுய்" திருவாசகம், "அம்பலவர்க்குற்ற பத்தியர்போல... ஓர் பித்தி தன்பின்வர முன் வருமோஓர் பெருந்தகையே" (திருக்கோவையார். 49) என வருவன வற்ருல் அறிக. பிரமன் முடியையும் திருமால் அடியையும் தேடிக் காணமாட்டாமை ஏனைய பதிகங்கள் குறிக்க, இப்பதிகம் இருவரும் காணுத சேவடி என்று மட்டும் குறிக்கிறது. அதன் கருத்து, திருமாலால் காணமுடியாத அடி பிரமனுலும் காணமுடியாது என்பதாம்.

அநுபலப்தியால் பெறவைப்பான் "கார்வணன் நான்முகன் காணுதற் கொணுச் சீர்வணச் சேவடி" யென்று; அடியே காணுதார் முடிகாண மாட்டாமையும் பெற வைத்தமையறிக.

10. சமணர்களாகிய கழுவையேந்திய கையையுடையவர். வித்தகம் நீறு - திறமையைத் தரும் விபூதி. அத்திரம் - அம்பு. நீறணிவார் - சிவனடி யார். வினை - போர். "வினைநவின்ற யானை" என்பது புறநானூறு. சிவனடி யார் மேற் போர்புரியப் பகைவர் எவர்வரினும் அவரை எதிர்த்து அம்பு போற்பாய்ந்து அழிக்க வல்லது திரு ஐந்தெழுத்துமே. போதி மங்கையில் கூட்டத்தோடு புகலியர்கோனை எதிர்த்த புத்த நந்தி தலையில் இடிவிழச் செய்தது இப் பாசுரமே.

வினையாகிய பகைக்கு ஐந்தெழுத்து ஆகிய அத்திரம் என்றது உருவகம்.

நற்றமிழ் ஞான சம்பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்
துற்றன வல்லவர் உம்ப ராவரே 11

திருச்சிற்றம்பலம்

11 உன்னிய - நினைத்துப்பாடிய. அற்றம் இல் மாலை - கேடு அவமானம் முதலியன இல்லையாக்குவிக்கும் (வராமல் தடுக்கும்) மாலை. ஐந்தெழுத்து உற்றன ஆகிய இம்மாலையிலுள்ள பத்துப் பாசுரங்களில் வல்லவர் தேவர் ஆவர்.

புனலற வறந்த புல்முளி சுரத்துச்
சினமலி வேடர் செஞ்சரம் உரீஇப்
படுகலைக் குளம்பின் முடுகு நாற்றத்
தாடும் அரவின் அகடு தீயப்
பாடு தகையின் பஞ்சுரங் கேட்டுக்
கள்ளியங் கவட்டிடைப் பள்ளி கொள்ளும்
பொறிவரிப் புறவே யுறவலை காண்நீ நறைகமழ்
தேம்புனல் வாவித் திருக்கழு மலத்துப்
பையர வசைத்த தெய்வ நாயகன்
தன்னருள் பெற்ற பொன்னணிக் குன்றம்
மானசம்பந்த மண்மிசைத் துறந்த
ஞானசம் பந்தனை நயவார் கிளைபோல்
வினையேன் இருக்கும் மனைபிரி யாத
வஞ்சி மருங்குல் அஞ்சொற் கிள்ளை
ஏதிலன் பின்செல விலக்கா தொழிந்தனை
ஆதலின் புறவே உறவலை நீயே.

— மும்மணிக்கோவை 22

# 23 திருவிற்கோலம்

## 281 பதிகவரலாறு

தொண்டைநாட்டுத் திருவூர்களுள் ஒன்றுன திருக்கூகத்திலுள்ள திருவிற்கோலத்தைத் திருத்தொண்டர் பலர் சூழப் பணிந்து திரிபுரம் எரித்தபடி பாடியருளிய பொருட் பதிகத் தொடைமாலை இது.

**பண் - காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

உருவினார் உமையொடும் ஒன்றி நின்றதோர்
திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்
வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய
செருவினான் உறைவிடம் திருவிற் கோலமே. 1

)டை யுமையொரு பங்க னங்கையில்
உற்றதோர் எரியினன் ஒரு சரத்தினால்
வெற்றிகொள் அவுணர்கள் புரங்கள் வெந்தறச்
செற்றவன் உறைவிடம் திருவிற் கோலமே. 2

ஐயன்நல் லதிசயன் அயன்விண் ணோர்தொழும்
மையணி கண்டனார் வண்ணம் வண்ணவான்
பையரா வல்குலாள் பாகம் ஆகவும்
செய்யவன் உறைவிடம் திருவிற் கோலமே. 3

1. உரு - அழகு. உருவின் ஆர் - அழகினால் நிரம்பிய. உமையொடும் ஒன்றி நின்றது. ஓர் திருவினான் - வேறறக்கலந்து நின்றசெல்வம். சிவஞான சித்தியார் "அவளால்வந்த வாக்கம் இவ் வாழ்க்கையெல்லாம்" என்பதன் கருத்து. (சூ. 7-69) திங்கள் கங்கையான் - திங்களோடு அணிந்த கங்கையையுடையவன்.

2. சரம் - அம்பு. ஒரு சரத்தினால் செற்றவன் (அழித்தவன்) என்றமையானே புரங்கள் மூன்றென்பதும் பெற்றாம். "ஏகம்பர் தங்கையில் ஓரம்பே முப்புரம் உந்தீபற" என்னும் திருவாசகமும் காண்க.

3. ஐயன் - தலைவன். அதிசயன் - "பல பல வேடமாகும் பரன்" என்னும் மேம்பாட்டையுடையவன். அயன் விண்ணோர் - பிரமனும் தேவரும். மை:- நஞ்சுண்ட கறுப்புக்கு ஒப்பு. கண்டனார் - திருக்கழுத்

விதைத்தவன் முனிவருக் கறமுன் காலனை
உதைத்தவன் உயிரிழந் துருண்டு வீழ்தரப்
புதைத்தவன் நெடுநகர்ப் புரங்கள் மூன்றையும்
சிதைத்தவன் உறைவிடம் திருவிற் கோலமே. 4

முந்தினுன் மூவருள் முதல்வன் ஆயினுன்
கொந்துலா மலர்பொழிற் கூக மேவினுன்
அந்திவான் பிறையினுன் அடியர் மேல்வினை
சிந்துவான் உறைவிடம் திருவிற் கோலமே. 5

தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம்
வகுத்தவன் வளர்பொழிற் கூக மேவினுன்
மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்தவன் உறைவிடம் திருவிற் கோலமே. 6

துடையவர். வண்ணம் செய்யவன்; வண்ணவான் பையரவு அல்குலாள் (அம்பிகை) பாகம் ஆகவும் செய்யவன். 'செந்தீவண்ணன்' 'பவளம் போல் மேனியன், அம்பிகையின் நிறம் கலந்தும் வேறுபடாத செம்மையன். அவன் உறைவிடம் திருவிற்கோலம். இவ்விற்கோலம் நீங்கிப், பண்டைய தற்கோலம் உடைமை விளங்கிய தலத்தின்பெயரே, தக்கோலம் என மருவிற்று. (பெரிய. திருஞான. 1005. சிதம்பரம் பேரம்பல - இராமலிங்கம் பிள்ளை பதிப்பு.)

4. முனிவர்க்கு - சனகாதி முனிவர்களுக்கு. அறம் முன் விதைத் தவன்-சரியையாதி நாற்பதப் பொருள்களையும் மனத்தில் பதிய உபதேசித் தவன். அறம் என்பது சரியை கிரியை இரண்டினையும் குறிக்கும். அதனை "நல்ல சிவதன்மத்தால்" எனவரும் திருக்களிற்றுப்படியாரால் அறிக. ஈண்டு 'அறம்' முடிவான ஞானத்தின் மேலது. விதைத்தவன் என்றதனுல் சிவானந்தப் பெரும்போகம் விளைந்தமையும் காண்க.

5. கூகம் - ஊர் (கூவம் என வழங்குகிறது) திருவிற்கோலம் - திருக் கோயில். "முந்தைகாண் மூவர்க்கும் முதலானுன்காண்" என்னும் திருத் தாண்டகத்தோடு முதலடியை ஒப்பிடுக.

6. தொகுத்தல் - பலவாய்க் கிடப்பனவற்றை ஒருமுறைப்படுத்திச் சேர்த்தல். மறைகளையும் அங்கங்களையும் தொகுத்தவன். ஆகம நூற்

விரித்தவன் அருமறை விரிச டைவெள்ளம்
தரித்தவன் தரியலர் புரங்கள் ஆசற
எரித்தவன் இலங்கையர் கோன் இடர்படச்
சிரித்தவன் உறைவிடம் திருவிற் கோலமே. 8

திரிதரு புரம்எரி செய்த சேவகன்
வரியர வொடுமதி சடையில் வைத்தவன்
அரியொடு பிரமன தாற்ற லால்உருத்
தெரியலன் உறைவிடம் திருவிற் கோலமே. 9

பொருளை நந்தியெம்பெருமானுக்கு வகுத்து உபதேசித்தவன் என்றது "முந்தொரு காலத்தின் மூவுலகந்தன்னில், அந்தமில் மறையெல்லாம் அடிதலை தடுமாறி" என்பது கந்தபுராணம்; பாயிரப்படலம் 1 முதல் 39 வரையுள்ள பாடல்களால் அறிக.

மிகுத்தவன் - தன்னை ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். மிகுத்தவர் - செருக்கு உற்றவர்களாகிய அசுரர்களின், புரங்கள். செகுத்தவன் அழித்தவன். மிகுத்தல்; இப்பொருட்டாதலை "மிகுதியான் மிக்கவை செய்தாரை" என்ற திருக்குறளால் (158) அறிக.

7. ஆசுஅற - பற்றற (முற்றிலும்). சிரித்தல் - திருவிளையாட்டு. அவனைக் கதறச்செய்தல் தமக்கொரு திருவிளையாட்டாயிருந்தது.

8. ... ... ... ...

9. திரிதரு - வானத்திலே பறந்து திரிந்து கொண்டிருந்த; புரம். சிவபிரான் காட்டிய எட்டு வீரங்களில் ஒன்றுகையால் சேவகன் என்றார். ஆற்றலால் உருத்தெரியலன் - அவனைத்தெரிய வேண்டியவன் அதற்குரிய வழிகள் பல இருக்கவும் அவற்றிலொன்றையேனும் பற்றுமல் தம் ஆற்றலைக் கருதின அவர்தம் பேதைமைக்கிரங்கி நமது திருநாவுக்கரசர் பாடியுள்ள இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை (5-ம் திருமுறை) இங்கே கருதத்தக்கது "மரங்களேறி மலர் பறித்திட்டிலர், நிரம்ப நீர் சுமந்தாட்டி நினைந்திலர் உரம் பொருந்தி ஒளிக்கின்றவண்ணனை நிரம்பக் காணலுற்றார் அங்கிருவரே" என்பது அதில் ஒருபாடல்.

சீர்மையில் சமணொடு சீவ ரக்கையர்
நீர்மைஇல் உரைகள்கொள் ளாத நேசர்க்குப்
பார்மலி பெருஞ்செல்வம் பரிந்து நல்கிடும்
சீர்மையி னன்இடம் திருவிற் கோலமே. 10

கோடல்வெண் பிறையனைக் கூக மேவிய
சேடன செழுமதில் திருவிற் கோலத்தை
நாடவல்ல தமிழ் ஞான சம்பந்தன
பாடவல் லார்களுக் கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

10. சீர்மை - ஒழுங்கு. நான்காமடியிற் சீர்மை - மேன்மை. "சீர்மை சிறப்பொடு நீங்கும்" என்னும் திருக்குறளிற் போல, 195. சமணர் என்ற சொல் சமண் என விகுதி குன்றி வந்தது; தூது, அரசு அமைச்சு என்றாற் போல். சீவரம் - பவுத்தத் துறவி யுடுத்தும் காவி ஆடை. கையர் - வெறுக்கத் தக்கவர். கைத்தல் - வெறுத்தல்.

11. கோடல் - கோடுதல்; வளைதல். சேடன - சிவபெருமானுடைய (திருவிற்கோலத்தை).

அலைகடலின் மீதோடி அந்துளையர் வீசும்
வலைகடலில் வந்தேறு சங்க—மலர்கடலை
வெண்முத் தவிழ்வயல்சூழ் வீங்குபுனற் காழியே
ஒண்முத் தமிழ்பயந்தான் ஊர். 23

ஊரும் பசும்புர வித்தே ரொளித்த தொளிவிசும்பிற்
கூரும் இருளொடு கோழிகண் துஞ்சா கொடுவினையேற்
காரும் உணர்ந்திலர் ஞானசம் பந்தன்அந் தாமரையின்
தாருந் தருகிலன் எங்ஙனம் யான்சங்கு தாங்குவதே. 24

—மும்மணிக்கோவை.

# 24 திருக் கழுமலம்

## 282 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருமருதந்துறைத் திருவாலவாயை வழிபட்டிருந்த காலத்தில், சிவபாதவிருதயர் அங்குச் சென்றுர். அவரைக் கண்டவர், பிள்ளையார் திருவடியை வணங்கி, அவர் எழுந்தருளினுர் என்று மகிழ்ச்சியோடு உரைத்தனர். எப்பொழுது வந்தருளிற்று என்று எதிரே எழுந்தருளினுர். வணங்கினுர். அவர் சார்வுகண்டருளினுர். திருத்தோணியமர்ந்தருளிப் பவபாசம் அறுத்தவர் பாதங்களை நினைந்தருளினுர். அம்மையப்பர் நினைவு ஒன்றுதானே பிள்ளையாருக்கு உண்டு? திருக்கை குவித்தருளி, "அருந்தவத்தீர்! எனை அறியாப்பருவத்தே எடுத்தாண்ட பெருந்தகையெம் பெருமாட்டியுடன் இருந்ததே என்று போற்றி இசைத்தது" இத் திருப்பதிகம்.

பண் – காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மண்ணின்நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின்நல்ல கதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே. 1

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தான்எனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. 2

1. கதிக்கியாதும் - கதிக்கு + யாதும். ஓர் குறை இ(ல்)லை. கண்ணின் நல்லது உறும் - கண்ணுக்கினிய நல்லவளத்தையுடைய. கழுமலவளநகர் கண்ணின் நல்லஃது.

2. போது - மலர். போதை ஆர் - மலரை யொத்த; பொற் கிண்ணம். அடிசில் - சோறு. போனகம்; இங்கே அடிகளார் உண்டருளியது பாலே யாயினும், அதிற்குழைத்த உணவு ஞானம் ஆதலால் அடிசில் எனப் பட்டது. "ஞானபோனகர்" என்று சேக்கிழார் சுவாமிகள் வழங்குவதாலும் அறிக.

தொண்டணை செய்தொழில் துயரறுத் துய்யலாம்
வண்டணை கொன்றையான் மதுமலர்ச் சடைமுடிக்
கண்டுணை நெற்றியான் கழுமல வளநகர்ப்
பெண்டுணை யாகவோர் பெருந்தகை யிருந்ததே. 3

அயர்வுளோம் என்றுநீ அசைவொழி நெஞ்சமே
நியர்வளை முன்கையாள் நேரிழை யவளொடும்
கயல்வயல் குதிகொளுங் கழுமல வளநகர்ப்
பெயர்பல துதிசெயப் பெருந்தகை யிருந்ததே. 4

அடைவிலோம் என்றுநீ அயர்வொழி நெஞ்சமே
விடையமர் கொடியினன் விண்ணவர் தொழுதெழும்
கடையுயர் மாடமார் கழுமல வளநகர்ப்
பெடைநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே 5

3. தொண்டு அணைசெய் தொழில் துயர் - தொன்று தொட்டே ஆன்மாவைப்பற்றி வருத்தும் தொழிலையுடைய வினைகள். "தொல்லை வல்வினைத் தொந்தம்" என்ற அப்பர் திருக்குறுந்தொகை காண்க.

பெண் துணையாக ஓர் பெருந்தகை இருந்தது என்றது - எவ்வுயிர்க்கும் "அருந்துணையாயும், பெருந்துணையாயும் உற்றாரிலாதார்க்கு உறுதுணையாயும் உள்ள ஒரு பெருந்தகை ஓர் பெண்துணையாக வீற்றிருக்கிறார் என்பது ஒரு நயம்.

4. நியர் - நிகர். நிகர் என்பது எதுகை நோக்கித்திரிந்தது. அசைவு - சோம்பல்; ஒழி.

5. அடைவு - பற்றுக்கோடு. சேருமிடம் - புகலிடம். அயர்வு - தளர்ச்சி. கடை உயர் மாடம் ஆர் - கடைவாயில்கள் உயர்ந்த மாளிகைகளையுடைய. (கழுமலவளநகர்). இனி, கடைஉயர் (மாடம்ஆர்) கழுமலம் என்று கொண்டு, ஊழிக்காலத்தில் உயர்கின்ற கழுமல வளநகர் எனினும் ஆம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம் 4-ஆம் செய்யுட் கருத்து என்க.

மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல்குல் திருந்திழை யவளொடும்
பெற்றெனை யாளுடைப் பெருந்தகை யிருந்ததே. 6

குறைவளை வதுமொழி குறைவொழி நெஞ்சமே
நிறைவளை முன்கையாள் நேரிழை யவளொடும்
கறைவளர் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிறைவளர் சடைமுடிப் பெருந்தகை யிருந்ததே. 7

அரக்கனார் அருவரை யெடுத்தவன் அலறிட
நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே
கருக்குவா ளருள்செய்தான் கழுமல வளநகர்ப்
பெருக்குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே. 8

6. பெற்று எனை ஆளுடைப் பெருந்தகை. "யாவருக்குந் தந்தை தாய் எனுமிவரிப்படியளித்தார் ஆவதனால் ஆளுடைய பிள்ளையார் ஆய் அகில தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும் தாவில் தனித்திரு ஞானசம்பந்த ராயினார்" என்னும் பெரிய புராணம் நோக்குக.

7. குறைவளைவது மொழிகுறைவு ஒழி - (பல) குறைபாடுகள் (நம்மை) வளைந்து கொண்டிருப்பதைப் (பிறரிடம்) சொல்லித் தவிர்க்க வேண்டுகின்ற குறைவை இனி ஒழிவாயாக (நெஞ்சமே).

8. அரக்கனார் அருவரை எடுத்தவன் - முதலில் உயர்த்திப்பின் எடுத்தவன் எனத் தாழ்த்திக்கூறிய நயத்தை "எனைத்துணையர் ஆயினும் என் ஆம்" என்னுந் திருக்குறளோடு ஒப்பிட்டுக் காண்க. நீடியாழ்-நீடு + யாழ் - நெடியவீணை, வீணையாற்பாட. கருக்கு - முனை; கூர்மை. பெருக்கும் நீர் அவள் - அன்பர்கட்குத் திருவருளைப் பெருக அளிக்கும் தன்மையுடைய வள்; என்பது "அன்பர்க்கு முன்னியவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருள்" என்ற திருவெம்பாவைப் பாடற்கருத்து.

நெடியவன் பிரமனும் நினைப்பரி தாய்அவர்
அடியொடு முடியறி யாஅழ ல்உருவினன்
கடிகமழ் பொழில்அணி கழுமல வளநகர்ப்
பிடிநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. 9

தாருறு தட்டுடைச் சமணர்சாக் கியர்கள்தம்
ஆருறு சொற்களைந் தடியிணை அடைந்துய்ம்மின்
காருறு பொழில்வளர் கழுமல வளநகர்ப்
பேரறத் தாளொடும் பெருந்தகை யிருந்ததே. 10

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தஎம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. 11

திருச்சிற்றம்பலம்

9. நினைந்துருகும் தன்மையில்லாதவர்களாகிய பிரம விட்டுணுக்களால் அறியமுடியாத அழல் உருவாய் நின்றவன். அரிது - இன்மைமேல் நின்றது. "மனக்கவலை மாற்றலரிது" என்புழிப்போல. (திருக்குறள்.)

10. தார் உறுதட்டு உடைச்சமணர் - மாலையைப்போல விரும்பி உடுத்திய பாயை உடைய சமணர். தட்டு - பாய். "தட்டையிடுக்கி" என்பதனுற்கொள்க "தட்டைச் சாத்திப் பிரட்டே திரிவார்" என்பது இங்குக் காண்க.

பேர் அறத்தாள் - முப்பத்திரண்டறமும் வளர்த்தவள். அறத்தாள் - தரும சொரூபி: அம்பிகை எனக்கொண்டு பெரிய நாயகி எனலும் ஒன்று.

11. கரும் தடம் - கரிய சேற்றையுடைய குளங்கள். பெருந்தடங் கொங்கை - அம்பிகை; அன்மொழித் தொகை, பன்மொழித் தொடர். சம்பந்தன செந்தமிழ்; அகரம் ஆறனுருபு. ஆகையால் செந்தமிழ் என்பதற்குச் செந்தமிழ்(ப்பாசுரங்)கள் என்க.

ஒவ்வொரு பாசுரத்திலும் "பெருந்தகை எம்பெருமாட்டியுடன் இருந்ததே யென்று.........அண்ணலார் தமைவினவித் திருப்பதிகம் அருள் செய்தார்" என்ற பெரிய புராணப் பாடலின்படி எம்பெருமாட்டியுடன் பெருந்தகை (நன்கு) இருக்கிறுரா? என்று வினவினதாக இருத்தலால் ஈற்றேகாரம் விஞப்பொருளில் வந்தது. இதனை ஈற்றசையென்று உரைத்தாரும் உளர்.

# 25 திருந்து தேவன்குடி

## 283 பதிகவரலாறு

ஆளுடைய பிள்ளையார், திருவியலூர் அடிகளைப் போற்றி இன்னிசைப் பதிகத்தொடை சாத்தி, அம் முழுமுதல்வன் காட்டிய கண்ணுார்தரும் உருவாகிய அருள் வேடத்தைத் தொழுது, திருந்து தேவன்குடியிற்சென்று சிவபெருமான் கோயிலை எய்திக், காதலொடு புகுந்து, போற்றி வணங்கிப் புனைந்த அருந்தமிழ் மாலை இது.

**பண் - கொல்லி**

திருச்சிற்றம்பலம்

மருந்துவேண் டில்இவை மந்திரங் கள்இவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்இவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே. 1

வீதிபோக் காவன வினையைவீட் டுவ்வன
ஓதியோர்க் கப்படாப் பொருளையோர் விப்பன
தீதில்தே வன்குடித் தேவர்தே வெய்திய
ஆதிஅந் தம்மிலா அடிகள்வே டங்களே 2

1. திருந்து தேவன்குடியில் உள்ள தேவனும் அருந்தவத்தோர்கள் வணங்கும் அடிகளும் ஆகிய சிவபெருமானது வேடங்களாகிய திருநீறு உருத்திராக்கம் சடைமுடி ஆகிய இவற்றைக் கண்ணுற் கண்டாலும், இவ் வேடத்தை மனத்தால் நினைத்தாலும் அவை மருந்து வேண்டினார்க்கு மருந்தாகவும், மந்திரம் விரும்பினார்க்கு மந்திரமாகவும், சிவ புண்ணிய சரிதை கேட்க விரும்பினார்க்கு அப்புண்ணியப் பலனாகவும் பயன்தரும் என்பது இதன் கருத்து. இங்கு "அடிகள்" என்றது சிவபெருமானை. "எம் அடிகள் நின்றவாறே" என்ற அப்பர் திருவாக்காலும் அறிக. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் இச்சொல் பயின்று வருகிறது.

2. வீதிபோக்கு ஆவன - திருவீதி வலம் வருங்கால் அணிவதற்குரிய அணிகலன்களாக அணிசெய்வன. போக்கு - போதல். இங்கு ஆகுபெயர்ப் பொருளை உணர்த்திற்று. ஒரு நூலைப் படித்துப் பொருள் விளங்காதிருக்கும்பொழுது இவ்வேடத்தை நினைத்தால் அப்பொருள் தெள்ளிதில் விளங்கும்.

மானம்ஆக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானையுள் கச்செலும் வழிகள் காட்டுவ்வன
தேனும்வண் டும்மிசை பாடுந்தே வன்குடி
ஆனஞ்சா டும்முடி அடிகள்வே டங்களே. 3

செவிகளார் விப்பன சிந்தையுட் சேர்வன
கவிகள்பா டுவ்வன கண்குளிர் விப்பன
புவிகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அவிகளுய்க் கப்படும் அடிகள்வே டங்களே. 4

விண்ணுலா வும்நெறி வீடுகாட் டும்நெறி
மண்ணுலா வும்நெறி மயக்கந்தீர்க் கும்நெறி
தெண்ணிலா வெண்மதி தீண்டுதே வன்குடி
அண்ணலா னேறுடை அடிகள்வே டங்களே. 5

பங்கமென் னப்படர் பழிகளென் னப்படா
புங்கமென் னப்படர் புகழ்களென் னப்படும்
திங்கள்தோ யும்பொழில் தீண்டுதே வன்குடி
அங்கம் ஆறும்சொன்ன அடிகள்வே டங்களே. 6

3. மாசு நீக்குவன - மனத்துக்கண் மாசை நீக்குவன. வான் - வெளி- இன்பவெளி. உள்க - நினைக்க. ஆன்அஞ்சு - பஞ்சகவ்வியம்; அபிஷேகத் திரவியங்களில் ஒன்று. "ஆனைந்தும் ஆடினான்காண்" என்பது அப்பர் திருவாக்கு.

4. திருவேடத்தின் புகழைக் கேட்டாலும் மகிழ்வு உண்டாம். அவி - வேள்வித்தீயில் இடும் அவிசு.

5. விண் - சுவர்க்கலோகம்:- போகபூமி. மதிதீண்டும்-சந்திர மண்டலத்தை யளாவிய, தேவன்குடி.

6. தற்போது இவ்வேடம் அணிந்திருப்போர் முன் பழிபாவங்கட்கு ஆளாயினோர் என்று எள்ளற்க. உயர்வு என்று வாயினும் சொல்ல முடியாத அவ்வளவு புகழைத் தருவதாகக் கருதுக என்பது முதல் இரண் டடியின் கருத்து. "எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி உவந்தடிமைத் திறம் நினைந்தங் குவந்து நோக்கி...ஈசன் திறமேபேணித் தொழுமடியார்" என்னும் அப்பர் அருண்மொழிகளால் இதனை உணர்க,

கரைதல்ஒன் றும்இலை கருதவல் லார்தமக்
குரையில்ஊ னம்இலை உலகினின் மன்னுவர்
திரைகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அரையில்வெண் கோவணத் தடிகள்வே டங்களே. 7

உலகமுட் குந்திறல் உடையரக் கன்வலி
விலகுபூ தக்கணம் வெருட்டும்வே டத்தின
திலகமா ரும்பொழில் சூழ்ந்ததே வன்குடி
அலர்தயங் கும்முடி அடிகள்வே டங்களே. 8

துளக்கம்இல் லாதன தூயதோற் றத்தன
விளக்கம்ஆக் குவ்வன வெறிவண்டா ரும்பொழில்
திளைக்குந்தே வன்குடித் திசைமுகன் ஓடுமால்
அளக்கஒண் ணுவண்ணத் தடிகள்வே டங்களே. 9

7. கரைதல் குற்றமாகச் சொல்லுதல், ஒன்றும் இல்லை. (ஒரு பொருளென்றால் குணம் குற்றம் இரண்டும் கலந்திருக்கும். இவ்வேடத்தில் முழுதும் குணமேயன்று, குற்றமென்று சொல்லுவதற்கு ஒன்றுமில்லை) என்பதாம். உரையில் ஊனம் இலை - இதன் பெருமையைச் சொன்னால் நமக்குள்ள குறைகள் நீங்கும் (உரை+கு+இல்)=உரைக்கில் என்பதின் 'கு'ச்சாரியை யின்றி வந்த செயின் என்னும் வினையெச்சம்.

8. இராவணனது வலியையும் பின்வாங்கத் தக்க வலியையுடைய பூத கணங்கள், (அவ்வேடம் உடைமையால்) பிற அஞ்சத்தக்க எப் பொருள்களையும் அடியார்மாட்டு எய்தவொட்டாது வெருட்ட வல்ல திரு வேடத்தையுடையவன் என்பது முன்னிரண்டடிகளின் கருத்து.

9. துளக்கம் இல்லாதவன்:- ''மண்பாதலம்புக்கு மால் கடல் மூடி மற்று ஏழுலகும் விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும்'' - இவ் வேடம் புனைந்தவர்க்கு நடுக்கம் இல்லை. தூய தோற்றத்தன - கண்டவர் மனத்தையும் தூய்மை செய்யும் தோற்றத்தை யுடையவை. விளக்கம் ஆக்குவன மனத்தில் விளங்காமலிருக்கும் பொருள்கள் இவ்வேடத்தைக் கண்டால் விளங்கும். ஆக்குவன - வகரம் விரித்தல் விகாரம். வெறி - வாசனை. அளக்க ஒண்ணு வண்ணத்து அடிகள் - ''இன்ன தன்மைய னென்று அறிவொண்ணு இறைவன்'' என்றது சுந்தரமூர்த்திகள் தேவாரம்

செருமரு தண்டுவர்த் தேரம ணாதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன அடிகள்வே டங்களே. 10

சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடம்ஓங் கும்பொழின் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

10. செருமருதண்துவர் - நெருங்கிய மருதமரத்தின் குளிர்ந்த துவர் தோய்ந்த ஆடை யணியும். மரு - மருது: கடைக்குறை. தேர் அமண் ஆதர்கள் - புத்தரோடுகூடிய சமணர்களாகிய தீயோர், உருமருவப் படாத் தொழும்பர் - நெருங்க முடியாத அருவருப்பான தோற்றம். அரு மருந்து - கிடைத்தற்கரிய தேவாமிர்தம்.

11. சேடர் - தேவன்குடி. தேவர் வணங்கும் தேவன்குடி.
திருநீறு அணிதல் உருத்திராக்கம் பூணுதல் சடை தரித்தல் இவை சிவவேடம் எனப்படும். இவ்வேடம் புனைந்தாரைக் குணம் குற்றம் பாராது வேடத்தையே கருதி வழிபடல்வேண்டும். இவர்கள் அஞ்சுவது யாதொன்றுமில்லை. இவரைப் பூசிப்போருக்கு எய்தாதன இல்லை என்பன இப்பதிகத்தால் தெளிவுறுத்தப்படும் பொருள். இவற்றில் திருநீறு ஒன்றையே பொருளெனக்கொண்டு முத்தியடைந்தவர் ஏனாதிநாதநாயனார் "கடையவன்றன் நெற்றியின்மேல் வெண்ணீறு தாம் கண்டார்" "கண்ட பொழுதே கேட்டேன். முன்பு இவர் மேற்காணாத வெண் திருநீற்றின் பொலிவு கண்டேன். வேறு இனி என்? அண்டர்பிரான் சீர் அடியார் ஆயினார்" என்று மனம்கொண்டு இவர்தம் கொள்கைக் குறிவழி நிற்பே னென்று "நேர் நின்றார்." மின் நின்ற செஞ்சடையார் தாமே வெளி நின்றார்" என்பது பெரிய புராணம். (638 - 41)

சடைமுடி - யொன்றே காரணமாக, எரியிற்புகுந்து உயிர்நீத்து முத்தி யுற்றவர் புகழ்ச்சோழ நாயனார். திருநீறு முதலிய அனைத்தும் கூடிய வேடத்தைப் பொருளென்றுகொண்டு முத்தி பெற்றவர் மெய்ப்பொருள் நாயனார்.

# 26 திருக் கானப்பேர்

## 284 பதிகவரலாறு

மதுரைத் திருவாலவாயினை வழிபட்டு அரிதின்நீங்கி, தென்னவன் தேவியாரும், அமைச்சர் குலச் சிறையாரும், ஊன்நெகிழ, உள்ளம் அழியக் கண்ணீர் பாய்ந்து ஒழுக, உணர்வின்றிவீழ்ந்து வணங்கக்கண்டு, "உம்மை யான் பிரியாதவெண்ணம் இந்நாட்டு இறைவர் பதி எனைப்பலவும் பணிவீர்" என்று அருளி அவ்விருவரொடும், அடியரொடும் திருப்பரங்குன்றம் முதலியவற்றை வணங்கிய காலத்தில், கற்றூர்கள் தொழுதேத்தும் கானப் பேரும் கைதொழுது பாடிய தமிழ் இத்திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பிடியெல்லாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினல் வழிபடும்
கடியுலாம் பூம்பொழிற் கானப்பேர் அண்ணனின்
அடியலால் அடைசரண் உடையரோ வடியரே. 1

நுண்ணிடைப் பேரல்கு னூபுர மெல்லடிப்
பெண்ணின்நல் லாளையோர் பாகமாப் பேணினன்
கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்
விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே. 2

1. பெரும் கை(ம்)மா - தலைவனாகிய துதிக்கையையுடைய யானை. மலர்தழீஇ - மலர்களை ஏந்திக்கொண்டு. கடி - வாசனை. உலாம்-உலாவும். நாவி வாய்...தொண்டர்புழுகு பூனையின் இடத்து உண்டாகும் புழுகிலும் மலர்களிலும். ஞானநீர்தூவி - திரவிய சுத்தியின் பொருட்டு அஸ்திர மந்திரத்தால் நீர் தெளித்து, வாய்ப்பெய்து - அத்திரவியங்களை அபிடேக கலயத்தில் வார்த்துக்கொண்டு நின்று (ஆட்படுவார்.) வாய் - இங்குப் பாத்திரத்தின் இடத்தைக் குறித்தது. கிரியையெல்லாம் அறிவோடு கூடிய வழியே பெரும்பயன் விளைப்பதால் அவ்வொப்புமைபற்றிக் கிரியையை ஞானமெனக் கூறினர். ஞானம் கிடைத்தற்கு நிமித்தம், கிரியை ஆதலின் ஞானம் என்றார்.

2 நுண்இடை - சிறிய இடுப்பு. நூபுரம் - சிலம்பு. விண் - ஞான ஆகாயம். இடை - ஏழன் உருபு.

வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம்
காவிவாய்ப் பண்செயுங் கானப்பேர் அண்ணலை
நாவிவாய்ச் சாந்துளும் பூவுளு ஞானநீர்
தூவிவாய்ப் பெய்துநின்று ஆட்டுவார் தொண்டரே. 3

நிறையுடை நெஞ்சுளும் நீருளும் பூவுளும்
பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்
கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்
குறையுடை அவர்க்கலாற் களைகிலார் குற்றமே. 4

ஏனப்பூண் மார்பின்மேல் என்புபூண்டு ஈறிலா
ஞானப்பே ராயிரம் பேரினு னண்ணிய
கானப்பேர் ஊர்தொழுங் காதலார் தீதிலர்
வானப்பேர் ஊர்புகும் வண்ணமும் வல்லரே. 5

3. குளத்தில் தாமரையில் தங்கிய வண்டின் கூட்டங்கள் மாலைக் காலத்தில் அது குவிவதால் அப்போது மலர்வதாகிய நீலோற்பலத்தை அடைந்து அங்கே தேனுண்ட மகிழ்ச்சியினால் பாடும் கானப்பேர். நீலோற்பலம் இரவில் மலர்வதென்பதை அறிக.

4. நிறை - மனம் பொறி வழி போகாமல் அறிவின் வழி நிறுத்துதல். இறைவனுக்கு வழிபாடு ஆற்றுவோர்க்கு முதற்கண் வேண்டப்படுவது நிறை உடை நெஞ்சு. பூசனைத் திரவியங்களாகிய நீரும், பூவும், நிவேத்திய மும், தோத்திரமும், வாத்திய வகைகளும் இங்குக் கூறப்படுகின்றன. இவற்றுள் எல்லாம் இறைவன் தங்கியிருத்தலையறிந்து பூசிப்பதையே தமக்குக் கருமமாகக்கொண்டு திருக்கானப் பேரைப் பூசிக்கும் மெய் யடியார், தமது குறைகள் நீங்கப் பெறுவார்களேயன்றி ஏனையோர் அவற்றைக் களையமாட்டாதவராவர் என்பது பாடலின் கருத்து. "பார்க் கின்ற மலரூடு நீயே யிருத்தி" என்பது தாயுமானவர் வாக்கு.

5. ஏனம் - பன்றியின் கொம்பாகிய. பூண் - அணிகலத்தையுடைய, மார்பினில், என்பு பூண்டு - எலும்பு மாலைகளையணிந்து. ஞானம் - சிவ போதம்தருவன ஆகிய. பேர் ஆயிரம் - சிறந்த ஆயிரம் பெயர்களும். பெயரன் - பெயராக உடையவன். "பேர் ஆயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்" (அப்பர்) "ஆயிரம் பேருகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே" (சுந்தரமூர்த்திகள்) "ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" (திருவாசகம்) என வருவனவும் அறிக. ஆயிரம் என்பது மிகப் பல என்னும் பொருட்டு. "பழு தெண்ணு...எழுபது கோடியுறும்" என்ற திருக்குறளிற்போல. (639)

பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்
வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்
கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்
உள்ளமே கோயிலா உள்கும்என் உள்ளமே. 6

மானமா மடப்பிடி வன்கையால் அடக்கிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்
ஊனமாம் உடம்பினில் உறுபிணிகெட எண்ணில்
ஞானமா மலர்கொடு நணுகுதல் நன்மையே. 7

வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண்
தோளினான் நெடுமுடி தொலையவே ஊன்றிய
தாளினான் கானப்பேர் தலையினால் வணங்குவார்
நாளுநாள் உயர்வதோர் நன்மையைப் பெறுவரே. 8

சிலையினான் முப்புரந் தீயெழச் செற்றவன்
நிலையிலா இருவரை நிலைமைகண்டு ஓங்கினான்
கலையினார் புறவிற்றேன் கமழ்தரு கானப்பேர்
தலையினால் வணங்குவார் தவமுடை யார்களே. 9

6. பள்ளம்மே - பள்ளம்போல். மேவிய - பொருந்திய. படர்ந்த சடையில். பாய்ந்தநீர் வெள்ளம் தாங்கினான். நீர் பாய்வது பள்ளத்தில் ஆதலால் கங்கை நீருக்குச் சடை பள்ளம் போல் இருந்தது என்பது. பள்ளம் மே(வு) படர்சடை. மே+சடை-வினைத்தொகை. கள்ளம் நினைத்தலும் செய்தறியாதவர்களாகிய மெய்யன்பர் கருதிய கானப்பேர்.

7. தலவரலாறு இப்பாட்டிலும் முதற்பாட்டிலும் காண்க. ஞான மாமலர்:- ஞானம் அட்டபுட்பங்களில் ஒன்று.

8. வாளினால் - வாட்போர் வலியாலும். வேலினால் - வேற்படைப் பயிற்சியாலும், வரை எடுத்த தோளினான். நாளும் நாளும் உயர்வதோர் நன்மை அவனை வணங்குவார்க்கன்றிப் பிறர்க்கு செய்தலாகாமை யறிக.

9. செற்றவன் - அழித்தவன். நிலைமைகண்டு ஓங்கினான் - செருக்கு ஒழியாத நிலைமையைக்கண்டு, அழலாய் ஓங்கினவன்; இறைவன் அவ்வாறு ஓங்காவிடின், அவர்களின்றும் செருக்கு ஒழிந்திரார். “தாளை வணங்காத் தலை” (திருக்குறள்) “வணங்கத் தலைவைத்து” (திருவாசகம்) “தலையே நீவணங்காய்” (அப்பர்) என்பதனால் தலையினால் வணங்குவார் என்றார்.

உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி
பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்
மறித்தலை மடப்பிடி வளர்இளங் கொழுங்கொடி
கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே. 10

காட்டகத்து ஆடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளும் காழியான்
நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க்கு இல்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

இருவரை நிலைமையை; இரண்டு செயப்படுபொருள் வருவதால் இருவரை என்பதற்கு, இருவரது என்க.

10. உறித்தலை - உறியினிடத்து. சுரை - சுரைக்குடுக்கை. ஓர் பாத்திரமும் ஆம். குண்டிகை பிடித்து - கமண்டலத்தையும் தாங்கி. உச்சி - தலையில். பறித்தல் - மயிர் பறித்தலும். போர்த்துதலும், மயிரை வளர்த்தலும் ஆகியஇவற்றால் பயனில்லை. கறித்து - கடித்து.

11. கோட்டகம் - நீர்நிலை. குதி - துள்ளல். முதனிலைத் தொழிற் பெயர்.

தேமலி கமலப் பூமலி படப்பைத்
தலைமுக டேறி இளவெயிற் காயும்
கவடிச் சிறுகாற் கர்க்கட கத்தைச்
சுவடிச் சியங்குஞ் சூல்நரி முதுகைத்
துன்னி எழுந்து செங்நெல் மோதுங்
காழி நாட்டுக் கவுணியர் குலத்தை
வாழத் தோன்றிய வண்டமிழ் விரகன்
தெண்டிரைக் கடல்வாய்க்
காண்தகு செவ்விக் களிறுகள் உகுத்த
முட்டைமுன் கவரும் பெட்டையங் குருகே
வாடை யடிப்ப வைகறைப் போதில்
தனிநீ போந்து பனிநீர் ஒழுகக்
கூசிக் குளிர்ந்து பேசா திருந்து
மேனி வெளுத்த காரணம் உரையாய்
இங்குத் தணந்தெய்தி நுமரும்
இன்னம்வந் திலரோ சொல்இளங் குருகே.

—மும்மணிக்கோவை 25

# 27 திருச் சக்கரப்பள்ளி

## 285 பதிகவரலாறு

இயல் இசைத் தலைவனாராகிய பிள்ளையார், பழுதில் சீர்த்திரு வெண்ணிப் பதி முதலியவற்றைப்பணிந்து, திருச்சக்கரப்பள்ளியைச் சேர்ந்து போற்றிப் பாடியருளிய தமிழ் வேதம் இத் திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

படையினர் வெண்மழுப் பாய்புலித் தோலரை
உடையினர் உமையொரு கூறனர் ஊர்வதோர்
விடையினர் வெண்பொடிப் பூசியார் விரிபுனல்
சடையினர் உறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 1

பாடினர் அருமறை பனிமதி சடைமிசைச்
சூடினர் படுதலை துன்எருக் கதனொடும்
நாடினர் இடுபலி நண்ணியோர் காலனைச்
சாடினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 2

மின்னினர் சடைமிசை விரிகதிர் மதியமும்
பொன்னினர் கொன்றையும் பொறிகிளர் அரவமும்
துன்னினர் உலகெலாம் தொழுதெழ நான்மறை
தன்னினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 3

1. படையினர் வெண்மழு - வெண்மையாகிய மழுவைப் படையாக உடையவர்.

2. மதியை வெள்தலையோடும் எருக்கமாலையோடும் சடைமிசைச் சூடினர். படுதலை, தலைமாலையைக் குறித்தது. துன் - நெருங்கிய. இடு பலி - (மாதர்) இடும் பிச்சையை; (நாடினர்.)

3. மின்னின் ஆர்சடை - மின்னலைப்போன்ற சடை. பொன்னின் ஆர் - பொன்னைப்போன்ற. துன்னினர் - நெருங்க அணிந்தவர். நான்மறை தன்னினர் - நான்கு வேதங்களிலும் உள்பொருள் ஆனவர். தன் - அசை.

நலமலி கொள்கையார் நான்மறை பாடலார்
வலமலி மழுவினர் மகிழும்ஊர் வண்டறை
மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழி சக்கரப் பள்ளியே. 4

வெந்தவெண் பொடியணி வேதியர் விரிபுனல்
அந்தமில் அணிமலை மங்கையோ டமரும்ஊர்
கந்தமார் மலரொடு காரகில் பல்மணி
சந்தினோடு அணைபுனற் சக்கரப் பள்ளியே. 5

பாங்கினன் முப்புரம் பாழ்பட வெஞ்சிலை
வாங்கினர் வானவர் தானவர் வணங்கிட
ஓங்கினர் உமையொரு கூறொடும் ஒலிபுனல்
தாங்கினர் உறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 6

பாரினர் தொழுதெழு பரவுபல் லாயிரம்
பேரினர் பெண்ணொரு கூறனர் பேரொலி
நீரினர் சடைமுடி நிரைமலர்க் கொன்றையந்
தாரினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 7

4. வந்து இழி - வந்து பாய்கின்ற (காவிரி). சலசல என்னும் ஓசையோடு மாணிக்கங்களைக் கொழித்துவீசும் சக்கரப்பள்ளி.

5. விரிபுனல் - பரவும் நீர்வளம் பொருந்திய. ஊர் - வேதியர் மலை மங்கையோடு அமரும் ஊர் என்க. சந்து - சந்தனமரம். அந்தம் இல்அணி - பேரழகு; அழியா அழகு எனலும் ஆம். "அழியா அழகுடையான்" என வருதலும் காண்க. –கம்பராமாயணம்.

6. முப்புரம் பாழ்பட. வெம்சிலை - விரும்பத்தக்க (மேரு) மலையை பாங்கினல் - இனங்களுக் கேற்க. வாங்கினர் - வளைத்தவர். "வெம்மை விருப்பம். கொடியவில் என்பதில் பொருள் சிறவாது; தேர் ஆதற்கு இயைபில்லாதது. அம்பு ஆதற்கு இயைபில்லாதது, குதிரை ஆதற்கு இயைபு இல்லாதது. (பூமி, திருமால் வேதம்) முறையே தேரும், அம்பும் குதிரையும் ஆனாற்போல, வில்லாதற்கு இயைபு இல்லாத மலை வில்லாயிற்று.

7. பாரினர் - பூமியிலுள்ளோர். தொழுது எழும் - துதித்தற்குரிய பல ஆயிரம் பெயரை உடையவர், எழும் என்ற பெயரெச்சம் (பெயரை)

முதிரிலா வெண்பிறை சூடினார் முன்னநாள்
எதிரிலா முப்புரம் எரிசெய்தார் வரைதனால்
அரிதிலா வல்லரக் கன்வலி வாட்டிய
சதிரினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 8

துணிபடு கோவணம் சுண்ணவெண் பொடியினர்
பணிபடு மார்பினர் பனிமதிச் சடையினர்
மணிவணன் அவனொடு மலர்மிசை யானையும்
தணிவினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 9

உடம்புபோர் சீவரர் ஊண்டொழிற் சமணர்கள்
விடம்படும் உரையவை மெய்யல விரிபுனல்
வடம்படு மலர்கொடு வணங்குமின் வைகலும்
தடம்புனல் சூழ்தரு சக்கரப் பள்ளியே. 10

தண்வயல் புடையணி சக்கரப் பள்ளியெம்
கண்ணுத லவனடிக் கழுமல வளநகர்
நண்ணிய செந்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
பண்ணிய விவைசொலப் பறையுமெய்ப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

உடையவர் என்ற பெயரைத் தழுவும். பரவு + பெயர்; வினைத்தொகை. பல்லாயிரம் - இடைப்பிறவரல். நிரை - வரிசை. அடுக்கு அடுக்காகப் பூத்தலினால் கொன்றைமலர் நிரைமலர் எனப்பட்டது.

8. முதிர், அதிர் -என்பன முதிர்தல், அதிர்தல் என்ற பொருளில் வருதலால் முதனிலைத் தொழிற்பெயர். வரை தன் ஆல் - தன் - அசை. கதிர் - திறமை.

9. துணி படு - கிழிக்கப்பட்ட, பணி - பாம்பு. மணி - நீலமணி. தணிவினர் - செருக்குத்தணியச் செய்தவர்.

10. உடம்பைப் போர்க்கும் சீவர மென்னும் ஆடையை யுடைய பவுத்தர். விடம் - நஞ்சு. புனல் கொடு - நீரைக்கொண்டும்; வடம்படு மலர் கொடு - மலர்மாலைகளைக்கொண்டும்.

11. மெய்ப்பாவமே - உடம்பினாற் செய்த பாவம். எனவே ஏனைக்கரணங்களாற் செய்த பாவமும் அடங்குதலறிக.

# 28 திரு மழபாடி

## 286 பதிகவரலாறு

திருவையாற்றிலிருந்து வழிபட்டுவந்த கவுணியர்கோமானுர், குட திசைமேற் போவதற்குக் கும்பிட்டு, அருள்பெற்றுக் குறிப்பினேடும்படரும் நெறிமேல் அணைவராய்ப் பரமரது திரு நெய்த்தானப் பதியினை நண்ணி வணங்கி அருந்தமிழ்மாலைகள் பாடிச் சென்று, "புடைவளர் மென் கரும்பினெடு பூகம் மிடை மழபாடி" யை அடைந்து போற்றிப் பாடியது இத் திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

காலையார் வண்டினங் கிண்டிய காருறும்
சோலையார் பைங்கிளி சொற்பொருள் பயிலவே
வேலையார் விடம்அணி வேதியன் விரும்பிடம்
மாலையார் மதிதவழ் மாமழ பாடியே. 1

1. காலை - மருதப்பண்ணை. காலை - காலைப்பண்; ஆகுபெயர். ஆர் - பாடிய(ஆர்த்தல் - ஒலித்தல்)வண்டினம். கிண்டிய - தம்கால்களால்கிளர்ந்த, (மலர்களையுடையசோலை). கார் உறும் - மேகம்தங்கும். சோலை - சோலையிற் பொருந்திய. பசிய கிளிகள் அத்நலத்தினர் பயிலும் சைவ நூல்களின் சொல்லையும் பொருளையும் பயில, வேதியன் விரும்பும் இடம் மழபாடி யென்க. பயில - என்பது காரண காரியம் ஒன்றும் இன்றி வந்த வினை யெச்சம். "வாவி செங்கமலம் முகங்காட்ட ...... குவளைக் கருநெய்தல் கண்காட்டும் கழுமலமே." என்பதில் காட்ட என்புழிப்போல. (திருமுறை 1 பதிகம் 129)

கார் - பண்பாகுபெயர். பைங்கிளி சொற்பொருள் பயில என்பதனை "வேரிமலிபொழிற் கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே" என்பதனேடு ஒப்பிடுக. மாடங்களில் சந்திரன் தவழும் மழபாடி என்க. விடம் அணி வேதியன் - விடக்கறையைக் கழுத்திலணிந்த வேதத்தின் பொருளானவன். விடம் - காரண ஆகுபெயர்.

கறையணி மிடறுஉடைக் கண்ணுதல் நண்ணிய
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணும்ஊர்
துறையணி குருகினம் தூமலர் துதையவே
மறையணி நாவினன் மாமழ பாடியே. 2

அந்தணர் வேள்வியும் அருமறைத் துழனியும்
செந்தமிழ்க் கீதமும் சீரினல் வளர்தரப்
பந்தணே மெல்விர லாளொடும் பயில்விடம்
மந்தம்வந் துலவுசீர் மாமழ பாடியே. 3

அத்தியின் உரிதனை அழகுறப் போர்த்தவன்
முத்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்
பத்தியால் பாடிடப் பரிந்தவர்க்கு அருள்செயும்
அத்தனூர் உறைவிடம் அணிமழ பாடியே. 4

2. கண்ணுதலும் பிஞ்ஞகனுமாகிய இறைவன். பேணும் - விரும்பும். (ஊர்). நண்ணிய பிறை - தன்னைச் சரண்அடைந்தபிறை. பிஞ்ஞம் - மயில் தோகை; வேட உருத்தாங்கியபோது தரித்தலால் பிஞ்ஞகன் என்று சிவபெருமானுக்குப் பெயர். நீர்த்துறைகளிலே வெள்ளிய பறவைகள் அங்கு மலர்ந்த வெண்மலர்களுக்கும் தமக்கும் வேறுபாடு தோன்றாதபடி நெருங்கியுள்ள வளம்பொருந்திய மழபாடி என்பது மூன்றும் அடிக்குப் பொருள். (துதைய -) பொருந்திய என ஒரு சொல் வருவிக்க.

3. துழனி - ஓசை. செந்தமிழ்க்கீதம் - தனித் தமிழிசைப் பாடல். சீர் - முறை, சிறப்பு. தாளஒத்து. வேள்விகள் முறையோடும், மறைத்துழனி சிறப்போடும், செந்தமிழ்க்கீதம், தாள ஒத்துக்களோடும் விருத்தியடைய அம்பிகையோடும் இறைவன் பயிலும் இடம் என்பது முதல் மூன்றடி யின்பொருள். பயில்+இடம்=பயில்விடம் - உடம்படுமெய்யல்லாத மெய். இறைவன் என்பது சொல் எச்சம். (பரிமேலழகர்). தோன்று எழுவாய் எனினும் ஆம். மந்தம் - தென்றற்காற்று, பண்பாகு பெயர்.

4. பேரழகுடைய அவன் போர்த்தியதனல் யானைத்தோலும் ஓர் அழகுடையதாயிற்று என்பது முதலடியின் பொருள். "நாறு பூம்பொழில் நாரையூர் நம்பனுக்கு ஆறுசூடினும் அம்ம அழகிதே" என்ற அப்பர் வாக்கானும் அறிக. (திருக்குறுந்தொகை.) வீடு பேறாயும், மூவரினும் முதல்வனாயும் நிற்பவன் என்பது இரண்டாம் அடியின்பொருள்.

கங்கையார் சடையிடைக் கதிர்மதி யணிந்தவன்
வெங்கண்வாள் அரவுடை வேதியன் தீதிலாச்
செங்கயற் கண்உமை யாளொடுஞ் சேர்விடம்
மங்கைமார் நடம்பயில் மாமழ பாடியே. 5

பாலனூர் ஆருயிர் பாங்கினல் உணவரும்
காலனூர் உயிர்செகக் காலினல் சாடினன்
சேலினூர் கண்ணினள் தன்னெடுஞ் சேர்விடம்
மாலினூர் வழிபடும் மாமழ பாடியே. 6

விண்ணிலார் இமையவர் மெய்ம்மகிழ்ந் தேத்தவே
எண்ணிலார் முப்புரம் எரியுண நகைசெய்தார்
கண்ணினல் காமனைக் கனல்எழக் காய்ந்தஎம்
அண்ணலார் உறைவிடம் அணிமழ பாடியே. 7

இவற்றை முறையே "... விண் பொருந்து தேவர்க்கும் வீடுபேருய் நின்ருனே" என்ற அப்பர் பெருமான் (திருப்பழனம். 5.) திருவாக்கானும், "மூவண்ணல் தன்சந்நிதி முத்தொழில் செய்ய வாளா மேவண்ணல்" என்ற பரஞ்சோதியார் வாக்கானும் (திருவிளையாடற் புராணப் பாயிரம்) உணர்க. பரிந்து - இரங்கி.

5. வாள் அரவு - ஒளியையுடைய பாம்பு. வாள் என்னும் சொல் பாம்புக்கு அடைமொழியாக வருவதைப் பல இடங்களிலும் காண்க. தீது இலா உமையாள் - தன்னை யடைந்தவர்களின் பாவத்தை இல்லையாகச் செய்விப்பவளாகிய உமையாள். இலா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்துப் பிறவினை விகுதி தொக்கது.

6. பாலனூர் - மார்க்கண்டேயர். பாங்கினல்:- அளந்த வாழ்நாள் முடிந்தவர் உயிரைக் கவரத் தனக்கு இறைவன் அளித்த ஆணை இங்குப், பாங்கு எனப்பட்டது. செக - அழிய. காலன் ஆகையினல் அவனைக் காலினற் சாடினன் என்பது ஓர்சொல்நயம். சேல் - மீன். மாலினூர் - திருமால். இறைவனை வழிபடும் பேறு உற்றமையின் மாலினூர் எனச்சிறப்புக் கிளவியாற் கூறினர்.

7. விண் - தேவ உலகம். எண் இலார் - (வழிபட்டு உய்யும்) எண்ணம் இல்லாதார்.

கரத்தினுல் கயிலையை யெடுத்தகார் அரக்கன
சிரத்தினை யூன்றலுஞ் சிவனடி சரண்எனு
இரத்தினுற் கைந்நரம் பெடுத்திசை பாடலும்
வரத்தினுன் மருவிடம் மாமழ பாடியே. 8

ஏடுலா மலர்மிசை அயனெழில் மாலுமாய்
நாடினுர்க் கரியசீர் நாதனுர் உறைவிடம்
பாடெலாம் பெண்ணையின் பழம்விழப் பைம்பொழில்
மாடெலாம் மல்குசீர் மாமழ பாடியே. 9

உறிபிடித் தூத்தைவாய்ச் சமணுெடு சாக்கியர்
நெறிபிடித் தறிவிலா நீசர்சொற் கொள்ளன்மின்
பொறிபிடித் தரவினம் பூணெனக் கொண்டுமான்
மறிபிடித் தானிடம் மாமழ பாடியே. 10

8. அரக்கன சிரம் - அரக்கனுடைய தலைகள். வருமொழி பன்மை யாதலினுல் ஆறனுருபில் அகரம் வந்தது. அதனுல் சிரம் என்பதைப் பால் பகா அஃறிணைப் பெயராகக் கொள்க. இரத்து - இரத்தல். கெஞ்சி வேண்டல், தொழிற்பெயர் விகுதி. பாய்த்து என்பதிற்போல வரத்தினுன் - வரத்தைத் தந்தவன். பாடலும், அவனுக்கு அருளிய வரத்தை யுடையவன் (வரம் அருளியவன்) என்பது.

9. எழில் - அழகையுடைய. மால், பன்றி உரு எடுத்தமையின் இங்ஙனம் கூறப்பட்டது; இகழ்ச்சிக்குறிப்பு. "எழில்செய் கூகை" என்ருர் சிந்தாமணியில். இனி, எழில் - கோலம். அச்சொல் பன்றியைக் குறிக்கும். 'இலட்சிதலட்சணையால்' எனக்கொண்டு அதற்கேற்ப அன்னமாகப் பிரமனும் (பன்றியாகத் திருமாலும்)நாடினுர்க்கு அறிதற்கரிதாயிருந்த நாதனுர் எனலும் ஆம். பக்கங்களிலெல்லாம் பனை மரங்கள் பழுத்துப் பழம் உதிர்விக்கவும், மற்ற பக்கங்களிலெல்லாம் பசிய சோலைகள் வளம் மிகுவிக்கவும் பொருந்திய மழபாடி. பழம் பழுத்தவுடனே உதிர்தல் பனை மரத்துக் குண்மையால் 'காகதாலியம்' என வடநூலார் கூறுவர்.

10. உறி பிடித்து:- நீர்க்கரகத்தில் எறும்பு விழுந்து கொலைப்பாவம் சேராதிருக்க அதனை ஓர் உறியில் வைத்து அவ்வுரியை ஒரு பிரம்பில் மாட்டித் தூக்கிச்செல்வது சமணர் வழக்கம். ஊத்தை வாய் - ஊற்றை

ஞாலத்தா ராதிரை நாளினுன் நாள்தொறும்
சீலத்தான் மேவிய திருமழ பாடியை
ஞாலத்தான் மிக்கசீர் ஞானசம் பந்தன்சொல்
கோலத்தால் பாடுவார் குற்றம்அற் றூர்களே. 11

திருச்சிற்றம்பலம்

வாய், பல் விளக்கினுல் அதில் இருக்கும் சிறு கிருமிகள் சாம் என்று விளக் காமையினுல் ஊத்தை வாயையுடைய சமண் எனப்பட்டது. பொறி பிடித்த அரவு இனம் - படத்திற் புள்ளிகளையுடைய பாம்பு பிடித்த அரவு; பெயரெச்சத்து விகுதி அகரம் தொக்கது.

11. ஆதிரை நாளினுன் - சிவபெருமான். திருவாதிரை சிவனுக் குரியது. ஞாலத்து ஆர் - உலகில் எங்கும் நிறைந்த; ஆதிரை நாளினுன்· கோலத்தால் பாடுவார் - சிவவேடத்தோடு பாடுவோர்; குற்றமற்றூராவர்- தேவாரத் திருமுறைகளையும், சித்தாந்த நூல்களையும் ஓதுங்கால் இயன்ற அளவு உடற்சுத்தியோடு, விபூதி, உருத்திராக்கமணிந்து ஓதவேண்டுமென் பது முறை. ஆதலாற் கோலத்தாற் பாடுவார் என்றூர். ஆல் உருபு ஒடுப் பொருளில் வந்தது. இவ்வாறு வருதலைத் "தூங்குகையா னோங்குநடைய" என்ற புறநானூற்றுனும் அறிக. நாள்தொறும் சீலத்தான்மேவிய திருமழபாடி. நித்திய நைமித்திக வழிபாட்டு முறைகள் நாள்தோறும் தவருது பொருந்திய திருமழபாடி. சீலம் - ஒழுக்கம்; இங்குச் சிவாலயபூசையைக் குறிக்கிறது.

குருகும் பணிலமும் கூன்நந்துஞ் சேலும்
பெருகும் வயற்காழிப் பிள்ளை—அருகந்தர்
முன்கலங்க நட்ட முடைகெழுமி யால்இன்னம்
புன்கலங்கல் வைகைப் புனல். 26

புனமா மயில்சாயல் கண்டுமுன் போகா கிளிபிரியா
இனமான் விழியொக்கும் என்றுவிட் டேகா இருநிலத்துக்
கனமா மதிற்காழி ஞான்சம் பந்தன் கடன்மலைவாய்த்
தினைமா திவள்காக்க எங்கே விளையுஞ் செழுங்கதிரே. 27

—மும்மணிக்கோவை

# 29 மேலைத் திருக்காட்டுப்பள்ளி

## 287 பதிக வரலாறு

திருநெடுங்களத்து முதல்வனை, "நின்பால் நெஞ்சம் செலாவகை நேர்விலக்கும் இடும்பைகள் தீர்த்தருள் செய்வாய்" என்னும் இன்னிசை மாலைகொண்டு ஏத்திப் பிறபதிகள் அனைத்தும் பணிந்து நியமம் போற்றி மேலைத் திருக்காட்டுப்பள்ளிச் செஞ்சடை நம்பர்கோயிலை எய்தி, முன்றில் வலம் கொண்டு இறைஞ்சி விழ்ந்து மொய்கழற் சேவடி போற்றி செய்து, மன்றுள் நின்றுடலை மன்த்துள் வைப்பராய்ப் பாடிவாழ்த்துற நின்றது இத் திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி உண்பதும் வெண்டலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தம் நீர்மையே 1

நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனார் அழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனார் கழலிணை போற்றுதல் பொருளதே. 2

1. வார், ஊர், கார், நீர் - ரகரவீற்றுச் சொற்கள் உகரச் சாரியை பெற்றன. ஊரில் ஏற்கும் பிச்சையை யுண்பதும் வெண்தலையில். மன் உம் இரண்டும் அசைநிலை. இது திருக்காட்டுப்பள்ளி நிமலர்தம் நீர்மை யாகும். பங்கினன் - நிமலர்; பால் வழுவமைதி.

2. அருத்தனார் - பொருளாய் உள்ளவர். அறிவார்காணும் கருத்துப் பொருளாய் இருத்தலன்றி திருக்காட்டுப்பள்ளியிற் கண்ணுற்காணும் பொருள் வடிவாயுமுள்ளவர். பொருத்தனார் - பொருந்துதலையுடையவர். பொருத்தம் - பொருந்தல். அதையுடையவன் பொருத்தன், கழலிணை போற்றுதல், பொருளது - பயனுடைய செய்கையாகும். ஏனைய அவம் உடையனவே என்பது குறிப்பெச்சம். பொருள் என்னும் பல பொருள் ஒருசொல் ஈற்றடியில் பயன் என்னும் பொருளில் வந்தது. "போற்றுதல் பொருளதே" என்ற தொடரில் பிரிநிலை யேகாரத்தைப் பிரித்துப் போற்றுதலே பொருளது எனக்கூட்டுக.

பண்ணி ஞர் அருமறை பாடி ஞர் நெற்றியோர்
கண்ணி ஞர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
விண்ணி ஞர் விரிபுனல் மேவி ஞர் சடைமுடி
அண்ணலார் எம்மையா ளுடையஎம் மடிகளே. 3

பணங்கொள்நா கம்அரைக் கார்ப்பது பல்பலி
உணங்கலோ டுண்கலன் உறைவது நாட்டிடைக்
கணங்கள் கூடித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள் சூலப்படை நிமலர்தம் நீர்மையே 4

வரையுலாம் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலாம் இடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாம் கங்கையும் திங்களும் சூடியங்
கரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே. 5

வேதஞர் வெண்மழு வேந்திஞர் அரங்கமுன்
ஓதிஞர் உமையொரு கூறஞர் ஒண்குழைக்
காதிஞர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதஞர் திருவடி நாளும்நின் றேத்துமே. 6

3. பண்ணின ஆர் - பண்ணோடு பொருந்திய. அருமறை பாடிஞர். ஆகாய கங்கை சடை முடியின்கண் தங்கப்பெற்றவர்.

4. அரைக்கு ஆர்ப்பது - இடுப்பிற் கட்டிக்கொள்வது; நாகம். பல இடங்களில் ஏற்றுவந்த பிச்சைச் சோற்றை யுண்ணும் பாத்திரம். உணங்கல் ஓடு - உலர்ந்த மண்டையோடு. தங்குவது சுடுகாட்டில். இது திருக்காட்டுப்பள்ளி நிமலர்தம் நீர்மையாகும். எனினும், அன்னன் என்று அகலற்க. "பாரிடம் சூழ் வரத்தான் பலிகொண்டும் தன்பாதமலர் சேர் அடியார்க்குப் பெருவாழ்வு அளிப்பன்" (திருக்கருவைக் கலித்துறையந்தாதி) கோயில் சுடுகாடு ... ஆயிடினும் காயில் உலகனைத்தும் கற்பொடிகாண்", "எம்பெருமான் ஏது உடுத்து அங்கு ஏது அமுது செய்திடினும் தன் பெருமை தானறியாத் தன்மையன்" என்பனகொண்டு தேறி அவனைச் சரண்புக்குப் பெரும்பயன் எய்துக என்பது பாட்டிடை வைத்த குறிப்பு.

5. வரை உலாம் - மலையிற் செழித்த. சந்து - சந்தன மரங்கள். உலாம் - உலாவும்: இங்குச் செழித்த என்னும் பொருட்டு. அரையின் கண் கோவணம் அசைக்கும் அடிகள் வேடங்கள் இருந்தவாறு.

6. ஏத்தும் - துதியுங்கள். உம் ஏவற் பன்மை விகுதி.

மையினார் மிடறனார் மான்மழு வேந்திய
கையினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
தையலோர் பாகமர்த் தண்மதி சூடிய
ஐயனார் அடிதொழ அல்லலொன் றில்லையே. 7

சிலைதனால் முப்புரஞ் செற்றவன் சீரினார்
மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்
கலைதனார் புறவணி மல்குகாட் டுப்பள்ளி
தலைதனால் வணங்கிடத் தவமது ஆகுமே. 8

செங்கண்மால் திகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையால் தொழுதெழத் தழலுரு ஆயினான்
கங்கையார் சடையினான் கருதுகாட் டுப்பள்ளி
அங்கையால் தொழும்அவர்க் கல்லலொன் றில்லையே. 9

போதியார் பிண்டியர் என்றவப் பொய்யர்கள்
வாதினால் உரையவை மெய்யல வைகலும்
காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
ஏரினால் தொழுதெழ வின்பம்வந் தெய்துமே. 10

7. மையின் ஆர் மிடறனார் - கருமை நிறைந்த கழுத்தையுடையவர். கடி - வாசனை.

8. இப்பாடலுள், தன் என்பன நான்கும் அசைகள். சீரின் ஆர்மலை. சிறப்பின் மிகுந்த மலை; கைலை. உலகமெல்லாம் அழியும் ஒவ்வோர் பிரளயத்திலும் தான் அழியாமை மட்டுமின்றி வளரும் தன்மை உடையது கலைதன் ஆர்புறவு - மானினத்தின் நிலமாகப் பொருந்திய முல்லை நிலம். அந்நிலக் கருப்பொருள்களில் ஒன்று மான்.

9. கைபெற்ற பயன் கடவுளைத் தொழுவது, ஆதலால் கையால் தொழுது எனல் வேண்டா கூறலன்று "கரம் தரும் பயன் இது என உணர்ந்து" என்பது பெரியபுராணம்.

10. போதி - அரசமரம். கௌதம புத்தர் அம்மரத்தினடியில் இருந்து ஞானம் அடைந்தமைபற்றி அதனைப் போற்றுவர் பவுத்தர். பிண்டி - அசோகு. அருகக்கடவுள் அம்மர நிழலில் உளன் என்பர் சமணர். வாதினால் உரை அவை - வாதினால் உரைக்கும் அச்சொற்கள். ஏர் - அழகு; சிவவேடம். இப்பாடல் குறிலெதுகை.

பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை யவைவல்ல வணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொல்லப் பறையுமெய்ப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

11. புறவம் - சீகாழி. கருமணி - நீலமணி போன்ற. மிடற்றினன் - கண்டத்தை யுடையவன். பரவிய - துதித்த. பறையும் - நீங்கும்.

கதிர்மதி நுழையும் படர்சடை மகுடத்
தொருத்தியைக் கரந்த விருத்தனைப் பாடி
முத்தின் சிவிகை முன்னாட் பெற்ற
அத்தன் காழி நாட்டுறை அணங்கோ மொய்த்தெழு
தாமரை யல்லித் தவிசிடை வளர்ந்த
காமரு செல்வக் கனங்குழை யவளோ மீமருத்
தருவளர் விசும்பில் தவநெறி கலக்கும்
உருவளர் கொங்கை உருப்பசி தானோ
வாருணக் கொம்போ மதனன் கொடியோ
ஆரணி யத்துள் அருந்தெய்வ மதுவோ
வண்டமர் குழலுங் கெண்டையங் கண்ணும்
வஞ்சி மருங்குங் கிஞ்சுக வாயும்
ஏந்திள முலையுங் காந்தள்அங் கையும்
ஓவியர் தங்கள் ஒண்மதி காட்டும்
வட்டிகைப் பலகை வான்துகி லிகையால்
இயக்குதற் கரியதோர் உருவுகண் டென்னை
மயக்கவந் துதித்ததோர் வடிவிது தானே. 28

—மும்மணிக்கோவை.

## 30 திரு அரதைப் பெரும்பாழி.

288 பதிகவரலாறு

திருவிரும்பூளையை எய்திய திருஞானசம்பந்தர், திருத்தொண்டர் எதிர்கொள்ள, மணிமுத்தின் சிவிகையின் இறங்கினார். கோயிலை அணைந்து இறைஞ்சினார். பண் தரும் இன்னிசைப் பதிகம் மறைப் பொருள் விரியப் பரம்பொருளைப் பாடினார். பின்னர் வழிபட்ட தலங்கள் பல. அவற்றுள் ஒன்று திருஅரதைப் பெரும்பாழி. அங்குப் புனைந்த நீடு தமிழ்த் தொடை இத்திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பைத்தபாம் போடரைக் கோவணம் பாய்புலி
மொய்த்தபேய் கள்முழக் கம்முது காட்டிடை
நித்தமா கந்நட மாடிவெண் ணீறணி
பித்தர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 1

கயலசே லகருங் கண்ணியர் நாள்தொறும்
பயலைகொள் ளப்பலி தேர்ந்துழல் பான்மையார்
இயலைவா னோர்நினைந் தோர்களுக் கெண்ணரும்
பெயரர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 2

1. பைத்த - படத்தையுடைய பாம்பு. பைத்த குறிப்புப்பெயரெச்சம். பாம்புக் கோவணத்தோடு - என உருபு பிரித்துக் கூட்டுக. முழக்கம் முதுகாடு - முழக்கத்தையுடைய முதுகாடு. நடம் ஆடி வெண்ணீற்றை அணிந்த பித்தர் கோயில் என்க.

2. கயல் போன்ற கண்ணியரும், சேல் போன்ற கண்ணியருமாகிய பல பெண்கள் (தாருகா வனத்து முனிகன்னியர்) பயலை - பசலை. பான்மையார் - தன்மையுடையவர். இயலை - தம் தன்மைகளை; நினைந்தோர்களுக்கு எண்ணுதற்கரியபல பெயரையுடையராயிருப்பார். அவர் எழுந்தருளியிருக்குங் கோயில், அரதைப் பெரும்பாழி.

கோடல்சா லவ்வுடை யார்கொலை யானையின்
மூடல்சா லவ்வுடை யார்முனி கானிடை
ஆடல்சா லவ்வுடை யாரழ காகிய
பீடர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 3

மண்ணர்நீ ரார்அழ லார்மலி காலினர்
விண்ணர்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணர்பா டல்உடை யாரொரு பாகமும்
பெண்ணர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 4

மறையர்வா யின்மொழி மானொடு வெண்மழுக்
கறைகொள்சூ லம்முடைக் கையர்கா ரார்தரும்
நறைகொள்கொன் றைநயந் தார்தருஞ் சென்னிமேல்
பிறையர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 5

புற்றர வம்புலித் தோலரைக் கோவணம்
தற்றிர வின்னட மாடுவர் தாழ்தரு
சுற்றமர் பாரிடந் தொல்கொடி யின்மிசைப்
பெற்றர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 6

3. கோடல் - பிச்சை கொள்ளுதல். மூடல் - போர்வை; தொழில் ஆகுபெயர்.

4. முனி கான் - வெறுக்கத்தக்க சுடுகாடு. பீடர் - பெருமை யுடையவர். பஞ்சபூத சொரூபியாய் இருப்பார் என்பது முற்பகுதியின் பொருள். வேதம் மெய்ப்பொருள் விரித்து ஓதுவார் - வேதத்தின் உண்மைப் பொருளை விரித்து ஓதுவார், என்றது வேதத்துக்குப் பொரு ளருளிச் செய்த (திருவிளையாடற் புராண) வரலாறு. பண் - இசை.

5. வாயின்மொழி மறையர் என்க. மான், மழு, சூலம் உடைய கையர். ஓடு; பிரிந்து, பொருள் தோறும் சென்று பொருளுணர்த்திற்று. கார் ஆர்தரும் கொன்றை - கார்காலத்தில் நிறையப் பூக்கும் கொன்றை. நறை - வாசனை; தேன். சென்னிமேல் தரும் பிறையர் என்க. தரும் - வைத்த.

6. தற்று - இடையில் உடுத்து, "மடிதற்றுத்தான் முந்துறும்" என்பது திருக்குறள் 1023. இரவில் நடம் ஆடுவர். தாழ்தரு - வணங்குகின்ற.

துணையிறுத் தஞ்சுரி சங்கமர் வெண்பொடி
இணையிலேற் றையுகந் தேறுவ ரும்எரி
கணையினுன் முப்புரம் செற்றவர் கையினில்
பிணையர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 7

சரிவிலா வல்லரக் கன்றடந் தோடலை
நெரிவிலா ரவ்வடர்த் தார்நெறி மென்குழல்
அரிவைபா கம்அமர்ந் தாரடி யாரொடும்
பிரிவில்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 8

சுற்று அமர்(வன) பாரிடம் - சுற்றியுள்ளவை பூதப்படை. அமர்; பகுதியே நின்று வினைமுற்றுப் பொருளுணர்த்திற்று. "பெறுவது கொள்வாரும் கள்வரும் நேர்" என்ற திருக்குறளிற்போல 813. கொடியின் மிசைப் பெற்றதையும் உடையவர். பெற்று - பெற. நம் - விடை.

7. அம் - அழகிய. சுரிசங்கு - சுரிந்த சங்குக் குழையை. துணை - ஒன்றோடொன்று ஒக்க. இறுத்து - தங்கவிட்டு (காதில் அணிந்து). அமர் - விரும்பத்தக்க. வெண்பொடி - வெள்ளிய திருநீற்றை. உகந்து - விரும்பி இணைஇல் - நிகர் அற்ற. ஏற்றை - இடபத்தை. ஏறுவரும் - ஏறுபவரும். எரிகணையினுல் - அக்கினியாகிய அம்பினுல்; முப்புரம் அழித்தவரும். கையினில் மானையுடையவருமாகிய சிவபெருமான் கோயில் அரதைப் பெரும்பாழியே. சுரி - சங்குக்கு அடைமொழி, சங்கம் - கருவியாகுபெயர். இறுத்தல் - தங்குதல். துணையிறுத்த "துணையுற அறுத்துத் தூங்க நாற்றி" என்னும் திருமுருகாற்றுப்படையால் அறிக. இறுத்தல் என்பதில் பிறவினை விகுதி குன்றி நின்றது. அமர்தல் - விரும்பல்; "அமர்தல் மேவல்" (தொல், சொல்). உகந்து என்பதை வெண் பொடியோடும் கூட்டுக. ஏறுவர் - வினையால் அணையும் பெயர். பிணை - மானின் பொதுப்பெயர். "ஆரிணம் நவ்வி குரங்கம் சாரங்கம் மறியுழை ஆனம் பிணை மானின் பெயர்" என்பது பிங்கலந்தை. 2498. ஏறு(ப) வரும் என்ற உம்மையை, செற்றவர், பிணையர் என்பவற்றோடும் கூட்டுக.

8. சரிவு இலா - தளர்தல் இல்லாத. தோடலை - தோள் + தலை. நெரிவில்லார் அடர்த்தார் - நெரித்தலால் முற்ற அடர்த்தவர். நெறி - குழலுக்குவரும் அடை, "வணர்வார் குழல்" எனவருவதும் அது.

வரியரா என்பணி மார்பினர் நீர்மல்கும்
எரியரா வுஞ்சடை மேற்பிறை யேற்றவர்
கரியமா லோடயன் காண்பரி தாகிய
பெரியர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 9

நாணிலா தசமண் சாக்கியர் நாடொறும்
ஏணிலா தம்மொழி யவ்வெழி லாயவர்
சேணுலா மும்மதில் தீயெழச் செற்றவர்
பேணுகோ யில்அர தைப்பெரும் பாழியே. 10

நீரினார் புன்சடை நிமலனுக் கிடமெனப்
பாரினார் பரவர தைப்பெரும் பாழியைச்
சீரினார் காழியுள் ஞானசம் பந்தன்செய்
ஏரினார் தமிழ்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

9. வரிஅரா - கோடுகளை உடைய பாம்பு. மல்கும் - நிறைந்துள்ள எரியராவுஞ்சடை - நெருப்புப்போன்ற நிறமுடைய செஞ்சடை.

10. ஏண் இலாத மொழி - பெருமையற்ற சொற்கள். சேண் - ஆகாயம்.

11. நீரின்ஆர் - நீரினால் நிறைந்து. ஏரின்ஆர் - அழகால் நிறைந்த. தமிழ்வ(ல்)லார்க்கு இல்லையாம் பாவமே.

வடிக்கண்ணி யாளைஇவ் வான்சுரத்தினூடே
கடிக்கண்ணி யானோடுங் கண்டோம் — வடிக்கண்ணி
மாம்பொழில்சேர் வைகை அமண்மலைந்தான் வண்காழிப்
பூம்பொழிலே சேர்ந்திருப்பார் புக்கு

— மும்மணிக்கோவை 29

## 31 திரு மயேந்திரப்பள்ளி

### 289 பதிகவரலாறு

திருஞானசம்பந்தர், சேண் உயர் மாடம் ஓங்கும் திருப்பதியாகிய பிரமபுரத்தில், தோணிவீற்றிருந்தாரைத் தொழுது, தூய அணியாம் பதி கம்பாடி, அருட்பெரு வாழ்வு கூர, நாளும் போற்றிய விருப்பின்மிக்காராய் வைகும்நாளில், கீழ்பால், மயேந்திரப்பள்ளியிற் சென்று, இன்புற இறைஞ்சி ஏத்திப் பாடிய தமிழ்ச் சொல் மாலை இத் திருப்பதிகம்.

பண் – கொல்லி

திருச்சிற்றம்பலம்

திரைதரு பவளமுஞ் சீர்திகழ் வயிரமும்
கரைதரு மகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலா லெயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
அரவரை யழகனை யடியிணை பணிமினே. 1

கொண்டல்சேர் கோபுரங் கோலமார் மாளிகை
கண்டலுங் கைதையுங் கமலமார் வாவியும்
வண்டுலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியிற்
செண்டுசேர் விடையினன் றிருந்தடி பணிமினே. 2

கோங்கிள வேங்கையுங் கொழுமலர்ப் புன்னையும்
தாங்குதேன் கொன்றையும் தகுமலர்க் குரவமும்
ஆங்கரும் பும்வயன் மயேந்திரப் பள்ளியுள்
ஆங்கிருந் தவன்கழ லடியிணை பணிமினே. 3

1. திரைதரு - கடல் அலைகள் அடித்துவந்த, பவளம். கரைதரு - கரையில் ஒதுக்கப்பட்ட (அகில்) வளை - சங்கு. பின் இரண்டடிக்கு, எயில் எய்த அழகன், மயேந்திரப்பள்ளியுள் அழகன், அரவு அரை அழகன், எனப்பொருள் கொள்க. அரை - இடுப்பு. ஆகுபெயர்.

2. கண்டல் - நீர்முள்ளி. உலாம் - உலாவும். செண்டு - வட்டமாக நடை பயிலுதல்.

3. சோலைகளில் கோங்கு குரவம் முதலிய மரங்களும்; வயல் - வயல்களில். ஆம் - பயனுடைத்தாகிய, கரும்பும் பொருந்திய, மயேந்

வங்கமார் சேணுயர் வருகுறி யான்மிகு
சங்கமா ரொலியகில் தருபுகை கமழ்தரு
மங்கையோர் பங்கினன் மயேந்திரப் பள்ளியுள்
எங்களு யகன்றன திணையடி பணிமினே. 4

நித்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்
மைத்திகழ் கண்டனன் மயேந்திரப் பள்ளியுட்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே. 5

சந்திரன் கதிரவன் றகுபுக ழயனொடும்
இந்திரன் வழிபட விருந்தவெம் மிறையவன்
மந்திர மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்
அந்தமி லழகனை யடிபணிந் துய்ம்மினே. 6

திரப்பள்ளி என்பது முன்னடிகளின் பொருளாதலின் அதற்கேற்பச் சோலையில் என்று ஒரு சொல் வருவித்து, வயல் மாவும் கரும்பும் எனமாற்றி ஏழனுருபு விரிக்க. மா+கரும்பு - மாங்கரும்பு என்ற உம்மைத்தொகையிலும் மெலிமிக்கது. எதுகை நோக்கி மயேந்திரப்பள்ளியுள் அங்கு என்பதை "எம்மூர் ஆங்கண்" என்பதுபோற் கொள்க.

4. உயர்சேண் ஆர் வங்கம் - மிக்க நெடுந்தூரம் (வாணிகத்தின் பொருட்டுச்) சென்ற கப்பல். வருகுறியால் மிகுசங்கம் ஆர் ஒலி தரு - திரும்பி வரும் குறிப்பை ஊரார்க்கு உணர்த்த ஊதுவதால் பல சங்குகள் ஆரவாரிக்கும்; ஒலியையுடைய மயேந்திரப்பள்ளி. சேண் - நெடுந்தூரம், "சேணிகந்து விளங்கும் செயிர்தீர்மேனி" என்னும் திருமுருகாற்றுப்படையாலும் அறிக

5. நித்திலத்தொகை - முத்துக்குவியல் பல. நிரைதரு - வரிசையாகப் பொருந்திய. மலர் என - மலர்களைப்போல. சித்திரம் - விதம்விதமான. புணரி - அலைகளில். சேர்த்திட - சேர்க்க. கடலானது, இறைவனை வழிபடற்கு மலர்களைக்கையால் ஏந்தி வருதல் போல முத்துக்குவியலை அலையினால் அடித்து வருகிறது என்பது முன்னிரண்டடிகளின் கருத்து. கைத்தலம் மழுவன் – கையினிடத்து மழுவை ஏந்தியவன்.

6. அந்தம் இல் அழகன் - பேரழகன்; மேல், "அந்தமில் அணி மலை மங்கை" எனக்கூறியதற்கேற்ப (பதிகம் 285 – 5) இங்கு அந்தமில் அழகன் என்றதூஉம் காண்க.

சடைமுடி முனிவர்கள் சமைவொடும் வழிபட
நடநவில் புரிவின னறவணி மலரொடு
படர்சடை மதியினன் மயேந்திரப் பள்ளியுள்
அடல்விடை யுடையவ னடிபணிந் துய்ம்மினே. 7

சிரமொரு பதுமுடைச் செருவலி யரக்கனைக்
கரமிரு பதுமிறக் கனவரை யடர்த்தவன்
மரவமர் பூம்பொழின் மயேந்திரப் பள்ளியுள்
அரவமர் சடையனை யடிபணிந் துய்ம்மினே. 8

நாகணைத் துயில்பவ னலமிகு மலரவன்
ஆகணைந் தவர்கழ லணையவும் பெறுகிலர்
மாகணைந் தலர்பொழின் மயேந்திரப் பள்ளியுள்
யோகணைந் தவன்கழல் உணர்ந்திருந் துய்ம்மினே. 9

உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்
மடைவளர் வயலணி மயேந்திரப் பள்ளியுள்
இடமுடை யீசனை யிணையடி பணிமினே. 10

7. சமைவு ஒடும் - சேகரித்த பூசைத்திரவியங்களோடும் (வழிபட). சமைவு - சேகரித்தல், அமைத்தல். இங்கு ஆகுபெயர்.

8. சிரம், ஒருபதும் - ஒருபத்தும். செருவலி - போர் செய்யும் வலிமையையுடைய. மரவு - வெண்கடம்பு.

9. நாகணை, நாக+அணை - ஆதிசேடனாகிய படுக்கை. அதில் துயில்பவனும், மலரவனும், இருவருமாகத் தேடத் தொடங்கி, மாகணைந்து - (மாகம் அணைந்து) - ஆகாயத்தை அளாவி. மாகம் - மாகு எனக் கடைக் குறைந்து நின்றது. யோகு அணைந்தவன் - யோகம் செய்பவன். யோகியாயிருந்து "முத்தியுதவுதலதுவும் ஓரார்" என்பது சிவஞானசித்தியார் சுபக்கம் (சூ-ம். 1-50.)

10. உடை துறந்தவர் - சமணர். உடை துவர உடையவர் - மருதந்துவரினால் தோய்த்த காவிஉடையை யுடைய பவுத்தர். துவர் - இங்குக் காவியை யுணர்த்திற்று. மயேந்திரப்பள்ளியுள்; இடம் உடை - தனக்கு இடமாக உறைதலையுடைய. முடை - தீ நாற்றம்.

வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியுள்
நம்பனூர் கழலடி ஞானசம் பந்தன்சொல்
நம்பர மிதுவென நாவினு னவில்பவர்
உம்பரா ரெதிர்கொள வுயர்பதி யணைவரே. 11

திருச்சிற்றம்பலம்

11. நம்பரம் - நமது கடமை. பரம் - பாரம். வம்பு - மணம். உம்பர் + ஆர் = தேவர்.

திருந்தியசீர்ச் செந்தா மரைத்தடத்துச் சென்றோர்
இருந்தண் இளமேதி பாயப்—பொருந்திய
புள்ளிரியப் பொங்கு கயல்வெருவப் பூங்குவளைக்
கள்ளிரியச் செங்கழுநீர் கால்சிதையத்—துள்ளிக்
குருகிரியக் கூனிறவம் பாயக் களிறு
முருகுவிரி பொய்கையின்கண் மூழ்க—வெருவுற்ற
கோட்டகத்துப் பாய்வாளை கண்டலவன் கூசிப்போய்த்
தோட்டகத்த செந்நெல் துறையடையச்—சேட்டகத்த
காவி முகமலரக் கார்நீலங் கண்படுப்ப
ஆவிக்கண் நெய்தல் அலமர—மேவிய
அன்னந் துயில்இழப்ப அஞ்சிறைசேர் வண்டினங்கள்
துன்னுந் துணையிழப்பச் சூழ்கிடங்கின்—மன்னிய
வள்ளை நகைகாட்ட வண்குமுதம் வாய்காட்டத்
தெள்ளுபுனற் பங்கயங்கள் தேன்காட்ட—மெள்ள
நிலவு மலரணையின் நின்றிழிந்த சங்கம்
இலகுகதிர் நித்திலங்கள் ஈன—உலவிய
மல்லைப் பழனத்து வார்பிரச மீதழிய
ஒல்லை வரம்பிடறி ஓடிப்போய்ப்—புல்லிய
பாசடையைச் செந்நெற் படரொளியாற் பல்கதிரோன்

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 32 திருவேடகம்

## 290 பதிகவரலாறு

திருவுடைப் பிள்ளையார் தமது திருக்கையால் இட்ட ஏடு, மாதவர் மனம், பிறவியாற்றில் சென்றாற்போல், வைகையாற்றில் எதிர்த்து, நீர் கிழித்துப் போகும் உண்மையால், இருநிலத்தோர் எல்லார்க்கும் இதுவே மெய்ப்பொருள் என்பதைக் காட்டிற்று. 'எல்லாப் பொருளும் எம்பிரான் சிவனே' என்று எழுதும் அவ்வருளேட்டினை, வையை நீரினின்று தொடர்ந்தெடுப்பதற்கு வேண்டிக் காற்றென விசையிற்செல்லும் கடும்பரி ஏறிக்கொண்டு; அதன்பின் சென்றார் குலச்சிறையார். அவ்வேடு அதன் மேலும் செல்லாமல் தங்கற்பொருட்டு முற்றுயர் கொடியினுரைப் பாடியருளியது இத் திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னிய றிருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட வடியவர்
இன்னிசை பாடல ரேடகத் தொருவனே. 1

கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி
வடிவுற வமைதர மருவிய வேடகத்
தடிகளை யடிபணிந் தரற்றுமி னன்பினால்
இடிபடும் வினைகள்போ யில்லைய தாகுமே. 2

1. மத்தம் - பொன்னூமத்தை. மதிபொதி - மதியை மறைக்கும். பொன் இயல் - பொன்போன்ற. திருவடி - (பொன்னார்) திருவடி. அடியவர் இன் இசைப் பாடல்அர் - அடியவர்களின் இனிய இசைப் பாடல்களை யுடைய (ஏடகத்து ஒருவன்)

2. மாளிகை மதிவடிவு உற, கோபுரம் மதி அமைதர மருவிய ஏடக மெனநிரல் நிறையாகக்கொண்டு, மாளிகைகள் நிறத்தினால் மதியின் வடிவை நிகர்க்கவும், கோபுரம் உயர்வால் மதியை அளாவவும் பொருந்திய திருவேடகம் எனப் பொருட்கூறுக. இடிபடும் - இடியை ஒத்த, (வினைகள்)

குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை
வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி
செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்
கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே. 3

ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறும்
கோலமார் தருவிடைக் குழகனு றுறைவிடம்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்
சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே. 4

வரியணி நயனிநன் மலைமகண் மறுகிடக்
கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்
பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய
எரியவ னுறைவிட மேடகக் கோயிலே. 5

பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய வேடகத்
தையனை யடிபணிந் தரற்றுமின் னடர்தரும்
வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே. 6

3. செண்டு - வட்டமாகச் சுற்றிவரும் சாரிநடை. அலம்பும் - அணிந்த மணியோசை முதலியவற்றால் ஒலிக்கும், விடை. சேடன் - மேன்மையுடையவன். கவலை - நோய்; பலவழியால் வருந்துன்பம்.

4. ஏலம் - மயிர்ச்சாந்து. எழில்பெறும் - அழகு உடைய. கோலம் - தோற்றம். சாலம் - ஆலமரம், சேர்தலாம் செல்வம் - சேர்தல் செல்வம் ஆம், என மாறிக்கூட்டுக.

5. செவ்வரி பரவிய கண்களையுடையவளாகிய. மலைமகள் கலங்கக் கரியினை உரிசெய்த மிடற்றினன் என்பது முதலிரண்டடியின் பொருள் கறை - விடக்கறை. எரியவன் - நெருப்பு உருவினன்.

6. குளங்களிலும், சோலைகளிலுமுள்ள புதுமலர்களில் தென்றல் தவழ்ந்து வருகின்ற வைகை, என்பது முதலடிகளின் கருத்து. அரற்றுமின்- கதறுங்கள். வெய்யவன் பிணி - கொடிய, கடிய பிணி; துன்புறுத்தலால் வெய்யபிணி எனவும் எளிதில் நீங்கப் பெருமையால், வன்பிணி எனவும் கூறப்பட்டது.

தடவரை யெடுத்தவன் றருக்கிறத் தோளடர்
படவிர லூன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவர லெருக்கொடு வன்னியு மத்தமும்
இடமுடைச் சடையினன் ஏடகத் திறைவனே. 8

பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்
தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற
அன்னமா மயனுமா லடிமுடி தேடியும்
இன்னவா றெனவொணுன் ஏடகத் தொருவனே. 9

குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்
பண்டியைப் பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்
வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்
இண்டைசேர்க் குஞ்சடை யேடகத் தெந்தையே. 10

கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை
நாடுதென் புகலியுண் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

7. ... ... ... ... ....

8. தருக்கு - கர்வம். இற - கெட. தோள் அடர்ப்பட - தோள்கள் அடர்க்கப்பட. பரிந்து - இரங்கி. மடவரல் - இளமை பொருந்திய,

9. பொருதிரை - கரையை மோதும். அலைகளாற் கொணர்ந்த பொன்னும், மணிகளும், சந்தனம் அகில் மரங்களும் கொண்ட வைகை.

10. பண்டி - வயிறு. பளகு - பாவம். "பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலா" என்பது திருவாசகம் (திருச்சதகம் 35) இண்டை - தலைக்கு அணியும் மாலை.

11. கோடு - யானைத்தந்தம். ஏடுசென்று அணைதரும் ஏடகம். இப்பாடல் அகச்சான்று குறிக்கும் பாடல்களில் ஒன்று. (பெரியபுராணம் பக்கம் 1057.)

# 33 திருவுசாத்தானம்

## 291 பதிகவரலாறு

ஆளுடைய பிள்ளையார், திருக்கடிக்குளம் இறைஞ்சி, திருவிடும்பாவனம் ஏத்தி எழுந்தருளி, பிறபதிகளும் வணங்கிப் பரவிச் சென்று, திருவுசாத்தானத்துத் தேவர்பிரான் கழல் பணிந்து நீரிடைத்துயின்ற மால் போற்றும்படி பாடிய செந்தமிழ்ப்பதிகம் இது.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்அநு மான்றொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. 1

கொல்லையே றுடையவன் கோவண ஆடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுபதி நறைகமழ்
தில்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே. 2

1. நீரிடைத்துயின்றவன் - இராமன். பாற்கடலில் துயிலும் திருமாலிடம் வானவர், அரக்கர் துயரை முறையிட, இராமனாகப் பிறந்தமை குறித்து 'இராமனை நீரிடைத் துயின்றவன்' என்றார். நீர்; கடலை ஆகுபெயராற் குறிக்கப் பொதுப்பெயர் சிறப்புப் பெயராய்ப் பாற்கடலைக் குறித்தது. அநுமன் தொழச் சேடர்வாழ் திருவுசாத்தானம் என்க. சேடர், வாழ் - வாழ்த்தல்; வாழ்த்துவது என்னும் பொருளாதலின் வாழ் முதனிலைத் தொழிற்பெயர்.

2. கொல்லை - முல்லைநிலம். பல்லை ஆர்தலை - பல்லை முன் உடையதாயிருந்த தலை. படுதலை - உலர்ந்த மண்டையோடு. 'பல்லில் வெள்ளைத் தலையன்' (சுந்தரர், திருக்கழுக்குன்றப் பதிகம் 10) என வருதலால் இங்ஙனம் பொருள் கூறப்பட்டது. முல்லை ஆர்புறவு - முல்லைக் கொடிகளை உடைய முல்லை நிலம்.

தாமலார் போலவே தக்கனூர் வேள்வியை
ஊமனூர் தங்கனு வாக்கினு னொருநொடிக்
காமனு ருடல்கெடக் காய்ந்தவெங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே. 3

மறிதரு கரத்தினுன் மால்விடை யேறியான்
குறிதரு கோலநற் குணத்தினு ரடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலு நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. 4

5, 6

பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினி னல்லினம்
தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே.

3. பகையும் நட்புமில்லாத பரஞ்சுடர். பகைவன்போலாகி தக்கனூர் வேள்வியை ஊமன் கனவுபோல ஒன்றுமில்லாமற் செய்தவன். ஊமனூர் இகழ்ச்சிக்குறிப்பு; தாம் ஆக்கினுன். ஒருமை பன்மை மயக்கம். சேமம் ஆ(க) - உலகினருக்கு நன்மை உண்டாதற்பொருட்டு.

4. மறி - மான் கன்று. சிவனடியாரெனக் குறிக்கும் கோலமும் சீலமும் உடைய அடியார் தொழ என்பது இரண்டாம் அடியின் பொருள். நெறிதரு - நெறியில் ஒழுகுகின்ற. நித்தம் - நித்தல் என்றுயது கடைப் போலி. செறிதரு - அடர்த்தியான பொழில்.

5, 6. ... .... ... .... ...

7. பண்டு-தொன்றுதொட்டு. இரைத்து-மகிழ்ச்சியால் ஆரவாரித்து. தொண்டு - அடிமைத்திறத்தினுல். "மந்திரத்தைப் பிறர் காதிற் படாதவாறு உச்சரிக்க; தோத்திரம் பிறரும் கேட்குமாறு ஓசையோடும் பாடுக" என்பது ஆகம வசனக் கருத்து என்ப. கொண்ட இரை - மீன் முதலிய இரைகளைக் கவர்ந்த. கொடியோடும் - காக்கையோடும். குருகினில் நல் இனம் - பறவைகளில் நல்ல சாதிக் கூட்டங்கள் தங்கும். தெண்திரை கழனிசூழ்-தெளிவாகிய அலைகளையுடைய கழனிசூழ்ந்த (திருவுசாத்தானம்) கொண்ட+இரை=பெயரெச்ச விகுதி தொகுத்தல் விகாரம். அது "அறு கானிறை மலரைம் பானிறை யணிந்தேனணங்கே" என்ற திருக்கோவை யாரிற் போல.

மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
சடசட வெடுத்தவன் தலைபத்து நெரிதர
அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. 8

ஆணலார் பெண்ணலார் அயனொடு மாலுக்குங்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடம்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. 9

கானமார் வாழ்க்கையான் காரமண் டேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீ ருரைமினுய் யவெனில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்
தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே. 10

வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண் தமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

8. மடவரல் - (என்றும்) இளமைத் தன்மையையுடைய அம்பிகை. திடர் என - ஏனைத் தலங்களிலும் இது உறுதியை உடையதாக.

9. பிணியொடும் பிறப்பு அறுப்பான் - மலமாயை கன்மங்களோடும் பிறப்பை அறுப்பவன்.

10. கானம் - சுடுகாடு. ஊனம் - தீங்கு விளைவிப்பது. தேன் : அமிர்த கிரணத்தை உடைய, மாமதியம்.

11. வரை - சையமலையினின்றும். திரிந்து - தான் அடுத்த நிலத்தின் இயல்பால் தன்மை மாறுபட்டு. இழிதரு - இறங்கி வருகின்ற. நீர் - காவிரி நீரினால். வளவயல் - வளம்படைத்த வயல்களை உடைய; புகலி. திரை - அலை. திரிந்து - ஒன்றோடொன்று மாறுபட்டு. எரி - வீசுகின்ற; கடல். உரைதெரிந்து - உரைக்கும் முறைதெரிந்து. (உரைத்து) உணரும் சம்பந்தன் தமிழ் வல்லார். நன்னெறி - ஞானநெறி. 'சன்மார்க்கம்',

# 34 திரு முதுகுன்றம்

## 292 பதிகவரலாறு

திருமுதுகுன்றத்தை அடைவோம் என்றும் சொன்மலர்மாலை வண் பதிகத்தை இசையொடும் புனைந்து ஏத்தி, அப்பொருப்பினில் ஆதரவுடன் சென்றார் ஆளுடைய பிள்ளையார். அதனை வழிபட வலங்கொள்வாராய் நறுந்தமிழ்ச் சொன்மலர் சூட்டி மகிழ்ந்தார். நம்பர் திருக்கோயிலுள் புகுந்து, சேவடி திளைத்த அன்புடன் தாழ்ந்து, எழுந்து, காதலால் பல முறை சார்த்திய தண்டமிழ்த் தொடைகளுள் ஒன்று இவ்வண்ணமாமலர்த் திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வண்ணமா மலர்கொடு வானவர் வழிபட
அண்ணலா ராயிழை யாளொடு மமர்விடம்
விண்ணின்மா மழைபொழிந் திழியவெள் ளருவிசேர்
திண்ணிலார் புறவணி திருமுது குன்றமே. 1

வெறியுலாங் கொன்றையந் தாரினன் மேதகு
பொறியுலா மரவசைத் தாடியோர் புண்ணியன்
மறியுலாங் கையினன் மங்கையோ டமர்விடம்
செறியுளார் புறவணி திருமுது குன்றமே. 2

1, திண்ணில் ஆர் - பிருதிவியின் தன்மையாகிய திண்மையில் பொருந்திய. புறவு - முல்லை நிலத்தை. அணி - அணிந்த; சூழ உடைய திருமுதுகுன்றம். "மண் கடினமாய்த் தரிக்கும்" (உண்மை விளக்கம்) என்பதால் திண்ணில் ஆர் புறவு எனப்பட்டது.

2. பொறி உலாம் மா - புள்ளியுடை மான்தோலை. அசைத்து - உடுத்து. செறியுள் (வளம்) செறிதல். செய்யுள், விக்குள் எவ்புழிப்போல. செறியுள் - என்பதிலும் உள் தொழிற்பெயர் விகுதி. செறியுள் - மண் டிணிந்த வன்னிலம். ஆர் - பொருந்திய புறவு.

ஏறினார் விடைமிசை இமையவர் தொழவுமை
கூறனார் கொல்புலித் தோலினார் மேனிமேல்
நீறனார் நிறைபுனற் சடையனார் நிகழ்விடம்
தேறலார் பொழிலணி திருமுது குன்றமே 3

உரையினா ருறுபொரு ளாயினா னுமையொடும்
விரையினார் கொன்றைசேர் சடையினார் மேவிடம்
உரையினா ரொலியென வோங்குமுத் தாறுமெய்த்
திரையினா ரெறிபுனற் றிருமுது குன்றமே. 4

கடியவா யினகுரற் களிற்றினைப் பிளிறவோர்
இடியவெங் குரலினோ டாளிசென் றிடுநெறி
வடியவாய் மழுவினன் மங்கையோ டமர்விடம்
செடியதார் புறவணி திருமுது குன்றமே. 5

கானமார் கரியினீ ருரிவையார் பெரியதோர்
வானமார் மதியினோ டரவர்தா மருவிடம்
ஊனமா யினபிணி யவைகெடுத் துமையொடும்
தேனமார் பொழிலணி திருமுது முன்றமே. 6

3. உமைகூறனார் - மாதுபாதியார். நீறனார் - திருநீறணிந்தவர்.

4. (சொல் வடிவாயிருப்பதோடு) சொல்லிற்பொருந்திய பொருளும் ஆயினவன் "சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானை" (அப்பர் பெருமான்) என்பதும் காண்க. சொல் வடிவு அம்பிகை, பொருள் வடிவு இறைவன் என்ற திருவிளையாடற் புராணத்தோடு மாறுபாடின்மை சிவம் சத்தி அபேதத்தாற் கொள்க. விரை - வாசனை.

5. பிளிற-(யானை) முழங்க, கடிய ஆயினகுரல்களிற்றினை - கடுமை உடையன ஆன குரலையுடைய அவ்யானையை. ஓர் - ஒரு. ஆளி - சிங்கம். இடிய - இடிபோன்ற. வெங்குரலினோடு - கொடிய குரலோசை யோடு. சென்றிடும்-செல்லும். நெறி-வழிகளையுடைய-(திருமுதுகுன்றம்.) புறவணி முதுகுன்றம் என்க. வடிய - கூரிய.

6. பெரியதோர் வானம் - பெரியதாகிய வானம். ஓர் - அசை. அரவர் - அரவை யணிந்தவர்.

மஞ்சர்தா மலர்கொடு வானவர் வணங்கிட
வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே
அஞ்சொலா ளுமையொடும் மமர்விட மணிகலைச்
செஞ்சொலார் பயிறருந் திருமுது குன்றமே. 7

காரிஞ ரமர்தருங் கயிலைநன் மலையினை
ஏரிஞர் முடியிரா வணனெடுத் தானிற
வாரிஞர் முலையொடும் மன்னிஞர் மருவிடம்
சீரிஞர் திகழ்தருந் திருமுது குன்றமே. 8

ஆடிஞர் கானகத் தருமறை யின்பொருள்
பாடிஞர் பலபுகழ்ப் பரமஞ ரிணையடி
ஏடிஞர் மலர்மிசை யயனுமா லிருவரும்
தேடிஞ ரறிவொணுர் திருமுது குன்றமே. 9

மாசுமெய் தூசுகொண் டுழல்சமண் சாக்கியர்
பேசுமெய் யுளவல்ல பேணுவீர் காணுமின்
வாசமார் தருபொழில் வண்டினம் மிசைசெயத்
தேசமார் புகழ்மிகுந் திருமுது குன்றமே. 10

7. மஞ்சர் - சிவபெருமான். மைந்து - வலிமை. வலிமையுடையவர் மைந்தர்; அது போலியாய் மஞ்சர் என ஆயிற்று. "மஞ்சா போற்றி மணளாபோற்றி" என்பது திருவாசகம். செஞ்சொல் - நேரேபொருளுணர்த்தும் சொல். (குறிப்பிற் பொருளுணர்த்தல் முதலியன வியங்கியச் சொல்) கலைச்செஞ்சொலார். (விருத்தாசலப் புராணம்.)

8. கார் மேகம் - பருவம் அறிந்து பெய்யும் மேகம் போல. பக்குவ நோக்கி ஆன்மாக்களுக்கு அருள் செய்ய வரலால். காரிஞர் - மேகம் போன்றவர். இராவணன் சிறச் செய்து - என ஒரு சொல் வருவிக்க, சொல்லெச்சம். சீரிஞர் - மேலோர்கள். திகழ்தரு - விளங்கி வாழ்கின்ற. (திருமுதுகுன்றம்.)

9. கானகத்து ஆடிஞர். பொருளைப் பாடிஞர். புகழையுடைய பரமஞர். ஏடின் - இதழ்களால். ஒணுர் - ஒன்றக்கிடைக்காதவர்.

10. மாசு - அழுக்கு. அச்சொல்லைத் தூசு என்ற சொல்லினும் கூட்டி அழுக்கு உடம்பையும் அழுக்கு உடையையும் உடைய என உரைக்க. இயலுமா(று) பண்ணிஞல் பாடுவார்.

திண்ணினார் புறவணி திருமுது குன்றரை
நண்ணினான் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
எண்ணினா னீரைந்து மாலையு மியலுமாப்
பண்ணினாற் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

11. "கோழைமிட றாககவி கோளுமில வாகஇசை கூடும் வகையால் ஏழையடி யாரவர்கள் யாவைசொன சொல் மகிழும் ஈசன்" என்பதனோடு ஒப்பிடுக.

பதிகக் குறிப்பு முதுகுன்றம் என்பதற்கேற்ப 1, 5, 7 இப்பாடல்களிற் குறிஞ்சி நில வருணனை கூறப்படுகிறது.

தேசடைய ஓங்கு செறுவுகளும் — மாசில்நீர்
நித்திலத்தின் சாயும் நிகழ்மரக தத்தோலும்
தொத்தொளி செம்பொற் றெழிற்பரிய — மொய்த்த
பவளத்தின் செவ்வியும் பாங்கணைய ஓங்கித்
திவளக் கொடிமருங்கிற் சேர்த்தித் — துவளாமைப்
பட்டாடை கொண்டுடுத்துப் பைந்தோ டிலங்குகுழை
இட்டமைந்த கண்ணார் இளங்கமுகும் — விட்டொளிசேர்
கண்கள் அழல்சிதறிக் காய்ச்சினத்தவாய்மதத்துத்
தண்டலையின் நீழல் தறியணைந்து — கொண்ட
கொலைபுரியா நீர்மையவாய்க் கொம்புவளைத் தேந்தி
மலையு மரவடிவங் கொண்டாங்—கிலைநெருங்கு
சூதத் திரளுந் தொகுகனிக ளான்நிவந்த
மேதகுசீர்த் தெங்கின் வியன்பொழிலும்—போதுற்
றினமொருங்கு செவ்வியவா யின்தேன் ததும்பு
கனிநெருங்கு திண்கதலிக் காடும்—நனிவிளங்கு
நாற்றத்தால் எண்டிசையும் வந்து நலஞ்சிறப்ப
ஊற்று மடுத்த வுயர்பலவும்—மாற்றமரும்
மஞ்ச ளெழில்வனமும் மாதுளையின் வார்பொழிலும்
இஞ்சி இளங்காவின் ஈட்டமும் —எஞ்சாத
கூந்தற் கமுகுங் குளிர்பாட லத்தெழிலும்

— ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை

# 35 தென் குடித்திட்டை

## 293 பதிகவரலாறு

திருவையாற்றுக்குப் பக்கத்திலுள்ள சிவதலங்களைத் தரிசித்த காலத்தில் இத்தலத்திலும் சென்று வழிபட்டுப்பாடியருளியது இத் திருப் பதிகம். இதைப்பாடிய சமயம் பெரிய புராணத்தில் குறிக்கப்பட்டிலது.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

முன்னைநான் மறையவை முறைமுறை குறையொடும்
தன்னதாள் தொழுதெழ நின்றவன் றன்னிடம்
மன்னுமா காவிரி வந்தடி வருடநல்
செந்நெலார் வளவயல் தென்குடித் திட்டையே. 1

மகரமா டுங்கொடி மன்மத வேடனை
நிகரலா காநெருப் பெழவிழித் தானிடம்
பகரவா ணித்திலம் பன்மக ரத்தொடும்
சிகரமா ளிகைதொகுந் தென்குடித் திட்டையே. 2

கருவினு லன்றியே கருவெலா மாயவன்
உருவினு லன்றியே யுருவுசெய் தானிடம்
பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்
திருவினுன் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே. 3

1. தன்னதாள் - தன்னுடைய திருவடிகள். அகரம் - ஆறன் உருபு "மன்னுமா காவிரி."

2. மீன்அசையும் கொடியையுடைய மன்மதனுகிய வேளை. வேள், எனலாகுமெனின் ஏனையவற்றினின்றும் பிரித்தற்கு மன்மத வேள்தனை என்றார். மன்மதவேடனை - மன்மதவேள்தனை' மன்மதவேள் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை.

3. பருவநாட்களிலும், திருவிழாக்களிலும் பாடல், ஆடல் முதலியவை செல்வத்தினுல் மிகச்சிறப்புற நடக்கும் புகழையுடைய தென் குடித்திட்டை என்பது பின்னிரண்டடிக்கும் பொருள், பருவநாளொடும்

உண்ணிலா வாவியா யோங்குதன் றன்மையை
விண்ணிலா ரறிகிலா வேதவே தாந்தனூர்
எண்ணிலா ரெழின்மணிக் கனகமா ளிகையிளந்
தெண்ணிலா விரிதருந் தென்குடித் திட்டையே. 4

வருந்திவா னோர்கள்வந் தடையமா நஞ்சுதான்
அருந்தியா ரமுதவர்க் கருள்செய்தா னமருமூர்
செருந்திபூ மாதவிப் பந்தர்வண் செண்பகம்
திருந்துநீள் வளர்பொழில் தென்குடித் திட்டையே. 5

ஊறினா ரோசையுள் ஒன்றினா ரொன்றிமால்
கூறினா ரமர்தருங் குமரவே டாதையூர்
ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே. 6

விழாவொடும், என ஓடு, உம் இரண்டையும் முன்னும் கூட்டுக. மூன்றன் உருபு ஏழன் பொருளில் வந்த வேற்றுமை மயக்கம். பருவம் - அமாவாசை, பௌர்ணமி முதலியவை.

4. உள் - உயிருக்குள். நிலாவு - விளங்கும். ஆவியாய் - உயிராய். ஓங்கும் தம் தன்மை. சிவஞானசித்தியாரில் “உயிர்க்குயிராம் ஒருவனையும்” என வருதல் காண்க. (சூ. 9, 5) ஆர் - நிறைந்த. எண்ணில் - அளவற்ற. அழகையுடைய மணிகள் அழுத்திய பொன்மாளிகையின்மேல் தெளிவான நிலாவிரித்துப் பரவும் தென்குடித்திட்டை.

5. வந்துஅடைய - வந்து சரண்புக. தான் நஞ்சு அருந்தி அரிய அமிர்தத்தை அவர்களுக்கு அருள்செய்தவன் என, அவன் பெருங் கருணைத்திறம் வியந்தவாறு. மாதவிக்கொடி பந்தல் போலப் படர்தலால், மாதவிப்பந்தல் என்றே கூறப்படும். மாதவிமரம் என்றலும் உண்டு. திருந்து நீள் என்றது பொழிலொடும் சேரும்.

6. பொய்யகத்து அறினார் - பொய்ப்பொருள்கள் மேற்செல்லும் அவா அடங்கினவர். ஐ உணர்வு - ஐந்தாகிய உணர்வு. மனம் அஃது எய்தலாவது, மடங்கி ஒருதலைப்பட்டுத் தாரணைக்கண் நிற்றல் என்ற பரிமேலழகருரை இங்குக் கொள்க. (திருக்குறள் 354.) இவை எய்திய வழியும், மெய்யுணர்வு இல்லாவிடத்து வீடுபயவாமையின் மெய்தேறினார் என்றருளினர். மெய்தேறுதல் - சிவனே பரம்பொருளெனத் தெளிதல்.

கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்
வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயல் தென்குடித் திட்டையே. 7

மாலொடும் பொருதிறல் வாளரக் கன்னெரிந்
தோலிடும் படிவிர லொன்றுவைத் தானிடம்
காலொடுங் கனகமூக் குடன்வரக் கயல்வரால்
சேலொடும் பாய்வயல் தென்குடித் திட்டையே. 8

நாரணன் றன்னொடு நான்முகன் றானுமாய்க்
காரணன் னடிமுடி காணவொண் ணானிடம்
ஆரணங் கொண்டுபூ சுரர்கள்வந் தடிதொழச்
சீரணங் கும்புகழ்த் தென்குடித் திட்டையே. 9

7. கான் அலைக்கும் அவன் - காட்டிலுள்ள உயிர்வருக்கங்களை வருத்துகின்ற அவ்வேடர் குலத்தினராகிய கண்ணப்ப நாயனர். வான் - தேவர்களையும். அலைக்கும் - (பொருமையினுல்) வருந்தச் செய்வதாகிய. தவம் - தவத்தையுடைய. தேவு செய்தான் - தெய்வமாகச் செய்தவன். "குவபெருந்தடக்கை வேடன் ... தவப்பெருந்தேவு செய்தார் சாய்க்காடு மேவினுரே" என்பதும் "நரகரைத் தேவு செய்வானும்" என்பதும் அப்பர் திருவாக்கு. தெள்ளம் ஊர்...தென்குடித்திட்டை - தாமரைகளையுடைய தண்ணிய துறையிலிருந்து தேன் அலை வீசிப்பாயும் வயல் வளத்தையுடைய தென்குடித்திட்டை.

8. மாலொடும் பொருதிறல் - திக்குவிசயத்தில் திருமாலொடும் போர்செய்யும் வலிமை வாய்ந்த. (வாளரக்கன்) நெரிந்து - அரைபட்டு. ஓல் - ஓலம். விரல் ஒன்று வைத்தான் - ஒரு விரலை வைத்தவன்; ஊன்றவு மில்லை, வைத்த அளவிலேயே வாளரக்கன் நெரிந்து ஓலமிட்டான் என்பதை வைத்தான் என நயம்படக் கூறினுர். கால் ஓடும் - கால்வாய் வழியாக கயல் - ஒருவகை மீன். கனகம் மூக்குடன்வர - பொன்மயமான மூக்கோடும்வர. இவ்வாறு. பொன்மூக்கு மீன் என ஒரு மீன் இருப்பதாகத் தெரிகிறது. திரு. வ. சு. செங்கல்வராயப்பிள்ளையவர்கள் வெளியிட்ட தேவார ஒளிநெறிக் கட்டுரை, முதற்புத்தகம் 143-ம் பக்கத்துக் காண்க.

9. காரணன் - உலகிற்கு நிமித்த காரணன் ஆகிய சிவபிரான். சீர் அணங்கும் - சிறப்பினுல் தெய்வத்தன்மை வாய்ந்த. புகழ்த் தென்குடித் திட்டை. அணங்கும் - பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம்.

குண்டிகைக் கையுடைக் குண்டரும் புத்தரும்
பண்டுரைத் தேயிடும் பற்றுவிட் டீர்தொழும்
வண்டிரைக் கும்பொழிற் றண்டலைக் கொண்டலார்
தெண்டிரைத் தண்புனல் தென்குடித் திட்டையே. 10

தேனலார் சோலைசூழ் தென்குடித் திட்டையைக்
கானலார் கடிபொழில் சூழ்தருங் காழியுள்
ஞானமார் ஞானசம் பந்தன செந்தமிழ்
பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

10. பற்றுவிட்டீர்தொழும் - பற்றவிட்டீர்களாகித் தொழுமின்கள். விட்டீர் - முற்றெச்சம். தொழும் - ஏவற்பன்மை. பொழில்தண்தலை கொண்டல் ஆர் - சோலைகளின் குளிர்ந்த உச்சியில் மேகங்கள் படியும்

11. கானல் ஆர் - கடற்கரையின் கண்ணே பொருந்திய. கடி பொழில் - வாசனையையுடைய. பொழில் சூழ்ந்த காழி. பால்நல் ஆர் மொழி - பால்போலும் நன்மை பயக்கும் மொழியாலாகிய. மாலை யெல்லார்க்குப் பாவம் இல்லையாம்.

வாய்ந்தசீர்ச் சண்பகத்தின் வண்காடும்—ஏய்ந்தெழிலார்
மாதவியும் புன்னையும் மன்னும் மலர்க்குரவுங்
கேதையும் எங்குக் கெழீஇப்—போதின்
இளந்தென்றல் வந்தசைப்ப எண்டிசையும் வாசம்
வளர்ந்துன்று வார்பொழிலின் மாடே—கிளர்ந்தெங்கு
மாலை யொலியும் மரிவார் குரலொலியுஞ்
சோலைக் கிளிமிழற்றுஞ் சொல்லொலியும்—ஆலும்
அறுபதங்கள் ஆர்ப்பொலியும் ஆன்ற பொலிவெய்தி
உறுதிரைநீர் வேலை ஒலிப்ப—வெறிகமழும்
நந்தா வனத்தியல்பும் நற்றவத்தோர் சார்விடமும்
—ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை,

# 36 திருக்காளத்தி

## 294 பதிகவரலாறு

பைம்பொன் மலைவல்லி செம்பொன்வள்ளத்தில் பரிந்தளித்த ஞான வாரமுதம் உண்ட பிள்ளையார் தமது உள்ளத்தில் தெளிகின்ற அன்பின் மெய்ம்மையுருவினையும் அவ்வன்பின் உள்ளே மன்னும் விமலரையும் உடன்கண்ட விருப்பம் பொங்கிப் பள்ளத்தில் இழிகின்ற புனல்போல் பரந்து சென்றது. மகிழ்ந்து எழுந்து பலமுறையும் வணங்கி, கண்ணருவி நீர் பாய நின்றார். திருக்காளத்தி மலைக்கீழ் அணைந்தார். இறைஞ்சினார். அம்மலைமேல் வீற்றிருந்த செய்ய தேனைக் காலங்கள் தோறும் அடைந்து அடிபோற்றிப் பருகி ஆர்ந்துபாடிய பாமலர் இத்திருப்பதிகம்.

**பண் - கொல்லி**

திருச்சிற்றம்பலம்

சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. 1

ஆலமா மரவமோ டமைந்தசீர்ச் சந்தனம்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே
காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. 2

---

1. சந்தம் - சந்தனமரம். ஆர் - ஆத்தி. சாதி - சாதிக்காய் மரம். உந்தும் - அலையால் தள்ளி வரும். மந்தம் - தென்றல் காற்று. மல்குவளன் வளம் மிகுந்த; காளத்தி.

2. ஆலம், மா, மரவம் ஓடு. சாலம் - மரவிசேடம். காலம் - பருவக் காலங்களில். ஆர் - நிறை(ந்தோடு)கின்ற, 'காரூர்புனல் எய்திக் கரை கல்லி' என்பது சுந்தரமூர்த்தி நாயனார் திருவாக்கு. நினையும் ஆ(று) நினைந்து; நினைவீர்களாக, வியங்கோள். நினையுமாறு நினைவதாவது - "நெஞ்சினைத் தூய்மை செய்து நினையுமா நினைப்பியாதே." "உற்றவரும்-உறுதுணையும் நீயேயென்றும், உன்னையல்லால் ஒரு தெய்வம் உள்கேன் என்றும்." "பொதுநீக்கித் தனைநினையவல்லோர்க்கு" என்பனவற்றால் அறிக.

கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினில்
ஆங்கமர் காளத்தி யடிகளை யடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. 3

கரும்புதேன் கட்டியுங் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
ஒருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவா ரவர்கடாம் விண்ணுல காள்வரே. 4

வரைதரு மகிலொடு மாமுத்த முந்தியே
திரைதரு முகலியின் கரையினிற் றேமலர்
விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவன்
நிரைதரு கழலிணை நித்தலும் நினைமினே. 5

* * * * 6, 7

முத்துமா மணிகளு முழுமலர்த் திரள்களும்
எத்துமா முகலியின் கரையினி லெழில்பெறக்
கத்திட வரக்கனைக் கால்விர லூன்றிய
அத்தன்றன் காளத்தி அணைவது கருமமே. 8

3. வீங்கு-வளர்ந்து வருகிற. வெந்துயர்-கொடிய துயர். கன்மங்கள்; காரணத்தைக் காரியமாக உபசரித்தார்.

4. கரும்பு தேன்கட்டி - கரும்பில் தொடுத்த இருலின் தேனும், கரும்பு (சுடு) கட்டியும், அரும்பும் - விளைவிக்கும். நீர்வளம் உடைய முகலி அரும்பும் பிறவினை விகுதி தொக்கு நின்றது.

5. வரை - மலை. அகில் - மரம். திரைதரு - அலைகளால் தருகின்ற. முகலி - பொன் முகரியாறு. விரை - மணம். விண்ணவன் - தேவாதி தேவனாகிய சிவபிரான். நித்தல் - நாள்தோறும்.

6, 7. ... ... ... ... ...

8. இராவணன் என்ற பெயர்க்காரணம் புலப்பட கத்திட என்றார்.

மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி
நண்ணுமா முகலியின் கரையினி னன்மைசேர்
வண்ணமா மலரவன் மாலவன் காண்கிலா
அண்ணலார் காளத்தி யாங்கணைந் துய்ம்மினே. 9

வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்
பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்
ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர
வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. 10

அட்டமா சித்திகள் அணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

9. மண்ணும் - நிலத்தையும், (மா) வேங்கை மரங்களையும். மருதுகள் - மருதமரம் முதலியவற்றையும். பீழ்ந்து - பிளந்து. உந்தி - அடித்துக்கொண்டு.

10. வீங்கிய உடலினர் - சமணர். விடும் - ஒழியுங்கள். பன்மை யேவல் வினைமுற்று. வாங்கிடும் - வித்தியார்.

11. அட்டமாசித்திகளாவன; அணிமா - சிறியதிற் சிறிதாதல், மகிமா - பெரியதிற் பெரிதாதல் அண்டங்களெல்லாம் அணு ஆதல், அணுக்கள் எல்லாம் அண்டங்கள் ஆதல் (திருவிளையாடற் புராணம்). லகிமா - மிகத் திண்ணியபொருளை மிக நொய்ய பொருளாக்குதல். கரிமா- மிக நொய்ய பொருளை மிகத் திண்ணிய பொருளாக்குதல். பிராத்தி - பாதாளத்திலிருப்பவன்; அடுத்த நிமிடம் வானுலகிலும் காணப்படுதல். பிராகாமியம் - பரகாயப் பிரவேசம். (வேறு உடலில் புகுதல். இருந்த இடத்திலிருந்தே எண்ணிய போகமெல்லாம் அடைதல்). ஈசத்துவம் - சிவ பெருமானைப்போல முத்தொழிலையும் செய்து நாள் கோள் முதலியவை தம் ஏவல் கேட்ப இருப்பது. வசித்துவம் - அனைத்துயிரும் அனைத்துலகும் தன் வசமாகச் செய்தல். கோளில் - எண்குணத்தான் என்ற தொடருக்குப் பிறர் கருத்தாகப் பரிமேலழகர் இவற்றையும் காட்டினர். இச்சித்திகள் இன்றும் இத்தலத்துக் காணலாகும் என்பர். சிட்டம் - முறைமை, ஒழுக்கம்.

# 37 திருப்பிரமபுரம்

## 295 பதிகவரலாறு

இது சீகாழியிற் பாடியவற்றுள் ஒன்று.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கரமுனம்மல ராற்புனன்மலர் தூவியேகலந் தேத்துமின்
பரமனூர்பல பேரினாற்பொலி பத்தர்சித்தர்க டாம்பயில்
வரமுன்னவ்வருள் செய்யவல்லவெம் மையனாடொறு மேயசீர்ப்
பிரமனூர்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்னருள் பேணியே. 1

விண்ணிலார்மதி சூடினான்விரும் பும்மறையவன் றன்றலை
உண்ணநன்பலி பேணினானுல கத்துளூனுயி ரான்மலைப்
பெண்ணினார்திரு மேனியான் பிரமா புரத்துறை கோயிலுள்
அண்ணலாரரு ளாளனாயமர் கின்றவெம்முடை யாதியே. 2

1. கரம் முனம் மலரால்:- கரமலர், முனமலர், கைம்மலராலும், மனமலராலும். முனம், முன்னம், கருத்து. புனல் மலர் தூவி - நீரையும் பூவையும் தூவி. கலந்து - முக்கரணமும் ஒன்றுபட்டு. பலபேரினால் - பன்னிரண்டு திருப்பெயரோடு. பொலியில் சீர்ப்பிரமனூர் எனக்கொள்க. ஆல், ஒடுப்பொருளில் வந்தது. "தூங்குகையானோங்குநடைய" (புறம்) "முன்னநினைத்த அளவில், வரம் அருள் செய்யவல்ல ஐயன் பிஞ்ஞகன் அருள்பேணி ஏத்துமின்".

2. தலைஉண்ண நன்பலிபேணினான் - உண்ணுவதற்குத் தலையோட்டிற் பிச்சையேற்றவன். உலகத்து உயிரின்; உடம்பும் உயிரும் ஆனவன் 'ஊனுயிரானாய் உலகானாய்' என்பது சுந்தரமூர்த்திகள் திருவாக்கு. அண்ணல் - தலைமை. சூடினான் - சூடினவன்.

எல்லையில்புக ழாளனும்மிமை யோர்கணத்துடன் கூடியும்
பல்லையார்தலை யிற்பலியது கொண்டுகந்த படிறனுந்
தொல்லைவையகத் தேறுதொண்டர்க ளுமலர்சொரிந் தேத்தவே
மல்லையம்பொழி றேன்பில்கும்பிர மாபுரத்துறை மைந்தனே. 3

அடையலார்புரஞ் சீறியந்தண ரேத்தமாமட மாதொடும்
பெடையெலாங்கடற் கானல்புல்கும்பிர மாபுரத்துறை கோயி
[லான்
றொடையலார்நறுங் கொன்றையான்றொழி லேபரவிநின் றேத்
)டையிலார்சிவ லோகமெய்துதற் கீதுகாரணங் காண்மினே. 4

வாயிடைம்மறை யோதிமங்கையர் வந்திடப்பலி கொண்டு
[போய்ப்
போயிடம்மெரி கானிடைப்புரி நாடகம்மினி தாடினன்
பேயொடுங்குடி வாழ்வினன்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்
றாயிடைப்பொரு டந்தையாகுமென் றோதுவார்க்கரு டன்
[மையே. 5

3. பல்லையார்தலை, படிறன் - வஞ்சகன். எல்லாச் செல்வமும் வழி பட்டோர்க் களித்து ஒன்றும் இல்லான் போல் பிச்சையேற்றலின். ஏறு - வினையைக் கடந்தேறிய. மல்லல் வளம், எதுகை நோக்கி மல்லை எனத் திரிந்தது. தேன்பில்கும் - தேன்சொட்டுகின்ற.

4. அடையலார் - பகைவர். தொடையல் - மாலை. கொன்றையான் தொழிலே பரவி நின்று ஏத்தினல் சிவலோகம் எய்துதற்கு இடை இல்லார். காரணம் ஈது காண்மின் என்க.

5. போய்ப்போய் - அடுக்கு, பன்மைப்பொருட்டு; பலகாலும் போய் என்று பொருள். இடம் - நாடகமாடும் இடமான, எரிகான். இடை - ஏழனுருபு. தாயும், இடைக்காலத்தில் வந்துசேரும் பொருளும், தந்தையும் ஆவான் என்று ஓதுவார்கட்கு அருட்டன்மை அத்தகையதாயிருந்தது என் பது ஈற்றடியின் பொருள்,

ஊடினாலினி யாவதென்னுயர் நெஞ்சமேயுறு வல்வினைக்
கோடிநீயுழல் கின்றதென்னழ லன்றுதன்கையி லேந்தினான்
பீடுநேர்ந்தது கொள்கையான்பிர மாபுரத்துறை வேதியன்
ஏடுநேர்மதி யோடராவணி யெந்தையொன்றுநின் றேத்திடே. 6

செய்யன்வெள்ளிய னொள்ளியார்சில ரென்றுமேத்தி நினைந்திட
ஐயனாண்டகை யந்தணனரு மாமறைப்பொருளாயினான்
பெய்யுமாமழை யானவன்பிர மாபுரமிடம் பேணிய
வெய்யவெண்மழு வேந்தியைந்நினைந் தேத்துமின்வினை
[வீடவே. 7

கன்றொருக்கையி லேந்திநல்விள வின்கனிபட நூறியுஞ்
சென்றொருக்கிய மாமறைப்பொரு டேர்ந்தசெம்மல ரோனுமாய்
அன்றரக்கனைச் செற்றவன்னடி யும்முடியவை காண்கிலார்
பின்றருக்கிய தண்பொழிற்பிர மாபுரத்தரன் பெற்றியே. 8

6. வல்வினைக்கு..........என் (உறுதுணையாய் அவனிருக்கவும்) எளிதினீங்காத தீவினை நீங்குதற்கு நீ ஓடியுழல்வது ஏன்? சேர்ந்தாரைக் கொல்வதாகிய கொடியபொருளும் அவனையடைந்தால் நற்பொருளாகும் அவன் என அறிவித்தற்கன்றோ? அக்காலத்தில் அழலை ஏந்தினான்? மெய்யடியாரோடு பொய்யடியோமையும் ஆட்கொள்பவன் என்பதறிவித் தற்கு மதியோடு அராவணி எந்தையாயிருந்தான், என்றுகொண்டு நீ ஏத்துவாயாக என்பது இப்பாசுரத்தின் கருத்து.

7. பெய்யும் மாமழை ஆனவன். வெண்மழு முன்னும் வந்தது. வினைவீட - வினை ஒழிய.

8. ஒருகை, ஒருக்கை என இசை நோக்கத் திரிந்தது. அழித்தவன்; பெயர்ச்சொல். ஒருக்கிய - ஒருங்கு சேர்ந்த, தொகுத்த, (மாமறை) பின்தருக்கிய. இந்தப் பதிகத்தில் அரக்கனையும் அடி, முடி தேடிய இருவரையும் ஒரு பாசுரத்தில் கூறியதுணர்க.

உண்டுடுக்கைவிட் டார்களும்முயர் கஞ்சிமண்டைகொள்
[தேரரும்
பண்டடக்குசொற் பேசும்அப்பரி வொன்றிலார்கள்சொற்
[கொள்ளன்மின்
தண்டொடக்குவன் சூலமுந்தழன் மாமழுப்படை தன்கையிற்
கொண்டொடுக்கிய மைந்தனெம்பிர மாபுரத்துறை கூத்தனே. 9

பித்தனைப்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்கழல் பேணியே
மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை செய்துநன்பொருண் மேவிட
வைத்தசிந்தையுண் ஞானசம்பந்தன் வாய்நவின்றெழு மாலைகள்
பொய்த்தவம்பொறி நீங்கஇன்னிசை போற்றிசெய்யுமெய்ம்
[மாந்தரே. 10

திருச்சிற்றம்பலம்

9. உடுக்கை - ஆடை. பண்டு அடக்கு சொல் - தொன்றுதொட்டு வந்த சற்சமயக் கருத்துக்களை. தண்டு (ஒடு) - யோகதண்டத்துடன். அக்கு- செபமாலை, இவை யோகரூபங் குறித்தவை. ஒடுக்கிய - உமாதேவி யாரை இடப்பாகத்தே சேர்த்த. மைந்தன் - ஆண்மையுடையோன். இது போகரூபங் குறித்தது. ஒடுக்கிய என்ற வினைக்குச் செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. ஆக இறைவனது மூன்று ரூபமும் இதனுள் அமைந்தமை காண்க. 'யோகியாய்' (சிவஞானசித்தியார்) ஒருவனே மூன்றுருவும் கொள்ளுதல் அவனது திருவிளையாடல் என்பார் 'கூத்தன்' என்றார்.

10. சிந்தையுள் தங்கி நாநவின்று எழுந்த, மாலைகள். நன்பொருள் - வீடு. போற்றி செய்யுங்கள் - செய்வீரேல், மெய்யுணர்ந்த மாந்தர் ஆவீர்கள், நன்பொருள், ஞானம் எனலும் பொருந்தும்.

# 38 திருக்கண்டியூர் வீரட்டம்

## 296 பதிகவரலாறு

சண்பையாளியார், திருப்பூந்துருத்திப் பொய்யிலியாரைப் பணிந்து, போற்றித், திருத்தொண்டர் குழாம் எதிர்கொள்ள எப்பொழுதும் தொழுது திருக்கண்டியூர் தொழச் சென்று அணைந்து வீரட்டர் கோயில் எய்திக் கலந்து, காதல் பொங்கித் தாழ்ந்து இறைஞ்சித் தொடுத்த இசைத் தமிழ் மாலை இத்திருப்பதிகம்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வினவினேனறி யாமையில்லுரை
செய்ம்மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார்புனற் காவிரிக்கரை
மேயகண்டியூர் வீரட்டன்
தனமுனேதனக் கின்மையோதம
ராயினாரண்ட மாளத்தான்
வனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ்
வையமாப்பலி தேர்ந்ததே. 1

1. கனைவு - வேகம். கண்டியூர் வீரட்டன். தமர் ஆயினார் - தம்தம் இனத்தவரான பிரம விட்டுணுக்கள். அண்டம் ஆளத்தான் வனத்தில் குடியிருந்து இவ்வுலகில் பெரிய பிச்சை எடுப்பது. முன்னே தனம் - முன்னோர் தேடிவைத்த பொருள், தனக்கு இல்லாமையாலோ? அவன் அருளை வேண்டிப் பணிசெய்யும் அடிகளீர், நீர் முற்றிலும் உணரும்படி விடை சொல்வீர்களாக என்பது இதன் பொழிப்பு. அறியாமை இல் உரை செய்தல் - கேட்போர் ஐயந்திரிபு இல்லையாக அங்கை நெல்லியென உணருமாறு உரைத்தல் வினவினேன், அருள வேண்டுவீராகிய நீவிர் அறியாமை இல்லாத விடையாக உரைசெய்யுமின் என்றார் கேட்டோர். அறியாமை என்பதற்கு வேறு பொருள் கூறுதல் பிழையாகும். தமர் ஆயினார் என்றது அரசினையும், தண்டலையாளரையும். குடியரசுகள் அரசியலார் என்பது போன்று, தமர் அண்டம் ஆளத்தான் பிச்சை ஏடுப்பது ஏன்?

உள்ளவாறெனக் குரைசெய்மின்னுயர்
வாயமாதவம் பேணுவீர்
கள்ளவிழ்பொழில் சூழுங்கண்டியூர்
வீரட்டத்துறை காதலான்
பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை
வைத்ததும்பெரு நீரொலி
வெள்ளந்தாங்கிய தென்கொலோமிகு
மங்கையா ளுடனாகவே. 2

அடியராயினீர் சொல்லுமின்அறி
கின்றிலேன்அரன் செய்கையைப்
படியெலாந்தொழு தேத்துகண்டியூர்
வீரட்டத்துறை பான்மையான்
முடிவுமாய்முத லாய்இவ்வைய
முழுதுமாய்அழ காயதோர்
பொடியதார்திரு மார்பினிற்புரி
நூலும்பூண்டெழு பொற்பதே. 3

பழையதொண்டர்கள் பகருமின்பல
வாயவேதியன் பான்மையைக்
கழையுலாம்புனல் மல்குகாவிரி
மன்னுகண்டியூர் வீரட்டன்

2. உறைகாதலான் - வாழ்வதில் காதலுடையவன். பிள்ளைப்பிறை- இளம்பிறை. மிகும் மங்கையாள் - ஒப்பாரும் மிக்காரும் இல்லாதது மேன்மையுற்ற மங்கை, அம்பிகை. கடவுளாயின் மங்கை உடனாகத் தலையிற் பிறையும் நீர்ப்பெருக்கையும் தாங்கியது என்க.

3. அறிகின்றிலேன் என்றது - முற்பிறப்பிற் செய்த சிவபுண்ணிய மேலீட்டினால் சைவநெறி தலைப்பட்ட ஒருவர் கூறுவதாக வந்தது. கழை - மூங்கில். முடிவும் முதலும் ஆய் - எல்லா இடமும், எல்லாக் காலமு மாகிய ஒரு பொருளுக்கு இவ்வையகம் முழுதும் ஒரு உடம்பு. அதில் மார்பும் அழகிய திருநீற்றுப் பூச்சும், முப்புரிநூலும் பூண்டு தோன்றும் தோற்றம் ஏன்? பொற்பு என்றது இங்குத் தன்மை என்னும் பொருளில் வந்தது.

குழையொர்காதினிற் பெய்துகந்தொரு
குன்றின்மங்கை வெருவுறப்
புழைநெடுங்கைநன் மாவுரித்தது
போர்த்துகந்த பொலிவதே. 4

விரவிலாதுமைக் கேட்கின்றேன்அடி
விரும்பியாட்செய்வீர் விளம்புமின்
கரையெலாந்திரை மண்டுகாவிரிக்
கண்டியூருறை வீரட்டன்
முரவமொந்தை முழாவொலிக்க
முழங்குபேயொடுங் கூடிப்போய்ப்
பரவுவானவர்க் காகவார்கடல்
நஞ்சமுண்ட பரிசதே. 5

இயலுமாறெனக் கியம்புமின்னிறை
வன்னுமாய்நிறை செய்கையைக்
கயனெடுங்கண்ணி ஞர்கள்தம்பொலி
கண்டியூருறை வீரட்டன்
புயல்பொழிந்திழி வானுளோர்களுக்
காகஅன்றயன் பொய்ச்சிரம்
அயனகவ்வ தரிந்துமற்றதில்
ஊனுகந்த வருத்தியே. 6

4. ஈசனது பழ அடியீராகிய நீங்கள் புத்தடியேனுக்குத் தெளியப் பகருமின். கடவுள் - எனின் அவன் காதில் குழை அணிந்ததும் யானையை உரித்து அதைப் போர்த்ததும் ஏன்?

5. விரவு இலாது - (அடியார் நடுவுள்) கலந்திருக்கப் பெறுமை யினுல் இவற்றை வினவுகிறேன். இறைவன் கிளம்பும்பொழுது பூதகணம் முதலிய கணங்களோடு பேய்க்கணங்களும் போவன ஆதலின். பேயொடுங்கூடி என்ற தொடரில் பேய் என்பது உபலட்சணம் ஆகலின் பேய் முதலிய கணங்களோடும் என்க.

வானவர்க்காக விடத்தை உண்பானேன்? உண்ணச் சோறின்றி நஞ்சுண்டவன் கடவுளாவானு? விடமுண்டவன் சாவவில்லை என்பது நம்பத்தகுமா? எனப் பிற மதத்தினர் கூறுவது "அம்பரம் புள்ளித் தோல் ஆலாலம் ஊனமுதம்" என்னும் திருவாசகத்தால் அறிக.

6. இறைவனுமாய் நிறைசெய்கையை - உலகினுக்கும் உயிருக்கும் தலைவனுமாய், அவையேயாகி அவற்றுள் வியாபித்து நிறைந்து நின்ற

திருந்துதொண்டர்கள் செப்புமின்மிகச்
செல்வன்றன்னது திறமெலாம்
கருந்தடங்கண்ணி ஞர்கடாந்தொழு
கண்டியூருறை வீரட்டன்
இருந்துநால்வரொ டானிழல்லற
முறைத்தும்மிகு வெம்மையார்
வருந்தவன்சிலை யாலம்மாமதின்
மூன்றுமாட்டிய வண்ணமே. 7

நாவிரித்தரன் றொல்புகழ்பல
பேணுவீரிறை நல்குமின்
காவிரித்தடம் புனல்செய்கண்டியூர்
வீரட்டத்துறை கண்ணுதல்
கோவிரிப்பய னஞ்சாடிய
கொள்கையுங்கொடி வரைபெற
மாவரைத்தலத் தாலரக்கனை
வலியைவாட்டிய மாண்பதே. 8

செய்கையை. புயல் - மேகம். பொழிந்து - மழைபோல் பெய்து. பொய் - இன்மைப் பொருளில் வந்தது.

அயல் - அயலார். நக - அவனைப் பரிகசிக்கும்படியாக அது அரிந்து எனவும், அயலார், தன்னை நக அதில் (அம்மண்டையோட்டில்) உணவை உகந்து (உண்டு) எனவும் - இருவழியும் கூட்டுக. வானவர்களுக்காக அயன்தலையைக் கொய்ததென்பது:- படைத்தறகர்த்தா தன் தலையைப் படைத்தளிக்கும்' வலியின்மையும் படைப்போற் படைக்கும் பகையோன் இவனே என்பதும் வானவர் தெளிவதற்காக ஒருவன் தலையைக் கொய்து, அதில் உணவு நுகர்தல் கடவுட்டன்மைக்கு ஒக்குமா?

7. திருந்துமாறு சொல்லவல்லீர் நீவிரே என்பான், திருந்து தொண்டர்கள் என்றான். இன்றேல் "குருடும் குருடும் குருட்டாட்டமாடிக் குழி வீழ்ந்தவாறே". தொண்டர்கள் அண்மைவிளி. இருந்து நால்வரோடு... வண்ணமே - துறவியாய் உபதேசம்செய்த தூயோன், திரிபுரத்தசுரர்களைக் கொலை செய்யலாமா? சரியை கிரியை இரண்டும் - அறம். சிவதன்மம். (திருக்களிற்றுப்படியார்) மாட்டிய மாள்வித்த, மாள் என்பதன் பிறவினை.

8. (அரன் தொல் புகழ்) நாவிரித்து, "உன் திருவார்த்தையை விரிப்பார்" என்பது திருவாசகம். புனல் - நீர்வளம். செய் - உண்டாக்கு

பெருமையேசர ணுகவாழ்வுறு
மாந்தர்காளிறை பேசுமின்
கருமையார்பொழில் சூழுந்தண்வயற்
கண்டியூருறை வீரட்டன்
ஒருமையாலுயர் மாலுமற்றை
மலரவன்உணர்ந் தேத்தவே
அருமையாலவ ருக்குயர்ந்தெரி
யாகிநின்றவத் தன்மையே.

நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள்
நவிலுமின்உமைக் கேட்கின்றேன்
கமரழிவயல் சூழுந்தண்புனற்
கண்டியூருறை வீரட்டன்
தமரழிந்தெழு சாக்கியச்சமண்
ஆதரோது மதுகொளா
தமரரானவ ரேத்தவந்தகன்
தன்னைச்சூலத்தில் ஆய்ந்ததே. 10.

கின்ற. கண்டியூர் வீரட்டம். கோ - பசுவினின்றும் கிடைக்கக்கூடிய. விரிப்பயன் - பெரும் பயனையுடைய. ஆன்அஞ்சு ஆடிய - பஞ்சகவ்வியத்தை ஆடுகின்ற கொள்கையும், அரக்கனை வலியை வாட்டிய மாண்பும். இறைநல்குமின்-விடை அளியுங்கள். ஆனஞ்சாடுதல்-சத்துவ குணத்தைத் தரும். அதற்கு மாறாக அரக்கனை அடர்த்தலாகிய ரஜோகுண வினை புரிந்தமை ஏன்? கொடிவரை?

9. மாச்செறிவால் வெயில். நுழையாமையால் கருமை ஆர்பொழில் என்றார். "வெயில் நுழைபு அறியாக் குயின் நுழைபொதும்பர்" என்பது மணிமேகலை. ஒருமையால் ... ... அத்தன்மையே அருமையால் - காண்டற்கரிய தன்மையால் அவர்க்கு உயர்ந்து, எரியாகிநின்ற, ஓங்கி அனலாகி நின்ற அத்தன்மையை. இறைபேசுமின் - பிரம்ம, விட்டுணு, உருத்திரனென்று உடனெண்ணப்படுகின்ற கடவுள் அவரினும் மிக்கோனுய்ப் அழலாகிநின்றது ஏன்?

10. நமர் - நம்மவர். சுற்றத்தார் ஏழுபிறப்பு அறுக்கும் மாந்தர்காள் என்றது. ஒருவன் சிவஞானியாய் வீடு பேறு அடைவானாகில் அவனது

கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர்
வீரட்டத்துறை கள்வனை
அருத்தனைத்திறம் அடியர்பால்மிகக்
கேட்டுகந்த விஞவுரை
திருத்தமாந்திகழ் காழிஞானசம்
பந்தன்செப்பிய செந்தமிழ்
ஒருத்தராகிலும் பலர்களாகிலு
உரைசெய்வார் உயர்ந்தார்களே. 11

திருச்சிற்றம்பலம்

இருபத்தொரு வமிசத்திலுள்ளவர்கட்கும் நரகமில்லை என்ற கருத்து. திருவாசகம். "மூவேழ்சுற்றம் முரணுறு நரகிடை ஆழாமே அருள் அரசே போற்றி" என்பதனுல் அறிக. ஈரேழுலகை ஏழுலகு என்பது போல வானவர் மக்கள் நரகர் ஆகிய ஓவ்வோர் வகையிலும் ஏழுபிறப்பு என்றுணர்க. கமர் - பூமி வெடிப்பு. நீர் பாய்வதால் அது அழிகின்றது. தமர் அழிந்து - தமது சமயத்தவர் பயனெய்தாது அழிய அழிந்து வினையெச்சத்திரிபு. கொல்லாமையும் பரதுக்க துக்கமுமாகிய அவர்களின் கொள்கையை மறுத்து, அவர் தொழிலினும் தாழ்ந்ததாக. யமனைச் சூலத்திற் குத்திக் கொன்றது தகுமா ?

11. கருத்தனை - "மனத்துள் நின்ற கருத்தானை". கள்வனை - மேற் கூறிய காரணங்களால் இத்தன்மையன் இறைவன் ஆகான் எனச் சைவம் சாரும் ஊழிலார் மறுக்கும் வண்ணம், மறைந்து நிற்றலின் கள்வன் என்ருர். விஞவுரையாகிய சம்பந்தன் நிரப்பிய செந்தமிழ் பாடுவார் உயர்ந்தார்கள். பதிகக் குறிப்பு. புத்தர் சைவத்திற் குறை கூறும் கூற்றுக் களையே விஞவாக வைத்து மணிவாசகப்பெருமான், திருச்சாழலில் விஞவியதை ஒக்கும் இப்பதிகம். அட்டவீரட்டத்தில் இத்தலம் அயனைச் சிரங்கொய்த தலம்.

# 39 திரு ஆலவாய்

## 297 பதிகவரலாறு

மதுரையில், பாண்டியன், மங்கையர்க்கரசியாரை நோக்கி, நீ வருந்தாதே என்று சொல்லி அழைத்து சமணரைநோக்கி என் வெப்பு நோயை ஒழிக்குந்திறத்தில் நீவிரும் இச்சிவனடியாரும் முடிவாகத் தேறிய தெய்வத் தன்மை''யைத் 'தெரிப்பீர்' என்றான். அப்போது, மங்கையர்க்கரசியார் அஞ்சினார். அதை உணர்ந்த திருஞானசம்பந்தர், அந் ''நற்றவத் திருவை நோக்கி ... ... ஏனைப்பாலன் என்றுநீ நனி அஞ்சவேண்டா நிலையிலா அமணர்க்கு என்றும் யான் எளியேன் அலேன்'' என்று பாடியது இத் திருப்பதிகம்.

பண் – கொல்லி

திருச்சிற்றம்பலம்

மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவ னென்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு வாலவாயர னிற்கவே. 1

ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்தசங்கத பங்கமாப்
பாகதத்தொ டிரைத்துரைத்த சனங்கள்வெட்குறு பக்கமா
மாகதக்கரி போற்றிரிந்து புரிந்துநின்றுணும் மாசுசேர்
ஆகதர்க்கெளி யேனலேன்திரு வாலவாயர னிற்கவே. 2

1. மானின் நேர்விழி - மருண்டு பார்க்குந்தன்மையால் மாதர் விழிக்கு மானின் விழி உவமை. மாதராய் - மாதராள் என்பதன் விளி. பானல்வாய் - (பால்+நல்+வாய்-) பால்வடியும் நல்ல வாயையுடைய. ஒரு பாலன் ஈங்கு இவன் என்று நீ. பரிவு - இரக்கம். எய்திடேல்-அடையாதே. பல அல்லல் சேர் - பல துன்பங்களையும் பிறர்க்கு விளைவிக்கின்ற. பிற வினை தொக்கது. திருவாலவாய் அரன் துணை நிற்கையினால் எளியேன் அலேன்.

2. பங்கமா(க) (பக்கமாக) புரிந்து எனக் கூட்டுக. சங்கதம் - சம்ஸ்கிருதம் என்பதன் திரிபு. பாகதம் - ப்ராகிருதம் என்பதன் சிதைவு.

அத்தகுபொரு ளுண் டுமில்லையு மென்றுநின்றவர்க் கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்துவாதி லழிந்தெழுந்த கவிப்பெயர்ச்
சத்திரத்தின் மடிந்தொடிந்து சனங்கள்வெட்குற நக்கமே
சித்திரர்க்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 3

சந்துசேனனு மிந்துசேனனுந் தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனு முதலதாகிய பெயர்கொளா
மந்திபோற்றிருந் தாரியத்தொடு செந்தமிழ்ப்பய னறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 4

கூட்டினூர்கிளி யின்விருத்த முரைத்ததோரொலி யின்ளுழிற்
பாட்டுமெய்சொலிப் பக்கமேசெலு மெக்கர்தங்களைப் பல்லறம்
காட்டியேவரு மாடெலாங்கவர் கையரைக்கசி வொன்றிலாச்
சேட்டைகட்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 5

---

வடமொழியின் திரிபு ஆகியமொழி இரண்டாம். எப்பொழுது வந்தாய் என்ற தொடரை எப்போவந்தே என்று பேசுவது போன்றது. பாகதத் தொடு இரைத்துரைத்த - பிராகிருத மொழியினுல் ஆரவாரித்துச் சொல்லிய. சனங்கள் - வைதீகமாந்தர். வெட்குறு - வெட்கமடையத்தக்க பங்கம் ஆ - பங்கப்படவும். வெட்கவும் புரிந்து - பாகதத்தோடு இரைத் துரைத்தல் முதலிய செயல்களைச் செய்து. மா - பெரிய. கதம் - கோபத்தை உடைய. கரிபோல், திரிந்து - செருக்குற்று. மாசு சேர் ஆகதர் - அழுக்குச்சேரும் உடம்பையுடையவர். நாடோறும் சிறிது சிறி தாகச் சேர்தலால் மாசு சேர் என்றுர்.

3. அத்தகு பொருள் - கடவுள் என்ற பொருள் உண்டும் ஆம் இல்லையும் ஆம். உண்டென்றும் சொல்லமுடியாது. இல்லையென்றும் சொல்லமுடியாது என்னும் அத்திநாத்தி, என்பது அவர்கள் மதக்கொள்கை. ஏத்தும் முன்பின் முரண்படச்சொல்லி, வாதில் அழிந்து தோற்று கவிப் பெயரெச்சத்தின் மடிந்து. ஓடிந்து நக்கம் - நன்மை என்ற வடசொல்லின் திரிபு. சித்திரர்க்கு - அழகென்று கொள்பவர்களுக்கு (எளியேன்ஆவேன்.)

4. மந்தி-குரங்கு. ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன் யாதெனின், சிவனே முழுமுதற்கடவுள் எனவும், சைவநெறியே சீரிய நெறியெனவும் ஆற்றல் அறியாததால் அகக் கண் இழந்தவர். அந்தகர் - குருடர். நெறி தெரியாது தியங்குதல் அவ்வழிச்சென்று இடர்ப்படல் உடைமை, குருடர் செயல்.

5. கிளிவிருத்தம், எலி விருத்தம் முதலிய சுவடிகளை. மெய் சொலி- மெய்யென்று சொல்லி. பக்கம் - ஓரமான வழியே செல்லுகின்ற எக்கர் பல அறம் காட்டி வரும் மாடு எலாம் கவர்கையர் - பல தருமங்களும் செய்தவர்களாக வெளிக்குக்காட்டி அதனுல் வரும்நிரைப் பொருள்களை

கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா
சுனகநந்தியுங் குனகநந்தியுந் திவணநந்தியு மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகருக்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 6

பந்தணம்மவை யொன்றிலம்பரி வொன்றிலம்மென வாசக
மந்தணம்பல பேசிமாசறு சீர்மையின்றிய நாயமே
அந்தணம்மரு கந்தணம்மது புத்தணம்மது சிந்தனச்
சிந்தணர்க்கெளி யேனலேன்றிரு வாலவாயரனிற்கவே. 7

மேலெனக்கெதி ரில்லையென்ற வரக்கனார்மிகை செற்றதீப்
போலியைப்பணி யக்கிலாதொரு பொய்த்தவங்கொடு
[குண்டிகை
பீலிகைக்கொடு பாயிடுக்கி நடுக்கியேபிறர் பின்செலும்
சீலிகட்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 8

எல்லாம். கவர்கின்றவர். கசிவு - மன இரக்கம். ஒன்று இலா - சிறிதும் இல்லாத. சேட்டை - மூதேவி, குறும்பு. எக்கர் தங்களை. கையரை என்பதில் உள்ள இரண்டனுருபுகள் நான்கன்பொருளில் வந்ததனால் வேற்றுமை மயக்கம்.

6. மொழி - நமது உபதேச மொழிகளைக் கொள்ளாத. சினகர் - ஜினனே கடவுளென்னும் கொள்கையுடைய.

7. பந்தணம் - பந்தணைகள். ஒன்று இலம் - சிறிதும் இல்லோம், பரிவு - ஆசை-வாசகமந்தணம். இரகசியமான வாசகங்களை. சீர்மை - ஒழுங்கு. (அநாயமே. அந்தணம்). அருகந்தணம் அது - ஆருகத சமயத்தின் கொள்கை அத்தகையது. புத்தனம் அது - பௌத்த சமயத்தின் கொள்கை அத்தகையது. சத்தனம் - சித்தர் தன்மை. "அருக்கரிலிருத்தி பெற்றோர்" என்பது சூடாமணி நிகண்டு.

8. அரக்கனார், இகழ்ச்சிக் குறிப்பு. தீப்போலி - தீப்போன்றவன். அழலுருவன். நிறத்தில் அழல்போலினும் அருளில் நீர்போலபவன் என்பார் தீ என்னாது தீப்போலி என்றார். பணியக்கிலாது. ககரம் விரித்தல் விகாரம். குண்டிகை ... சீலிகள் - சமணர் இயல்பைக் குறித்தது. சீலம் - ஒழுக்கம், சீலி ஒழுக்கமுடையோன் வழியில் எறும்பு முதலிய சிற்றுயிர் கட்கும் ஊறுபடாது நடப்பார் போன்று மயில் (பீலி) தோகையால் நிலம் கூட்டி மிதித்துச்செல்வர்,

பூமகற்கு மரிக்குமோர்வரு புண்ணியன்னடி போற்றிலார்
சாமவத்தையி னூர்கள்போறலை 'யைப்பறித்தொரு பொய்த்தவம்
வேமவத்தைசெ லுத்திமெய்ப்பொடி யட்டிவாய்ச கதிக்குநேர்
ஆவமர்க்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 9

தங்களுக்குமச் சாக்கியர்க்குந் தரிப்பொணாதநற் சேவடி
எங்களுயக னேத்தொழிந்திடுக் கேமடுத்தொரு பொய்த்தவம்
பொங்குநூல்வழி யன்றியேபுல வோர்களைப்பழிக் கும்பொலா
அங்கதர்க்கெளி யேனலேன்றிரு வாலவாயர னிற்கவே. 10

எக்கராமமண் கையருக்கெளி யேனலேன்றிரு வாலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவேதுளங் கும்முடித்தென்னன்
[முன்னிலை
தக்கசீர்ப்புக லிக்குமன்றமிழ் நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்தபத்து முரைப்பவர்க்கிட ரில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

9. பூமகன் - பிரமன். ஓர்வு அரு - நினைத்தற்கும் அரிய. சாம் அவத்தையினூர் - இறந்தோர்க்கு நீர்க்கடன் செய்யும் நிலைமையுடையோம். அவத்தை - நிலைமை. வேம் - வருத்துகின்ற, பிறவினை விகுதி குன்றி நின்றது. மெய் - உடம்பில். பொடி அட்டி - நீராடாமையால் புழுதி படிந்து. வாய் சகதிக்குக்கோரம் ஆவார்.

10. ஏத்து ஒழிந்து - ஏத்துதலை நீங்கி. ஏத்தாமல், இடுக்க மடுத்து - துன்புறுத்துதலையே பொருந்தி. வாய்த்தவம் ... பழிக்கும் - நூல் வழியில் லாமலே ஒரு வாய்த்தவம் நாட்டி அறிஞரைப் பழிக்கின்ற. புலம் - அறிவு. புலவோர் - அறிஞர், அங்கதர்.

11. சொக்கன் - கண்டார் மயங்கி விழும்படியான பேரழகுடையவன்

# 40 பொது. திருப்பதிகம்

## தனித் திருவிருக்குக்குறள்

### 298 பதிகவரலாறு

"கைச்சிறு மறியவன் கழல் அல்லால் பேணுக் கருத்துடை ஞான சம்பந்தன்" என்றும் (1-77-11) இதன் இரண்டாவது திருப்பாட்டிலே "கொன்றை சூடி நின்றதேவை அன்றி ஒன்றும் நன்று இலோம்" என்றும் திருவுள்ளக்கிடையான குறிக்கோளைத் திட்டமாகியும் வெட்ட வெளிச்சமாயும் அருளிய உண்மையை உணர்ந்த சுந்தரப் பெருமாள், "வம்புஅரு வரிவண்டு மணம்நாற மலரும் மதுமலர்நல் கொன்றையான் அடி அலால் பேணு எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்" என்று பொன்னினும் போற்றி யருளிய திறம் இங்கு அறியத்தக்கது இப்பதிகத்துள் உள்ளவை வேதத்திலுள்ளவை போன்ற இருக்குகள்.

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கல்லானீழல், அல்லாத்தேவை
நல்லார்பேணுர், அல்லோநாமே. 1

கொன்றைசூடி, நின்றதேவை
அன்றியொன்று, நன்றிலோமே. 2

கல்லாநெஞ்சின், நில்லானீசன்
சொல்லாதாரோ, டல்லோநாமே. 3

1. கல்லால் நீழலில் அல்லாத்தேவை-கல்லாலின் நிழலில் இருக்கும் தெய்வமாகிய சிவம் அல்லாத பிறிதொரு தெய்வத்தை. நல்லார் - மெய்யுணர்ந்த ஞானிகள். பேணுர் - பொருளாகக் கொள்ளார். (ஆகையால்) நாமும் அல்லோம் - நாங்களும் அவற்றைப் பொருட்படுத்தோம்.

2. நன்று இலோம் - நன்மை தரும் பொருளாகக் கொள்ளுதல் இலோம். இல்லோம் - கொள்ளோம்.

3. கல்லாநெஞ்சில் - இடைவிடாது தியானிக்காத உள்ளத்தில். நில்லான் ஆதலால் திருநாமம் அஞ்செழுத்தும் செப்புதல், அவர் திறம்

கூற்றுதைத்த, நீற்றினனைப்
போற்றுவார்கள், தோற்றினரே. 4

காட்டுளாடும், பாட்டுளானை
நாட்டுளாரும், தேட்டுளாரே. 5

தக்கன்வேள்விப், பொக்கந்தீர்த்த
மிக்கதேவர், பக்கத்தோமே 6

பெண்ணுணைய, விண்ணோர்கோவை
நண்ணுதாரை, எண்ணேநாமே. 7

தூர்த்தன்வீரம், தீர்த்தகோவை
ஆத்தமாக, ஏத்தினேமே. 8

ஒருதரமேனும்சொல்லாதவரோடு நாங்களும் சேரோம் என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. 'இன்னீரவள் கண்ணினை மாரிகற்ப' என்ற சிந்தாமணியின் உரையால் இப்பொருள் கொள்க.

4. தோற்றினர் - பிறந்த பயன் எய்துவர். "தோன்றிற் புகழொடு தோன்றுக" - (திருக்குறள்) என்பதனோடு ஒப்பிடுக.

5. பாட்டு உள்ளானை - அடியாரேத்தும் பாமாலையை உடையவன். நாட்டு - அவனே முதற்பொருளென்று நாட்டிய. உள் - (தம்) உள்ளத்தில். ஆரும் - திளைக்கின்ற. தேட்டு - செல்வம். உளாரே - உள்ளவர்களே; செல்வர் எனத் தக்கவர் என்பது அவாய் நிலையான் வந்தது. "செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே" என்ற கருத்து. ஆடும் என்ற பெயரெச்சம் உள்ளான் என்ற பெயர் கொண்டது. ஆர்தல் - திளைத்தல்.

6. பொக்கம் - பொய். வேள்விப் பொக்கம் - போலி வேள்வி தீர்த்த - பற்றற ஒழித்த. மிக்கதேவர் பக்கத்தோம் - அணுக்கத் தொண்டராயுள்ளோம். தீர்த்த - இப்பொருட்டாதலைப் பின்வரும் 8-ம் பாசுரத்தினும் காண்க.

7. ... ... ... ...

8. தூர்த்தன் - இராவணன். ஆத்தம் - நண்பன். பண்பாகு பெயர். "ஆத்தமென்றெனை ஆளவல்லானை" - ஆளுடைய நம்பிகள் வாக்கு.

பூவினுனும், தாவினுனும்
நாவினுலும், நோவினுரே. 9

மொட்டமணர், கட்டர்தேரர்
பிட்டர்சொல்லை, விட்டுளாமே. 10

அந்தண்காழிப், பந்தன்சொல்லைச்
சிந்தைசெய்வோர், உய்ந்துளோரே. 11

திருச்சிற்றம்பலம்

9. தாவினேன் - உலகம் அளந்தவன். - 'திருமால் தாஅயதெல்லா' என்ற திருக்குறளில் இப்பொருள் காண்க.

10. மொட்டு - பூ. அரும்பு - அதுபோன்ற தலையுடைமையின் மொடர் என்ருர். கட்டர் - துன்புறுத்துவோர்.

11. அந்தண்காழி - அழகிய குளிர்ந்த காழி. பந்தன் - என்ற ஒரு புடைப்பெயர் கொளல் எனும் வடமொழியிலக்கணம் பற்றி.

அந்தமில் சீரார் அழகினுன் — முந்திப்
புகழ்வாருந் தன்மையவாய்ப் பூதலத்துள் ஓங்கி
நிகழ்கிடங்குஞ் சூழ்கிடப்ப நேரே திகழ
முளைநிரைத்து மூரிச் சிறைவகுத்து மொய்த்த
புளகத்தின் பாம்புரிசூழ் போகி—வளர
விரும்பதணஞ் சேர விருத்தியெழில் நாஞ்சின்
மருங்கணையவட்டாலை யிட்டுப்—பொருந்தியசீர்த்
தோமரமுந் தொல்லைப் பொறிவீசி யந்திரமுங்
காமரமும் எப்புழையுங் கைகலந்து—மீமருவும்

—ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை

# 41 திருக்கச்சியேகம்பம்.

## 299 பதிகவரலாறு

எல்லா உலகும் உய்யப் பெறற்கு அரும் பேறு பெற்றருளும் பிள்ளையார், மறப்பதற்கு அரிய காதலுடன் வந்து எய்தி மகிழ்ந்து உறைவாராய், அறப் பெருஞ் செல்வக் காமக் கோட்டம் அமர்ந்த செழுஞ்சுடரை ஒருபோதும் தப்பாதே உள் உருகிச் சேவடியில் பணிந்து இசைத் திருப் பதிகத் தொடை பல புனைந்தார். அவற்றுள் ஒன்று இத்திருவிருக்குக் குறள். வடமொழி வேதத்தில் உள்ள இருக்குகளைப் போலத் தமிழில் அமைந்த இருக்கு (மந்திரங்கள்) இவை.

**பண் - கொல்லி**

திருச்சிற்றம்பலம்

கருவார்கச்சித், திருவேகம்பத்
தொருவாவென்ன, மருவாவினையே. 1

மதியார்கச்சி, நதியேகம்பம்
விதியாலேத்தப், பதியாவாரே. 2

கலியார்கச்சி, மலியேகம்பம்
பலியாற்போற்ற, நலியாவினையே. 3

வரமார்கச்சிப், புரமேகம்பம்
பரவாவேத்த, விரவாவினையே 4

1. கரு-கர்ப்பம்...ஏகஆம்பரம் - ஏகம்பம் என மரீ மாமரத்தினடி கோயிலின் பெயர். வினை - வினைகள், பால்பகா அஃறிணைப்பெயர்.

2. மதிஆர்கச்சி - மதி தவழும் மாடங்களையுடைய கச்சி.

3. கலி ஆர்-ஓசைமிக்குடைய கச்சி, இதனை 'மாமலிதேரான்' என்ற தண்டியலங்காரம் உதாரணச் செய்யுளாலும், பெரிய புராணத்தாலும் அறியலாம்; பலி - பூசைக்குரிய பொருள்; காரிய ஆகுபெயர்.

4. பரவா - பரவி, துதித்து. உடன்பாட்டு வினையெச்சம். கச்சிப் புரம் - காஞ்சிபுரம்.

படமார்கச்சி, இடமேகம்பத்
துடையாயென்ன, அடையாவினையே. 5

நலமார்கச்சி, நிலவேகம்பம்
குலவாவேத்தக், கலவாவினையே. 6

கரியின்னுரியன், திருவேகம்பன்
பெரியபுரமுன், றெரிசெய்தானே. 7

இலங்கையரசைத், துலங்கவூன்றும்
நலங்கொள்கம்பன், இலங்குசரணே. 8

மறையோனரியும், அறியாவனலன்
நெறியேகம்பம், குறியாற்றொழுமே. 9

பறியாத்தேரர், நெறியில்கச்சிச்
செறிகொள்கம்பம், குறுகுவோமே. 10

கொச்சைவேந்தன், கச்சிக்கம்பம்
மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. 11

ருச்சிற்றம்பலம்

5. படம் - மாடங்களில் ஆடும் கொடியினையுடைய. உடையாய் - தலைவனே. என்ன் வினை அடையா.

6. நிலவு - விளங்குகின்ற. குலம் ஆக. குலவா - குலவி.

7. பெரியபுரம் - தீமை செய்தலிற் பெரியதாகிய திரிபுரம்.

8. துலங்க - அவன் பலி இது என்பது அனைவருக்கும் விளங்க. கம்பன் - ஏகம்பன் என்பதன் ஒருபுடைப்பெயர்.

9. (அறியா) அனலன்-நெருப்பாகி நின்றவன்.

10. பறியாத் தேரர் - தலைமயிர் பறியாத பவுத்தர்; என்ற இலேசானே அது பறிக்கப்பட சமணரும் கூறியதாயிற்றும். நெறியில் - அவர்கள் வழியிற் சேர்தலில்லாத. கம்பம் - கோயில்.

11. கொச்சை - கொச்சைவயம், சீகாழி. மெச்சும் சொல்லை - வியந்து பாடிய இப்பதிகத்தை. நச்சும் புகழ் - புகழ் விரும்பும்; என்றது இப்பதிகத்தைப் பாடவல்லார்க்குப் புகழ் முதலிய மேன்மைகள் தாமாகவே விரும்பி வந்தடையும் என்பதாம். புகழ் - உபலட்சணம்,

# 42 திருச்சிற்றேமம்

## 300 பதிகவரலாறு

பெரியபுராணத்தில் இதைப் பாடிய அமயம் குறிக்கப்பட்டிலது.

**பண் - கொல்லிக்கௌவாணம்**

திருச்சிற்றம்பலம்

நிறைவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
குறைவெண்டிங்கள் சூடியோ ராடன்மேய கொள்கையான்
சிறைவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ் சிற்றே
[மத்தான்
இறைவனென்றே யுலகெலா மேத்தநின்ற பெருமானே. 1

மாகத்திங்கள் வாணமுக மாதர்பாட வார்சடைப்
பாகத்திங்கள் சூடியோ ராடன்மேய பண்டங்கன்
மேகத்தாடு சோலைசூழ் மிடைசிற்றேம மேவினன்
ஆகத்தேர்கொ ளாமையைப் பூண்டவண்ண லல்லனே. 2

1. நிறைவெண் திங்கள் - பூரணசந்திரன். அதுபோலும் வாள் (ஒளி) முகம். மாதர்பாட. குறைவெண்திங்கள் சூடி - பிறையை அணிந்து. மேய - விரும்பிய. பொழிலும் பழனமும் சூழ்ந்த சிற்றேமம். குறை வெண் திங்கள் சூடியதாதலின், நிறைவெண் திங்கள் முகத்தர் பாடலை விரும்பினன். முகமாதர் - உமாதேவியார். மேல்வரும் எல்லாப் பாடலிலும் இதைக் காண்க. சிற்றேமத்தானே இறைவன் என்றும், உலகம் ஏத்த நின்றபெருமான் என்றும், ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக.

2. மாகம் - ஆகாயம். பாகம் - ஒரு பகுதி. (ஒரு கலைத்திங்கள்) பண்டங்கன் - பாண்டரங்கம் என்னும் ஒரு கூத்தை விரும்பி ஆடியவன். **மிடை** - (வளம்) மிகுந்த. ஆகத்து - மார்பில். ஏர் - அழகு. இடை ஒன்பது பாட்டிலும் முடிவு ஒன்றுயிற்று.

நெடுவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
கொடுவெண்டிங்கள் சூடியோ ராடன்மேய கொள்கையான்
படுவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
கடுவெங்கூற்றைக் காலினாற் காய்ந்தகடவு ளல்லனே. 3

கதிரார்திங்கள் வாண்முக மாதர்பாடக் கண்ணுதல்
முதிரார்திங்கள் சூடியோ ராடன்மேய முக்கணன்
எதிரார்புனலம் புன்சடை எழிலாருஞ் சிற்றேமத்தான்
அதிரார்பைங்க ணேறுடை யாதிமூர்த்தி யல்லனே. 4

வானார்திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைக்
கூனார்திங்கள் சூடியோராடன்மேய கொள்கையான்
தேனார்வண்டு பண்செயுந் திருவாருஞ்சிற் றேமத்தான்
மானார்விழிநன் மாதொடும் மகிழ்ந்தமைந்த னல்லனே. 5

3. தன் நிலவை உலகெலாம் விரித்தலால் நெடியதாகிய வெண் திங்கள். கொடு - வளைந்த. கடுவெம் கூற்று - மிகக் கொடிய கூற்றுவன். கடு என்பது - மிகுதியைக் குறிக்கும் கடியென்ற உரிச்சொல்லின் திரிபு. சிவனடியார்மேற் சென்றமை கருதிக் கடுவெங்கூற்று எனப்பட்டான்.

4. முதிரார் திங்கள்-முதிராத் திங்கள் என்று பாடமிருக்கவேண்டும். இளம்பிறைச் சந்திரன் என்று அப்பொருள் கோடலுக்கு. இனி இப்பாடத்துக்கு முதிர் - முதிர்தல். ஆர் - நிறைந்துவிட்ட. இனி முதிர்தலில்லாத இன்னும் பிறைச் சந்திரனாகவேயுள்ள, திங்கள் என்று பொருள் கொள்ளல் தகும். எதிர் ஆர்புனல் அம்புன்சடை எழில் ஆரும் சிற்றேமத்தான் - அலைமோதும் எதிரொலியையுடைய (கங்கை) நீரை அழகிய சிறிய சடையின் அழகு பொருந்திய சிற்றேமத்துக் கடவுள். அதிர்தல் (சதங்கை மணி முதலியவற்றால்) ஒலித்தல். ஆர் - பொருந்திய. பைங்கண் ஏறு - பசிய கண்களையுடைய விடை.

5. கூன் ஆர் திங்கள் - கூன்பொருந்திய திங்கள். திருஆரும் - சிறப்புப் பொருந்திய, சிற்றேமம். அந்த ஆடலுக்கு அம்பிகாஜத்ய நடனம் என்றுபெயர்.

மான்போன்ற விழியையுடையஅகிலாண்டேசுவரி யென்னும் அம்மையோடும் பொன்வைத்தநாதனெனப் பெயர்பூண்டு இங்குத் திருச்சிற்றேமத்திலெழுந்தருளிய இறைவனல்லவா? முன்பு சிவகாமசுந்தரியார் பாட நடனமாடிய கொள்கையன்என இப்பாடலுக்குப் பொருள்கூறுக.

பனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடப் பல்சடைக்
குனிவெண்டிங்கள் சூடியோ ராடன்மேய கொள்கையான்
தனிவெள்விடையன் புள்ளினத் தாமம்சூழ்சிற் றேமத்தான்
முனிவும் மூப்பும் நீக்கிய முக்கண்மூர்த்தியல்லனே. 6

இளருந்திங்கள் வாண்முக மாதர்பாடக் கேடிலா
வளருந்திங்கள் சூடியோ ராடன்மேய மாதவன்
தளிருங்கொம்பு மதுவுமார் தாமஞ்சூழ்சிற் றேமத்தான்
ஒளிரும்வெண்ணூன் மார்பனென் உள்ளத்துள்ளான் அல்லனே.

சூழ்ந்ததிங்கள் வாண்முக மாதர்பாடச் சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள் சூடியோ ராடன்மேய புண்ணியன்
தாழ்ந்தவயற்சிற் றேமத்தான் றடவரையைத்தன் ருளினல்
ஆழ்ந்தவரக்க னெல்கவன் றடர்த்தவண்ண லல்லனே. 8

தனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடத் தாழ்சடைத்
துணிவெண்டிங்கள் சூடியோ ராடன்மேய தொன்மையான்
அணிவண்ணச்சிற் றேமத்தா னலர்மேலந்த ணாளனும்
மணிவண்ணனுமுன் காண்கிலா மழுவாட்செல்வ னல்லனே.

6 மேய - மேவிய. தனி - ஒப்பற்ற. புள்ளினத்தாமம் - மாலை போற் பறக்கும் பறவைக்கூட்டம். முனிவும் மூப்பும் நீக்கிய முக்கண் மூர்த்தி. முனிவு - வெறுப்பு (விருப்பும், நீங்கிய "ஆசை முனிவு இகந் துயர்ந்த அற்புதமூர்த்தி" என்ருர் பிறரும்) மூப்பும், உபலக்கணத்தால், நரை, திரை, சாக்காடும்கொள்க.

7. வளரும் திங்கள் - தன்மை மாத்திரை கூறியது. வளராத திங்கள் ஆதலால் இளம் திங்கள் என்றபடி.

8. போழ்ந்த - போழ்ந்தாலனைய (திருக்கோவையார்) "குணந்தான் வெளிப்படக் கொவ்வைச் செவ்வாயிக் கொடியிடை" என்பதுபோல தாழ்ந்த பள்ளமான வயல், தாள் முயற்சியினல், "வாளுழந்ததன் தாள் வாழ்த்தி" என்பது மதுரைக் காஞ்சி. "தாளுளாள் தாமரையினுள்" என்பது திருக்குறள்.

9. தனி - ஒப்பற்ற தணி என்று பாடமாயின் - குளிர்ந்த என்று பொருள் கொள்ளலாம். துணி - துண்டம். துண்ட வெண்பிறை (நிறை

வெள்ளைத்திங்கள் வாண்முக மாதர்பாட வீழ்சடைப்
பிள்ளைத்திங்கள் சூடியோ ராடன்மேய பிஞ்ஞகன்
உள்ளத்தாற்சிற் றேமத்தா னுருவார்புத்த ரொப்பிலாக்
கள்ளத்தாரைத் தாணுக்கியுட் கரந்துவைத்தான் அல்லனே. 10

கல்லிலோத மல்குதண் கானல்சூழ்ந்த காழியான்
நல்லவாய வின்றமிழ் நவிலுஞான சம்பந்தன்
செல்வனூர்சிற் றேமத்தைப் பாடல்சீரார் நாவினால்
வல்லராகி வாழ்த்துவா ரல்லலின்றி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

மதியின் ஒரு துண்டம்) மணி - நீல ரத்தினம், "மழுவாட்செல்வர்" என்பர் அப்பர் சுவாமிகள்.

10. ஒப்பில்லாக் கள்ளத்தார் - என்றது சமணரை.

11. கல்லில் - கற்சுவரால் ஆகிய மதிலில். ஓதம் - கடல் அலைகள் மல்கும். தண்கானல் சூழ்ந்த - குளிர்ந்த கடற்கரைச் சோலை சூழ்ந்த, காழியான். சீர்காழி வரையின் கீழ்ப்பால் நெய்தல் நிலமும் ஏனைய மருத நிலமும் உள்ளமையின் சில பாசுரங்களில் நெய்தல் நிலமாகவும், சில வற்றில் மருதநிலமாகவும், சிலவற்றில் இவ்விரு நிலமாகவும் ஆளுடைய பிள்ளையார் அருளிச்செய்தனர். அவற்றில் திருக்கடைக்காப்பு நெய்தல் நிலவருணனை. கல் - கற்சுவருக்கு ஆகி அது மதிலைக் குறித்தலால் இரு மடியாகுபெயர். "கல்நடந்த மதிற் பிரமபுரத்துறையும் காவலனை" என்ற திருப்பாடலிலும் இக்கருத்துக் காண்க. கல் நடந்த என்ற சொல்லில் பிற வினை விகுதி குன்றியதாகி, எடுத்த என்று பொருள் கொள்ளுதல் முறை. இரண்டாவது திருமுறைக் குறிப்புரையின் (181-வது பக்கத்தில்) உள்ள இதன் உரையை நோக்குக. நடந்த என்றில்லை.

சீகாழியில்:



அக்கினிபுரீசுவரர் ஆலயம்.

சீகாழியில்



அலைபுனல் சூழ் பிரமபுரத்து அருமணியின் பெருங்கோயில்

# 43 சீகாழி

## 301 பதிகவரலாறு

பதிகவரலாறு இல்லாதவற்றுள் இதுவும் ஒன்று.

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

சந்த மார்முலை யாடன கூறனார்
வெந்த வெண்பொடி யாடிய மெய்யனார்
கந்த மார்பொழில் சூழ்தரு காழியுள்
எந்தை யாரடி யென்மனத் துள்ளவே. 1

மானி டம்முடை யார்வளர் செஞ்சடைத்
தேனி டங்கொளுங் கொன்றையந் தாரினார்
கானி டங்கொளுந் தண்வயற் காழியார்
ஊனி டங்கொண்டே னுச்சியி னிற்பரே. 2

மைகொள் கண்டத்தர் வான்மதிச் சென்னியர்
பைகொள் வாளர வாட்டும் படிறனார்
கைகொண் மான்மறி யார்கடற் காழியுள்
ஐய னந்தணர் போற்ற இருக்குமே. 3

1. முலையாள் தனகூறனார்; தன - தன்னதாகிய. இது குறிப்புப் பெயரெச்சம். கந்தம் - நறுமணம். ஈற்றடி, திருக்காளத்தி - முதற்பாட்டின் (பதிகம் 294-1) ஈற்றடியிலும் சிறிது மாறி வருகிறது.

2. வரம்புகளில் மலர்ந்த தாமரை முதலிய மலர்களின் மணம் பரவுவதால் கானிடம் கொளும் தண்வயல் காழி என்றார். கான் - வாசனை. மானிடங்கொண்டு - மானை இடப்பக்கத்தில் ஏந்தி. ஊன் - உடம்பு. இடங்கொண்டு என்பது:- "எந்தையே ஈசா உடலிடங்கொண்டாய்" என்ற திருவாசகத்திலும் காண்க.

3. பை - படம், அரவு ஆட்டும், படிறனார்: வஞ்சகர், அரவு ஆட்டும். மான்மறி - மான்கன்று. மை - கருமைநிறம், கண்டத்தர்

புற்றி னாகமும் பூளையும் வன்னியுங்
கற்றை வார்சடை வைத்தவர் காழியுட்
பொற்றொடியோ டிருந்தவர் பொற்கழல்
உற்ற போதுட னேத்தி யுணருமே. 4

நலியுங் குற்றமு நம்முட னோய்வினை
மெலியு மாறது வேண்டுதி ரேல்வெய்ய
கலிக டிந்தகை யார்கடற் காழியுள்
அலைகொள் செஞ்சடை யாரடி போற்றுமே. 5

சென்னியர், படிறனூர், மான்மறியார். குறிப்பு:- இன்னதெனத் தோற்று மையால் படிறனூர் என்றார். அதன் கருத்து இத்திருமுறை பதிகம் 107 10-ம் பாட்டில் காண்க. தலைவனாய் முனிவர் போற்ற இருப்பர் என முடிக்க. ஒருமை பன்மை மயக்கம்.

4. பாம்பும், பூளைப்பூவும், வன்னிப்பத்திரமும் சடையில், வைத் தவர் - அணிந்தவர், வைத்தல் - அணிதல்: "மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்" என்று திருப்புகழிலும் வருகிறது. உற்றபோது - அமயம் நேர்ந்தபோது, உடனே (தாமதியாது). ஏத்தி - துதித்து. உணரும் - தியானித்திருங்கள். உணரும் - ஏவற்பன்மை.

5. நலியும் - மது மனத்தைப்பற்றி வருத்துகின்ற, குற்றமும் கயலை களும் நம் உடல் (நலியும்)· நோய்வினை - நம் உடலைப்பற்றி வருத்துகின்ற பிணிகளாகிய தீவினைகளும். மெலியும் - மெலிந்தொழியும். ஆறு அது - அந்தவழியை வேண்டுதிரேல், வெய்யகலி கடிந்த கையார் - கையாற் செய்யும் வேள்வி முதலியவற்றால் உலகில் துன்பம் வராது ஓட்டிய அந்தணர்கள்வாழும், கடற்காழி என்றது. "கற்றாங்கு எரியோம்பிக்கலியை வாராமே செற்றார் வாழ்தில்லை" என்ற பாடலின் கருத்து. "சமன் செய்து சீர்தூக்குங்கோல் போல் 'அமைந்தொருபாற் கோடாமை" என்ற திருக் குறளிற்போல உடல் என்பதற்கேற்ப முதற்கண் உளம் என்றும், நோய் என்பதற்கேற்பக் கவலை என்றும் தந்துரைத்து நலியும் என்பதனைப் பின்னும் கூட்டப்பட்டது. அலை - கங்கையைக் குறித்தது சினையாகு பெயர்.

பெண்ணொ ரூறினர் பேயுட ஞடுவர்
பண்ணு மேத்திசை பாடிய வேடத்தர்
கண்ணு மூன்றுடை யார்கடற் காழியுள்
அண்ண லாய வடிகள் சரிதையே. 6

பற்று மானு மழுவு மழகுற
முற்று மூர்திரிந் துபலி முன்னுவர்
கற்ற மாநன் மறையவர் காழியுட்
பெற்ற மேற துகந்தார் பெருமையே. 7

எடுத்த வல்லரக் கன்முடி தோளிற
அடர்த்து கந்தருள் செய்தவர் காழியுட்
கொடித்த யங்குநற் கோயிலு ளின்புற
இடத்து மாதொடு தாமு மிருப்பரே. 8

காலன் தன்னுயிர் வீட்டு கழலடி
மாலு நான்முகன் ருனும் வனப்புற
ஓல மிட்டுமுன் றேடி யுணர்கிலாச்
சீலங் கொண்டவ னூர்திகழ் காழியே 9

6. ஏத்து - உலகத்தார் போற்றத்தக்க இசையும் ஏழிசையும், பண்ணும் - உருக் (சாகித்தியம்) களையும், பாடிய வேடத்தார். சரிதை - இங்குப்புரம் என்ற பொருளில் வந்த, இவை அண்ணலாகிய அடிகள் புகழ்களேயாகும்.

7. ஊர் முற்றும் திரிந்து பலி ஏற்பதற்கு முற்படுவர் என்பது இரண் டாம் அடியின் பொருள். மூன்றும் அடியில் கற்ற மா நல்(ல) மறை யவர் எனக்கொள்க. கற்ற என்பதனுல் நூலறிவாகிய அபர ஞானமும் நல் என்றதனுற் பரஞானமும் குறித்தபடி. பெற்றம் ஏறு - பசுவின் ஆண். சிங்க ஏறு என்ருற் போல பெருமையே - பெருமை இத்தகையது ஆகும் என்பது.

8. கொடி - பதாகைகள். தயங்கும் - விளங்குகின்ற. இடத்து - இடப்பாகத்திலுள்ள மாது.

9. ''மேலும் அறிந்ததில் நான்முகன் மேற்சென்று கீழிடந்து மாலும் அறிந்திலன் ...... காலன் அறிந்தான் அறிதற் கரியான் கழலடியே'' என்ற

உருவ நீத்தவர் தாமு முறுதுவர்
தருவ லாடையி ஞருந் தகவிலர்
கருமம் வேண்டுதி ரேற்கடற் காழியுள்
ஒருவன் சேவடி யேஅடைந் துய்ம்மினே. 10

கானல் வந்துல வுங்கடற் காழியுள்
ஈன மில்லி யிணையடி யேத்திடும்
ஞான சம்பந்தன் சொல்லிய நற்றமிழ்
மான மாக்கும் மகிழ்ந்துரை செய்யவே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. ஒருவன் - சிவனுக்கு ஒரு பெரு பெயர். "ஒருவனென்னும் ஒருவன் காண்க" என்பது திருவாசகம்.

11. ஈனம் இல் - சிவபெருமான் காரணப்பெயர். மானம் - பெருமை. அது வீடு பேற்றைக் குறிக்கும். "உரைத்த நாற்பயனுட்பெரும் பயன் ஆயது ஒள்ளிய வீடு, அது உறலால் தரைத்தலைப் பேரூர் என்மர்கள் சிலர்" என்பது பேரூர்ப்புராணம்.

---

வெங்கதிரோன் தேர்விலங்கு மிக்குயர்ந்தமேருப்போன்(று)
அங்கனகத் திஞ்சி அணிபெற்றுப்—பொங்கொளிசேர்
மாளிகையும் மன்னியசீர் மண்டபமும் ஒண்தலத்த
சூளிகையுந் துற்றெழுந்த தெற்றிகளும்—வாளொளிய
நாடக சாலையும் நன்பொற் கபோதகஞ்சேர்
பீடமைத்த மாடத்தின் பெற்றியுங்—கேடில்
உருவு பெறவகுத்த அம்பலமும் ஓங்கு
தெருவு வகுத்தசெய் குன்றும்—மருவினிய
சித்திரக் காவுஞ் செழும்பொழிலும் வாவிகளும்
நித்திலஞ்சேர் நீடும் நிலைக்களமும்—எத்திசையும்

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 44 திருக்கழிப்பாலை

## 302 பதிகவரலாறு

சண்பை ஆண்டகையார், திருவேட்களத்தில் தங்கியிருந்து ஐயன் திருக்கூத்துக் கும்பிட அணைவுறும் நாள்களுள், திருக்கழிப் பாலையுள் செம்மாலை வேணித் திருவுச்சிமேவி உறை அம்மானை அணைந்துபாடிய மெய்ம்மாலைச் சொற்பதிகம் இது.

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வெந்த குங்கி லியப்புகை விம்மவே
கந்த நின்றுல வுங்கழிப் பாலையார்
அந்த மும்மள வும்மறி யாததோர்
சந்த மாலவர் மேவிய சாந்தமே. 1

வானி லங்க விளங்கு மிளம்பிறை
தான லங்க லுகந்த தலைவனார்
கானிலங்க வருங்கழிப் பாலையார்
மான லம்மட நோக்குடை யாளொடே. 2

1. விம்ம - மிக. அந்தமும் அளவும் எனவே, ஏனைய ஆக்கமும் கொள்ளப்படும். "ஆக்கம் அளவு இறுதியில்லாய்" என்பது திருவாசகம். ஆக்கம் - பிறப்பு. அந்தம் - இறப்பு. அறியாத - அறியப்படாத; செயப்படு பொருளுணர்த்தும் படு விகுதி குன்றியது, அறியப்படாத என்று கூறினு ரேனும் இல்லாத என்பது பொருள். சந்தம் - தன்மை. அது திருக்கோவை யாரில் "அடிச்சந்தம்" என வருவதாற் காண்க. அவர் மேவிய சாந்தம் - அவர் மேவிய சாந்தநிலையும் அத்தகையதே (அறியப்படாததே). என்பது குறிப்பெச்சம். ஆல் - அசை.

2. வான் இலங்க - வானம் பிரகாசிக்க விளங்கும் இளம் பிறையை. அலங்கல் உகந்த - மாலையாக விரும்பிய. (தலைவனார்) கான் - (சோலை முதலியவற்றின்) நறுமணம். இலங்க - மிக. வரும் - பரவி வருகின்ற. (கழிப்பாலையார்) மான் - மானின். நலம்பட - அழகு பொருந்த. நோக்கு - நோக்குதலையுடையவளாகிய; அம்பிகையோடும் திருக்கழிப்பாலையுள் எழுந்தருளியுள்ளார் என்க. தலைவனார் - எழுவாய். கழிப்பாலையர் - பயனிலை.

கொடிகொ ளேற்றினர் கூற்றை யுதைத்தனர்
பொடிகொண் மார்பினிற் பூண்டதொ ராமையர்
கடிகொள் பூம்பொழில் சூழ்கழிப் பாலையுள்
அடிகள் செய்வன வார்க்கறி வொண்ணுமே. 3

பண்ண லம்பட வண்டறை கொன்றையின்
தண்ண லங்க லுகந்த தலைவனார்
கண்ண லங் கவருங்கழிப் பாலையுள்
அண்ண லெங்கட வுள்ளவன் அல்லனே. 4

ஏரி னாருல கத்திமை யோரொடும்
பாரி னாருட னேபர வப்படுங்
காரி னார்பொழில் சூழ்கழிப் பாலையெம்
சீரி னார்கழலே சிந்தை செய்ம்மினே. 5

துள்ளு மான்மறி யங்கையி லேந்தியூர்
கொள்வ னாரிடு வெண்டலை யிற்பலி
கள்வனா ருறை யுங்கழிப் பாலையை
உள்ளு வார்வினை யாயின வோயுமே. 6

3. கொடியின் கண் கொண்ட இடபத்தையுடையவர் - இடபக் கொடியை உடையவர். ஆமை; ஆமையோட்டைக் குறிப்பதால் முதலாகு பெயர். கடி - நறுமணம்.

4. பண் - இசையின். நலம் - இனிமை. பட - பொருந்த. வண்டு, அறை - பாடுகின்ற.(கொன்றை). அலங்கல் உகந்த - மாலையை விரும்பிய, தலைவனார். நலம் கண்கவரும் கழிப்பாலை - எனமாற்றி; கண்ணைக் கவரும் பொலிவை உடைய கழிப்பாலையென்க. நலம் - பொலிவு.

5. ஏரின்ஆர் - அழகால் மிகுந்த. உலகத்து - விண்ணுலகத்திலுள்ள. இமையோரோடும் - தேவர்களுடனே; மண்ணுலகத்திலுள்ள யாவரும் கலந்து துதிக்கின்ற. காரின் - மேகத்தினால். ஆர் - படியப்பட்ட. சோலை ஆர் என்பதில் செயப்பாட்டு வினைவிகுதி குன்றியது. சீரினார் - சிறப்பை உடையவர்.

6. இடுபலி வெண்டலையிற் கொள்வனார் எனக்கூட்டி இடும் பிச்சையை வெண்தலை யோட்டிற் கொள்பவர் என்க.

மண்ணி ஞார்மலி செல்வமும் வானமும்
எண்ணி நீரினி தேத்துமின் பாகமும்
பெண்ணி ஞர்பிறை நெற்றியொ டுற்றமுக்
கண்ணி ஞருறை யுங்கழிப் பாலையே. 7

இலங்கை மன்னனை யீரைந் திரட்டிதோள்
துலங்க வூன்றிய தூமழு வாளிஞர்
கலங்கள் வந்துல வுங்கழிப் பாலையை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 8

ஆட்சி யாலல ராளெடு மாலுமாய்த்
தாட்சி யாலறி யாது தளர்ந்தனர்
காட்சி யாலறி யான்கழிப் பாலையை
மாட்சி யாற்றெழு வார்வினை மாயுமே. 9

7. மண்ணின் - பூமியில். ஆர் பொருந்திய. மலி - மிக்க. செல்வமும் வானமும் - வானத்திற் பொருந்திய மிக்க செல்வமும். எண்ணி (அழியாத இன்பம் தரா என்பதையும்) தெளிந்து. இனிது - நன்கு (ஏத்துமின்) கழிப் பாலை - கழிப்பாலையைத் துதியுங்கள். பேரின்பத்தைத் தரத்தக்கவன் சிவனே என்பதையும். பிறைநெற்றியோடு உற்ற-நெற்றியினருகே (சடா பாரத்தில்) பிறைமதி பொருந்திய.

8. துலங்க - துளங்க (நடுங்க) போலி. ல, ள, ஒற்றுமை. கலங்கள் வந்துலவும் கழிப்பாலை என்றதனுல் அது ஒரு துறைமுகப் பட்டினமாய் இருக்கவேண்டும்.

9. ஆட்சியால் - படைத்தலும் காத்தலுமாகிய தொழிலை ஆளு கிரேம் என்னும் செருக்கினுல், ஆட்சி என்ற சொல் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. தாழ்ச்சியால் - அது தங்கள் மாட்டின்மையாகிய குறைவால்; அறியாது தளர்ந்தனர். தாட்சி - தாழ்ச்சியென்பதன் மரூஉ. அல்லது வீரசோழிய விதிப்படி எனினும் ஆம். அன்றி தாள்+சி=முயற்சி யின் தன்மையெனினும் ஆம்; ஆயின் சி என்பது பண்புப்பெயர் விகுதி யென்க. காட்சியால் - நூலறிவாலும் ஆன்மஅறிவாலும் அறியப்படாதவன். மாட்சி - மாணுதல். சி. தொழிற்பெயர் விகுதி. மாட்சியால் தற்போதம் அற்று தொழுவார் வினைமாயும்.

செய்ய நுண்டுவ ராடையி னுரொடு
மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்
கையர் கேண்மை யெனேகழிப் பாலையெம்
ஐயன் சேவடியே யடைந் துய்ம்மினே. 10

அந்தண் காழி யருமறை ஞானசம்
டந்தன் பாய்புனல் சூழ்கழிப் பாலையைச்
சிந்தையாற் சொன்ன செந்தமிழ் வல்லவர்
முந்தி வானுல காடன் முறைமையே. 11

திருச்சிற்றம்பலம்

10. செய்ய - சிவந்த. நுண் - மெல்லிய. துவர் ஆடையினர் - காவி உடையை உடைய பௌத்தர் (மெய்யில் நீராடாமையால்) உடம்பில் அழுக்கு மிகுந்த. வீறு இலா - பெருமையில்லாத. கையர் - வஞ்சகராகிய சமணர். வீறு - பெருமை. கையர் - வஞ்சகர்.

11. அம் - அழகு. தண் - குளிர்ச்சி. சிந்தை - சிவனடிக்கு இடமாக்கிய கருத்து, முந்தி - ஏனைய தவிர்த்தோர்க்கும் முன்னரே. உலகு+ஆள்தல்=உலகாடல்- உலகை ஆளுதல்.

துன்னி எழில்சிறப்பச் சோதி மலர்மடந்தை
மன்னி மகிழ்ந்துறையும் வாய்மைத்தாய்ப்—பொன்னும்
மரகதமும் நித்திலமும் மாமணியும்பேணி
இரவலர்கட் கெப்போதும் ஈந்துங்—கரவாது
கற்பகமுங் காருமெனக் கற்றவர்க்கும் நற்றவர்க்குந்
தப்பாக் கொடைவளர்க்குஞ் சாயாத—செப்பத்தாற்
பொய்ம்மை கடிந்து புகழ்புரிந்து பூதலத்து
மெய்ம்மை தலைசிறந்து மேதக்கும்—உண்மை
மறைபயில்வார் மன்னு வியாகரணக் கேள்வித்
துறைபயில்வார் தொன்னூல் பயில்வார்—முறைமையால்

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 45 திருவாரூர்

## 303 பதிகவரலாறு

திருவாரூர் அரசளிப்பவர் அருளினால் அடியவர் குழுவும் பரிசனங்களும் புறத்து அணைந்து எதிர்கொள்ளும்பொழுது, மெய்த்தொண்டர் குழாத்தின் எதிர்வணங்கி, முத்தமிழ் விரகர் இத்தமிழ்ப் பாடியருளினார்.

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

அந்த மாயுல காதியு மாயினான்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்றிரு வாரூரெம்
எந்தை தானெனை யேன்றுகொ ளுங்கொலோ. 1

கருத்தனே கரு தார்புர மூன்றெய்த
ஒருத்தனே யுமை யாளொரு கூறனே
திருத்தனே திரு வாரூரெந் தீவண்ண
அருத்த வென்னெனை யஞ்ச லென்னாததே. 2

1. உலகின் முடிவும் முதலும் ஆகியவன் என்பது உலகின் தோற்ற ஒடுக்கங்கட்கு நிமித்தகாரணனாய் உள்ளவன். எம் எந்தை - எங்கள் அனைவருக்கும் உரிய என் தந்தை. எம் என்றது பலதிறத்தினராகிய அடியவரை. அது "உருத்திர பல் கணத்தார்" "பல்லடியார்" என்பனவற்றால் அறிக.

2. கருத்தனே - கருத்திலிருப்பவனே. "வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை" எனத் திருத்தாண்டகத்திலும் வருகிறது. திருத்தம் - தீர்த்தம்; தூய்மை. "திருத்தமாய் பொய்கை" என்புழியுங் காண்க. திருத்தன் - தூயவன். இனித்திருத்த சொருபமானவன் என்றலும்

என் -

மறையன் மாமுனி வன்மரு வார்புரம்
இறையின் மாத்திரை யில்லெரி யூட்டினன்
சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூரெம்
இறைவன் றனெனை யேன்றுகொ ளுங்கொலோ. 3

பல்லி லோடுகை யேந்திப் பலிதிரிந்
தெல்லி வந்திடு காட்டெரி யாடுவான்
செல்வ மல்கிய தென்றிரு வாரூரான்
அல்ல றீர்த்தெனை யஞ்சலெ னுங்கொலோ. 4

குருந்த மேறிக் கொடிவிடு மாதவி
விரிந்த லர்ந்த விரைகமழ் தேன்கொன்றை
திருந்து மாடங்கள் சூழ்திரு வாரூரான்
வருந்தும் போதெனை வாடலெ னுங்கொலோ. 5

வார்கொண் மென்முலை யாளொரு பாகமா
ஊர்க ளாரிடு பிச்சைகொ ளுத்தமன்
சீர்கொண் மாடங்கள் சூழ்திரு வாரூரான்
ஆர்கணு வெனை யஞ்ச லெனுதே. 6

3. இறையில் - சிறு தீப்பொறியால். மாத்திரையில் - ஒரு நொடிப் போதில். இறை-சிறியது, தீப்பொறிக்கு அளவையாகுபெயர். இறையில்; இல் - வேற்றுமை உருபுமயக்கம். முனிவன், மருவார்புரம் - பகை வரது புரங்கள் (எரி ஊட்டினன்).

4. பல் இல் ஓடு - பல் இல்லாத மண்டையோடு.

5. வாடல் - வாடாதே, வாடற்க, 'மகனெனல்' என்ற திருக்குறளிற் போல, அல் ஈறு, எதிர்மறை வியங்கோள் குறித்தது. இப்பாசுரத்தின் முதலீரடிகளால் மாடங்களின் அருகே பூந்தோட்டங்கள் இருந்தமை புலப்படுகிறது.

6. ஊர்களார் - ஊர்களிலுள்ளவர். சீர் - செல்வ வளம் (இலட்சுமி கரம்). ஆர்கண்ஆக - யான்பற்றுக்கோடு உடையேன் எனக்கருதி, கண்-(சரண்புகும்) இடம். ஊர்களார் என்பதை ஊரார்கள் என்று வழங்கு வதோடு ஒத்திட்டுணர்க.

வளைக்கை மங்கைநல் லாளையோர் பாகமாத்
துளைக்கை யானை துயர்படப் போர்த்தவன்
திளைக்குந் தண்புனல் சூழ்திரு வாரூரான்
இளைக்கும் போதெனை யேன்றுகொ ளுங்கொலோ 7

இலங்கை மன்ன னிருபது தோளிறக்
கலங்கக் கால்விர லாற்கடைக் கண்டவன்
வலங்கொள் மாமதில் சூழ்திரு வாரூரான்
அலங்கல் தந்தெனை யஞ்சலெ னுங்கொலோ. 8

நெடிய மாலும் பிரமனு நேர்கிலாப்
படிய வன்பனி மாமதிச் சென்னியான்
செடிக ணீக்கிய தென்றிரு வாரூரெம்
அடிக டானெனை யஞ்சலெ னுங்கொலோ. 9

மாசு மெய்யினர் வண்டுவ ராடைகொள்
காசை போர்க்குங் கலதிகள் சொற்கொளேல்
தேச மல்கிய தென்றிரு வாரூரெம்
ஈசன் றனெனை யேன்றுகொ ளுங்கொலோ. 10

வன்னி கொன்றை மதியொடு கூவிளம்
சென்னி வைத்த பிரான்றிரு வாரூரை
மன்னு காழியுண் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

7. யானைதுயர்படப் போர்த்தவன் - யானை துயர்பட உரித்து என ஒரு சொல் வருவித்துரைக்க. திளைக்கும் – நீராடுதற்குரிய.

8. தோளிறவும். அவன் கலங்கவும். கடை - அவனது (வலிமை யின்) முடிவை. அலங்கல் - மாலை.

9. நேர்கிலா - சிந்திக்க மாட்டாத. கில் - ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல். படியவன் - தன்மையன், வடிவினன் எனலும் ஆம். செடிகள் - தீமைகள், பாவங்கள்.

10. துவர் ஆடை மேற்கொள்ளும் - கரிய போர்வையைப் போர்க் கும். காசை - மரப்பூ; ஆகுபெயர். காசை மரத்தின் கரிய பூ. காசை மலர் போல்மிடற்றார். தேசம் - ஒளி.

11. ஒடு எண்ணுப் பொருளது. சென்னி - தலைமீது. வாய் - திருவாயினால். பன்னு - சொல்லிய, வல்லார்க்குப் பாவம் இல்லை.

# 46 திருக்கருகாவூர்

## 304 பதிகவரலாறு

சந்தமறைதந்த சம்பந்தர், மாதவிப் பந்தர் மணங்கமழும் திருக்கருகா ஊரில் அந்தமில்லாச் சுந்தரக் கடவுள் வண்ணத்தைச் சிந்தை இன்புறப் பாடியது இச்செந்தமிழ்ப் பதிகம்.

**பண் - கௌசிகம்**

திருச்சிற்றம்பலம்

முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே
மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்தகட வுள்கரு காவூரெம்
அத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 1

விமுத வல்லசடை யான்வினை யுள்குவார்க்
கமுத நீழலக லாததோர் செல்வமாம்
கமுத முல்லை கமழ்கின்ற கருகாவூர்
அமுதர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 2

1. முத்துஇலங்கும் - முத்தைப்போல் விளங்குகின்ற. அழலும் அழல் - கடும் நெருப்பு. வண்ணம் - நிறம். தன்மையுமாம்; செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடைமேல் வைத்த தீ வண்ணனே.

2. விமுதம் - விஸ்மிதம் என்னும் வடசொல்லின் திரிபு. கங்கையை அடக்கிய ஆச்சரியம். விமுதவல்ல சடையான் வினை - சிவபெருமானுக்கு அடியவர் செய்யும் திருத்தொண்டுகள். உள்குவார்க்கு - நினைக்கின்ற தொண்டர்களுக்கு. அமுதநீழல் - அமிர்தம் போல இன்பம் விளைக்கும் திருவடிநீழல். அகலாததோர் செல்வம் - அழியாத செல்வம்; "சென்றடையாத திரு." கம் - மணம். வெண்மை, முதம் - உவகை. கமுதமுல்லை:- வெண்மையும், மணமும், உவகை செய்வதும் முல்லைக்கும் உள்ளன.

பழக வல்லசிறுத் தொண்டர்பா வின்னிசைக்
குழக ரென்றுகுழை யாவழை யாவரும்
கழல்கொள் பாட லுடையார் கருகாவூரெம்
அழகர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 3

பொடிமெய் பூசிமலர் கொய்து புணர்ந்துடன்
செடிய ரல்லாவுள்ளம் நல்கிய செல்வத்தர்
கடிகொள் முல்லை கமழுங் கருகாவூரெம்
அடிகள் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 4

மைய லின்றிமலர் கொய்துவ ணங்கிடச்
செய்ய வுள்ளம்மிக நல்கிய செல்வத்தர்
கைதன் முல்லை கமழுங் கருகாவூரெம்
ஐயர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 5

மாசில் தொண்டர்மலர் கொண்டு வணங்கிட
ஆசை யாரவரு ணல்கிய செல்வத்தர்
காய்சி னத்த விடையார் கருகாவூரெம்
ஈசர் வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. 6

3. இதிலுள்ளதொரு வரலாறு விளங்கவில்லை. குழையா-குழைந்து. அழையா - அழைத்து. உள்ளம் குழைந்து அழைத்துவருபர். கழல் கொள் பாடல் - கழலணிந்த திருவடியையே பொருளாகக் கொண்ட பாக்கள்.

4. உள்ளம் நல்கிய செல்வத்தர் - திருநீற்றுப்பூச்சும் மலர் பறித்து வழிபடும் பூசையும் புரிதற்குத்தக்க உள்ளம் அருளிய திருவருட் செல்வம் உடையவர்.

5. செய்ய - செவ்விதாகிய. கைதல் - தாழை.

6. ஆசை ஆர - ஆசை நிரம்ப. அருள் நல்கிய செல்வத்தர், ஆசை தீரக் கொடுப்பர், என்பதும் காண்க.

வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
சிந்தை நின்றருள் நல்கிய செல்வத்தன்
கந்த மௌவல் கமழுங் கருகாவூரெம்
எந்தை வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. 7

8

பண்ணி னேர்மொழி யாளையோர் பாகனூர்
மண்ணு கோலம்முடை யம்மல ரானொடும்
கண்ண னேடவரி யார்கரு காவூரெம்
அண்ணல் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 9

போர்த்த மெய்யினர் போதுழல் வார்கள்சொல்
தீர்த்த மென்றுதெளி வீர்தெளி யேன்மின்
கார்த்தண் முல்லை கமழுங் கருகாவூரெம்
ஆத்தர் வண்ணம் மழலும்மழல் வண்ணமே. 10

கலவ மஞ்ஞை யுலவுங் கருகாவூர்
நிலவு பாட லுடையான்றன் நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலவ லாரவர் தொல்வினை தீருமே. 11

திருச்சிற்றம்பலம்

7. கந்தம் - மணம். மௌவல் - முல்லை. எம் எந்தை - முன் உரைத்தமை கொள்க.

8.

9. மண்ணு - அலங்கரிக்கப்பட்ட, கோலம். கண்ணன் - திருமால்; கரிய நிறமுடையவன். கண்ணனாக அவதரித்தவன் எனலும் ஒன்று. நேட - தேட.

10. போர்த்த மெய்யினர் - சீவரவுடையால் மறைத்த உடம்பினர். போது உழல்வார்கள் - பொழுதெல்லாம் அலைபவர்கள். கார்த்தண் முல்லை - கார்காலத்தில் மலரும் தண்ணிய முல்லைப்பூ. ஆத்தர் - ஆப்தர்.

11. கலவம் - கலாபம்; தோகை. நிலவு - விளங்குகின்ற; கழல் குலவும் - திருவடிகளில் குலாவும்.

# 47 திருவாலவாய்

## 305 பதிகவரலாறு

எண் இல்லாத பாக்கியப் பயனுய் உள்ள பாலருவாயர், பாவகாரிகளான அமணரை நோக்குந் தீங்கு உடனே நீங்கவும் அவரை வெல்லவும் திருவருட் குறிப்பை அறிய அவாவினுர். திருவாலவாயுள் புகுந்தார். 'தீயாரைக் காண்பதுவும் தீதே' என்னும் விலக்கிற்குமாருக, விதியிலாரை நோக்கி, யான் வாதுசெய்யத் 'திருவுள்ளமே' என்று பாடிய வண்டமிழ் மாலே இத்திருப்பதிகம்.

பண் – கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

காட்டு மாவதுரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனுன்
வேட்டு வேள்விசெய்யா அமண் கையரை
ஓட்டி வாது செயத்திரு வுள்ளமே. 1

மத்த யானேயின் ஈருரி மூடிய
அத்த னேயணி ஆலவா யாய்பணி
பொய்த்த வன்தவ வேடத்த ராஞ்சமண்
சித்த ரையழிக் கத்திரு வுள்ளமே. 2

---

1. காட்டுமா - காட்டிலுள்ள யானே. உரி - உரிவை; தோல். உடல் போர்த்து - உடலிற் போர்த்து. நாட்டம் - கண், நாட்டம் மூன்றுடையாய் என்றது; ஏனேயர்போல இருகண் அன்றி, மேலும் ஒரு கண் (நெற்றிக்கண்) தீயோரை அழித்தற்கெனக் கொண்டருளினுய். இது பொழுதும் அச்செயல் செயவேண்டும் என்ற குறிப்பு. வன்ரெண்டப் பெருந்தகையும் வேறு திருவுளம்பற்றியருளற் குறிப்போடு "மூன்று கண்ணுடையாய் அடியேன் கண் கொள்வதே" என்றமையும் காண்க. உரை செய்வன் - நான் விண்ணப்பம் செய்துகொள்வேன். அது திருக்கடைக் காப்பில் கேட்ட 'ஞானசம்பந்தன்' என்றமையாலும் அறியப்படுகிறது. ஓட்டி வாதுசெய் - வாதுசெய ஓட்டி என விகுதி மாற்றிக் கூட்டுக.

2. மத்தம் - மயக்கம், மதங்கொண்டமையாலுண்டாவது. ஈர் - உரிக்கப்பட்ட. மூடிய திருவுள்ளமே, பணி சொல்லி யருள்வீராக. பொய்த்தவன் தவவேடத்தர் - பொய்யாகிய வலிய தவவேடத்தையுடையவர்

மண்ண கத்திலும் வானிலு மெங்குமாம்
திண்ண கத்திரு வாலவா யாயருள்
பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர் கற்பழிக் கத்திரு வுள்ளமே. 3

ஓதி யோத்தறி யாவம ணாதரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
ஆதி யேதிரு வாலவா யண்ணலே
நீதி யாக நினைந்தருள் செய்திடே. 4

வைய மார்புக ழாயடி யார்தொழும்
செய்கை யார்திரு வாலவா யாய்செப்பாய்
கையி லுண்டுழ லுமமண் கையரைப்
பைய வாது செயத்திரு வுள்ளமே, 5

சித்தர் - மேல் பாசுர உரையால் அறிக. 'நிற்பதுபோல் நிலையிலா நெஞ்சு' என்பது மூன்றும் அடியிற் குறித்த பொருள். அதனை "இனம் போன்று இனமல்லார் கேண்மை" எனவரும் திருக்குறளால் அறிக.

3. எங்கும் ஆம் - எங்குமாய் நிறைந்து, திருவாலவாயினில் வெளிப் பட்டருளிய பெருமானே என்பது முதலிரண்டடியின் கருத்து. அருள் - சொல்லி யருள்வீராக. எழில் இகழ்ச்சிக் குறிப்பு. திண்ணகத் திருவால வாய் - பகைவரால் அழிக்கமுடியாத வலிய அரண்களையுடைய திருவால வாய். தெண்ணர்-திண்ணர் என்பதன் மரூஉ. குண்டர் முதலிய பிற பெயர் களைப்போல்வது இது. சாங்கியப்பேய் அமண் - சாக்கியரோடு கூடிய பேய்போன்ற சமணர். கற்பு-கல்வி நிலை; அல்லது கல்போன்ற உறுதிப்பாடு. பெண்ணகத்துக்குச் சாக்கியர் கற்பு என்ற சொல்லமைப்பை நோக்குக. நாங்கள் பகைகளை ஒழிக்க எண்ணுவதுபோல அவர்களும் எண்ண லாமோ எனின், தானவிசேடத்தால் சைவத்துக்கு வாழ்வும் புறச் சமயத் துக்கு வீழ்வும் அளிக்கவல்ல தலம் என்பார்; 'திண்ணகத் திருவாலவாய்' என்றார். இடவிசேடம் இத்துணைத்து என்பதை "முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய, புறஞ்சிறைவாரணம் புக்கனர் புரந்து" எனவரும் சிலப்பதிகாரத்தால் அறிக.

4. ஓதி - அறிவு, ஞானம். ஓத்து - வேதம், ஞானம் தரக்கூடிய வேதம். நீதியாக-நடுநிலையுடன், நினைந்து அருள்செய்திடு. திருவுள்ளமே - திருவுள்ளமோ? ஏகாரம் வினாப்பொருட்டு.

5. வையம் ஆர் - உலகமெங்கும் (பரவிய). புகழாய் - புகழை யுடையவனே. பைய - அவசரமின்றி.

நாறு சேர்வயற் றண்டலை மிண்டிய
தேற லார்திரு வாலவா யாய்செப்பாய்
வீறி லாத்தவ மோட்டமண் வேடரைச்
சீறி வாதுசெ யத்திரு உள்ளமே. 6

பண்ட டித்தவத் தார்பயில் வாற்றெழும்
தொண்ட ருக்கெளி யாய்திரு வாலவாய்
அண்ட னேயமண் கையரை வாதினில்
செண்ட டித்துள றத்திரு வுள்ளமே. 7

அரக்கன் தான்கிரி யேற்றவன் றன்முடிச்
செருக்கி னைத்தவிர்த் தாய்திரு வாலவாய்
பரக்கு மாண்புடை யாயமண் பாவரைக்
கரக்க வாதுசெ யத்திரு வுள்ளமே. 8

6. நாறு - நாற்றுக்கள். சேர் - பொருந்திய (வயல்) நாறு(தல்) - கமழ்தல். தண்டலை - சோலை. மண்டிய தேறல் ஆர் - பெருக்கெடுக்கும் தேன் நிறைந்த வயல்களிற் கரையோரம் உள்ள தாமரை முதலிய மலர்களாலும், சோலைகளில் உள்ள கொன்றை முதலிய மலர்களாலும் தேன் பெருக்கெடுக்கின்றது என்பதாம். வீறு - பெருமை. மோட்டு - முரட்டுத்தன்மை யுடையவர்கள். வேடர் கொலைத் தொழிலில் அனுபவ முடையவர்.

7. பண்டு - தொன்று தொட்டு. அடித்தவம் - அடிப்பட்ட தவம் 'பழவடியார்' திருப்பல்லாண்டு. அண்டன் - தேவன். செண்டு அடித்து. வளைத்து அடித்து.

8. கிரியேற்றவனுகிய அரக்கன் என்க. முடிச்செருக்கு - பத்துத் தலை உடையேன் என்னுஞ் செருக்கு. பரக்கும் - எல்லா உலகினும் பரவிய. மாண்பு - பெருமை. பாவரை - பாவியரை; வாதுசெய்யுமிடம். கரக்க - ஒளிக்க. ஒழியும் வண்ணம், இது இடைப் பிறவரல்.

மாலும் நான்முக னும்மறி யாநெறி
ஆல வாயுறை யும்மண்ண லேபணி
மேலை வீடுண ராவெற்ற ரையரைச்
சால வாதுசெ யத்திரு வுள்ளமே. 9

கழிக்க ரைப்படு மீன்கவர் வாரமண்
அழிப்ப ரையழிக் கத்திரு வுள்ளமே
தெழிக்கும் பூம்புனல் சூழ்திரு வாலவாய்
மழுப்ப டையுடை மைந்தனே நல்கிடே. 10

செந்தெ னுமுர லுந்திரு வாலவாய்
மைந்த னேயென்று வல்லம ணாசறச்
சந்த மார்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்
பந்தன் சொற்பக ரும்பழி நீங்கவே. 11

திருச்சிற்றம்பலம்

9. சால - முற்றிலும். வாது செயத் திருவுள்ளமே பணிப்பீராயின் என்பது கருத்து.

10. மீன் கவர்வார் புத்தர். அழிப்பவர் - நன்மார்க்கங்களையெல்லாம் அழிப்பவர்கள். தெழிக்கும் - ஒலிக்கின்ற. பூம்புனல் - மெல்லியநீர். நல்கிடே - தெரிவித்தருள்வீராயின்.

11. தமிழ்கேட்ட - தமிழாற் கேட்ட என்பது ஒவ்வொரு பாட திருவுள்ளமேயெனக் கேட்டமையைக் குறிக்கிறது. பழி நீங்கப் பகருமின்-பழி நீங்குவதற்குச் சொல்லியருள்வீராக.

ஆகமங்கள் கேட்பார் அருங்கலைநூல் ஆதரித்துப்
போகம் ஒடுங்காப் பொருள் துய்ப்பார்—சோகமின்றி
நீதி நிலையுணர்வார் நீள்நிலத்துள் ஐம்புலனுங்
காதல் விடுதவங்கள் காமுறுவார்—ஆதி
அருங்கலைநூல் ஓதுவார் ஆதரித்து வென்றிக்
கருங்கலி நீங்கக் கனல்வகுப்பார்—ஒருங்கிருந்து

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 48 திருமழபாடி

## 306 பதிகவரலாறு

திருநெய்த்தானப் பதியினை வணங்கிப் பாடித் திருமழபாடியை அடைந்து, பொன்னூர் மேனியனாகிய வயிரமணித் தூணை வலங்கொண்டு எய்தித் தாழ்ந்து எழுந்து நின்று தொழுது ஆடிப் பாடிய நறுஞ்சொல் மாலைத் தொடை இத்திருப்பதிகம். இதில் இரண்டாவது திருப்பாட்டில் உள்ள திருவைந்தெழுத்தை உணர்ந்து, அக்காலத்துச் சிவஞானிகளின் நிலையை ஊகம்புரிந்து வாழ்தல் உத்தமர் கடனும்.

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

அங்கை யாரழ லன்னழ கார்சடைக்
கங்கை யான்கடவுள்ளிட மேவிய
மங்கை யானுறை யும்மழ பாடியைத்
தங்கை யாற்றொழு வார்தக வாளரே. 1

விதியு மாம்விளை வாமொளி யார்ந்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா
மதியு மாம்வலி யாமழ பாடியுள்
நதியந் தோய்சடை நாதநற் பாதமே. 2

1. சடைக் கங்கையான் - சடையில் தாங்கிய கங்கையையுடையவன். கடவுள் - எவற்றையும் கடந்தவன்; சிவபெருமானுக்கொரு பெயர். 'கடவுளே போற்றி'' என்பது திருவாசகம். கடவுள் - கடத்தல். உள் தொழிற்பெயர் விகுதி. 'விக்குள்' என்பதுபோல தொழிலாகு பெயராய் சிவபெருமானை உணர்த்திற்று. ''அண்டம் ஆறிருளூடு கடந்து உம்பர் உண்டுபோலும் ஓர் ஒண்சுடர் அச்சுடர், கண்டிங்கு ஆர் அறிவர் அறிவார் எலாம், வெண்டிங்கட்கண்ணி வேதியனென்பரே'' என்னுந் திருக்குறுந்தொகையாலறிக. இடம் மேவிய மங்கையான்-இடப்பாகத்தில் பொருந்திய பெண்ணை உடையவன். கங்கையைச் சடையில் தாங்கியவன், மங்கையை இடம் மேவியவன் என்பவற்றைமுறையே, 'சடைக் கங்கையான்' 'இடம் மேவிய மங்கையான்' என்றது வடமொழி விதி.

2. மழபாடியுள் தலைவராகிய சிவபெருமானது திருவடியே ஆன்மாக்களுக்கு விதியாவதும், அவ்விதியின் விளைவாவதும், ஒளியிற் கலப்பு

முழவி னின்முது காடுறை பேய்க்கணக்
குழுவி னின்குல வுங்கையி லேந்திய
மழுவி னனுறை யும்மழ பாடியைத்
தொழுமி னுந்துய ரானவை தீரவே. 3

கலையி னன்மறை யான்கதி யாகிய
மலையி னன்மரு வார்புர மூன்றெய்த
சிலையி னன்சேர் திருமழ பாடியைத்
தலையி னல்வணங் கத்தவ மாகுமே. 4

நல்வி னைப்பய னன்மறை யின்பொருள்
கல்வி யாயக ருத்தனு ருத்திரன்
செல்வன் மேய திருமழ பாடியைப்
புல்கி யேத்து மதுபுக ழாகுமே. 5

தாகிய முத்தியாவதும், மனம் கசிவிப்பதும், அதனுல் தன்வயமாகச் செய்வதும், சிவஞானமாகி விளைவதும், வலிய பற்றுக்கோடாவதும், அனைத்தும் ஆம் என்க. மதி - இங்குச் சிவஞானம். வலி - ஆகுபெயர். நற்பாதம்:- 'நற்றுள்' என்ற திருக்குறட் சொற்றொடர்க்குப் பரிமேலகர் உரைத்ததுரைக்க.

3. குழு - கூட்டம். குலவும்-விளங்குகின்ற. (நும்துயரானவை தீரத்) தொழுமின் - வணங்குங்கள். ஆனவை சொல்லுருபு. முழவின் - முழவு என்னும் வாத்தியத்தால். ஆல்-ஆரவாரிக்கின்ற; பேய்க்கணங்களின் குழு.

4. கலை - சாத்திரம். அவை அறுபத்து நான்கு என்ப. கதி ஆகிய - சரணம் புகும் இடம் ஆகிய. மலையினன் - கயிலை மலையை உடையவன். மருவார் - சேராதவர், பகைவர். வணங்க அதுவே தவமாம். வரும் பாடலில் 'புல்கி ஏத்துமது புகழாகும்' என்றதையும் காண்க.

5. புல்+கு+இ=புல்கி. கு. சாரியை. ஏத்தும் அது - துதித்தலாகிய அப்பணி.

நீடி னுருல குக்குயி ராய்நின்றுன்
ஆடி னெரி கானிடை மாநடம்
பாடி னுரிசை மாமழ பாடியை
நாடி னுர்க்கில்லை நல்குர வானவே. 6

மின்னி னுரிடை யாளொரு பாகமாய்
மன்னி னுறை மாமழ பாடியைப்
பன்னி னுரிசை யால்வழி பாடுசெய்
துன்னி னுர்வினை யாயின வோயுமே. 7

தென்னி லங்கையர் மன்னன் செழுவரை
தன்னி லங்கவ டர்த்தருள் செய்தவன்
மன்னி லங்கிய மாமழ பாடியை
உன்னி லங்க வுறுபிணி யில்லையே. 8

6. நீடினுர் உலகுக்கு - பரப்பான் மிக்க உலகத்திற்கு 'மலர் தலை உலகம்' என்றபடி. எரி - எரியும். கான்இடை - காட்டிடை. (மயானத்தில்) பாடின் ஆர் இசை - பாடுதலால் உண்டாகிய இனிய இசைமிக்க (திருமழபாடி.)

7. மின்னின்-மின்னற் கொடிபோல். ஆர் - பொருந்திய; இடையாள். பண்ணினுர் - (புகழ்ந்து) சொல்பவர்களாய். இசையால் வழிபாடு செய்த லாவது, இறைவன் புகழை இன்னிசையோடு துதித்தல். "அளப்பிலகீதஞ் சொன்னுர்க்கு அடிகள் தாம் அருளுமாறே" என்பதனுலும் அறிக. (திரு நேரிசை) "கோழை மிடருககவி கோளு மிலவாக இசை கூடும்வகையால் ஏழை அடியார் அவர்கள் யாவை சொனசொல் மகிழும் ஈசனிடமாம்" என்னும் திருவைகாவூர்ப்பதிகத்தாலும்அறிக. வழிபாடுசெய்து-வழிபட்டு. உன்னினுர் - தியானிப்பவர்கள்.

8. மன்னன் - மன்னனை. செழுவரை தன்னில் - கயிலை மலையில்: அடர்த்துப் பின் அவனுக்கு அருள்செய்தவன் என்பது இரண்டாமடியின் பொருள்.

நெக்கு ளார்வ மிகப்பெரு கிங்கினை
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவர்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்க னாமம் நமச்சி வாயவே. 3

இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயன னாமம் நமச்சி வாயவே. 4

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லா னாமம் நமச்சி வாயவே. 5

3. உள் நெக்கு - உள்ளம் நெகிழ்ந்து. ஆர்வம் - ஆசை. அங்கையில் - அழகிய கையிலே. அக்குமாலை கொடு - உருத்திராக்கச்செபமாலை கொண்டும். (அங்கையில் - விரல் இடையினாலும்). எண்ணுவார் - செபிக்கிறவர்களை. (தகுதியற்றவர்களாயினும்) தக்க - தகுதிவாய்ந்த. வானவராய் - தேவர்களாய். தகுவிப்பது - தகுதிபெறச் செய்வது. நக்கன் - ஆடையிலியாகிய சிவபெருமான். நாமம் நமச்சிவாயவே.

4. நியமம்தான் நினைவார்க்கு - தன்னை நாடோறும்தியானிப்பதையே நியமமாகக்கொண்டு வழிபடும் அடியவர்கட்கு. இனியான் - என்றும் நன்மை செய்பவனும். நெற்றி நயனன் - நெற்றிக்கண்ணை உடையவனாகிய சிவபெருமானின். நாமம் - திருப்பெயராகிய. நமச்சிவாயவே - ஸ்ரீ பஞ்சாட்சரத்தை. இதனை "திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்" என்ற அப்பர் வாக்காலுமறிக. இன்சொலால் நயம் வந்து ஓத வல்லார் தமை நண்ணினால் - இனிய சொல்லோடு நட்புக்கொண்டு பிறர், ஸ்ரீ பஞ்சாட்சரத்தைச் செபிக்கும் பெரியோரைச் சேர்வரேல் அப்பிறர் (செபிக்காதவர்) பக்கலில் சேர, இயமன் தூதரும் அஞ்சுவர், என்பது அஞ்செழுத்தைச் செபிப்போர்க்கே அன்றி அவரைச் சார்ந்த பிறருக்கும் எமவாதை இல்லை என்பதாம். "கொண்டதொண்டரைத்துன்னிலும் சூழலே" என்ற காலபாசத் திருக்குறுந்தொகையில் துன்னிலும் என்பதால் குறித்த பொருளது.

5. குணம் - நற்குணமும். பலநன்மைகள்-பல நல்லொழுக்கங்களும். இல்லாரேனும் - இல்லாதவராயினும். நல்லான் - சிவபெருமானுக்கொரு

மந்த ரம்மன பாவங்கண் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி ஞமம் நமச்சி வாயவே. 6

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரத ஞமம் நமச்சி வாயவே. 7

இலங்கை மன்ன னெடுத்த வடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை
நலங்கொ ணமம் நமச்சி வாயவே. 8

பெயர். நல்லானை "நல்லாய நான்மறையோடு ஆறங்கம் வல்லானை" என்ற அப்பர் வாக்காலு மறிக.

6. மந்திரம் அன - மந்திர மலைபோன்ற (பாபங்கள்). மன்னிய - நிலை பெற்ற. பந்தனையவர் - பாசங்களால் கட்டுண்டவர். அவர் தாமும் - அத்தகையோரும். பகர்வரேல் - உச்சரிப்பார்களானல். வல்வினை சிந்தும் செல்வமும் மல்கும் (பெருகும்.) நந்தி - சிவபெருமான். "பேர்நந்தி உந்தியின்மேலசைத்த கச்சின் அழகு" என்றூர் அப்பர். முதலிரண்டடிக்குப் பாபங்கள் பந்தனை இவையுடைய அத்தகையோரும் எனப் பொருள் கோடலன்றிப் பாவங்கள் மன்னிய பாசங்களாற் கட்டுண்டவர்களும் என ஓரிடத்திற்கு ஆக்குதலுமாம். மந்திரம் - பாற்கடல் கடைந்த மலை.

7. வரதன் - கேட்ட வரம் அனைத்தும் தருவோன். உருத்திரர்... புகுவித்தாரும் என்ற கருத்து உருத்திர பல்கணத்தாருடன் கலந்து புகச் செய்யும். என்பர் - என்று மெஞ்ஞானிகள் கூறுவர்.

8. அடுக்கல் - மலை. மலங்கி - திகைத்து; "மலங்கினேன் கண்ணின் நீரைமாற்றி" என்பது திருவாசகம். வாய்மொழி செய்தவன் - வாயால் உச்சரித்தவன். உய்வகை - பிழைக்கும்படியான வகை. நலம்கொள் - அத்தகைய நன்மையை; தன்கட் கொண்டதான.

போதன் போதன கண்ணனு மண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி யலந்தவர்
ஓது நாமம் நமச்சி வாயவே. 9

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட வமுதுசெய்
நஞ்சுள் கண்ட னமச்சி வாயவே. 10

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

9. போதன் - தாமரைப் பூவிலிருப்பவனுகிய பிரமனும். போது அன கண்ணனும் - (தாமரைப்) பூப்போன்ற கண்களையுடைய திருமாலும். நேடிய - தேடிய. யாதும் - பற்றுக்கோடு எதுவும். காண்பு - காண்டல். அரிதாகி - இல்லையாகி. அரிது - இல்லை என்னும் பொருளில் இங்கு வந்தது. 'மனக்கவலை மாற்றலரிது' என்புழிப்போல் ஆகும்.

10. கஞ்சி மண்டையர் - கஞ்சி குடிக்கும் பாத்திரத்தைக் கைக்கொண்டவர். மண்டை - ஒருவகைப் பாத்திரம் (பவுத்தர்). கையில் உண் கையர்கள் - கையே பாத்திரமாக உண்ணுகின்ற கீழோர். (சமணர்) மிண்டர் - மண்டையரும் கையருமாகிய மிண்டர் என்க. விஞ்சை-அறிவு. வித்தை - விச்சை எனப் போலியாய், அது மெலித்தல் விகாரம்பெற்று விஞ்சை என்றுயிற்று. நஞ்சு - விடக்கறை. உள் கண்டன் - உள்ள கண்டத்தையுடையவன்.

11. சந்தையால் - இசையோடு பாடிய என ஒரு சொல் வருவிக்க.

# 50 திருத்தண்டலைநீணெறி

## 308 பதிகவரலாறு

திருவாரூர்த் தியாகராசப்பெருமானை வணங்கிப் போய்த் திருக்காறு யில் திருத்தேவூர் முதலியபலவற்றைப் பரவிப்பாடி, திருத்தொண்டர் குழாம் பாங்கின் எய்த, கற்றவர் வாழ் தண்டலை நீணெறி உற்றுப்போற்றி யது இத் திருப்பதிகம்.

**பண் - கௌசிகம்**

திருச்சிற்றம்பலம்

விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே
சுரும்புந் தும்பியுஞ் சூழ்சடை யார்க்கிடம்
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளம்
நெருங்குந் தண்டலை நீணெறி காண்மினே. 1

இகழுங் கால னிதயத்து மென்னுளும்
திகழுஞ் சேவடி யான்றிருந் தும்மிடம்
புகழும் பூமக ளும்புணர் பூசுரர்
நிகழுந் தண்டலை நீணெறி காண்மினே. 2

1. விரும்பும் - விரும்பப்படுவதாகிய. திங்களும் - சந்திரனும். (கங்கையும்). விம்ம-பொலிவு அடைய. வெறுக்கப்படும் தன்மைவாய்ந்தது, பின் கடவுள் அணிதலால் விரும்பப்படுவதாயிற்று. சுரும்பு - தும்பி, இவை வண்டின் சாதி விசேடம். மலரின் நறுமணத்துக்காகச் சூழ்கின்றன.

2. காலன் இதயத்துத் திகழுதல் அச்சத்தால்; என் உள் (உள்ளம்) திகழுதல் அன்பினால்; இக்கருத்தை "அஞ்சியாகிலும், அன்புபட்டாகிலும் நெஞ்சம் வாழி நின் நின்றியூரை நீ" என்னும் அப்பர் வாக்கால் அறிக. 'காலனறிந்தான் அறிதற்கரியான் கழலடியே" என அவர் பாராட்டுவ தாலும் அறிக. புகழ் - உபலட்சணத்தால் புண்ணியத்தையும் தழுவும். பூமகள் - இலக்குமி. செல்வமிகுதியால் (பழிபாவங்கள் ஈட்டுதலின்றிப்) புகழ் புண்ணியங்களையீட்டுந் தன்மையை உடைய பூசுரர் என்பது மூன்றும் அடியின் குறிப்பு. நிகழும் - வசிக்கின்ற.

பரந்த நீலப் படரெரி வல்விடம்
கரந்த கண்டத்தி ஞன்கரு தும்மிடம்
சுரந்த மேதி துறைபடிந் தோடையில்
நிரந்த தண்டலை நீணெறி காண்மினே. 3

தவந்த வென்புந் தவளப் பொடியுமே
உவந்த மேனியி ஞனுறை யும்மிடம்
சிவந்த பொன்னுஞ் செழுந்தர ளங்களும்
நிவந்த தண்டலை நீணெறி காண்மினே. 4

... ... ... ... 5

... ... ... ... 6

... ... ... ... 7

இலங்கை வேந்த னிருபது தோளிற
விலங்க லில்லடர்த் தான்விரும் பும்மிடம்
சலங்கொ ளிப்பி தரளமுஞ் சங்கமும்
நிலங்கொ டண்டலை நீணெறி காண்மினே. 8

3. பரந்த - பரவிய. எரிவல்விடம் - கொதிக்கும் வலிய நஞ்சு. சுரந்த - பால்சுரந்த, (மடியினையுடைய.) மேதி - எருமைகள். மேதி - பால்பகா அஃறிணைப்பெயர். சுரந்த மேதி - சினையினை முதல் மேலேற்றப் பட்டது. சொரிந்த பால் ஓடையில். நிரந்த - பரவித்தோன்றும், தண்டலை நீணெறி என்க. (ஓடையில்) நிரந்த என்ற எச்சத்திற்குச் (சொறிந்த) பால் என்னும் வினைமுதல் வருவித்து உரைக்கப்பட்டது. 'காலுண்ட சேற்று மேதிக் கன்றுள்ளிச் சொரிய சோர்ந்த பால்' என்ற கவியின் கருத்துக் கொள்க. நிரந்த - இயல்புபற்றிய காலவழுவமைதி.

4. தவந்த - வெந்த, என்பும் - எலும்பும், தவளப்பொடி - வெண்திரு நீறு, தவந்த என்ற அடையை அடுத்தும் ஒட்டுக. வெந்த வெண்ணீ றணிந்து என்ற வாக்குங் காண்க. நிவந்த - மிகுந்த, ஓங்கிய.

5. 6. 7.

8. விலங்கல் - கைலை மலை, ஆறு தனதாகக் கொண்ட சிப்பி முத்து சங்கு, ஆகிய பொருள்களை, நிலம் தனதாகக் கொள்ளும் வளம் பொருந்திய தண்டலை நீணெறி.

கருவ ருந்தியி னுன்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடம்
செருவ ருந்திய செம்பியன் கோச்செங்கண்
ணிருபர் தண்டலை நீணெறி காண்மினே. 9

கலவு சீவரத் தார்கையி லுண்பவர்
குலவ மாட்டாக் குழக னுறைவிடம்
சுலவு மாமதி லுஞ்சுதை மாடமும்
நிலவு தண்டலை நீணெறி காண்மினே. 10

நீற்றர் தண்டலை நீணெறி நாதனைத்
தோற்று மேன்மையர் தோணி புரத்திறை
சாற்று ஞானசம் பந்தன் றமிழ்வலார்
மாற்றில் செல்வர் மறப்பர் பிறப்பையே. 11

திருச்சிற்றம்பலம்

9 கருவரு உந்தியினன் - சிருட்டி எல்லாம் தன்னிடத்தினின்று உண்டாக்கத்தக்க உந்தியினன், உந்தியில் நான்முகன் தோன்றினன். செரு - போரில். வருந்திய-பகைவரை வருந்துவித்த. கோச்செங்கட்சோழ நாயனர்நாட்டிய தண்டலை நீணெறிநாயனர் ஆகையினல் நிருபன் என்னது நிருபர் என்றார்.

10. கலவு - சுற்றிய, சீவரத்தார் - சீவரமென்னும் ஆடையை யுடையவர்; பௌத்தர். இவர்கள் கொண்டாடுதற் கெட்டாத. குழகன் - அழகன். சுலவும் - வளைந்த. நிலவு - விளங்குகின்ற.

11. நீற்றர் - திருநீறணிந்த அடியார்கள்வாழும் தண்டலை நீணெறி. தோற்றும்-(விளங்கித்) தோன்றுகின்ற. (மேன்மையர்) தோணிபுரம் என்ப தற்கும்இவ்வாறே உரைக்க. மாற்றில் - மாறுதல் இல்லாத (செல்வர்)-வந்து அழிந்து மாறும் பிற செல்வங்கள் அல்ல. மாற்று-முதனிலை திரிந்த தொழிற் பெயர். மறப்பர் பிறப்பை - இனிப் பிறவார் என்பது கருத்து.

# 51 திருவாலவாய்

## 309 பதிகவரலாறு

திருக்கழுமலத்தார் வேந்தர் திருமதுரையை மேவிய நாளில், தவ மறைந்து அல்ல செய்வாராகிய அமணர், (அச்சிவநெறி வளர்க்க வந்தாரது திருமடத்தில்) மந்திரத்தால் செந்தீச் சேரச் செய்தனர். "ஆதிமந்திரம் அஞ்செழுத்து ஓதுவார் நோக்கும் எம்மாத்திரத்தினும் (எத்திசையினும்) மற்றை மந்திர விதி வருமோ"? மந்திரம் பலியாது என்று அறிந்த அக் கீழ்மையோர்கூடி, தம்மேன்மையை இனி அரசன் மதியான் நம் பிழைப்பும் ஒழியும் என்று அஞ்சினர். திருஞான சம்பந்தர் வீற்றிருந்த திருமடப் புறச் சுற்றினில், தழல்கொண்டு புகுந்து தம் தொழில்புரிந்தனர். அதைக் கண்டோர் ஊழிக்கற்பகக் கொழுந்துக்குச் சொல்லினர். மாதவர் துயிலும் இத்திருமடப் புறம்பு பழுதுசெய்வதோ பாவிகாள்' எனப் பரிந்தருளினுர். அவ் "வஞ்சனை மனத்தோர் என்பொருட்டுச் செய்த தீங்கு ஆயினும்" சிவ பத்தருக்கு எய்துமோ என்றுர். அச்சம் முன்பும் ஆத்திரம் பின்பும் உற்றன. அரசியல் முறைமை வழுவிற்று என்று எண்ணினுர். வெய்ய தீங்கு ஆகிய இது வேந்தன் மேலதாகும் என்னும் விதிமுறையால், சைவர் வாழ்மடத்தில் இட்ட தீத்தழல், பாண்டிமாதேவியார் நெடுமங்கல நாணேக்காவல்செய்தலும், குலச்சிறையார்அன்பும், அரசனது சிவாபராதம் அகலுதலும், சிவநெறிக்கு மீண்டுவரும் விதியுண்மையும், வெப்புநோய் அகல வெண்ணீறு பூசும் பேறு அரசனுக்கிருப்பதும் ஆகிய ஏதுக்களால் பையவே சென்று பாண்டியனுக்கு ஆகுக என்று பாடியருளியது இத் திருப்பதிகம்.

**பண் - கௌசிகம்**

திருச்சிற்றம்பலம்

செய்ய னேதிரு வாலவாய்]மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே. 1

1. செய்யனே - நடுநிலைமையை யுடையானே. 'ஒப்பநாடி அத்தக ஒறுத்தல்' என்னும் குறிப்புப்போலும்,

சித்த னேதிரு வாலவாய் மேவிய
அத்தனே யஞ்ச லென்றருள் செய்யெனை
எத்த ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பத்திமன் தென்னன் பாண்டியற் காகவே. 2

தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச்
சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எக்க ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பக்க மேசென்று பாண்டியற் காகவே. 3

சிட்ட னேதிரு வாலவாய் மேவிய
அட்ட மூர்த்திய னேயஞ்ச லென்றருள்
துட்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பட்டி மன்றென்னன் பாண்டியற் காகவே. 4

நண்ண லார்புர மூன்றெரி யாலவாய்
அண்ண லேயஞ்ச லென்றருள் செய்யெனை
எண்ணி லாவம ணர்கொளு வுஞ்சுடர்
பண்ணி யற்றமிழ் பாண்டியற் காகவே. 5

2. சித்தன் - எல்லாம் வல்ல சித்தராகியவன். அத்தன் - தலைவன். எத்தர் - ஏமாற்றுவோர். கொளுவும் சுடர் - பற்றவைத்த தீ. பத்திமான் - (ஆருக மதத்திற்) பக்தியுடையவனாகிய அரசன். தென்னன் - பாண்டியன்; தமிழ் நாட்டின் தென்பகுதியை ஆள்பவன்.

3. சொக்கன் - கண்டாரைச் சொக்கச் (மயங்க) செய்யும் பேரழகுடையவன்; சுந்தரபாண்டியன் என்னும் பெயர் பூண்டமையும் காண்க. எங்கள் பக்கம் ஏவப்பட்ட தீ, அவர்கள் பக்கமே சென்று பாண்டியற்கு ஆகுக என்பது நான்காம் அடியின் கருத்து. எக்கர் - இறுமாப்புடையோர், ஆடையிலிகள் எனினுமாம் (பிங்கலம்).

4. சிட்டன் - நீதிமுறை வழுவாதவன். பட்டிமன் - கல்வியறிவு உடைய அரசன்.

5. எரி ஆலவாய் அண்ணல் - எரித்த ஆலவாயிலுள்ள அண்ணல். எண்ணிலா - நினைத்தல் இல்லாத பண் இயல்தமிழ்ப்பாண்டியன் - பண்பு அமைந்த தமிழ்மொழி வழங்கும் பாண்டிநாட்டரசன் என்பது. ஈற்றடியின் பொருள். பண்பு உணர்த்தும் விகுதி குன்றியது. இதில் முதல் தொடருக்கு இசையோடு கூடிய என்றுரைப்பினுமாம்.

தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்
அஞ்ச லென்றரு ளாலவா யண்ணலே
வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்
பஞ்ச வன்தென்னன் பாண்டியற்காகவே. 6

செங்கண் வெள்விடை யாய்திரு வாலவாய்
அங்கணாவஞ்ச லென்றருள் செய்யெனைக்
கங்கு லாரமண் கைய ரிடுங்கனல்
பங்கமில் தென்னன் பாண்டியற் காகவே. 7

தூர்த்தன் வீரந் தொலைத்தரு ளாலவாய்
ஆத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
ஏத்தி லாவம ணர்கொளு வுஞ்சுடர்
பார்த்தி வன்தென்னன் பாண்டியற்காகவே. 8

தாவி னயன் றனறி யாவகை
மேவி னய்திரு வாலவா யாயருள்
தூவி லாவம ணர்கொளு வுஞ்சுடர்
பாவி னன்தென்னன் பாண்டியற்காகவே. 9

6. தஞ்சம் - (தண்+து+அம்) அபயம். அஞ்சல்-அஞ்சாதே. வஞ்சம்-(வல்+து+அம்) கொடுமை. பஞ்சவன்; தென்னவன்; பாண்டியனைக் குறித்த பெயர்கள்.

7. அங்கணன் - சிவபெருமானுக்கு ஒரு பெயர். "அங்கணன் கையில் காக்கும்" (காஞ்சிப் புராணம்.) கங்குலார் - இருள் போன்றவர். மீளவும் சைவம் திரும்புகின்றமையின் "பங்கம் இல் தென்னன்" என்றார். (பெரியபுராணம்) பங்கம் - குற்றம்.

8. பிறமாதரை விரும்பினமைபற்றி இராவணன் தூர்த்தன் எனப் பட்டான். ஏத்து(தல்) - துதித்தல். இல்லா(த) அமணர். பார்த்திவன் - பூமியை ஆள்பவன்.

9. தாவினன் - உலகத்தைத் தாவி அளந்த திருமால். தூஇலா - நீராடாமையால் தூய்மை இல்லாதஅமணர். பாவினன் - (அத்தீயைத் திரு மடத்தில்) பற்றுவித்தவன்.

எண்டி சைக்கெழி லாலவாய் மேவிய
அண்ட னேயஞ்ச லென்றருள் செய்யெனைக்
குண்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பண்டிமன் தென்னன் பாண்டியற்காகவே. 10

அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பம் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. 11

திருச்சிற்றம்பலம்

10. அண்டன் - தேவர்.

11. மேதினிக்கு ஒப்ப - உலகுக்குஒக்கும்படியாக (உரைத்தபதிகம்.) முதற்பாடலில் செய்யனே என அழைத்தமையுங் காண்க. பதிகக் குறிப்பு. ஒவ்வொரு பாட்டிலும் கடவுளை விளிப்பன இங்கு உய்த்து உணரத் தக்கது. எனை அஞ்சல் என்று அருள்செய், தீ பாண்டியர்க்கு ஆக என இருவாக்கியங்களாகக் கொள்வது பொருத்தம்.

ஆரணங்கும் மற்றை அருந்ததியும் போல்மடவார்
ஏரணங்கு மாடத் தினிதிருந்து—சீரணங்கு
வீணை பயிற்றுவார் யாழ்பயில்வார் மேவியசீர்ப்
பாணம் பயில்வார் பயன்உறுவார்—பேணியசீர்ப்
பூவைக்குப் பாட்டுரைப்பார் பொற்கிளிக்குச் சொற்பயில்வார்
பாவைக்குப் பொன்புனைந்து பண்புறுவா—ராய்எங்கும்
மங்கையர்கள் கூட்டமும் மன்னு சிறார்குழுவும்
பொங்குலகம் எல்லாம் பொலிவடையத்—தங்கிய
வேத ஒலியும் விழாஒலியும் மெல்லியலார்
கீத ஒலியுங் கிளர்ந்தோங்கும்—மாதரார்.

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 52 திருவாலவாய்

## 310 பதிகவரலாறு

பாண்டியனுக்கு உயிரை நல்கி, மெய்ந்நெறிகாட்டி, ஊனைச் சமணை நீக்கி, உலகெலாம் உய்யக்கொண்ட ஞானசம்பந்தர் வாய்மை பெருகி ஓங்கிற்று. திருக்கூத்தப்பிரான் திருநெறி நடந்தது. வேள்வியும் மாரியும் சிவநெறியும் மிகுந்து, இம்மையில், இன்பத்தில் குறைவில்லை எனினும் சிவநாம செபத்தால் பிறவித்துன்பம் தொலையப் பேரின்பம் பெற்றது உலகம். மங்கையர்க்கரசியாரும் மன்னனும் போற்றிவரப் புகலியர் வேந்தர் பொங்கொளிச் சிவிகை ஏறிப் போகின்றார் திருவாலவாய்க்கு. தொண்டர் யாவரும் மகிழ்ச்சியுடன் புகழ்ந்து போற்றிச் செல்கின்றனர். மண்ணெலாம் உய்யவந்த வள்ளலாரைக் கண்டு, கண்ணுற் பயன் கொண்டனர் கன்னிநாட்டவர் எல்லாரும். சிவிகையினின்றும் இறங்கி, கோயில் வாயிலில் புகுந்தார் பாலருவாயர். வலங்கொண்டார். "கைகளும் தலைமீது ஏறக், கண்ணில் ஆனந்தவெள்ளம் மெய்யெலாம்பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி, ஐயனே அடியனேனை அஞ்சல் என்று அருளவல்ல மெய்யனே" என்று விளம்பலுற்றது இத்திருப்பதிகம்

### திருவிராகம் பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற ண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே. 1

1. விழுமியார்கள் - மெய்ஞ்ஞானிகள். வீடு அலால் - முத்திப் பேற்றையன்றி. அவாய், (வேறொன்றை) அவாவி - விரும்பி (நிற்றல்) இல்ஆய் - இல்லையாகி. நின் - உனது. கழல் - திருவடிகளை. (பாடல் வாயிலாய்) ஆல - கொண்டாட. பரவநின்ற பண்பனே - துதிக்கின்ற பண்பையுடையவனே. காடு அலால் - முதுகாட்டைத்தவிர. அவாய் - விரும்பி (நிற்றல்). இல்லாய் - இல்லாதவனே. நீள் - நெடிய. கவாலிமதில் - கவாலிஎன்னும் பெயரையுடையமதில், விழுமியார்கள் நின்கழல்பரவநின்ற பண்பனே. காடு அல்லால் விரும்புதலில்லாதவனே, நான்மாடக் கூட லாகிய திருவாலவாயில் எழுந்தருளியபெருமானே, குலாவி விளையாடியது எம்மால் அறியுந் தரத்ததன்று என்றவாறு.

வீடல் ஆல ஆய் இல்லாய் - இறத்தல் அகல (பிறத்தற்கு வாயிலான) தாயில்லாதவரே. விழுமியார்கள் - மெய்யுணர்தலிற் சீரியோர்கள். நின்கழல் - தேவரீர் திருவடித் தாமரைகளை. பாடல் - பாடுதலையுடைய. ஆல வாய் இல்லாய் - கல்லால மரத்தினகமே இல்லமாகக் கொண்டவரே. பரவ நின்ற பண்பனே - மண்ணும் விண்ணும் மற்றும் வாழ்த்த நின்ற அருளிய பண்புடையவரே. காடு அல்லால் அவாய் இல்லாய்- மகா சங்கார காலத்தில் யாவும் ஒடுங்கும் காடு அல்லாமல் வேறு யாதும் விரும்பியில்லாதவரே. கபாலிநீள் கடிமதில் - நீண்ட கபாலிஎன்று வழங்கப் பெறும் கடிமதில் (சூழப்பெற்ற). கூடல் - நான்மாடக் கூடல் (என்றும் திருமருதந்துறை மதுரை) என்றும் பெயர்கொண்ட நகரின்)கண் உள்ள, ஆலவாயிலாய் - திருவாலவாய் என்று வழங்கப்பெறும் திருக்கோயிலை உடையவரே. குலாயது என்ன கொள்கை - (கால்மாறி) ஆடுவதற்கு என்ன கருத்து?

வீடல் (வீடு + அல்) - அழிதல். ஆல - அகல. அகலல் என்றதன் மரூஉவே. ஆலல் என்பது:- மயிலின் தோகை சுருங்கியிருந்து அகலும் போது செய்யும் ஒலியை அகவுதல் என்பர். அகலுவது தோகை, அகவுவது மயில். இரண்டற்கும் சிறிது வேறுபாடிருந்தும், இரண்டும் ஒருசேரக் கருத்துள் வரும் வண்ணம் 'மயில் ஆல' என்பது மரபு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரே "மயில் ஆலச் செருந்திகாலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடு" "வண்டுபாட, மயில் ஆல, மான்கன்று துள்ள, வரிக்கெண்டை பாயச் சுனைநீல மொட்டு அலரும் கேதாரம்" என்று அருளியதில், 'ஆல' என்ற சொல்லாட்சி உள்ளதை அறிக. 'அகன்றோர்' என்பதன் மரூஉவே ஆன்றோர். "அன்னச் சேவல் மாறு எழுந்து ஆலும்" (புறம். 128) என்புழி, ஆலும் என்பது ஒலிக்கும் என்ற பொருளதாய் நின்றதும் 'ஆலோலம்' என்னும் வழக்கும் உணர்க. ஆலோலம் (அகல ஓலம், ஆல ஓலம், ஆலோலம்) என்று மருவும் முன்பு இருந்த வடிவம் உய்த்துணர்தற்பாலது. 'பயில் பூஞ் சோலை மயில் எழுந்து ஆலவும்' (புறம். 116) என்புழி 'ஆலவும்' என்ற பொருள் பயப்ப துணர்க. 'முயங்கல் ஆன்றிசின்' (புறம். 151) என்புழி, 'அமைந்தேன்' என்று பொருளுரைத்ததும், அதற்குரிய அடிச்சொல் (பகுதி) ஆங்கு இல்லாமையும், அதன் அடி 'அகல்' என்பதும், அஃது அகன்றிசின் என்பதன் மரூஉவே என்பதும் அறிதல் சிலர்க்கே எளிது. 'ஆனாது உருவும் புகழும் ஆகி' (புறம். 6) 'அமிழ்து அட்டு ஆனாக் கமழ் குய் அடிசில்' (ஷை. 10) 'ஆனா ஈகை அடுபோரண்ணல்' (ஷை. 42) என்னும் இடங்களில், எதிர்மறையில் வந்த 'ஆனாமை'க்கு எவ்வடிவின் அமைந்த சொல் உடன்பாடாகலாம்? ஆனுதல் எனலாமோ? ஆன்றல் என்றுள்ளதேல் அதன் பகுதி யாது? அகல்+தல் - அகறல். அகல் - ஆல் என மருவி, அது, தல் என்னும் விகுதியொடு சேருங்கால் 'ஆன்றல்' என்றாயிற்று,

ஆகவே, வீடல் ஆல என்றதற்கு இறப்பு அகல என்ற பொருளே உரிய தென்க. எனவே இறப்பின்மை பெறப்பட்டது. ஆய்:- யாய் என்றதன் மரூஉ. யாய் தன்மைக்கும், ஞாய் முன்னிலைக்கும், தாய் படர்க்கைக்கும் உரியன. 'யாயும் ஞாயும் யாராகியரோ' (குறுந்தொகை.) 'யாயை வெறுத் தனன் பின்னை விதியை வெறுத்தனன்' (வில்லி பாரதம்). ஆய் இல்லாய்:- ஆய் இல்லாமை பிறப்பின்மையைக் குறிக்கின்றது. நிற்கவே இறப்பகலப் பிறப்பில்லாய் என்றவாறும். 'தோற்றம் உண்டேல் மரணம் உண்டு'. இறப்பும் பிறப்பும் இல்லாத கடவுள். 'பிறப்பில் பெருமான்' 'பிறப்பினோ டிறப்பிலை' என்னும் இப்பெருமான் திருவாக்குணர்க

ஆலவாய் - ஆலமர நிழலகம். வாய் - இடம். இல் - வாழும் இடம். பரவ - வாழ்த்த. 'பரவுவார் இமையோர்கள்'. 'யானும் உன்னைப் பரவுவனே.' ('வாழ்த்துவதும்' எனத்தொடங்குந் திருவாசகம்). பண்பு - அருட்பண்பு. எண் குணம். காடு - 'கோயில் சுடுகாடு'. சருவசங்கார காலத்தில் 'தானொருவனுமே' நிற்றலின், அது சிறந்த வீடாயிற்று. மதுரை யில் உள்ள திருமதிலுக்கு, 'கபாலி' என்ற பெயர் உண்டு. கடி - காவல். கூடல்:- கன்னி, கரியமால், காளி. ஆலவாய் என்னும் நான்கன்கூட்டம் பற்றிய காரணப்பெயர். நான்மாடக் கூடலான படலத்து வரலாறும் கொள்ளலாம். ஆலவாய்:- மதுரையில் உள்ள திருக்கோயிலின் பெயர். குலாயது என்னகொள்கை:- பின்னர் (2, 3, 7, 10) உள்ளவினுக்களுக்கு ஏற்பப் பொருள் கொள்க. குலாவுதல் - ஆடுதல். "ஆடுங்குலாத்தில்லை யாண்டான்" கொள்கையும் கோட்பாடும் ஒன்றுகா? கொள்கை செய் வினை. கோட்பாடு செயப்பாட்டுவினை. கொள்கைக்குக் கோட்பாடு என்று பொருளுரைத்தல் சில இடத்திலன்றி எல்லா இடத்திலும் பொருந் தாது. "ஒன்று வேறுணர்வும் இல்லேன் தெளிவற நிறைந்த கோலம், மன்றில் நான் மறைகள் ஏத்த மானிடர் உய்ய வேண்டி, நின்று நீ ஆடல் செய்கை நினைப்பதே நியமம் ஆகும், என்று பூம் புகலி மன்னர் இன்தமிழ்ப் பதிகம் பாட" எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளிய கருத்தே இப்பதிகப் பாடல்களில் அமைந்திருத்தல் காண்க.

1. வீடு ஆலால வாயிலாய்:- 'அழிக்கத்தக்க ஆலகால விடத்தை உண்ட திருவாயினை உடையவரே. 2. கரிய விடத்தையுடைய பாம்பினால் காட்டப்பட்ட இடத்தை இருப்பாகக் கொண்டவரே. 3. வீடு பெறற் பொருட்டுக் கல்லால் ஆகிய அவ்விடத்தில் ஆய்ந்த (விழுமியோர்கள்) (சனகாதி முனிவர்) பாடலாலவாயிலாய்:- பாடுதலினால் அந்த வாக்கி னிடம் விளங்குபவரே. காடலால் அவாயிலாய் - சுடுகாடேயன்றி வேறு இருப்பிடம் விரும்பாதவரே. குலாயது - எம்முடன் உள்ளே விளங்க விரவி எழுந்தருளியிருந்து அருள்புரிந்து ஏற்றுக்கொண்டது என்றுருமுளர்.

பட்டிசைந்த வல்குலாள் பாவையாளோர் பாகமா
ஒட்டிசைந்த தன்றியும் முச்சியாளொ ருத்தியாக்
கொட்டிசைத்த வாடலாய் கூடலால வாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே. 2

குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்பதென்மு கம்மனே. 3

ர்ச் சடைமுடி முதல்வநீ முழங்கழல்
அதிரவீசி யாடுவா யழகனீ புயங்கனீ
மதுரனீ மணாளனீ மதுரையால வாயிலாய்
சதுரனீ சதுர்முகன் கபாலமேந்து சம்புவே. 4

கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டு செய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையில் தேர்வதில்லை தேவரே. 5

2. ஒட்டு இசைந்தது - பொருந்தியிருந்தது

3. அருத்தம் - பொருள். முன்புகழ்ந்து உரைப்பது - முன்னால் புகழ்ந்து சொல்வது. என்(னே?) எத்தகையது? (முகமன்பாற்படும்.)

4. புயங்கன் - பாம்பை அணிந்தவன். மதுரன் - இனியவன். சதுரன் - சாமர்த்தியவான். சம்பு - சிவபிரான்.

5. பாலன் ஆய் - சண்டேசுவர நாயனார்போன்ற. தொண்டு செய்து- வழிபாடு புரிந்து. ஆலவாயிலாய் - நீலம் ஆய கண்டனே. தேவர் நித்தலும் தொண்டுசெய்து நின்னையே தேர்வதன்றிப் பிற தெய்வங்களைச் (சீலமாய சிந்தையில்) தேர்வதில்லை என முடிவுகொள்க.

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க வாடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினுய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. 6

ஆதியந்த மாயினு யாலவாயி லண்ணலே
சோதியந்த மாயினுய் சோதியுள்ளொர் சோதியாய்
கீதம்வந்த வாய்மையாற் கிளர்தருக்கி னுர்க்கல்லால்
ஓதிவந்த வாய்மையா லுணர்ந்துரைக்க லாகுமே. 7

கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடல்
துறையிலங்கை மன்னனைத் தோளடர வூன்றினுய்
மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்
நிறையிலங்கு நெஞ்சினுல் நினைப்பதே நியமமே. 8

தாவணவ் விடையினுய் தலைமையாக நாடொறும்
கோவணவ் வுடையினுய் கூடலால வாயிலாய்
தீவணம் மலர்மிசைத் திசைமுகனு மாலுநின்
தூவணம் மளக்கிலார் துளக்கமெய்து வார்களே. 9

6. பொன்தயங்கு - பொன்போல் விளங்கும். இலங்கு - பிரகாசித்த; விளங்குகின்ற. ஒளிநலம் - சிறந்த ஒளியையுடைய, குளிர்ந்தசடை. நின் - உனது. தயங்கிய - விளங்குகின்ற. ஆடல் - திருக்கூத்தை. நினைப்பதே - நினைந்து இன்புற்றிருப்பதே. நியமம் - ஆன்மாக்கள் உய்தி கூடுதற்குரிய நியமம் ஆகும். ஆடலே - ஏ-அசைநிலை. ''குறியொன்றுமில்லாத கூத்தன் தன் கூத்தை எனக்கு அறியும் வண்ணம் அருளியவாறு'' என்ற திருவாசகமும் கொண்டு ஈற்றடிப்பொருள் தெளியப்படும்.

7. சோதி அந்தம் - ஒளியின் முடிவு. கீதம்வந்த - உபதேசம் வழியாய்ப்பெற்ற. வாய்மையால் - சிவஞானத்தால். கிளர் - விளங்குகின்ற. தருக்கினுர்க்கு - பக்குவ ஆன்மாக்களுக்கு. அ(ல்)லால் - (கேட்டுச் சிந்தித்தவருக்கு அல்லாமல்) ஓதிவந்த வாய்மையால் - கற்று அறிந்த அபார ஞானத்தால். உணர்ந்து உரைக்கலாகுமே?

8. கறை - விஷத்தின் கறுப்பு. கருத்திலாமை மன்னனைச்சார்வது. நிறை - (புலன்வழியோடாது) நிறுத்தல்.

9. தாவண்ணம் - தாவும் தன்மை. தீவணம் மலர் - செந்தாமரை மலருக்குத் தீவணம் நிறத்தால் உவமை. ''எரியாத தாமரை மேல் இயங்கி

தேற்றமில் வினைத்தொழிற் றேரருஞ் சமணரும்
போற்றிசைத்து நின்கழல் புகழ்ந்துபுண் ணியங்கொளார்
கூற்றுதைத்த தாளிணுய் கூடலால வாயிலாய்
நாற்றிசைக்கு மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே. 10

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தனல்ல பண்பினுல்
ஆயசொல்லின் மாலைகொண்டு ஆலவாயிலண்ணலைத்
தீயதீர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

னும் (அப்பர்) எரியகைந்ததன்ன தாமரை நாப்பண்'' எனவரும் புறநானூற்றுலும் அறிக. தூவணம் - பற்றுக்கோடாம் தன்மை (புறம்)

10. நால்திசை - அன்மொழித் தொகையாய் உலகம் என்னும் பொருளிலும், மூர்த்தி என்பது கடவுள் என்னும் பொருளிலும் வந்தன. ''உலகுக் கொருவனுய் நின்ருய் நீயே'' - (அப்பர் திருவாக்கு.)

11. போய் - வந்து பாய்ந்த. நீர், பாய - பரந்த. தீய(வை) - தீவினைகள். இனிப்போதல்என்பதற்கு நேர்மை என்னும் பொருள் உண்மையால் பருவகாலத்திற் பெய்த நீர் எனினும் பொருந்தும்.

பாவை ஒலியும் பறைஒலியும் பல்சனங்கள்
மேவும் ஒலியும் வியன்நகரங்—காவலர்கள்
பம்பைத் துடிஒலியும் பௌவப் படைஒலியும்
கம்பக் களிற்றெலியுங் கைகலந்து—நம்பிய
கார்முழக்கும் மற்றைக் கடல்முழக்கும் போற்கலந்த
சீர்முழக்கம் எங்குஞ் செவிடுபட—பார்விளங்கு
செல்வம் நிறைந்தவூர் சீரில் திகழ்ந்தவூர்
மல்கு மலர்மடந்தை மன்னுமூர்—சொல்லினிய
ஞாலத்து மிக்கவூர் நானூற் றுவர்களூர்
வேலொத்த கண்ணுர் விளங்குமூர்—ஆலித்து
மன்னிருகால் வேலை வளர்வெள்ளத் தும்பரோடும்
பன்னிருகால் நீரில் மிதந்தவூர்—மன்னும்

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை

# 53 திருவானைக்கா

## 311 பதிகவரலாறு

திருச்சிராப்பள்ளிமேய செழுஞ்சுடரைப் பணிந்து, மகிழ்வு எய்தி, உளம்குளிர விளங்கிய சொற்றமிழ்மாலை வேய்ந்து, ஆனைக்காவை வணங்கும் விருப்பொடு வந்தணைந்தார். வெண்ணாவல் மேவிய மெய்ப் பொருளை நண்ணி இறைஞ்சி முன் வீழ்ந்து எழுந்து, பாடிப் பரவினின் றேத்திய செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம்.

### திருவிராகம் பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவி லின்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவார் ஏதுமேத மில்லையே. 1

சேறுபட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
வாறுபட்ட நுண்டுறை யானைக்காவி லண்ணலார்
நீறுபட்ட மேனியார் நிகரில்பாத மேத்துவார்
வேறுபட்ட சிந்தையார் விண்ணிலெண்ண வல்லரே. 2

1. வானை - செவ்வானத்தை. கா - காத்திருத்தல்போல. வெண் மதி, மல்கு - ஒளிமிகும். புல்கு - பொருந்திய. வார்சடை, செவ் வானம் சடைக்கு உவமை. கா - முதனிலைத் தொழிற்பெயர். இல் - ஐந்தன் உருபு ஒப்புப்பொருள். தேனைக்காவல் இன்மொழி - தேனைக் கலந்துள்ள இனிமைதங்கிய மொழி. (காவில் காவுதலில் உள்ள இனிமை. காவுதல் - கலந்திருத்தல்). அபயம் - சரண்; புகலிடம் "வார்தல், போகல், ஒழுகல் மூன்றும், நேர்பும், நெடுமையும் செய்யும்பொருள" என்பது தொல் காப்பியச் சூத்திரம் (சொல் அதிகாரம்) ஏனைக்காவல் வேண்டுவார். ஏதம்-தம்மைத்தாமே காத்துக்கொள்ள முடியாமற் பிறதுணை வேண்டும்படி நேரும் பெரிய அபாயம். ஏதும் - எதுவும். ஆனைக்காவில் அண்ணலைச் சரணாக வாழ்பவருக்கு இல்லை. வாழ்பவர் - நான்கன் உருபுத்தொகை. 'ஐந்தவித்தான் ஆற்றல்' என்புழிப்போல (திருக்குறள்)

2. சேண் உலா - நெடுந்தூரத்திலிருந்து உலாவி வருகின்ற; ஆறு. சென்று சென்று - பலதரமும் சென்று சிந்தை முதலிய பசுகரணங்கள்.

தாரமாய மாதரா டானொர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை ஏற்றதிங்கள் சூடினான்
ஆரமாய மார்புடை யானைக்காவி லண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே. 3

விண்ணினண்ணு புல்கிய வீரமாய மால்விடைச்
சுண்ணவெண்ணீ றாடினான் சூலமேந்து கையினான்
அண்ணல்கண்ணொர் மூன்றினா னானைக்காவு கைதொழ
எண்ணும்வண்ணம் வல்லவர்க் கேதமொன்று மில்லையே. 4

வெய்யபாவங் கைவிட வேண்டுவீர்க ளாண்டசீர்
மைகொள்கண்டன் வெய்யதீ மாலையாடு காதலான்
கொய்யவிண்ட நாண்மலர்க் கொன்றைதுன்று சென்னியெம்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. 5

பதிகரணங்களாக மாறியவராய் விண்ணில் எண்ணவல்லர் - முத்தியின் புற்றோராய்க் கருதத்தக்கவர்.

3. வாரம் - உரிமை. ஆரம் ஆய மார்பு - என்றது, உறையூர்க் காவிரித் துறையில் நீராடிய சோழ அரசர் ஒருவர் தமது இரத்தின ஆரம் ஆற்றில் நழுவியதை யறிந்து இவ்வணிகலன் ஆனைக்காவி லண்ணலுக்கு ஏற்பதாகுக என்றனராக இங்குத் திருவானைக்காத் திருமஞ்சனத்துறையில் நீர் சுமந்தோர் இறைவனுக்கு விட்ட அந்நீரோடு அந்தமணி ஆரம் இறைவர் திருமார்பில் விழ ஏற்றனர் என்னும் வரலாறு ''ஆரம் நீரோடேந்தினான் ஆனைக்காவில் அண்ணலே'' என 7-ஆம் பாசுரத்தில் வருவதும் காண்க.

4. விண்ணின் நண்ணு - வான்வழியாக வருகின்ற. புல்கிய வீரம் ஆய - பொருந்திய வீரத்தையுடைய, மால்விடை. கைதொழ வல்லவர்க்கும் - (எண்ணும் வண்ணம்) தியானிக்குமாறு வல்லவர்க்கும் தீங்கு எதுவும் நேராது என்பது இப்பாடலின் இறுதிப் பகுதியின் பொருள்.

5. வெய்ய, தீ மாலையாடு காதலான் - தீயிற் காதலோடு ஆடும் இயல்புடையவன். மாலை - இயல்பு (தொல். - சொல்).

நாணுமோர்வு சார்வுமுன் நகையுமுட்கு நன்மையும்
பேணுருத செல்வமும் பேசநின்ற பெற்றியான்
ஆணும்பெண்ணு மாகிய வானைக்காவி லண்ணலார்
காணுங்கண்ணு மூன்றுடைக் கறைகொண்மிட றனல்லனே. 6

கூருமாலை நண்பகற் கூடிவல்ல தொண்டர்கள்
பேருமுருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணுங் கைதொழப் பாயுங்கங்கை செஞ்சடை
ஆரநீரொ டேந்தினு னானைக்காவு சேர்மினே. 7

பொன்னமல்கு தாமரைப் போதுதாது வண்டினம்
அன்னமல்கு தண்டுறை யானைக்காவி லண்ணலைப்
பன்னவல்ல நான்மறை பாடவல்ல தன்மையோர்
முன்னவல்லர் மொய்கழ றுன்னவல்லர் விண்ணையே. 8

6. நாணும் ஓர்வு - பிறர் நாணத்தக்க ஞானமும், சார்வும் - எவருக்கும் பற்றுக் கோடாதற்குரிய ஐசுவரியமும். முன்நகையும் - எவருக்கும் முற்பட்ட மகிழ்ச்சியை விளைக்கும் புகழும். உட்கும் - எவரும் அஞ்சத்தக்க வீரியமும், நன்மையும் திருவும். பேண் உருத செல்வமும் - எவற்றையும் பொருட்படுத்தாத வீரியமும். ஆகிய இவ்வாறு குணங் களையும்; பேசநின்ற - அடியவர் கொண்டாடிப் பேசத்தக்க. பெற்றியான் - தன்மையை உடையவன்.

7. மாலை, நண்பகல் கூறவே ஏனைக்காலையும் அடங்கிற்று, முப் பொழுதிலும் என்க. "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் மூர்த்தி யவனிருக்கும் வண்ணங்கேட்டாள், பின்னையவனுடைய ஆரூர்கேட்டாள்" என்ற அப்பர் வாக்கோடு இரண்டாமடி யொத்திருத்தல் காண்க. கங்கை நீரோடு செஞ்சடை ஆர ஏந்தினன் என்க.

8. பொன்னம் - இலக்குமி. தனிமொழியும் சாரியை பெற்றது. திருவடியை நினைக்கும் தன்மைவல்லர் ஆவார் விண்ணையும் அடைய வல்லர் ஆவார். (விண் - முத்திப்பேறு) என்பது ஈற்றடியின் பொருள்.

ஊனொடுண்ட னன்றென ஊனொடுண்ட நீதென
ஆனதொண்ட ரன்பினாற் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்று
ஆனொடஞ்சு மாடினா னானைக்காவு சேர்மினே. 9

கையிலுண்ணுங் கையருங் கடுக்கள்தின் கழுக்களும்
மெய்யைப்போர்க்கும் பொய்யரும் வேதநெறியை யறிகிலார்
தையல்பாக மாயினான் றழலதுருவத் தானெங்கள்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. 10

ஊழியூழி வையகத் துயிர்கடோற்று வானொடும்
ஆழியானுங் காண்கிலா வானைக்காவி லண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகண் மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

9. மூதலீரடி கண்ணப்பநாயனார் வழிபாட்டையும், சிவகோசரியார் வழிபாட்டையும் குறிப்பது. வானோடு ஒன்று - வானில் பொருந்துதலை யுடைய (மதியை) சூடினான். ஒன்று - ஒன்று தலையையுடைய மதிக்கு ஆனது தொழிலாகு பெயர். ஆனோடு அஞ்சு - மூன்றனுருபு ஆறன் பொருளில்வந்த வேற்றுமை உருபு மயக்கம்.

10. கடுக்கள் - கடுக்காய்கள். கழுக்கள் - கழுந்து போல்வார். மெய்யைப்போர்க்கும் பொய்யர், உடம்பைப் போர்வையாற் போர்ப்போர் எனவும், பொய்யை மெய்யாக நடிப்போர் எனவும் பொருள்தரும் சிலேடை.

11. ஊழிக்காலம் தோறும், உயிர்கள் தோற்றுவான்-உயிர்களுக்குத் தனு, கரண, புவன, போகங்களைப் படைப்பவன். வாழி - வாழ்வு தருவது. இகரம் கருவிப் பொருளில் வந்தது. பதிகக்குறிப்பு எட்டாம் பாடலில் இராவணன் செயல் குறிக்கப்பெருமலும், ஒன்பதாம் பாடலில் வரும் அரி, பிரமர் செயல் திருக்கடைக்காப்பில் வரப்பெறவும் அமைந் துள்ளது.

# 54 பொது திருப்பதிகம்

திருப்பாசுரம்

## 312 பதிகவரலாறு

நான் மறை வாழவந்தாராகிய புகலிவேந்தர் பஞ்சவன் நாட்டுளோர்க்கு நன்னெறி காட்ட வந்தவர் ஆதலின் சின்னங்கள் ஒலிக்க வையையாற்றின் கரையை மருவினர், பருவ மகளிர் உள்ளம் தம் பதியிடத்தில் விரைந்து செல்லும் ஆறுபோல, அவ்வாறும் தன் பதியான கடலை நோக்கி விரைந்து ஓடுகின்றது. அரசன், ஆளுடைய பிள்ளையாரையும் அமணரையும்ஆற்றில் அவரவர் ஏட்டை விடுக வென்றான். அமணர் விட்ட ஏடு அத்திநாத்தி என்பதைக்கொண்டது. அது இரண்டாவதாயுள்ள நாத்தியை வெள்ளத்தில் காட்டிற்று அமணர் வெட்கத்துடன் பிள்ளையாரது திருஞானப் பாடலை விடச்சொல்லினர். தேசுடைப் பிள்ளையார் பாசுரம் பாடலுற்றார். அதுவே இத் திருப்பதிகம்.

குறிப்பு :- இப்பதிகத்துக்குச் சேக்கிழார் பெருமான் விளக்கியருளிய உரைக்குறிப்பே போற்றப் படுகிறது.

**திருப் பாசுரம்**

**பண் - கௌசிகம்**

திருச்சிற்றம்பலம்

வாழ்கஅந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. 1

1. (அ) அந்தணர், வானவர். ஆன் இனம் வாழ்க என்றது வேள்வி முதலியவற்றாலும் ஆலயங்களில் சிவார்ச்சனை முதலிய வழிபாடுகளும் நிலைத்து நிற்கவும், அங்ஙனம் நிலைத்து நிற்றலால் உலகம் சுபிட்சமாக வாழவும்வேண்டி இங்ஙனம் வாழ்த்துவது (821) வேள்வியால் உலகம் "சுபிட்சம் உறும் எனலை, கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே செற்றார்" என்பதாலும் அறிக. (நாலாம் திருமுறை)

(ஆ) தண்புனல் வீழ்க என்றது. வேள்வியின் பயன்மழை பெய்தலும், குறித்து. மழையை வாழ்த்தியவாறு.



வைகையில் இட்ட ஏடு எதிர்ஏறிச்சென்றது

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. 2

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தியா வெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகையார் கொலோ. 3

---

(இ) வேந்தனும் ஓங்குக என்றது - சிவாலய பூசை முதலாகிய இவற்றை என்றும் அழியாது காத்துவருபவன் அரசன், ஆதலின் அரசனை வாழ்த்தியவாறு. "ஆ பயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர் காவலன் காவான் எனின்" என்ற குறட்கருத்தை நோக்குக.

(ஈ) தீயது எல்லாம் ஆழ்க என்றது. சைவசமய மல்லாத மற்றைச் சமய நெறிகளெல்லாம் ஒழிக என்றும், உயிர்கட்குத் தீமை பயப்பன பிற அனைத்தும் ஒழிக என்றவாறு. எல்லாம் என்னும் எழுவாய்க்குப் பயனிலை சூழ்க என்பது. இது சேக்கிழார் அருளிய பொருளிற்கண்டது.

(உ) அரன்நாமமே சூழ்க என்றது. ஆன்மவர்க்கங்கள் அனைத்தும் சிவபெருமான் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தை ஓதி வாழ்ந்து, ஓங்குவன ஆகுக என்றவாறு. "ஐந்தெழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை, முனைவனே முதல் அந்தம் இல்லாமற் கரைகாட்டி ஆட்கொண் டாய்" என்ற திருவாசகக் கருத்தும் காண்க.

(ஊ) வையகமும் துயர்தீர்கவே என்றது. உலகத்தவர்க்கு இம்மை மறுமை இரண்டிலும் நேரக்கூடியதுன்பங்கள் நீங்குக என்றவாறு.

2. அரிய காட்சியராய்... வாழ்க்கையர் என்றது, அன்பில்லார்க்குக் காண்டற்கு அரியர் (ஆகி) (இருந்தும்) மெய்யன்புடைய அடியவர்க்கு அவன் உருமேனி தரித்துவந்து, தமது அங்கை சேர் எரியர், ஏறுகந் தேறுவர் கண்டமும் கரியர், காடுறை வாழ்க்கையராய் எளிதிற்காணக் காட்சி அருளுவர் என்றவாறு. ஆயினும் பெரியர் என்றது. இவ்வடிவே அன்றி, பிருதிவி முதலாகிய பூதங்களும், ஆன்மகோடிகளும், பல்கோடி யண்டங்களும் பிற அனைத்தும் தன்வடிவாக நிற்பன் என்றவாறு - சிவ ஞானசித்தியார். ஆர் அறிவார் அவர்பெற்றி (பெற்றி - தன்மை) என்றது. பசுகரணம் கெட்டுப் பதிகரணத்தால் அவனருளே கண்ணாகக் காணின் அல்லால் எவராலுங் காண்டற்கரியவனென்றபடி

3. வெந்தசாம்பல் விரைஎனப் பூசி என்றது. (விரை - வாசனை) தம் திருவுருவின் பேரொளிப்பிழம்பின் முன், (பிரளயகாலத்து) உல கெலாம் வெந்த ஒளி, ஒரு சிறு ஒளியாகவும் சாலாமையை விளக்கி

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார். 4

ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கீரிறையே வந்து சார்மின்களே. 5

அதன் அறிகுறியாக அச்சாம்பலைச் சாந்தாகப் பூசினர் என்றபடி. சிவம் - பேரொளிப் பிழம்பு. "அண்டம் ஆரிருளூடுகடந்து உம்பர், உண்டுபோலு மோர் ஒண்சுடர் அச்சுடர், கண்டிங்கார் அறிவார், அறிவாரெலாம் வெண்டிங்கட்கண்ணி வேதியன் என்பவே." தந்தையாரொடுதாய் இலர் என்றது - உலகை ஒடுக்கி மீளத்தோற்றுவித்தலால், உலகிற்குத்தாமே தாயும் தந்தையும் ஆவதல்லது, தாம் பிறப்பு, இறப்பு இல்லாதவர் என்றபடி. தம்மையே சிந்தியா எழுவார்வினை தீர்ப்பவர் என்றதை, ஒளி யாகிய தம்மை நினைத்தலால், இருளாகிய வினைநீங்கச்செய்பவர் என்றபடி. எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ என்றது. அளப்பரும் காட்சிப் பொருந்தன்மையை எவ்வகைக்கூற்றிலும் கூறமுடியாது என்பதாம்.

4. ஆதி ஆட்பால் அவர்க்கு அருளும் வண்ணமும் மாண்பும்... வேண்டா என்றது. முதல்வராகிய அவர்தம் அடியார்களுக்கு அருளும் விதத்தையும் அவர்தம் மாட்சிமையையும். கேட்பான்புகில் - கேட்கவும் சொல்லவும் தொடங்கினால். அளவு இல்லை - அளவில்லாதன ஆதலால், கிளக்க வேண்டா - அவைபற்றிய ஆராய்ச்சியொன்றும் இயம்பவேண்டா என்றவாறு. கோட்பால...தக்கார் என்றது. எந்தை தாள்பால் - எம் இறைவனின் திருவடியில் வணங்கி, தலைநின்று - சார்ந்து. தக்கார் - பக்குவிகள், இவை - அருளும் வண்ணம் மாண்பு ஆகிய இவற்றை(க் கேட்பாராக) அது நம்மைப்பற்றித் துன்புறுத்தும் துன்பங்களும் அவற்றின் காரணமாகிய வினைகளும் சாராமல் ஒழியும் பொருட்டு என்றவாறு.

5. ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டாஎன்றது - சிவன் ஒப்புயர்வற்ற பொருளாதலால் ஏதுக்களுக்கும், எடுத்துக்காட்டுக்களுக்கும், அப்பாற்பட்டவன் - அளந்தறிய முடியாதவன். ஏதுக்களாற் சோதித்தல் - அநுமானப் பிரமாணத்தாலறிதல். எடுத்த மொழியாற் சோதித்தல் - உரையளவையாற் சோதித்தறிதல், ஆகமப்பிர மாணமும், உவமைப் பிரமாணமும் ஆம். சுடர்விட்டுளன் ஏங்கள் சோதி

ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவநீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. 6

கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் மறிவார் சொலக்கேட்டு மன்றே. 7

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. 8

என்றது - தன்னைக் காணலுறுவார் புறக்காட்சிக்கு அனற்பிழம்பாயும், அகக்காட்சிக்கு ஆழ்ந்த அன்பினால் நினைய உள் எழுந்த சோதியாயும் விளங்குகின்றவன் என்றபடி. மாதுக்கம் நீங்கல் உறுவீர் மனம்பற்றி வாழ்மின் என்றது - ஆதிச்சுடர்ச் சோதியாகிய அரனை அன்பினால் மனத்தின்கண் பாலித்து, அறிவானந்த நோக்கோடு அவனையே இடைவிடாது நோக்கி வாழ்ந்து பிறவித்துயர் நீக்குமின் என்றபடி. சாதுக்கள்... சார்மின்களோ என்றது - வேண்டும் விருப்பம் எல்லாம் இறைவன் திருவடியே என்று பேரன்பினால் போற்றுவீர், இறையே வந்து சார்மின் - கணப்பொழுதேனும் அவன்பால் வந்து சார்மின் என்றபடி.

6, ஆடும் எனவும் நாட்டல் ஆமே என்றது - ஆடுதல், கூற்றம் உதைத்தல், வேதம் பாடுதல், என்னும் இறைவன் செயலாகிய இம் மூன்றும் புகழ்கருதியோ ஆன்மாக்களை உய்விக்கவேண்டியோ என ஆராய்வீராகில் புகழலால் அவனுக்கு ஆவது என்னை? துன்பம் அடைதலும் அதற்குக் காரணமான பிறப்பும் நீங்கி உயிர்கள் உய்தி கூட வேண்டும் என்னும் நிர்ஹேதுக் கருணையன்றிப் பிறிதென்? உயிர்களை உய்விக்கக் கருதியே இறைவன் இவை செய்கிறான் என்றபடி.

7. கடி ... ... அன்றே என்றது.- "அரனடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறமதாகும், பரனடிக்கு அன்பிலார்செய் புண்ணியம் பாவமாகும், வரமுறுதக்கன் செய்த மாவேள்வி தீமையாகி, நரகிடைப் பாலன்செய்த புண்ணியம் நன்மையாய்த்தே" என்ற கருத்தும் அறிக.

8. வேதமுதல்வர் ... ... சொல்லே என்றது:- பதினெண்புராணங்களும் - சிவ பரத்துவம் சொல்வனவே, உலகத்தவர், ஏதப்படாமை - ஒழுக்க நெறி தவறுதலாகிய குற்றம் அடையாமைப் பொருட்டுக் கூறிய

பாராழி வட்டம் பகையா னலிந்தாட்ட வாடிப்
பேராழி யானதிடர் கண்டருள் செய்தல் பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்ட வர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 9

மாலா யவனும் மறைவல்ல நான்மு கனும்
பாலாய தேவர் பகரில் லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலால முண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. 10

அற்றன்றி யந்தண் மதுரைத் தொகை யாக்கினுனும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே. 11

இப்புராணங்கள் ஓதியுணரத்தக்கன என்றவாறு. (சூதன் - சூதபுராணிகர்) ஒலிமாலை - உண்மைக் கருத்துக்களை விரிவுறக் கூறும், நூல் வரிசைகள் எனப்பொருள்படும். கவிக்கோவை – புராணங்கள்.

9. நலிந்து ஆட்ட - நலிவுறுத்தி அலைக்கப்பட, ஆடி - அலைந்து. இடர் கண்டு - துன்பத்தை அறிந்து, அருள் செய்தல் பேணி - அதற்கு அருள் செய்யுங்கடமையைக் கருதி, போர் ஆழிஈந்தபுகழ் - போர்க் கருவியாகிய சக்ராயுதத்தையன்றோ? நீர் ஆழிவிட்டு ஏறி - கண்துயிலும் கடலை விட்டுப் பூமிக்கு வந்து, நெஞ்சு இடம் கொண்டார்க்கு - தம்மைத் தன் நெஞ்சிடத்திற்கொண்ட திருமாலுக்கு, நெஞ்சிடம் கொண்டார் - தியாகேசமூர்த்தியைத் திருமால் தனது இருதயத்திற் பூசித்துவந்தமையும், பின் இந்திரன் பால்வந்த அம்மூர்த்தி முசுகுந்த சக்ரவர்த்திமூலம் திருவாரூரில் எழுந்தருளின ரென்பதும் வரலாறு.

10. மாலாயவனும்...செய்த்தாமே என்றது:— திருமால் முதலிய தேவர்கள் இறந்தொழியாமைப் பொருட்டு இறைவன் நஞ்சுண்டு காத்த கருணைத்திறம் கூறியபடி.

11. அன்றன்றி... அன்றே என்றது:— மதுரையிற் சங்கம் வைத் தருளியவனும், சிவனேபரம் என்று தோற்றவும் தேருத சமணர்கள் தெளிய, வையையிலிட்ட ஏடு எதிர்ந்துசெல்ல வைத்தவனுமாகிய பெருமானல்லவா இறைவன் என்னத்தக்கவன். ஆதலின் அவனுக்கே அன்பு செலுத்தத்தக்கது என்றவாறு.

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தனல்ல
எல்லார்களும்பரவு மீசனை யேத்து பாடல்
பல்லார் களும் மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. 12

திருச்சிற்றம்பலம்

12. பத்து - என்றது இலக்கணை. "மும்மதத்தன் என்ற சிவஞான சித்தியார் காப்புக்கு மாதவச் சிவஞானயோகிகள் உரைத்த உரையாலும் அறிக. "உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும் நிலவும் மெய்ந்நெறி சிவநெறிய தென்பதும் கலதிவாய் அமணர் காண்கிலார்கண் ஆயினும் பலர்புகழ் நென்னவனறியும் பான்மையால்" என்பதும் "உள்ளவண்ணம் பலரும் உணர்ந்துய்யப் பகர்ந்து" என்பதும் சேக்கிழார் பெருமான் திரு வாக்கு.

மன்னிருகால் சேலை வளர்வெள்ளத் தும்பரோடும்
பன்னிருகால் நீரின் மிதந்தவூர்—மன்னும்
பிரமனூர் வேணுபுரம் பேரொலிநீர்ச் சண்பை
அரன்மன்னு தண்காழி அம்பொற்—சிரபுரம்
பூந்தராய் கொச்சைவயம் வெங்குருப் பொங்குபுனல்
வாய்ந்தநல் தோணி புரம்மறையோர்—ஏய்ந்த
புகலி கழுமலம் பூம்புறவம் என்றிப்
பகர்கின்ற பண்புற்ற தாகித்—திகழ்கின்ற
மல்லைச் செழுநகர மன்னவும் வல்லமணர்
ஒல்லைக் கழுவில் உலக்கவும்—எல்லையிலா

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 55 திருவான்மியூர்

## 113 பதிகவரலாறு

சிரபுரத்துப் புரவலனுர், அரவநெடுந் திரைவேலை அணிவான்மியூரில் சிலநாள் இனிது இருந்தபோது, அங்கு வீற்றிருக்கும் உலகாளுடையாரைப் போற்றிய பல அருந்தமிழிசைப் பதிகளுள் ஒன்று இது.

**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

விரையார் கொன்றையினுய் விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமைநங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி யூருறையும்
அரையா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 1

இடியா ரேறுடையா யிமையோர்தம் மணிமுடியாய்
கொடியார் மாமதியோ டரவம்மலர்க் கொன்றையினுய்
செடியார் மாதவிசூழ் திருவான்மி யூருறையும்
அடிகே ளுன்னையல்லா லடையாதென தாதரவே. 2

கையார் வெண்மழுவா கனல்போற்றிரு மேனியனே
மையா ரொண்கணல்லா ளுமையாள்வளர் மார்பினனே
செய்யார் செங்கயல்பாய் திருவான்மி யூருறையும்
ஐயா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 3

1. விரை - வாசனை. உரைஆர் -(அடியவர்) பேச்சில் பொருந்திய· அரையா - அரசனே, ஆதரவு - புகலிடமாகக் கொள்வது; ஆசை எனினும் ஆம். அரசன் - அரையன் என வந்தது எழுத்துப் போலி.

2. இடி ஆர் ஏறு - இடியைப்போல் ஒலிக்கும் ஏறு. ஆர்த்தல் - ஒலித்தல். கொடி - ஒழுங்கு. செடி ஆர் மாதவி - செடிகளோடு கூடிய மாதவி முதலிய தருக்கள். சூழ்திருவான்மியூர். மாதவி ஏனை மரங்களையும் தழுவலால் உபலட்சணம்.

3. வளர் - தங்குகின்ற.

பொன்போ லுஞ்சடைமேற் புனல்தாங்கிய புண்ணியனே
மின்போ லும்புரிநூல் விடையேறிய வேதியனே
தென்பால் வையமெலாந் திகழுந்திரு வான்மிதன்னில்
அன்பா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 4

கண்ணா ருந்நுதலாய் கதிர்சூழொளி மேனியின்மேல்
எண்ணார் வெண்பொடிநீ றணிவாயெழில் வார்பொழில்சூழ்
திண்ணார் வண்புரிசைத் திருவான்மி யூருறையும்
அண்ணா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 5

நீதீ நின்னையல்லா னெறியாது நினைந்தறியேன்
ஓதீ நான்மறைகண் மறையோன்றலை யொன்றினையும்
சேதீ சேதமில்லாத் திருவான்மி யூருறையும்
ஆதீ யுன்னையல்லா லடையாதென தாதரவே. 6

வானார் மாமதிசேர் சடையாய்வரை போலவரும்
கானா ரானையின்றோ லுரித்தாய்கறை மாமிடற்றாய்
தேனார் சோலைகள்சூழ் திருவான்மி யூருறையும்
ஆனா யுன்னையல்லா லடையாதென தாதரவே. 7

4. புனல் - கங்கை நீர். கரிநூலொடு விடையேறிய வேதியனே. வேதியன் என்பதற்கேற்ப, புரிநூல் அடை அடுத்தது. அந்தணனாகி அறவிடையேறி வருவான் என்பது, தென்பால் - தமிழ்நாடு. தமிழ் நாட்டிலுள்ளதாகிய, உலகமெங்கும் விளங்கும் திருவான்மியூர் என்க.

5. எண் ஆர் - பாராட்டுதற்குறிய, பொடி நீறு - பொடியாகிய திரு நீறு - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அண்ணா - தந்தையே, திசைச்சொல்.

6. நீதி - நீதிவடிவாயுள்ளவனே, உன்னையே நினைப்பதல்லாமல் உன்னை வழிபடுவதற்குரிய முறை எதனையும் நினைந்தறியேன் என்பது முதலடிக்குப் பொருள். ஓதிநான்மறைகள் - நான்கு வேதங்களையும் ஓதினவனே, சோதீ - சோதித்தவனே, சோதித்தல் - வெட்டுதல், (நகத்தாற் கிள்ளினமை.) ஆதீ - முதல்வனே.

7. கான் ஆர் ஆனை - காட்டிலுள்ள யானை, ஆனாய் - இடபவாக னத்தை யுடையவனே. ஆன் - பொதுப்பெயர். இங்குக் காளையை உணர்த்திற்று. 'பசுவேறும் எங்கள் பரமன்' என்றதும் காண்க (கோளறு திருப்பதிகம் 9) தேன் - வண்டு.

... ... ... ... ... 8

பொறிவாய் நாகணையா னொடுபூமிசை மேயவனும்
நெறியார் நீள்கழன்மேன் முடிகாண்பரி தாயவனே
செறிவார் மாமதில்சூழ் திருவான்மி யூருறையும்
அறிவே யுன்னையல்லா லடையாதென தாதரவே. 9

குண்டாடுஞ் சமணர் கொடுஞ் சாக்கிய ரென்றிவர்கள்
கண்டார் காரணங்கள் கருதாதவர் பேசநின்றுய்
திண்டேர் வீதியதார் திருவான்மி யூருறையும்
அண்டா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 10

கன்று ருங்கமுகின் வயல் சூழ்தரு காழிதனில்
நன்றுன புகழான் மிகுஞானசம் பந்தனுரை
சென்றூர் தம்மிடர்தீர் திருவான்மி யூரதன்மேல்
குன்று தேத்தவல்லார் கொடுவல்வினை போயறுமே. 11

திருச்சிற்றம்பலம்

8. ... ... ... ... ... ... ...

9. பொறிவாய் - புள்ளிகள் பொருந்திய, நாகணையான் - நாகஅணையான், நாகணைஎன்பது மருஉ 'கோணாகணையானும்' எனப் பின்னும் வருதல் அறிக. நீள்கழல் - பாதாளத்தின் கீழும் நீண்ட திருவடிகள். மேல்முடி - வானுலகின் மேலும் சென்ற முடி. நெறியார் கழல்.

10. குண்டு ஆடும் சமணர் - விதண்டை பேசுகின்ற, கண்டார் காரணங்கள் கருதாதவர் - சிலவற்றையறிந்தும், அவற்றின் காரணங்களை அறியாதவர் என்றது, உலகு உள் பொருள் என்று அறிந்தும் அது ஒருவனுற் படைக்கப்படவில்லை எனல் போல்வன. அண்டா - தேவனே.

11. கன்று - இளஞ்செடி, திருவான்மியூர் அதன்மேல் ஞானசம்பந்தன் உரை என இயைக்க.

# 56 திருப்பிரமபுரம்

314 **பதிகவரலாறு**

இது பெரியபுராணத்தில் குறிக்கப்பெருதது

**பண் - கௌசிகம்**

திருச்சிற்றம்பலம்

இறையவ னீசனெந்தை யிமை யோர்தொழு தேத்தநின்ற
கறையணி கண்டன்வெண்டோ டணிகாதினன் காலத்தன்று
மறைமொழி வாய்மையினுன் மலையாளொடு மன்னுசென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிரமாபுரம் பேணுமினே. 1

சடையினன் சாமவேதன் சரிகோவண வன்மழுவாட்
படையினன் பாய்புலித்தோ லுடையான்மறை பல்கலைநூல்
உடையவ னூனமில்லி யுடனுயுமை நங்கையென்னும்
பெடையொடும் பேணுமிடம் பிரமாபுரம் பேணுமினே. 2

1. வெண்தோடு - சங்கக்குழை, காலத்துஅன்று மறைமொழி வாய்மையினுன் - அக்காலத்தில் வேதத்தின் பொருளை உபதேசித்தருளியவன். வாய்மை - உபதேச மொழி, வாய்மை என்க. என்றது வேதத்துக்குப் பொருளைச் செய்த திருவிளையாடற் புராணசரிதையை. சென்னி - சென்னியின்கண், சடையான். பிரமாபுரம், பிரமபுரம் இரு விதமும் வழக்குண்மை அறிக.

2. சாமவேதன் - சிவனுக்கொரு பெயர். 'சங்கரன் சாமவேதி என்ற' அப்பர் திருவாக்கானும் அறிக. (திருநேரிசை) மறைபல்கலை நூல் உடையவன் - வேதம் முதலிய பலகலை நூல்களுக்கும் தலைவன். பெடை - பெண் பறவை, அன்னம் - மயில் - குயில் இவற்றைக் குறிக்கும்-உருவகம்.

மாணியை நாடுகாலனுயிர் மாய்தரச் செற்றுக்காளி
காணிய வாடல்கொண்டான் கலந்தூர்வழி சென்றுபிச்சை
ஊணியல் பாகக்கொண்டங் குடனேயுமை நங்கையொடும்
பேணிய கோயின்மன்னும் பிரமாபுரம் பேணுமினே. 3

பாரிடம் விண்ணுமெங்கும் பயினஞ்சு பரந்துமிண்டப்
பேரிடர்த் தேவர்கணம் பெருமானிது காவெனலும்
ஓரிடத் தேகரந்தங் குமைநங்கையொ டும்முடனே
பேரிட மாகக்கொண்ட பிரமாபுரம் பேணுமினே. 4

நச்சர வச்சடைமே னளிர்திங்களு மொன்றவைத்தங்
கச்ச மெழவிடைமே லழகார்மழு வேந்திநல்ல
இச்சை பகர்ந்துமிக விடுமின்பலி யென்றுநாளும்
பிச்சைகொ ளண்ணனண்ணும் பிரமாபுரம் பேணுமினே. 5

பெற்றவன் முப்புரங்கள் பிழையாவண்ணம் வாளியினாற்
செற்றவன் செஞ்சடையிற் றிகழ்கங்கை தனைத்தரித்திட்
டொற்றை விடையினனு யுமைநங்கையொ டும்முடனே
பெற்றிமை யாலிருந்தான் பிரமாபுரம் பேணுமினே. 6

3. மாணி - பிரமசாரி, மார்க்கண்டர். செற்று - கொன்று. நாணிய- நாணும்படி. ஊர்வழி கலந்து என்க. ஊன் - உண்ணுதல்,

4. மிண்ட - அதிகரிக்க. இதுகா - இதனின்றும் காத்தருள்க' ஐந்தனுருபுத்தொகை ஓரிடத்தே - கண்டமாகிய ஓரிடத்தே, கரந்தான்.

5. நச்சரவம் - நச்சு + அரவம். நளிர் - குளிர்ந்த. அங்கு - அசை 'போர்த்தாய் அங்கு ஓர் ஆனையின்தோல்' என்புழிப்போல் (திருமுறை 4, பதிகம் 10) அச்சம் எழ மழு ஏந்தி என்க, மிக இச்சை பகர்ந்து எனவும், பலிஇடுமின் எனவும் மாற்றுக.

6. பெற்றுஅவன் - இடபவாகனத்தையுடையவன். 'பெற்றொன்றேறி' எனப்பின் வருதலும் காண்க. (திருமுறை 3 பாசுரம்) பெற்றிமையால் - தன்மையோடும்.

வேத மலிந்தவொலி விழவின்னொலி வீணையொலி
கீத மலிந்துடனே கிளரத்திகழ் பௌவமறை
ஓத மலிந்துயர்வான் முகடேறவொண் மால்வரையான்
பேதையொ டும்மிருந்தான் பிரமாபுரம் பேணுமினே. 7

இமையவ ரஞ்சியோட வெதிர் வாரவர் தம்மையின்றி
அமைதரு வல்லரக்கன் னடர்த்துமலை யன்றெடுப்பக்
குமையது செய்துபாடக் கொற்றவாளொடு நாள்கொடுத்திட்
டுமையொ டிருந்தபிரான் பிரமாபுர முன்னுமினே. 8

ஞால மளித்தவனும் மரியும்மடி யோடுமுடி
காலம் பலசெலவுங் கண்டிலாமையி னுற்கதறி
ஓல மிடவருளி யுமைநங்கையொ டும்முடனாய்
ஏல விருந்தபிரான் பிரமாபுர மேத்துமினே. 9

துவருறு மாடையினர் தொக்கபீலியர் நக்கரையர்
அவரவர் தன்மைகள்கண் டணுகேன்மின்ன ருள்பெறுவீர்
கவருறு சிந்தையொன்றிக் கழிகாலமெல் லாம்படைத்த
இவரவ ரென்றிறைஞ்சிப் பிரமாபுர மேத்துமினே. 10

7. வேதஒலி முதலிய ஒலிகள் மிக, அவை. பௌவம் - கடல் ஒலியையும். மறை - மறைக்கவல்ல, ஓதம் மலிந்து - ஓசையாகப் பெருகி. வரன்முகடு ஏற - ஆகாயத்தின் உச்சியை அடைய, ஒள் பிரமாபுரம் - அழகாகிய பிரமாபுரம். மால்வரையான்பேதை - மலைமகள்.

8. அடர்த்து - மோதி, குமை (அது) செய்து - குழைத்தல் செய்து, குழைத்து, அது - பகுதிப்பொருள் விகுதி. பாட - பாடினதினால், உன்னுமின் - நினையுங்கள்.

9. ஞாலம் - பூமி, அளித்தவன் - படைத்தவன், ஏல - பொருத்த மாக, ஏத்து மின் - துதியுங்கள்.

10. தொக்க - தொகுத்துக்கட்டிய, நக்கரையர் - நக்க - அக்ரயர் என்பதன் மரூஉ. நக்கம் - நக்நம் - ஆடையின்மை, அரையர் - இடுப்பை யுடையவர், அணுகேன்மின் அருள் பெறுவீர் - அருள்பெற விரும்புவீர் அணுகாதீர்கள். கழிகாலம் - சென்ற காலம் முதலிய, எலாம் - எல்லாத்

உரைதரு நான்மறையோர் புகழ்ந் தேத்தவொண் மாதினொடும்
வரையென வீற்றிருந்தான் மலிகின்ற பிரமபுரத்
தரசினை யேத்தவல்ல வணிசம்பந்தன் பத்தும்வல்லார்
விரைதரு விண்ணுலகம் மெதிர்கொள்ள விரும்புவரே. 11

திருச்சிற்றம்பலம்

தத்துவங்களையும் படைத்த, இவரவர் என்பதனை அவர் இவர் என மாற்றி - அந்தப்பரம்பொருள் பிரமாபுரத்தில் எழுந்தருளிய இறைவனென்று பொருள் கொள்க.

11. பத்தும் - பத்துப்பாசுரங்களும். (ஆகுபெயர்) விரைதரு - கற்பகப்பூமணம் வீசுகின்ற, (விண்ணுலகம்) விரும்புவர் - விரும்பியடைவர்.

மாதவத்தோர் வாழவும் வையகத்தோர் உய்யவும்
மேதக்க வானோர் வியப்பவும்—ஆதியாம்
வென்றிக் கலிகெடவும் வேதத் தொலிமிகவும்
ஒன்றிச் சிவனடியார் ஓங்கவும்—துன்றிய
பன்னு தமிழ்ப்பதினா றுயிர நற்பனுவல்
மன்னு புவியவர்க்கு வாய்ப்பவும்—முன்னிய
சிந்தனையாற் சீரார் கவுணியர்க்கோர் சேய்என்ன
வந்தங் கவதரித்த வள்ளலை—அந்தமில்சீர்
ஞானச் சுடர்விளக்கை நற்றவத்தோர் கற்பகத்தை
மான மறையவற்றின் வான்பொருளை—ஆனசீர்த்
தத்துவனை நித்தனைச் சைவத் தவர்அரசை
வித்தகத்தால் ஓங்கு விடலையை—முத்தமிழின்
செஞ்சொற் பொருள்பயந்த சிங்கத்தைத் தெவ்வருயிர்
அஞ்சத் திகழ்ந்த அடலுருவை—எஞ்சாமை

—ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை

# 57 திருவொற்றியூர்

## 315 பதிகவரலாறு

திருஞானம் உண்ட செல்வர், திருவேற்காடும், திருவலிதாயமும் எய்திவணங்கிப் போற்றித் திருவொற்றியூரில் தொண்டரும் அப் பெரும் பதியோரும் எதிர் கொள்ளச் சென்று தொழுது பாடியது இத் திருப்பதிகம்.

**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

விடையவன் விண்ணுமண்ணுந் தொழ நின்றவன் வெண்
[மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடை கோவணம் பல்கரந்தைச்
சடையவன் சாமவேதன் சசிதங்கி சங்கவெண்டோ
டுடையவன் னூனமில்லி யுறையும்மிட மொற்றியூரே. 1

பாரிடம் பாணிசெய்யப் பறைக்கட்செறு பல்கணப்பேய்
சீரொடும் பாடலாட லில யஞ்சிதை யாதகொள்கைத்
தாரிடும் போர்விடையன் றலைவன்றலை யேகலனு
ஊரிடும் பிச்சைகொள்வா னுறை யும்மிட மொற்றியூரே. 2

1. வெண்மழு - இரத்தக்கறைதோய்தலின்மையினுல் வெண்மை யாகவுள்ள மழு. மழு - மழுவாள் எனவும் படும். ஆகையினுல் மழு வாள் படையவன் என்ருர். படை - ஆயுதம். சசி தங்கிய - சந்திரனைப் போன்ற, வெண்சங்கத்தோடு, உடையவன். தங்கிய - உவமவாசகம் அடைந்தவர்க்கு ஊனம் இல்லையாகச் செய்பவன்.

2. பாரிடம் - பூதம், பாணி செய்ய - பாட. பறைக்கண் - பறை போன்ற கண்பார்வையினுலேயே, செறு - கண்டாரைக் கொல்லவல்ல. பல்கணப் பேய் - பல பேய்க்கூட்டங்களின், சீரொடும் - தாளவொத் தோடும் - இலயம் - ஒன்றுதல், சிதையாத கொள்கை - சிதையாத முறை யோடு. பாடல் ஆடல் - பாடலுக்கேற்ற ஆடலையுடைய. விடையன். தார் - கிண்கிணிமாலை.

விளிதரு நீருமண்ணும் விசும்போடனல் காலுமாகி
அளிதரு பேரருளா னரனாகிய வாதிமூர்த்தி
களிதரு வண்டு பண்செய்கமழ் கொன்றையி னோடணிந்த
ஒளிதரு வெண்பிறையா னுறையும்மிட மொற்றியூரே. 3

அரவமே கச்சதாக வசைத்தானலர் கொன்றையந்தார்
விரவிவெண் ணூல்கிடந்த விரையார்வரை மார்பனெந்தை
பரவுவார் பாவமெல்லாம் பறைத்துப்படர் புன்சடைமேல்
உரவுநீ ரேற்ற பெம்மா னுறையும்மிட மொற்றியூரே. 4

விலகினார் வெய்ய பாவம் விதியாலருள் செய்துநல்ல
பலகினார் மொந்தைதாளந் தகுணிச்சமும் பாணியாலே
அலகினால் வீசிநீர்கொண் டடிமேலல ரிட்டுமுட்டா
துலகினா ரேத்தநின்றா னுறையும்மிட மொற்றியூரே. 5

3. விளிதருநீர் - பிரளயகாலத்து உலகை அழிக்க வல்ல தண்ணீர். அளிதரு - (உயிர்களைக்) காக்கின்ற. பேர் அருளான் - பெருங்கருணை யுடையவன், அரன் ஆகிய - சங்காரகர்த்தாவும் ஆகிய ஆதிமூர்த்தி. எவன் சங்கார கர்த்தாவோர் அவனே முழுமுதற்கடவுள் என்னும் உண்மை நூற்கருத்துப்பற்றி இங்ஙனம் கூறினார்.

4. அசைத்தான் - கட்டியவன். விரையார்வரைமார்பன் - கலவைச் சாந்தணிந்த மலைபோன்ற மார்பையுடையவன். பரவுவார்பாவம் எல்லாம். பறைத்து - ஓட்டி. 'பரவுவார் பாவம் பறைக்கும் அடி' என்ற அப்பர் வாக்கிலும் (திருமுறை 6) இத்தொடர் பயில்கிறது. உரவுநீர் - உலாவும் நீர் (சீவகசிந்தாமணி) - கங்கை. ஏற்ற - தாங்கிய. பெம்மான் - பெருமான்.

5. வெய்யபாவம் விலகினார்-கொடிய பாவம்நீங்கிய பக்குவிகளுக்கு. விதியால் - விதிப்படி. அருள் செய்து - தீக்கை முதலிய செய்வித்து பாணியால் - பாட்டோடும், அலகினால் - தாளத்தோடும் வீசி - (எண் தோள்) வீசிநின்று ஆடி, உலகினார் நீர்கொண்டு (ஆட்டி) அடிமேல் அலர் இட்டு. முட்டாது ஏத்த - தங்கள் வழிபாடு தடைப்படாவண்ணம் துதித்து வணங்க, நின்றான் - அருள்செய்து, வீசி, எத்தநின்றான் என முடிவு கொள்க.

கமையொடு நின்றசீரான் கழ லுஞ்சிலம் புமொலிப்பச்
சுமையொடு மேலும் வைத்தான் விரி கொன்றையுஞ் சோம
[ளையும்
அமையொடு நீண்டதிண்டோ ளழ காயபொற் றோடிலங்க
உமையொடுங் கூடிநின்ற னுறை யும்மிட மொற்றியூரே. 6

நன்றியால் வாழ்வதுள்ளம் முலகுக்காரு நன்மையாலே
கன்றினார் மும்மதிலுங் கருமால் வரையேசிலையாப்
பொன்றினார் வார் சடலைப் பொடி நீறணிந் தாரழலம்
பொன்றினு லெய்தபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. 7

பெற்றியாற் பித்தனெப்பான் பெருமான்கரு மானுரிதோல்
சுற்றியான் சுத்தி சூலஞ் சுடர்க்கண்ணுதன் மேல் விளங்கத்
தெற்றியாற் செற்றரக்கன் னுடலைச்செழு மால்வரைக்கீழ்
ஒற்றியான் முற்றுமாள்வா னுறை யும்மிடமொற்றியூரே. 8

6. கமை - பெருமை. கழலும் சிலம்பும் ஒலிப்ப என்றது - உமை யொரு கூறன் என்பது உணர்த்தியது. சுமையொடு - சுமையாக. ஒடு - இசைநிறை. அமையொடு - அழகின் அமைதியோடு, நீண்ட திண்ணிய தோளின் மீது, பொன்மயமான காதணி, இலங்க - பிரகாசிக்க.

7. உள்ளம் - உள்ளத்தில். நன்றியால் - பிறருக்கு உபகாரம் ஆம் தன்மையோடு. வாழ்வது - வாழவேண்டுமென்பதை, உலகுக்கு - உலகத் துக்கு. ஒரு நன்மையாலே - நல்லது என்னும் நோக்கத்தினுல். உல குக்குத் தீமை செய்த திரிபுரங்களை அழித்தார் என்றது இடை இரண்டடி களின் கருத்து. கன்றினார் - தீமை செய்வோர்களாகிய அசுரர்கள். கரும்- பெருமைதங்கிய. மால் - பெரிய, வரையேசிலையா - மலையே வில்லாக. பொன்றினார் - பொன்று விப்பாராகி (பொன்னுதல் - சாதல்) அழல் அம்பு ஒன்றினுல் - அக்கினியாகிய ஒரு பாணத்தினுல். எய்த - எய்து அழித்த பெம்மான். வார் - நெடிய, சடலைப்பொடி நீறணிந்தாரும்; மும்மதிலும் பொன்றுவிப்பாராகி அழல் அம்பு எய்த பெம்மானுமாகிய சிவபிரான் உறையும் இடம் ஒற்றியூரே எனக்கொண்டு கூட்டுக. பொன்றினார், பிறவினை விகுதி குன்றியது, முற்றெச்சம்; காலவழுவமைதி.

8. பெற்றி-தன்மை, பித்தனெப்பானுயினும், செய்கையால் அறிவிற் பெரியானுவான் என்பார் பெருமான் என்றார். சுற்றியான் - சுற்றியுடுத் தவன், சுத்தி - இப்பியாலாகிய போக்கணமும், சூலம் - சூலமும்,

திருவினூர் போதினானுந் திரு மாலுமொர் தெய்வமுன்னித்
தெரிவினாற் காணமாட்டார் திகழ் சேவடி சிந்தைசெய்து
பரவினார் பாவமெல்லாம் பறை யப்படர் பேரொளியோ
டொருவனாய் நின்றபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. 9

தோகையம்பீலிகொள்வார் துவர்க் கூறைகள் போர்த்துழல்வார்
ஆகம செல்வனாரை யலர் தூற்றுதல் காரணமாக்
கூகையம் மாக்கள்சொல்லைக்குறிக்கொள்ளன்மி னேழுலகும்
ஓகைதந் தாளவல்லா னுறையும்மிட மொற்றியூரே. 10

ஒண்பிறை மல்குசென்னி யிறை வன்னுறை யொற்றியூரைச்
சண்பையர் தந்தலைவன் றமிழ் ஞானசம்பந்தன் சொன்ன
பண்புனை பாடல் பத்தும் பரவிப்பணிந் தேத்தவல்லார்
விண்புனை மேலுலகம் விருப்பெய்துவர் வீடெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

(கையில் விளங்க) சுடர்க்கண்-அக்கினியாகிய கண், நுதல்மேல் விளங்க - நெற்றியின் மேல் விளங்க, நுதல்மேல் விளங்க என்ற சொல்லாற்றலால் கையில் விளங்க என்பதும் பெற்றும். தெற்றி - உதை, தெற்றியால் - உதையால், ஒற்றியான் - அழுத்தினவன், ஒற்றியான்முற்றும் ஆள்வான்' உலகம் முழுவதையும் ஒற்றிகொண்டு ஆள்வான் என ஒரு பொருள் தோன்றிற்று.

9. திருவின்ஆர் - அழகால்மிகுந்த. ஓர் தெய்வம் முன்னி – தாங்கள் ஓர் தெய்வமாக நினைத்து. தெரிவில் - தம் அறிவால்.

10. ஆகம செல்வனாரை - சிவபெருமானை, அலர்தூற்றுதல் - பழித்துரைத்தல், கூகை - கோட்டான், மாக்கள் - ஐயறிவுடை விலங்குகளோடொப்பவர், "மாவுமாக்களும் ஐயறிவுயிரே" என்பது தொல்காப்பியம் மரபியல்) ஓகை - மகிழ்ச்சி.

11. மல்கு - ஒளி விளங்குகின்ற, விண் - வானிலுள்ள, புனையப்பட்ட, மேலுலகம் - சுவர்க்கலோகம், எய்துவர். அவர்கட்குப்பின் வீடும் எளியது ஆகும்.

# 58 திருச்சாத்தமங்கை

## 319 பதிகவரலாறு

திருநள்ளாற்று மருந்தை வணங்கி வழிபட்ட பாலறுவாயர் பிற திருப் பதிகளைப் போற்றிச், செங்நெல் வயல் செங்கமல முகமலரும் திருச்சாத்த மங்கை மூதூரில் எழுந்தருளி, நீதியால் நிகழ்கின்ற நீல நக்கருடைய பெருஞ்சீர் நிகழவைத்துப் போற்றி செய்தது இத் திருப்பதிகம்.

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

திருமலர்க் கொன்றைமாலை திளைக்கும்மதி சென்னிவைத்தீர்
இருமலர்க் கண்ணிதன்னோ டுட னாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேக முரிஞ் சும்பெருஞ் சாத்தமங்கை
அருமல ராதிமூர்த்தீ யய வந்தி யமர்ந்தவனே. 1

பொடிதனைப் பூசுமார்பிற் புரி நூலொரு பாற்பொருந்தக்
கொடியன சாயலாளோ டுடனாவதுங் கூடுவதே
கடிமண மல்கிநாளுங் கம ழும்பொழிற் சாத்தமங்கை
அடிகணக் கன்பரவ வய வந்தி யமர்ந்தவனே. 2

1. கொன்றை மாலையில் திளைக்கும் மதி, கொன்றை சிவபிரானுக் குரியதாந் தன்மையாலும், பிரணவபுட்பம் எனப்படுவதாலும் - திருமலர் என்னப்பட்டது. இரண்டு மலர்களையொத்த கண்களையுடையவன். மலர் என்றது - தாமரை மலரைக் குறிக்கும். "உயர்ந்ததன்மேற்றே யுள்ளுங் காலை" (தொல். பொருள்.) "மரங்களும் நிகர்க்கில மலையும் புல்லிய" (கம்பர் - ஆரண்ய - சூர்ப்) ஏற்பது ஒன்றே - அனைவரும் உடன்படக் கூடிய ஒரு செயலா? உரிஞ்சும் - உராயும், மலர் - உலகமெங்கும் பரவிய. அரும்-ஒப்பற்ற. ஆதிமூர்த்தி, அயவந்தி - ஆலயத்தின் பெயர்.

2. கொடி அன சாயலாள் - பூங்கொடிபோன்ற தோற்றப் பொலி வினை உடையவள். கூடுவதே - கூடுவது தகுமா? கடிமணம் - புது வாசனை. அடிகள் நக்கன் - அடியராகிய திலநீல நக்கநாயனர். பரவ அயவந்தி அமர்ந்தவனே.

நூனலந் தங்குமார்பி னுகர் நீறணிந் தேறதேறி
மானன நோக்கிதன்னோ டுட னுவது மாண்பதுவே
தானலங் கொண்டுமேகந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
ஆனலந் தோய்ந்தவெம்மா னய வந்தியமர்ந்தவனே. 3

மற்றவின் மால்வரையா மதி லெய்துவெண் ணீறுபூசிப்
புற்றர வல்குலாளோ டுட னுவதும் பொற்பதுவே
கற்றவர் சாத்தமங்கை நகர் கைதொழச் செய்தபாவம்
அற்றவர் நாளுமேத்த வய வந்தி யமர்ந்தவனே. 4

வெந்தவெண் ணீறுபூசி விடை யேறிய வேதகீதன்
பந்தண வும்விரலா ளுட னுவதும் பாங்கதுவே
சந்தமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அந்தமா யாதியாகி யய வந்தி யமர்ந்தவனே. 5

வேதமாய் வேள்வியாகி விளங் கும்பொருள் வீடதாகிச்
சோதியாய் மங்கைபாகந் நிலை தான்சொல்ல லாவதொன்றே
சாதியான் மிக்கசீராற் றகு வார்தொழுஞ் சாத்தமங்கை
ஆதியாய் நின்றபெம்மா னய வந்தி யமர்ந்தவனே. 6

3. நூல் நலம் - நல்லபுரி நூல். நுகர் - பூசிய நீறு. மாண்பு அதுவே - பெருமையாமா? நோக்கி - கண்களையுடையவள். ஆன்நலம் - பசுவினிடம் கிடைக்கும் பஞ்சகவ்வியத்தை. தோய்ந்த - திருமஞ்சனம் கொண்டருளிய. எம்மான் - எமது தலைவனே.

4. மற்ற -(எதிரிகள் வில்லுக்கு) எதிராகிய வில் மால் வரையா(க) பெரிய (மேரு) மலையாக. பொற்பதுவே - அழகுடையதா?. கற்றவர் சாத்தமங்கை - கற்றவர் வாழும் திருச்சாத்த மங்கையில். அற்றவர்- பற்றற்ற மெய்யடியார் "அற்றவர்க் கற்ற அரனுறைகின்ற ஆலவாய் ஆவதும் இதுவே" என் புழியும் (இத்திருமுறை பதிகம் 120. 2) காண்க.

5. வேதகீதன் - வேதத்தை இசையோடு பாடுபவன். சந்தம்-அழகிய. ஆறு அங்கம் - ஆறு அங்கங்களையும். வேதம் - வேதத்தையும். தரித்தார்- உச்சரிப்பவர்களாகிய அந்தணர்கள். "உன் திருநாமம் தரிப்பார்" என்னும் திருவாசகத்தும் காண்க. (கோயின் மூத்த. 9)

6. பொருள்வீடு - பொருளாகிய வீடு. சொல்ல லாவதொன்றே - புகழ்ந்து சொல்லக்கூடிய ஒருசெயலாகுமோ. ஆதியாய் - முதல்வனாகி.

இமயமெல் லாமிரிய மதி லெய்துவெண் ணீறுபூசி
உமையையொர் பாகம்வைத்த நிலை தானுன்ன லாவதொன்றே
சமயமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அமையவே ரோங்குசீரா னய வந்தி யமர்ந்தவனே. 7

பண்ணுலாம் பாடல்வீணை பயில் வானோர்ப ரமயோகி
விண்ணுலா மால்வரையான் மகள் பாகமும் வேண்டினையே
தண்ணிலா வெண்மதியந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
அண்ணலாய் நின்றவெம்மா னய வந்தி யமர்ந்தவனே. 8

பேரெழிற் றோளரக்கன் வலி செற்றதும் பெண்ணோர்பாகம்
ஈரெழிற் கோலமாகி யுட னாவது மேற்பதொன்றே
காரெழில் வண்ணனோடு கன கம்மனை யானுங்காணா
ஆரழல் வண்ணமங்கை யய வந்தி யமர்ந்தவனே 9

கங்கையோர் வார்சடைமே லடை யப்புடை யேகமழும்
மங்கையோ டொன்றிநின்றம் மதிதான்சொல்ல லாவதொன்றே
சங்கையில் லாமறையோ ரவர் தாந்தொழு சாத்தமங்கை
அங்கையிற் சென்னிவைத்தா யயவந்தி யமர்ந்தவனே. 10

7. இமயம் எல்லாம் - இமயம் முதலிய மலைகளெல்லாம். இரிய - (அதிர்ச்சியால்) நிலை பெயர, மதில் எய்து, உன்னலாவது. ஒன்றே - பாராட்டி நினைக்கக் கூடியது ஒன்று? சமயம் - சமய நூல்களையும். அமைய - இடமாகப் பொருந்த. வேறு ஓங்குசீரான் - பிறிதொன்றற்கு இல்லாத மிக்கசிறப்புடன்.

8. பயில்வான் - பயின்றவனாகிய. ஓர் பரமயோகி - ஓர் மேலான யோகியே மகள்பாகமும் வேண்டினை ஒரு நயம் அண்ணல் ஆய் - தலைவனாகி

9. பெண்ணோர் பாகம் - ஒருபாகத்திற் பெண்ணும் ஒரு பாகத்தில் ஆணுமாகி. ஈரெழிற் கோலமாகி - அழகிய இரண்டு கோலமாகி. உடன் ஆவது - ஒருருவமாவதும். கனகம் அனையான் - நிறத்தினால் பொன் னொப்பான் ஆகிய பிரமன். ஆர்அழல் வண்ணம் ஆகி, அருமை + அழல் அணுகற்கரிய தீயின் வண்ணம் - இங்குவடிவின் மேல் நின்றது. மங்கை - சாத்தமங்கை.

10. கங்காதேவி ஓர் வார்சடையின் பால், அடைய, புடை - (உடம்பின்) ஒருபக்கல். மணம் புரிந்து கொண்ட உமாதேவியோடு

மறையினுர் மல்குகாழித் தமிழ் ஞானசம் பந் தன்மன்னும்
நிறையினுர் நீலநக்க னெடு மாநக ரென்றுதொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை யய வந்திமே லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லா ரிமை யோரிலு முந்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

ஒருடம்பாகி நின்ற அறிவுடைமை - புகழ்ந்து சொல்லக் கூடிய(
கமழ்தல் - மணத்தல். அச்சொல்லால் அறியக்கூடிய மற்ருெரு பொருள்
விவாகஞ் செய்துகோடலுக்கு ஆகியது. இலட்சித இலட்சணை.

11. நிறை - மனத்தைத் தன்வழியோடாது நிறுத்தல். இமை யோரிலும் முந்துவர் - "யான் எனது என்னுஞ் செருக்கு அறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்". எட்டாம் திருப்பாடலில் வரும் இராவணன் செயல் ஒன்பதாம் திருப்பாடலில் அயன் செயலோடு கூறப் பட்டுள்ளது. இரண்டாம் திருப்பாடலிலும், திருக்கடைக் காப்பிலும், இத்தலத்தில் வாழ்ந்து வந்த, திருநீலநக்க நாயனுரைப்பற்றிக் கூறப்படு

ஆதிச் சிவனருளால் அகம்பொன்செய் வட்டிலிற்
கோதில் அமிர்தநுகர் குஞ்சரத்தைத் தீதறுசீர்க்
காலத்தொகுதியும் நான்மறையின் காரணமும்
மூலப் பொருளும் முழுதுணர்ந்த—சீலத்
திருஞான சம்பந்தன் என்றுலகஞ் சேர்ந்த
ஒருநாமத் தாலுயர்ந்த கோவை—வருபெருநீர்ப்
பொன்னிவள நாடனைப் பூம்புகலி நாயகனை
மன்னர் தொழுதிறைஞ்சு மாமணியை—முன்னே
நிலவு முருகர்க்கும் நீலநக் கர்க்குந்
தொலைவில் புகழ்ச்சிறுத் தொண்டர்க்குங்—குலவிய
தோழமையாய்த் தொல்லைப் பிறப்பறுத்த சுந்தரனை
—ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை.

# 59 திருக்குட மூக்கு

## 320 பதிகவரலாறு

பூந்தராய் வள்ளலார், திருக்குடமூக்குச் செல்ல மறையோர், மறை யொலி முழக்கமும் மங்கல துரிய முழக்கமும் பெருக எதிர்கொண்டு, போற்றிக் கொண்டு செல்ல, அத்தலத்தை அடைந்து, 'குடமூக்கை உவந் திருந்த பெருமான் எம் இறை' என்று, பெருகும் இசையால் பாடி யருளிய வண்டமிழின் திருப்பதிகம் இது.

**பண் - பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

அரவிரி கோடனீட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போதுமௌவன் மண மல்லிகை கள்ளவிழும்
குரவிரி சோலைசூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இரவிரி திங்கள்சூடி யிருந் தானவ னெம்மிறையே. 1

ஒத்தர வங்களோடு மொலி காவிரி யார்த்தயலே
பூத்தர வங்களோடும் புகை கொண்டடி போற்றிநல்ல
கூத்தர வங்களோவாக் குழ கன்குட மூக்கிடமா
ஏத்தர வங்கள்செய்ய விருந் தானவ னெம்மிறையே. 2

1. அரவிரி கோடல்நீடல் - பாம்பைப்போலும், தண்டோடு மலர் விரிந்த காந்தட் செடிகள் செழித்திருத்தலால், அணி - அழகுசெய்கின்ற. அயலே - காவிரியாற்றின் அருகில். மர - மராமரங்கள். விரி - விரிந்த. போது - மலர்களும். மௌவல் - முல்லையும். மணமல்லிகை - மணத்தை யுடைய மல்லிகையும். கள் அவிழும் - தேனோடும் முறுக்கு உடையும். குர - குராமரங்கள். விரி - விரிந்த. சோலைசூழ், குடமூக்கு - கும்ப கோணம். இடம்ஆ - இடம் ஆக. இரவு - இரவில். விரி - பரப்பு கின்ற. திங்கள், குழகன், காவிரியாற்று அயலே குடமூக்கு இடமாக இருந்தான் அவனே எம் இறையாவான் என்க. நீடல் மூன்றன் உருப்புத் தொகை. இத்திருப்பாடலின் நான்கடியினும் முதலசைகளாகிய, அரா, மரா குரா, இரா - இந்நான்கும் கடைகுறுகி வந்தன. காந்தள் தண்டு பாம்பின் உருவிற்கும் அதன் பூவிரிதல் - படத்திற்கும் உவமை-

2. ஓத்து - வேதங்களின். அரவங்களோடு - ஓசைகளுடனே. ஓலி - எதிர் ஓலியாக. ஆர்த்து - தானும் ஆரவாரித்து. அயலே -

மயில்பெடை புல்கியால மணன் மேன்மட வன்னமல்கும்
பயில்பெடை வண்டுபண்செய் பழங் காவிரிப்பைம் பொழில்
வாய்க்
குயில்பெடை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
இயலொடு வானமேத்த விருந் தானவ னெம்மிறையே. 3

மிக்கரை தாழவேங்கை யுரி யார்த்துமை யாள்வெருவ
அக்கர வாமையேன மருப் போடவை பூண்டழகார்
கொக்கரை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
எக்கரை யாருமேத்த விருந் தானவ னெம்மிறையே. 4

வடிவுடை வாட்டடங்கண் ணுமை யஞ்சவோர் வாரணத்தைப்
பொடியணி மேனிமூட வுரி கொண்டவன் புன்சடையான்
கொடிநெடு மாடமோங்குங் குழ கன்குட மூக்கிடமா
இடிபடு வானமேத்த விருந் தானவ னெம்மிறையே. 5

அருகிலுள்ள பூந்தோட்டங்களில். பூத்து - மலர்ந்து இருக்க. (அம்மலர்களையும்) புகை - நறும்புகைகளையும், பிற பூசைத் திரவியங்களும் கொண்டு. அரவங்களோடும் - (சிவ; போற்றி என்னும்) ஓசைகளோடும். (திருக்கோயில் வந்து) மெய்யடியார்கள் அடிபோற்றி - திருவடியைப் போற்றி வழிபாடுசெய்ய. நல்ல கூத்து - நன்மை பயக்கும் கதை தழுவி வரும் கூத்தும் சிறந்த நாட்டியமும், உண்டாகும் அரவங்கள். ஓவா - நீங்காத. குடமூக்கு இடமாக. ஏத்து - துதித்தலின். அரவங்கள் செய்ய இருந்தான். பூத்து வினையெச்சத்திரிபு.

3. புல்கி - தழுவி. ஆல - ஆட. மல்கும் - நிறைந்திருக்கும். பயில் - தங்கியுள்ள. இயலொடு - முறைப்படி. வானம் ஏத்த.

4. அரை - இடுப்பில். மிக்கு - மிகவும். தாழ - தொங்க. வேங்கை உரி - வேங்கைத்தோலை. ஆர்த்து - கட்டி. அக்கு - அக்குப்பாசி. அரவு, ஆமையோடு. ஏனம் - பன்றியின். மருப்பு - கொம்பு. கொக்கரை முதலிய வாச்சியங்களோடு எக்கரையாரும், தீவிலுள்ளவர்களும், ஏத்த இருந்தான். இறைவனுக்குப் புலித்தோல் உடையும், கரித்தோல் போர்வையும், சிங்கத்தோல் ஏகாசமுமாம் என்பர். ஆமை - முதலாகுபெயர். கரை - தீவு. சம்புத்தீவன்றிப் பிற தீவிலுள்ளவர்களும்.

5. வடிவுஉடை - அழகிய உருவமுடைய. வாரணம் - யானை வாகனத்தை. உரிகொண்டவன் - உரித்தவன். இடிபடு - இடியையுடைய.

கழைவளர் கவ்வைமுத்தங் கமழ் காவிரி யாற்றயலே
தழைவளர் மாவினல்ல பல வின்கனி கள்தங்கும்
குழைவளர் சோலைசூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இழைவளர் மங்கையோடு மிருந் தானவ னெம்மிறையே. 6

மலைமலி மங்கைபாகம் மகிழ்ந் தானெழில் வையமுய்யச்
சிலைமலி வெங்கணையாற் சிதைத் தான்புர மூன்றினையும்
குலைமலி தண்பலவின் பழம் வீழ்குட மூக்கிடமா
இலைமலி சூலமேந்தி யிருந் தானவ னெம்மிறையே. 7

நெடுமுடி பத்துடைய நிகழ் வாளரக் கன்னுடலைப்
படுமிடர் கண்டயரப் பரு மால்வரைக் கீழடர்த்தான்
கொடுமட றங்குதெங்கு பழம வீழ்குட மூக்கிடமா
இடுமண லெக்கர்சூழ விருந் தானவ னெம்மிறையே. 8

வானம் - வானுலகில் உள்ளவர்களும். ஏத்த இருந்தான். மேக மண்டலம் வானிற் காணப்படுதலால் அதன்கண்படும் இடியை, வானத்தின் மீது ஏற்றப்பட்டது. இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றப் பட்டது.

6. கழை - மூங்கிலினின்று. வளர் - மிகுதியாகக் கிடைக்கும். கவ்வை - பெருவிலையயுடைய, கமழ்கின்ற - கலவைச் சாந்துபூசிய பெண்கள் ஆடிய நீர்த்துறையில் தெறிக்கப்பட்டமையின் முத்துக்களும் கமழ்கின்றன. தழைவளர் – தழைகள் மிகும். தயங்கும் - விளங்கும். குழை - கொழுந்து. இழை - ஆபரணங்கள். வளரும் - மிகும். மாவின் - மாமரத்தின்.

7. வையம் உய்ய மங்கைபாகம் மகிழ்ந்தான். உலகம் அவன் உரு ஆகலான். உலகில் இல்லற தருமம் நடத்தற்கு அவன் அம்மையோடு கூடியிருத்தலின் வையம் உய்ய மங்கை பாகம் மகிழ்ந்தான் என்றார். "பெண்பால் உகந்திலனேற் பேதாய் இரு நிலத்தோர் விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ" - என்ற திருவாசகத்தாலும் அறிக. இலைமலி சூலம் - இலைவடிவத்தையுடைய சூலம்.

8. இடர்கண்டு - துன்பப்பட்டு, அயர - தளர, அடர்த்தான். கொடும்- வளைந்த, மணல் எக்கர் - மணல் திடல்.

ஆரெரி யாழியானு மல ரானும ளப்பரிய
நீரிரி புன்சடைமே னிரம் பாமதி சூடிநல்ல
கூரெரி யாகிநீண்ட குழ கன்குட மூக்கிடமா
ஈருரி கோவணத்தோ டிருந் தானவ னெம்மிறையே. 9

மூடிய சீவரத்தார் முது மட்டையர் மோட்டமணர்
நாடிய தேவரெல்லா நயந் தேத்திய நன்னலத்தான்
கூடிய குன்றமெல்லா முடையான்குட மூக்கிடமா
ஏடலர் கொன்றைசூடி யிருந்தானவ னெம்மிறையே. 10

வெண்கொடி மாடமோங்கு விறல் வெங்குரு நன்னகரான்
நண்பொடு நின்றசீரான் றமிழ்ஞானசம் பந்தனல்ல
தண்குட மூக்கமர்ந்தா னடிசேர்தமிழ் பத்தும்வல்லார்
விண்புடை மேலுலகம் வியப்பெய்துவர் வீடெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

9. ஆர் - பொருந்திய. எரி - அக்கினிபோல் ஒளிரும். ஆழி - சக்கராயுதம். நீர் - கங்கைநீர். இரி - வழிந்தோடுகின்ற. கூர்எரி - மிக்க நெருப்புப் பிழம்பு. ஈர் உரி - உரித்த தோல்

10. மூடிய சீவரத்தார் - சீவர ஆடையைப் போர்த்தவர். முது மட்டையர் - மிக்க பேதையராகிய பவுத்தர். மோட்டு அமணர் - இறுமாப்புடைய அமணர். ஏடு அலர் - இதழ்விரிந்த.

11. வெண்கொடி மாடம் ஓங்கும் - புகழின் அடையாளமாக வெண்கொடி கட்டிய மாடம். வெங்குரு - சீர்காழி.

மாழைஒண்கண் மாதர்மதனனைச்—சூழொளிய
கோதைவேல் தென்னன்றன் கூடற் குலநகரில்
வாதில் அமணர் வலிதொலையக்—காதலால்
புண்கெழுவு செம்புனலா றோடப் பொருதவரை
வண்கழுவில் தைத்த மறையோனை.
—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 60 திருவக்கரை

## 318 பதிகவரலாறு

கன்னிமாவனத்தைச் சேர்ந்து, அங்கு எழுந்தருளிய சிவபெருமானை வணங்கி, முன்னம் முடக்கால் முயலுக்கு அருள்செய்த வண்ணத்தைப் பாடி ஏத்தி, திருவடுகூரை எய்தி வணங்கிப்போய், திருவற்கரையை அணைந்தார் பிள்ளையார். அங்கு அவ்வற்கரைப் பெருமானை வணங்கிப் பாடியருளியது இத்திருப்பதிகம். (வல்+கரை - வலிதாயகரை. இன்றும் ஆற்றங்கரையைப் பார்த்துணர்க.)

**பண் - பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

கறையணி மாமிடற்றான் கரிகாடரங் காவுடையான்
பிறையணி கொன்றையினா னொருபாகமும் பெண்ணமர்ந்தான்
மறையவன் றன்றலையிற் பலிகொள்பவன் வக்கரையில்
உறைபவ னெங்கள்பிரா னொலியார்கழ லுள்குதுமே. 1

பாய்ந்தவன் காலனைமுன் பணைத்தோளியொர் பாகமதா
ஏய்ந்தவ னெண்ணிறந்தவ் விமையோர்க டொழுதிறைஞ்ச
வாய்ந்தவன் முப்புரங்க ளெரிசெய்தவன் வக்கரையில்
தேய்ந்திள வெண்பிறைசேர் சடையானடி செப்புதுமே. 2

சந்திர சேகரனே யருளாயென்று தண்விசும்பில்
இந்திர னும்முதலா விமையோர்க டொழுதிறைஞ்ச
அந்தர மூவெயிலும் மனலாய்விழ வோரம்பினால்
மந்தர மேருவில்லா வளைத்தானிடம் வக்கரையே. 3

1. கரிகாடு- (கொள்ளிகள்) கரிந்தகாடு. அரங்கு ஆக - ஆடும் இடமாக. பிறை அணி - (கொன்றையினான் - பிறையினோடு அணிந்த கொன்றையினான். மறையவன் - பிரமன்.

2. ஏய்ந்தவன் - பொருந்தியவன். தேய்ந்து - தன் கலைகளெலாம் தேய்ந்து. (சரண்புக்க) இளம்பிறைசேர்ந்த, சடையான். அடி - திருவடிப் புகழ்ச்சியை. செப்புதும் - சொல்லுவோம்.

3. சேகரன் - முடியை யுடையவன். அந்தரம் - ஆகாயத்திலே (திரிந்த.) முப்புரம் வளைத்தான் - வளைத்து எய்தான்.

நெய்யணி சூலமொடு நிறைவெண்மழு வும்மரவும்
கையணி கொள்கையினன் கனன்மேவிய வாடலினன்
மெய்யணி வெண்பொடியான் விரிகோவண வாடையின்மேல்
மையணி மாமிடற்ற னுறையும்மிடம் வக்கரையே. 4

ஏனவெண் கொம்பினொடும் மிளவாமையும் பூண்டுகந்து
கூனிள வெண்பிறையுங் குளிர்மத்தமுஞ் சூடிநல்ல
மானன மென்விழியா ளொடும் வக்கரை மேவியவன்
தானவர் முப்புரங்க ளெரிசெய்த தலைமகனே. 5

கார்மலி கொன்றையொடுங் கதிர்மத்தமும் வாளரவும்
நீர்மலி யுஞ்சடைமே னிரம்பாமதி சூடிநல்ல
வார்மலி மென்முலையா ளொடும்வக்கரை மேவியவன்
பார்மலி வெண்டலையிற் பலிகொண்டுழல் பான்மையனே. 6

கானண வும்மறிமா னொருகையதோர் கைமழுவாள்
தேனண வுங்குழலா ளுமைசேர்திரு மேனியனன்
வானண வும்பொழில்சூழ் திருவக்கரை மேவியவன்
ஊனண வுந்தலையிற் பலிகொண்டுழ லுத்தமனே. 7

4. நெய் அணி - நெய்பூசிய. நிறை வெண்மழு - வெண்மை நிறைந்த மழு. கை அணி - கையிற் பற்றிய. கனல் மேவிய ஆடலினன்- உலகெலாம் எரியும் மகா சங்கார காலத்தில் அவ்வக்கினி நடுவில் நின்று ஆடுதலையுடையவன். விரி - விரித்துக்கட்டிய, கோவண ஆடையின் - கோவணமாகிய ஆடையினோடும். மெய்மேல் - தன்னுடம்பின்மீது, அணிந்த வெண் திருநீற்றையுடையவன். மூன்றும் அடி கொண்டு கூட்டுப் பொருள்கோள்.

5. ஏனம் - பன்றி. ஆமையும் - ஆமையோடும். பூண்டு-அணிந்து. அதனால் மகிழ்ச்சியுற்று. மத்தம் - பொன்னூமத்தை.

6. கார் - கார்காலத்தில். மலி - மிகுதியாக மலரும், கொன்றை, வாள் அரவு - ஒளிபொருந்திய பாம்பு. நிரம்பாத மதி - கலை நிரம்பாத பிறை. பார் - பூமியின்கண். மலிவெண்தலை - வெண்மை மிக்க தலை. பலி கொண்டுழல் - பிச்சையேற்றுத் திரிகின்ற, பான்மையன்.

7. கான் அணவும் - காட்டில் பொருந்திய. மறிமான் - மான் கன்று. ஓர் கையது; ஓர் கை (யது) - மற்றொரு கையது (மழுவாள்.) தேன் - வண்டு. அணவும் - பொருந்திய. வான் அணவும் - ஆகாயத்தை யளாவிய பொழில்.

இலங்கையர் மன்னனாகி யெழில்பெற்ற விராவணனைக்
கலங்கவார் கால்விரலாற் கதிர்பொன்முடி பத்தலற
நலங்கெழு சிந்தையினா யருள்பெற்றலு நன்களித்த
வலங்கெழு மூவிலைவே லுடையானிடம் வக்கரையே. 8

காமனை யீடழித்திட் டவன்காதலி சென்றிரப்பச்
சேமமே யுன்றனக்கென் றருள்செய்தவன் றேவர்பிரான்
சாமவெண் டாமரைமே லயனுந் தரணியளந்த
வாமன னும்மறியா வகையானிடம் வக்கரையே. 9

மூடிய சீவரத்தர் முதிர்பிண்டிய ரென்றிவர்கள்
தேடிய தேவர்தம்மா லிறைஞ்சப்படுந் தேவர்பிரான்
பாடிய நான்மறையன் பலிக்கென்றுபல் வீதிதொறும்
வாடிய வெண்டலைகொண் டுழல்வானிடம் வக்கரையே. 10

தண்புன லும்மரவுஞ் சடைமேலுடை யான்பிறைதோய்
வண்பொழில் சூழ்ந்தழகா ரிறைவன்னுறை வக்கரையைச்
சண்பையர் தந்தலைவன் றமிழ்ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்வல்லா ரவர்தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

8. ஓர் கால்விரலால், கதிர் பொன் முடி பத்து அலற. கால் ஐந்து விரலிலும் ஒருவிரல் - அடர்த்ததோ முடி, அவையும் பத்து, முடியணிந்தது, பொன் மூடி - கதிர்விடும் பொன் என்ற நயம் காண்க. செருக்குற்ற தீய சிந்தையனாகாது. செருக்கு ஒழிந்து நலங்கெழு சிந்தையனாகி. அருள் பெற்றலும்-திருவருளுக்குப் பாத்திரமான அளவில், நன்கு-நல்லனவாகிய வாளும், நாளும், அளித்த - அருள் புரிந்த - மூவிலை வேல் உடையவன்.

9. ஈடு அழித்திட்டு - வலிமைக்கு இடமாகிய உடம்பை அழித்து. அவன் காதலி - இரதி. உன்தனக்குச் சேமமே - (உன் கண்ணுக்கு மட்டும் புலப்படுவான் ஆகையினால்) உன்னைப் பொறுத்தவரையில் உனக்கு நன்மையே. சாமம் - வேதம் பாடுகின்ற (வெண்தாமரைமேல்) அயனும். தரணி - பூமி. அளந்த, வாமனனும். வாமனாவதாரம்கொண்ட திருமாலும். சிறப்புப்பெயர் பொதுப் பெயருக்கு ஆயிற்று.

10. பிண்டியர் - அசோக மரத்திற் பற்று உடையவர்கள்.

11. பண்புனை பாடல் - பண்ணாற் புனைந்து பாடிய பாடல்.

# 61 திருவெண்டுறை

## 319 பதிகவரலாறு

சண்பைநகர் வேந்தர் திருநாவுக்கரசரொடு, திருவீழிமிழலை, திருவானைக்கா முதலிய பல தலங்களை வழிபட்டு வருங்கால், திருவெண்டுறை சேர்ந்து தொழுது பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஆதிய னாதிரையன் னனலாடிய வாரழகன்
பாதியொர் மாதினொடும் பயிலும்பர மாபரமன்
போதிய லும்முடிமேற் புனலோடர வம்புனைந்த
வேதியன் மாதிமையால் விரும்பும்மிடம் வெண்டுறையே. 1

காலனை யோருதையில் லுயிர்வீடுசெய் வார்கழலான்
பாலொடு நெய்தயிரும் பயின்றாடிய பண்டரங்கன்
மாலை மதியொடுநீ ரரவம்புனை வார்சடையான்
வேலன கண்ணியொடும் விரும்பும்மிடம் வெண்டுறையே. 2

1. ஆதிரையான் - திருவாதிரை நட்சத்திரத்துக்கு உரியவன். அனல் ஆடிய அரும் அழகன் - அனலில் ஆடிய அரிய அழகையுடையவன், பரமா பரமன் - மேலானபொருள்கள் எவற்றினும் மிக மேலான பொருளாயிருப்பவன். பயிலும் - பொருந்திய. போது இயலும் - மலர்களை யணிந்த.

2. உயிர்வீடுசெய் - உயிர்விடச்செய்த (வீடு - விடுதல்) வார்- வாரால் கட்டிய கழலையுடையவன். பயின்று ஆடிய - பலதரமும் திருமஞ்சனம் கொண்டருளுகின்ற, மாலை மதி - மாலைக்காலத்தில் தோன்றும் சந்திரன், நீர் - கங்கைநீரையும், புனை - அணிந்த. வார்சடையன் - நெடிய சடையையுடையவன். வேல் அ(ன்)ன - வேலையொத்த, கண்ணியோடும்- கண்களையுடைய உமாதேவியோடும். பயின்று - இப்பொருளாதலை "பாலினால் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்ட" என்புழியும் காண்க. (திரு முறை 1) ஆடிய - ஆடுகின்ற - காலவழுவமைதி.

படைநவில் வெண்மழுவான் பல பூதப்படையுடையான்
கடைநவின் மும்மதிலும் மெரி யூட்டிய கண்ணுதலான்
உடைநவி லும்புலித்தோ லுடை யாடையி னுன்கடிய
விடைநவி லுங்கொடியான் விரும்பும்மிட வெண்டுறையே. 3

பண்ணமர் வீணையினன் பர விப்பணி தொண்டர்கடம்
எண்ணமர் சிந்தையினு னிமை யோர்க்கு மறிவறியான்
பெண்ணமர் கூறுடையான் பிரமன்றலை யிற்பலியான்
விண்ணவர் தம்பெருமான் விரும்பும்மிடம் வெண்டுறையே. 4

பாரிய லும்பலியான் படி யார்க்கு மறிவரியான்
சீரிய லும்மலையா ளொரு பாகமும் சேரவைத்தான்
போரிய லும்புரமுன் றுடன் பொன்மலை யேசிலையா
வீரிய நின்றுசெய்தான் விரும் பும்மிடம் வெண்டுறையே 5

3. படைநவில் - படையாகக் கொள்கின்ற. கடைநவில் - பாவங்களைச் செய்துவந்த, மும்மதிலும் எரியூட்டிய கண்நுதலான் கடை - பாவம் "அறன்கடை" (திருக்குறள்). உடைநவிலும் - உடையாகக் கொள்ளப் படும். புலித்தோல், உடை ஆடையினன் - ஆடையாக உடையவன். உடை - உடு என்னும் வினையடியாகச் செயப்படுபொருள் உணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்தும், உடைமை என்னும் பண்பு விகுதி குன்றி வினைத்தொகையின் நிலைமொழியாயும் நின்றது. கடிய-விரைந்து செல்லக் கூடிய (விடை) நவிலும் - பொருந்திய, கொடியான்.

4. பரவி - துதித்து. பணி - வணங்குகின்ற. எண் அமர் சிந்தையினன் - நினைத்தலையுடைய சிந்தையில் எழுந்தருளியிருப்பவன். பிரமன் தலையிற் பிச்சை ஏற்பவன், ஏற்கும் - சொல்லெச்சம்.

5. பார் இயலும் பலியான் - உலகம் முழுவதிலும், செய்யும் பூசையைக்கொள்பவன். பார் - பூமி - இங்கு உலகம் என்னும் பொருளில் வந்தது. "உலகுக்கொருவனாய் நின்றாய் நீயே" எனப்படுதலால். (திருமுறை - 6) உலகத்தார் பலவடிவிலும் போற்றும் பூசையெல்லாம் அவனுக்கேயாதலின் - இங்ஙனம் கூறியருளினார் படி-நிலைமை, யார்க்கும் அறிவு அரியான். "அப்படியும், அந்நிறமும் அவ்வண்ணமும், அவனருளே கண்ணாகக் காணின் அல்லால், காட்டொணாதே" (திருமுறை 6) என்ற கருத்து. மலையாள - இமயமலையில் வளர்ந்த உமாதேவியார். "மலையான் மருகா" என ஆண்பாலில் வந்துள்ளதுபோலப் பெண்பாலில் மலையாள் என வந்தது. சீர் - தனக்கு ஒத்த பண்பு அது. சிவஞான சித்தி

ஊழிக ளாயுலகா யொரு வர்க்கு முணர்வரியான்
போழிள வெண்மதியும் புனலும்மணி புன்சடையான்
யாழின் மொழியுமையாள் வெருவவ்வெழில் வெண்மருப்பின்
வேழ முரித்தபிரான் விரும்பும்மிடம் வெண்டுறையே. 6

கன்றிய காலனையும் முரு ளக்கனல் வாயலறிப்
பொன்றமு னின்றபிரான் பொடியாடிய மேனியினன்
சென்றிமை யோர்பரவுந் திகழ் சேவடி யான்புலன்கள்
வென்றவ னெம்மிறைவன் விரும்பும்மிடம் வெண்டுறையே. 7

கரமிரு பத்தினலுங் கடுவன்சின மாயெடுத்த
சிரமொரு பத்துமுடை யரக்கன்வலி செற்றுகந்தான்
பரவவல் லார்வினைக ளறுப்பானொரு பாகமும்பெண்
விரவிய வேடத்தினன் விரும்பும்மிடம் வெண்டுறையே. 8

யாரில் "எத்திறன் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்" "சத்திதான் சத்தனுக்குச் சத்தியாம், சத்தன் வேண்டிற்கெல்லாம் ஆம் சத்திதானே" (சுபக்கம் 75, 76) என்னுங் கருத்து. கங்கையைத் தலையில் வைத்ததன்றி யென்னும் பொருள்தருதலால் பாரகமும் என்றது இறந்தது தழுவிய எச்ச இயலும் - (வானில்) இயங்கிய, புரம் மூன்றுடன் - திரி புரங்களுடன், பொன் மலையே - மேருமலையே சிலையா (க). வீரியம் நின்று - தன்வீரியங் காட்டிநின்று போர் செய்தான் என்க.

6. ஊழிகளாய் - ஊழிக்காலங்களாய். உலகமாகி நின்றும் - ஒருவர்க்கும் உணர்வரியன். ஒரு நயம். "மரத்தில் மறைந்தது மாமதயானை. பரத்தை மறைத்ததுபார் முதற்பூதம்" என்று இதனை உவமை முகத்தாற் கூறுவர் திருமூலநாயனர். போழ் - பிளவாகிய, வெண்மதி. மருப்பின் வேழம் - கொம்பையுடைய யானை. யாழின் மொழி - இன - ஒப்புப் பொருளில் வந்தது,

7. கன்றிய - (மார்க்கண்டேயரைக்) கோபித்த. உருள, வாய் அலறிப் பொன்ற - இறக்க முன்நின்ற பிரான். கனல்வாய் - பிறர்க்கு நெருப்பைக் கக்கும் வாய் இங்கு அலறிற்று என்றது ஒருநயம்" கன்றிய காலின்" இத்தொடர் அப்பர் பெருமான் திருவாக்கிலும் அமைகிறது. திருமுறை 4. ஐம்புலன் வென்றவன் - ஞானிகளுக்கு ஐம்புலன்களையும் வெல்லுவித்தவன் என்க. "பொறிவாயிலைந்தவித்தான்" என்ற திருக்குறளுக்கும் இப்பொருள் நேரிது. பிறவினை விகுதி தொக்கு நின்றது.

8. இருபதினலும் – இருபத்தினலும் என்றது விரித்தல் விகாரம். கடு(ம்)வன் சினம் - மிகவலிய கோபம். "கடி" என்னும் உரிச்சொல்

கோல மலரயனுங் குளிர் கொண்ட னிறத்தவனும்
சீல மறிவரிதாய்த் திகழ்ந்தோங்கிய செந்தழலான்
மூல மதாகிநின்றான் முதிர் புன்சடை வெண்பிறையான்
வேலை விடமிடற்றான் விரும்பும்மிடம் வெண்டுறையே. 9

நக்குரு வாயவருந் துவ ராடைநயந்துடையாம்
பொக்கர்க டம்முரைகள் ளவை பொய்யென வெம்மிறைவன்
திக்கு நிறைபுகழார் தரு தேவர்பிரான்கனகம்
மிக்குயர் சோதியவன் விரும் பும்மிடம் வெண்றையே. 10

திண்ணம ரும்புரிசைத் திருவெண்டுறை மேயவனைத்
தண்ணம ரும்பொழில்சூழ் தருசண்பையர் தந்தலைவன்
எண்ணமர் பல்கலையா னிசை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணமர் பாடல்வல்லார் வினையாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

கடி மிகுதிப்பொருளில் வந்தது. எடுத்த என்ற பெயரெச்சத்துக்கு மலையை என்ற செயப்படு பொருள் வருவித்துரைக்க.

9. கோலம் - அழகையு டைய மலர். குளிர் கொண்டல் - என்றமை யாற் கரியமேகம் என்க. சீலம் தனது நிலையை. திகழ்ந்து தங்கிய - பிரகாசித்து உயர்ந்த, செந்தழலா ன் மூலம் அது-எல்லாத் தத்துவங்கட்கும் முதலாம் பொருள். ஆகி நின்றா ன்.

10. நக்குரு - நக்க உரு. ஆடையணியா உடம்பு. நயந்துடை - நயந்த உடை, பொக்கர் - பொய்யர். பொக்கு - திசைச்சொல். பொய் யென - பொய் என்னும்படி திக்கு நிறைந்த புகழ் உடைய பிரான் என்க. கனகம் - பொன்போலும். மிக்கு உயர்சோதியவன் - மிகுந்த உயர்ந்த உடம்பின் ஒளியையுடையவன் "பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ றணிந்து என்றும் (திருமுறை 4. பதிகம் 81. பாடல் 9)" பொன்னார் மேனியனே என்றும் (திரு முறை 7. 24, 1. பதிகம்) வருவன காண்க.

11. திண்(ணம்) அமரும் புரிசை - உறுதி தங்கிய மதில். திண்மை - திண் என்று ஆயது. "ஈறுபோதல்" என்னும் காதி. சூழ் தரு - சூழ்ந்த. எண் அமர் - பாராட்டுதல் அமைந்த பல்கலை. இசை - இசைத் தமிழால்.

## 62 திருப்பனந்தாள்

### 320 பதிகவரலாறு

வெங்குருவேந்தர் திருச்சேய்நல்லூரைப் பொங்கிய விருப்பொடு, செங்கை குவித்து, வணங்கி வலங்கொண்டு போற்றியபின் திருப்பனந் தாளைச் சேர்ந்து, வெண்பிறையணிந்த செவ்வேணிப் பிஞ்ஞகரை வழி பட்டுப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

**பண் - பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

கண்பொலி நெற்றியினான் றிகழ் கையிலொர் வெண்மழுவான்
பெண்புணர் கூறுடையான் மிகு பீடுடை மால்விடையான்
விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியனூர்
தண்பொழில் சூழ்பனந்தாட் டிருத் தாடகைஈச்சரமே. 1

விரித்தவ னான்மறையை மிக்க விண்ணவர் வந்திறைஞ்ச
எரித்தவன் முப்புரங்கள் ளிய லேழுல கில்லுயிரும்
பிரித்தவன் செஞ்சடைமே னிறை பேரொலி வெள்ளந்தன்னைத்
தரித்தவ னூர்பனந்தாட் டிருத்தாடகை யீச்சரமே. 2

1. கண் பொலிகின்ற நெற்றியினான், திகழ்கையில் - கையில் விளங் கும். புணர்-ஒருபால் கலந்த. பீடு-பெருமித நடையையுடைய, விடையன். "ஏறுபோற் பீடுநடை" என்னும் திருக்குறள். மால்விடை - திருமாலாகிய இடபம். " தடமதில் களவை மூன்றும் தழல் எரித்த அந்நாளில் இடவம தாய்த் தாங்கினான் திருமால் காண் சாழலோ" என்ற திருவாசகத்தால் அறிக. ' திருத்தாடகையீச்சரம் ' திருக்கோயிலின் பெயர்.

2. நான்மறையை - நான்கு வேதத்தின் பொருளையும். விரித்தவன் - விரித்துரைத்தவன், வேதத்துக்குப் பொருளருளிச் செய்த திருவிளையாடல் இங்குக் குறித்தது. இயல் - பொருந்திய, உலகில் உயிர், பிரித்தவன், ஆசாரியனாகவந்து, தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ நீக்கம் செய்து, ஆன்மரூபம் முதலியன காட்டத் தொடங்கும். அவதாரத்தை உலகில் உயிர் பிரித்தான் என்றருளிச் செய்தனர். வெள்ளம் - நீர்ப் பெருக்கம்.

திருப்பனந்தாள்



திருப்பனையும் திருக்கோயிலும்



திருக்கோயிலும், திருக்குளமும்.

உடுத்தவன் மானுரிதோல் கழ லுள்கவல் லார்வினைகள்
கெடுத்தருள் செய்யவல்லான் கிளர் கீதமொர் நான்மறையான்
மடுத்தவ னஞ்சமுதா மிக்க மாதவர் வேள்வியைமுன்
தடுத்தவனூர் பனந்தாட் டிருத்தாடகை யீச்சரமே. 3

சூழ்தரு வல்வினையு முடன் றேன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேன் மிக வேத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் மனல் பொங்கரவும் புனைந்த
தாழ்சடை யான்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. 4

விடம்படு கண்டத்தினு னிருள் வெள்வளை மங்கையொடும்
நடம்புரி கொள்கையினு னவனெம்மிறை சேருமிடம்
படம்புரி நாகமொடு திரை பன்மணி யுங்கொணரும்
தடம்புனல் சூழ்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. 5

3. உடுததவன் மான் உரிதோல் - மானை உரித்த தோலை உடையாக உடுத்தவன், மான் தோலும் இறைவனுக்கு உடை என்பதை “ புள்ளி யுழைமான் தோலாடைப் புனிதன் கண்டாய் ” என்ற அப்பர் வாக்காலும் அறிக. கழல்கள் உள்க வல்லார் வினை - திருவடிகளை நினைப்பவரது வினைகளைக் (கெடுத்து, அருள் செய்ய வல்லான்) கிளர் - மிக்கு ஒலிக் கின்ற. கீதம் - கீதத்தினேடும். ஓர் நான் மறையான் - ஒரு நான்கு வேதங்களையும் உடையவன். (நஞ்சு அமுதாமாறு) மடுத்தவன் - உண்டவன். மாதவர் - தாருகவனத்து முனிவர்.

4. சூழ் தரு - பற்றிவிடாது சூழ்ந்த, வல்வினையும் (எளிதில் நீங்காத) வலிய வினைகளும். “பற்றி நின்ற வல்வினை ” என்பர் அப்பர்பெருமான். உடன் தோன்றிய - உடலோடு தோன்றிய. பல் பிணி - பல நோய் களும். “ உடன் பிறந்தே கொல்லும் வியாதி ” என்பது மூதுரை. ஏத்துமின் - துதியுங்கள். அனல் பொங்கு அரவும் - விடம் பொங்கும் அரவும். தாழ் - தொங்குகின்ற; சடையான். இடமாகிய தாடகையீச்சரத்தை ஏத்துமின் என்க.

5. இருள் - மகாசங்கார காலத்தில் எங்கும் இருள் மயமாய் இருத் தலின் இருள் என்றார். (அக்காலத்தில் நடம்புரிவர் என்பர்) இதனை “ நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே ” என்னும் திருவாசகத்தும் காண்க. இறைவி காண்பவளாய்த் தான் ஆடுபவனுமாய் அமைதலின் “ வெள்வளை மங்கையொடும் நடம்புரி கொள்கையினன் ” என்றார். படம்புரி - படத்தை விரிக்கின்ற; நாகம். புரிதல், செய்தல், பொதுவினை

விடையுயர் வெல்கொடியா னடி விண்ணொடுமண்ணுமெல்
புடைபட வாடவல்லான் மிகு பூதமார் பல்படையான் [லாம்
தொடை நவில் கொன்றையொடு வன்னி துன்னெருக்கும்
சடையவ னூர்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. [மணிந்த

மலையவன் முன்பயந்த மட மாதையொர் கூறுடையான்
சிலைமலி வெங்கணையாற் புர மூன்றவை செற்றுகந்தான்
அலைமலி தண்புனலும் மதி யாடர வும்மணிந்த
தலையவ னூர்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. 7

செற்றரக் கன்வலியைத் திரு மெல்விர லாலடர்த்து
முற்றும்வெண் ணீறணிந்த திரு மேனியன் மும்மையினான்
புற்றர வம்புலியின் னுரி தோலொடு கோவணமும்
தற்றவ னூர்பனந்தாட்டிருத் தாடகை யீச்சரமே. 8

---

சிறப்பு வினைக்கு ஆயிற்று. நாகமொடு - நாகரத்தினங்களுடன் (பல இரத்தினங்களையும்) அலை-அடித்துவரும். தடம் புனல்-பெருமைபொருந்திய காவிரி நீர் சூழ்ந்த; திருப்பனந்தாள். "தடவுங் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப்பியம் (சொல்.)

6. விண்ணொடு மண்ணும் எல்லாம் புடைபட - விண்ணுலகம்' மண்ணுலகம் முதலிய எல்லா உலகங்களும், தன் அடியின் பக்கத்திலே தங்கும்படி; ஓங்கி ஆடவல்லான் என்றது, பேருரு எடுத்து ஆடுதலைக் குறித்தது. அது "பூமே லயனறியா மோலிப் புறத்ததே, நாமே புகழ்ந் தளவை நாட்டுவோம்......கூத்துடையான் கொற்றக் குடை" என்ற பதினோராந் திருமுறையாலும் அறிக. படையான் - சேனைகளையுடையவன். தொடை - மாலை, துன் - நெருங்கிய.

7. மலையவன் - இமயமலையரசன். பயந்த - பெற்ற. அலை மலி தண் புனல் - கங்கை. தலையவன் - தலைமையானவன்.

8. திரு மெல் விரலால் அடர்த்து - அரக்கன் வலியைச் செற்று. அழித்து என மாற்றுக. அரவம் கோவணமும், புலியின் உரித்த தோலை (உடையும்) ஆக. தற்றவன் - உடுத்தியவன். கோவணமும் என்ற இலேசால் உடையும் என ஒரு சொல் வருவிக்க. தற்றுதல். உடுத்தல். "மடி தற்றுத் தான் முந்துறும்" என்ற திருக்குறளால் அறிக. மேனியன் மும்மையினான் என்றது உரு, அரு, அருவுருஆம் மேனியை-

வின்மலை நாணரவம் மிகு வெங்கன லம்பதனால்
புன்மைசெய் தானவர்தம் புரம் பொன்றுவித் தான்புனிதன்
நன்மலர் மேலயனும் நண்ணு நாரண னும்மறியாத்
தன்மைய னூர்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. 9

ஆதர் சமணரொடும் மடை யைந்துகில் போர்த்துழலும்
நீத ருரைக்குமொழி யவை கொள்ளன்மி னின்மலனூர்
போதவிழ் பொய்கைதனுட் டிகழ் புள்ளிரி யப்பொழில்வாய்த்
தாதவி ழும்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. 10

தண்வயல் சூழ்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரத்துக்
கண்ணய லேபிறையா னவன் றன்னைமுன் காழியர்கோன்
நண்ணிய செந்தமிழான் மிகு ஞானசம் பந்தனல்ல
பண்ணியல் பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

"உருமேனி தரித்துக் கொண்டதென்றலும் உருவிறந்த, அருமேனி யதுவும்கண்டோம்: அருவுருவானபோது, திருமேனி யுபயம்பெற்றோம்" என்பது சிவஞானசித்தியார்.

9. வில்:- மலை. நாண்:- அரவம். அம்பு:- மிகுவெம்கனல் – மிகுந்த வெப்பத்தையுடைய அக்கினி. புன்மைசெய் – தீமையைச் செய்த. தானவர் - அசுரர். கீழ்மக்கள் செயலாதலின் தீமை புன்மை எனப்பட்டது

10. ஆதர்-பயனிலிகள், ஐந்துகில்...நீதர் - நீசர்-பவுத்தர். உரைக்கும் கொள்ளன்மின். நின்மலன் ஊராகிய திருப்பனந்தாளை. அடைந்துய்ம்மின் என்பது அவாய்நிலை.

11, கண் அயலே - பிறையான் மேல் நோக்கிய திருவிழி நெற்றியில் உண்மையால் அதன்மேல் (தலையின் பாகத்தில்) பிறையை யணிந்தவன், நல்ல - நற்பயனைத் தருதலாகிய, பண் இயல் பாடல் - பண்ணோடு கூடிய பாடல்.

# 63 திருச்செங்காட்டங்குடி

## 321 பதிகவரலாறு

திருச்செங்காட்டாங்குடியில் சிறுத்தொண்டருடன் கூட எழுந்தருளிக் கணபதீச்சரத்தில், போகம் எல்லாம் வெறுத்து, உண்டிப் பிச்சைநுகரும் மெய்த்தொண்டர் சூழ வழிபட்ட வேதகீதர், "சிறப்பு உலவான் சிறுத் தொண்டன் செங்காட்டங்குடி மேய பிறப்பிலிபேர் பிதற்றிநின்று இழக்கோ எம்பெருநலமே" என்று, அவர்தொழ ஆண்டவன் இருந்த தன்மையைப் போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

**பண் – பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே. 1

பொன்னம்பூங் கழிக்கானற் புணர் துணையோ டுடன்வாழும்
அன்னங்கா ளன்றில்கா ளகன் றும்போய் வருவீர்காள்
கன்னவிலுேட் சிறுத்தொண்டன் கணபதீச் சரமேய
இன்னமுத னிணையடிக்கீ ழெனதல்ல லுரையீரே. 2

1. பைம்கோட்டு - பசிய கிளைகளில். மலர்ப்புன்னை - மலர்களை யுடைய புன்னை மரத்திலுள்ள (பறவைகாள்). பயப்பு-பசப்பு, பசலைநிறம். ஊர - உடம்பிற்பரவ. சங்கு ஆட்டம் - சங்குப் பூச்சிகள் திரையில் தவழ்வதுபோல தனியே உலாவிய என்மகிழ்ச்சியை, தவிர்த்து - நீக்கி, என்னைத், தவிரா-அழியாத; துயர்தந்தான். ஏகாரம் இரங்கற்குறிப்பு. இடைச்சொல் - இடத்துக்கு ஏற்ற பொருள்தரும் என்பர். வெம்காட்டுள்- கொடிய மயானத்துள் (அனல் ஏந்தி விளையாடும் பெருமான்.) ஏகாரம் - ஈற்றசை.

2. பொன்னம்பூம் கழிக்கானல் - பொன்போன்ற மகரந்தத்தை யுதிர்க்கும் புன்னைப் பூக்களையுடைய கழியருகேஉள்ள கடற்கரைச் சோலையில். புணர் துணையோடு - கூடிய துணையுடனே. உடன் வாழும் - இணைபிரியாது வாழ்கின்ற. அன்னங்காள் - அன்னப்பறவைகளே.

குட்டத்துங் குழிக்கரையுங் குளிர்பொய்கைத் தடத்தகத்தும்
இட்டத்தா லிரைதேரு மிருஞ்சிறகின் மடநாராய்
சிட்டன்சீர்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
வட்டவார் சடையார்க்கென் வருத்தஞ்சென் றுரையாயே. 3

கானருகும் வயலருகுங் கழியருகுங் கடலருகும்
மீனிரிய வருபுனலி லிரைதேர்வெண் மடநாராய்
தேனமர் தார்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
வானமருஞ் சடையார்க்கென் வருத்தஞ்சென் றுரையாயே. 4

ஆரலாஞ் சுறவமேய்ந் தகன்கழனிச் சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச் சிறுகுருகே பயிறூவி மடநாராய்
சீருலாஞ் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
நீருலாஞ் சடையார்க்கென் நிலைமைசென் றுரையீரே. 5

அன்றில்காள்-அன்றிற்பறவைகளே. அகன்றும்போய்-இரையின்பொருட்டு (இச்சோலையை) நீங்கிப் போய். வருவீர்காள் - தங்குவதற்கு இங்கே வந்து கொண்டிருக்கின்றீர்கள். இன் அமுதன் - இனிய அமுதுபோல் வானது. இணை அடிக்கீழ் - இரு திருவடிகளின் முன்பாக. எனது அல்லல் எனது பிரியாத் துயரை உரையீரே - சொல்லமாட்டீரோ.

3. குட்டத்தும் - நீர் நிலையிலும்; குளத்திலும் சிறியது. "கடற் குட்டம் போல்வர் கயவர்" என்பது நான்மணிக்கடிகை. பொய்கைத் தடத்தும் - பொய்கையாகிய தடாகத்தினிடத்தும்; பொய்கை, தடம் இரண்டும் ஒரு பொருளேயே குறித்தலால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. இட்டத்தால் - விருப்போடு. இரைதேரும் - இரையைத் தேர்கின்ற, மடநாராய் - இள நாரையே. சிட்டன் - நியமம் உடையவன். சென்று சடையை யுடையவனாகிய பெருமானுக்கு என் வருத்தம் உரையாய்.

4. கான் - கடற்கரைச் சோலை. (வயல், கழி, கடல் ஆகிய இவ் விடங்களில் வரும் நீரில்) மீன் இரிய - சிறுமீன் ஓட (பெரிய மீனை) இரை தேரும், எனத்தனித் தனி சென்றியையும், வானமரும் சடையார்க்கு - செவ்வானம் போலும் சடையையுடைய பெருமானுக்கு. என் வருத்தம் உரையாயே.

5. கழனியின் கண்ணே சிறகையுவர்த்துகின்ற பார் அல்வாய் - நெடிய மூக்கையுடைய. சிறு குருகே - சிறிய உள்ளான் பறவையே, பயில் - அடர்ந்த. தூவி - இறகையுடைய நாரையே.

குறைக்கொண்டா ரிடர்தீர்த்தல் கடனன்றே குளிர்பொய்கைத்
துறைக்கெண்டை கவர்குருகே துணைபிரியா மடநாராய்
கறைக்கண்டன் பிறைச்சென்னிக் கணபதீச் சரமேய
சிறுத்தொண்டன் பெருமான்சீ ரருளொருநாட் பெறலாமே. 6

கருவடிய பசுங்கால்வெண் குருகே யொண் கழிநாராய்
ஒருவடியா ளிரந்தாளென் றொருநாட்சென் றுரையீரே
செறுவடிதோட் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
திருவடிதன் திருவருளே பெறலாமோ திறத்தவர்க்கே. 7

கூரார லிரைத்தேர்ந்து குளமுலவி வயல்வாழும்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பேராளன் பெருமான்ற னருளொருநாட் பெறலாமே. 8

6. குறைக்கொண்டார் - குறைவேண்டிக் கொள்பவர்களின் இடர்தீர்த்தல் - நேர்ந்த துன்பத்தைப் போக்குதல். கடல் அன்றே உபகாரிகளுக்குக் கடமையல்லவா. பெருமானது சீர் எய்ப்பிடத்து உதவும் பேரருளை நான் பெறுமாறு தூது சென்றுரைப்பீர்களாக. (பொய்கைத் துறையில்) கெண்டை - கெண்டை மீனை. கவர் - கவர்ந்துண்ணும், குருகே - பறவையே; நாரையே. கறைக்கண்டனும், பிறைச் சென்னியையுடைய பெருமானும். சிறுத்தொண்டன் பெருமான் - சிறுத்தொண்டர் வழிபடும் பெருமானும் ஆகிய இறைவன். மூன்றன் உருபும் பயனுந் தொக்க தொகை.

7. கரு அடிய - கரிய பாதத்தை உடைய. (பசுங்காலைக்கொண்ட) ஒண் - அழகிய, கழி - கழியில் உள்ள, கரு+அடிய. 'காரடிய' ஒரு அடியாள். ஓடியாள் இரந்தாள் - கெஞ்சி வேண்டிக் கொண்டாள். என்று ஒருநாள் - ஒரு நாளைக்கேனும். சென்று - போய். உரையீர் - சொல்வீர் செரு - போரில், வடித்ததோள், சிறுத்தொண்டன் - சிறுத்தொண்டரது (செங்காட்டாங்குடி) மேய - மேவிய. திரு அடிதன் திருவருளே திறத்தவர்க்கு - அவன் வழிச்செல்பவர்கட்கு.

8. கூர்ஆர - கூரியவாய் நிறைய. கூர்மை - பண்பாகுபெயர் - தமியேற்கு - ஒன்றியாகிய எனக்கு; என்றமையால் (துணை பிரியாத) தாராவே, மடநாராய் என்பது பெறப்படும். ஒன்று - (ஆற்றியிருக்கத்தக்க) ஒருவழி, தமியேற்கு - தமியேன் பொருட்டு. ஒன்று-ஒரு தூது மொழியை. (உரைப்பீர் ஆக) பேராளன் - கீர்த்தியை யுடையவன்.

நறப்பொலிபூங் கழிக்கான னவில்குருகே யுலகெல்லாம்
அறப்பலிதேர்ந் துழல்வார்க்கென் னலர்கோட லழகியதே
சிறப்புலவான் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பிறப்பிலிபேர் பிதற்றிநின் றிழக்கோவெம் பெருநலமே. 9

... ... — ... ... 10

செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர் தக்கோரே. 11

திருச்சிற்றம்பலம்

9. நறவு - தேன், நவில் - வாழ்கின்ற, (பலி உலகெல்லாம் தேர்ந்து) அறப்பலி - அறத்தைக் கருதித் தரும் பிச்சை. என் அலர் கோடல் - என்னைப்பற்றி எழும்பிய அலர் தூற்ற நின்ற பழியைக் கோடல்.

10. ... ... ... ...

11. அம் - அழகிய, தண் - குளிர்ந்த, பூ - பொலிவுற்ற. கலி - ஒலி மிக்க (காழி). காழியடிகள் - திருத்தோணியப்பர்.

ஞாலத் தினர்அறிய மன்னுநனி பள்ளியது
பாலை தனைநெய்த லாக்கியுங் — காலத்து
நீரெதிர்ந்து சென்று நெருப்பிற் குளிர்படைத்தும்
பாரெதிர்ந்த பல்விடங்கள் தீர்த்துமுன்—நேரெழுந்த
யாழை முரித்தும் இருங்கதவந் தானடைத்துஞ்
சூழ்புனலில் ஓடத் தொழில்புரிந்துந்—தாழ்பொழில்சூழ்
கொங்கிற் பனிநோய் பரிசனத்தைத் தீர்ப்பித்துந்
துங்கப் புரிசை தொகுமிழலை—அங்கதனில்
நித்தன் செழுங்காசு கொண்டுநிலா நெல்வாயின்
முத்தின் சிவிகை முதல்கொண்டும்—அத்தகுசீர்

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 64 திருப் பெருவேளூர்

## 322 பதிகவரலாறு

தோணிபுரத்திறைவர் திருவாஞ்சியம் முதலிய தலங்களை வழிபட்டுப் பெருவேளூர் சென்று, பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

அண்ணாவுங் கழுக்குன்று மாயமலை யவைவாழ்வார்
விண்ணோரு மண்ணோரும் வியந்தேத்த வருள்செய்வார்
கண்ணாவா ருலகுக்குக் கருத்தானார் புரமெரித்த
பெண்ணாணாம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 1

கரிமானி னுரியுடையர் கரிகாட ரிமவானார்
மருமானா ரிவரென்று மடவாளோ டுடனாவர்
பெருமான விடையூர்வ துடையார்வெண் பொடிப்பூசும்
பெருமானார் பிஞ்ஞகனார் பெருவேளூர் பிரியாரே. 2

குணக்குந்தென் றிசைக்கண்ணுங் குடபாலும் வடபாலும்
கணக்கென்ன வருள்செய்வார் கழிந்தோர்க்கு மொழிந்தோர்க்
[கும்
வணக்கம்செய் மனத்தராய் வணங்காதார் தமக்கென்றும்
பிணக்கஞ்செய் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 3

1. அண்ணாமலையும், திருக்கழுக்குன்றமும் ஆகிய மலைகளில் வாழ்வார். கண்ணாவார், உலகுக்குக் கருத்தானார். உலகுக்கு:- இடைநிலைத் தீபகம். பெண்ணும், ஆணும் ஆகிய பெருமான்.

2. கருமானின் - கரிய மானினது; மானில் கருநிறம் உடைய ஒரு சாதி உண்டென்றும், அதனால் மானுக்குக் கிருஷ்ணம் எனப் பேர் என்றும் கூறுப, மருமானார் - மருமகனார் என்பதன் மரூஉ; இவரென்று உலகத்தவர் சொல்ல. என்று - என்ன என்னும் வினையெச்சத் திரிபு. பொரும் - போர்புரியவல்ல. மானவிடை - பெருமை பொருந்திய விடை.

3. குணக்கு - கிழக்கு. குடபால் - மேற்குப் பக்கம். வடபால் - வடக்குப் பக்கம். கணக்கு என்ன - ஒரு நிகராக. பிணக்கம் - மாறுபாடு.

இறைக்கொண்ட வளையாளோ டிருகூறு யொருகூறு
மறைக்கண்டத் திறைநாவர் மதிலெய்த சிலைவலவர்
கறைக்கொண்ட மிடறுடையர் கனல்கிளருஞ் சடைமுடிமேல்
பிறைக்கொண்ட பெருமானூர் பெருவேளூர் பிரியாரே. 4

விழையாதார் விழைவார்போல் விகிர்தங்கள் பலபேசிக்
குழையாதார் குழைவார்போற் குணநல்ல பலகூறி
அழையாவு மரற்றுவு மடிவீழ்வார் தமக்கென்றும்
பிழையாத பெருமானூர் பெருவேளூர் பிரியாரே. 5

விரித்தார்நான் மறைப்பொருளை யுமையஞ்ச விறல்வேழம்
உரித்தாரா முரிபோர்த்து மதின்மூன்று மொருகணையால்
எரித்தாரா மிமைப்பளவி லிமையோர்க டொழுதிறைஞ்சப்
பெருத்தாரெம் பெருமானூர் பெருவேளூர் பிரியாரே. 6

மறப்பிலா வடிமைக்கண் மனம்வைப்பார் தமக்கெல்லாம்
சிறப்பிலார் மதிலெய்த சிலைவல்லா ரொருகணையால்
இறப்பிலார் பிணியில்லார் தமக்கென்றும் கேடிலார்
பிறப்பிலாப் பெருமானூர் பெருவேளூர் பிரியாரே. 7

எரியார்வேற் கடற்றுனை யிலங்கைக்கோன் றனைவீழ
முரியார்ந்த தடந்தோள்க ளடர்த்துகந்த முதலாளர்
வரியார்வெஞ் சிலைபிடித்து மடவாளை யொருபாகம்
பிரியாத பெருமானூர் பெருவேளூர் பிரியாரே. 8

4. இறை - முன்கை. கனல் கிளரும் - தீப்போற் பிரகாசிக்கும்.

5. விகிர்தம் - வேறுபாடு ஆனமொழி. அழையாவும் அரற்றுவும் - அழைத்தல் ஆகவும், அரற்றுதல் ஆகவும்.

6. ஆம் - அசை. பெருத்தார் - விசுவரூபம் கொண்டருளியவர்.

7. மறப்பு இலா அடிமைக்கண் மனம் வைப்பார்.

8. எரி ஆர் - நெருப்புப் பொருந்திய. வேல்:- வெல்லக்கூடியது என்னும் காரணக் குறியாய், இங்கு ஆயுதப் பொதுப்பெயராய் நின்றது. முரி என்ற வலிமையைக் குறிக்கும் சொல், குறுக்கல் விகாரம் உற்றது. முதல் ஆளர் - முதன்மையை ஆள்பவர். வரி ஆர் - கட்டுக்களையுடைய வெஞ்சிலை - கொடியவில்.

சேணியலு நெடுமாலுந் திசைமுகனுஞ் செருவெய்திக்
காணியல்பை யறிவிலராய்க் கனல்வண்ண ரடியிணைக்கீழ்
நாணியவர் தொழுதேத்த நாணுமே யருள்செய்து
பேணியவெம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 9

புற்றேறி யுணங்குவார் புகையார்ந்த துகில் போர்ப்பார்
சொற்றேற வேண்டாநீர் தொழுமின்கள் சுடர்வண்ணம்
மற்றேரும் பரிமாவு மதகளிறு மிவையொழியப்
பெற்றேறும் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 10

பைம்பொன்சீர் மணிவாரிப் பலவுஞ்சேர் கனியுந்தி
அம்பொன்செய் மடவரலா ரணிமல்கு பெருவேளூர்
நம்பன்றன் கழல்பரவி நவில்கின்ற மறைஞான
சம்பந்தன் தமிழ்வல்லார்க் கருவினைநோய் சாராவே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. சேண் இயலும் நெடுமாலும் - திரு விக்கிரமாவதாரத்தில் வானை அளந்த திருமாலும். திசைமுகனும் - பிரமனும். செரு எய்தி - தம்முள் மாறுபட்டு. செரு - போர்; அதன் காரணமாகிய மாறுபாட்டைக் குறித் தமையால் காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. காண் இயல்பை - காணும் முறையை (அறியாது). அது, திருக்குறுந்தொகையிற் கூறியபடி "மரங்களேறி மலர் பறித்திட்டிலார், நிரம்ப நீர் சுமந்தாட்டி நினைந்திலார், உரம்பொருந்தி ஒளிநிறவண்ணனை, நிரம்பக் காணலுற்றார் அங்கிருவரே" என்பதால் அறியப்படும். இவர்கள் தங்கள் அறியாமைக்கு நாணினர். அது ஆன்ம இயல்பு என உணர்த்தி இறைவன் நாணம் போக்கி அருள் செய்தனர்.

10. புற்றேறி உணங்குவார் - சமணர். புகை ஆர்ந்த துகில் போர்ப்பார்-பவுத்தர். சொல் தேற வேண்டா. வண்ணமாவது சுடர். மல்தேர், மல்லல்தேர் - சிறப்புடைய தேர். மல்லல் - கடைக் குறைந்து நின்றது. பெற்று - இடபம். ஏறும் பெருமானார் பெருவேளூர் பிரியார், அவர் வண்ணம் சுடர், அவரைத் தொழுமின்கள் என்க. "கடகரியும் பரிமாவும் தேரும் உகந்தேறாதே இடபம் உகந்து ஏறியவாறு எனக்கறிய இயம்பேடி" என்னும் திருவாசகத்தோடு பின்னிரண்டடியையும் ஒப்பிடுக. (திருச்சாழல் 15.)

11. பைம்பொன் - பசிய பொன்னையும். சீர் - சிறப்புப் பொருந்திய. மணி - இரத்தினங்களையும் (வாரி). சேர் - திரட்சியான. கனி பலவும் - கனிகள் பலவற்றையும். உந்தி - அடித்துக்கொண்டுவரும் (காவிரியில்).

அம்பொன் செய் - அழகிய பொன் அணிகளால் (அலங்கரித்தலைச்) செய்த. மடவரலார் - நீராடும் மகளிரின். அணி - வரிசை. மல்கும் - மிகுந்த (பெருவேளூர் நம்பன்). செய் - பொதுவினை சிறப்பு வினைக்காயிற்று. (சிவபெருமானின்) கழல் - திருவடிகளை; துதித்து. நவில்கின்ற - பாடு கின்ற. மறை - வேதநூல்; வல்ல ஞானசம்பந்தன். தமிழ் வல்லார்க்கு வினையால் நேரும் நீக்குதற்கு அரிய துன்பங்கள் சாரமாட்டா. வினைநோய் - வினையால் வரும் நோய் என மூன்றன் உருபும் பயனும் தொக்க தொகை. உந்தி பெயர்ச்சொல் - உந்து + இ = இகரம் வினை முதற் பொருளில் வந்தது.

மாயிரு ஞாலத்து மன்னு வடுதுறைபுக்
காயிரஞ் செம்பொன் அதுகொண்டும்—மாய்வரிய
மாண்புதிகழ் எம்பெருமான் மன்னுதிரு வோத்தூரில்
ஆண்பனைகள் பெண்பனைக ளாக்கியும்—பாண்பரிசிற்
கைப்பாணி ஒத்திக்கா ழிக்கோலக் காவிற்பொற்
சப்பாணி கொண்டு தராதலத்துள்—எப்பொழுதும்
நீக்கரிய இன்பத் திராகமிருக் குக்குறள்
நோக்கரிய பாசுரம்பல் பத்தோடு—மாக்கரிய
யாழ்முரி சக்கரமாற் றீரடி முக்காலும்
பாழிமையாற் பாரகத்தோர் தாம்உய்ய—ஊழி

உரைப்பமரும் பல்புகழால் ஓங்க உமைகோனைத்
திருப்பதிகம் பாடவல்ல சேயை—விருப்போடு
நண்ணு புகழ்மறையோர் நாற்பத்தெண் ணுயிரவர்
எண்ணின் முனிவரர் ஈட்டத்துப்—பண்ணமரும்
ஓலக்கத் துள்ளிருப்ப ஒண்கோயில் வாயிலின்கண்
கோலக் கடைகுறுகிக் கும்பிட்டாங்—காலும்
புகலி வளநகருட் பூசுரர் புக்காங்கு
இகலில் புகழ்பரவி ஏத்திப்—புகலிசேர்
வீதி எழுந்தருள வேண்டுமென விண்ணப்பம்
ஆதரத்தாற் செய்ய அவர்க்கருளி—நீதியார்

கேதகையுஞ் சண்பகமும் நேர்கிடத்திக் கீழ்த்தாழ்ந்த
மாதவியின் போதை மருங்கணைத்துக்—கோதில்
இருவேலி தன்னை இடைஇருத்தி ஈண்டு
மருவோடு மல்லிகையை வைத்தாங்—கருகே

—ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை

# 65 திருக்கச்சிநெறிக் காரைக்காடு

## 323 பதிகவரலாறு

திருவேகம்பத்தில் அமர்ந்த செழுஞ்சுடரை ஒருபோதும் தப்பாதே உள்ளுருகிப் பணிகின்றவராய்த் திருவியமகம், திருவிருக்குக்குறள் முதலிய திருப்பதிகத் தொடை புனைந்தருளும் பிள்ளையார், நீடு திருப்பொழிற் காஞ்சி நெறிக் காரைக்காடு இறைஞ்சித் துணைமலர்ச் சேவடி பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வாரணவு முலைமங்கை பங்கினரா யங்கையினில்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 1

காரூரு மணிமிடற்றார் கரிகாட ருடைதலைகொண்டு
ஊரூரன் பலிக்குழல்வா ருழைமானி னுரியதளர்
தேரூரு நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர்வாய்
நீரூரு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 2

1. வார் அணவும் - கச்சு அணிந்த. போர் அணவும் - போருக்குரிய; மழு. அங்கு - அசை. கார் அணவும் - மேகத்தை அளாவிய. மணிமாடம் - இரத்தினங்கள் பதித்த வீடுகளையும். கடை நவின்ற கலி - பிரளய காலத்து ஒலியோ என்று சொல்லும் பேரோசையையுடைய. கச்சி - காஞ்சியின். நீர் அணவும் - நீர் நிரம்பிய. பொய்கை - குளங்களையுடைய; நெறிக்காரைக்காடு. காஞ்சி மிக்கொலியை உடையதென்பது:- "மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள் ஒலியும் பெருமையும் ஒக்கும்" என்ற தண்டி அலங்கார உதாரணச் செய்யுளால் அறிக.

2. கார் ஊரும் - மேகம்போன்ற. மணி - நீலநிறம்வாய்ந்த. மிடற்றார்- கண்டத்தையுடையவர். கரி - கொள்ளிகள் கரிந்த. காடர் - மயானத்திலிருப்பவர். ஊர் - ஊர்கள்தோறும். ஊரான் - (பிச்சைக்குத்) திரிபவனைப் போல. பலிக்கு - பிச்சையின்பொருட்டு. உழல்வார் - திரிவார். உரி - உரியாகிய. அதளர்-தோலாடையையுடையவர் "புள்ளி உழைமானின், தோலான் கண்டாய்" (திருமுறை 6) என்னும் அப்பர் திருவாக்காலும் அறிக.

கூறணிந்தார் கொடியிடையைக் குளிர்சடைமே லிளமதியோ
டாறணிந்தா ராடரவம் பூண்டுகந்தா ரான்வெள்ளை
ஏறணிந்தார் கொடியதன்மே லென்பணிந்தார் வரைமார்பில்
நீறணிந்தார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 3

பிறைநவின்ற செஞ்சடைகள் பின்றாழப் பூதங்கள்
மறைநவின்ற பாடலோ டாடலராய் மழுவேந்திச்
சிறைநவின்ற வண்டினங்க டீங்கனிவாய்த் தேன்கதுவும்
நிறைநவின்ற கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 4

அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த வருளாளர்
குன்றாத வெஞ்சிலையிற் கோளரவ நாண்கொளுவி
ஒன்றாதார் புரமூன்று மோங்கெரியில் வெந்தவிய
நின்றாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 5

3. கொடி இடையை - பூங்கொடிபோலும் இடையுடைய; உமா தேவியாரை. கூறு அணிந்தார்-(இடப்) பாதியாகக்கொண்டார். உகந்தார்-மகிழ்ந்தார். கொடியதன்மேல் - கொடியின்மேல். வெள்ளை - வெண்மையாகிய. ஆன் ஏறு அணிந்தார் - இடபத்தைக் கொண்டார். வரைமார்பில்-மலைபோன்ற மார்பில். என்பு - எலும்பு; மாலையை அணிந்தார். நீறு அணிந்தார் - திருநீற்றையும் அணிந்தார். கொடி இடை - அன்மொழித் தொகை.

4, நவின்ற - தங்கிய. பின்-பின்புறத்தில். தாழ - தொங்க. பூதங்கள்-பூதங்கள்; பாடும். மறை நவின்ற - வேதங்களைப் பாடுகின்ற (பாடலோடு) ஆடலர் ஆய் - ஆடுதலை உடையவராய். (சோலைகளில்) சிறைநவின்ற - சிறகுகளையுடைய; வண்டு இனங்கள். தீங்கனி வாய்த்தேன் - மலரிலுள்ள தேனை வெறுத்து இனிய கனிகளில் சொட்டும் தேனை. கதுவும் - பற்றி யுண்பதால். நவின்ற - உண்டான. நிறைகலி - நிறைந்த ஓசையை யுடைய (கச்சி).

5. அன்று - அக்காலத்தில். ஆலின்கீழ் இருந்து - கல்லால மரத்தின் அடியில் வீற்றிருந்து. அறம் - சிவதருமமாகிய சரியை, கிரியைகளையும். (யோக, ஞானங்களையும்) புரிந்த - விரும்பியுரைத்த. அருளாளர் - கிருபை யுடையவர். குன்றாத - வலிமையிற் குறையாத. கோள் அரவம் - கொல்லு தலையுடைய பாம்பை. நாண்கொளுவி - நாணாகப்பூட்டி. ஒன்றாதார் - பகைவராகிய அசுரர்களின் (புரம் மூன்றும்). ஓங்கு எரியில் - மிக்க நெருப்பில். வெந்து அவிய - வெந்தொழிய.

பன்மலர்கள் கொண்டடிக்கீழ் வானோர்கள் பணிந்திறைஞ்ச
நன்மையிலா வல்லவுணர் நகர்மூன்று மொருநொடியில்
வின்மலையி னாண்கொளுவி வெங்கணையா லெய்தழித்த
நின்மலனூர் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டடரே. 2

புற்றிடைவாளரவினொடு புனைகொன்றை மதமத்தம்
எற்றொழியா வலைபுனலோ டிளமதிய மேந்துசடைப்
பெற்றுடையா ரொருபாகம் பெண்ணுடையார் கண்ணமரும்
நெற்றியினூர் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே 7

ஏழ்கடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை யெழில்வரைவாய்த்
தாழ்விரலா லூன்றியதோர் தன்மையினூர் நன்மையினூர்
ஆழ்கிடங்குஞ் சூழ்வயலு மதில்புல்கி யழகமரும்
நீண்மறுகிற் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே 8

6. பன்மலர்கள் கொண்டு - பலவகை மலர்களையும் கொண்டு. (தூவி) அடிக்கீழ்ப்பணிந்து இறைஞ்ச - திருவடியின்கீழ் பணிந்துவணங்க. நன்மை இலா - தீமை செய்தலையுடைய. வில் மலையின் - வில்லாகிய மலையில். வெம்கணையால் - திருமாலாகிய கொடிய அம்பினால். நகர் மூன்றும் - முப்புரங்களையும். ஒருநொடியில் - ஒரு மாத்திரைப்பொழுதில். நின்மலனூர் - இயல்பாகவே பாசங்களின் நீங்கிய பெருமானூர்.

7. புற்று இடை - புற்றில் உள்ள. வாள் - ஒளியையுடைய. அரவினொடு - பாம்பினோடும். புனை - அணிந்த. மதம் வாசனையையுடைய. மத்தம் - பொன்னூமத்தை (இவற்றோடும்) எற்று ஒழியா - மோதுதல் ஒழியாத. அலை - அலைவீசும். புனலோடு - கங்கைநீரோடு. இளம் மதியம்-பிறைச் சந்திரனையும். ஏந்து - தாங்கிய. சடைபெற்று உடையார் - சடையாகிய பேற்றையுடையவர்.

8. எழில் வரையாய் - அழகிய (கைலை) மலையினிடத்து. தாழ் - (சற்றே) வளைத்த. விரலால் ஊன்றியது ஓர் தன்மையினூர் - ஊன்றி வலியழித்த தன்மையையுடையவர். நன்மையினூர் - (அவ்வாறு செய்த அதுவும் மறக்கருணையேயாகலான்) நன்மையே செய்பவர்; இறைவன் செயல். சிவஞானசித்தியார் சுபக்கம் 5, 6, 15, 16. " நிக்கிரங்கள் தானும் நேசத்தாலீசன் " என்றும், " தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் " என்றும் தொடங்கும் சிவஞானசித்தியார் விருத்தங்களும், " இமையளவும் உபகாரம் அல்லா ஒன்றை இயக்கா நிர்க்குணக்

ஊண்டானு மொலிகடனஞ் சுடைதலையிற் பலிகொள்வர்
மாண்டார்தம் மெலும்பணிவர் வரியரவோ டெழிலாமை
பூண்டாரு மோரிருவ ரறியாமைப் பொங்கெரியாய்
நீண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே 9

குண்டாடிச் சமண்படுவார் கூறைதனை மெய்போர்த்து
மிண்டாடித் திரிதருவா ருரைப்பனகண் மெய்யல்ல
வண்டாருங் குழலாளை வரையாகத் தொருபாகம்
கண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைச் காட்டாரே 10

கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமான தடிவாழ்த்தித்
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே 11

திருச்சிற்றம்பலம்

கடலாய் இருந்த ஒன்றே" என்ற தாயுமானவர் வாக்கும் அறியத்தக்கது. மதில் புல்கி - மதிலைச் சேர்ந்து. ஆழ் கிடங்கும் - ஆழ்ந்த அகழியும் (ஆகிய இவற்றால்). அழகு அமரும் - அழகு தங்கிய. கச்சி நீள்மறுகின் - நெடிய வீதியையுடைய கச்சி.

9. ஊண் தானும் - உணவு தானும்; கடல் நஞ்சு. உடை தலையில் பலிகொள்வர். மாண்டார் தம் - இறந்த தேவர்களுடைய; எலும்பு அணிவர். வரி - நெடிய. (அரவோடு) எழில் - அழகிய. ஆமை - ஆமையோட்டை. பூண்டாரும் - அணிந்தவரும். ஓர் இருவர் - பிரம விட்டுணுக்கள். அறியாமை - அறியாதவாறு. பொங்கு - மிகுந்த. (எரியாய் நீண்டாரும் கச்சி நெறிக் காரைக் காட்டாரே) இருவர் என்பது தொகைக் குறிப்பு.

10. குண்டாடி - விதண்டை பேசி. சமண்படுவார் - (நல்லூழ் இன்மையின்) சமணசமயமுற்றவரும். கூறைதனை - ஆடையை. மிண்டு ஆடி - வலிய உரைகளைப் பேசித் திரிவாராகிய பவுத்தரும். உரைப்பனகள் - சொல்லுவன. (மெய்யல்ல) அவற்றை விடுத்து,; சார்புணர்ந்து சாரத்தக்கவர் யார் எனின், அவர் வண்டு ஆரும் குழலாளை மலைபோன்ற உடம்பில் ஒரு பாகம் வைத்துக்கொண்டு பொருந்தும் கச்சி நெறிக் காரைக் காட்டார் ஆவர் என்க. உரைப்பனவற்றிலும் பல வகைகள் என்பதை உரைப்பனகள் என விகுதிமேல் விகுதி தந்து விளக்கினார். "பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே" என இவ்வாறே அப்பர்பெருமானும் அருளினமை காண்க. (திருமுறை 6.)

11. கண் ஆரும் - கண்ணுக்கினிமை நிறைந்த (கலிக்கச்சிநெறிக் காரைக்காடு.)

# 66 திருவேட்டக்குடி

## 324 பதிகவரலாறு

திருப்பறியலூர் வீரட்டம் பரவிக் கடற்கரை யணிமைக்கண் உள்ள திருவிடைக்கழி, திருவளப்பூர் முதலியவற்றைப் போற்றி, அடியவர்கள். களி சிறப்பத் திருவேட்டக்குடி பணிந்து பாடி யருளியது இத்திருப்பதிகம்

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வண்டிரைக்கும் மலர்க்கொன்றை விரிசடைமேல் வரியரவம்
கண்டிரைக்கும் பிறைச்சென்னிக் காபாலி கழல்கள்
தொண்டிரைத்துத் தொழுதிறைஞ்சத் துளங்கொளிநீர்ச் சுடர்ப் பவளம்
தெண்டிரைக்கள் கொணர்ந்தெறியுந் திருவேட்டக் குடியாரே.

பாய்திமிலர் வலையோடு மீன்வாரிப் பயின்றெங்கும்
காசினியிற் கொணர்ந்தட்டுங் கைதல்சூழ் கழிக்கானல்
போயிரவிற் பேயோடும் புறங்காட்டிற் புரிந்தழகார்
தீயெரிகை மகிழ்ந்தாருந் திருவேட்டக் குடியாரே. 2

1. (வண்டு) இரைக்கும் - ஆரவாரிக்கும். (மலர்க்கொன்றை விரி சடைமேல்.) வரி அரவம்-கொடிய பாம்பை, கண்டு இரைக்கும்-(பயத்தால்) ஆரவாரிக்கும்; பிறையையணிந்த. சென்னி - தலையையுடைய. காபாலி - சிவபெருமான். கழல்கள் - (தனது) ஒலிக்கின்ற வீரத்தண்டையை யணிந்த திருவடிகளை. தொண்டு - தொண்டர்கள். இரைத்து - ஆரவா ரித்து. இறைஞ்சித்தொழுது - வணங்கிக் கும்பிடத்; திருவேட்டக்குடியி லுள்ளார். தெள்திரைகள் - தெள்ளிய அலைகள். துளங்கு - விளங்கு கின்ற. ஒளி - ஒளியையுடைய. நீர் - கடலிலுள்ள. சுடர்ப்பவளம் - சுடரை யுடைய பவளத்தை; அணியும் காபாலி யாண்டை யாரெனின் திரு வேட்டக்குடியார் என்க.

2. பாய் - (நீரிற்) பாய்கின்ற. திமிலர் - வலைஞர். எங்கும் பயின்று - கடலின் எப்பக்கங்களிலும் திரிந்து. காசினியில் கொணர்ந்து - நீரிலிருந்தும் தரைக்குக் கொணர்ந்து. அட்டும் - குவிக்கும். கைதல் - தாழை. கழிக் கானல் - கழியருகேயுள்ள கடற்கரைச் சோலையையுடைய. திருவேட்டக்

தோத்திரமா மணலிலிங்கந் தொடங்கியவா னிரையிற்பால்
பாத்திரமா வாட்டுதலும் பரஞ்சோதி பரிந்தருளி
ஆத்தமென மறைநால்வர்க் கறம்புரிநூ லன்றுரைத்த
தீர்த்தமல்கு சடையாருந் திருவேட்டக் குடியாரே. 3

கலவஞ்சேர் கழிக்கானல் கதிர்முத்தங் கலந்தெங்கும்
அலவஞ்சே ரணைவாரிக் கொணர்ந்தெறியு மகன்றுறைவாய்
நிலவஞ்சேர் நுண்ணிடைய நேரிழையா ளவளோடும்
திலகஞ்சேர் நெற்றியினார் திருவேட்டக் குடியாரே. 4

குடியார். இரவில் புறங்காட்டில் போய்ப் பேயொடும். புரிந்து - நடனமாடிய அழகு ஆர் - அழகையுடைய. தீ - தீக்கும் (கருக்கும்). எரி - நெருப்பை· கை மகிழ்ந்தார் - கையின்கண் விரும்பி யேற்றவர். புரிந்து என்ற பொது வினை சிறப்பு வினையைக் குறித்தது.

3. மணல் - மணலில். இலிங்கம் - சிவலிங்கவடிவை, தொடங்கி - நிறுவி, ஆன் நிரையில் - கூட்டமாகிய பசுக்களில் (கறந்த) பால், பாத்திரம் (ஆ) பாத்திரத்தில் பொருந்தக் கொண்டு, ஆட்டுதலும்- (சண்டேச நாயனார்) அபிடேகித்தலும், பரிந்து - விரும்பி. பரஞ்சோதி - மேலான சோதிவடிவை அருளி - அவர்க்கு அருள் புரிந்து, ஆத்தம் என - (நமக்கு) அன்பன் என்று, மறை - வேதங்களில் வல்ல, நால்வர்க்கு - சனகர் முதலிய முனிவர்களுக்கு, அறம் - சிவதருமம். நூல் - நூற்பொருளை. உரைத்த- சொல்லாமற் சொல்லிய, தீர்த்தம். கங்காதீர்த்தம். ஆட்டுதலும்- என்ற வினைக்கு எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. ஆத்தம் - நட்பு "ஆத்தம் என்றெனையாள் உகந்தானை" என்ற 7-ம் திருமுறையாலும் அறிக. சண்டேசுவர நாயனார்க்கு ஒளிவடிவாயதை "சிறுவனார்...சூழ்ந்த ஒளியில் தோன்றினார்" என்ற பெரிய புராணத்தும் அறிக. (சண்டீசர் 55)

4. கழிக்கானல் எங்கும் என்க. அலவன் சேர் - கடல் நண்டுகள் சேர்ந்த. அணை-குவியலை. நிலவம்சேர் - ஒளி பொருந்திய· இடைய - இடையையுடையவளாகிய, குறிப்புப் பெயரெச்சம். நேர் இழையாள் - அழகான அணிகலனை யணிந்தவள்.நிலவு என்னும் சொல் அம்சாரியை பெற்றது.

பங்கமார் கடலலறப் பருவரையோ டரவுழலச்
செங்கண்மால் கடையவெழு நஞ்சருந்துஞ் சிவமூர்த்தி
அங்கநான் மறைநால்வர்க் கறம்பொருளின் பயனளித்த
திங்கள்சேர் சடையாருந் திருவேட்டக் குடியாரே. 5

நாவாய பிறைச்சென்னி நலந்திகழு மிலங்கிப்பி
கோவாத நித்திலங்கள் கொணர்ந்தெறியுங் குளிர்கானல்
ஏவாரும் வெஞ்சிலையா லெயின்மூன்று மெரிசெய்த
தேவாதி தேவனூர் திருவேட்டக் குடியாரே. 6

பானிலவும் பங்கயத்துப் பைங்கானல் வெண்குருகு
கானிலவு மலர்ப்பொய்கைக் கைதல்சூழ் கழிக்கானல்
மானின்விழி மலைமகளோ டொருபாகம் பிரிவரியார்
தேனிலவு மலர்ச்சோலைத் திருவேட்டக் குடியாரே. 7

5. பங்கம் - சேறு. பருவரையோடு. பருத்த (மந்தர) மலை யுடனே அரவு உழல - வாசுகி என்னும் பாம்பு சுழல. மால் - திருமால். கடைய - (முன்னின்று) கடைய. எழு - உண்டான. நால்மறை - அங்கத்தோடு கூடிய நான்கு வேதங்களையுமுணர்ந்த. நால்வருக்கு அறம் பொருளின் பயன் - அறநூற்பொருளின் பயனாகிய அநுபவத்தை. அளித்த- உணர்த்தியருளிய. திங்கள்சேர் சடையார்.

6; நாவாய-தோணியின் வடிவையுடைய (பிறை) என்றது சடையில் கங்கையுண்மையால் பிறை அங்குத் தோணிபோன்றது என்று ஒரு குறிப்பு. நலம் திகழும்-அழகால் விளங்குகின்ற. தேவாதி தேவனூர் என்க. இலங்கு இப்பி-விளங்குகின்ற சங்குப் பூச்சிகளையும். கோவாத-கோத்தற்குரிய துளையில்லாத. நித்திலங்கள் - முத்துக்களையும், (கடல் திரைகள்) கொணர்ந்து எறியும் - வீசுகின்ற குளிர் கானல் - குளிர்ந்த கடற்கரைச் சோலையையுடைய திருவேட்டக் குடியாரென்க. ஏ ஆரும் - அம்பு பொருந்திய. வெஞ்சிலையால் - கொடிய வில்லால். எயில் - மதில். நாவாய் - கப்பல், இங்குத் தோணி என்ற பொருளில் நின்றது.

7. பால் நிலவும் - பால்போல் விளங்குகின்ற பங்கயத்து - தாமரை மலரில். நல் - நல்ல. வெண்குருகு - வெண்மையான அன்னப்பறவை (தங்கும்) கான்நிலவும் - வாசனைவீசும், மலர்ப்பொய்கை-

துறையுலவு கடலோதஞ் சுரிசங்க மிடறிப்போய்
நறையுலவும் பொழிற்புன்னை நன்னீழற் கீழமரும்
இறைபயிலு மிராவணன்றன் றலைபத்து மிருபதுதோள்
திறலழிய வடர்த்தாருந் திருவேட்டக் குடியாரே. 8

அருமறைநான் முகத்தானு மகலிடநீ ரேற்றானும்
இருவருமா யளப்பரிய வெரியுருவாய் நீண்டபிரான்
வருபுனலின் மணியுந்தி மறிதிரையார் சுடர்ப்பவளத்
திருவுருவில் வெண்ணீற்றார் திருவேட்டக் குடியாரே. 9

மலர்களையுடைய குளங்களையும். கைதல் - தாழைகள். சூழ் - சூழ்ந்த கழிக்கானல் - கழியருகேயுள்ளே கடற்கரைச் சோலையையும் உடைய திருவேட்டக்குடி என்க. பிரிவு அரியார் - பிரிவு இல்லாதவர். அரிது ' இன்மைப் பொருளில் வந்தது. "உறற்பால தீண்டாவிடுதல் அரிது'- என்புழிப்போல.

8. துறை - துறையில். உலவு - உலாவுகின்ற. கடல் ஓதம் - கடல் அலைகள். சுரிசங்கம் - சுரிந்த சங்குகளை. இடறி-வீச; போய் - (அவை) சென்று. நறையுலவும் - நறுமணம் வீசும். பொழில் - சோலையிலுள்ள. புன்னை, (நல் நீழல்கீழ்,) அமரும் - தங்கும். இறைபயிலும்-(இலங்கைக்கு, அரசனைகப் பொருந்திய இராவணன். திறல் - வலிமை.

9. அரும் மறை - அரிய வேதங்களை வல்ல. நான்முகத்தானும் - பிரமனும். அகல் இடம் - அகன்ற இடத்தையுடைய இப்பூமியை. நீரால்-நீரினால், ஏற்றானும் - (மாவலியினிடம்) யாசித்தவனும். அளப்பு அரிய - அளவிடற்கு அரிய. நான்கு முகத்தானும் வேதங்களை வல்லவன். தன் கலையறிவினாலும், உலகம் அளந்தவன் தன் உடல் வலியினாலும் இருவருமாய்க் காணமுடியாத எனஒரு நயம்-எரி உருவாய் அழல் வடிவாய் (நீண்ட.) நீர் ஏற்றல் - தத்தம்பண்ண வாங்குதல். மறி - மடக்கி. வீசுகின்ற. திரை-அலைகள். புனலின்-நீரினால். மணி முத்துக்களை. உந்தி - தள்ளி. ஆர் - நிறைந்த சுடர்ப்பவளம் - ஒளியையுடைய பவளம் போலும். திரு உருவில் - அழகிய உடம்பில். வெண்ணீற்றார் - வெள்ளிய திருநீற்றைப் பூசியவர். இது சிவபெருமானது கோலம் - பவளநிறம்

இகழ்ந்துரைக்குஞ் சமணர்களு மிடும்போர்வைச் சாக்கியரும்
புகழ்ந்துரையாப் பாவிகள்சொற் கொள்ளேன்மின் பொரு
[ளென்ன
நிகழ்ந்திலங்கு வெண்மணலி னிறைத்துண்டப் பிறைக்கற்றை
திகழ்ந்திலங்கு செஞ்சடையார் திருவேட்டக் குடியாரே. 10

தெண்டிரைசேர் வயலுடுத்த திருவேட்டக் குடியாரைத்
தண்டலைசூழ் கலிக்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்டமிழ்நூ லிவைபத்து முணர்ந்தேத்த வல்லார்போய்
உண்டுடுப்பில் வானவரோ டுயர்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

10. நிகழ்ந்து - துறையிற் பொருந்தி. இலங்கும் - விளங்குகின்ற. வெண்மணலின் - மணலின் வெண்மையைப்போல. நிறை - வெள் ஒளியால் நிறைந்த. துண்டப் பிறை - பிறைத்துண்டம் அணிந்த, (கற்றை யாகத் திகழ்ந்து இலங்கும், செஞ்சடையர் திருவேட்டக்குடியார்.)

11. தண்டலை - சோலை. கலி - ஓசை. உண்டு - அமுத உண்டியை உண்டு. உடுப்பில் "தோயாப் பூந்துகிலையுடுத்தலால்" ஐந்தாம் வேற்றுமை உருபு இல் - மூன்றன்பொருளில் வந்தது. இல் என்பதற்கு இல்லாத எனப்பொருள் கூறி மானிடரைப்போல் உண்டலும், உடுத்தலும் இல்லாத எனினும் ஆம். வானவரோடு வானத்திருப்பார்.

கருமுகையைக் கைகலக்க வைத்துக் கழுநீர்ப்
பெருகு பிளவிடையே பெய்து - முருகியலும்
புன்னாகந் தன்னைப் புணர இருள்வாட்செய்
தன்னயலே முல்லை தலையெடுப்ப - மன்னிய
வண்செருந்தி வாய்நெகிழ்ப்ப மௌவல் அலர்படைப்பத்
தண்குருந்த மாடே தலையிறக்க - ஒண்கமலத்

# 67 திருப்பிரமபுரம்

## 325 பதிகவரலாறு

"பொன்மார்பின் முந்நூல் புனைந்த புகலிப்பிரான் மாறுத்திருவுள்ளத் தோடும், புகலியின் மீண்டும் புகுந்து, திருத்தோணி வீற்றிருந்தாரைச் செந்தமிழ்மாலை விகற்பச் செய்யுட்களால் மூல இலக்கியமாக எல்லாப் பொருள் கோளும் முற்றப்" பாடிய திருப்பதிகங்கள் பலவற்றுள் ஒன்று இது.

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

சுரருலகு நரர்கள்பயி றரணிதல
முரணழிய வரணமதின்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள்
கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையி னிரைநிறைகொள்
வருசுருதி சிரவுரையினாற்
பிரமனுய ரரனெழில்கொள் சரணவிணை
பரவவளர் பிரமபுரமே. 1

1. சுரர் உலகும் - தேவலோகமும். நரர்கள் பயில்- மனிதர் வாழும். தரணி தலம் - பூலோகமும், முரண் அழிய - வலிமை அழியும்படி. (அதனால்,) அரணம் - காவலாகிய. முப்புரம் - முப்புர முடிய. சரவிசை- அம்பின் விசையால், விரவுவகை எரிய - கலந்து பல இடமும் எரியும்படி. கொள் -(அவ்அம்பைக்) கொண்ட, கரம் உடைய, பரமன் இடமாம். நிரை - வரிசையாக, நிறைகொள் - நிறைவையுடைய. வரன்முறையின் வரு - வரன்முறையில் ஓதிவருகின்ற. சுருதி சிரம் - வேத முடிவாகிய உபநிடதங்களின், உரையினால் - வசனங்களினால். உயர் - எவரினும் உயர்ந்த, அரன் - சிவபெருமானின். எழில் கொள் - அழகையுடைய, சரண இணை - இருதிருவடிகளையும். வரம் அருள - தனக்கு வரம் அருள்வான் வேண்டி, பிரமன். பரவ - துதிக்க. வளர் - புகழால் ஓங்கிய. பிரமபுரமே - பிரமபுரம் என்னும் பெயர்பெற்ற தலமாம்.

தாணுமிகு வாணிசைகொ டாணுவியர்
பேணுமது காணுமளவிற்
கோணுநுத னீணயனி கோணில்பிடி
மாணிமது நாணும்வகையே
ஏணுகரி பூணழிய வாணியல்கொண்
மாணிபதி சேணமரர்கோன்
வேணுவினை யேணிநகர் காணிறிவி
காணநடு வேணுபுரமே. 2

பகலொளிசெய் நகமணியை முகைமலரை
நிகழ்சரண வகவுமுனிவர்க்
ககலமலி சகலகலை மிகவுரைசெய்
முகமுடைய பகவனிடமாம்
பகைகளையும் வகையிலறு முகவிறையை
மிகவருள நிகரிலிமையோர்
புகவுலகு புகழவெழி றிகழநிக
ழலர்பெருகு புகலிநகரே. 3

2. ஆணு - (தன்) அன்பர்களாகிய தேவர்கள். வியர் பேணுமது - (கயமுகாசுரனால்) அச்சம் கொள்வதை. காணும் அளவில் - அறிந்ததும். தாணு - சிவபெருமான். மிகு - வலிமை மிகுந்த. ஆண் இசைகொடு-ஆண் யானையின் வடிவைக்காண இசைந்து. (நிற்க - அதற்கேற்ப.) கோணு நுதல் - வளைந்த புருவத்தையும். நீள்நயனி - நீண்ட கண்ணையு முடையவளாகிய அம்பிகை. கோண்இல்-குற்றமில்லாதபடி. பிடி-பெண் யானையின் உருவை. மாணி - பெருமையையுடையவளாய்க் காண. மது-மது என்ற அசுரனும். நாணும்வகை ஏணு - வெட்கும்படி வலிமைகொண்ட. கரி - கயமுகாசுரன். பூண் - தான் மேற்கொண்ட தீய தொழில்கள். அழிய - அழியும்படி. ஆண் - ஆண்தகையாகிய விநாயகக் கடவுள். (கயமுகாசுரனுக்குப் பேடியர் போல் அஞ்சிய தேவர் துயரந் தவிர்த்த வீரம் குறிக்க ஆண் என்றனர்) இயல் - (அன்பர்க்கு அனுக்கிரகிக்கும்) அருளை. கொள் - கொள்வித்த. மாணி - பெருமையுடையோனாகிய சிவ பெருமானின். பதி - இடம். சேண் - வானுலகில் உள்ள, அமரர்கோன் - இந்திரன். வேணுவினை - மூங்கிலை. ஏணி - ஏணியாகக்கொண்டு. காண்இல் - தான்நேரேகாண முடியாத. திவி - தேவலோகத்தின் நிலையை காண-ஒளிந்து காணும் பொருட்டு. நடு-நட்ட, வேணுபுரம் - வேணுபுரமாம் ஆணு - அன்பு; "ஆணுப்பைங்கிளியாண்டுச் சென்றுற்றதே" என்பது

3. பகல் ஒளி செய் - சூரியனைப்போற் பிரகாசிக்கும். நகம் மணியை - மலையிற் பிறக்கும் பத்மராக மணிகளையும். முகைமலரை - அரும்பு விரிந்த செந்தாமரை (நாண்) மலரையும். நிகழ் - போன்ற.

அங்கண்மதி கங்கைநதி வெங்கணர
வங்களெழி றங்குமிதழித்
துங்கமலர் தங்குசடையங்கிநிக
ரெங்களிறை தங்குமிடமாம்
வெங்கதிர்வி ளங்குலக மெங்குமெதிர்
பொங்கெரிபு லன்கள்களைவோர்
வெங்குருவி ளங்கியுமை பங்கர்சர
ணங்கள்பணி வெங்குருவதே. 4

---

சரண - திருவடிப் பேற்றுக்குரிய. அகவு - விருப்பம் மிக்க. முனிவர்க்கு - சனகாதி முனிவர்களுக்கு, அகலம்மலி - விஸ்தாரமாகிய, சகலக்லை - கலைகளனைத்தையும். மிக - (தெளிவு) மிகும்படி. உரை செய் - உபதேசித்தருளிய. முகம் உடைய - திருவருள் நோக்கம் உடைய. பகவன் - சிவபெருமானின். இடம் ஆகும். "அரும்பித்த செஞ்ஞாயிறு ஏய்க்கும் அடி" "மணியடி" என்னும் திருவடித் திருத்தாண்டகத்தாலும் முதலடியின் முற்பகுதி தெளிவாம், முகைமலர்ந்த மலர் - புதுப்பூ. பகவன் - சிவபெருமான் ஒருவர்க்கே உண்மையில் உள்ளது, ஏனைக் கடவுளர்க்கு உபசாரமாத்திரையே. "முகந்தான் தாராவிடின் முடிவேன் பொன்னம்பலத்தெம் முழுமுதலே" - என்னும் திருவாசகத்தில் (கோயில் மூத்த திருப்பதிகம் 3) முகம் - என்னும் சொல் திருவருள் நோக்கம் என்னும் பொருளில் வந்தமை காண்க. பகை - தேவர் பகைவர்களாகிய அரக்கர் முதலாயினோரை. "பகை" பகைவருக்கு ஆயினமையின் பண் பாகுபெயர். இறை - கடவுள். மிக - அறச்செயல்கள் அதிகரிக்க அருள - தர. அதனால். நிகரில் இமையோர் - மகிழ்ச்சியில் நிகர் இல்லாத தேவர்கள். புக - சரண்புக, எழில் திகழ - அழகு விளங்க. நிகழ்- (இவற்றால்) நேர்ந்த (புகலியெனும் பெயர்). அலர்பெருகு - அனைத் துலகினும் மிக்குப் பெருகிய (புகலி நகர் என்க.)

4. அங்கண்மதி - அழகிய ஆகாயத்தினிடத்தில் உள்ள சந்திரனும், வெங்கண் அரவங்கள் - கொடிய பாம்புகளும். எழில் தங்கும் இதழித் துங்கமலர் - அழகு தங்கிய கொன்றையின் தூயமலரும். தங்கு சடை - பொருந்திய சடையானது. அங்கி நிகர் - தீயையொக்கும். எங்கள் இறை - எங்கள் தலைவன். (சினை வினை. முதலோடு முடிந்தது) வெங் கதிர் - சூரியனால், விளங்கும் - விளங்குகின்ற. உலகமெங்கும் - உலகில் உள்ள அனைவரும். எதிர் - நல்வழிக்குமாறாக. பொங்கு - மிக. எரி - வருத்துகின்ற. புலன்கள் - மனம் முதலிய அந்தக் கரணங்களின். சேட்டையை. களைவோர் - நீக்கவிரும்புவோர். வெங்குரு - கொடிய தேவ குருவினால். விளங்கி-தமது துயர்களைதற்கிடமிதுவே யென்று தெளிந்து.

ஆணியல்பு காணவன வாணவியல்
 பேணியெதிர் பாணமழைசேர்
தூணியற நாணியற வேணுசிலை
 பேணியற நாணிவிசயன்
பாணியமர் பூணவருண் மாணுபிர
 மாணியிட மேணிமுறையிற்
பாணியுல காளமிக வாணின்மலி
 தோணிநிகர் தோணிபுரமே. 5

நிராமய பராபர புராதன
 பராவுசிவ ராகவருளென்
றிராவுமெ திராயது பராநினை
 புராணனம ராதிபதியாம்
அராமிசை யிராதெழி றராயர
 பராயண வராகவுருவா
தராயனை விராயெரி பராய்மிகு
 தராய்மொழி விராயபதியே. 6

உமைபங்கர் - சிவபெருமானின் - சரணங்கள் பணி பாதங்களைப் பணிந்த.வெங்குரு அது. வெங்குரு என்னும் அத்தலமாம்.

5. ஆண் இயல்புகாண (விசயனுடைய) வீரத்தன்மையை உமை காண. வன வாணஇயல் - வனத்தில் வாழ்பவர்களாகிய வேடர் வடிவம் பேணி - கொண்டு, எதிர். அவனுக்கு எதிராக. (போர்தொடங்கி) பாணமழை - (அவன் சொரியும்) மழைபோன்ற அம்புகளும். சேர் - அவ் வம்புகள் தங்கிய. தூணி - அம்பறாத் தூணியும். அற - நீங்கவும். நாணி அற - வில்நாண் அறுபடவும். வேணுசிலை பேணி - அவனது மூங்கிலால் ஆகிய வில்லின் வளைவு. அற - நீங்கவும். விசயன் - அவ் வர்ச்சுனன். நாணி - நாணமுற்று. பாணி அமர் பூண - கையால் அடித்துச் செய்யும் மற்போரைச் செய்ய வர. அருள் மாணு - அவனுக்கு மிகவும் அருள் புரிந்த, பிரமாணி இடம் - கடவுட்டன்மைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் சிவபெருமானின் இடம். ஏணி முறையில் - மிக்கது என்ற முறையினால். பாணி - பிரளயகால வெள்ளமானது. உலகு ஆள - உலகம் முழுதும் மூழ்கச் செய்ய. மிக ஆணின் - அதனின் மிகவும் பொருந்திய. ஆண்மை வலிமையினால். மலி - சிறந்த. தோணி நிகர் - அதனைக்கடக்கவல்ல தோணியையொத்த (தோணிபுரம் ஆம்.)

6. நிராமய - நோயற்றவனே. பராபர - உயர்வுடையதும், உயர் வற்றதும் ஆனவனே; புராதன - பழமையானவனே. பராவு - அனை

அரணையுறு முரணர்பலர் மரணம்வர
விரணமதி லரமலிபடைக்
கரம்விசிறு விரகனமர் கரணனுயர்
பரனெறிகொள் கரனதிடமாம்
பரவமுது விரவவிடல் புரளமுறு
மரவையரி சிரமரியவச்
சிரமரன சரணமவை பரவவிரு
கிரகமமர் சிரபுரமதே. 7

எவரும் துதிக்கின்ற. சிவ-சிவனே. ராக-விரும்பத்தக்கவனே. அருள்என்று-அருள் வாயாக என்று. இராவும்-இரவிலும். எதிராயது-பகலினும். பரா - பரவி. நினை - உயிர் அனைத்தும் தியானிக்கின்ற. புராணன் - பழமை யானவனும். அமர ஆதி - தேவர்களுக்குத் தலைவனுமாகிய சிவபெரு மானின். பதி - இடமாகும். அராமிசை ஆதிசேடனாகிய பாம்பின்மேல் இராத - இல்லாத. (இரணியாக்கனால் கொள்ளப்பட்டுக் கடலிற் கிடந்த) எழில்-அழகிய பூமியை. தரு- கொம்பினால் கொண்டு வந்த. ஆய-அத்தகை மை பொருந்திய. அரபராயண - சிவனைத் துதிக்கின்ற. வராக உரு - வெள்ளைப் பன்றி வடிவுகொண்ட. வாதராயனை-திருமாலை. விராய்-கலந்த. எரி-தீப்போன்ற பழி நீங்குதற் பொருட்டு. பராய் - அவனால் வணங்கப்பட்டு. (அதனால்) மிகு - புகழ்மிகுந்த. தராய் மொழி - பூந்தராய் என்னும் பெயர். விராய - கலந்த, பதி ஆம். எழில் - ஆகு பெயர் பராயணன் - குறுக்கல்விகாரம். விராயெரி - விராய எரி எனப்பிரிக்க

7. அரணையுறும் - மதிலைப்பொருந்திய, முரணர் - திரிபுரத்தசுரர் களால். பலர் மரணம்வர - பலருக்கு மரணம் நேர. இரணம் - சாயங்கள் முதலியன உண்டாக்கித் துன்புறுத்தும், மதில் - அம்மதிலின்மேல். அரமலி படை - அரத்தால் அராவப்பட்ட ஆயுதத்தை, கரம் - கையினால். விசிறு - ஏவிய, விரகன் - சமர்த்தனும், அமர் கரணன்-தன்னை அடைந்தவருக்குக் கரணங்களின் சேட்டையை அடக்குவிப்போனும், உயர் பரன் - யாவரினும் உயர்ந்த மேன்மையையுடையவனும். நெறி கொள்கரன் அது - உபதேசிக்கும் முறையைக்கொண்ட திருக்கரத்தை உடையவனுமாகிய சிவபெருமானின், இடமாம் - தலமாகும். பரவு - துதிக்கத்தக்க. அமுது - அமிர்தம், விரவ - தனக்குக்கிடைக்கும்படி உறும் அரவை - பந்தியில் வந்த பாம்பை. விடல்-விடத்தோடு, புரளவுறும்-புரளுதல்உறும், அரிசிரம் அரிய -திருமால் அதன்தலையை வெட்ட. அச்சிரம் - அந்தத் தலையானது, அரன் - சிவபெருமானது, சரணமவை - பாதங்களை, பரவ - துதித்ததினால்.

அறமழிவு பெறவுலகு தெறுபுயவன்
விறலழிய நிறுவிவிரன்மா
மறையினொலி முறைமுரல்செய் பிறையெயிற
னுறவருளு மிறைவனிடமாங்
. குறைவின்மிக நிறைதையுழி மறையமரர்
நிறையருள முறையொடுவரும்
புறவனெதிர் நிறைநிலவு பொறையனுடல்
பெறவருளு புறவமதுவே. 8

விண்பயில மண்பகிரி வண்பிரம
னெண்பெரிய பண்படைகொண்மால்
கண்பரியு மொண்பொழிய நுண்பொருள்கள்
தண்புகழ்கொள் கண்டனிடமாம்

இருகிரகம் - இரண்டு கிரகங்களாக, அமர் - நவக்கிரக வரிசையில் அமரச்செய்த, சிரபுரம் - சிரபுரமாம். உபதேசிக்கும் முறையைக்கொண்ட கரன் என்றது "மும்மலம்வேறுபட்டொழிய மொய்த்துயிர், அம்மலர்த் தாள்நிழல் அடங்கும் உண்மையைக், கைம்மலர்க் காட்சியில் கதுவநல்கிய" என்னும் கச்சியப்ப முனிவர் வாக்கால் அறிக.

8. அறம் அழிவுபெற - தர்மம் அழியும் படியாக. உலகு - உலகத்தை, தெறு - அழித்த, புயவன் - தோள்களையுடைய இராவணனது. விறல் அழிய - வலிமை யொழியும்படி, விரல் நிறுவி - விரலை அழுத்தி; (பின்) மாமறையின் ஒலி-சிறந்த சாமவேதகானத்தை, முறை - வரிசையாக, முரல் செய் - பாடிய, பிறை எயிறன் - பிறைபோன்ற பற்களையுடைய அவ்விராவணன். உற - நாளும், வாளும்பெற. அருளும் இறைவன் இடமாம். மறை அமரர் - வேதங்களுக்கும் தேவர்களுக்கும் ஒத்ததாகிய, நிறை - நீதியை. அருள - வழங்கும்படி. முறையோடு வரும் - முறையிட்டு வந்த, புறவன் - புறுவிற்குரியவனாகிய வேடன், எதிர் - எதிரே, குறைவில் - புறுவின் எடைக்குச் சரியாக இட்ட மாமிசத்தின் குறைவில். மிக - அதிகரிக்க, நிறைதை உழி - நிறைவுவேண்டியிருந்தபொழுது. நிறை நிலவு - அந்த எடையின் நிறை சரியாகப் பொருந்த இட்ட. பொறையன் - உடலின் அரிந்த மாமிசத்தை எடை யாக் கினவனாகிய சிபி, உடல் பெற - தன் உடம்பைப்பெற, அருள் - (அவன் வந்து பணிய) அருள் புரிந்த - புறவம் அது - புறவம் என்னும் பெயருடைய திருத் தலமாம், நிறைதை - நிறை; பொறை - பாரம், எடை.

மண்பரியு மொண்பொழிய நுண்புசகர்
புண்பயில விண்படரவச்
சண்பைமொழி பண்பமுனி கண்பழிசெய்
பண்புகளை சண்பைநகரே. 9

பாழியுறை வேழநிகர் பாழமணர்
சூழுமுட லாளருணரா
ஏழினிசை யாழின்மொழி யேழையவள்
வாழுமிறை தாழுமிடமாங்
கீழிசைகொண் மேலுலகில் வாழரசு
சூழரசு வாழவரனுக்
காழியசில் காழிசெய வேழுலகி
லூழிவளர் காழிநகரே. 10

9. மண்பகிரி - மண்ணைப்பிளக்கும் பன்றி(யாகி). எண் பெரிய - மிக்க மதிப்பையுடைய. பண் - தகுதியான, படைகொள் - சக்கராயுதத்தைக் கொண்ட. மால்-திருமால்(பூமியிற் சென்றும்) வண் பிரமன் - சிறந்த பிரமன். விண்பயில - ஆகாயத்தில் சென்றும், கண்பரியும் - கண்ணுற் பற்றக் கூடிய. ஒண்பு - ஒளி. ஒழிய - நீங்க. நுண் பொருள்கள் - அவற்றிற்கு எட்டாததாகிய நுண்ணிய பொருள்களாக. தண்புகழ்கொள் - இனிய கீர்த்தியைக்கொண்ட. கண்டன் இடமாம்-அகண்டனுகிய சிவபெருமானின் இடமாகும். அகண்டன் என்பது முதற்குறைந்து நின்றது. மண்பரியும் - உலகத்தைக் காக்கின்ற, ஒண்பு ஒழிய - ஆண்மை நீங்க. நுண்பு - அற்பர் களாகிய. சகர் - யாதவர்கள். புண்பயில - ஒருவரோடு ஒருவர் அடித்துக் கொண்டு செத்து. விண்படர - விண்ணுலகை அடைய. பண்பமுனி தவப்பண்பையுடைய கபிலமுனிவர். கண்பழி செய்-கருதத்தக்க பழியைச் செய்த. பண்பு - சாபத்தை. களை - நீக்கியதனுல். சண்பை மொழி - சண்பையென்று மொழியப்படும். சண்பைநகர்.

10. பாழி உறை - பாழியில் தங்கும், வேழம் நிகர் - யானையை யொத்த, பாழ் அமணர் - பாழ்த்த அமணர்களும். சூழும் - கூட்டமாக உள்ள, உடல் ஆளர் - உடலைப் பாதுகாப்போராகிய பவுத்தர்களும், உணரா - உணராத, ஏழின் இசை - ஏழு சுரங்களை யுடைய, யாழின்மொழி - யாழ் போற் பேசுகின்ற, ஏழையவள் - பெண்ணு கிய அம்பிகையுடன், வாழும் இறை - வாழ்பவராகிய சிவபெருமான், தாழும் - தங்கும், (இடம் ஆம்) கீழ் (உலகில்) கீழ் உலகில், சூழ் - சூழ்ந்த

நச்சரவு கச்செனவ சைச்சுமதி
யுச்சியின்மி லேச்சொருகையான்
மெய்ச்சிர மணேச்சுலகி னிச்சமிடு
பிச்சையமர் பிச்சனிடமாம்
மச்சமத நச்சிமத மச்சிறுமி
யைச்செய்தவ வச்சவிரதக்
கொச்சைமுர வச்சர்பணி யச்சுரர்க
ணச்சிமிடை கொச்சைநகரே. 11

ஒழுகலரி தழிகலியி லூழியுலகு
பழிபெருகு வழியைநினையா
முழுதுடலி லெழுமயிர்க டழுவுமுனி
குழுவினெடு கெழுவுசிவனைத்

அரசு - அரசர்களும், இசைகொள் - புகழ்கொண்ட, மேல் உலகில் - மேல் உலகத்தில், வாழ் - வாழ்கின்ற, அரசு - அரசனுகிய இந்திரனும்; வாழ - (காளியின் துன்புறுத்தலினின்று) வாழும் பொருட்டு (நடனம் ஆடுதலில்) அரனுக்கு - சிவபெருமானுக்கு, ஆழிய - ஆழ்ந்த, தோற்ற, சில்காழி - சிலகோவைகளேயுடைய மேகலாபரணம் அணிந்த வளாகிய அக்காளி, செய - தன் குற்றம் நீங்கும்படி வந்துபோற்ற, அருள் பெற்ற செயல் ஏழுலகில் - சப்த லோகங்களிலும், ஊழி - பல ஊழி காலமாக, வளர் - பெருகும் காழிநகர்.

11. நச்சு அரவு - நஞ்சு அரவு, நஞ்சையுடைய பாம்பை: கச்சென- கச்சாக. அசைச்சு அசைத்து - கட்டி, மதி - சந்திரனே, உச்சியில் - தலையில், மிலேச்சு மிலேத்து, மிலேந்து, ஒரு கையான் - ஒரு கையில் மெய் - (பிரமன்) உடம்பினின்றும் (கிள்ளிய) சிரம் - தலையை, அணேச்சு தாங்கி, உலகில் - உலகிலே, நிச்சம் - நாடோறும், இடு - இடுகின்ற, பிச்சை - பிச்சையை, அமர் - விரும்பும், பிச்சன் இடமாம் - பித்தனுகிய பெருமானின் இடமாகும். மச்சம் - மீனின். மதம்-நாற்றத்தை, நச்சி-விரும்பி மதமச்சிறுமியை - வலையர் சிறுமியை, அச்சவிரதம் -(அச்சத்தைத் தரும், விரதம்) அச்சத்தைத்தரும் கொள்கையின் பயனுக நேர்ந்த. கொச்சை - கொச்சைத்தன்மைக்கு, முரவு - கதறிய. அச்சர் - பராசர முனிவர். பணிய - வணங்க (அதுகண்டு) சுரர்கள் - தேவர்களும். நச்சி - விரும்பி. மிடை - நெருங்குகின்ற.

12. அழிகலியில் - அறம் அழிகின்ற கலியுகத்தில், உலகு உழி உலகினிடத்தில், ஒழுகல் அரிது - அறவழியில் ஒழுகுவது அரியது

தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை
கழுவுமுரை கழுமலநகர்ப்
பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன்
வழிமொழிகண் மொழிதகையவே. 12

திருச்சிற்றம்பலம்

(என்றும்) பழிபெருகு வழியை-பாவம் பெருகுகின்ற வழியையும், நினையா-நினைந்து. முழுது உடலின் - உடல் முழுவதும், எழும் மயிர்கள்-முளைத்த உரோமங்களைக்கொண்ட, முனி - உரோமச முனிவர், குழுவினொடு - தமது கூட்டத்தொடு. (வந்து) கெழுவு - அங்கே தங்கிய. சிவனை - சிவபெருமானை! தொழுது-வணங்கி, உலகில்-உலக இச்சையில், இழுகும்-வழுக்கச்செய்கின்ற. மலம் அழியும் வகை - பாசங்கள் நீங்கும் விதம். கழுவும் - போக்கிய, உரை - வார்த்தையை (புகழை) யுடைய. கழுமலநகர் - கழுமலமென்னும் பதியின், பழுதில் இறை - வணங்குவோரின் குற்றம் இல்லையாகச் செய்கின்ற தலைவனும், எழுதும் மொழி - எழுதக்கூடிய வேதமொழியாகிய தமிழ், விரகன் - தமிழில் வல்லவருமாகிய திருஞான சம்பந்தனேன். வழி மொழிகள் - வழிமாழித் திருவிராகப் பாசுரங்கள். மொழி தகையவே - பாடிப்பயன்பெறும் தன்மை உடையனவாம்.

தாதடுத்த கண்ணியால் தண்ணறுங் குஞ்சிமேற்
போதடுத்த கோலம் புனைவித்துக்—காதிற்
கனவயிர குண்டலங்கள் சேர்த்திக் கழுத்தின்
இனமணியி னாரம் இலகப்—புனைகனகத்
தொத்தடுத்த பூஞ்சுரிகைச் சோதிசேர் தாளிம்பம்
வைத்துமணிக் கண்டிகை பூண்டு—முத்தடுத்த
கேயூரந் தோள்மேற் கிடத்திக் கிளர்பொன்னின்
வாய்மை பெருநூல் வலந்திகழ—வேயுந்
தம்னியத்தின் தாழ்வடமுந் தண்டரளக் கோப்புஞ்
சிமையவரை மார்பிற் சேர்த்தி—அமைவுற்ற
—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 68 திருக்கயிலாயம்

326 பதிகவரலாறு

"புகலியர்தம் பெருந்தகையார் வடதிசைமேலும் குடதிசைமேலும், தமிழ்வழக்கு நிகழாதிருந்தும், சென்று தமிழிசைபாடும் செய்கை போல, வடகயிலையை வணங்கிப்பாடி" யருளியது இத்திருப்பதிகம்.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வாளவரி கோளபுலி கீளதுரி
 தாளின்மிசை நாளுமகிழ்வர்
ஆளுமவர் வேளநகர் போளயில
 கோளகளி றாளிவரவில்
தோளமரர் தாளமதர் கூளியெழ
 மீளிமிளிர் தூளிவளர்பொன்
காளமுகின் மூளுமிருள் கீளவிரி
 தாளகயி லாயமலையே. 1

1. வாள - ஒளி பொருந்திய. வரி - கீற்றுக்களையுடைய. கோள - கொலைபுரிவதாகிய. புலி - புலியை. கீளது - கிழித்த தாகிய. உரி - தோல் (உடுப்பதால்) தாளின் மிசை - (அது) பாதத்தில் பொருந்த. நாளும் மகிழ்வர் - என்றும் மகிழ்வர். வேள்-கண்டவர் விரும்பும். அநகர்-தூயோர் ஆளுமவர் - ஆள்பவர். போள - (எதிரிட்ட விலங்குகளை) கிழிக்கும் படியான. அயில - கூரிய பற்களையுடைய. கோள - திரண்டவடிவை யுடையதான. களிறு - யானையை. ஆளி - அடக்கியாண்டவர். வர வில் - சிறந்த வில்லைத் தாங்கிய. தோள் - தோளையுடைய. அமரர் - தேவராவர். மதர் - செருக்கிய. கூளி - கூளிகள். தாளம் எழ - தாளத்தை எழுப்ப. மீளி - (நடனமாடும்) வலியர். மிளிர் - பிரகாசிக்கின்ற. தூளி - திரு நீற்றைப் பூசியவர். காளமுகில் - கரிய மேகங்களாய். மூளும் - மூண்ட. இருள் - இருட்டை. கீள - ஓட்ட. பொன் - வெண்பொன்னாகிய. விரி - ஒளியை விரிக்கும். தாள - அடிவரையையுடைய கயிலாயமலை. போழ் - போள் என எதுகை நோக்கி நின்றது.

புற்றரவு பற்றியகை நெற்றியது
மற்றொருக ணொற்றைவிடையன்
செற்றதெயி லுற்றதுமை யற்றவர்க
ணற்றுணைவ னுற்றநகர்தான்
சுற்றுமணி பெற்றதொளி செற்றமொடு
குற்றமில தெற்றெனவினுய்க்
கற்றவர்கள் சொற்றொகையின் முற்றுமொளி
பெற்றகயி லாயமலையே. 2

சிங்கவரை மங்கையர்க டங்களன
செங்கைநிறை கொங்குமலர் தூய்
எங்கள் வினை சங்கையவை யிங்ககல
வங்கமொழி யெங்குமுளவாய்த்
திங்களிரு ணுங்கவொளி விங்கிமிளிர்
தொங்கலொடு தங்கவயலே
கங்கையொடு பொங்குசடை யெங்களிறை
தங்குகயி லாயமலையே. 3

2. புற்று அரவு - புற்றில் உள்ள பாம்பை. பற்றிய - பிடித்தகை. நெற்றியது - நெற்றியில் உள்ளது. மற்று ஒரு கண் - மூன்றாவது ஆகிய ஓர் கண். ஒற்றைவிடையன் - ஒரு இடபத்தை யுடையவர். செற்றது எயில் - (அவர்) அழித்தது மதிலை. உற்றது உமை - பிரியாது உடம்பில் பொருந்தியது, உமையை. அற்றவர்கள் - பற்றற்றவர்களின், நல்துணை - நல்ல துணைவராவார். (அத்தகைய சிவபெருமான்) உற்ற - தங்கிய. நகர் தான் - தலமாவது. சுற்றுமணி - சுற்றிலுமுள்ள இரத்தினங்கள், பெற்றது ஒளி - உடையதாகிய ஒளியை: (அழித்த) செற்றமோடு - பகைமையோடு (இருந்தும்) குற்றம் இலது எற்று என - (இம்மலை) குற்றம் அற்றது ஆயினது எதனால் என்று, வினுய் - வினவி, கற்றவர்கள் - அறிஞர்கள். சொல் தொகையின் - சொல்லும் புகழினோடு, முற்றும் - உலகை வளைப்ப தாகிய, ஒளி பெற்ற - ஒளியைப்பெற்ற கயிலாயமலை. தன்னைச் சார்ந்தவர் களை அழிப்பது அறமா? மலையிற்கிடக்கும் மணிகள் ஒளியிழந்தனவே தன்னொளியால் அவ்வாறு செய்த இம்மலை குற்றமில்லாதது ஆகுமா? என்பது மூன்றும் அடியின் பொருள்.

3. சிங்கம் - சிங்கங்களையுடைய, வரை - மலையில் வாழும், மங்கையர்கள் - வித்தியாதர மகளிர் முதலியோர். தங்களன - தங்களு

முடியசடை பிடியதொரு வடியமழு
வுடையர்செடி யுடையதலையில்
வெடியவினை கொடியர்கெட விடுசில்பலி
நொடியமகி ழிடிகளிடமாம்
கொடியகுர லுடையவிடை கடியதுடி
யடியினொடு மிடியினதிரக்
கடியகுர னெடியமுகின் மடியவத
ரடிகொள்கயி லாயமலையே. 4

டைய, செங்கை - சிவந்த கைகளில், நிறை - நிறைந்த, கொங்குமலர் - வாசனை பொருந்திய மலர்களை. தூய் - தூவி, எங்கள் வினை - எங்கள் வினைகளும். சங்கையவை - துன்பங்களும். இங்கு அகல - இங்கு விலகுவது ஆக என்று, அங்கம் - அங்கமாக, மொழி - மொழியும் தோத்திரங்கள். எங்கும் உள ஆய் - எல்லாப் பக்கங்களிலும் உள ஆகி. திங்கள் - சந்திரன், இருள் நொங்க - இருள் கெட, ஒளி வீங்கி - ஒளி மிகுந்து, மிளிர் - விளங்குகின்ற, தொங்கலோடு - மாலையோடு, தங்க - தங்கவும், அயலே - பக்கத்தில், கங்கையோடு - கங்கா நதியோடு, பொங்கும் - மிகுந்த, சடை - சடையையுடைய, எங்கள் இறை - எங்கள் தலைவன், தங்கும் - தங்கும் கயிலாயமலை, விங்கி - குறுக்கல்விகாரம்

4. முடிய - தலையில் உள்ளதாகிய. சடை - சடையையும். பிடியது- கையில் பிடிப்பதாகிய. வடிய - கூரிய. ஒரு மழு உடையர் - ஒரு மழுவை யும் உடையவர். செடியுடைய தலையில் - புதர்போன்ற தலையோடு. வெடிய - வெறுக்கத்தக்க. வினை - கொலைத் தொழிலையுடைய. கொடியர் - கொடியோராகிய, அசுரர்கள். கெட - கெடவும். இடு - இடுகின்ற. சில் - சில. பலி - பிச்சைக்காக. நொடிய - சில வார்த்தைகளைப் பேசவும். மகிழ் - விரும்புகின்ற, சிவபெருமானின் இடமாம். கொடிய குரல் - கொடிய குரலை உடைய. விடை - இடபங்கள். கடிய - வேகத்தை யுடைய. துடியடியினொடு - யானைகளுடனே. இடியின் - இடியைப்போல. அதிர - ஒலிக்க. (அதனால்) கடிய குரல் - மிக்க ஓசையையுடைய. நெடிய முகில் - விரிவாகிய மேகங்கள். மடிய - தமது ஒலி கெட. அடி - தாள் வரையின் இடத்தில். அதர்கொள் - செல்லும், கயிலாயமலை.

குடங்கையி னுடங்கெரி தொடர்ந்தெழ
விடங்கிளர் படங்கொளரவம்
மடங்கொளி படர்ந்திட நடந்தரு
விடங்கன திடந்தண் முகில்போய்த்
தடங்கட றொடர்ந்துட னுடங்குவ
விடங்கொளமி டைந்தகுரலால்
கடுங்கலின் முடங்களை நுடங்கர
வொடுங்குகயி லாயமலையே. 5

ஏதமில பூதமொடு கோதைதுணை
யாதிமுதல் வேதவிகிர்தன்
கீதமொடு நீதிபல வோதிமற
வாதுபயி னாதனகர்தான்
தாதுபொதி போதுவிட வூதுசிறை
மீதுதுளி கூதனலியக்
காதன்மிகு சோதிகிளர் மாதுபயில்
கோதுகயி லாயமலையே. 6

---

5 குடங்கையின் - உள்ளங்கையிலே. நுடங்கு - ஓசிந்து. எரி - அக்கினி. தொடர்ந்து - விடாது. எழ - பிரகாசிக்க. விடம்கிளர் - நஞ்சு மிகுந்த. படங்கொள் - படத்தைக் கொண்ட. அரவம் - பாம்பின் (தலையில் உள்ள நாகரத்தினத்தினால்) மடங்கு - ஏனைய ஒளிகள் மடங்கும்; ஒளிபடர்ந்திட-ஒளி பரவ, நடம்தரு-ஆடும் விடங்கனதுஇடம்-பேரழகுடைய சிவபெருமானின் (இடமாவது) தண் முகில் - குளிர்ச்சி பொருந்திய மேகங்கள். போய் - சென்று. தடங்கடல் - அகன்ற கடலை. தொடர்ந்து - பற்றி (நீர் உண்டு). உடன் - உடனே. நுடங்குவ - தவழ்வன. இடங்கொள - எல்லா இடங்களும் கொள்ளும்படி. மிடைந்த - நெருங்கிய. குரலால் - இடியின் ஓசையினால். கடுங்கல்லின் - விளக்கம் மிகுந்த மலைச்சாரலிலே. முடங்கு - வளைவான. அளை - வளையிலே. நுடங்கு அரவு - மெலிந்த பாம்பு. ஒடுங்கு - பதுங்குகின்ற; கயிலாயமலை.

6. ஏதமில - குற்றமில்லாதனவாகிய. பூத மொடு - பூதங்களோடு. கோதை - அம்பிகைக்கு, துணை - துணையாகிய, ஆதி முதல் - பழமையாகிய முதற்கடவுள். வேதவிகிர்தன் - வேதத்திலே எடுத்துக் கூறப்படும். வேறுபட்ட தன்மையையுடையவன். ஓதி-ஓதி அருளியவன். மறவாது பயில் நாதன் - தேவர் முனிவர் முதலியோர் தன்னை மறவாமல் நாடோறும்

சென்றுபல வென்றுலவு புன்றலையர்
துன்றலொடு மொன்றியுடனே
நின்றமர ரென்றுமிறை வன்றனடி
சென்றுபணி கின்றநகர்தான்
துன்றுமலர் பொன்றிகழ்செய் கொன்றைவிரை
தென்றலொடு சென்றுகமழக்
கன்றுபிடி துன்றுகளி றென்றிவைமுன்
னின்றகயி லாயமலையே. 7

வந்து வணங்கப் பெற்ற தலைவனாகிய சிவபெருமானது; நகர்தான் - தலமாவது. தாது - மகரந்தப்பொடிகளை, பொதி - அடக்கிய, போது - அரும்புகள். விட - மலர, ஊது - ஊதுகின்ற, சிறை - சிறைகளையுடைய வண்டுகள். மீது - தமது மேல் சிதறிய. துளி - தேன்துளிகளால், கூதல் - குளிர். நலிய - வருத்த(வும்) காதல் மிகு - (அச்சோலையின் கண்ணே தங்குவதற்கு) அன்பு மிகும், சோதி கிளர் - ஒளி பிரகாசிக்கின்ற, மாது பயில் - அழகுதங்கிய, கோது - குயில்கள் தளிர்களைக்கோதும்; கயிலை

7. சென்று - மாந்தர், முனிவர் முதலியோர் போய், பல - பல போர் களிலும், வென்று - செயித்து. உலவு - திரிகின்ற, புன் தலையர் - குறு மயிர்கள் பொருந்திய தலையுடையவர்களாகிய பூதகணங்களின்; துன்ற லொடும் - கூட்டத்தொடும், ஒன்றி - சேர்ந்து. உடனே நின்று - ஒரு சேர நின்று, அமரர் - தேவர்கள், சென்று - போய், என்றும் - எக்காலத்தும், இறைவன் தன் அடி - கடவுளின் பாதங்களை, பணிகின்ற - வணங்கு கின்ற, நகர்தான் - தலமாவது. துன்றும் - கொத்தாகப் பொருந்திய, மலர்- பூக்கள், பொன் - பொன்னைப் போல, திகழ்செய் - விளங்குகின்ற, (கொன்றை மாலையின்) விரை - வாசனை, (தென்றற்காற்றொடு) சென்று - பரவி; கமழ - மணக்க, கன்று - கன்றுகளும், பிடி பெண்யானை களும், துன்று - நெருங்கிய. களிறு - ஆண்யானைகளும், என்று இவை இத்தகைய மிருகங்கள்; முன்நின்ற - மலையின் முற்பக்கங்களிலே நிற்கின்ற; கயிலாயமலை. புன்தலையர் "புன்றலைய பூதப்பொருசடையாய்" என்னும் திருமுருகாற்றுப்படை வெண்பாவாலறிக.

மருப்பிடை நெருப்பெழு தருக்கொடு
செருச்செய்த பருத்தகளிறின்
பொருப்பிடை விருப்புற விருக்கையை
யொருக்குட னரக்கனுணரா
தொருத்தியை வெருக்குற வெருட்டலு
நெருக்கென நிருத்தவிரலால்
கருத்தில வொருத்தனை யெருத்திற
நெரித்தகயி லாயமலையே. 8

பரியதிரை யெரியபுனல் வரியபுலி
யுரியதுடை பரிசையுடையான்
வரியவளை யரியகணி யுருவினொடு
புரிவினவர் பிரிவினகர்தான்
பெரியவெரி யுருவமது தெரியவுரு
பரிவுதரு மருமையதனால்
கரியவனு மரியமறை புரியவனு
மருவுகயி லாயமலையே. 9

8. பொருப்பிடை - மலையில், விருப்புற-ஆசையோடு, இருக்கையை-பெருமான் வீற்றிருந்தலை, அரக்கன் உணராது - இராவணன் பொருட்படுத்தாமல், மருப்பிடை - தந்தத்தில், நெருப்பெழு - அக்கினிப்பொறி கக்கும்படியாக, செரு - போரை, தருக்கொடு - கர்வத்துடன் செய்த, பருத்தகளிறின் - பருத்த யானையைப் போல, (மலையொடு பொருதமால் யானையைப்போல எடுக்கலுற்று) ஒருத்தியை - ஒப்பற்றவளாகிய உமா தேவியை, வெருக்குற - அச்சம் உறும்படி. ஒருக்கு - ஒருங்கு, உடன் - உடனே, வெருட்டலும்-அஞ்சச்செய்த அளவில், நிருத்தவிரலால்-நடம்புரியும் விரல் ஒன்றினால், கருத்தில ஒருத்தனை - அறிவற்ற ஒருத்தனாகிய அவ்விராவணனை: எருத்துஇற - கழுத்து முறியும்படி, நெருக்கென - நெருக்கென்று. நெரித்த - முறித்து அரைத்த; கயிலாய மலையே. பெருமான் இடமாகும் என்பது குறிப்பெச்சம்.

9. பரிய திரை - பருத்த அலைகளையுடைய, எரிய - அக்கினி தோன்றுவதற்கு இடமாகிய, புனல் - கங்கை நீரும், வரிய - வரிகளை யுடைய, புலியுரியது - புலியின் தோலாகிய, உடை - ஆடையையும், (கொண்ட) பரிசையுடையான் - தன்மையையுடையவன். வரிய - கீற்றுக்களையுடைய, வளை - வளைகளை யணிந்த, அரிய - செவ்வரியுடைய,

அண்டர்தொழு சண்டிபணி கண்டடிமை
கொண்டவிறை துண்டமதியோ
டிண்டைபுனை வுண்டசடை முண்டதர
சண்டவிருள் கண்டரிடமாம்
குண்டமண வண்டரவர் மண்டைகையி
லுண்டுளறி மிண்டுசமயம்
கண்டவர்கள் கொண்டவர்கள் பண்டுமறி
யாதகயி லாயமலையே. 10

கணி - கண்ணி (உமாதேவியாரின்) உருவின் ஒடு - உடம்போடு, புரிவின் அவர் - கலத்தலையுடைய அச் சிவபெருமான்; பிரிவு இல் நகர்தான்- பிரியாத தலமாவது, பெரிய - மிகப்பெரியதாகிய, எரி உருவம் அது - தீயாகிய வடிவத்தை, தெரிய - தேடத் தொடங்க, உரு - அவ்வடிவம், பரிவுதரும் - துன்பத்தைத் தரக்கூடிய, அருமை அதனல் - அரிய தன்மை உடைமையினல், கரியவனும், - திருமாலும், (அரிய) மறை - வேதத்தை- புரியவனும் - விரும்புகின்ற பிரமனும், மருவு - (மன்னிப்பு வேண்டும் பொருட்டு) பொருந்திய கயிலாய மலையே.

10. அண்டர் தொழு - தேவர்கள் வணங்கக் கூடிய, சண்டி - சண்டேசுவர நாயனரின், பணி கண்டு-வழிபாட்டைக் கண்டு, அடிமை கொண்ட - ஆட்கொண்ட, இறை - கடவுளும், துண்டம் - துண் டாகிய, மதியோடு-பிறைச் சந்திரனேடு, இண்டை - இண்டைமாலையால். புனைவு உண்ட-அலங்கரிக்கப்பட்ட, சடை-சடையினிடத்தில், முண்டதர- நகுவெண்டலையைத் தரித்தருளியவரும், சண்ட இருள் - கடிய இருள் போன்ற,கண்டர்-கழுத்தையுடையவரும், ஆகியசிவபெருமானின்இடமாம். குண்டு அமணவண்டர் அவர் - மூர்க்கத்தனத்தையுடைய சமணர்களாகிய கீழ் மக்களும், மண்டைகையில் உண்டு - கையில் ஏந்திய மண்டையில் உணவு உண்டு, உளறி - உளறித்திரிந்து, மிண்டு - ஏமாற்றுகின்ற, சமயம் - சமயங்களை, கண்டவர்கள் - அறிந்தவர்களும், கொண்டவர்கள்- அநுட்டிப்போரும், பண்டும் அறியாத - அக்காலத்திலும் அறியாத கயிலாயமலையே.

அந்தண்வரை வந்தபுன றந்ததிரை
சந்தனமொ டுந்தியகிலும்
கந்தமலர் கொந்தினொடு மந்திபல
சிந்துகயி லாயமலைமேல்
எந்தையடி வந்தணுகு சந்தமொடு
செந்தமிழி சைந்தபுகலிப்
பந்தனுரை சிந்தைசெய வந்தவினை
நைந்துபர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்.

11. அம் தண் - அழகிய குளிர்ந்த, வரை வந்த புனல் தந்த - மலையில் வரும் அருவிகளில் உண்டாகிய, திரை - அலைகள், சந்தனமொடு - சந்தனக் கட்டைகளோடு, உந்தி - தள்ளிக் கொண்டுவந்து, அகில் - அகில் கட்டைகளும், கந்த மலர் - வாசனை பொருந்திய மலர்களின், கொந்தினொடு - கொத்தோடும், மந்தி பல - பல குரங்கின் கூட்டங்கள், சிந்து - சிதறும்; கைலாய மலையின்மேல். எந்தையடி - எமதுதந்தையாகிய சிவபெருமானின் திருவடியை, வந்து அணுகும் - வந்து சேர்ந்த; சந்தமொடு - வழி மொழித் திருவிராகமாகிய சந்த இசையோடு, (செந்தமிழ் இசைந்த); புகலி - சீர்காழியில் அவதரித்த, பந்தன் உரை - திருஞான சம்பந்தமூர்த்திகள் அருளிச் செய்த இப்பாடல்களை, சிந்தை செய - தியானிக்க, வந்த வினை-துன்புறுத்த வந்தபிணிகள், நைந்து - கெட்டு,(அதனால்) பரலோகம் எளிது - பரலோகம் எளிதில் பெறக்கூடியதாகும்.

வெண்ணீற்றின் ஒண்களபம் அட்டித்து மேவுதொழில்
ஒண்ணூற் கலிங்கம் உடல்புனைந்து—திண்ணேக்கிற்
காற்றுருமோ குன்றோ கடலோ வடலுருமோ
கூற்றுருவோ என்னக் கொதித்தெழுந்து—சீற்றத்
தழல்விழித்து நின்றெதிர்ந்து தாலவட்டம் வீசிப்
புழைதடக்கை கொண்டெறிந்து பொங்கி—மழையதத்தாற்
பூத்த கடதடத்துப் போக மிகப்பொலிந்த
காத்திரத்த தாகிக் கலித்தெங்குங்—கோத்த
கொடுநிகளம் போக்கிமிர் கொண்டெழுந்து கோபித்
திடுவண்டை யிட்டுக் கலித்து—முடுகி
—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

## 69 திருக்காளத்தி

### 327 பதிகவரலாறு

சைவசிகாமணியும் மறைவாழ்வும் ஆகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், திருக்காளத்தியை வழிபட்ட காலத்தில், அருளியவற்றுள் ஒன்றும், சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கில் குறிக்கப்பட்டதும் ஆகும் இத் திருப்பதிகம்.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வானவர்கள் தானவர்கள் வாதைபட
வந்ததொரு மாகடல்விடம்
தானமுது செய்தருள் புரிந்தசிவன்
மேவுமலை தன்னைவினவில்
ஏனமிள மானினொடு கிள்ளைதினை
கொள்ளவெழி லார்கவணினால்
கானவர்த மாமகளிர் கனகமணி
விலகுகா ளத்திமலையே. 1

முதுசினவி லவுணர்புர மூன்றுமொரு
நொடிவரையின் மூளவெரிசெய்
சதுரர்மதி பொதிசடையர் சங்கரர்
விரும்புமலை தன்னைவினவில்
எதிரெதிர வெதிர்பிணைய வெழுபொறிகள்
சிதறவெழி லேனமுழுத
கதிர்மணியின் வளரொளிக ளிருளகல
நிலவுகா ளத்திமலையே. 2

---

1. விடம் - ஆலகால விடத்தை. தான் அமுது செய்து - தாம் உண்டு. அருள் புரிந்த - அவர்களுக்கு அருளின. ஏனம் - பன்றிகள். இளம் மானினொடு - இளமான்களொடு. கிள்ளை - கிளிகளும். தினை கொள்ள - தினைகளைக் கவர. எழில் ஆர் - அழகு பொருந்திய. கவணினால் - கவணால். கானவர்தம் மாமகளிர் - வேடுவர்களுடைய சிறந்த பெண்கள்; வீசியெறிகின்ற. கனகம் - பொன்னாலும். மணி - இரத்தினங்களாலும். விலகு - அவை விலகுதற்கிடமாகிய (காளத்தி மலை).

2. முது - பழமையான (வில்). சினம் - கோபத்தையுடைய. வில் - வில்லினால். அவுணர் புரம் மூன்றும் - அசுரர்கள் புரம் மூன்றும்

வல்லைவரு காளியைவ குத்துவலி
யாகிமிகு தாரகனைநீ
கொல்லென விடுத்தருள் புரிந்தசிவன்
மேவுமலை கூறிவினவில்
பல்பலவி ருங்கனி பருங்கிமிக
வுண்டவை நெருங்கியினமாய்க்
கல்லதிர நின்றுகரு மந்திவிளை
யாடுகா ளத்திமலையே. 3

வேயனைய தோளுமையொர் பாகமது
வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடினட
மாடிமலை தன்னைவினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும்
வேடன்மல ராகுநயனம்
காய்கணை யினாலிடந் தீசனடி
கூடுகா ளத்திமலையே. 4

ஒரு நொடி வரையில் - ஒரு நொடிப் பொழுதில். மூள - மூளும்படியாக எரிசெய் - எரித்த. சதுரர் - சமர்த்தர். மதி - சந்திரன். பொதி - தங்கிய. சடையர் - சடாபாரத்தையுடையவர். சங்கரர் - ஆன்மாக்களுக்கு நன்மையைச்செய்பவர். (விரும்பும் மலை) எதிர்எதிர - எதிர்எதிர் உள்ளனவாகிய. வெதிர் பிணைய - மூங்கில்கள் ஒன்றோடு ஒன்று மோத (உராய). எழு - உண்டான. பொறிகள் - நெருப்புப்பொறிகள். (சிதற, அவற்றாலும்). ஏனம் உழுத - பன்றிகள் கொம்பினால்கிளறுவதால் தோன்றிய. கதிர் மணியின் வளர் ஒளிகள் - ஒளியையுடைய இரத்தினங்களின் மிகும் ஒளியினாலும்.இருள் அகல - இருள் நீங்க, நிலவு - விளங்குகின்ற; காளத்திமலை.

3. வல்லைவரு - விரைவிலே வந்த. வகுத்து - நியமித்து. வலியாகி - வலிமை பொருந்தி. மிகு - மிக்க; (தாரகனை). இருங்கனி பருங்கி-பெரிய பழங்களின் (சாற்றைக்) குடித்து. மிகவுண்டவை - மிகவும் உண்டவைகளாகி. இனமாய் நெருங்கி - ஒரே கூட்டமாய் மொய்த்து. கல் அதிர - மலை அதிரும்படியாக. கருமந்தி - கருங் குரங்குகள். (விளையாடுகின்ற காளத்தி மலை.) மந்தி - குரங்கின் பொதுப் பெயர்.

4. வேய் அனைய - மூங்கிலையொத்த. (தோள்). விடை ஏறி - விடையை ஊர்தியாக உடையவன். தூய - வெண்மையான. மதி சூடி - சந்திரனை அணிந்தவன்; (சுடுகாட்டில் நடனமாடி). வாய் கலசமாக - வாயே

மலையின்மிசை தனின்முகில்போல் வருவதொரு
மதகரியை மழைபோலலறக்
கொலைசெய்துமை யஞ்சவுரி போர்த்தசிவன்
மேவுமலை கூறிவினவில்
அலைகொள்புன லருவிபல சுனைகள்வழி
யிழியவய னிலவுமுதுவேய்
கலகலென வொளிகொள்கதிர் முத்தமவை
சிந்துகா ளத்திமலையே. 5

பாரதம் விளங்கிய பகீரத
னருந்தவ முயன்றபணிகண்
டாரருள் புரிந்தலைகொள் கங்கைசடை
யேற்றவரன் மலையைவினவில்
வாரத ரிருங்குறவர் சேவலின்
மடுத்தவ ரெரித்தவிறகில்
காரகி லிரும்புகை விசும்புகமழ்
கின்றகா ளத்திமலையே. 6

அபிடேக கலசமாக. வழிபாடு செய்யும் - பூசித்த. வேடன் - கண்ணப்ப நாயனர். மலராகும் நயனம் - மலர் போன்ற கண்ணை. காய் கணையினுல் - கோபிக்கின்ற அம்பினுல். இடந்து - தோண்டி. ஈசன் அடி கூடும் - சிவ பிரானின் திருவடி சேர்ந்த; காளத்தி மலை. காய் கணை - வினைத்தொகை.

5. மலையின் மிசைதனின் - மலையின் மேல் இடத்தில், முகில்போல் வருவது ஒரு மதகரி - முகில்போல் வந்த ஓர் மதங்கொண்ட யானை, மழைபோல் அலற - இடியைப் போல் பிளிறும்படி, (கொலை செய்து உரிபோர்த்த சிவன்.) அலைகொள் - அலைகளையுடைய, புனல் அருவி பல - நீரையுடைய அருவிகள், பல சுனைகள் வழி - பல சுனைகளிடத்தில். இழிய - பாய, அயல் - அருகிலே, நிலவும் - பொருந்திய, முதுவேய் - முதிய மூங்கில்கள், ஒளிகொள் - பிரகாசிக்கின்ற, கதிர் - கிரணங்களை யுடைய, முத்தம் அவை - முத்துக்களை; கலகலவென (அருவியின் வெள் ஒளிக்கு எங்கள் ஒளி தோற்றனவா என்று சொரிவது போல்) சிந்து - சொரிகின்ற (காளத்தி மலை).

6. பாரதம் - பூமியில் (விளங்கிய பகீரதன்). அருந்தவம் முயன்ற - அரிய தவம் செய்த, பணி கண்டு - வினையைக் கண்டு, ஆர் அருள் புரிந்து-அரிய கிருபைசெய்து, (அலைகொள்கங்கையை) சடைஏற்ற அரன்-சடையில்தாங்கிய சிவபெருமானது, வார் அதர் - நெடிய வழிகளையுடைய,

ஆருமெதி ராதவலி யாகிய
சலந்தரனை யாழியதனால்
ஈரும்வகை செய்தருள் புரிந்தவ
னிருந்தமலை தன்னைவினவில்
ஊருமர வம்மொளிகொண் மாமணி
யுமிழ்ந்தவை யுலாவிவரலால்
காரிருள் கடிந்துகன கம்மென
விளங்குகா ளத்திமலையே. 7

எரியனைய சூரிமயி ரிராவணனை
யீடழிய எழில்கொள்விரலால்
பெரியவரை யூன்றியருள் செய்தசிவன்
மேவுமலை பெற்றிவினவில்
வரியசிலை வேடுவர்க ளாடவர்க
ணீடுவரை யூடுவரலால்
கரியினொடு வரியுழுவை யரியினமும்
வெருவுகா ளத்திமலையே. 8

இரும் - பெரிய, சேவலின் - தங்கும் இடமாகிய குடிசையில், அவர் - அவர்கள், மடுத்து - மூட்டி, (எரித்த விறகில் - கரிய, அகில் கட்டையிலிருந்து கிளம்பிய) இரும்புகை - பெரிய புகை, விசும்பு - வான் உலகில், கமழ் - மணக்கின்ற, காளத்திமலை.

7. ஆரும் எதிராத - எவரும் தன்னோடு சண்டைக்கு எதிராத, வலியாகிய - வலிமை பொருந்திய (சலந்தராசுரனை) ஆழி அதனால் - சக்கரத்தினால், ஈரும் வகைசெய்து - அவன்தலையை அறுக்கும்படி செய்து, தேவர்களுக்கு அருள் புரிந்தவன். ஊரும் அரவம் - ஊர்ந்து செல்லுகின்ற பாம்புகள்; உமிழ்ந்தவை-உமிழ்ந்தவைகளாகிய, ஒளி கொள் மாமணி-ஒளியைக் கொண்ட சிறந்த இரத்தினங்கள், உலவி வரலால் - ஒளி உலாவி வருதலினால், கார் இருள் கடிந்து - கரிய இருளை ஓட்டி, கனகம் என- பொன்மலையைப் போல, விளங்கு - விளங்குகின்ற, காளத்திமலை.

8. சுரி - சுரிந்த, எரி அனைய மயிர் - அக்கினியைப் போன்ற செம்பட்டை மயிர்களையுடைய (இராவணனை - வலிமை அழியும்படி). பெரிய வரை ஊன்றி - பெரிய மலையின் அடியில் அழுத்தி, அருள் செய்த சிவன் - மீண்டும் அவனுக்கே அருள் செய்த சிவன் (மேவும்). மலை - மலையையும், பெற்றி - அதன் சிறப்பையும் வினவின் - வினவினால் (முறையே) வரிய - நெடிய, சிலை - வில்லை யேந்திய, வேடுவர்கள் ஆடவர்கள் - வேட்டுவ ஆண் மக்கள், நீடுவரை யூடு - நெடிய மலையின்

இனதளவி லிவனதடி யிணையுமுடி
யறிதுமென விகலுமிருவர்
தனதுருவ மறிவரிய சகலசிவன்
மேவுமலை தன்னை வினவில்
புனவர்புன மயிலனைய மாதரொடு
மைந்தரு மணம்புணருநாள்
கனகமென மலர்களணி வேங்கைக
ணிலாவுகா ளத்திமலையே. 9

நின்றுகவ ளம்பலகொள் கையரொடு
மெய்யிலிடு போர்வையவரும்
நன்றியறி யாதவகை நின்றசிவன்
மேவுமலை நாடிவினவில்
குன்றின்மலி துன்றுபொழி னின்றகுளிர்
சந்தின்முறி தின்றுகுலவிக்
கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளை
யாடுகா ளத்திமலையே. 10

வழியாக, வரலால் - வருவதால், வரி - கீற்றுக்களையுடைய, உழுவையும் புலியும், அரியினமும் - சிங்கக் கூட்டமும் (யானைகளோடு) வெருவு- அஞ்சுகின்ற காளத்திமலை. மலை, பெற்றி - எதிர் நிரனிறை. பெற்றி, "கரியினொடு வெருவு" என்பதனுலும், மலை - காளத்திமலை என்பதனுலும் கொள்க.

9. இ(ன்)னது அளவில் - குறிப்பிட்ட இந்தக் கால எல்லைக்குள். (இவனது அடியும் முடியும்) அறிதும் - அறிவோம், இகலும் - மாறுபட்ட சகள சிவன் - திருவுருவுடைய சிவன், புனவர் - தினைப்புனத்திலுள்ளவர்களாகிய வேடுவர்கள், மயில் அனைய. மயிலையொத்த - மாதருடன் - பெண்களோடு, மைந்தரும், ஆடவரும், மணம் புணரும் நாள் - மணம் புணர்விக்கும் நாளில். அணி வேங்கை - வேங்கை மரங்களின் வரிசை, கனகம் என - தங்கத்தைப் போல, மலர்கள் - பூக்களால், நிலாவு - விளங்குகின்ற காளத்திமலை. வேங்கை பூத்தலால் மணம் செய்காலம் இது வென உணரும் மரபு கூறியவாறு.

இறைவன் வடிவம் சகளம், நிஷ்களம், சகள நிஷ்களம் என மூன்று. சகளம் - மான், மழு, சதுர்ப்புசம், சந்திரசூடம் முதலிய உருவத் தோற்றம். நிஷ்களம் - அருவத்தோற்றம். சகள நிஷ்களம் - உருஅருவத் தோற்றம் - சிவலிங்க வடிவம்.

10. நின்று - நின்று கொண்டே, கவளம் பல கொள் - பல கவளங்களை யுண்ணுகின்ற, கையரொடு - கையையுடைய சமணர்களுடன்

காடதிட மாகநட மாடுசிவன்
மேவுகா ளத்திமலையை
மாடமொடு மாளிகைக ணீடுவளர்
கொச்சைவய மன்னுதலைவன்
நாடுபல நீடுபுகழ் ஞானசம்
பந்தனுரை நல்லதமிழின்
பாடலொடு பாடுமிசை வல்லவர்க
ணல்லர்பர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்.

மெய்யில் இடு - உடம்பில் போர்த்த, போர்வையரும் - போர்வையை உடையவர்களாகிய பௌத்தர்களும், நன்றி - தனது அனந்த கல்யாண குணங்களை, அறியாதவகை - தெரியாத விதம்; நின்ற - அவர்களை மறைத்து நின்ற (சிவன் மேவும் மலையை) நாடி - ஆராய்ந்து, வினவில்- கேட்பீர்களே யானல், பிடி - பெண் யானைகள்; குன்றில் - மலையில், துன்று - நெருங்கிய, பொழில் - சோலையில், நின்ற - உள்ள, மலி குளிர்- மிக்க குளிர்ச்சியாகிய, சந்தின் முறி - சந்தனத் தழைகளை, கன்றிெனடு தின்று - தமது கன்றினுடனே தின்று, குலவி - மகிழ்ந்து திரிந்து, விளையாடு கின்ற காளத்திமலை, கையர் - அற்பர் என இரு பொருளும் கொள்க. மலைவளம் கூறியது: தன்மை நவிற்சியணி.

11. காடு (அது) மயானம், இடமாக - அரங்காக, நடம் ஆடு - கூத்தாடுகின்ற சிவன், நீடுவளர் - மிக உயர்ந்த: கொச்சை வயம் - சீகாழியில், மன்னு - நிலைபெற்ற தலைவனுகிய: நாடுபல - பல நாடு களிலும், நீடு புகழ் - சென்று பரவிய, புகழையுடைய, (ஞானசம்பந்தன்) உரை - பாடிய. பாடலொடு பாடும் இசை - பாடலோடு இசைத்துப் பாடும் இசையில் வல்லவர்கள். நல்லர் - சிறந்தவர்க ளாவார்கள். (அவர்களுக்கு)பரலோகம் - சிவலோகம். எளிது - அடைவதற்கு எளி தாகும். பிறர் அடைவதற்கு அரியதாயினும் என்பது இசையெச்சம்.

நெடுநிலத்தைத் தானுழக்கி நின்று நிகர்நீத்
திடிபெயரத் தாளந் திலுப்பி—அடுசினத்தாற்
கன்ற முகம்பருகிக் கையெடுத் தாராய்ந்து
வென்றி மருப்புருவ வெய்துயிர்த்—தொன்றிய
கூடம் அரணழித்துக் கோபுரங்க ளைக்குத்தி

# 70 திருமயிலாடுதுறை

## 328 பதிகவரலாறு

புகலியர் தலைவர் மயிலாடுதுறையினில் வந்தார். செல்வவேதியர் தொண்டரோடு எதிர்கொண்டனர். திருக்கோயிலில் புகுந்து இறைஞ்சி எல்லையில்லதோர் இன்பம் முன் பெருக எழுந்தார். உணர்வு உறும் பரிவுகொண்டு உருகி வெள்ளம் தாங்கிய சடையரைத் தெள்ளும் இன்னிசைத் திளைப்பு அளிக்கப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

ஏனவெயி றுடரவொ டென்புவரி
யாமையிவை பூண்டிளைஞராய்க்
கானவரி நீடுழுவை யதளுடைய
படர்சடையர் காணியெனலாம்
ஆனபுகழ் வேதியர்க ளாகுதியின்
மீதுபுகை போகியழகார்
வானமுறு சோலைமிசை மாசுபட
மூசுமயி லாடுதுறையே. 1

1. ஏன எயிறு - பன்றியின் கொம்பும். ஆடு அரவொடு - ஆடும் பாம்பும். என்பு - எலும்பும். வரி - வரிகளையுடைய. ஆமை - ஆமையோடும். இவை - (ஆகிய) இவற்றை. பூண்டு - அணிந்து. இளைஞராய் - வாலிபராகி. (சதாசிவமூர்த்தத் தியானம் பதினாறு வயதினராகப் பாவிக்கச் சொல்வது காண்க.) கானம் - காட்டில் வாழும். வரி - கீற்றுக்களையுடைய. நீடு - நெடிய. உழுவை அதள் - புலித்தோலை. உடைய - ஆடையாக உடைய. படர் சடையர் - படர்ந்த சடையை உடையவராகிய சிவபெருமானது. காணி - உரிய இடம் எனலாம். ஆன புகழ் - சிறந்த புகழையுடைய. வேதியர்கள் (செய்யும்) ஆகுதியின் மீது - வேள்வியில் (கிளம்பும்) புகை - புகையானது. போகி - மேற்சென்று. அழகார் - அழகு மிகுந்த. வானம் உறு - தேவலோகத்தில் உள்ள. சோலைமிசை - கற்பகச் சோலையின் மீது. மாசுபட - அழுக்கு உண்டாக. மூசு - மூடுகின்ற மயிலாடுதுறை.

அந்தண்மதி செஞ்சடைய ரங்கணெழில்
கொன்றையொ டணிந்தழகராம்
எந்தமடி கட்கினிய தானமது
வேண்டிலெழி லார்பதியதாம்
கந்தமலி சந்தினொடு காரகிலும்
வாரிவரு காவிரியுளால்
வந்ததிரை யுந்தியெதிர் மந்திமலர்
சிந்துமயி லாடுதுறையே. 2

தோளின்மிசை வரியரவ நஞ்சழல
வீக்கிமிகு நோக்கரியராய்
மூளைபடு வெண்டலையி லுண்டுமுது
காடுறையு முதல்வரிடமாம்
பாளைபடு பைங்கமுகு செங்கனி
யுதிர்த்திட நிரந்துகமழ்பூ
வாளைகுதி கொள்ளமடல் விரியமண
நாறுமயி லாடுதுறையே. 3

---

2. அந்தண்மதி - அழகிய குளிர்ந்த சந்திரனை அணிந்த. (செஞ் சடையர்). அங்கண் - அந்தச் சடையினிடத்தில். எழில் - அழகிய. கொன்றையொடு - கொன்றை மாலையோடு. அணிந்து - சூடி. அழகராம் - அழகராகிய. எந்தம் அடிகட்கு - எமது கடவுளாகிய சிவபெருமானுக்கு. இனிய - விருப்பமான. தானம் அது - இடமாவது. வேண்டில் - எது என அறிய வேண்டுவீரேல், எழிலார் பதியதாம்; அழகு மிக்க பதி அது ஆகும். (மயிலாடுதுறை) கந்தம் மலி - வாசனை மிகுந்த. சந்தினொடு - சந்தன மரங்களோடு. கார் அகிலும் - கரிய அகில் மரங்களையும். வாரிவரு - வாரிக்கொண்டு வருகின்ற. காவிரி உள் - காவிரி நதியில். வந்ததிரை - வந்த அலைகள். உந்தி - தம்மேல் நீர்த்திவலை வீசுவதால். எதிர் - அதற்கு எதிராக. மந்தி - கரையோரத்துச் சோலைகளிலுள்ள குரங்குகள். மலர் சிந்து - மலர்களை வீசுகின்ற. மயிலாடுதுறை. தம்மீது திவலை சிந்திய காவிரியைக் கோபித்து, மந்திகள் அதற்கு எதிராக மலர்களை வீசுகின்றன எனத் தலத்தின் வளம் கூறியவாறு. உந்தி - உந்த. வினையெச்சத்திரிபு.

3. தோளின் மிசை - தோளின் மீது. வரி அரவம் - நெடிய பாம்புகளை. நஞ்சு அழல - விஷத்தைக் கக்க. வீக்கி - கட்டி. மிகு - மிகுந்த. நோக்கு அரியராய் - அரிய அழகுடையவராய். மூளைபடு - மூளையிருந்த. வெண் தலையில் - வெள்ளிய மண்டையோட்டில் (உண்டு). முதுகாடு உறையும் - சுடுகாட்டில் வசிக்கும். முதல்வர் இடமாம். வாளை குதி

ஏதமில ரரியமறை மலையர்மக
ளாகியவி லங்குநுதலொண்
பேதைதட மார்பிட மாகவுறை
கின்றபெரு மானதிடமாம்
காதன்மிகு கவ்வையொடு மவ்வலவை
கூடிவரு காவிரியுளால்
மாதர்மறி திரைகள்புக வெறியவெறி
கமழுமயி லாடுதுறையே 4

பூவிரி கதுப்பின்மட மங்கையர
கந்தொறு நடந்துபலிதேர்
பாவிரி யிசைக்குரிய பாடல்பயி
லும்பரமர் பழமையெனலாம்
காவிரி நுரைத்திரு கரைக்குமணி
சிந்தவரி வண்டுகவர
மாவிரி மதுக்கிழிய மந்திகுதி
கொள்ளுமயி லாடுதுறையே. 5

கொள்ள - வாளை மீன்கள் தாவ. (அதனால்). பாளைபடு - பாளை பொருந்திய. பைங்கமுகு - பசிய கமுகு மரங்கள். செங்கனி - சிவந்த பழங்களை. உதிர்த்திட - உதிர்க்க, அதனால் நிரந்து - பரவி. கமழ் - மணக்கும். பூமடல் - கோட்டுப்பூ முதலிய மலர்களின் இதழ்கள். விரிய - விரிவதனால். மணம் நாறும் (மயிலாடுதுறை.) உதிர்த்திட காரண காரியப் பொருட்டு. குதிகொள்ள - காரணப்பொருட்டு.

4. அரிய மறை ஏதமிலர் - அரிய வேதங்களில் சொல்லப்படுகின்ற நிஷ்களங்கர். மலையர் மகளாகிய - மலையரனுக்கும், மலையத்துவசபாண்டிய னுக்கும் மகளாகிய. விலங்குநுதல் - வளைந்த புருவத்தையுடைய. பேதை - உமாதேவியாரின். தடம் - விசாலமான (மார்பு) காதல் - விருப்பம். கவ்வை - ஓசை. மவ்வல் - மல்லிகை முதலாகிய நறுமண மலர்கள். கூடிவரு - சேர்ந்து வருகின்ற. காவிரியுள் - காவிரியில்வரும். திரைகள் - அலைகள். புக - பாய்வதால். வெறிய - மணமற்ற மற்றைப் பொருள்களும். வெறி கமழும் - மணம் வீசப்பெற்ற (மயிலாடுதுறை). மலையர் என்ற பன்மையால், இமயமலைக்குரியார், பொதியமலைக்குரியார் ஆம் இருவரை யும் கொள்க. காவிரிச் சிறப்பு: வீறு கோளணி.

5. பூவிரி-மலர்கள் விரிந்த. கதுப்பின்-கூந்தலையுடைய, மடமங்கை யர்-இளம்பெண்கள். அகம்தொறும் நடந்து-வீடுதோறும் சென்று, பலிதேர்- பிச்சைஎடுக்கும், பாவிரி-பாக்கள் விரிந்த, இசைக்குரிய-இராகத்திற்கு

கடந்திகழ் கருங்களி றுரித்துமையு
மஞ்சமிக நோக்கரியராய்
விடந்திகழு மூவிலைநல் வேலுடைய
வேதியர் விரும்புமிடமாம்
தொடர்ந்தொளிர் கிடந்ததொரு சோதிமிகு
தொண்டையெழில் கொண்டதுவர்வாய்
மடந்தையர் குடைந்தபுனல் வாசமிக
நாறுமயி லாடுதுறையே. 6

ஏற்ற, பாடலொடுபயிலும்-பாடல்களைப்பாடும். பரமர்-சிவபெருமானின் பழமை எனலாம்-பழமையாகிய பதி என்று சொல்லலாம். (பழமை-பண் பாகுபெயர்) காவிரி. நுரைத்து-நுரையையுடையதாகி. இருகரைக்கும்-இருபாலும் உள்ள ஆற்றங்கரைச்சோலைகளில். மணிசிந்த-இரத்தினங் களைச் சிதற (அதற்கு அஞ்சி மந்தி குதிகொள்ளும் மயிலாடுதுறை). வண்டு கவர-வண்டுகள் கவர்ந்துண்ணுமாறு. மா-மாமரங்களில் விரி-விரிவாகத் தொடுக்கப்பட்ட. மது-தேன். இருல்(தேன்கூடு)கள் கிழிய-கிழியும்படி, மந்தி குதிகொள்ளும்-குரங்குகள் குதித்துப்பாயும். மயிலாடுதுறை. காவிரி மணி சிதற, (அஞ்சி) மந்தி குதிகொள்ள (அதனால்) மரக்கிளைகள்மோதி இருல்கிழிய-அதை வண்டுகள் கவர்ந்துண்ணும் வளம்மிக்க மயிலாடு துறை என்க.

6. கடந்திகழ்-மதம் மிகுந்த. கருங்களிறு-கரியயானையை. உரித்து நோக்கு அரியராய்-அரிய அழகு உடையராய், விடம் திகழும்-விடம் பூசிய. மூவிலை நல்வேல் உடைய-நல்லமூன்று இலை போலும் வேலையுடைய வேதியர் வேதத்தின் பொருளாய் உள்ள சிவபெருமான். கிடந்தது-மேனியில் தங்கியதாகிய, ஒரு-ஒப்பற்ற, சோதி-ஒளி, தொடர்ந்து-பற்றி. ஒளிர் பிரகாசிக்கின்ற, தொண்டை - கொவ்வைப்பழத்தின். மிகுஎழில்-மிகுந்த அழகைக்கொண்ட. துவர்வாய்-சிவந்த வாயையுடைய. மடந்தை யர்-தேவமகளிர். குடைந்தபுனல்-நீராடிய தண்ணீர். மிகநாறும் (மிகவாசனை) மணக்கும். மயிலாடுதுறை-(உடலில்) சோதியுடைய மடந்தையர் என்ற மையால்-தேவமடந்தையரென்றும், அவர் ஆடுவதால்-புனல் முன்னை யினும் மணம் மிக்க தென்றும் பொருள் கொள்ளக்கிடக்கின்றது. மூவிலையு வேல்-சூலம்,

அவ்வதிசை யாருமடி யாருமுள
ராகவருள் செய்தவர்கண்மேல்
எவ்வமற வைகலு மிரங்கியெரி
யாடுமெம தீசனிடமாம்
கவ்வையொடு காவிரி கலந்துவரு
தென்கரை நிரந்துகமழ்பூ
மவ்வலொடு மாதவி மயங்கிமண
நாறுமயி லாடுதுறையே. 7

இலங்கைநகர் மன்னன்முடி யொருபதினொ
டிருபதுதொ ணெரியவிரலால்
விலங்கலி லடர்த்தருள் புரிந்தவ
ரிருந்தவிடம் வினவுதிர்களேல்
கலங்கனுரை யுந்தியெதிர் வந்தகய
மூழ்கிமலர் கொண்டுமகிழா
மலங்கிவரு காவிரி நிரந்துபொழி
கின்றமயி லாடுதுறையே. 8

---

7. அவ்வதிசையாரும் - (அவ். அ. திசையாரும்). அந்தந்தத் திக்குகளில் உள்ள ஏனைமாந்தரும். உளர் ஆக - நன்கு வாழும் பொருட்டு, அவர்கள்பால் உள்ள. எவ்வம்அற-வினைகள் நீங்க. வைகலும்-நாடோறும். இரங்கி அருள்செய்து, எரி ஆடும் - அக்கினியில்ஆடுகின்ற. எமது ஈசன் இடமாம். கவ்வையொடு கலந்து காவிரி வரும் தென்கரையில் கமழ்பூ மவ்வலொடு மாதவி மயங்கி மணம் நாறும் மயிலாடுதுறை எனக் கூட்டுக. கவ்வை - ஆரவாரம். மவ்வல் - மல்லிகை. மாதவி - ஒரு வகை மரவிசேடம். மயங்கி - கலந்து. நிரந்து - பரவி. அவ்வத்திசை - சந்தம் நோக்கி வலிமிகாதாயிற்று.

8. (இலங்கை நகர் மன்னன் முடியொருபதினொடுஇருபது) தோள் நெரிய - தோள்கள் அரைபடும்படி. விலங்கலில் - கைலைமலையில். அடர்த்து - நெருக்கி, அருள்புரிந்தவன். வினவுதிர்களேல் - கேட்பீர்களேயானால், கலங்கல் நுரை உந்தி - கலங்கலோடு நுரையைத் தள்ளி. எதிர் வந்த - எதிரேயுள்ள. கயம் மூழ்கி - குளத்தில் பாய்ந்து, மலர் கொண்டு - அங்குள்ள மலர்களை அடித்துக்கொண்டு, (அதனால்) மகிழ்ந்து, மலங்கி வரு-சுழித்து வருகின்ற, காவிரியாறு. நிரந்து - பரவி. பொழிகின்ற - வளம் கொழிக்கின்ற, மயிலாடுதுறை. வந்த - உள்ள என்னும் பொருள் தந்து நின்றது. " வான் வந்த தேவர்களும் மாலயனோடிந்திரனும் " என்புழிப் போல (திருவாசகம். 4. திருவம்மானை. 4). தோள் - இசை நோக்கிக் குறுக்கல் விகாரமுற்றது. மேல்வீழிமிழலைப் (85 ஆம்) பதிகத்தும் காண்க.

ஒண்டிறலி னுன்முகனு மாலுமிக
நேடியுண ராதவகையால்
அண்டமுற வங்கியுரு வாகிமிக
நீண்டவர ருரதிடமாம்
கெண்டையிரை கொண்டுகெளி றுருட
னிருந்துகிளர் வாயறுதல்சேர்
வண்டன்மணல் கெண்டிமட நாரைவிளை
யாடுமயி லாடுதுறையே. 9

மிண்டுதிற லமணரொடு சாக்கியரு
மலர்தூற்ற மிக்கதிறலோன்
இண்டைகுடி கொண்டசடை யெங்கள்பெரு
மானதிட மென்பரெழிலார்
தெண்டிரை பரந்தொழுகு காவிரிய
தென்கரை நிரந்துகமழ்பூ
வண்டவை திளைக்கமது வந்தொழுகு
சோலைமயி லாடுதுறையே. 10

9. ஒண்திறலின் - மிக்க வலிமையுடைய. நான்முகனும், மாலும், மிக்நேடி - மிகவும்தேடி, உணராத வகையால் - அவர்கள் அறியாத வண்ணம், அண்டமுற - ஆகாயமளவும், அங்கி உருவாகி - நெருப்பின் வடிவாகி, (மிக நீண்ட) அரனுரது இடமாம் - சிவபெருமானது இடமாகும். மடநாரை - இளம் நாரைகள். கெண்டை இரைகொண்டு - கெண்டை மீனை இரையாக உண்டு, கெளிறு ஆர் உடன் இருந்து - கெளிற்று மீன் களோடும் ஆரல் மீன்களோடும் இருந்து, கிளர் - விளங்குகின்ற. வாய் - கரையினிடத்தில். அறுதல்சேர் - தண்ணீர் அறுத்தலால் உண்டாகிய. வண்டல் மணல் - வண்டல் மணலை. கெண்டி - கிளறி - விளையாடும் மயிலாடுதுறை.

வாய் - ஆற்றோரம் “காவிரியதன் வாய்க்கரை” என்ற சுந்தர மூர்த்திகள் தேவாரத்தாலும் அறிக. (நமச்சிவாயத் திருப்பதிகம்) ஆற்றோரம் தண்ணீரறுக்காமல் கட்டப்படும் அணையை - வாய்க்கணை, வாய்கணை. வாகணை என வழங்குப.

10. மிண்டுதிறல் - ஏமாற்றுகின்ற வலிமை மிக்க, (அமணர் ஒடு) சாக்கியரும் - பவுத்தரும் - அலர்தூற்ற, பலரும் அறியும்படி பழிக்க. மிக்க திறலோன் - அவர் அறிவுக்கு மேற்பட்ட (எட்டாத) வலிமையுடையோன்,

நிணந்தரு மயானநில வானமதி
யாததொரு சூலமொடுபேய்க்
கணந்தொழு கபாலிகழ லேத்திமிக
வாய்த்ததொரு காதன்மையினல்
மணந்தண்மலி காழிமறை ஞானசம்
பந்தன்மயி லாடுதுறையைப்
புணர்ந்ததமிழ் பத்துமிசை யாலுரைசெய்
வார்பெறுவர் பொன்னுலகமே. 11

திருச்சிற்றம்பலம்

இண்டை குடிகொண்ட - இண்டை மாலை குடிகொண்ட (சடையை யுடைய எங்கள் பெருமான் அது இடம்.) தெண்திரை பரந்து ஒழுகு - தெள்ளிய அலைகள் பரவி ஓடிவருகின்ற காவிரிய - காவிரியினுடைய, (தென்கரை) நிரைந்து - நிரம்பி, கமழ்பூ - மணக்கின்ற மலர்களில், வண்டு அவை - வண்டுகள். திளைக்க - மூழ்கியுண்ண. மது - தேன், வந்து - வெளிப்பட்டு, ஒழுகு கின்ற சோலை சூழ்ந்த மயிலாடு துறை. ஒழுகு - (காவிரி) நேர்மையாய் ஓடிவருகின்ற, ஒழுகு - நேர்மை. (தொல் - சொல். உரி. )

11. நிணந்தரு - இறந்தார் உடலின் கொழுப்புப்பொருந்திய, மயானம்- சுடுகாட்டில், நிலம், வானம், மதியாததொரு சூலமொடு - பூவுலகிலும், வானுலகிலும் உள்ள வீரரெவரையும் பொருட்படுத்தாததாகிய ஒரு சூலத் தோடு, பேய்க்கணம் தொழு - பேய்க்கூட்டம் தொழும் கபாலி. பிரம கபாலத்தை ஏந்தும் சிவபெருமானது - கழல் ஏத்தி - திருவடியைத் துதித்து, மிக வாய்த்ததொரு காதன்மையினல் - மிகப் பொருந்திய ஒப்பற்ற அன்பினல், மணம் தண் மலிகாழி - மணமும் குளிர்ச்சியும் மிகுந்த சீகாழியில் (அவதரித்த) மறை - வேதங்களை உணர்ந்த. ஞானசம்பந்தன்- (மயிலாடுதுறையில் புணர்ந்த தமிழ்;) இசையால் உரைசெய்வார் - இசை யொடு பாடுகிறவர். பொன்னுலகமே பெறுவார் - சொர்க்க லோகமே அடைவார்கள். புணர்ந்த பிறவினை விகுதி குன்றியது.

நீடு பொழிலை நிகரழித்—தோடிப்
பணப்பா கரைப்பரிந்து குத்திப் பறித்த
நிணப்பாகை நீள்விசும்பின் வீசி—அணைப்பரிய
வோடைக் கருங்களிற்றை ஒண்பரிக் காரர்கள்தாம்
மாடணையக் கொண்டு வருதலுமே—கூடி
—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 71. திருவைகாவூர்

329 பதிகவரலாறு

இசைவளர் ஞானசம்பந்தர் விசயமங்கையின் நீங்கி, திருவைகாவில் மெய்யராகிய சிவபிரானுர் திருத்தாள்களை அணைந்து பாடியருளியது இத்திருப்பதிகம்.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

கோழைமிட றுககவி கோளுமில வாகவிசை கூடும்வகையால்
ஏழையடி யாரவர்கள் யாவைசொன சொன்மகிழு மீசனிடமாம்
தாழையிள நீர்முதிய காய்கமுகின் வீழநிரை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிக ளூறிவயல் சேறுசெயும் வைகாவிலே. 1

அண்டமுறு மேருவரை யங்கிகணை நாணரவ தாகவெழிலார்
விண்டவர்த முப்புரமெ ரித்தவிகிர் தன்னவன் விரும்புமிடமாம்
புண்டரிக மாமலர்கள் புக்குவிளை யாடுவயல் சூழ்தடமெலாம்
வண்டினிசை பாடவழகார்குயின்மி ழற்றுபொழில்வைகாவிலே.

1. கோழை மிடறு ஆக-கோழைபொருந்திய கண்டம் ஆயினும். கவிகோளு இலவாக-பாடும் கவிகள் பொருள்கொள்ளுப்படி நிறுத்திப் பாடுதலும் இல்லனவாயினும், கூடும் வகையால் இசை - இசை இயன்ற அளவில், (ஏழை அடியார் அவர்கள்) யாவை சொன்னசொல்-தன்னை அன்பினுல் பாடின பாடல்கள் எவையாய் இருந்தாலும். மகிழும்-அவற்றிற்கு மகிழ்கின்ற (ஈசன் இடமாம்) தாழை-தென்னைமரத்தின்- இளநீர் முதியகாய்-இளநீர்முற்றிய நெற்றுக்கள். கமுகில் - கமுகமரத்தில்(வீழ) நிரைதாறுசிதறி-வரிசையான குலைகள் சிதறி (வாழைக்குலையில்விழ) வாழை-அவ்வாழைமரங்களினின்றும். உதிர்வீழ்-உதிர்ந்து வீழ்கின்ற கனிகள். வயல் ஊறி - வயலில் ஊறி. சேறுசெய்யும்-அதனைச்சேருகச் செய்கின்ற. திருவைகாவில்

2. அண்டம் உறு - ஆகாயத்தை அளாவிய. மேருவரை - மேருமலை (வில்). அங்கி - கணை. அக்கினி - அம்பு. அரவு - (அது) பாம்பு. நாணி (ஆக) விண்டவர்தம் - பகைவர்களாகிய அசுரர்களின். எழில் ஆர் முப்புரம் - அழகிய திரிபுரங்களையும். எரித்த - எரியச்செய்த. விகிர்தன் - சிவபெருமான். (விரும்பும் இடம்). வண்டு - வண்டுகள். புண்டரிக

ஊனமில ராகியுயர் நற்றவமெய் கற்றவை யுணர்ந்த வடியார்
ஞானமிக நின்று தொழ நாளுமருள் செய்யவல நாதனிடமாம்
ஆனவயல் சூழ்தருமல் சூழியரு கேபொழில்க டோறுமழகார்
வானமதி யோடுமழை நீண்முகில்கள் வந்தணவும்வைகாவிலே.

இன்னவுரு வின்னநிற மென்றறிவ தேலரிது நீதிபலவும்
தன்னவுரு வாமெனமி குத்ததவ னீதியொடு தானமர்விடம்
முன்னைவினை போய்வகையி ஞன்முழு துணர்ந்துமுயல் கின்ற
[முனிவர்
மன்னவிரு போதுமரு வித்தொழுது சேரும்வயல் வைகாவிலே.

மாமலர்கள் புக்கு விளையாடும் - சிறந்த தாமரை மலர்களில் புகுந்து விளையாடும். வயல் - வயல்களிலும். சூழ் - அவை சூழ்ந்த. தடம் - தடாகங்களில் எல்லாம். இன் இசை பாட - இனிய சுதியைப் போல் பாட. அழகு ஆர் குயில் - அழகு மிகுந்த குயில்கள். மிழற்று - அவற்றிற் கேற்பப் பாடுவதைப் போலக் கூவுகின்ற. பொழில் - சோலைகள் உடைய. (வைகாவிலே)

3. ஊனமிலராகி - யாதொரு குற்றமும் இல்லாதவராய். நல்தவம் - நல்ல தவத்தை மேற்கொண்டு. மெய் - உண்மை நூல்களை. கற்று, (கேட்டு), (அவை உணர்ந்த அடியார்கள்) ஞானம் மிக. நின்று தொழ - நின்று வணங்க, நாடோறும் அருள் செய்ய வல்ல நாதன் இடமாம். ஆன வயல் - பொருந்திய வயல்களில். மல் - (மல்லல்) வளங்கள். சூழ்தரும் - நிறைந்திருக்கும். சூழியருகு - மதிலின் பக்கங்களிலும். பொழில்கள் தோறும் - சோலைகள் தோறும். (சந்திரனும் முகில்களும்) வந்து. அணவும் - வந்து தவழும் வைகாவிலே.

4. இன்ன உரு-இன்னவடிவம் (இன்ன நிறம் என்று) அறிவதேல் அரிது - ஆன்மபோதத்திஞல் அறிவதாஞல் அறிய முடியாது. நீதிபலவும்-பலவாகிய புண்ணியங்களெல்லாம், (தன்ன உருவுஆம் என) மிகுத்த தவன்-மிகுந்த தவக்கோலத்தையுடையவன், நீதியொடு - அருளொடு, தான் அமர்வு இடம்-தான் விரும்புதலையுடைய இடமாகும் முன்னை வினை போய் - முற்பிறப்பில்செய்த வினைகள் நீங்க-வகையிஞல் முறைமைப்படி முழுதுணர்ந்து-முழுவதும் அறிந்து, முயல்கின்ற-(நிட்டை கூடுதற்கு) முயல்கின்ற. முனிவர்-முனிவர்கள். மன்ன - நிலைபெறும்படியாக. இரு போதும்-இருவேளையும். மருவி-அடைந்து. தொழுதுசேரும்-தொழுது சேர்கின்ற, வயல்-வயல்வளம்பொருந்திய வைகாவில்,

வேதமொடு லேள்விபல வாயின மிகுத்துவிதி யாறுசமயம்
ஓதியுமு ணர்ந்துமுள தேவர்தொழ நின்றருள்செ யொருவனிட
[மாம்
மேதகையகேதகைகள்புன்னையொடு ஞாழலவைமிக்கவழகார்
மாதவிம ணங்கமழ வண்டுபல பாடுபொழில் வைகாவிலே. 5

நஞ்சமுது செய்தமணி கண்டனமை யாளுடைய ஞானமுதல்
[வன்
செஞ்சடையி டைப்புனல்க ரந்தசிவலோகனமர் கின்றவிடமாம்
அஞ்சுடரொ டாறுபத மேழினிசை யெண்ணரிய வண்ணமுள
[வாய்
மைஞ்சரொடு மாதர்பல ருந்தொழுதுசேரும்வயல்வைகாவிலே.

5. வேதமொடு-வேதத்தைக்கற்றதோடு, பலவாயின வேள்வி-பலவாகிய யாகங்களையும், மிகுத்து-மிகச்செய்து. விதி-விதிப்படி. ஆறு சமயம்-ஆறுசமய நூல்களையும். ஓதியும்-கற்றும். (உணர்ந்தும்) உள-உள்ள தேவர்தொழ-பூதேவர்களாகிய அந்தணர்(தொழ) மேதகைய-மேன்மை தங்கிய. கேதகைகள் - தாழைகளும். புன்னையொடு ஞாழல் - புன்னைமரத் தோடு புலிநகக்கொன்றைகளும். மிகுந்த அழகோடுகூடிய. மாதவி-மாதவிக்கொடிகளும் (மணங்கமழ) வண்டு பல பாடும் (சோலைசூழ்ந்த வைகாவில்)

6. நஞ்சு-அமுதுசெய்த விடத்தை உண்டருளிய. மணிகண்டன்-நீல கண்டனும், நமை-நம்மை. ஆளுடைய-ஆளாகவுடைய. ஞானம்-முதல்வன். ஞானமே திருவுருவாகிய முதல்வன். செஞ்சடையிடை சிவந்த சடையினிடத்தில். புனல்கரந்த-கங்கைநீரை ஒளித்த. சிவலோகன்-சிவலோகநாயகனுமாகிய சிவபெருமான். அமர்கின்ற-தங்கும் (இடமாம்) அஞ்சுடரொடு - அழகிய தீப முதலிய வற்றுடன்.

ஆறுபதம்:— பஞ்சப்பிரம மந்திரங்கள் ஐந்தையும், ஐந்தாகவும், அங்க மந்திரம் ஆறினையும் ஒன்றாகவும்கொண்டு ஆறுபதம் என்றார். இதற்கு வேறு பொருள் கூறுவாருமுளர். (பதம் - மந்திரம்) ஏழிசை - ஏழுசுரங்களோடு பாடும் தோத்திரப் பாடல்களுடனும். எண்ணரிய வண்ணம் உளவாய்- எண்ணமுடியாத விதம் உளவாக. மஞ்சரொடு-ஆடவர்களொடு (மாதர் பலரும்) தொழுது - வணங்கி. சேரும் - அடைகின்ற வயல்சூழ்ந்த திருவைகாவில் என்க. அஞ்சுடர்... எண்ணரிய இவை குறிப்பாக இலக்கங்களை புணர்த்துகின்றன, அதனால் இவை எண்ணலங்காரம் எனப்படும்.

நாளுமிகு பாடலொடு ஞானமிகு நல்லமலர் வல்லவகையால்
தோளிெனுடு கைகுளிர வேதொழு மவர்க்கருள்செய் சோதியி
[டமாம்
நீளவளர் சோலைதொறு நாளிபல துன்றுகனி நின்றதுதிர
வாளைகுதி கொள்ளமது நாறமலர் விரியும்வயல் வைகாவிலே. 7

கையிருப தோடுமெய்க லங்கிடவி லங்கலையெடுத்தகடியோன்
ஐயிருசி ரங்களையொ ருங்குடனெ ரித்தவழ கன்றனிடமாம்
கையின்மலர் கொண்டுநல காலையொடு மாலைகரு திப்பல
[விதம்
வையகமெ லாமருவி நின்றுதொழு தேத்துமெழில்வைகாவிலே.

அந்தமுத லாதிபெரு மானமரர் கோனையயன் மாலுமிவர்கள்
எந்தைபெரு மானிறைவனென்றுதொழ நின்றருள்செ
[யீசனிடமாம்
சிந்தைசெய்து பாடுமடி யார்பொடிமெய் பூசியெழு தொண்ட
[ரவர்கள்
வந்துபல சந்தமலர் முந்தியணை யும்பதிநல் வைகாவிலே. 9

7. நாளும் - நாடோறும். மிகுபாடலொடு - மிகுந்த பாடலொடு. ஞானமிகும் - சிவஞானமிக்க. நல்லமலர் - நல்ல மலர்களோடு. தோளிெனுடு கைகுளிர - தோளும் கையும் குளிரும்படியாக. தொழுமவர்க்கு - வணங்குகின்றவர்களுக்கு. அருள்செய் - அநுக்கிரகம் பண்ணுகின்ற சோதி இடமாம் - ஒளிவடிவானவனது இடமாகும். நீளவளர்சோலை தொறும் - உயரமாக வளர்ந்த சோலைகள்தொறும். நாளிபல - தென்னை மரங்கள் பலவற்றில். நின்றது - நின்றதாகிய. துன்றுகனி அடர்த்தியான நெற்றுக்கள் உதிர - உதிரும்படி, வாளை - வாளைமீன்கள். குதிகொள்ள - துள்ளிப்பாய, (அதனுல்)மதுநாற - தேன் மணக்கும்படி. மலர் விரியும்- மலர்கள் விரிகின்ற, வயல்-வயல்கள் சூழ்ந்த, வைகாவிலே.

8. விலங்கலை (கைலை) மலையை (எடுத்த) கடியோன்-தீயோனுகிய இராவணன், (கை இருபதோடும்) மெய் - உடம்பு. கலங்கிட - குழம்ப ஐ இருசிரங்களை - பத்துத் தலைகளையும், ஒருங்கு உடன் - ஒருசேர நெரித்த - அரைத்த (அழகன் தன் இடம் ஆம்) வையகம் எல்லாம் - உலகம் முழுவதும். மருவி - வந்து தங்கி. ந(ல்)ல காலையொடு - அதி காலை வேளையிலும். மாலை - மாலை வேளையிலும். கருதி - தியானித்து, (கையில் மலர் கொண்டு) பலவிதம் நின்று தொழுது ஏத்து-பலவிதமாக நின்று தொழுது துதிக்கும். எழில்-அழகினையுடைய, வைகாவில்.

9. அந்தம் - (இறுதியாம் எவற்றிற்கும்) இறுதியானவனும். முதல் ஆதி - முதலாம் எவற்றிற்கும் முதலானவனும். பெருமான் - பெருமையை

ஈசனெமை யாளுடைய வெந்தைபெரு மானிறைவ னென்று [தனையே
பேசுதல்செ யாவமணர் புத்தரவர் சித்தமணை யாவவனிடம்
தேசமதெ லாமருவி நின்றுபர வித்திகழ நின்றபுகழோன்
வாசமல ரானபல தூவியணை யும்பதிநல் வைகாவிலே. 10

முற்றுநமை யாளுடைய முக்கண்முதல் வன்றிருவை [காவிலதனை
செற்றமலி ஞர்சிரபு ரத்தலைவன் ஞானசம் பந்தனு ரைசெய்
உற்றதமிழ் மாலையீ ரைந்துமிவை வல்லவ ருருத்திரரெனப்
பெற்றமர லோகமிக வாழ்வர்பிரி யாரவர்பெ ரும்புகழொடே.

திருச்சிற்றம்பலம்

யுடையவனும். அமரர்கோனை - தேவர் தலைவனுமாகிய இறைவனை. (அயனும் மாலும் இவர்கள்). எந்தைபெருமான் - எமது தந்தையாகிய தலைவனே. இறைவன் - கடவுளே. (என்று தொழ நின்று). அருள்செய் - அவர்களுக்கு அருள்புரியும் (ஈசன் இடம் ஆம்) சிந்தைசெய்து - சிந்தித்து. (பாடும் அடியார்களும்). பொடி - திருநீற்றை. மெய்பூசி - உடம்பிற் பூசிக்கொண்டு. எழுதொண்டர் - வருகின்ற தொண்டர்களும் வந்து- பல சந்தம் மலர் - பலவித மலர்களைக் கொண்டு. முந்தி - ஒருவரின் ஒருவர் முற்பட்டு. அணையும் - சேரும். பதி - தலம், நல்வைகாவில்.

10. பேசுதல் செயா - பேசாத, சித்தம் அணையா - மனத்திற் புகுதாத. அவனது - அத்தகையானது. (இடம்) தேசம் அது எலாம் - எல்லாத் தேசத்தினரும், மருவிநின்று - பொருந்திநின்று பரவி - துதித்து. திகழ நின்ற புகழோன் - புகழ் நிலைத்து விளங்குவோனாகிய சிவபெருமானை. வாசமலரான பல தூவி - வாசமிக்க பல மலர்களைத் தூவி (ஆன சொல் லுருபு) அணையும் - வந்து சேரும் பதியாகிய, நல்வைகாவில், தேசமது எலாம் மருவிநின்று பரவி வாசமலரான பல தூவித் திகழநின்ற புகழோனை யணையும் பதியெனக் கூட்டுக. ஆன - பூசைக்குரியதாகிய எனினும் ஆம் "பூத்தேர்ந் தாயன கொண்டு" என முன்வந்தது. பலவகையான மலர் என்றும் கொள்க. அது "பரந்து பல்லாய் மலர் இட்டு" என்னும் திருவாசகக் கருத்து.

11. செற்ற - மிகுத்த. ம(ல்ல)லின் - வளங்களால், ஆர் - நிறைந்த (செற்ற - தன்னையடைந்தோர் வினைகளை அழித்த, எனினும் ஆம்.

சிரபுரத்தலைவன் - சீகாழித் தலைவராகிய, ஞானசம்பந்தர், உருத்திரர் எனப்பெற்று அமரலோக மிக - உருத்திரர் ஆகி சிவலோகத்தில். பெரும் புகழோடு - பெரிய புகழ்ச்சிக்குரியதாகிய முத்தியின்போடு, பிரியார் - நீங்காதவராகி மிக வாழ்வார் என்க. அமரன் -(சாவாதவன்) சிவபெருமான் ஒருவர்க்கேயுரியது. "செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று, பத்தி செய் மனப்பாறைகட்கேறுமோ" என்பதும் "சாவா மூவாச் சிங்கமே" என்பதும் அப்பமூர்த்திகள் திருவாக்கு (திருக்குறுந்தொகை; திருத் தாண்டகம்). ஆகையால் அமரலோகம் என்பது சிவலோகத்தைக் குறிக்கும்.

நயந்து குரற்கொடுத்து நட்பளித்துச் சென்று
வியந்தணுகி வேட்டந் தணித்தாங்—குயர்ந்த
உடற்றூய வாசிதனைப் பற்றிமேல் கொண்டாங்
கடற்கூடற் சந்தி யணுகி—அடுத்த
பயில்பலவும் பேசிப் படுபுரசை நீக்கி
அயர்வு கெடஅணைத்துத் தட்டி—உயர்தரு
தண்டுபே ரோசையின்கண் தாள்கோத்துச் சீர்ச்சிறுத்
தொண்டர் பிறகணையத் தோன்றுதலும் – எண்டிசையும்
பல்சனமும் மாவும் படையும் புடைகிளர
ஒல்லொலியால் ஓங்கு கடல்கிளர—மல்லற்

பரித்தூரங் கொட்டப் படுபணிலம் ஆர்ப்பக்
கருத்தோ டிசைகவிஞர் பாட—விரித்த
குடைபலவுஞ் சாமரையுந் தொங்கல்களுங் கூடிப்
புடைபரந்து பொக்கம் படைப்பக்—கடைபடு
வீதி யணுகுதலும் வெள்வளையார் உள்மகிழ்ந்து
காதல் பெருகிக் கலந்தெங்குஞ்—சோதிசேர்
ஆடரங்கின மேலும் அணிமா ளிகைகளிலுஞ்
சேடரங்கு நீள்மறுகுந் தெற்றியிலும்—பீடுடைய
பேரிளம்பெண் ஈருகப் பேதை முதலாக
வாரிளங் கொங்கை மடநல்லார்—சீர்விளங்கப்

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 72 திருமாகறல்

330 பதிகவரலாறு

திருவோத்தூரில் ஆண் பனையைப் பெண்பனையாக்கிச் சிவத்திற் கூட்டி யருளிய சண்பைவேந்தர், பல பதிகளைப் போற்றியபின், மங்கை பாகர் அமர்ந்தருளும் மாகறலை வணங்கிப் பாடியது இத்திருப்பதிகம்.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்
பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகண் மாடமலி
நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர்
திங்களணி செஞ்சடையினன்
செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்கள்
தீவினைகள் தீருமுடனே. 1

1. விங்கு விளைகழனி - இஞ்சி விளையும் கழனியிலே, மிகு கடைசியர்கள் - மிக்க பள்ளத்தியர்கள், பாடல் விளையாடல் - பாடலும் விளையாடலுமாகிய, அரவம் - ஓசைகளையும், மங்குலொடு நீள்கொடிகள் - மேக மண்டலம் வரை நீண்ட கொடிகளையுடைய. மலிமாடம் - நெருங்கிய மாடங்களையும், நீடுபொழில் - நெடிய சோலைகளையும் உடைய, மாகறல் உளான்- திருமாகறலில் இருப்பவன். கொங்குவிரி-வாசனை விரிகின்ற. வளர்திங்கள்- வளரக்கூடிய பிறைச் சந்திரனையும். செங்கண்விடை அண்ணல் - சிவந்த கண்ணையுடைய திருமாலாகிய இடபத்தையுமுடைய. சிவபெருமானது அடிசேர்பவர்கள் - திருவடியை இடைவிடாது நினைப்பவர்களுக்கு. தீவினைகள் - கொடியவினைகள். தீரும் - நீங்கிவிடும். "பைங்கண்வேள் ளேற்றண்ணல்" (திருநள்ளாறு) என்னுமல் செங்கண் விடையென்றதனல் திருமாலாகிய விடையென்க.

கலையினொலி மங்கையர்கள் பாடலொலி
யாடல்கவி னெய்தியழகார்
மலையினிகர் மாடமுயர் நீள்கொடிகள்
வீசுமலி மாகறலுளான்
இலையின்மலி வேல்நுனைய சூலம்வல
னேந்தியெரி புன்சடையினுள்
அலைகொள்புன லேந்துபெரு மானடியை
யேத்தவினை யகலுமிகவே. 2

காலையொடு துந்துபிகள் சங்குகுழல்
யாழ்முழவு காமருவுசீர்
மாலைவழி பாடுசெய்து மாதவர்க
ளேத்திமகிழ் மாகறலுளான்
தோலையுடை பேணியதன் மேலொர்சுடர்
நாகமசை யாவழகிதாப்
பாலையன நீறுபுனை வானடியை
யேத்தவினை பறையுமுடனே. 3

2. கலையின் ஒலி - கலை கற்பவர்களின் ஒலியும், (மங்கையர்கள் பாடல் ஒலி - ஆடல் (ஒலி ஆகிய இவ்வொலிகள் சேர்ந்து) கவின் எய்தி - இனிமைதர. அழகு ஆர் மலையின் நிகர் மாடம் - அழகு பொருந்திய மலையையொத்த மாடங்களில். உயர்நீள் கொடிகள்-மிக நீண்ட கொடிகள். வீசும் - வீசுகின்ற. மலி - (செல்வ வளத்தால்) மிகுந்த. மாகறல் - உள்ளான் இலையில் மலி - இலையைப்போன்ற வடிவையுடைய. வேல் - வேலையும். நுனைய - கூரிய நுனியையுடைய. சூலம் - சூலத்தையும். வலம் ஏந்தி - வலக்கையில் ஏந்தி எரிபுன்சடையினுள் - நெருப்புப்போன்ற சிறிய சடையினுள். அலைகொள்புனல் - அலைகளையுடைய கங்கைநீரை. ஏந்துபெருமான் - தரித்த சிவபெருமானது. அடியை ஏத்த - திருவடிகளைத் துதிக்க. வினைமிக அகலும் - வினை முற்றிலும் நீங்கும். இலையின் மலி:- உவமவாசகம் ஆகலால் இன் என்பது சாரியை.

3. துந்துபிகள்-சங்கு, குழல், யாழ், முழவு - இவ்வாத்தியங்களோடு. காமருவுசீர் - அழகிய சிறப்பினையுடைய. காலையொடு - காலையிலும். மாலை - மாலையிலும். வழிபாடுசெய்து - பூசித்து. மாதவர்கள் - முனிவர்கள். ஏத்தி - துதித்து. மகிழ் - மகிழ்கின்ற மாகறல் உளான். தோலையுடை பேணி - தோலை ஆடையாக விரும்பி. (அதன்மேல்) ஓர் சுடர்நாகம் - ஒளி பொருந்திய பாம்பை. அசையா - கச்சையாகக்கட்டி; அழகிது ஆய் -

இங்குகதிர் முத்தினொடு பொன்மணிக
ளுந்தியெழில் மெய்யுளுடனே
மங்கையரு மைந்தர்களு மன்னுபுன
லாடிமகிழ் மாகறலுளான்
கொங்குவளர் கொன்றைகுளிர் திங்களணி
செஞ்சடையி னானடியையே
நுங்கள்வினை தீரமிக வேத்திவழி
பாடுநுகரா வெழுமினே. 4

துஞ்சுநறு நீலமிரு ணீங்கவொளி
தோன்றுமது வார்கழனிவாய்
மஞ்சமலி பூம்பொழிலின் மயில்கணட
மாடமலி மாகறலுளான்
வஞ்சமத யானையுரி போர்த்துமகிழ்
வானொர்மழு வாளன் வளரும்
நஞ்சமிருள் கண்டமுடை நாதனடி
யாரைநலி யாவினைகளே. 5

அழகையுடையதாக. பாலை அ(ன்)ன பாலையொத்த நீறுபுனைவான் - திரு நீற்றைப் பூசுபவராகிய சிவபெருமான். "பால்கொள் வெண்ணீற்றாய்" என்பது திருவாசகம்; அடிகள் ஏத்த - திருவடிகளைத் துதிக்க. உடனே வினை பறையும் - உடனே வினைநீங்கும்.

4. இங்கு - இஞ்சி முதலிய குறிஞ்சி நிலப் பொருள்களையும். கதிர் - ஒளியையுடைய (முத்தினொடு, பொன், மணிகள்) உந்தி - (அடித்துக் கொண்டு வரும்) நதியில். (உந்தி - பெயர். இகரம் வினை முதற்பொருளில் வந்தது) எழில்மெய், (எழில்) உள் உடனே - அழகிய தோற்றப் பொலிவோடும், அழகிய மனத்தோடும். (மனத்திற்கு அழகாவது; தூய்மை யுடைமை). மங்கையர்களும் மைந்தர்களும் - மாதரும் ஆடவரும். மன்னு புனல் ஆடி - நிலைபெற்ற நீரில்மூழ்கி. மகிழ் மாகறல் - மகிழ்கின்ற திரு மாகறல், உள்ளான். நுங்கள் - உங்கள். வினை நீங்கும்படி. வழிபாடு நுகரா - வழிபாடுசெய்து. எழுமின். மன்னுபுனல் என்றது அதனருகில் ஓடும் சேயாற்றினை.

5. இருள் நீங்க - விடிய. துஞ்சும் நறும் நீலம் - குவியும் நறும் மணமுள்ள நீலோற்பலம், ஒளிதோன்றும் (கழனி) இருட்டோடு இருளாய் இருந்த நீலோற்பலம். விடிந்ததும் நிறம் விளங்கிக் காட்டுகிறது. (வரம்பில் பல பூக்கள் மலர்வதால்) மதுவார் கழனி தேன் சொரியும் (கழனி)

மன்னுமறை யோர்களொடு பல்படிம
மாதவர்கள் கூடியுடனாய்
இன்னவகை யாலினிதி றைஞ்சியிமை
யோரிலெழு மாகறலுளான்
மின்னைவிரி புன்சடையின் மேன்மலர்கள்
கங்கையொடு திங்களெனவே
உன்னுமவர் தொல்வினைக ளொல்கவுயர்
வானுலக மேறலெளிதே. 6

வெய்யவினை நெறிகள்செல வந்தணையு
மேல்வினைகள் வீட்டலுறுவீர்
மைகொள்விரி கானன்மது வார்கழனி
மாகறலு ளானெழிலதார்

கழனிவாய் - கழனிக்கருகிலுள்ள. மஞ்சுமலி - மேகங்கள் படிந்த. பூம் பொழிலின் - மலர்ச் சோலைகளில். மயில்கள் நடம் ஆடல் - மயில்கள் நடித்தல். மலி - மிகுந்த. மாகறல் உ(ள்)ளான். வஞ்சம் - வஞ்சத்தையுடைய. மதயானை - மதஞ்சொரியும் யானையின். உரி - தோலை, (போர்த்து மகிழ்வான்). ஓர் - ஒப்பற்ற. மழுவாளன் - மழு ஆயுதத்தையுடையவன். (வாள் சிறப்புப் பெயர், பொதுப் பெயர் குறித்தது). நஞ்சம் - நஞ்சம் உண்டதினால். வளரும் இருள் - மிக்க இருளையுடைய. நாதன் - தலைவனாகிய சிவபெருமானின், (அடியாரை). வினைநலியா - வினைகள் துன்புறுத்த மாட்டா.

6. பல்படிமம் - பல தவ வேடத்தையுடைய. மாதவர்கள் - முனிவர்கள், இன்ன - இது போன்ற. வகையால் - விதங்களால், (இனிது). இறைஞ்சி - வணங்கி, இமையோரில் எழு - நரை திரை மூப்புச் சாக்காடின்றி, வானவரைப்போல் தோன்றும். மின்னை விரி புன்சடையின்மேல் - மின்னலைப்போல் ஒளியை விரிக்கின்ற சிறிய சடையின்மேல் - (மலர்களும் கங்கையும் திங்களும்). என - எனவரும் இவற்றை. உன்னுவார் - நினைப்போர்: சொரூபத்தியானம் பண்ணுபவர்கள். வினைகள் ஒல்க - வினைகள் ஒழிய. உயர் வானுலகம் ஏறல் எளிது. சைவ வேடம், பஞ்சாட்சரசெபம், சோகம்பாவனை முதலியன இன்னவகையாலெனக் குறிக்கப்பட்டவை. " புன்சடை.........மலர் திங்கள் என "- எனவரும் இவற்றை என்றது;- பாம்பு அணி, வெண்டலை மாலை, தோல் ஆடை முதலிய கோலத்தை.

**7.** வெய்யவினை நெறிகள் செல - கொடிய வினைகள் தாம் வந்த வழியே செல்லவும் - 'வந்த வழியே செல்' என்பது உலக வழக்கு. வந்து

கையகரி கால்வரையின் மேலதுரி
தோலுடைய மேனியழகார்
ஐயனடி சேர்பவரை யஞ்சியடை
யாவினைக ளகலுமிகவே. 7

தூசுதுகி னீள்கொடிகண் மேகமொடு
தோய்வனபொன் மாடமிசையே
மாசுபடு செய்கைமிக மாதவர்க
ளோதிமலி மாகறலுளான்
பாசுபத விச்சைவரி நச்சரவு
கச்சையுடை பேணியழகார்
பூசுபொடி யீசனென வேத்தவினை
நிற்றலில போகுமுடனே. 8

அணையும் மேல் வினைகள் - ஆகாமியங்கள் (பலவாய் ஈட்டப்படுவதால் பன்மையாற் கூறினர்.) வீட்டலுறுவீர் - ஒழிக்கத் தொடங்குகின்றவர் களே. மைகொள் - மேகங்கள். படிந்த விரி - விரிந்த. கானல் - ஆற்றங் கரைச் சோலைகளின். மதுவார் கழனி - தேன்மிகும் கழனிகளை யுடைய. (மாகறல்) கானல் இப்பொருளிலும் வருவதைச் "செங்கானல் வெண்குருகு பைங்கானல் இரைதேரும் திருவையாறே" என்றருளிச் செயலால் அறிக. (திருமுறை. 1. திருவையாறு.)

8. பொன்மாடம்மிசை - பொன்மயமான மாடங்களின் மேல் கட்டிய. தூசு துகில் - வெள்ளாடையினுலாகிய. நீள்கொடிகள் - நெடிய கொடி களே. மேகமொடு - கரிய மேகத்தோடு. தோய்வன - படிவனவாய். மாசுபடுசெய்கை - மாசுபடுசெய்கை மிக. பிற மாசுபடு செய்கை இல்லாத - (மாகறல்) மிசையே. என்பதின் ஏகாரத்தைக் கொடிகளோடு கூட்டுக. (மாதவர்கள்) ஓதி - வேதங்களை ஓதிக்கொண்டு. மலி - திரள் கின்ற, மாகறல் உளான். பாசுபத இச்சை - பாசுபத வேடத்தில் இச்சை யையும். வரி - நெடிய. நச்சரவு - (நஞ்சு+அரவு) விடப்பாம்பை. கச்சை உடை - கச்சையாக உடுத்தலையும். பேணி - மேற்கொண்டவன், (இகரவிகுதி ஆண்பாலில் வந்தது. உடை: (உடு+ஐ) உடுஐ - உடுத்தலை, முதனிலைத் தொழிற்பெயர், அணிதல் என்னும் பொது வினையாற் கூறற் பாலது. உடுத்தல் என வேறு வினையாற் கூறப்பட்டது. (அழகு ஆர் பொடி பூசு ஈசன் என ஏத்த). வினை - வினைகள். இலபோகும் - இல குறிப்பு முற்றெச்சம். பாசுபத வேடமாவது:- "சவந்தாங்கு மயானத்துச் சாம்பல் என்பு, தலையோடு மயிர்க்கயிறு தரித்தான்றன்னைப், பவந்தாங்கு பாசுபத வேடத்தானை" என்னும் திருச்செங்காட்டங்குடித் திருத்தாண்டகத்தால் உணரப்படுவது.

தூயவிரி தாமரைக ணெய்தல்கழு
நீர்குவளை தோன்றமதுவுண்
பாயவரி வண்டுபல பண்முரலு
மோசைபயின் மாகறலுளான்
சாயவிரலூன்றியவி ராவணன
தன்மைகெட நின்றபெருமான்
ஆயபுக ழேத்துமடி யார்கள்வினை
யாயினவு மகல்வதெளிதே. 9

காலினல பைங்கழல்க ணீண்முடியின்
மேலுணர்வு காமுறவினார்
மாலுமல ரானுமறி யாமையெரி
யாகியுயர் மாகறலுளான்
நாலுமெரி தோலுமுரி மாமணிய
நாகமொடு கூடியுடனாய்
ஆலும்விடை யூர்தியுடை யடிகளடி
யாரையடையா வினைகளே. 10

9. தூய - தூய்மையான. விரிதாமரைகள் - தாமரை மலர்களும். நெய்தல் கழுநீர் குவளை தோன்ற - இம்மலர்களும் தோன்ற - விரிய; (மது உண்கின்ற) பாய - பரந்த. வரி - கீற்றுக்களையுடைய (பல வண்டுகள்) பண் - பாடல்களை. முரலும் - இசைபாடும். ஓசைபயில் - ஓசைமிகுந்த (மாகறல்) சாய - வலி குறையும்படி. விரல் ஊன்றிய - விரலால் அடர்க்கப் பட்ட. இராவணன் - இராவணனுடைய. தன்மைகெட - நிலைகுலைய நின்ற பெருமான். ஆய - பொருந்திய. புகழ் - புகழை. ஏத்தும் - துதிக்கும். அடியார், வினை ஆயினவும் - வினை அனைத்தும் அகல்வது எளிது. ஆயின வினையெனக்கொண்டு - இப்பிறப்பில் ஈட்டிய ஆகாமிய வினைகளும் எனலும் ஆம். அப்பொழுது உம்மை இறந்தது தழுவிற்றும். சாய்தல்:- உரிச்சொல். இப்பொருட்டாதலைத் தொல்காப்பியம் உரியியற் சூத்திரம் (34) கொண்டறிக.

10. காலின் - திருவடிகளில் அணித்த. நல - நல்ல. பைங்கழல் மேல் - பைம்பொன்னால் ஆன வீரகண்டையின் மேலும். நீள் முடி - நீண்ட முடியின்மேல். சிரசின்மேல் அணிந்த சந்திரன் முதலியவற்றின் மேலும். உணர்வு - அறிதலில். காமுறவினார் - விருப்பமுற்றவர்களாகிய. மாலும் மலரானும் - திருமாலும், பிரமனும். அறியாமை - அறியாதபடி

கடைகொணெடு மாடமிக வோங்குகமழ்
வீதிமலி காழியவர்கோன்
அடையும்வகை யாற்பரவி யரனையடி
கூடுசம் பந்தனுரையால்
மடைகொள்புன லோடுவயல் கூடுபொழின்
மாகறலுளா னடியையே
உடையதமிழ் பத்துமுணர் வாரவர்கள்
தொல்வினைக ளொல்குமுடனே. 11

திருச்சிற்றம்பலம்

எரியாகி - நெருப்புப் பிழம்பாகி. உயர் - உயர்ந்த (திருமாகறலில் உள்ளவன்) நாலும் எரி - சிரிப்பு, நெற்றிக்கண், கை, திருமேனிமுழுதும் ஆகிய நாலிடத்தும் நெருப்பும். நாலும் - (அளவையாகுபெயர் ஏழாம் வேற்றுமைத் தொகை.) உரியும் தோலும், சட்டையுரிக்கின்ற நாகமும் ஆகிய இவற்றோடு பொருந்தி என்பது மூன்றும் அடியின் பொருள். உரிநாகம் - வினைத் தொகை. ஆலும் - அசைந்து நடக்கும் விடை. அடிகள் அடியாரை யடையா வினைகளே - பெருமானின் அடியாரை வினைகள் அடையா.

11. கடைகொள் - வாயில்களையுடைய. நெடுமாடம் - நீண்ட மாடங்கள். மிக ஓங்கு - மிகவும் உயர்ந்த. கமழ்வீதி - வாசனை கமழும் வீதிகள். மலி - மிகுந்த. காழியவர் - சீகாழியில் உள்ளவர்களுக்கு. கோன்- தலைவனுன் (திருஞானசம்பந்தன்). அரனை அடையும் வகையால் - சிவ பெருமானைச் சேர்தற்குரிய விதத்தால். பரவி - துதித்து. அடிகூடு - திருவடியைப் பற்றுக்கோடாகச்சேர்ந்த (சம்பந்தன்). மடைகொள் - மடைகளில் தேங்கிய தண்ணீர். ஓடும் - ஓடிப் பாய்கின்ற. வயல்களும். கூடு - கூட்டமான. பொழில் - சோலைகளும் உடைய. மாகறல் உளான். தொல் வினைகள் - பழமையான வினைகள். ஒல்கும் - வலிகுறைந்து நீங்கும்.

பேணுஞ் சிலம்பும் பிறங்கொளிசேர் ஆரமும்
பூணும் புலம்பப் புறப்பட்டுச்—சேண்மறுகிற்
காண்டகைய வென்றிக் கருவரைமேல் வெண்மதிபோல்
ஈண்டு குடையின் எழில்நிழற்கீழ்—காண்டலுமே
கைதொழுவார் நின்று கலைசரிவார் மால்கொண்டு
—ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை,

# 73 திருப்பட்டீச்சரம்

## 331 பதிகவரலாறு

திருச்சத்திமுற்றத்தை வழிபட்ட முத்தமிழ் விரகர் முத்துப்பந்தர் நிழலில், பொன்னம்பலவாணன் குஞ்சிதபாத நீழலென அமர்ந்து, எதிர் கொள்ள முகமலர்ந்து, சேரவரும் தொண்டருடன் திருப்பட்டீச்சரம் அணைந்து, புறத்திறைஞ்சி வலங்கொண்டு, வெண்கோட்டுப் பன்றி கிளைத்து அறியாத பாத தாமரை கண்டு தொழுது விழுந்து எழுந்து போற் றிசைத்த மொழிமாலை இத்திருப்பதிகம்.

**திருவிராகம். பண் – சாதாரி**

திருச்சிற்றம்பலம்.

பாடன்மறை சூடன்மதி பல்வளையொர்
பாகமதின் மூன்றொர் கணையால்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல்
கூட்டுபொழில் சூழ்பழையையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர
மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி
காட்டிவினை வீடுமவரே. 1

1. பாடல் மறை - பாடுவது வேதம். சூடல்மதி - சூடுவது சந்திரன். ஓர்பாகம் - ஓர்பாகத்தில் (அமர்ந்திருப்பவர்). பல்வளை - பல வளையல்களை அணிந்த உமாதேவியார். மதில் மூன்று - திரிபுரங்களையும். ஓர் கணையால்- ஓர் அப்பினால். கூட எரியூட்டி - ஒருசேர நெருப்பை உண்ணச்செய்து· எழில்காட்டி - தனது வீரத்தின் அழகைக்காட்டி· (சிரித்துப் புரம் எரித் ததை) நிழல் கூட்டு பொழில் - நிழலைத் தரும் சோலை சூழ்ந்த. பழையையுள் - திருப்பழையாறையில். மாடம் மழபாடி - மாடங்களையுடைய மழபாடியென்னும் பகுதியில். உறை - தங்குகின்ற. பட்டிசரம் மேய - திருப்பட்டீச்சரத்தில் எழுந்தருளியுள்ள. கடிகட்டு அரவினார் - அரையில் கட்டிய பாம்பையுடையவர். வேடநிலைகொண்டவரை - தமது வேடத்திற் கேற்ப ஒழுக்கத்தில் நிற்றலையுடைய அடியவரை. வீடு நெறிகாட்டி - அடை தற்குரிய முத்தி மார்க்கத்தையும் அறிவித்து. வினை வீடும் அவர் - அவர் களது கன்மங்கள் தாமே யொழியும்படி செய்ய வல்லவராவர். பட்டீச்சரம் மே(வி)ய அரவினார் வினை வீடுமவராவர் என்க. பழையாறை - பெரிய

திருப்பட்டீச்சரத்தில்:



சிவபூதங்கள் முத்துப்பந்தல் வைத்தது.

நீரின்மலி புன்சடையர் நீரளவு
கச்சையது நச்சிலையதோர்
கூரின்மலி சூலமது வேந்தியுடை
கோவணமு மானினுரிதோல்
காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள்
காதல்செய்து மேயநகர்தான்
பாரின்மலி சீர்பழையை பட்டிசர
மேத்தவினை பற்றழியுமே. 2

காலைமட வார்கள்புன லாடுவது
கௌவைகடி யார்மறுகெலாம்
மாலைமண நாறுபழை யாறைமழ
பாடியழ காயமலிசீர்ப்

நகரமாயிருந்த இடம். இப்பொழுது அதன் ஒவ்வொரு பகுதியும் வெவ்வேறு பெயர்களால் வழங்குகின்றது. பட்டீச்சரம் கோயிலின் பெயராகவும், இக்கோயிலிருக்கும் ஊரைப் பட்டீச்சரம் என இன்று வழங்குவர். சம்பந்தப் பெருமான் காலத்தில் இவ்வூர் மழபாடியென வழங்கப்பட்டது. மழநாட்டில் கொள்ளிடநதியின் வடகரையிலுள்ள மழபாடி என்னும் தலம் வேறு. கடி - இடக்கரடக்கல்.

2 நீரின்மலி புன்சடையர் - கங்கை நீரினால் நனைந்த புன்சடையை உடையவர். நீள் அரவு கச்சை (அது) - அவர்கட்டும் கச்சையாவது நீண்ட பாம்பு. நச்சு இலையது ஓர் கூரின் மலிசூலம் (அது) ஏந்தி - நஞ்சு பூசிய இலை வடிவத்தையுடையதாகிய ஓர் கூரின் மிகுந்த சூலத்தினை ஏந்தினவர். உடைகோவணமும் மானின் உரிதோல் - உடையும் கோவணமும் மானினுடைய உரித்த தோல். காரின்மலி கொன்றை விரிதார் - கார்காலத்தில் மிக மலரும் கொன்றை விரிந்த மாலையாகும். கடவுள் - இத்தகைய கடவுள். காதல்செய்து - விரும்பி. மேய - மேவிய. நகர்தான் - தலமாவது. பாரின் மலிசீர் - பூமியில் மிகுந்த புகழையுடைய. பழையை - திருப்பழையாறையில் உள்ள. பட்டிசுரம் - திருப்பட்டீச் சரத்தை. ஏத்த - துதிக்க. வினை - நமது வினைகள், பற்று அழியும் - அடி யோடு அழியும். கொன்றை கார்காலத்தில் மலர்வதென்பதைக் "கண்ணி கார்நறுங் கொன்றை" என்னும் புறநானூற்றாலும் அறிக - (1).

3. காலை மடவார்கள் புனலாடுவது கௌவை - காலைவேளையில் தண்ணீர்த்துறைகளில் மகளிர் நீராடுவதால் உண்டாகும் ஓசையும். மாலை- மாலைவேளையில். கடிஆர் - புதுமை மிகுந்த, மறுகு எலாம் வீதிகளில்

பாலையன நீறுபுனை மார்பனுறை
    பட்டிசர மேபரவுவார்
மேலையொரு மால்கடல்கள் போல்பெருகி
    விண்ணுலக மாளுமவரே.

கண்ணின்மிசை நண்ணியிழி விப்பமுக
    மேத்துகமழ் செஞ்சடையினன்
பண்ணின்மிசை நின்றுபல பாணிபட
    வாடவல பான்மதியினன்
மண்ணின்மிசை நேரின்மழ பாடிமலி
    பட்டிசர மேமருவுவார்
விண்ணின்மிசை வாழுமிமை யோரொடுட
    னுதலது மேவலெளிதே. 4

எல்லாம். மணம் நாறும் - மணம் மணக்கும் (ஓசையும் மணமும் என இரு புலன்களின் இனிமைகூறவே, ஏனையமூன்றும்: கண்ணுக்கினிய காட்சியும் வாய்க்கினிய சுவையும், தென்றற்காற்றால் உடற்கினிய ஊறும் எக்காலத்தும் எவ்விடத்தும் நுகர்வர் எனப் (பதிவளம் குறிப்பித்தவாறு.) பழையாறை மழபாடி - பழையாறை என்னுந் தலத்தில் மழபாடி என்னும் பகுதியில். அழகாய - அழகாகிய. மலிசீர் - மிக்க சிறப்புடைய, பாலையன நீறுபுனை- பாலையொத்த திருநீற்றை யணிந்த. மார்பனுறை பட்டிசரமே பரவுவார் - மார்பினை உடையவராகிய சிவபெருமான் தங்கும் பட்டீச்சரம் என்னும் கோயிலைத் துதிப்போர் (இம்மையில் மேலை மேன்மை தருவனவாகிய செல்வங்கள்) மால்கடல்கள்போல் பெருகி - வளரப்பெற்று (மறுமையில்) விண்ணுலகம் - சொர்க்கலோகத்தை. (ஆளுமவர்) தொன்மை - தொல்லை யென்று வருவதுபோல், மேன்மை - மேலையென்றாகிப் பண்பாகுபெயராய்ச் செல்வத்தை யுணர்த்தி நின்றது.

4. கண்ணின்மிசை - தமது கண்களின் இடத்தில். நண்ணி - (உமாதேவியாரின் கரங்கள்) சேர்ந்து (மறைத்ததால் அக் கரங்களின் அரும்பிய வியர்வை நீர்) முகம் - (பரவிய) ஆயிர முகங்களையும். இழிவிப்ப - ஓர் திவலையாகச் சிறுகுவித்துச் சடையின் ஓர் உரோமத்தில் தாங்க. ஏத்து - (அதன் பிரவாகத்தால் உலகமழியாமைக் காத்தருளிய திறனைப் பிரமன் முதலியோர்) துதிக்கப்பெற்ற (செஞ்சடையினன்). கமழ் - (அடியார் புனைந்த மாலிகைகளால்) மணம் வீசும்; செஞ்சடையினன். பண்ணின் மிசை - இசைவழியே பொருந்தி. பலபாணிபட - பல தாள ஒத்துக்களும் பொருந்த. ஆடவல - ஆடவல்ல, பான்மதியினன் - வெண்மையான சந்திரனை அணிந்தவன், மண்ணின்மிசை நேர் இல் - பூமியில் தனக்குச்

மருவமுழ வதிரமழ பாடிமலி
மத்தவிழ வார்க்க வரையார்
பருவமழை பண்கவர்செய் பட்டிசர
மேயபடர் புன்சடையினன்
வெருவமத யானையுரி போர்த்துமையை
யஞ்சவரு வெள்விடையினன்
உருவமெரி கழல்கடொழ வுள்ளமுடை
யாரையடை யாவினைகளே. 5

மறையினொலி கீதமொடு பாடுவன
பூதமடி மருவிவிரவார்
பறையினொலி பெருகநிகழ் நட்டமமர்
பட்டிசர மேயபனிகூர்

சமானமில்லாத. மழபாடி - மழபாடி என்னுந் தலத்தில். மலி - தங்கிய. பட்டிசரமே மருவுவார் - பட்டீச்சரத்தையே பற்றுக அடைவோர். விண்ணின்மிசை வாழுமிமையோரொடு உடன் ஆதல் அது - வான் உலகில் வாழும் தேவருடன் வாழ்வதாகிய அத்தகைமை. மேவல் - அடைவது. எளிது - அவர்களுக்கு ஓர் அரியதன்று. அதனினும் மிக்க சிவலோகத்தில் வாழ்வர் என்பது குறிப்பெச்சம்.

5. மரு(வு)வ - பொருந்தியனவாகிய, முழவு - முழவு முதலிய வாச்சியங்களோடு. மலி மத்தம் - விழாக்களியாட்டுக்கள் மிகுந்த. விழவு- உற்சவத்தால் எழும் ஓசைகள். ஆர்க்க - ஆரவாரிக்க. வரை ஆர் - மலையின் கண்தங்கிப் பொழிகின்ற. பருவம் மழை - பருவகாலத்திற் பெய்யும் மழையால் உண்டாகிய. பண்(பு) - வளங்கள். கவர்செய் - கண்டார் மனத்தைக் கவர்கின்ற, (பட்டீச்சரம் மே(வி)ய, படர்ந்த) புன்சடை யினன் - புன்சடைகளை யுடையவனும். விடையினன் - விடையை யுடையவனும் எனக்கூட்டுக. அனைவரும் அஞ்சுமாறு யானைத்தோலைப் போர்த்து அக்கோலத்தோடே உமாதேவியாரும் அஞ்ச அவர் முன்வந்த விடையினன். அவனது உருவம் நெருப்பு, அவனது கழல் தொழுவாரை வினைகள் அடையா என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. மருவ-உகரச் சாரியை தொக்குநின்றது. மருஉ எனினும் ஆம், பண்பு - பண் எனக் கடைக்குறையாயிற்று. கவர்தலுக்குச் செயப்படுபொருள் வருவித் துரைக்கப்பட்டது.

6. மறையின்ஒலி - வேதங்களின் ஓசையும், பூதம் அடி மருவி - பூதகணங்கள் அடியின் கீழ்ப் பொருந்தி. கீதமொடு - கீதத்தோடும்,

பிறையினொடு மருவியதொர் சடையினிடை
 யேற்றபுன ரேற்றநிலையாம்
இறைவனடி முறைமுறையி னேத்துமவர்
 தீத்தொழில்க ளில்லர்மிகவே. 6

பிறவிபிணி மூப்பினொடு நீங்கியிமை
 யோருலகு பேணலுறுவார்
துறவியெனு முள்ளமுடை யார்கள்கொடி
 வீதியழ காயதொகுசீர்
இறைவனுறை பட்டிசர மேத்தியெழு
 வார்கள்வினை யேதுமிலவாய்
நறவவிரை யாலுமொழி யாலும்வழி
 பாடுமற வாதவவரே. 7

பாடுவன - பாடப்படுவனவாகிய. (ஒலி) - ஓசையும். விரவுஆர் - கலத்தலையுடைய. பறையின் - முழவ வாத்தியங்களின். ஒலிபெருக - ஓசையும் பெருகும்படியாக. நிகழ் நட்டம் அமர் - பொருந்திய நடனமாடுகின்ற, பட்டிசரமேய - பட்டீச்சரம் என்னும் ஆலயத்தில் தங்கிய. பனிகூர் - குளிர்ச்சி பொருந்திய பிறையின்ஒடு - சந்திரனுடனே. மருவியது - பொருந்தியதாகிய. சடையின் இடை - சடையில். புனல் ஏற்ற - கங்கை நீரை ஏற்ற. தோற்றம் - தோற்றப்பொலிவு. நிலையாம் - நிலையாகவுள்ள. இறைவனடி - கடவுளின் திருவடிகளை, முறை - நாடோறும். முறையில் ஏத்தும் அவர் - முறைமையோடு துதிப்போர். தீத்தொழில்கள் இல்லர் மிகவே - துன்புறும் வினைகள் முற்றிலுமிலராவர்.

7. பிறவி பிணி மூப்பினொடு நீங்கி - பிறவித்துன்பமும், அதில் அடையக்கூடிய பிணியும், மூப்பும் ஒழிந்து. இமையோர் உலகு பேணலுறுவார் - தேவர் உலகமும் பாராட்டி எதிர்கொண்டு அழைக்கும் தன்மை உள்ளவராவார்கள் துறவி என்னும் உள்ளம் உடையார்கள் - துறத்தலாகிய உள்ளமுடைய மெய்யடியார்கள். (தங்கிய) கொடிவீதி கொடிகட்டியவீதியும். அழகாயதொகுசீர் - அழகுடைய பொருள்கள் எல்லாம் வந்து தொகும் சிறப்பையுடைய. இறைவன் உறை பட்டிசரமே - தலைவன் தங்கியிருக்கும் பட்டீச்சரமே. ஏத்தி எழுவர் - துதித்துத் துயில் எழுபவர். வினையேதும் இலராய் - வினைசிறிதும் இல்லாதவராகி, நறவம் - தேன் ஒழுகுகின்ற. விரையாலும் - வாசனைபொருந்திய மலர்களாலும். மொழியாலும் - தோத்திரங்களாலும் (வழிபாடுமறவாத) அவர் - சிவன்; உலகில் சிவகணத்தவரோடு உறைபவராவர் என்பது குறிப்பெச்சம்.

நேசமிகு தோள்வலவ னாகியிறை
வன்மலையை நீக்கியிடலும்
நீசன்விறல் வாட்டிவரை யுற்றதுண
ராதநிரம் பாமதியினன்
ஈசனுறை பட்டிசர மேத்தியெழு
வார்கள்வினை யேதுமிலவாய்
நாசமற வேண்டுதலி னண்ணலெளி
தாமமரர் விண்ணுலகமே. 8

தூயமல ரானுநெடி யானுமறி
யாரவன தோற்றநிலையின்
ஏயவகை யானதனை யாரதறி
வாரணிகொண் மார்பினகலம்
பாயநல நீறதணி வானுமைத
னோடுமுறை பட்டிசரமே
மேயவன தீரடியு மேத்தவெளி
தாகுநல மேலுலகமே. 9

8. நேசம் மிகு - திக்குவிசயத்தில் விருப்பம் மிகுந்த. தோள்வலவன் ஆகி - புயவலிமையுடையவனாய். இறைவன் மலையை - சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் கைலாய மலையை. நீக்கியிடலும் - தூக்கி அப்பால் இட முயன்ற அளவில். நீசன் விறல் வாட்டி - இழிதகவினனாகிய இராவணனது வலிமையை வாட்டியவன். வரை - தன்னுடைய எல்லையையும். உற்றது-தன்னுடைய நிலைமையையும். உணராத - பிறரால் அறியப்படாத. நிரம்பா மதியினன் - நிரம்பாத (பிறைச்) சந்திரனை அணிந்தவன் (ஆகிய). ஈசன்உறை - கடவுள் தங்கிய (பட்டீச்சரம் தொழுது எழுவார்) வினை ஏது மிலவாய் - கன்மங்கள் முற்றும் அழிந்தனவாகி, நாசம் (இனிப்பிறந்து) இறத்தல். அற - நீங்க. வேண்டுதலின் - வேண்டிச்சிவஞானம் பெறுதலினாலே. அமரர் விண்ணுலகம் - (அவர்களுக்குத் தேவர் உலகம். எளிதாம்- ஓர்பொருளன்று. நேசம் - இங்கு ஆசையை யுணர்த்திற்று.

9. தூயமலரானும் நெடியானும் - தூய்மையாகிய தாமரை மலரில் இருப்பவனாகிய பிரமனும் திருமாலும். அவன - அவ்விறைவனுடைய. தோற்றம் - தோற்றத்தையும். நிலையின் - நிலைமையின். ஏய - பொருந்திய. வகையானதனையும் - வகையையும் (பலவகையான நிலைமையையும்) அறியார் - அறியாதவர்களாவார்கள். (ஆயின்) யார் அது அறிவார் அவரது தோற்றத்தை நிலைமையையும் அறியவல்லவர்கள் யார்?

தடுக்கினை யிடுக்கிமட வார்களிடு
பிண்டமது வுண்டுழல்தரும்
கடுப்பொடி யுடற்கவசர் கத்துமொழி
காதல்செய்தி டாதுகமழ்சேர்
மடைக்கயல் வயற்கொண்மழ பாடிநகர்
நீடுபழை யாறையதனுள்
படைக்கொரு கரத்தன்மிகு பட்டிசர
மேத்தவினை பற்றறுதலே. 10

மந்தமலி சோலைமழ பாடிநகர்
நீடுபழை யாறையதனுள்
பந்தமுயர் வீடுநல பட்டிசர
மேயபடர் புன்சடையனை

அணிகொள் மார்பின் கலம் - அழகான மார்பின் அகன்ற இடத்தில். பாய-முழுவதும், (நல்ல) நீறு அது அணிவான் - திருநீற்றை அணிபவனுமாகிய சிவபெருமான். உமைதனேடும் உறை - உமாதேவியோடும் தங்கும். (பட்டீசரமே) மேய் - அடைந்து. (மேவியவனது) ஈரடியும் ஏத்த - இரண்டு திருவடிகளையும் துதிக்க. எளிதாகும் நலம் - சிவ ஞானம் அடைதல் எளிதாகும். (அதன்பயனுக அடைய வல்லது) மேல் - மேலான. உலகமே - முத்தியுலகாம்.

10. தடுக்கினை - இடுக்கி - (சென்ற இடங்களில் உட்காரத்) தடுக்கை இடுக்கிக்கொண்டு. மடவார் - பெண்கள். இடு - இடுகின்ற பிண்டமது - உணவை. உண்டு உழல்தரும் - உண்டு சுற்றித்திரிகின்ற. கடுப்பொடியார் - கடுக்காய்ப் பொடியைத் தின்பவரும். உடற்கவசர் - உடம்பைப் போர்த்துக்கொள்பவருமான சமணரும் புத்தரும். (கத்துமொழி) காதல் செய்திடாது - விரும்பாமல். கமழ்சேர் - வாசனையுடைய. மடைக் கயல் - மடையின்கண் கயல் மீன்கள். (உலாவும்) வயல் - வயல்களை யுடைய. மழபாடி நகர் - மழபாடி நகராகிய. நீடுபழையாறையதனுள் - விஸ்தாரமான பழையாறை நகருள். படைக்கு ஓர் கரத்தன் - சூலப்படைக்கு ஏற்ற ஒரு கையை யுடையவன் (கரத்துக்கு ஏற்ற ஓர் படையன் - கையில் ஒரு சூலப்படையை ஏந்தியவன் என்பது நேரிய பொருள்) மிகு - வளம்மிகுந்த. பட்டீச்சரம் ஏத்த, வினைபற்றறுதலே அதன் பயன். அதன் பயனென்பது அவாய் நிலை.

11. மந்தம் - தென்றல் காற்று. மலி - மிகுந்துலாவும். (சோலை களையுடைய) மழபாடிநகர் - மழபாடி என்னும் நகரப்பகுதியைத் தன்னுட்

அந்தண்மறை யோரினிது வாழ்புகலி
ஞானசம் பந்தனணியார்
செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல
தொண்டர்வினை நிற்பதிலவே. 11

திருச்சிற்றம்பலம்

கொண்ட. நீடு - நெடிய (பழையாறை என்னும் தலத்தில்) பந்தம் உயர் வீடும் - பந்தமும் உயர்ந்த முத்தியும். நல - அடைந்தவர்க்கு அளிப்பதில் நல்லதாகிய (பட்டீச்சரம் மேவிய.) படர் புன் சடையினை - படர்ந்த சிறு சடைகளை உடையவனாகிய சிவபெருமானை. அந்தண் - அழகிய ஜீவ காருண்ணியம் உடைய (மறையோர்). இனிதுவாழ் - இனிமையாக வாழ் கின்ற. (புகலி, ஞானசம்பந்தன்) அணியார் - அணிகளோடு கூடிய. செந் தமிழ்கள் - செந்தமிழ்ப் பதிகங்களை. கொண்டு - பிறவிக் கடல்கடக்கும் புணையாகக்கொண்டு. இனிது செப்பவல தொண்டர்- கேட்டற்கும் உணர் தற்கும் இனியதாகச் சொல்லவல்ல தொண்டர்களின். வினை - வினைகள். நிற்பது இல - நில்லாவாம்.

மெய்தளர்வார் வெள்வளைகள் போய்வீழ்வார்—வெய்துயிர்த்துப்
பூம்படலை கொள்வார் புணர்முலைகள் பொன்பயப்பார்
காம்பனைய மென்றோட் கவின்கழிவார்—தாம்பயந்து
வென்றிவேற் சேயென்ன வேனில்வேள் கோவென்ன
அன்றென்ன ஆமென்ன ஐயுற்றுச்—சென்றணுகிக்
காழிக் குலமதலை என்றுதங் கைசோர்ந்து
வாழி வளைசரிய நின்றயர்வார்—பாழிமையால்
உள்ள நிலைதளர்ந்த ஒண்ணுதலார் வெல்களிற்றை
மெள்ள நடவென்று வேண்டுவார்—கள்ளலங்கல்
தாராமை யன்றியுந் தையல்நல் லார்முகத்தைப்
பாராமை சாலப் பயன்என்பார்—நேராக
என்னையே நோக்கினான் ஏந்திழையீர் இப்பொழுது
நன்மை நமக்குண் டெனநயப்பார்—கைம்மையால்
ஒண்கலையும் நாணும் உடைதுகிலுந் தோற்றவர்கள்
வண்கமலத் தார்வலிந்து கோடும்எனப்—பண்பின்.

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 74 திருத்தேவூர்

332. பதிகவரலாறு

'சிறப்பின்மிக்க பெருமைதரு சண்பை நகர் வேந்தர், நம்பர் மகிழ் திருவாரூர் வணங்கிப் போந்து, நலம்கொள் திருக்காறுயில் நண்ணி ஏத்திப், பைம்புனல் மென்பணைத் தேவூர் அணைந்து போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

காடுபயில் வீடுமுடை யோடுகலன்
மூடுமுடை யாடைபுலிதோல்
தேடுபலி யூணதுடை வேடமிகு
வேதியர் திருந்துபதிதான்
நாடகம தாடமஞ்ஞை பாடவரி
கோடல்கைம் மறிப்பநலமார்
சேடுமிகு பேடையன மூடிமகிழ்
மாடமிடை தேவுரதுவே. 1

1. பயில் வீடு - தங்கும் வீடு. காடு - மயானம். கலன் - உண்கலம். முடைஓடு - முடைநாற்றம் பொருந்திய மண்டையோடு. மூடும்-அரையை மூடும். உடை ஆடை - உடுத்துக் கொள்வதாகிய ஆடை. புலி தோல் - புலித்தோல். ஊண் - உணவு. தேடுபலி - தேடியுண்ணும் பிச்சை. உடை வேடம்மிகு - இவற்றையுடைய கோலம் மிக்க. வேதியர் - வேதத்தின் பொருளாயுள்ள சிவபெருமானது. திருந்துபதியாம் - திருத்தமான தலமாகும் (சோலைகளில்). மஞ்ஞை நாடகம் அது ஆட - மயில் நாட்டியம் ஆட. அரி - வண்டுகள். பாட - இசைபாட. கோடல் - காந்தள்கள். கைமறிப்ப - கரக்கம்பஞ்செய்ய. நலமார் - அழகுடைய. சேடுமிகு - இளமை மிக்க. பேடை அனம் - பெண் அன்னம்போன்ற மகளிர். ஊடி - ஆடவரோடு பிணங்கி. மகிழ் - அவர்கள் பிணக்கு நீக்குவதால் மகிழ்கின்ற. மாடம்மிடை - மாடங்கள் நெருங்கிய (தேவூர் அதுவே.) அன்னம் - உவம ஆகுபெயர்.

கோளரவு கொன்றைநகு வெண்டலையெ
ருக்குவனி கொக்கிறகொடும்
வாளரவு தண்சலம கட்குலவு
செஞ்சடைவ ரத்திறைவனூர்
வேளரவு கொங்கையிள மங்கையர்கள்
குங்குமம் விரைக்குமணமார்
தேளரவு தென்றறெரு வெங்குநிறை
வொன்றிவரு தேவூரதுவே. 2

பண்டடவு சொல்லின்மலை வல்லியுமை
பங்கனெமை யாளுமிறைவன்
எண்டடவு வானவரி றைஞ்சுகழ
லோனினிதி ருந்தவிடமாம்
விண்டடவு வார்பொழி லுகுத்தநற
வாடிமலர் சூடிவிரையார்
செண்டடவு மாளிகை செறிந்துதிரு
வொன்றிவளர் தேவூரதுவே. 3

2, கோள் அரவு - கொலைத் தொழிலையுடைய பாம்பு. (கொன்றை). நகுவெண்டலை - சிரிக்கும் வெண்டலை. (எருக்கு) வன்னி - வன்னியிலை. (கொக்கு இறகொடும்) வாள் அரவும் - ஒளிபொருந்திய பாம்பும்; தண் சல மகள் - குளிர்ச்சி பொருந்திய கங்காதேவியும். குலவு - குலவுகின்ற (செஞ் சடை) வரத்து - வளர்தலையுடைய. (இறைவன் ஊர்). வேள் அரவு-விரும் புதல் பொருந்திய (கொங்கை). இளமங்கையர்கள் - (கணவரோடு கூடிய) இளம் பெண்களின். குங்குமம் விரைக்கு-குங்குமக் குழம்பின் வாசனைக்கு. மணமார்-மேலும் மணத்தைத் தருகின்ற (தென்றல்பிரிந்த மகளிர்க்கு) தேள் அரவு - தேள் கொட்டுவதைப்போல் மோதுகின்ற (தென்றல் தெரு வெங்கும்) நிறைவு ஒன்றி - நிறைந்து. வரு தேவூர் அதுவே. தென்றல் காற்று கணவரோடுகூடிய மகளிர்க்கு, பலமலர்களிற் படிந்து கொணர்ந்த வாசனையை வீசி இன்பஞ் செய்கின்ற தென்றும் பிரிந்த மகளிர்க்குத் தேள் கொட்டுவதுபோல் துன்பஞ் செய்கின்றதென்றும் கூறியவாறு. கொங்கை யிள மங்கையர் என்று கூறப்பட் டிருப்பினும், மங்கையர் கொங்கையெனப் பொருள்கொள்ளல் நேர். வேள் அரவு - தொழிற்பெயர், தோற்று தேற்று என்னும் பகுதிகளில் தல் விகுதிக்குப்பதில் அரவு என்னும் தொழிற் பெயர் விகுதி வந்து தோற்றரவு தேற்றரவு என்றுதற்போல, வேள் + தல் வேட்டல். தல்விகுதிக்குப்பதில், அரவு நின்று, வேளரவு என்றாயிற்று.

3. பண் தடவு - பண்ணின் இனிமை பொருந்திய (சொல்லின்) மலைவல்லி உமை - மலையின் மகளாகிய உமாதேவியாரை. பங்கன் - ஒரு

மாசின்மன நேசர்தம தாசைவளர்
சூலதரன் மேலேயிமையோர்
ஈசன்மறை யோதியெரி யாடிமிகு
பாசுபதன் மேவுபதிதான்
வாசமலர் கோதுகுயில் வாசகமு
மாதரவர் பூவைமொழியும்
தேசவொலி வீணையொடு கீதமது
வீதிநிறை தேவூரதுவே. 4

பங்கில் உடையவனும். எமை - எம்மை (ஆளும் இறைவன்) எண் தடவு- எண்ணத்தக்க. வானவர் - தேவர்கள். இறைஞ்சு கழலோன் - வணங்கும் திருவடியையுடையோனுமாகிய சிவபெருமான். இனிது இருந்த இடம் - மகிழ்வோடிருந்த இடம். விண் தடவுவார் பொழில்-ஆகாயத்தை அளாவிய நெடிய சோலைகள். உகுத்த - சொரிந்த. நறவு ஆடி - தேனில் மூழ்கியும் மலர் சூடி - மலர்களை அணிந்தும். விரைஆர் - இவற்றால் வாசனைமிகுந்த. சேண் தடவு - ஆகாயமளாவிய. மாளிகை - மாளிகைகள். செறிந்து - நெருங்கி. திருஒன்றி - லக்ஷ்மிகரம் பொருந்தி (வளர் தேவூர் அதுவே) மாளிகைகளைச் சூழப் பூஞ்சோலைகள் உள்ளன. காற்று வீசுவதால் பூந்தேனும் பூக்களும் அவற்றில் வீசப்படுகின்றன. அதனால் அம்மாளிகைகள் (நீரில் மூழ்கி மலர்சூடிவரும் மாதர்கள் போலத்தாங்களும்) தேனில் மூழ்கி மலர்சூடி நிற்பன போற் காணப்படுகின்றன. அவற்றால் வாசனையும் உடையனவாகக் காணப்படுகின்றன வென்பது பின்னிரண்டடிகளின் கருத்து. சேண் என்பது செண் என எதுகை நோக்கிக் குறுக்கல் விகாரம் பெற்றது.

**4.** மாசில் மனநேசர் - களங்கமற்ற மனத்தையுடைய, அடியார்கள் (தன்மேல் வைத்த) ஆசைவளர் - ஆசை வளர்தற்குரிய. சூலதரன் - சூலத்தைத் தரித்தவனும். மேலே இமையோர் ஈசன் - வானுலகத்தில் உள்ள தேவர்களுக்குத் தலைவனும், மறைஓதி - வேதங்களை ஓதி அருளியவனும். எரி ஆடி - அக்கினியில் ஆடியவனும், மிகு - வெற்றியை மிகுக்கும் பாசுபதன் - பாசுபத அஸ்திரத்தையுடையவனும் ஆகிய சிவபெருமான். மேவுபதிதான்-தங்கும் தலமாவது. வாசம் மலர்-வாசனையுடைய மலர்களை. கோதுகுயில் - மூக்கால் கோதுகின்ற குயில்களின். வாசகமும் - கூவுதலும் மாதரவர் - பெண்களின் (மொழிவார்த்தையும்). பூவைமொழி - நாகணவாய்ப்புட்களின் வார்த்தையும், தேசஒலி - வேறு நாட்டில் இருந்து வணங்க வந்தவர்களின் ஓசையும், வீணையொடு - வீணையின் ஒலியுடன் கூடிய. கீதமது -

கானமுறு மான்மறிய ஞானையுரி
 போர்வைகன லாடல்புரிவோன்
ஏனவெயி றாமையிள நாகம்வளர்
 மார்பினிமை யோர்தலைவனூர்
வானணவு சூதமிள வாழைமகிழ்
 மாதவி பலாநிலவிவார்
தேனமுது வுண்டுவரி வண்டுமருள்
 பாடிவரு தேவூரதுவே. 5

ஆறினொடு கீறுமதி யேறுசடை
 யேறனடை யார்நகர்கடான்
சீறுமவை வேறுபட நீறுசெய்த
 நீறனமை யாளுமரனூர்

(தேவூர் அது) இனி மாதரவர் பூவைமொழி என்பதற்குப் பெண்கள் பூவை களைப்பயிற்றும் மொழியின் ஓசையென்றும், பெண்களின் பூவைபோன்ற மொழியின் ஓசையென்றும் பொருள் கோடலும் ஆம்.

5. கானம் உறும் - காட்டில் வாழும். மான்மறியன் - மான்கன்றை ஏந்தியவன். யானை உரிபோர்வை - யானைத்தோலாகிய போர்வையோடு. கனல் ஆடல் புரிவோன் - நெருப்பில் ஆடுபவன். ஏன எயிறு - பன்றியின் கொம்பும். ஆமை - ஆமையோடும். இளநாகம் - இளம் பாம்புகளும். வளர் - பொருந்துகின்ற. மார்பின்-மார்பையுடைய (இமையோர் தலைவன்) ஊர் - (தேவர்கள் நாயகனாகிய சிவபெருமானின்) தலம். வான் அணவு சூதம் - ஆகாயத்தை அளாவிய மாமரங்களும். (வாழை. மகிழ், மாதவி, பலா முதலிய மரங்களும்) நிலவி - தழைத்து. வார்தேன் அமுது உண்டு - சொரிகின்ற தேனாகிய உணவை உண்டு. வரிவண்டு - இசைபாடும் வண்டுகள். மருள் - அந்தக் காலத்திற்குரியதல்லாத பண்ணை (தேன் உண்ட மயக்கத்தால்) பாடி வரு(ம்) தேவூர் அதுவே. மருள் - மருள்தல் தொழிலாகுபெயர். வளர் என்பது இங்குப் பொருந்திய என்னும் பொருள் தந்து நின்றது. வண்டு மருள் பாடி என்பதனை "மாலை மருதம் பண்ணிக் காலைக் கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி வரவெமர் மறந்தனர்" என்னும் புறநானூற்றிலும் காண்க. (149)

6. ஆறினொடு - கங்காநதியுடனே. கீறுமதி - பிறைச்சந்திரனும், ஏறு - ஏறியுள்ள. சடை - சடையையுடைய, ஏறன் - இடபவாகனத்தை யுடையவனும், சீறும் அவை (தேவர் முதலியோரை) சீறி அழிப்பனவாகிய. அடையார் நகர்கள்-பகைவர்களின் முப்புரங்களையும், வேறுபட நீறுசெய்த

வீறுமல ருறுமது வேறிவளர்
வாயவிளை கின்றகழனிச்
சேறுபடு செங்கயல் விளிப்பவிள
வாளைவரு தேவூரதுவே. 6

கன்றியெழ வென்றிநிகழ் துன்றுபுர
மன்றவிய நின்றுநகைசெய்
என்றனது சென்றுநிலை யெந்தைதன
தந்தையம ரின்பநகர்தான்
முன்றின்மிசை நின்றபல வின்கனிக
டின்றுகற வைக்குருளைகள்
சென்றிசைய நின்றுதுளி யொன்றவிளை
யாடிவளர் தேவூரதுவே 7

ஓதமலி கின்றதெனி லங்கையரை
யன்மலி புயங்கனெரியப்
பாதமலி கின்றவிர லொன்றினில்
அடர்த்தபர மன்றனதிடம்

அழியும்படியாக எரித்து. நீறன் - திருநீற்றைப் பூசியருளியவனும் (ஆகிய) நமையாளும் அரன் - நம்மை யாட்கொள்ளும் சிவபெருமானின் (ஊர்) வீறுமலர் ஊறும் மது - செழித்த மலரில் ஊறிவடிகின்ற தேன் வெள்ள மானது. ஏறி - பாய்ந்து. வளர்வாய - விளைகின்ற. கழனி - வயல்களின். சேறுபடு - சேற்றிலுள்ள, செங்கயல் விளிப்ப - செவ்விய கயல்மீன்கள் (தம்மோடு விளையாடக்) கூப்பிட. இளவாளைவரு - இளமை பொருந்திய வாளைமீன்கள் வரும் (தேவூரதுவே.)

7. கன்றி எழ - கோபித்து (உலகை அழிக்கக் கிளம்ப) வென்றி நிகழ் - வெற்றிபெற்ற. துன்று - நெருங்கிய. புரம் - திரிபுரங்களையும். அன்று அவிய - அக்காலத்தில் அழியும்படி. நின்று நகைசெய் - நின்று சிரித்த. என்தனது - என்னுடைய. சென்று நிலை - சென்று (அடையக் கூடிய) பற்றுக்கோடும். எந்தை தனதந்தை - என் தந்தைக்குத் தந்தையு மாகிய சிவபெருமான். அமர் - விரும்பும். இன்பநகர் - இன்பகரமான தலம். கறவைக் குருளைகள் - கறவைப் பசுக்களின் கன்றுகள். சென்று - போய். முன்றின்மிசை நின்ற - வீட்டின் முன்றில் நின்ற. (பலவின் கனிகள் தின்று) இசைய நின்று - பொருந்த நின்று. ஒன்ற - ஒருசேர. து(ள்)ளி விளையாடி - துள்ளி விளையாடி. வளர் - வளர்கின்ற (தேவூர் அதுவே.)

8. ஓதம் மலிகின்ற - கடல் அலைகள் மோதுகின்ற. தென் இலங்கை அரையன் - இராவணனது, வலி - வலிமை மிகுந்த. புயங்கள்-தோள்கள்

போதமலி கின்றமட வார்கணட
மாடலொடு பொங்குமுரவம்
சேதமலி கின்றகரம் வென்றிதொழி
லாளர்புரி தேவூரதுவே. 8

வண்ணமுகி லன்னவெழி லண்ணலொடு
சுண்ணமலி வண்ணமலர்மேல்
நண்ணவனு மெண்ணரிய விண்ணவர்கள்
கண்ணவ னலங்கொள்பதிதான்
வண்ணவன நுண்ணிடையி னெண்ணரிய
வன்னநடை யின்மொழியினார்
திண்ணவண மாளிகை செறிந்தவிசை
யாழ்மருவு தேவூரதுவே. 9

நெரிய - அரைபட. பாதம் மலிகின்ற - பாதத்தில் பொருந்திய. விரல் ஒன்றினில் - ஒருவிரலால். அடர்த்த - நெருங்கிய. (பரமன் தனது இடம் ஆம் நகரில்) போதம் மலிகின்ற மடவார் - மகிழ்ச்சி மிகுந்த பெண்கள். நடமாடல் ஒடு - நாட்டிய மாடுவதொடு, பொங்கும் முரவம் - ஒத்து முழங்கும் முழவின் ஓசை ஒலிக்க (வயலுள்) சேதம் மலிகின்ற சேற்றில் பயில்கின்ற. கரம் - கையினால். தொழிலாளர் - உழவுத் தொழிலினர். வெற்றி புரி - வறுமைப் பிணியையும், பசிப்பிணியையும் ஓட்டி வெற்றிகாணும் (வேளாண்மை விளைவைச்செய்யும் தேவூரதுவே.)

9. வண்ணமுகில் அன்ன எழில் அண்ணலொடு - கருநிறத்தை யுடைய மேகத்தையொத்த அழகிய திருமாலுடன், சுண்ணமலி வண்ண- மகரந்தப் பொடிநிறையும் இயல்பையுடைய. மலர்மேல் - தாமரைமேல் நண் அவனும் - தங்கும் பிரமனும். எண்அரிய - அளவற்ற. விண்ண வர்கள் - ஏனைத் தேவர்களும். கண்ண - இவர் நிலைமையை அறியும் வழி என் என்று யோசிக்குமாறு (வளர்ந்த) அனலம் - அக்கினி வடிவமான சிவபெருமான். கொள் - இடமாகக் கொண்ட. பதி - தலம். வண்ணம் வனம் - நிறத்தின் அழகையும் (அழகிய நிறத்தையும்). நுண்ணிடை-சிறிய இடையையும், அன்னம் நடை-அன்னம் போன்ற நடையினையும் உடைய, எண்ணரிய - அளவற்ற. இன்மொழியினார் - இனிய மொழிகளையுடைய பெண்கள். (தங்குகின்ற) திண்ணவணம் - உறுதியான அமைவுடைய. மாளிகை - மாளிகைகளில், செறிந்த - மிகுந்த, யாழ் இசை - யாழ் முதலிய கருவிகளில் ஓசையும். மருவு - பொருந்திய. (தேவூர் அதுவே.)

பொச்சமமர் பிச்சைபயி லச்சமணு
மெச்சுமறு போதியருமா
மொச்சைபயி லிச்சைகடி பிச்சன்மிகு
நச்சரவன் மொச்சநகர்தான்
மைச்சின்முகில் வைச்சபொழில் * *
* * * 10

துங்கமிகு பொங்கரவு தங்குசடை
நங்களிறை துன்றுகுழலார்
செங்கயல்கண் மங்கையுமை நங்கையொரு
பங்கனமர் தேவூரதன்மேல்
பைங்கமல மங்கணிகொள் திண்புகலி
ஞானசம் பந்தனுரைசெய்
சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை
வல்லவர்கள் சங்கையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. பொச்சம் அமர்-பொய் பொருந்திய. (துறவி வேடங்கொண்டு) பிச்சையெடுக்கும். அச்சமணும் - அந்தச் சமணர்களும். எச்சம் அறு - புகழற்ற. போதியரும் - பவுத்தர்களும். ஆம் - ஆகிய. மொச்சை - இழி தொழிலர். பயில் - சொல்லும். இச்சை-விருப்பமான உபதேசமொழிகளை. கடி - விலக்கும். பிச்சன் - பித்தன் என்னும் பெயருடையவனும். மிகு நச்சு அரவுன் - மிகுந்த விடத்தைக்கக்கும் பாம்பை அணிந்தவனுமாகிய சிவ பெருமானது. மொச்ச - (மொய்த்த) அடியார்கள் நெருங்கிய (நகர்தான்) மைசில் முகில்-கரிய சிலமேகங்கள். வைச்சபொழில்-தங்கிய சோலைகள்... எச்சம் - புகழ் என்னும் பொருளில் வருதலை "எச்சமென்றென் னெண்ணும் கொல்லோ" திருக்குறளும் (1004) அறிக. பிச்சன்:- "பிச்சன் பிறப் பிலி பேர் நந்தி." திருமந்திரம்.

11. துங்கம் மிகு - உயர்ச்சி மிகுந்த. பொங்கு அரவு - மிகுந்த பாம்புகள். தங்கு - தங்குகின்ற. சடை - சடையையுடைய. நங்கள் இறை- எங்கள் தலைவனும். துன்று - அடர்ந்த. குழல்ஆர் - கூந்தலையுடைய. செங்கயல்கண் - செவ்விய மீன்போன்ற கண்களையுடைய. மங்கை - பெண்ணாகிய. உமைநங்கை - உமாதேவியார். ஒருபங்கன் - ஒரு பாகத்தில் உடைய சிவபெருமான். அமர் - விரும்புகின்ற. (தேவூர் அதன் மேல்) பைங்கமலம் - பசிய தாமரை மலர்கள். அணிகொள் - அழகைச் செய்கின்ற. திண்புகலி - வலியசீகாழியில் (அவதரித்த ஞானசம்பந்தன்.) உரைசெய் - பாடிய. சங்கம் மலி - அடியார் கூட்டங்களில் ஓதுதற்குரிய. (செந்தமிழ்கள் பத்தும் இவை வல்லவர்) சங்கை இலர் - குற்றமற்றவர்.

# 75 திருச் சண்பைநகர்

## 333 பதிகவரலாறு

"ஞானசம்பந்தர் ஞாலத்து உயர் காழியரை மூல இலக்கியமாக எல்லாப் பொருள் கோளும் முற்றப் பாடி"யவற்றுள் ஒன்று இத்திருப் பதிகம்.

### திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

எந்தமது சிந்தைபிரி யாதபெரு
மானென விறைஞ்சியிமையோர்
வந்துதுதி செய்யவளர் தூபமொடு
தீபமலி வாய்மையதனால்
அந்தியமர் சந்திபல வர்ச்சனைகள்
செய்யவமர் கின்றவழகன்
சந்தமலி குந்தளநன் மாதினொடு
மேவுபதி சண்பைநகரே. 1

1. இமையோர் - தேவர்கள். எம் தமது - எம்முடைய. சிந்தை பிரியாத - மனத்தினின்றும் நீங்காத. பெருமான் என - தலைவனென்று. வந்து துதிசெய்ய - வந்து துதிக்கவும். வளர் - வாசனை மிகுந்த. தூபம் ஒடு- தீபம் (ஒடு) - தூப தீபங்கள் முதலிய உபசாரங்களோடு. மலிவாய்மை அதனால் - சிறந்த விதிப்படி, அந்தி - மாலைநேரங்களிலும். அமர் - பொருந்திய. பலசந்தி - பலசந்தியாகாலங்களிலும். அர்ச்சனைகள் செய்ய- அருச்சிக்கவும், அமர்கின்ற - விரும்புகின்ற. அழகன் - சிவபெருமான். சந்தம்மலி - அழகுமிக்க, குந்தளம் - கூந்தலையுடைய, நல்மாதினொடும் - நல்ல உமாதேவியாரோடும். மேவு - பொருந்திய. பதி - தலம். (சண்பை நகரே). அழகன் - சிவபெருமானுக்கொருபெயர். "அணங்கு காட்டில் அனல்கையேந்தி அழகன் ஆடுமே" என்னும் காரைக்காலம்மையார் மூத்த திருப்பதிகத்தால் அறிக,

அங்கம்விரி துத்தியர வாமைவிர
வாரமமர் மார்பிலழகன்
பங்கய முகத்தரிவை யோடுபிரி
யாதுபயில் கின்றபதிதான்
பொங்குபர வத்திரை கொணர்ந்துபவ
ளத்திரள் பொலிந்தவயலே
சங்குபுரி யிப்பிதர ளத்திரள்
பிறங்கொளிகொள் சண்பைநகரே. 2

போழுமதி தாழுநதி பொங்கரவு
தங்குபுரி புன்சடையினன்
யாழின்மொழி மாழைவிழி யேழையிள
மாதினொ டிருந்தபதிதான்
வாழைவளர் ஞாழன்மகிழ் மன்னுபுனை
துன்னுபொழின் மாடுமடலார்
தாழைமுகிழ் வேழமிகு தந்தமென
வுந்துதகு சண்பைநகரே. 3

2. அங்கம் - உடம்பில், விரி - பரந்த. துத்தி - புள்ளிகளையுடைய. அரவு - பாம்புகளையும். ஆமை - ஆமையோட்டையும். மார்பில். விரவு - கலந்த. ஆரம் - ஆரமாக. அமர் - விரும்பும். அழகன் - சிவபெருமான். பங்கயம் - தாமரைபோன்ற. முகத்து - முகத்தையுடைய. அரிவையோடு உமாதேவியாருடன். பிரியாதுபயில் - பிரியாமல் வாழ்கின்ற. பதி - தலம். பொங்கு - மிகுந்த. பரவைத்திரை - கடலலைகள். கொணர்ந்து - அடித்துக் கொண்டுவரக் (குவிந்த) பவளத்திரள் - பவளக்குவியல்களின். அயலே - பக்கத்தில். சங்கு-சங்குகளும். புரி-வலமாகச் சுற்றிய. இப்பி-சிப்பிகளும். (சொரிந்த) தரளத்திரள் - முத்தின் குவியல்கள். பிறங்கு - சிவப்பும், வெண்மையும் கலந்து விளங்கும். ஒளிகொள் - பிரகாசத்தைக்கொண்ட; சண்பை நகரே.

3. போழும் - (வட்டவடிவை) பிளந்தால் அனைய. மதி - பிறைச் சந்திரனும். தாழும்நதி - கீழே பாய்ந்து ஓடுகின்ற. கங்கையாறும்-பொங்கு அரவு-மிகுந்த பாம்புகளும். தங்கு - தங்குகின்ற. புரி-முறுக்கிய (புன்சடையினன்) யாழின் மொழி - வீணையின் ஓசையையொத்த (மொழி). மாழை விழி - மாம்பிஞ்சுபோன்ற கண்ணையும். ஏழை இள மாதின் ஓடு - தனக்கென ஒரு செயல் இல்லாதவளாகிய இளமையுடைய பெண்பிள்ளை யுடனே. இருந்த பதிதான் - தங்கி இருக்கும் தலமாவது. வாழை - வாழை

கொட்டமுழ விட்டவடி வட்டணைகள்
கட்டநட மாடிகுலவும்
பட்டநுதல் கட்டுமலர் மட்டுமலி
பாவையொடு மேவுபதிதான்
வட்டமதி தட்டுபொழி லுட்டமது
வாய்மைவழு வாதமொழியார்
சட்டகலை யெட்டுமரு வெட்டும்வளர்
தத்தைபயில் சண்பைநகரே. 4

பணங்கெழுவு பாடலினொ டாடல்பிரி
யாதபர மேட்டிபகவன்
அணங்கெழுவு பாகமுடை யாகமுடை
யன்பர்பெரு மானதிடமாம்

மரங்களும், வளர்ஞாழல் - வளர்கின்ற புலிநகக் கொன்றையும். மகிழ் - மகிழமரங்களும். மன்னு பு(ன்)னை-நிலைபெற்ற புன்னைமரங்களும். துன்னு-அடர்ந்த. பொழில்மாடு - சோலைகளில். தாழை முகிழ் - தாழம் அரும்பை. வேழம் - யானையின். இகு - ஒடித்த. தந்தமென - தந்தமென்று. உந்துதகு - (சூடாது) அலட்சியம் செய்யும் (சண்பைநகரே.) "எத்திறன் நின்றான் ஈசன் அத்திறத்து அவளும் நிற்பள்" என்னும் உண்மை நூல் (சித்தியார் 2-ம் சூ-ம்) மொழிபற்றி 'ஏழை'யென்றார். 'தாழை உந்து' - திரிபதிசய அணி.

4. முழவுகொட்ட - வாத்தியங்கள் அடிக்க. இட்ட - வைத்த. அடி - பாதங்கள். வட்டணைகள் கட்ட - வட்டணை என்னும் நாட்டியவகைகளைச்செய்ய. நடமாடி - நடனமாடும் சிவபெருமான். குலவும்-விளங்கும் பட்டம் - பட்டத்தை. நுதல்கட்டு - நெற்றியில் அணிந்த. மலர் - சூடியமலர் மாலைகளின். மட்டு-வாசனை. மலி-மிகுந்த. பாவையொடு-பதுமைபோன்ற உமாபதியுடன். மேவுபதி - தங்கும்தலம். தமது வாய்மை வழுவாத - தமது உண்மை தவறாத. மொழியார் - வார்த்தைகளையுடைய கற்றோர்களின். சட்ட - முறையான. கலை எட்டும் மருவெட்டும் - கலைகள் அறுபத்துநான்கையும். வட்டமதி - வட்டமான சந்திரன். தட்ட - தடுக்கப்பட்ட. பொழிலுள் - சோலையிலே. வளர் - வளர்கின்ற. தத்தை - கிளிகள் பயில்-சொல்லும் (சண்பைநகர்) சட்டகலை...பயில் என்பது வீறுகோளணி

5. பண் (அம்)-இசை. கெழுவு - பொருந்திய. பாடலினொடு ஆடல் பிரியாத - பாடலையும் ஆடலையும் நீங்காத; பரமேட்டி, பகவன் - ஐசுவரியம் முதலிய ஆறு குணங்களையும உடையவனும். அணங்கெழுவு - பெண்

இணங்கெழுவி யாடுகொடி மாடமதி
 நீடுவிரை யார் புறவெலாந்
தணங்கெழுவி யேடலர்கொ டாமரையி
 லன்னம்வளர் சண்பைநகரே. 5

பாலனுயிர் மேலணவு காலனுயிர்
 பாறவுதை செய்தபரமன்
ஆலுமயில் போலியலி யாயிழைத
 ளோடுமமர் வெய்துமிடமாம்
ஏலமலி சோலையின வண்டுமலர்
 கிண்டிநற வுண்டிசைசெயச்
சாலிவயல் கோலமலி சேலுகள
 நீலம்வளர் சண்பைநகரே. 6

பொருந்திய. பாகமுடை - இடப்பாகம் உள்ள. ஆகம் உடை - உடம்பை உடைய. அன்பர்பெருமானது - அன்பர்களுக்கெல்லாம் தலைவனாகிய சிவபெருமானது (இடம்ஆம்). எழுவி - நாட்டப்பட்டு. இணங்கு - ஒன்றோடு ஒன்று ஒத்த. ஆடுகொடி - ஆடும் கொடிகளையுடைய. மாடம்அதில் - மாளிகைகளில். நீடுவிரையார்-மாதர்; பூசுவன, சூடுவனவற்றால் வாசனை மிக்கு. புறவு எலாம் - புறாக்கள் எல்லாம். தண்அம்கெழுவி - மகிழ்ச்சி பொருந்தி. (உலாவ). ஏடு அவர்கொள் தாமரையில் - இதழ்கள் விரிந்த தாமரை மலர்களில். அன்னம் வளர் - அன்னங்கள் வளர்கின்ற (சண்பை நகரே). ஆர் - ஆர்ந்து. வினையெச்சம் பகுதியளவாய் நின்றது. நம்மினத்தில் ஒரு பறவை வந்து பேறு பெற்ற இடம் நமக்கு மிக்க உறவாகுமென்று புறாக்கள் மகிழ்கின்றன. தண் - குளிர்ச்சி; மகிழ்ச்சி மேல் நின்றது. "சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூறவென்னுள்ளம் குளிருமே" என்புழிப்போல. தண் பண் என்பன தனிமொழிக்கண்ணும் சாரியையேற்றன.

6. பாலன் உயிர்மேல் அணவுகாலன் உயிர்பாற - மார்க்கண்டேயனது உயிர்மேற் சென்ற யமன் உயிர் நீங்க. உதை செய்த பரமன் - உதைத்த மேன்மையுடையவனும். ஆலும் - ஆடுகின்ற. மயில்போல் - மயில்போன்ற. இயலி - சாயலையுடையவராகிய, ஆயிழைதனோடும் - ஆராய்ந்த ஆபரணத்தையணிந்த உமாதேவியாரோடும். அமர்வு எய்வு பதி - தங்குதல் பொருந்திய தலம். ஏலம் மலி சோலை - ஏலம் முதலிய ஓடதி வர்க்கங்கள் மிகுந்த சோலையிலே; இனவண்டு - இளம் வண்டுகள். மலர்கிண்டி - மலரைக் கிளறி. நறவு உண்டு - தேனைக் குடித்து. இசை செய - பாட. சாலிவயல் - நெல் விளைந்த வயல்களிலே. கோலமலி - அழகுபொருந்திய. சேலுகள - மீன்கள் துள்ளிப்பாய. நீலம் வளர்

விண்பொயத னுன்மழைவி ழாதொழியி
னும்விளைவு தான்மிகவுடை
மண்பொயத னுல்வளமி லாதொழியி
னுந்தமது வண்மைவழுவார்
உண்பகர வாருலகி னூழிபல
தோறுநிலை யானபதிதான்
சண்பைநக ரீசனடி தாழுமடி
யார்தமது தன்மையதுவே. 7

வரைக்குலம கட்கொரு மறுக்கம்வரு
வித்தமதி யில்வலியுடை
அரக்கனது ரக்கரசி ரத்துற
வடர்த்தருள் புரிந்தவழகன்

நீலோற்பலங்கள் செழிக்கின்ற (சண்பைநகரே). செய்யஉகள என்பன காரணகாரியப் பொருளன்றி வந்த வினையெச்சங்கள். "வாவிதொறும் வண் கமலம் முகங்காட்டச் செங்குமுதம் வாய்கள் காட்டக் கருநெய்தல் கண் காட்டும் கழுமலமே" என்புழிப்போல் (திருமுறை 1.)

7. விண்-மேகம். பொய் அதனுல் - பொய்த்ததினுல். மழை விழாது ஒழியினும் - மழைத்துளிகள் விழாது ஒழிந்தாலும். விளைவுதான் மிகவுடை- விளைவு மிகுதலையுடைய. மண்பொய் அதனுல் - நிலம் வறண்டமையால். வளம் இராது ஒழியினும் - வளம் இல்லாமல் போயினும். தமது வண்மை வழுவார் - தமது கொடை தவருதவர்களாகி. உண்பகர-அடியவர்களுக்கு உணவு தர. வார் உலகின் - நெடிய உலகத்தில், (பல ஊழிதோறும், நிலையான பதி சண்பை நகராகும்.) ஈசன் அடி - அங்குள்ள சிவ பெருமானின் திருவடிகளை. தாழும் அடியார் - வணங்கும் அடியார்களது. தன்மை அது - தன்மையும் அதுவாம் என்றது தலத்திலுள்ள வள்ளியோர் "வான்பொய்ப்பினும், மண்பொய்ப்பினும் வண்மைகுன்ருவாறுபோல" அடியார்களும் வானந்துளங்கினும் மண்கம்பமாகினும், அஞ்சகில்லாது தம்வழிபாடு குறைவின்றிப் பூசிப்பர் என்பதாம். மழைவிழாதொழிதலும் மண்வளமிலாதொழிதலும் ஒருகாலத்தும் நேரா என்ற பொருள் தரலால் அவை எதிர்மறையும்மைகள். உணவு என்ற பெயர்ப்பகுபதம் உண் எனப் பகுதியள்வாய் நின்றது.

8. வரை - இமயமலையில் அவதரித்த. குலமகட்கு - சிறந்த உமா தேவியாருக்கு. ஒரு மறுக்கம் - ஓர் அச்சத்தை. வருவித்த - உண்டாக்கிய. மதி இல் - புத்தியில்லாத. வலியுடை - வலிமையையுடைய. அரக்கனது

இருக்கையத ருக்கன்முத லானவிமை
யோர்குழுமி யேழ்விழவினிற்
றருக்குல நெருக்குமலி தண்பொழில்கள்
கொண்டலன சண்பைநகரே. 8

நீலவரை போலநிகழ் கேழலுரு
நீள்பறவை நேருருவமாம்
மாலுமல ரானுமறி யாமைவளர்
தீயுருவ மானவரதன்
சேலுமின வேலுமன கண்ணியொடு
நண்ணுபதி சூழ்புறவெலாஞ்
சாலிமலி சோலைகுயில் புள்ளினொடு
கிள்ளைபயில் சண்பைநகரே. 9

இராவணனது. உரகரசிரத்து - மார்பு, கைகள், தலைகளில். உற - அழுந்த. அடர்த்து - நெருக்கி, (பின் அவன் வேண்ட அருள் புரிந்த). அழகன்- அழகனாகிய சிவபெருமானின். இருக்கை அது - இருக்கும் தலமாவது. ஏழ் விழவினில் - ஏழாந்திருவிழாவில். இமையோர் குழுமி - தேவர்கள் கூடி வணங்க. கொண்டலன - மேகம் படிந்தனவாகிய. மலி - செழித்த. தண் பொழில்கள்-குளிர்ச்சி பொருந்திய சோலைகள். தருக்குலம் - கற்பகச் சோலையை. நெருக்கும் - வருத்தும்; சண்பைநகர், வணங்க என ஒரு சொல் வருவிக்க. அக்காலத்துத் திருவிழாக்கள் பெரும்பாலும் ஏழாம் நாளில் முடிவுற்று வந்தனவென்பதை இப்பதிகத்தாலும் அப்பர் திருநேரிசையில் வருவதாலும் அறிக.

9. நீலவரைபோல - நீலமலையைப்போல. நிகழ் - பொருந்திய. கேழில் உருஆம் - பன்றியின் வடிவம் தாங்கிய. மாலும் - திருமாலும். நீள் பறவை - பெரிய அன்னப்பறவையாகிய. நேர் உருவம் ஆம் - நேரிய உருவம் ஆன. மலரானும் - பிரமனும். அறியாமை - அறியாவாறு. வளர்தீ உருவம் ஆன - வளர்ந்த நெருப்பின் வடிவுதாங்கிய. (பரமன்) வரதன் - சிவபெருமான். சேலும் - மீனையும். இனம் - சிறந்த. வேலும் அடை - வேலையும்போன்ற. கண்ணியொடு - கண்களையுடைய உமாதேவியாரோடு. நண்ணுபதி - தங்கும் தலமாவது. சூழ்புறவு எலாம் - தலத்தைச் சூழ்ந்த புறம்பு ஆகிய இடங்களில் எல்லாம். சாலி - நெற்பயிர்களும். மலி - செழித்த. சோலை - சோலைகளில். குயில் - குயில்களும். புள்ளினொடு - ஏனைப் பறவைகளும். கிள்ளை - கிளிகளும். பயில் - தங்கியுள்ள (சண்பைநகர்) வரதன் - வரந்தருபவன்.

போதியர்கள் பிண்டியர்கள் போதுவழு
வாதவகை யுண்டுபலபொய்
ஓதியவர் கொண்டுசெய்வ தொன்றுமிலை
நன்றதுணர் வீருரைமினே
ஆதியெமை யாளுடைய வரிவையொடு
பிரிவிலி யமர்ந்தபதிதான்
சாதிமணி தெண்டிரை கொணர்ந்துவயல்
புகவெறிகொள் சண்பைநகரே. 10

வாரின்மலி கொங்கையுமை நங்கையொடு
சங்கரன் மகிழ்ந்தமருமூர்
சாரின்முர றெண்கடல் விசும்புற
முழங்கொலிகொள் சண்பைநகர்மேற்
பாரின்மலி கின்றபுகழ் நின்றதமிழ்
ஞானசம் பந்தனுரைசெய்
சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர்
சேர்வர்சிவ லோகநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

10. போதியர்கள் - அரசமரத்தை வணங்கும் புத்தர்களும். பிண்டியர்கள் - அசோக மரத்தைப் பாராட்டும் சமணர்களும். போது வழுவா வகை - நேரம் தோறும் தவருத விதம், (உண்டு.) பல பொய் ஓதியவர் - பல பொய்யுரைகளை சொல்லுபவர். கொண்டு-மேற்கொண்டு. செய்வது - செய்யத்தகுந்த பயனுடைய செயல். ஒன்றுமிலை - சிறிதும் இல்லை. நன்று அது - பயன்தரும் நெறி. உணர்வீர்-அறிவீர்கள். உரைமின்-புகழ்வீர்களாக. ஆதி - முதன்மைக் கடவுளும். எமை - எங்களை. ஆளுடைய - ஆட்கொள்ளும். அரிவையொடும் - அம்பிகையொடும். பிரிவு இலி - பிரியாதவனுமாகிய சிவபெருமான். அமர்ந்த பதி - தங்கியிருக்கும் தலமாகிய. சாதி மணி - உயர்ந்த சாதி இரத்தினங்களை. தெண் திரை கொணர்ந்து - தெளிவாகிய அலைகள் அடித்துக்கொண்டு வந்து. வயல்புக - வயலில் போய் விழும்படி. எறிகொள் - எறிதலைக்கொண்ட. சண்பை நகரே - திருச்சண்பை நகரை.

11. வாரின்மலி - கச்சையணிந்த. நங்கை - மகளிரிற் சிறந்தவள். சங்கரன் - நன்மையைச் செய்பவனாகிய சிவபெருமான். மகிழ்ந்து அமரும்

ஊர் - மகிழ்ந்து வீற்றிருக்கும் தலமாகிய. சாரின் - வீதி முதலிய இடங்களில் எல்லாம். தெண்கடல் - தெளிவாகிய கடல்போல. முரல் - ஒலிக்கின்ற. முழங்கு ஒலி - பேரோசையானது. விசும்பு உறக்கொள் - வானுலகை யடையுமாறுகொண்ட (சண்பைநகர் மேல்). பாரில்-பூமியில். மலிகின்ற-மிகுந்த. புகழ்நின்ற - புகழ் நிலைத்துநின்ற (தமிழ் ஞானசம்பந்தன்) உரைசெய் - பாடிய. சீரின்மலி - தாளவொத்துக்களுக்கு இசைந்த. (செந்தமிழ் இசைப் பாடல்களை). செப்பும் அவர் - பாடுவோர். சிவலோக நெறி சேர்வர் - முறையே சிவலோகம் சேர்வர்.

வடிக்கண் மலர்வாளி வார்புருவம் வில்மேல்
தொடுத்(து) அதரந்தொண்டை துடிப்பப்—பொடித்தமுலைக்
காசைக் கருங்குழலார் காதற் கவுணியன்பாற்
பூசற் கமைந்து புறப்படுவார்—வாசச்
செழுமலர்த்தார் இன்றெனக்கு நல்காதே சீரார்
கழுமலத்தார் கோவே கழல்கள்—தொழுவார்கள்
அங்கோல் வளையிழக்கப் போவது நின்னுடைய
செங்கோன்மை யோவென்று செப்புவார்—நங்கைமீர்
இன்றிவன் நல்குமேல் எண்பெருங் குன்றத்தில்
அன்றமணர் கூட்டத்தை ஆசழித்துப்—பொன்ற
உரைகெழுவு செந்தமிழ்ப்பா ஒன்றினால் வென்றி
நிரைகழுமேல் உய்த்தானை நேர்ந்து—விரைமலர்த்தார்
பெற்றிடலாம் என்றிருந்த நம்மிலும் பேதையர்கள்
மற்றுளரோ என்று வகுத்துரைப்பார்—மற்றிவனே
பெண்ணிரக்கம் அன்றே பிறைநுதலீர் மாசுணத்தின்
நண்ணு கடுவிடத்தால் நாட்சென்று—விண்ணுற்ற
ஆருயிரை மீட்டன்(று) அவளை யணிமருகல்
ஊரறிய வைத்த தெனவுரைப்பார்—பேரிடரால்
ஏசுவார் தாமுற்ற ஏசறவைத் தோழியர்முன்
பேசுவார் நின்றுதம் பீடழிவார்—ஆசையால்

—ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை.

# 76 திருவேதவனம்

## 334 பதிகவரலாறு

சண்பைநாடு உடைய பிள்ளையார் தமிழ் மொழித் தலைவராகிய திருநாவுக்கரசருடன், மறைக்காட்டுள் வைகிப் பணிந்து போற்றிப் பாடிப் பரவிய பண்பயில் திருப்பதிகங்களுள் ஒன்று இது.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

கற்பொலிசு ரத்திளெரி கானினிடை
மாநடம தாடிமடவார்
இற்பொலி கொளப்புகுது மெந்தைபெரு
மானதிட மென்பர்புவிமேல்
மற்பொலி கலிக்கடன் மலைக்குவ
டெனத்திரை கொழித்தமணியை
விற்பொலி நுதற்கொடி யிடைக்கணிகை
மார்கவரும் வேதவனமே. 1

1. கல் - பருக்கைக் கற்கள். பொலி - வெப்பம் மிகும். சுரத்தின் - பாலைநிலம் போன்ற. எரிகான் இடை - கொதிக்கும் மயானத்தில். மாநடம் அது ஆடி - சிறந்த கூத்தை ஆடி. மடவார் - பெண்களின். இல் - வீடுகளில். பலிகொள் - பிச்சை கொள்வதற்கு. புகுதும் - புகும். எந்தை பெருமான்-எனக்குத் தந்தையாகிய தலைவனின்; இடம் என்பர். புவிமேல்- இந்தப் பூமியின்மீது. மல்பொலி - வளம் மிகுந்த. கலிக்கடல் - ஓசையையுடைய கடல். மலைக்குவடு என - மலையின் சிகரங்களைப்போல (வரும்) திரை - அலைகள். கொழித்த - கொழிப்பதுபோல் மடக்கிச் சொரிந்த. மணியை - இரத்தினங்களை. வில்பொலி - வில்லைப்போன்ற. நுதல் - புருவத்தையும். கொடி (பொலி) இடை-பூங்கொடிபோன்ற இடையையும் உடைய. கணிகைமார் - உருத்திர கணிகையர். கவரும் - வாரிக் கொள்கின்ற (வேதவனம்) புகுதும்:- 'து'சாரியை.

பண்டிரை பவப்புணரி யிற்கனக
மால்வரையை நட்டரவினைக்
கொண்டுகயி றிற்கடைய வந்தவிட
முண்டகுழ கன்றனிடமாம்
வண்டிரை நிழற்பொழிலின் மாதவியின்
மீதணவு தென்றல்வெறியார்
வெண்டிரைகள் செம்பவள முந்துகடல்
வந்தமொழி வேதவனமே. 2

காரியன்மெல் லோதிநதி மாதைமுடி
வார்சடையில் வைத்துமலையார்
நாரியொரு பான்மகிழு நம்பருறை
வென்பர்நெடு மாடமறுகில்
தேரியல் விழாவினொலி திண்பணில
மொண்படக நாளுமிசையால்
வேரிமலி வார்குழனன் மாதரிசை
பாடலொலி வேதவனமே. 3

2. பண்டு - முற்காலத்தில். இரை - (தமக்கு) உணவாகிய அமுதம். பவம் - தோன்றுதற்கிடமாகிய. புணரியில் - அலைகளையுடைய பாற்கடலில். கனகமால்வரையை - பொன்மயமான பெரிய மந்தர மலையை. நட்டு - மத்தாக ஊன்றி. அரவினை - வாசுகி என்னும் பாம்பை. கயிறிகொண்டு - கயிறாகக்கொண்டு. கடைய - தேவர்கள் கடைய. வந்த விடம் - எழுந்த ஆலகாலவிடத்தை. உண்ட - உண்டருளிய. குழகன்றன் இடமாம் - அழகனாகிய சிவபெருமானின் இடமாகும். வண்டு இரை - வண்டுகள் ஆரவாரிக்கின்ற. நிழல் - நிழலையுடைய. பொழிலில் - சோலையிலே. மாதவியின்மீது - மாதவி முதலிய மரங்களின் மீது. அணவு - தாவிய. தென்றல் - காற்றின். வெறி ஆர் - வாசனையுடையதும். வெண் திரைகள் - வெள்ளிய அலைகளால் (செம்பவளம்) உந்து - வீசுகின்ற. கடல் வந்து - கடல் வந்து படியும். மொழி (ஆர்) - கீர்த்தியையுடையதும் ஆகிய. (வேதவனமே).

3. கார் இயல் - மேகத்தையொத்த மெல் ஓதி - மெல்லிய கூந்தலை யுடைய. நதிமாதை - கங்காதேவியை. முடி - தலையில். வார்சடையில் - நீண்ட சடையின் மேல் (வைத்து) மலையார் நாரி - இமயமலையிலுள்ளார் மகளாகிய அம்பிகையை. ஒருபால் - ஒரு பாதியுடம்பில் (வைத்து). மகிழும் - மகிழ்கின்ற. நம்பர் - சிவபெருமான். உறைவு - தங்கும் இடம், என்பர். நெடும் மாடம் - நெடிய மாடங்களையுடைய. மறுகில் - வீதிகளில்

நீறுதிரு மேனியின் மிசைத்தொளிபெ
றத்தடவி வந்திடபமே
ஏறியுல கங்கடொறும் பிச்சைநுக
ரிச்சைய ரிருந்தபதியாம்
ஊறுபொரு ளின்றமி ழியற்கிளவி
தேருமட மாதருடனார்
வேறுதிசை யாடவர்கள் கூறவிசை
தேருமெழில் வேதவனமே. 4

கத்திரிகை துத்திரி கறங்குதுடி
தக்கையொ டிடக்கைபடகம்
எத்தனை யுலப்பில்கரு வித்திர
ளலம்பவிமை யோர்கள்பரச

தேர் இயல் விழாவின் ஒலி - தேர் ஓடும் திருவிழாக்களின் ஒலிக்கும். திண் பணிலம் - திண்ணிய சங்கு. ஒண்படகம் - சிறந்த படகம் என்னும் வாத்தியம் முதலியவற்றின் ஒலியோடு. நாளும் - நாடோறும். வேரிமலி - மணம் மிக்க. வார் குழல்-தொங்கும் கூந்தலையுடைய. நல்மாதர் - உத்தமிக ளாகிய பெண்கள். இசையால் - இசைக் கருவிகளோடு. இசைபாடல் ஒலி - இசைப்பாட்டுப் பாடுவதாலுண்டாகிய ஒலியும் (உடைய வேத வனம்). திருமறைக்காட்டை (நம்பன் உறைவு என்பர்).

4. நீறு - திருநீற்றை. திருமேனியின் மிசைத்து - திரு உடம்பின் மேலதாய். ஒளிபெறத்தடவி - ஒளிபொருந்தப் பூசி. (இடபமே ஏறி), உலகங்கள் தொறும் வந்து - ஊர்கள்தோறும் சென்று. (உலகம் - முதல் ஆகுபெயர்). பிச்சை நுகர் இச்சையர் - பிச்சை எடுத்து உண்பதில் இச்சையுடையவராகிய சிவபெருமான். இருந்த பதி - இருக்கும் தலம் ஊறுபொருள் - பல கருத்துக்களைத் தருகின்ற. இன்தமிழ் - இனிய தமிழ் மொழியில். இயல்கிளவி - இயற்சொற்களை. தேரும் (இப்பொருட்கு இச் சொல் எனத் தேர்ந்து பேசும். மடமாதருடன் - (இலை, காய், கறி, சிறு தின்பண்டம், சிற்றுண்டி முதலியன விற்கும்) இளம்பெண்களுடனே. ஆர்- அங்கே. (வாணிகம் முதலிய வினை மேற்கொண்டு கப்பலில் வந்த). வேறு திசை ஆடவர்கள் - வேறு திசைகளினின்றும் வந்த ஆண்கள். கூற - பேசுவதற்கு. இசை தேரும் - சொற்களைத் தெரிந்துகொள்ளும். எழில் ஆர் - அழகு மிக்க. வேதவனமே - இயற்கிளவி - இயற்சொல். இசை - சொல்.

5. கத்திரிகை துத்திரி இவ்வாத்தியங்களுடனே. கறங்கு துடி - ஒலிக்கும் உடுக்கையும். தக்கை - தக்கை என்னும் வாத்தியத்தோடு.

ஒத்தற மிதித்துநட மிட்டவொரு
    வர்க்கிடம தென்பருலகில்
மெய்த்தகைய பத்தரொடு சித்தர்கண்
    மிடைந்துகளும் வேதவனமே. 5

மாலைமதி வாளரவு கொன்றைமலர்
    துன்றுசடை நின்றுசுழலக்
காலையி லெழுந்தகதிர் தாரகை
    மடங்கவன லாடுமரனூர்
சோலையின் மரங்கடொறு மிண்டியின
    வண்டுமது வுண்டிசைசெய
வேலையொலி சங்குதிரை வங்கசுற
    வங்கொணரும் வேதவனமே. 6

இடக்கை படகம் என்னும் இவற்றோடு. உலப்பு இல் - அளவற்ற. எத்தனை கருவித்திரள் - எவ்வகைப்பட்ட இசைக் கருவிகளின் கூட்டங் கள். அலம்ப - ஆரவாரிக்க. இமையோர்கள் - தேவர்கள். பரச - துதிக்க. ஒத்து - தாள ஒத்துக்கிணங்க. அற - நன்றாக. மிதித்து - தாளையூன்றி. நடம் இட்ட - நடனமாடிய. ஒருவர்க்கு - சிவபெருமானுக்கு (இடம் அது என்பர்). மெய்த்தகைய - உண்மைத் தன்மையையுடைய. பத்தர்கள் - பக்தர்களும். சித்தர்கள் - சித்து வல்லவர்களும். மிடைந்து - நெருங்கி. உகளும் - மகிழ்ச்சி மீக்கூரும். (வேதவனமே;) உகளுதல் - துள்ளிக் குதித்தல்; - அது மகிழ்ச்சிமீக்கூர நிகழ்வதாற் காரணம் காரியமாக உபசரிக் கப்பட்டது.

6. மாலைமதி - மாலைக்காலத்தி லுதிக்கும் சந்திரனும். வாள் அரவு - ஒளி பொருந்திய பாம்பும். (கொன்றை மலர்) துன்று - நெருங்கிய (சடை). நின்று - தங்கி. சுழல - சுழன்று புரள. காலையில் எழுந்த கதிர் - உதய சூரியனும். தாரகை - விண் மீன்களும். மடங்க - திருமேனிக்கும், திருநீற்றுப் பூச்சிற்கும் முறையே நிகராகாமல் தோற்க, அனல் ஆடும் - தீயில் நின்று நடம் புரியும், (அரனது ஊர்). சோலையில் - மரங்கள் தொறும், பிண்டி - நெருங்கி. இனவண்டு - வண்டின் கூட்டங்கள். மது உண்டு- தேனைக் குடித்து. இசை செ(ய்)ய - இராகம் பாட. வேலை - கடலினின் றும், ஒலிசங்கு - ஒலிக்கும் சங்குகளையும், வங்க சுறவம் - கப்பல்களை யுடைக்கும் சுறாமீன்களையும், திரை - அலைகள் (கொணரும் வேத வனமே) மாலைமதி, வங்கசுறவம் இவை உருபும் பயனும் தொக்க தொகைகள்.

வஞ்சகம னத்தவுணர் வல்லரண
மன்றவிய வார்சிலைவளைத்
தஞ்சக மவித்தவம ரர்க்கமர
னுதிபெரு மானதிடமாம்
கிஞ்சுக விதழ்க்கனிக ளூறியசெவ்
வாயவர்கள் பாடல்பயில
விஞ்சக வியக்கர்முனி வக்கண
நிறைந்துமிடை வேதவனமே. 7

முடித்தலைகள் பத்துடை முருட்டுரு
வரக்கனை நெருக்கிவிரலால்
அடித்தலமுன் வைத்தலம ரக்கருணை
வைத்தவ னிடம்பலதுயர்
கெடுத்தலை நினைத்தற மியற்றுதல்
கிளர்ந்துபுல வாணர்வறுமை
விடுத்தலை மதித்துநிதி நல்குமவர்
மல்குபதி வேதவனமே. 8

7. வஞ்சக மனத்து - வஞ்சகம் பொருந்திய மனத்தையுடைய. அவுணர் - அசுரர்களின். வல் அரணம் - வலிய (மூன்று) மதில்களையும். அம் சகம் - அழகிய உலகில். அவித்த - ஒழித்த, அமரர்க்கு அமரன் - தேவ தேவனுகிய. ஆதி பெருமானது - முழுமுதற் கடவுளாகிய சிவபெரு மானது. இடம் ஆம். கிஞ்சுக இதழ் - முள் முருக்கம் பூவையொத்த உதடுகளில். கனிகள் ஊறிய - இனிமையின் ஊற்றென்னும் படியான (சொற்களைப் பேசும்). செவ்வாயவர் - சிவந்த வாயையுடைய பெண்கள். பாடல் பயில - பாட. விஞ்சு அகம் - (வியப்பு) மிக்க மனத்தையுடைய. இயக்கர் - இயக்ஷர்களும். முனிவக்கணம் (துறந்த) முனிவர்கூட்டமும். (அப்பாடலைக் கேட்க) நிறைந்து மிடை - நிறைந்து நெருங்குகின்ற. (வேதவனமே) முனிவர் + கணம் - முனிவக்கணம் என்றுயிற்று. வாணியத் தெரு. என்ற தொடரிற்போல, "சிலவிகாரமாம் உயர்திணை" என்ற நன்னூல் விதிப்படி.

8. முடி - கிரீடம். (தலைகள் பத்து உடைய) முருடு உரு - முரட்டுத் தன்மைகாட்டும் உருவையுடைய. (அரக்கனை விரலால், நெருக்கி அடித்து). முன் - அக்காலத்தில். அடித்தலம் - பாதாளத்தில். வைத்து - இருத்தி. அலமர - கலங்கும்படி. கருணை வைத்தவன் - மறக்கருணை புரிந்தருளிய சிவபெருமானது. இடம் - வாழும் இடம் (யாதெனில்) பல

வாசமலர் மேவியுறை வானுநெடு
மாலுமறி யாதநெறியைக்
கூசுதல்செ யாதவம ணாதரொடு
தேரர்குறு காதவரனூர்
காசுமணி வார்கனக நீடுகட
லோடுதிரை வார்துவலைமேல்
வீசுவலை வாணரவை வாரிவிலை
பேசுமெழில் வேதவனமே. 9

10

மந்தமுர வங்கடல் வளங்கெழுவு
காழிபதி மன்னுகவுணி
வெந்தபொடி நீறணியும் வேதவன
மேவுசிவ னின்னருளினால்

துயர் - (அதனால் விளையும் பலவிததுன்பங்களையும். கெடுத்தலை நினைத்து அறம் இயற்றுதலில்) கிளர்ந்து - முயற்சியுடையவர்களாய். புலவாணர் - புலமையால் வாழ்பவர்களாகிய புலவர்களினின்றும். வறுமை-வறுமையை. விடுத்தலை மதித்து - நீக்குதலை அழுத்தமாகக் கருதி. நிதி - திரவியங்களை. நல்குமவர் - கொடுக்கும் கொடையாளிகள். மல்குபதி - நிறைந்த தலமாம்.

9. மலர் மேவி உறைவானும் - தாமரை மலரில் தங்கி வசிப்பவனாகிய பிரமனும். நெடுமாலும் - திருமாலும். அறியாத - அறியாததாகிய. நெறி - சிவன் பெருமையை. கூசுதல் செயாத - பழிப்பதற்குக் கூசாத, அமண் ஆதரோடு - பயனிலிகளாகிய சமணர்களுடன். தேரர் - பவுத்தர்களும். குறுகாத - அடையாத. அரன் - அச்சிவபெருமானது. (ஊர்) நீடு - நெடிய. கடல் - கடலில். ஓடு - ஓடிவருகின்ற. திரை - அலைகள். வார் - சொரிகின்ற. துவலைமேல் - திவலைகளின்மேல், (வலையைவீசுகின்ற) வலைவாணர் - செம்படவர்கள். காசு - இரத்தினங்களையும். மணி - முத்துக்களையும். வார்கனகம் - மிக்க பொன்னினையும். (வாரி விலை பேசும்) எழில் - அழகிய (வேதவனம்.)

10. .... ... ... ...

11. மந்தம் முரவம் - மந்தமான ஓசையையுடைய. கடல் வளம் கெழுவு - கடலினால் பெறத்தகும் வளங்கள் பொருந்திய. காழிபதி-சீகாழி

சந்தமிவை தண்டமிழி னின்னிசை
 யெனப்பரவு பாடலுலகில்
பந்தனுரை கொண்டுமொழி வார்கள்பயில்
 வார்களுயர் வானுலகமே. 11

திருச்சிற்றம்பலம்

யென்னும் தலத்தில். மன்னு - நிலைபெற்ற, கவுணி - கவுணிய கோத்திரத்தினர். ('கவுணிபந்தன் என இயைக்க' இருபெயரொட்டுப் பண்புத்தொகை.) (வெந்த) பொடி நீறு - பொடியாகிய நீறு (நீறணியும் சிவன் என்க). சந்தம் இவை-சந்த இசையோடுகூடிய இப்பாடல்கள். தண்தமிழின் இன்னிசை - குளிர்ந்த தமிழ் மொழியின் இனிய இசைப்பாடல்கள். என- என்று. பரவு பாடல் - துதித்துப் பாடிய பாடல். உயர் வான் உலகம் - சிவலோகத்தில். பயில்வர் - வாழ்வார்கள்.

நைவார் நலனழிவார் நாணோடு பூணிழப்பார்
மெய்வாடு வார்வெகுள்வார் வெய்துயிர்ப்பார்—தையலார்
பூந்துகிலைப் பூமாலை என்றணிவார் பூவிணைமுன்
சாந்த மெனமெய்யில் தைவருவார்—வாய்ந்த
கிளியென்று பாவைக்குச் சொற்பயில்வார் பந்தை
ஒளிமே கலையென் றுடுப்பார்—அளிமேவு
பூங்குழலார் மையலாய்க் கைதொழமுன் போதந்தான்
ஓங்கொலிசேர் வீதி யுலா.

—ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.

# 77 திருமாணிகுழி

## 335 பதிகவரலாறு

தில்லைமூதூரும் திருத்தினை நகரும் பாடித் திருமாணிகுழியினை அணைந்து ஏத்தியது இத்திருப்பதிகம்.

திருவிராகம். பண் – சாதாரி

திருச்சிற்றம்பலம்

பொன்னியல் பொருப்பரையன் மங்கையொரு
பங்கர்புன றங்குசடைமேல்
வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல்
வித்தகர் மகிழ்ந்துறைவிடம்
கன்னியிள வாளைகுதி கொள்ளவிள
வள்ளைபட ரள்ளல்வயல்வாய்
மன்னியிள மேதிகள் படிந்துமனை
சேருதவி மாணிகுழியே. 1

1. பொன் இயல் - பொன்மயமான. பொருப்பு அரையன் - இமய மலை அரசனது. மங்கை ஒரு பங்கர் - புதல்வியாராகிய அம்பிகையை ஒரு பாகத்தில் உடையவர். புனல் தங்கு சடைமேல் - கங்கை நீர் தங்கும் சடையின்மேல். வன்னியொடு - வன்னிப் பத்திரத்துடன், மத்தம் மலர் - பொன்னூமத்தைப்பூவை. வைத்த - அணிந்த. விறல் வித்தகர் - வலிய சமர்த்தராகிய சிவபெருமான். (மகிழ்ந்து) உறைவு இடம் - தங்கும் இடமாவது. இளவள்ளை படர் அள்ளல் வயல்வாய் - இளம் வள்ளைக்கொடிகள் (வரப்பின்மேல்) படர்ந்த சேற்றையுடைய வயலில். கன்னி இளவாளை - மிக்க இளமை பொருந்திய வாளைமீன்கள். குதிகொள்ள - குதித்துத் தாவும்படி. இளமேதிகள் - இள எருமைகள். மன்னி - தங்கி. படிந்து - மூழ்கி. மனைசேர் - வீட்டிற்குச் சேரும். உதவி மாணிகுழி - திருமாணி குழியென்னும் பதியேயாம். இத்தலம் 'உதவி' என்னும் அடைமொழியோடு இணைத்தே கூறப்படுகிறதன் காரணம் விசாரித்து அறியத்தக்கது.

சோதிமிகு நீறதுமெய் பூசியொரு
தோலுடை புனைந்துதெருவே
மாதர்மனை தோறுமிசை பாடிவசி
பேசுமர னார்மகிழ்விடம்
தாதுமலி தாமரை மணங்கமழ
வண்டுமுர றண்பழனமிக்
கோதமலி வேலைபுடை சூழுலகி
னீடுதவி மாணிகுழியே. 2

அம்பனைய கண்ணுமை மடந்தையவ
ளஞ்சிவெரு வச்சினமுடைக்
கம்பமத யானையுரி செய்தவர
னார்கருதி மேயவிடமாம்
வம்புமலி சோலைபுடை சூழமணி
மாடமது நீடி யழகார்
உம்பரவர் கோனகர மென்னமிக
மன்னுதவி மாணிகுழியே. 3

2. சோதி மிகு - ஒளி மிகுந்த. நீறு அது - திருநீற்றை. மெய்பூசி - திருமேனியில் உத்தூளித்து. ஒரு தோல் உடை புனைந்து - தோலை ஆடையாக அணிந்து, தெருவே - தெருக்களில். மாதர்மனைதோறும் - பெண்டிர் உள்ள ஒவ்வொரு வீட்டிலும். இசை பாடி - இசைப் பாடல் களைப் பாடி. வசி - வயப்படுத்தும் பேச்சுக்களை (பேசும். அரனார் மகிழ்வு இடமாவது) தாது மலி-மகரந்தப் பொடிகள் மிக்க, (தாமரை). மணம் கமழ- மணம் வீச. வண்டு முரல் - வண்டுகள் ஒலிக்கும். பழனம் மிக்கு - வயல்கள் மிக்கு. ஓதம் மலி - ஓசை மிகுந்த. வேலை புடை சூழ் - கடல் சூழ்ந்த. உலகில் - இவ்வுலகில். உதவி மாணிகுழியே - திருமாணி குழியேயாம்.

3. அம்பு அனைய - அம்புபோன்ற. கண் உமை மடந்தை அவள், கண்களையுடைய உமாதேவியார். அஞ்சி வெருவ - மிகவும் அஞ்ச. சினம் உடை - கோபத்தையுடைய. கம்பம் - தூணிலே கட்டக்கூடிய. யானை உரி செய்த - யானையை உரித்தருளிய. அரனார் - சிவபெருமான். கருதி - எண்ணி. மேய - மேவிய; இடமாம். வம்புமலி - வாசனைமிக்க. (சோலை) புடைசூழ - சுற்ற. மணி - இரத்தினங்கள் பதித்த. மாடம் - வீடுகளின் வரிசை. நீடி - உயர்ந்து. அழகு ஆர் - அழகு பொருந்திய. உம்பரவர் கோன்-தேவர்க்கு அரசனாகிய இந்திரனது. நகரம் என்ன -நகரமாகிய அமரா வதி என்னும்படி. மிக மன்னு - நன்கு நிலைபெற்ற (உதவிமாணி குழியே).

நித்தநிய மத்தொழில னாகிநெடு
மால்குறள னாகிமிகவும்
சித்தம தொருக்கிவழி பாடுசெய
நின்றசிவ லோகனிடமாம்
கொத்தலர் மலர்ப்பொழிலி னீடுகுல
மஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுக ளுலாவியிசை
பாடுதவி மாணிகுழியே. 4

மாசின்மதி சூடுசடை மாமுடியர்
வல்லசுரர் தொன்னகரமுன்
நாசமது செய்துநல வானவர்க
ளுக்கருள்செய் நம்பனிடமாம்
வாசமலி மென்குழன் மடந்தையர்கண்
மாளிகையின் மன்னியழகார்
ஊசன்மிசை யேறியினி தாகவிசை
பாடுதவி மாணிகுழியே. 5

4. நித்தம் - நாடோறும். நியமத் தொழிலனாகி - அநுட்டானம் முதலிய நியமமாய்ப் பூண்டவனாய். நெடுமால் - திருமால். குறளன் ஆகி - வாமன வடிவங்கொண்டு. மிகவும் சித்தம் (அது) ஒருக்கி - மனத்தை நன்கு ஒருமுகப்படுத்தி. (வழிபாடு செய்ய) நின்ற - இருந்த. சிவலோகன்-சிவலோக நாயகனாகிய சிவபெருமான் (இடமாம்.) கொத்து அலர் - கொத்துக்களிலே மலர்ந்த. மலர்ப்பொழிலில் - மலர்களையுடைய சோலையில். நீடுகுல மஞ்ஞை - சிறந்த மயில்கள். நடமாடல் அது - நடித்தலை. கண்டு - பார்த்து. வரி : வண்டுகள் கீற்றுக்களையுடைய வண்டுகள் உலாவி - சுற்றி. ஒத்த இசைபாடு - ஒத்த இசைகளைப் பாடுகின்ற (உதவிமாணி குழி).

5. மாசுஇல்மதி - குற்றமில்லாத சந்திரனை. சூடு - அணிந்த சடை மாமுடியர் - பெரிய சடாமுடியையுடையவர். வல் அசுரர் - வலிய அசுரர்களின். தொல்நகரம் - பழைய திரிபுரங்களை. முன் - அக்காலத்தில் நாசம் (அது) செய்து - அழித்து. (நல்வானவர்களுக்கு அருள் செய்) நம்பன் இடமாம் - சிவபெருமானின் இடமாம். வாசமலி - மணம் மிகுந்த மென்குழல் மடந்தையர்கள் - மெல்லிய கூந்தலையுடைய மாதர்கள், மாளிகையின் மன்னி - மாளிகைகளில் தங்கி, அழகுஆர் - அழகு பொருந்திய. ஊசல்மிசை ஏறி - ஊசலின்மேல் (ஏறி உகைத்து). இனிதாக [illegible] புடையதாக ஊசற்பாட்டைப் பாடி

மந்தமலர் கொண்டுவழி பாடுசெயு
மாணியுயிர் வவ்வமனமாய்
வந்தவொரு காலனுயிர் மாளவுதை
செய்தமணி கண்டனிடமாம்
சந்திெனெடு காரகில் சுமந்துதட
மாமலர்கள் கொண்டுகெடிலம்
உந்துபுனல் வந்துவயல் பாயுமண
மாருதவி மாணிகுழியே. 6

எண்பெரிய வானவர்க ணின்றுதுதி
செய்யவிறை யேகருணையாய்
உண்பரிய நஞ்சுதனை யுண்டுலக
முய்யவரு ளுத்தமனிடம்
பண்பயிலும் வண்டுபல கெண்டிமது
வுண்டுநிறை பைம்பொழிலின்வாய்
ஒண்பலவி னின்கனி சொரிந்துமண
நாறுதவி மாணிகுழியே. 7

6. மந்தமலர்கொண்டு - நன்கு மலராத மலர்களைக் கொண்டு வழிபாடுசெய்யும் - பூசனைபுரிந்த. மாணி - மார்க்கண்டேயரின். உயிர் வவ்வ மனமாய் - உயிரைக் கவரும் கருத்தோடு(வந்த ஒரு காலன் உயிர் மாள) உதைசெய்த - உதைத்த. மணிகண்டன் - நீலகண்டனாகிய சிவ பெருமானின் (இடம்ஆம்.) சந்திேனெடு - சந்தனமரங்களோடு. கார் அகில்- கரிய அகிற் கட்டைகளையும் (சுமந்து மலையினின்றும் இறங்கி) தடம் மாமலர்கள் கொண்டு - தடாகங்களிற் பூத்த சிறந்த மலர்களையும் கொணர்ந்து. கெடிலம் உந்துபுனல்-திருக்கெடில நதியின் மோதும்தண்ணீர் வயல்பாயும் - வயலிற் பாய்வதனால் எய்திய. மணம்ஆர் - வாசனை பரவு கின்ற (உதவிமாணிகுழி.)

7. எண் பெரிய - மிக்க செருக்கையுடைய. வானவர்கள் - தேவர் கள் (நின்று துதிசெய்ய,) இறையே - சற்று. கருணை ஆய் - கிருபை உடையவராகி. உண்பு அரிய - எவரும் உண்ணுதற்கு அரிய (நஞ்சுதனை உண்டு). உலகு உய்ய அருள் உத்தமனிடம் - உலகம் உய்யும்படி அருள் புரிந்த உத்தமனாகிய சிவபெருமானது இடமாவது. பண்பயிலும் - இசை யைப் பாடிக்கொண்டிருக்கும் (வண்டு.) பல-பல மலர்களையும். கெண்டி - கிளறி. மது உண்டு - தேனைக்குடிக்க. நிறை - வளம் நிறைந்த. பைம் பொழிலின் வாய் - பசிய சோலையினிடத்து. ஒண்பலவின் - சிறந்த பலா மரங்களின். இன்கனி - இனிய கனிகள். சொரிந்து - தேனைச்சொரிந்து. மணம் நாறு - மணங்கமழ்கின்ற (உதவிமாணிகுழியே.)

எண்ணமது வின்றியெழி லார்கைலை
மாமலை யெடுத்ததிறலார்
திண்ணிய வரக்கனை நெரித்தருள்
புரிந்தசிவ லோகனிடமாம்
பண்ணமரு மென்மொழியி னார்பணை
முலைப்பவள வாயழகதார்
ஒண்ணுதன் மடந்தையர் குடைந்துபுன
லாடுதவி மாணிகுழியே. 8

நேடுமய னோடுதிரு மாலுமுண
ராவகை நிமிர்ந்துமுடிமேல்
ஏடுலவு திங்கண்மத மத்தமித
ழிச்சடையெம் மீசனிடமாம்
மாடுலவு மல்லிகை குருந்துகொடி
மாதவி செருந்திகுரவி
னூடுலவு புன்னைவிரை தாதுமலி
சேருதவி மாணிகுழியே. 9

8. எண்ணம் அது இன்றி - முன் யோசனை சிறிதும் இல்லாமல் (துணிந்து) எழில்ஆர் - அழகு பொருந்திய. கைலை மாமலை - சிறந்த கைலாயமலையை. எடுத்த - எடுக்கத் தொடங்கிய. திண்ணிய-(இலேசில் அழிக்கமுடியாத) வலிமை வாய்ந்த. திறல் ஆர்-திறமையுடைய. அரக்கனை- இராவணனை. நெரித்து - அடர்த்து (பின் அருள்புரிந்த.) சிவலோகன் - சிவ லோகநாயகனாகிய சிவபெருமானது (இடம் ஆம்.) பண் அமரும் - இசை பொருந்திய. மென்மொழியின்- மெல்லெனப் பேசும் சொற்களையும். ஆர் - (அணிகலன்கள்) நிறைந்த. பணை-பருத்த. முலை-தனபாரங்களையும். பவளவாய் - பவளம்போன்ற வாயையும். அழகு (அது) ஆர் - அழகு பொருந்திய. ஒள் - ஒளிவாய்ந்த. நுதல்-நெற்றியையுமுடைய (மடந்தையர்). குடைந்து புனல் ஆடு - (கையால்) குடைந்து நீராடும், (உதவிமாணிகுழி.)

9. நேடும் - தேடும். அயனோடு - பிரமனுடன். (திருமாலும்) உணரா (த) வகை - உணராத விதம். நிமிர்ந்து - ("பாதாளம் ஏழினும் கீழ்...... பாதமலர், போதார்புனை முடியும் எல்லாப் பொருள் முடிவே" என்ன ஓங்கிய.) முடிமேல்-தலையில். ஏடு உலவு திங்கள்-(வெண்தாமரை) இதழ்போல் தவழ்கின்ற பிறைச்சந்திரனையும். மதம் - மதம் வீசுகின்ற. மத்தம் - பொன்னூமத்தையையும். இதழி - கொன்றை மாலையையும். சடை - சடையையும் உடைய, (எம் ஈசன் இடம் ஆம்.) மாடு - பக்கங் களிலே. உலவு - படர்கின்ற.

மொட்டையம ணாதர்முது தேரர்மதி
யில்லிகண் முயன்றனபடும்
முட்டைகண் மொழிந்தமொழி கொண்டருள்செய்
யாதமுதல் வன்றனிடமாம்
மட்டைமலி தாழையிள நீர்முதிய
வாழையில் விழுந்தவதரில்
ஒட்டமலி பூகநிரை தாறுதிர
வேறுதவி மாணிகுழியே. 10

உந்திவரு தண்கெடில மோடுபுனல்
சூழுதவி மாணிகுழிமேல்
அந்திமதி சூடியவெம் மானையடி
சேருமணி காழிநகரான்
சந்தநிறை தண்டமிழ் தெரிந்துணரும்
ஞானசம் பந்தனதுசொல்
முந்தியிசை செய்துமொழி வார்களுடை
யார்கணெடு வானநிலனே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. மொட்டை - மொட்டைத்தலையையுடைய. அமண் ஆதர்-சமணர்களாகிய அறிவிலிகளும். முது தேரர் - பேதைமையின் முதிர்ந்த பவுத்தர்களுமாகிய, மதி இல்லிகள் - புத்தியற்றவர்களும். முயன்றன படும் - முயன்று செய்த வினைகளே பயன்தரும் (அதற்குக் கர்த்தா வேண்டா என்று சொல்லும்) முட்டைகள் - உருட்டிய வழி உருளும் முட்டைபோல் தமக்கென ஓர் உறுதி இல்லாதஅவர்கள் மொழிந்த மொழி கொண்டு - சொன்ன சொற்களால், அருள் செய்யாத - அருள் புரியாத (முதல்வன் றனிடமாம்,) மட்டை மலி தாழை - மட்டைகளையுடைய தென்னைகளின். இளநீர் - இளநீர்கள். முதிய வாழையில் - முதிர்ந்த வாழையில். விழுந்த அதரில் - விழுந்தவழியே. ஓட்டமலி - வரிசையாகவுள்ள: பூக நிரை - கமுகின் சோலைகளின். தாறு உதிர - குலைகளில் உள்ள காய்கள் உதிரும் படியாக, ஏறு - எற்றித்தாக்கும் (உதவிமாணிகுழியே.)

11, உந்திவரு - பல பொருள்களை அடித்துக்கொண்டு வருகின்ற. தண் - குளிர்ச்சி பொருந்திய. கெடிலம் - கெடிலம் நதியின். ஓடுபுனல் - ஓடும் தண்ணீர். சூழ் - சூழ்ந்த. (உதவி மாணி குழிமேல்.) அந்திமதி சூடிய எம்மானை - அந்திக்காலத்தில் தோன்றும் பிறைச்சந்திரனை அணிந்த எமது தலைவனாகிய சிவபெருமானது. அடி - திருவடிகளை. சேரும்-இடைவிடாது தியானிக்கும். அணி - அழகிய. காழிநகரான்- சீகாழியில் அவதரித்தருளிய வரும். சந்தம் நிறை - சந்தம் நிறைந்த. தண் தமிழ் - இனிய தமிழை. தெரிந்து உணரும் - அறிந்து உணர்ந்த (ஞானசம்பந்தனது.) சொல் - சொற்களாகிய இப்பதிகத்தை. முந்தி-முற்பட. இசை செய்து-இசையைத் தொடங்கி. மொழிவார்கள் - பாடுவோர். நெடுவான நிலன் - எவற்றினும் உயர்ந்ததாகிய முத்தியுலகத்தை. உடையார் - உடைமையாகப் பெறுவர்.

# 78 திருவேதிகுடி

## 336 பதிகவரலாறு

"நீடுசண்பை நிறைபுகழ் வேதியர் வேதவேதியர் வேதி குடியினில் நாதர்கோயில் அணைந்து போற்றிப் பணிந்து எழுந்து ஓதிய வேதத்தின் ஓங்கு இசையுடைய எழுதுமா மறையாம் பதிகம் இது.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

நீறுவரி யாடரவொ டாமைமன
　　வென்புநிரை பூண்பரிடபம்
ஏறுவரி யாவரு மிறைஞ்சுகழ
　　லாதிய ரிருந்தவிடமாம்
தாறுவிரி பூகமலி வாழைவிரை
　　நாறவிணை வாளைமடுவில்
வேறுபிரி யாதுவிளை யாடவள
　　மாரும்வயல் வேதிகுடியே. 1

---

1. நீறு - திருநீற்றையும். வரி - நெடிய. ஆடு அரவொடு - ஆடும் பாம்புடனே. ஆமை - ஆமையோட்டையும். மனவு - அக்குப்பாசியையும். என்புநிரை - எலும்பு மாலையையும். பூண்பர் - அணிவார். இடபம் ஏறுவர் - காளையை ஏறி நடத்துவார். யாவரும் - எவரும். இறைஞ்சு - வணங்கத்தக்க. கழல் - திருவடிகளையுடைய, ஆதியர் - முதல்வர் ஆகிய சிவபெருமான் (இருந்த இடம் ஆம்.) தாறு விரி - பாளைகள் விரிந்த. பூகம் - கமுகஞ்சோலைகளிலும், (பழங்கள் கனிந்த) மலிவாழை - அடர்ந்த வாழைத் தோட்டங்களிலும். விரை நாற - வாசனை வீசவும். மடுவில் - மடுக்களில். இணைவாளை - ஆணும் பெண்ணுமான வாளைமீன்இணைகள். வேறு பிரியாது விளையாட - வேறாகப் பிரியாமல் விளையாடவும். வயல் வளம் ஆரும் - வயல்களில் வளங்கள் மிகுந்தும் உள்ள. வேதிகுடி - திருவேதிகுடியே. ஆமை என்ற சொல், ஆமை யோட்டைக் குறிப்பது; முதலாகு பெயர். மனவு - அக்குப்பாசி, வேட்டுவக் கோலம் தாங்கிய பொழுது அணிந்தது. நிரை - வரிசை; இங்கு மாலையைக் குறித்தது. அயன் அரி முதலிய தேவர்கள் செருக்குற்ற வண்ணம் பலவூழிகளிலும் இறந்த அவர்தம் எலும்பை மாலையாக அணிந்தனர். கந்தபுராணம் ததீசியுத்தரப் படலத்தில் (12) காண்க. ஏறுவர் + யாவரும் = ஏறுவரி யாவரும். விரைநாற என்பதற்கேற்கப் 'பழங்கள் கனிந்த' என அடை வருவித்துரைக்கப்பட்டது.

சொற்பிரிவி லாதமறை பாடிநட
மாடுவர்தொ லானையுரிவை
மற்புரி புயத்தினிது மேவுவரெந்
நாளும்வளர் வானவர்தொழத்
துற்பரிய நஞ்சமுத மாகமு
னயின்றவ ரியன்றதொகுசீர்
வெற்பரையன் மங்கையொரு பங்கர்நக
ரென்பர்திரு வேதிகுடியே. 2

போழுமதி பூணரவு கொன்றைமலர்
துன்றுசடை வென்றிபுகமேல்
வாழுநதி தாழுமரு ளாளரிரு
ளார்மிடறர் மாதரிமையோர்
சூழுமிர வாளர்திரு மார்பில்விரி
நூலர்வரி தோலருடைமேல்
வேழவுரி போர்வையினர் மேவுபதி
யென்பர்திரு வேதிகுடியே. 3

2. சொல் பிரிவு இலாத - இசையோடு சொற்பிரியாத. மறை - வேத கானத்தை. பாடி - பாடிக்கொண்டு. நடம்ஆடுவர் - நடனம் ஆடுவர். தொல் - முதிர்ந்த. ஆனை - யானையின். உரிவை - தோலை. மல் புரி புயத்து - மல்ல யுத்தம் புரியவல்ல தோளில். (எந்நாளும்) இனிதுமேவுவர் - இனியதாக அணிவார். வளர் வானவர் தொழ - அச்சம் மிகுந்த தேவர்கள் துதிக்க. துற்பு அரிய-உண்ணுதற்கரிய, நஞ்சு அமுதமாக முன் அயின்றவர்- விடத்தை அமுதமாக முற்காலத்தில் உண்டருளியவர். தொகுசீர் இயன்ற- பலவாற்றானும் தொக்க புகழ் பொருந்திய. வெற்பு அரையன் மங்கை - மலை அரையன் மகளாகிய உமாதேவியாரை. ஒரு பங்கர் - ஒரு பாகத்தில் கொண்டருளியவராகிய சிவபெருமானது, (நகர் திருவேதிகுடியே) வேத புருடனுக்குச் சந்தஸ் (இசை) பாதமாகக் கூறப்படுவதால் பாதமின்றி நடைபெறுமை குறித்தற்குச் சொற் பிரியாத என்பதற்குச் செயப்படு பொருள் வருவித்துரைக்கப்பட்டது. மற்போர் அருச்சுனனுடன் நடந்தது. தங்களுக்கு உயிர் அளித்தமை கருதி வானவர் எந்நாளும் தொழ நஞ்சு அயின்றனரென வரலால் தொழ என்பது காரியப் பொருட்டு. துற்று - உண்டி. துற்பு - உண்ணல். துன்(னுதல்)பு துற்பு என்றுகொண்டு. அண்டுதற்கரிய எனினும் ஆம். அயிலல் - உண்ணல்.

3. போழும் மதி - வட்டத்தைப் பிளந்தாலனைய பிறைச் சந்திரன். பூண் - சுற்றிய. அரவு - பாம்பு. (கொன்றை மலர் ஆகிய இவைகள்)

காடர்கரி காலர்கனல் கையரனன்
மெய்யருடல் செய்யர்செவியில்
தோடர்தெரி கீளர்சரி கோவணவ
ராவணவர் தொல்லைநகர்தான்
பாடலுடை யார்களடி யார்கண்மல
ரோடுபுனல் கொண்டுபணிவார்
வேடமொளி யானபொடி பூசியிசை
மேவுதிரு வேதிகுடியே. 4

துன்றுசடை - நெருங்கிய சடா மகுடத்தினின்றும். வென்றி புக - (பகிரதன் முயற்சிக்கு) வெற்றி உண்டாக. மேல் வாழும் நதி - அதன் மேல் தங்கிய கங்காநதியை. தாழும் - உலகிற் பாயச்செய்த (அருளாளர்) இருளார் மிடறர் - கருமை பொருந்திய கண்டத்தை யுடையவர். மாதர் இமையோர் - மாதர்களோடு கூடிய தேவர்கள். சூழும் இரவாளர் - சுற்றி நின்று தங்கள் குறைகளை வேண்டி இரக்கப்படுபவர். (திருமார்பில்) விரி நூலர் - ஒளி பரவிய பூணூலை யுடையவர். வரி தோலர் - புலித் தோலுடையை யுடையவர். மேல் - உடம்பின்மீது. வேழ உரி போர்வையினர் - யானைத் தோலை போர்வையாகக்கொண்டருளியவர் (ஆகிய சிவபெருமான்) மேவு பதி - தங்கும் தலம். வேதிகுடி என்பர் - திருவேதிகுடி என்பர்.

4. காடர் - மயானத்திலிருப்பவர் "கோயில் சுடுகாடு" என்பது திருவாசகம். கரிகாலர் - யானைக்கு யமன் ஆனவர். கனல் கையர் - நெருப்பைக் கையில்ஏந்தியவர். அனல் மெய்யர் - நெருப்பே உடம்பாக உடையவர். உடல் செய்யர் - அதனால் மேனி செந்நிறம் உடையவர். செவியில் தோடர் - காதில் தோட்டையணிந்தவர். தெரிகீளர் - தெரிந் தெடுத்த கீளையுடையவர். சரிகோவணர்-சரிந்த கொபீனத்தை அணிந்தவர். ஆவணவர் - பசுவேறிவரும் கோலத்தையுடையவர் (ஆ - பசு; வண்ணம்- கோலம்) தொல்லைநகர்தான் - சிவபெருமானின் பழமையான தலம் ஆகிய. பாடல் உடையார்கள் அடியார்கள் - தோத்திரம் பாடுதலை உடையவர் களாகிய அடியார்கள். மலரோடு புனல் கொண்டு - மலரையும் தண்ணீ ரையும் கொண்டு. பணிவார் - வணங்குபவர்களாய். வேடம் - வேடத் திற்குரியதாகிய. ஒளியான - பிரகாசம் பொருந்திய. பொடிபூசி - திரு நீற்றை உத்தூளித்து. இசைமேவு - கீர்த்தியடைகின்ற (திருவேதிகுடியே)

சொக்கர்துணை மிக்கவெயி லுக்கற
முனிந்துதொழு மூவர்மகிழத்
தக்கவருள் பக்கமுற வைத்தவர
ஞரினிது தங்குநகர்தான்
கொக்கரவ முற்றபொழில் வெற்றிநிழல்
பற்றிவரி வண்டிசைகுலாம்
மிக்கமரர் மெச்சியினி தச்சமிடர்
போகநல்கு வேதிகுடியே. 5

செய்யதிரு மேனிமிசை வெண்பொடி
யணிந்துகரு மானுரிவைபோர்த்
தையமிடு மென்றுமட மங்கையொ
டகந்திரியு மண்ணலிடமாம்
வையம்விலை மாறிடினு மேறுபுகழ்
மிக்கிழி விலாதவகையார்
வெய்யமொழி தண்புலவ ருக்குரைசெ
யாதவவர் வேதிகுடியே. 6

5. சொக்கர் - பேரழகு உடையவரும். துணைமிக்க - தங்களுக்குத் தாங்கள் உதவி செய்துகொள்வதில் மிக்க. எயில் - மதிலிலிருந்த அசுரர். உக்கு - பொடியாகி. அற - ஒழிய. முனிந்து - கோபித்து. தொழும்மூவர்- அவர்களுக்குள் தன்னை வணங்கிய மூவர். மகிழ - மகிழும்படியாக, பக்கம் உற - தன் பக்கத்திலே யிருக்கும்படி. தக்க அருள்வைத்த - சிறந்த கருணைசெய்த (அரனுர்) இனிது - நன்கு, (தங்கும்) நகர்தான் - தலமாவது. அரவம் உற்ற - விளையாடும் மகளிரின் ஆரவாரம் பொருந்திய. கொக்கு பொழில் - மாமரச்சோலைகளில். நிழல் - மகளிரின்மேனியின் ஒளியானது வெற்றிபற்றி - மாந்தளிர்களை வென்ற வெற்றியைப் பற்றி. வரிவண்டு - கீற்றுக்களையுடைய வண்டுகள். இசைகுலாம் - பாராட்டி இசைபாடிக் கொண்டாடும் (திருவேதிகுடி.) மிக்க அமரர் - உடலின் ஒளியால் மிக்க தேவர்கள். மெச்சி - அம்மகளிர்க்கு மெச்சிப் (பாராட்டும் திரு வேதிகுடி) அச்சம் இடர்போக (தன்னையடைந்தவர்களுக்கு) அச்சமும் துன்பமும் நீங்க. இனிது - நன்மையை - நல்கு -அளிக்கும். (திருவேதிகுடி) பாராட்டும் என ஒருசொல் வருவித்துரைக்க.

6. செய்ய திருமேனி மிசை - சிவந்த திருமேனியில். வெண்பொடி அணிந்து-வெண்மையான திருநீற்றையணிந்து. கரு மான் உரிவையைப் போர்த்து - கரிய மிருகமாகிய யானையின் தோலைப் போர்த்து. ஐயம்

உன்னியிரு போதுமடி பேணுமடி
யார்தமிட ரொல்கவருளித்
துன்னியொரு நால்வருட னானிழ
லிருந்ததுணை வன்றனிடமாம்
கன்னியரொ டாடவர்கண் மாமணம்
விரும்பியரு மங்கலமிக
மின்னியலு நுண்ணிடைநன் மங்கைய
ரியற்றுபதி வேதிகுடியே. 7

உரக்கரநெ ருப்பெழநெருக்கிவரை
பற்றியவொ ருத்தன்முடிதோள்
அரக்கனை யடர்த்தவனி சைக்கினிது
நல்கியரு ளெங்கணனிடம்

இடும் என்று - பிச்சை இடுங்கள் என்று. மடமங்கையொடு - இளமை பொருந்திய உமாதேவியாரோடு. அகம் திரியும் - வீடுவீடாகத் திரிகின்ற, அண்ணல் - தலைவனது (இடமாம்). வையம் - பூமி. விலை மாறிடினும் - பஞ்சத்தினால் பண்டங்களின் விலை மாறினாலும். ஏறுபுகழ் - முன்பே மிகுந்த கீர்த்தி. மிக்கு - மேலும் மிகுந்து. இழிவிலாத - குறையாத, வகையார் - பண்பாடு உடையவர்களும். தண்புலவருக்கு - இனிய புலவர்களுக்குக் (கொடை தரும்போது). வெய்ய மொழி - வன்சொற்களை. உரைசெய்யாத - சொல்லாத. அவர் - அத்தகையார்களுமாகிய மாந்தர் (வாழும்). வேதிகுடி - திருவேதிகுடியாம்.

7. இருபோதும் - பகல் இரவு என்ற இருவேளைகளிலும். உன்னி - தியானித்து. அடிபேணும் - தமது திருவடியைப் போற்றும். அடியார் தம் இடர் - அடியார்களுடைய 'துன்பங்கள். ஒல்க - ஒழிய. அருளி - அருள் செய்து. துன்னிய - அடைந்த. ஒரு நால்வருடன் - சனகர் முதலிய நால்வரோடு. ஆல் நிழல் இருந்த - கல்லாலின் நிழலில் இருந்து உபதேசித்த. துணைவன்தன் - அனைத்துலகத்திற்கும் பற்றுக்கோடாய் உள்ள சிவபெருமானது (இடமாம்), கன்னியரோடு ஆடவர்கள் - கன்னிகைகளுடன் ஆண்கள், (புரியும்) மாமணம் - சிறந்த மணத்தை, விரும்பி - நடத்துவதை விரும்பி. அரும் - வேறெங்கும் காணற்கு அரிய மங்கலம்- திருமணத்திற்குரிய மங்கலச்சடங்குகளை. மிக-மிக்க சிறப்புற, (மங்கையர் இயற்றுபதி) மின் இயலும் - மின்னலைப்போன்ற, நுண்ணிடை - சிறிய இடையையுடைய. நல் மங்கையர்-சடங்கியற்றும் தகுதிவாய்ந்த பெண்டிர்.

8 வரை - கைலை மலையை. பற்றிய - பேர்த்தெடுக்கத் தொடங்கிய ஒருத்தன் அரக்கனை - ஒரு அரக்கனாகிய இராவணனது. முடிதோள் தலையையும் தோளையும், உரம் கரம் - நெஞ்சிலும் கைகளிலும். நெருப்பு

முருக்கிதழ் மடக்கொடி மடந்தையரு
மாடவரு மொய்த்த கலவை
விரைக்குழன் மிகக்கமழ விண்ணிசை
யுலாவுதிரு வேதிகுடியே. 8

பூவின்மிசை யந்தணனொ டாழிபொலி
யங்கையனு நேடவெரியாய்த்
தேவுமிவ ரல்லரினி யாவரென
நின்றுதிகழ் கின்றவரிடம்
பாவலர்க ளோசையியல் கேள்விய
தருதகொடை யாளர்பயில்வாம்
மேவரிய செல்வநெடு மாடம்வளர்
வீதிநிகழ் வேதிகுடியே. 9

எழ - நெருப்புக்கக்கும்படி. நெருக்கி அடர்த்து - அழுத்த மிதித்து, பின் அவன்) இசைக்கு - இசைப்பாடலுக்கு. இனிது நல்கியருள் - (வாளும்- வாழ்நாளும்) மகிழக்கொடுத்தருளிய. அங்கணன் - சிவபெருமானின் (இடம்,) முருக்குஇதழ் - கல்யாண முருங்கையொத்த அதரத்தை யுடைய. மடக்கொடி - இளங்கொடிபோன்ற. மடந்தையரும் - பெண் களும். ஆடவரும் - ஆண்களும். மொய்த்த - நிறையப் பூசிய, கலவை - கலவைச் சந்தனத்தின் விரை - வாசனையும் குழல் - மாதர் கூந்தலின். விரை - வாசனையும். மிகக் கமழ - மிகவும் மணம் வீச, (அது) விண் - தேவருலகில். இசை உலாவு - புகழ்பெற சுற்றிலும் கமழும் திரு வேதிகுடியே.

9. பூவின்மிசை - தாமரை மலரில் வசிக்கும் அந்தணனொடு - பிரமனுடன். ஆழி பொலி - சச்கராயுதம் விளங்கும். அங்கையனும் - அகங்கையை யுடையவனாகிய திருமாலும். நேட - தேட. எரியாய் - தீப்பிழம்பாகி, (அவ்விருவரையும் பார்த்தவர்கள்) இவர் - இப் பிரம விட்டுணுக்கள். தேவர் அல்லர் - கடவுளர் ஆகார். (என்றால்,) இனி, யாவர்? - கடவுளாவார் யாவர்? (சிவபெருமானேதான்.) என - என்று கூறும்படி. (நின்று,) திகழ்கின்றவர்-விளங்குகின்றவராகிய சிவபெருமானது (இடம்.) பாவலர்கள் - புலவர்களின். ஓசை இயல் - ஓசை யினிமை யுடைய இயற்றமிழ் நூற்பொருளை. கேள்வி (அது), கேட்டறிதல். அருத - நீங்காத (கொடையாளர்) பயில்வு ஆம் - வாழ்வதாகிய (வேதிகுடி). மேவு அரிய - வேறெங்கும் தங்குதல் இல்லாத. செல்வம் - செல்வத்தை யுடைய. நெடுமாடம் வளர் - நெடிய மாடங்கள் பெருகும். வீதிநிகழ் - வீதிகள் பொருந்திய, (வேதிகுடியே.)

வஞ்சமணர் தேரர்மதி கேடர்த
மனத்தறிவி லாதவர்மொழி
தஞ்சமென வென்றுமுண ராதவடி
யார்கருது சைவனிடமாம்
அஞ்சுபுலன் வென்றறு வகைப்பொரு
டெரிந்தெழு விசைக்கிளவியால்
வெஞ்சின மொழித்தவர்கண் மேவிநிகழ்
கின்றதிரு வேதிகுடியே. 10

கந்தமலி தண்பொழினன் மாடமிடை
காழிவளர் ஞானமுணர்சம்
பந்தன்மலி செந்தமிழின் மாலைகொடு
வேதிகுடி யாதி கழலே
சிந்தைசெய வல்லவர்க ணல்லவர்க
ளென்னநிகழ் வெய்தியிமையோர்
அந்தவுல கெய்தியர சாளுமது
வேசரத மாணைநமதே. 11

திருச்சிற்றம்பலம்

10. வஞ்ச அமணர் - வஞ்சனையை யுடைய அமணர்களும். தேரர் - பவுத்தர்களுமாகிய. மதிகேடர் - கெட்ட மதியை யுடையவர்கள், (தம் மனத்து அறிவிலாதவர்) மொழி - சொற்களை. தஞ்சம் என - பற்றுக்கோடாகத் தக்கது என்று. என்றும் - எந்நாளிலும். உணராத - நினையாத (அடியார்.) கருது - தியானிக்கின்ற. சைவன்-சிவபெருமானின் (இடம் ஆம்.) அஞ்சுபுலன் வென்று - பஞ்சேந்திரங்களையும் வென்று. அறுவகைப் பொருள் தெரிந்து - அறுவகைச் சமய நூற்பொருள்களை ஆராய்ந்து. ஏழு இசைக் கிளவியால்- சப்த சுரங்களையுடைய இசைப் பாடல்களால் (வெம்சினம் ஒழித்தவர்கள்.) மேவி நிகழ்கின்ற - விரும்பி வாழநின்ற (வேதிகுடி.)

11. கந்தம் மலி - வாசனைமிகுந்த. தண்பொழில் - குளிர்ச்சி பொருந்திய சோலைகளும். நல் மாடம் - அழகிய மாடங்களும். மிடை - நெருங்கிய (காழி,) மலி - பொருட்செறிவை யுடைய (செந்தமிழ்.) ஆதி - முதல்வன். சரதம் -நிச்சயம்.

# 79 திருக்கோகரணம்

## 337 பதிகவரலாறு

திருக்காளத்திமலைத்தேனைப் போற்றிப் பருகி ஆர்ந்து பயிலும் நாளில், அருந்தமிழின் வழக்கு நிகழாத வடதிசை மேலும் குடக்கின்மேலும் உள்ள சிவதலங்களில் சென்று இசைபாடும் செய்கை போலப் பாடியருளிய வற்றுள் கூற்றுதைத்தார் மகிழ்ந்த இக்கோகரணமும் ஒன்று.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

என்றுமரி யானயல வர்க்கிய
 லிசைப்பொருள்க ளாகியெனதுள்
நன்றுமொளி யானொளிசி றந்தபொன்
 முடிக்கடவு ணண்ணுமிடமாம்
ஒன்றியம னத்தடியர் கூடியிமை
 யோர்பரவு நீடரவமார்
குன்றுகணெ ருங்கிவிரி தண்டலை
 மிடைந்துவளர் கோகரணமே. 1

பேதைமட மங்கையொரு பங்கிட
 மிகுத்திடப மேறியமரர்
வாதைபட வண்கடலெ ழுந்தவிட
 முண்டசிவன் வாழுமிடமாம்

1. அயலவர்க்கு - அடியார் அல்லாதவர்க்கு. என்றும் அரியான் - எப்பொழுதும் காண்டற்கு அரியவன். (என்றும்) - என் உள்ளத்தில். இயல் இசைபொருள்களாகி - இயற்றமிழ் இசைத்தமிழ் நூல்களின் பயனாகி. நன்றும் ஒளியான் - சிறிதும் ஒளியாமல் நன்கு விளங்குகின்ற வன். ஒளிதந்த பொன்முடிக் கடவுள் - ஒளிபொருந்திய பொன்மயமான சடாமுடியையுடைய சிவபெருமான், நண்ணும் இடமாம். ஒன்றியமனத்து அடியர் - ஒருமுகப்பட்ட (கலையாத) மனத்தையுடைய அடியார்களோடு. இமையோர் பரவும் - தேவர்கள் துதிக்கின்ற. நீடு அரவமார் - பெரிய ஓசைமிக்க. குன்றுகள் நெருங்கி. தண்டலை - சோலைகள். வளர்-வளர்கின்ற கோகரணம்.

2. பேதை மடமங்கையொரு பங்கு இடப் - பேதமைக் குணத்தை யுடைய இளம் பெண்ணாகிய உமாதேவியாரை ஒரு பாகமாகிய

மாதரொடு மாடவர்கள் வந்தடி
யிறைஞ்சிநிறை மாமலர்கடூய்க்
கோதைவரி வண்டிசைகொள் கீதமுரல்
கின்றவளர் கோகரணமே. 2

முறைத்திறமு றப்பொருடெ ரிந்துமுனி
வர்க்கருளி யாலநிழல்வாய்
மறைத்திற மறத்தொகுதி கண்டுசம
யங்களைவ குத்தவனிடம்
துறைத்துறை மிகுத்தருவி தூமலர்
சுமந்துவரை யுந்திமதகைக்
குறைத்தறை யிடக்கரி புரிந்திடறு
சாரன்மலி கோகரணமே. 3

இடப்புறத்தில். மிகுத்து - தங்கி மகிழ்ச்சி மிகச் செய்து. இடபமேறி - இடபத்தின் மேல்ஏறி. அமரர் வாதைபட-தேவர்கள் வருத்தம் நீங்க. வண்கடல்- வளம்பொருந்திய கடலில், எழுந்தவிடம் உண்டசிவன் வாழும் இடமாம் மாதரொடும் - பெண்களோடும் ஆடவர்கள் வந்து. அடியிறைஞ்சி - பாதங்களை வணங்கி. மாமலர்களை தூய் - சிறந்த மலர்களைதூவி. (சாத்திய) கோதை திருமாலைகளில். வரிவண்டு - கீற்றுக்களையுடைய வண்டுகள். இசைகொள் கீதம் - இசையோடு பொருந்திய பாடல்களை. முரல்கின்ற - பாடுகின்ற. வளர்கோகரணம் - கீர்த்திமிகுந்த கோகரணம்.

3. ஆலம் நிழல்வாய் - கல்லாலின் நிழலில். முறைத்திறம் - உபதேசிக்கும் முறையின வகைப்படி. பொருள் தெரிந்து - பக்குவ நிலையை அறிந்து. முனிவர்க்கு - முனிவர்களுக்கு. அருளி - அருள் கூர்ந்து. மறைத்திறம் அறத்தொகுதி - வேதத்தின் பொருளாகிய சரியை முதலிய நாற்பாதப்பொருள்களையும். கண்டு உபதேசித்துச்சமயங்களை. வகுத்தவன். இடம் - உண்டாக்கியவரான சிவபெருமானது இடமாம். துறைத்துறை ஒவ்வொரு துறைகளிலும். அருவிநீர். தூமலர் - தூய்மையான மலர்களை சுமந்து கொண்டு. வரையுந்தி - மூங்கில்களை தள்ளி. மதகைக் குறைத்து - மதகுகளைச் சிதைத்து. கரி அறையிட - யானை பிளிற. புரிந்து - செய்து. இடறு - மோதும்படியான. சாரல் - சாரலையுடைய கோகரணம்.

இலைத்தலை மிகுத்தபடை யெண்கரம்
விளங்கவெரி வீசிமுடிமேல்
அலைத்தலை தொகுத்தபுனல் செஞ்சடையில்
வைத்தவழ கன்றனிடமாம்
மலைத்தலை வகுத்தமுழை தோறுமுழை
வாளரிகள் கேழல்களிறு
கொலைத்தலை மடப்பிடிகள் கூடிவிளை
யாடிநிகழ் கோகரணமே 4

தொடைத்தலை மலைத்திதழி துன்னிய
வெருக்கலரி வன்னிமுடியின்
சடைத்தலை மிலைச்சியத போதனெ
மாதிபயில் கின்றபதியாம்
படைத்தலை பிடித்துமற வாளரொடு
வேடர்கள் பயின்றுகுழுமிக்
குடைத்தலை நதிப்படிய நின்றுபழி
தீரநல்கு கோகரணமே. 5

4. இலைதலை மிகுத்தபடை - இலைபோன்ற நுனியையுடைய சூலம் முதலிய பலஆயுதங்களையேந்திய. எண்கரம் எட்டுக்கைகளிலும் (விளங்க) எரி விசி - நெருப்பை ஒளிவீச ஏந்தி. முடிமேல்-தலையில். அலைத்து அலை தொகுச்த - மிகுந்த அலைவீசுதலைக்கொண்ட. புனல் - கங்கைநீரை, செஞ் சடையில் வைத்த அழகன்தன் இடமாம். மலைத்தலை வகுத்த - மலையின் இடங்களில் அமைந்த முழைதோறும் - குகைகள்தோறும். உழை - மான்களும். வாள அரிகள் - ஒளிபொருந்திய சிங்கங்களும். கேழல் - பன்றிகளும். களிறு - யானைகளும். கொலைத்தலை - கொம்பாற் கொல்லு தலையுடைய.மடப்பிடி - இளம் பெண்யானைகளும். கூடி - விளையாடி. - வசிக் கின்ற கோகரணம்.

5. தொடைத்தலை மலைத்து - தலைமாலையை அணிந்து. முடியின் சடைத்தலை. இதழி - கொன்றைமலரையும். எருக்கு - எருக்க மலரையும். அலரி - அலரிமலரையும். வன்னி - வன்னிப்பத்திரங்களையும். மிலைச்சிய-அணிந்த, எம்ஆதி - எமது முதல்வராகிய சிவபெருமான். பயில் கின்ற இடமாம் - வாழ்கின்ற இடமாம். படைத்தலைபிடித்து - ஆயுதங்களின் அடிப்பாகங்களைப்பற்றி. மறம்-வெற்றி பொருந்திய வாளர்களொடு-வாளா யுதத்தையேந்திய வீரர்களுடனே. வேடர்கள் பயின்று. குழுமி - வேடர்கள் நண்புகொண்டு கூடி. அலைநதி - அலைகளையுடைய நதியில். குடைத்து -

நீறுதிரு மேனிமிசை யாடிநிறை
    வார்கழல் சிலம்பொலிசெய
ஏறுவிளை யாடவிசை கொண்டிடு
    பலிக்குவரு மீசனிடமாம்
ஆறுசம யங்களும்வி ரும்பியடி
    பேணியர னாகமமிகக்
கூறுமனம் வேறிரதி வந்தடியர்
    கம்பம்வரு கோகரணமே. 6

கல்லவட மொந்தைகுழ லுளமலி
    கொக்கரைய ரக்கரைமிசை
பல்லபட நாகம்விரி கோவணவ
    ராளுநக ரென்பரயலே
நல்லமட மாதரர னைமமு
    நவிற்றிய திருத்தமுழுகக்
கொல்லவிட நோயகல் தரப்புகல்கொ
    டுத்தருளு கோகரணமே 7

குடைந்து. படிய - முழுகி (வணங்க). நின்று - (அவர்க்கு எதிரில் தோன்றி) நின்று. பழி - பழிபாவம் முதலியவை. தீர - நீங்குமாறு. நல்கு - அருள் புரியும் கோகரணம். குடைத்து எதுகை நோக்கி வலித்தது.

6. திருமேனிமிசை, நீறு ஆடி - விபூதி பூசி. வார் கழல் சிலம்பு நிறை ஒலி செய - கச்சிறுக்கிய கழலும் சிலம்பும் நிறைந்த ஒலி செய்ய. ஏறு - இடபமானது. விளையாட விசைகொண்டு - விளையாடுவதைப் போற் செல்ல விசையாகச் செலுத்தி. இடுபலிக்கு வரும் - மாதர் இடும் பிச்சைக்கு வருகின்ற, ஈசன் இடமாம். ஆறு சமயங்களும் - ஆறுசமயத் தவர்களும், விரும்பி, அடிபேணி - திருவடியைக்கருதி. அரன் ஆகமம் மிகக்கூறு - சிவபெருமானது ஆகம நெறிகளைப் பயன் மிகும்படி சொல்லு கின்ற கோகரணம். (மனம்) வேறு இரதி வந்து - உலக இன்பத்தின் வேறான சிவானந்தம் விளைய. அடியர் - அடியார்கள். கம்பம் வரு - அவ்வானந்தம் மேலீட்டால் உடல் நடுக்கம் வரப்பெறுகின்ற கோகரணம் - திருக்கோகரணமே. ''ஆகம் விண்டுகம்பம் வந்து'' என்பது திருவாசகம்.

7. மலி - ஓசை மிகுந்த. கல்லவடம் மொந்தை குழல் தாளம் கொக்கரையர் - கல்லவடம் முதலாகவுள்ள இவ்வாத்தியங்களுக்கேற்ப நடிப்பவர். அக்கு அரைமிசை - அக்குப்பாசி அணிந்த இடுப்பில்,

வரைத்தல நெருக்கிய முருட்டிரு
ணிறத்தவன வாய்களலற
விரற்றலை யுகிர்ச்சிறிது வைத்தபெரு
மானினிது மேவுமிடமாம்
புரைத்தலை கெடுத்தமுனி வாணர்பொலி
வாகிவினை தீரவதன்மேல்
குரைத்தலை கழற்பணிய வோமம்வில
கும்புகைசெய் கோகரணமே. 8

வில்லிமையி னல்விற லரக்கனுயிர்
செற்றவனும் வேதமுதலோன்
இல்லையுள தென்றிகலி நேடவெரி
யாகியுயர் கின்றபரனூர்
எல்லையில் வரைத்தகடல் வட்டமு
மிறைஞ்சிநிறை வாசமுருவக்
கொல்லையி லிளங்குறவர் தம்மயிர்
புலர்த்திவளர் கோகரணமே. 9

பல்லபட நாகம் - விடப்பல்லையும் படத்தையும் உடைய பாம்பை. கோவணவர் - விரித்துப் புனையும் கோவணமாக உடையவர் ஆகிய சிவபெருமான் ஆளும் நகர் என்பர். அயலே - அருகில். நல்லமடமாதர்- நற்குண நற்செய்கையுடையவர்களாகிய பெண்கள். அரன் நாமம் - சிவபெருமானது திருப்பெயரை. நவிற்றிய - சொல்லும். திருத்தமும் முழுக- தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்ய. தீர்த்தத்தின் பெயர் கூறியவாறு.

8. வரைத்தலம் - கைலை மலையில். முருடு - கடின இயல்பை யுடைய. இருள் நிறத்தவன் - இருண்ட நிறத்தையுடைய இராவணனின். வாய்கள் - பத்து வாய்களும். அலற - அலறும்படி. நெருக்கிய - (அவனை) அடர்க்கும் பொருட்டு. விரல்தலை - விரலின் நுனியின். உகிர் - நகத்தை. சிறிது வைத்த - சிறிதே வைத்த, பெருமான் இனிதுமேவும் இடமாம். புரைத்தலை கெடுத்த - குற்றப்படும் இடத்தை ஒழித்த. முனிவாணர் பொலிவாகி - முனிவர்கள் விளங்கி. வினைதீர - கன்மங்கள் ஒழிய அதன்மேல் - அதன்பயனாக. குரைத்து அலை - ஒலித்து அசையும் - கழும். பணிய - வணங்க. ஓமம் - (செய்யும்) வேள்வி. விலகும் - மேலே கிளம்பும். புகைசெய் - புகைபரவுகின்ற கோகரணமே.

9. வில்லின்மையினால் - வில்தொழிலால், விறல் அரக்கன். உயிர் செற்றவனும் - வெற்றியையுடைய இராவணனது உயிரை அழி

நேசமின் மனச்சமணர் தேரர்க
ணிரந்தமொழி பொய்களகல்வித்
தாசைகொண் மனத்தையடி யாரவர்
தமக்கருளு மங்கணனிடம்
பாசம தறுத்தவனி யிற்பெயர்கள்
பத்துடைய மன்னனவனைக்
கூசவகை கண்டுபி னவற்கருள்க
ணல்கவல கோகரணமே. 10

திருமாலும். வேத முதலோன் (உம்) - பிரமனும். இகலி இல்லையுளது என்று நேட - தம்முள் மாறுபட்டு இல்லை என்றும் உள்ளது என்றும் அறிய முடியாதவாறு தேட. எரியாகி - நெருப்புவடிவமாகி. உயர்கின்ற - ஓங்கிய. பரன் - மேலான கடவுளின். ஊர் - ஊராகும். எல்லையில் வரைத்த கடல் வட்டமும் - எல்லையாக அளவு படுத்திய கடலாற் சூழப் பட்ட பூமியும், (தேவலோகமும்) இறைஞ்சி - வணங்கி. நிறை - நிறை கின்ற (கோகரணம்) வாசம்உருவ - வாசனை (கூந்தலில் இருந்து) திக்கு களிற் சென்று பாய்ந்து உருவ. கொல்லையில் - தினைப்புனங்களில். இளங் குறவர். தம் மயிர் புலர்த்தி - தமது கூந்தலைக் காயவைத்து. வளர் - பெருகு கின்ற கோகரணமே. குறவர் என்பது மயிர் புலர்த்தல் என்னுந் தொழிலி னால் ஆண்பாலையொழித்தது. இது, தொழிலிற் பிரிந்த ஆண் ஒழிமிகு சொல். இவர் வாழ்க்கைப்பட்டாரென்பது போல. பெயரினும் தொழிலினும் பிரிபவை யெல்லாம் மயங்கல்கூடா வழக்கு வழிப்பட்டன. தொல். சொல். 50-ம் சூத்திரம்.

10. நேசம் இல் - உள்ளன்பில்லாத. மனத்து அமணர் - மனத்தை யுடைய சமணர்களும். தேரர்கள் - பவுத்தர்களும். நிரந்தமொழி - ஒழுங்குடையதுபோற்கூறும் சொற்கள். பொய்ச்சொற்களாம். அகல்வித்து- நீக்கி. ஆசைகொள் மனத்து - தன்னிடத்தில் ஆசைகொள்ளும்படியான மனத்தைபுடைய, அடியாரவர் தமக்கு அருளும், அங்கணன் சிவ பெருமானது இடம். அவனியில் - பூமியில். பெயர்கள் பத்துடைய அரசனை அர்ச்சுனனைப் பாசமது அறுத்து, கூச - நாண வகைகண்டு பின். அவற்கு. அருள்கள் நல்க வல - அவருக்கு வரங்கள் கொடுக்க வல்ல தாகிய கோகரணம்.

கோடலர வீனும்விரி சாரன்மு
னெருங்கிவளர் கோகரணமே
ஈடமினி தாகவுறை வானடிகள்
பேணியணி காழிநகரான்
நாடிய தமிழ்க்கிளவி யின்னிசைசெய்
ஞானசம்பந்தன்மொழிகள்
பாடவல பத்தரவ ரெத்திசையு
மாள்வர்பர லோகமெளிதே 11

திருச்சிற்றம்பலம்

11. கோடல் அரவீனும் - காந்தட்செடிகள் பாம்புபோல் மலர்கின்ற. விரி - அகன்ற. சாரல் - மலைச்சாரல். முன் நெருங்கி - முன் அணித்தாய் (தோன்ற) வளர் - வளம் பெருகும் கோகரணமே, ஈடம் ஆக - இடமாக இனிது தங்குவான். அடிகள் பேணி - திருவடிகளைக்கருதி. நாடிய தமிழ்க் கிளவியின் இசை செய் - ஆராய்ந்த தமிழ்ச் சொற்களால் இனிய இசைப்பாடல்களாகப்பாடிய. ஞானசம்பந்தன் பாடல்களைப் பாட வல்ல பத்தர்கள், அதன் பயனாக எத்திசையும் ஆள்வர் - (அரசராகி) எல்லாத் திசையும் ஆளுபவராவர். (பின்) பரலோகம் (உம்) - மேலான முத்தி யுலகமும். எளிதில் அடையத் தகுவது ஆகும். ஈடம் - நீட்டல் விகாரம்.

எனவே இடரகலும் இன்பமே எய்தும்
நனவே அரனருளை நாடும் — புனல்மேய
செங்கமலத் தண்டார்த் திருஞான சம்பந்தன்
கொங்கமலத் தண்காழிக் கோ.

கோலப் புலமணி சுந்தர மாளிகைக் குந்தளவார்
ஏலப் பொழில்அணி சண்பையர்கோனை யிருங்கடல்சூழ்
ஞாலத் தணிபுகழ் ஞானசம்பந்தனை நற்றமிழே
போலப் பலபுன் கவிகொண்டு சேவடி போற்றுவனே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

## 80 திருவீழிமிழலை

338 **பதிகவரலாறு**

தேம்பொழில் திருவீழிமிழலையில் மெய்ப்போதப்போது அமர்ந்தார் கோயிலை மேவிக் கைப்போது சென்னிமேற்கொண்டு கவுணியனூர் பாடிய ஒப்பு ஓதரும் பதிகம் இது.

**திருவிராகம். பண் – சாதாரி**

திருச்சிற்றம்பலம்

சீர்மருவு தேசினொடு தேசமலி
செல்வமறை யோர்கள்பணியத்
தார்மருவு கொன்றையணி தாழ்சடையி
னனமர்ச யங்கொள்பதிதான்
பார்மருவு பங்கயமு யர்ந்தவயல்
சூழ்பழன நீடவருகே
கார்மருவு வெண்கனக மாளிகை
கவின்பெருகு வீழிநகரே. 1

பட்டமுழ விட்டபணி லத்தினொடு
பன்மறைக ளோதுபணிநல்
சிட்டர்கள்ச யத்துதிகள் செய்யவருள்
செய்தழல்கொண் மேனியவனூர்

1. சீர்மருவு - சிறப்புப் பொருந்திய. தேசினொடு - சைவ ஒளியோடு. தேசம்மலி - தேசங்களிலெல்லாம் புகழ்பெற்ற. செல்வமறையோர் - (செல்வன் கழல் ஏத்தும்) செல்வத்தையுடைய அந்தணர்கள், பணிய, தாழ்சடையினன் - தொங்கும் சடையையுடையவனாகிய சிவபெருமான் அமர் - தங்கும். சயம்கொள் - வெற்றிகொண்ட. பதி - தலம். பார்மருவு - பூமியிற் பொருந்திய. பங்கயம் - தாமரைமலர்கள். உயர்ந்த - உயர்வுற்ற வயல்சூழ் பழனம் - மருதம். நீட - வளம்மிக. கார்மருவு - மேகம் அளாவிய. வெண் - வெண்மையான நிறத்தையும். கனகம் - ஐசுவரியங்களையும் உடைய, மாளிகைகள். கவின்பெருகு - அழகுபெருகுகின்ற வீழிநகர்,

மட்டுலவு செங்கமல வேலிவயல்
செந்நெல்வளர் மன்னுபொழில்வாய்
விட்டுலவு தென்றல்விரை நாறுபதி
வேதியர்கள் வீழிநகரே. 2

மண்ணிழிசு ரர்க்குவள மிக்கபதி
மற்றுமுள மன்னுயிர்களுக்
கெண்ணிழிவி லின்பநிகழ் வெய்தவெழி
லார்பொழி லிலங்கறுபதம்
பண்ணிழிவி லாதவகை பாடமட
மஞ்ஞைநட மாடவழகார்
விண்ணிழிவி மானமுடை விண்ணவர்பி
ரான்மருவு வீழிநகரே. 3

2. பட்ட - கொட்டிய. முழவு - முழவின் ஓசையையும், இட்ட - ஊதிய, பணிலத்தினொடு - சங்கவாத்தியத்தின் ஓசையுடனே, பல் மறைகள் - பல சாகைகளையுடைய வேதங்களை, ஓது - ஓதுகின்ற, பணி- பணியை மேற்கொண்ட, நல் - நல்ல, சிட்டர்கள் - சீலமுடையவர்களாகிய. அந்தணர்கள், சயத்துதிகள் செய்ய - வெல்க என்னும் துதிப்பாடல்கள் பாட, அருள்செய்து, தழல் கொள் மேனியவன் - அக்கினிமயமான திரு மேனியுடைய சிவபெருமானது ஊர். மட்டு உலவு - வாசனை வீசும். செங்கமல வேலி - செந்தாமரை வேலியைப்போல் சூழ்ந்த. வயல் - வயல்களில். (செந்நெல்வளர் - வீழிநகர்) மன்னு - நிலைபெற்ற. பொழில் வாய் - சோலையினிடத்தில். விட்டு உலவு - வீசி வீசி அடிக்கின்ற தென்றல் - தென்றல் காற்று, விரைநாறு. வாசம் வீசுகின்ற. பதி-தலமாகிய (வேதியர்கள் - அந்தணர்கள் வசிக்கும்) வீழிநகரே.

3. மண்இழி - (வானுலகினின்று) பூ உலகிற்கு வந்த. சுரர்க்கு - தேவர்களுக்கும். வளம்மிக்கபதி - வளமிகுந்து அளிக்கும் தலமாகும். மற்றுமுள மன்னுயிர்களுக்கு. எண் (இல்) இழிவு இல் - அளவற்ற சிறந்த. இன்பம் நிகழ்வு எய்த - இன்பம் உண்டாக. எழில் ஆர் பொழில் - அழகுபொருந்திய சோலையில். இலங்கு - விளங்குகின்ற. அறுபதம் - வண்டுகள், இழிவு இலாத வகை பண்பாட - குறைவு இல்லாதபடி இசைப்பாடலைப் பாட. மடமஞ்ஞை நடமாட-இளம் மயில்கள் நடனம் ஆட அழகார் - அழகுபொருந்திய விண்ணிழிவிமானம் உடை - தேவர் உலகி னின்றும் இறங்கிய கோயிலையுடைய, விண்ணவர்பிரான் - தேவநாயக ராகிய சிவபெருமான். மருவு - தங்கியுள்ள வீழிநகரே.

செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு
நற்கலைதெ ரிந்தவவரோ
டந்தமில்கு ணத்தவர்க ளர்ச்சனைகள்
செய்யவமர் கின்றவரனூர்
கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர்
தண்புனல்வ ளம்பெருகவே
வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி
ரும்புபதி வீழிநகரே. 4

பூதபதி யாகியபு ராணமுனி
புண்ணியநன் மாதைமருவிப்
பேதமதி லாதவகை பாகமிக
வைத்தபெரு மானதிடமாம்
மாதவர்க ளன்னமறை யாளர்கள்
வளர்த்தமலி வேள்வியதனால்
ஏதமதி லாதவகை யின்பமமர்
கின்றவெழில் வீழிநகரே. 5

4. செந்தமிழர் - செந்தமிழ் மொழி பேசுவோர். தெய்வமறை நாவர் - தெய்வத்தன்மை பொருந்திய வேதங்களை ஓதும் நாவையுடையவர், செழுநற்கலை தெரிந்தவர் அவரோடு - சிறந்த நற்பயன் தருவதாகிய கலைகளைத் தெரிந்தவர்களாகிய அவர்களுடன், அந்தமில் குணத்தவர்கள் - அளவற்ற குணத்தையுடையவர்களான ஞானிகளும் (அர்ச்சனைகள்செய்ய) அமர்கின்ற - விரும்பித் தங்குகின்ற. அரன் அமர்கின்ற ஊர்-சிவபெருமான் எழுந்தருளிய ஊராகும். கொந்து அலர் பொழில் - கொத்துக்களில் மலர்கின்ற சோலைகளும், வேலி - சூழ்ந்த. பழனம் - வயல்களில், குளிர் - குளிர்கின்ற. தண் புனல்வளம் பெருக - தண்ணீரின் வளம்பெருக. வெம் - விரும்பத்தக்க. திறல் விளங்கி - வலிமையால் விளங்கி. வளர் - மிகுகின்ற. வேதியர் விரும்பு பதி - அந்தணர் விரும்பும் தலம் ஆகிய வீழி நகரே.

5. பூதபதி ஆகிய - பூதங்களுக்குத் தலைவராகிய புராணமுனி - பழமையாகிய தவக்கோலம் பூண்டவர். புண்ணியம் நல்மாதை - அருளேயுருவமாகிய சிற்சத்தியை. பேதம் (அது) இலாதவகை-வேறுபாடு இல்லாத விதம். மருவி - கலந்தும். மிக - வேறுபாடு நன்குதோன்ற. பாகம் - இடப்பாகத்தில், வைத்த - வைத்தருளிய, பெருமானது இடமாம். இல்லத்திலிருந்து அழலோம்பும் அந்தணர்கள். தகைமையால் - வனத்திற்சென்று

மண்ணின்மறை யோர்மருவு வைதிகமு
 மாதவமு மற்றுமுலகத்
தெண்ணில்பொரு ளாயவை படைத்தவிமை
 யோர்கள்பெரு மானதிடமாம்
நண்ணிவரு நாவலர்க ளுடொறும்
 வளர்க்கநிகழ் கின்றபுகழ்சேர்
விண்ணுலவு மாளிகை நெருங்கிவளர்
 நீள்புரிசை வீழிநகரே. 6

மந்திரநன் மாமறையி னோடுவளர்
 வேள்விமிசை மிக்கபுகைபோய்
அந்தரவி சும்பணவி யற்புத
 மெனப்படரு மாழியிருள்வாய்
மந்தரநன் மாளிகை நிலாவுமணி
 நீடுகதிர் விட்டவொளிபோய்
வெந்தழல் விளக்கென விரும்பினர்
 திருந்துபதி வீழிநகரே. 7

தவம்புரியும் மாதவர்களைப் போன்றவர்கள், அவர்கள் அழல் ஓம்புகின்றனர். அதனால், பசி, பிணி, வறுமை, மழையின்மை முதலிய தீங்கு நேராமலும், உண்டி, நோயின்மை, செல்வம், பருவமழை முதலிய நன்மை நிகழவும் - மாந்தர் மகிழ்ச்சியடைகின்ற திருவீழிமிழலை என்பது பின் இரண்டடி யின் கருத்து.

6. வைதிகமும் - வேதநெறி யொழுக்கத்திற்குரிய அறங்களையும். மாதவம் - சிறந்த தவநெறி யொழுக்கத்திற்குரிய அறங்களையும், மற்றும் உலகியல் நெறிபற்றி யொழுகற் பல்வகையறங்களையும படைத்தருளிய சிவபெருமானது இடமாவது என்பது முதலிரண்டடியின் கருத்து. நாடி வருகின்ற புலவர்கள் நாள்தோறும் வளர்க்க வளர்ந்து வரும் புகழையுடையதும், வான் அளாவிய மாளிகைகள் செறிந்து செல்வம் வளர்வதும், ஓங்கிய மதிலையுடையதுமாகிய திருவீழிமிழலையென்பது பின்னிரண்டடியின் கருத்து.

7. மந்திரம்நல் மாமறையினோடு - நல்ல சிறந்த வேதத்தின் மந்திரங்களுடன். வளர் - வளர்ந்த. வேள்வி மிசை - யாகத்தில். மிக்க புகை போய் - மிக்கு எழும்பிய புகைசென்று. அந்தரம் - மேலே. விசும்பு அணவி- ஆகாயத்திற் கலந்து. அற்புதம் என - பகற்காலத்தே இருள்சூழ்ந்தது.

ஆனவலி யிற்றசமு கன்றலைய
ரங்கவணி யாழிவிரலால்
ஊனமரு யர்ந்தகுரு திப்புனலில்
வீழ்தரவு ணர்ந்தபரனூர்
தேனமர் திருந்துபொழில் செங்கனக
மாளிகை திகழ்ந்தமதிளோ
டானதிரு வுற்றுவள ரந்தணர்
நிறைந்தவணி வீழிநகரே 8

ஏனவுரு வாகிமணி டந்தவிமை
யோனுமெழி லன்னவுருவம்
ஆனவனு மாதியினே டந்தமறி
யாதவழன் மேனியவனூர்

அற்புதம் என்று வியக்க. படரும் - படர்ந்ததனுலுண்டாகிய. ஆழி - ஆழ்ந்த- இருள்வாய். மந்தரம் - மந்தரமலைபோன்ற. நல் - அழகிய. மாளிகை - மாளி கையில். நில்வும் - (பதித்து) விளங்குகின்ற மணி - இரத்தினங்களின் நீடு - நெடுந்தூரம்பாயும். கதிர் - கிரணங்கள். விட்ட - வீசிய. ஒளி - பிரகாசம். போய் - சென்று. வெம்தழல் - வெவ்விய தழலில் ஏற்றிய விளக்கு என - விளக்கொளிபோல். (ஒளிபரப்பி) அவ்விருளைப்போக்க. அதனுல் விருப்பமுடையவர்களாய். திருந்து - திருப்திகரமாய் வாழ்கின்ற. பதி - தலமாகிய வீழிமிழலையே.

8. ஆன - தனக்குள்ள. வலியின் - வலிமையைக்கருதி மலையெடுத் ததனுல். தசமுகன் - இராவணனது. தலை - தலைகள். அரங்க - அரைபட. அணி ஆழி விரலால்-மோதிரம் அணிந்த விரலால். ஊன் அமர் - உடம்பில் உள்ள. உயர்ந்த-மிகுந்த. குருதிப் புனலில் - இரத்த வெள்ளத்தில். வீழ்தர - வீழ்ந்துபுரள. உணர்ந்த - நினைத்து மிதித்த. பரன் - சிவபெருமானது. ஊர் - தலமாவது. தேன் அமர் - வண்டுகள் தங்கும். திருந்து - திருத்த மான. பொழில்கள் - சோலைகளும், செம்கனக மாளிகைகளும். திகழ்ந்த - விளங்குகின்ற. மதிலோடு - மதிலுடனே. ஆன - (நிறைவு) ஆகிய. திரு உற்று - செல்வம் பொருந்தி. வளர் மேன்மேலும் பெருகுகின்ற-(வீழிநகர்) அந்தணர் நிறைந்த. அணி-அழகிய வீழிநகர். மதிள் - ல, ள்வொற்றுமை.

வானணவு மாமதிண் மருங்கலர்
நெருங்கிய வளங்கொள்பொழில்வாய்
வேனலமர் வெய்திட விளங்கொளியின்
மிக்கபுகழ் வீழிநகரே 9

குண்டமண ராகியொரு கோலமிகு
பீலியொடு குண்டிகைபிடித்
தெண்டிசையு மில்லதொரு தெய்வமுள
தென்பரது வென்னபொருளாம்
பண்டையய னன்னவர்கள் பாவனை
விரும்புபரன் மேவுபதிசீர்
வெண்டரள வாணகைநன் மாதர்கள்
விளங்குமெழில் வீழிநகரே 10

9. ஏன உருவு ஆகி - பன்றி வடிவம்கொண்டு. மண் இடந்த - பூமியைத்தோண்டிய. இமையோனும் - தேவனாகிய திருமாலும். எழில் - அழகிய், அன்ன உருவம் ஆனவனும். ஆதியினோடு-அடியையும். அந்தம்-முடியையும். அறியாத - (முறையே) அறியப்படாத. அழல் மேனியவன் - நெருப்பு வடிவாய் நின்ற சிவபெருமானது ஊர். வான் அணவு - ஆகாயத்தை அளாவிய. மாமதில் மருங்கு - பெரிய மதிலினருகிலே. அலர் நெருங்கிய - மலர்கள் அடர்ந்த. வளம்கொள் பொழில்வாய் - சோலையில். வேனல் அமர்வு எய்திட - மாந்தர் வெயிற் காலத்திற்குத் தங்க. விளங்குகின்ற. ஒளியின் மிக்க - தெய்வத்தன்மையால் மிக்க. புகழ்-புகழையுடைய. வீழிநகர் - திருவீழிமிழலையாம்.

10. குண்டு - முருட்டுந்தன்மையையுடைய. அமணர் ஆகி - கோலம் மிகு - அழகு மிக்க. பீலியொடு - மயிற்பீலியொடு. குண்டிகை பிடித்து, எண்டிசையும் - எட்டுத்திக்கிலும், மிக்கது ஒருதெய்வம் உளது என்பர், அது என்ன பொருள் ஆம் - அவ்வாறு அவர்கள் கூறுவது என்ன பயன் தருவதாகும், பண்டை - வேதத்தைக்கேட்ட அக்காலத்து. அயன் - பிரமனை அன்னவர்கள் - ஒத்த அறிஞர்களின். பாவனை - பாவிக்குந்திறனை விரும்பு - விரும்புகின்ற. பரமன் - சிவபெருமான். மேவுபதி - தங்கும் தலம் சீர் - சிறப்புற்ற. வெண்தரளவாள்நகை - வெள்ளிய முத்து போன்ற, ஒளிபொருந்திய பற்களையுடைய. நல்மாதர்கள் - கற்புடைய பெண்கள். எழில் விளங்கும் - அழகால் விளங்கும் வீழிநகர்.

மத்தமலி கொன்றைவளர் வார்சடையில்
வைத்தபரன் வீழிநகர்சேர்
வித்தகனை வெங்குருவில் வேதியன்
விரும்புதமிழ் மாலைகள்வலார்
சித்திர விமானமமர் செல்வமலி
கின்றசிவ லோகமருவி
அத்தகு குணத்தவர்க ளாகியனு
போகமொடி யோகமவரதே. 11

திருச்சிற்றம்பலம்

11, மத்தம் - பொன்னூமத்தை மலரும். மலி - வாசனைமிகுந்த, கொன்றை - கொன்றைமாலையும், வளர்வார் சடையில் வைத்த - வளரும் நெடிய சடையிலேயணிந்த, அரன் - சிவபெருமானும், வீழி நகர் சேர் வித்தகனை - திருவீழிமிழலை ஆகிய தலத்தில் உள்ள சதுரனும் ஆகிய சிவபெருமானை. வெங்குருவில் வேதியன், விரும்பு தமிழ் மாலைகள் வ(ல்)லார். சித்திர விமானம் அமர் - அழகிய கோயிலையுடைய. செல்வம் மலிகின்ற. சிவலோகம் மருவி - சிவலோகத்தையடைந்து. அத்தகு - அவ்வளவு சிறந்ததாகிய. குணத்தவர்களாகி - சத்துவகுண முடையவர்களாகி. அனுபோகமொடு - இறைவனோடு பேரின்பம் உறும். யோகம் அவரதே - சிவயோகம் தம்முடையதாகவே கைவரப் பெறுவர்.

போற்று வார்இடர் பாற்றிய புனிதன்
பொழில்சு லாவிய புகலியர் பெருமான்
ஏற்ற வார்புகழ் ஞானசம் பந்தன்
எம்பி ரான்இருஞ் சுருதியங் கிரிவாய்ச்
சேற்று வார்புனங் காவல் புரிந்தென்
சிந்தை கொள்வதுஞ் செய்தொழி லானுன்
மாற்றம் நீரெமக் கின்றுரை செய்தால்
வாசி யோகுற மாது நலீரே

—ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்.

சீகாழியில்:



பிரதான விமானங்கள்.

சீகாழியில்



'தொல்பறவை சுமந்தோங்கும் செம்மைத் தோணிபுரம்'

# 81 திருத்தோணிபுரம்

339 பதிகவரலாறு

சீகாழிப் பதிகங்களுள் ஒன்றுய்க் கிளந்தோதப்பட்டது.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

சங்கமரு முன்கைமட மாதையொரு பாலுடன் விரும்பி
அங்கமுடன் மேலுறவ ணிந்துபிணி தீரவருள் செய்யும்
எங்கள்பெரு மானிடமெ னத்தகுமு னைக்கடலின் முத்தந்
துங்கமணி யிப்பிகள் கரைக்குவரு தோணிபுர மாமே. 1

சல்லரியி யாழ்முழவ மொந்தைகுழ லுளமதி யம்பக்
கல்லரிய மாமலையர் பாவையொரு பாகநிலை செய்து
அல்லெரிகை யேந்திநட மாடுசடை யண்ணலிட மென்பர்
சொல்லரிய தொண்டர்துதி செய்யவளர் தோணிபுர மாமே. 2

---

1. சங்கு அமரும் - சங்கு வளையல் பொருந்திய. (முன்கை) மட மாதை - இளமைமாருத உமாதேவியாரை. உடன் ஒருபால் - தன்னோடு உடம்பின் ஒருபாகத்தில். விரும்பி - விரும்பி அமர்த்தி. அங்கம்-எலும்பை. உடல்மேல் - உடம்பின்மீது. உற - பொருந்தும்படி. அணிந்து. பிணிதீர - மும்மலப் பிணிப்பு நீங்கும்படி. அருள்செய்யும் எங்கள் பெருமான் இடம். முனைக்கடலின் - அலை முனைந்து வீசுதலையுடைய கடலினின்றும். முத்தம் - முத்துக்களும். துங்கம் - உயர்ச்சி பொருந்திய. மணி - இரத்தினங்களும். இப்பிகள் - சங்குப் பூச்சிகளும். கரைக்கு-வருகின்ற தோணிபுரம்.

2. சல்லரி - யாழ், முழவும், மொந்தை, குழல், தாளம் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க என்பது முதலடியின் கருத்து. மா - பெரிய. கல் மலையர் அரிய பாவை - இமயமலையினர் தம் அரிய புதல்வியாகிய உமா தேவியாரை. ஒருபாகம் நிலைசெய்து - ஒருபாகத்தில் நீங்காமற் கொண்டு. கை எரி ஏந்தி - கையில் அனலையேந்தி. அல் - இரவில். நடம் ஆடு, கூத்தாடுகின்ற. (சடை அண்ணல் இடம் என்பர்.) வளர் - ஊழிதோறூழி யுயர்கின்ற தோணிபுரத்தை. ஆம் - அசை "மேயவிவ்வுரைகொண்டு விரும்பும் ஆம் - ஆயசீர் அநபாயன் அரசவை" என்புழிப்போல (பெரிய புராணம்) தோணிபுரம் இடம் ஆம் என்பர் எனினும் ஆம்.

வண்டரவுகொன்றைவளர் புன்சடையின்மேன்மதியம்வைத்துப்
பண்டரவு தன்னரையி லார்த்தபர மேட்டிபழி தீரக்
கண்டரவ வொண்கடலி னஞ்சமமு துண்டகட வுள்ளூர்
தொண்டரவர் மிண்டிவழி பாடுமல்கு தோணிபுர மாமே. 3

கொல்லைவிடை யேறுடைய கோவணவ ளுவணவுமாலை
ஒல்லையுடை யானடைய லாரரண மொள்ளழல் விளைத்த
வில்லையுடை யான்மிக விரும்புபதி மேவிவளர் தொண்டர்
சொல்லையடை வாகவிடர் தீர்த்தருள்செய் தோணிபுர மாமே.4

3. வண்டு - வண்டினம். அரவு - மோதி ஊதுகின்ற. கொன்றை (மாலையோடு) வளர் - வளர்கின்ற(புன்)சடையின் மேல் - சடையின்மேல். மதியம் - பிறைச் சந்திரனை, வைத்து. அரவு - பாம்பை. பண்டு - அக் காலந்தொட்டு. தன் அரையில், ஆர்த்த - அரைஞாணுகக்கட்டிய. பர மேட்டி - மேலான இடத்திலிருப்பவனும். பழிதீர - (திருமால் முதலியோர் இறைவனுணையின்றிக் கடல்கடையச் சென்ற) தோடம் அவரைவிட்டு நீங்குமாறு. கண்டு - தெரிந்து. அரவம் - ஆரவாரத்தையுடைய. ஒண் கடலின் - சிறந்த பாற்கடலில் எழுந்த. நஞ்சம் அமுது உண்ட கடவுள். ஊர் - ஊராவது. தொண்டர் அவர் - அத்தகைய பேரன்புபடைத்த அடியார்கள். மிண்டி - ஒருவர் ஒருவரின் நெருங்கி. வழிபாடுமல்கு - வழிபாடுகள் மிகுந்த. தோணிபுரம் ஆமே.

4. கொல்லை - முல்லை நிலத்திலுள்ள, விடையேறு - இடப வாகனத்தை. உடைய, கோவணவன் - கோவணமாகிய ஆடை உடைய துறவிக்கோலத்தினன். நா அணவும் மாலை - (அடியார்கள்) நாவினுற் பாடும் பாமாலைகளின் (அணவுதல் - பொருந்துதல் - பூமாலையின் வேறு பிரிக்க இங்ஙனம் கூறப்பட்டது) ஒல்லை உடையான் - ஓசையையுடைய வன். ஒல் - ஒலிக்குறிப்பு: அநு கரணஓசை என்பர். மேவி தன்னையே பற்றுக்கோடாக அடைந்து. வளர் - அன்புமிகப்பெறுகின்ற. (தொண்டரது) சொல்லை-வேண்டிக்கொள்ளும் சொற்களை. அடைவு ஆக -(வியாஜமாக) வழியாகக்கொண்டு - இடர் - துன்பங்களை. தீர்த்து அருள்செய் தோணி புரம் (தலம்) ஆம். அடையலார் - பகைவரது. அரணம் - புரங்களை ஒள் அழல் விளைத்த - ஒளியையுடைய நெருப்பால் எரித்த - விளைத்த என்ற சொல் சார்புபற்றி எரித்த என்னும் பொருளில் வந்தது. வில்லை யுடையான் - விற்போரை யுடையவன். வில் - எரித்தற்குக் கருவியாக இன்மையால் விற்போர் எனப்பட்டது. வில் - இலக்கணை. ஏறு - ஏறப் படுவது. செயப்படுபொருள் உணர்த்தும் விகுதி புணர்ந்து கெட்டது.

தேயுமதி யஞ்சடையி லங்கிடவி லங்கன்மலி கானிற்
காயுமடு திண்கரியி னீருரிவை போர்த்தவ னினைப்பார்
தாயென நிறைந்ததொரு தன்மையினர் நன்மையொடு வாழ்வு
தூயமறை யாளர்முறை யோதிநிறை தோணிபுர மாமே. 5

பற்றலர்த முப்புரமெ ரித்தடி பணிந்தவர்கண் மேலைக்
குற்றமதொ ழித்தருளு கொள்கையினன் வெள்ளின்முது கானிற்
பற்றவனி சைக்கிளவி பாரிடம தேத்தநட மாடுந்
துற்றசடை யத்தனுறை கின்றபதி தோணிபுர மாமே. 6

பண்ணமரு நான்மறையர் நூன்முறை பயின்றதிரு மார்பிற்
பெண்ணமரு மேனியினர் தம்பெருமை பேசுமடி யார்மெய்த்
திண்ணமரும் வல்வினைக டரவருள் செய்தலுடை யானூர்
துண்ணென விரும்புசரி யைத்தொழிலர் தோணிபுர மாமே. 7

5. தேயும் - கலை தேய்ந்து வரும். மதியம் - பிறைச்சந்திரன். (அம் சாரியை.) இலங்கிட - தன்னைச்சரண்புக்கதால் விளங்க (இலங்கு+இடு × அ=இலங்கிட) இடு - துணை வினை என்ப. விலங்கல் - மலைகள். மலி - மிக்க. கானில் - வனத்தில். காயும் - கோபிக்கின்ற. அடு - கொல்லவல்ல திண் - வலிய. கரியின் - யானையின். ஈர் உரிவை - உரித்ததோலை. போர்த்தவன். ஈர் உரிவை - "அடியளந்தான் தாயது" எனல் போல்வது. நினைப்பார் - நினைப்பவருக்குத் தாயைப்போல உதவ எங்கும் நிறைந்த ஒரு தன்மையினர். நன்மையொடு வாழ்வு - நன்மைபுரிவதே தொழிலாக வாழும் இடம். (முறையாக) ஓதி - வேதங்களையோதி, நிறைகின்ற திருத் தோணிபுரம்.

6. பற்றலர் - பகைவர் (மனம் பற்றுதல் இல்லாதவர் காரணபெயர்.) மேலைக்குற்றம் - முற்பிறவிகளிற்செய்து நுகர்ந்து எஞ்சிய வினைகள் அடிபணிந்த அன்பர்கள் தன்னையோவாதே யுள்குவாராயின், அவை காட்டுத்தீமுன் பஞ்சுத்துப்போற்கெடுதலின் ஒழித்தருளுகொள்கையினன் என்றார். அருளு எனபதில் உகரம் சாரியை. வெள்ளில் - பாடை. முதுகானில் - மயானத்தில். பற்றவன் - விருப்புடையவன். இசைக் கிளவி - இசைப்பாடல்களை (கிளவி - வெளிக்கிளம்பும் ஓசை) பாரிடம் (அது)-பூதம். ஏத்த-துதித்துப்பாட. நடமாடும் - அத்தன். துற்ற - நெருங்கிய சடை, (அத்தன்) உறைகின்றபதி தோணிபுரம் ஆம்.

7. நூல்முறை பயின்ற திருமார்பின் - ஆகம சாத்திரங்களின் கருத்தைப் பயின்ற (பயிற்றிய) மோன முத்திரையால் சனகர் முதலி யோர்க்குத் தெரிவித்தருளிய, திருமார்பினையும் - (பயின்ற என்பதில்

தென்றிசையி லங்கையரை யன்றிசைகள் வீரம்விளை வித்து
வென்றிசை புயங்களை யடர்த்தருளும் வித்தகனி டஞ்சீர்
ஒன்றிசையி யற்கிளவி பாடமயி லாடவளர் சோலை
துன்றுசெய வண்டுமலி தும்பிமுர றேணிபுர மாமே. 8

நாற்றமிகு மாமலரின் மேலயனு நாரணனு நாடி
ஆற்றலத னான்மிகவ ளப்பரிய வண்ணமெரி யாகி
ஊற்றமிகு கீழுலகு மேலுலகு மோங்கியெழு தன்மைத்
தோற்றமிக நாளுமரி யானுறைவு தோணிபுர மாமே. 9

பிறவினை விகுதி தொக்கு நின்றது). பெண். அமரும் - தங்கிய. மேனியர் - திருவுடம்பையும் உடையவர். தம் பெருமை தமது-பெருமையை. பேசும்- பேசிப்புகழும், அடியார். மெய் - உள்பொருளாகிய. திண்அமரும்- வலிமைபொருந்திய வல்வினைகள் - பிறரால் எளிதில் நீக்கமுடியாத வினைகள் (அல்லது வலிய வினைகளுக்குள் வலிமைபொருந்திய - மிக வலிய எனினும் ஆம்.) சரியைத் தொழிலர் - சரியையாதி பணிபுரிவோர். சரியை உபலக்கணம். "இருவரும் உணரா அண்ணல்...உரத்தில் கரதலம் ஒன்றுசேர்த்தி மோனமுத்திரையைக் காட்டி" என்னும் கந்த புராண மேருபடலச் செய்யுளால் (12) அறிக. துண் என விரும்பு - (எங்குக் குற்றம் நேர்ந்து விடுகிறதோ என்று) அச்சத்தோடு விரும்பும், தொழிலர் - பணியை மேற்கொண்டவர்கள் தங்கும் திருத்தோணிபுரம்.

8. இலங்கையரையன். திசைகள் - எட்டுத் திசைகளிலும். வீரம் விளைவித்து - தனது வீரத்தை நிலைநாட்டி (திக்கு விசயம் செய்து) வென்று - வெற்றிகொண்டு. இசை - இசைந்த (ஒன்றையொன்று ஒத்த) புயங்களை அடர்த்து. அருளும் - அருள்புரிந்த. வித்தகன் இடம் - சீர் ஒன்று - தாளஒவர்த்துக்கு இசைந்த. இசை இயல் கிளவி - இசை பொருந்திய பாடல்களை. பாட - குயில்கள் பாட. மயில் ஆட. வளர்சோலை. துன்றுசெய - அவ்வாடலைக் காணும் சபையினர்போல நெருங்க, வண்டு - வண்டுகளும். மலி - மிகுந்த, தும்பி வண்டுகளும். முரல் - சுருதி கூட்டு வதைப்போல ஒலிக்கின்ற தோணியுரம். பாட என்பதற்கு எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது; தோன்றாஎழுவாய். அன்றி இசையியற் கிளிவி- என்பதை அன்மொழித் தொகையாகக் கொண்டு குயிலெனினும் ஆம். பன்மொழித்தொடர்: இசையியன்ற குரலோசையுடையது என்று பொருள்.

9 நாடி - தேடத்தொடங்கி, ஆற்றல்அதனால் - தங்கள் வலிமை யினால். அளப்பு மிக அரிய வண்ணம் - சிறிதும் அளத்தலரியதாகும்படி எரிஆகி - அக்கினிப் பிழம்பு ஆகி. ஊற்றம் - உற்ற இடத்தையும். எழு -

மூடுதுவ ராடையினர் வேடநிலை காட்டுமம ணாதர்
கேடுபல சொல்லிடுவ ரம்மொழிகெ டுத்தடைவி னைக்
காடுபதி யாகநட மாடிமட மாதொடிரு காதிற்
றோடுகுழை பெய்தவர்த மக்குறைவு தோணிபுர மாமே 10

துஞ்சிருளி னின்றுநட மாடிமிகு தோணிபுர மேய
மஞ்சனைவ ணங்குதிரு ஞானசம் பந்தனசொல் மாலை
தஞ்சமென நின்றிசைமொ ழிந்தவடி யார்கள்தடு மாற்றம்
வஞ்சமிலர் நெஞ்சிருளு நீங்கியருள் பெற்றுவளர் வாரே. 11

திருச்சிற்றம்பலம்

எழுந்த. தோற்றம் - தமது தோற்றத்தையும். நாளும் - இன்றும். அரியான்- அறிதல் அரியவனாகிய கடவுள். உறைவு - வாழும் இடம் தோணிபுரம்.

10. மூடு துவராடையர் - துவர் ஆடை போர்ப்பவர்களாகிய பவுத்தர். வேட நிலைகாட்டும் அமண் ஆதர் - தமது வேடமாகிய ஆடை யணியாத் தன்மையைப்போலவே தமது ஞானநிலையும் எனக்காட்டும் சமணர்களாகிய அறிவிலிகள். அம்மொழி - அவர் மொழியை கெடுத்து - நீக்கி. அக்காடு - அத்தகைய மயானம். பதியாக - இருப்பிட மாகக்கொண்டு, நடம் ஆடி. மடமாதோடு (கூடி) - அர்த்தநாரீசுர வடிவ மாய். இருகாதில் - இருகாதுகளிலும். முறையே, தோடும், குழையும் பெய்தவர் - அணிந்தவராகிய சிவபெருமானுக்கு. உறைவு - வசிக்கும் இடம், தோணிபுரமாம். அடைவினைல் - முறைப்படி. அதைச் சேர்வீர் களாக என்பது அவாய் நிலை. ஆடையர் ஆதர் கேடுபல சொல்லிடுவர் அம்மொழி கெடுத்து அடைவினைல் அதனைச் சேர்வீர்களாக என்க. அல்லது கெடுத்த அடைவினன் எனப் பிரித்து அடைவினன் - சிவ பெருமான் எனலும் ஆம்.

11. துஞ்சு - உலகெலாம் ஒடுங்கிய. இருளில் பிரளயகால இருளில். (நின்று) நடம் ஆடி - நடம் ஆடிய பெருமானும். மிகு - புகழால் மிகுந்த, தோணிபுரம் மே(வி)ய. மஞ்சனை - சிவபெருமானை. மாலையே நமது பற்றுக்கோடாகும் என்று, நின்று இசைமொழிந்த அடியார்கள். தடுமாற்றம், வஞ்சம், இலர் - நெறி தவறுதலும், அதற்குக் காரணமாகிய மாயையும் இலராவார். இருளாவது தன்னைக் காட்டிப் பிறபொருளைக் காட்டாமலிருக்கும்; இது தன்னையும், தான்மறைத்த ஆன்மாவையும் காட்டாமையால் வஞ்சம் எனப்பட்டது. இருளும் - ஆணவமலமும், மாயையும் இலர் எனவே. ஏனைய கன்மமும் தொலையப்பெற்று, அருள் பெற்று, வளர்வார் என்க.

# 82 திரு அவளிவணல்லூர்

340 பதிகவரலாறு

மதுர முத்தமிழ் வாசகர் திருக்கருகாவூர்ச் சந்தமாமறை தந்தவர் கழலிணையைத் தாழ்ந்து, சிந்தையின்புறப் பாடி, அவளிவணல்லூர் அணைந்து, தம் பரிசுடையார் என்னும் நாமமும் நிகழ்ந்திட ஏத்தி இறைஞ்சிப் பாடி யருளியது இத்திருப்பதிகம்.

திருவிராகம். பண் – சாதாரி

திருச்சிற்றம்பலம்

கொம்பிரிய வண்டுலவு கொன்றைபுரி நூலொடுகு லாவித்
தம்பரிசி னோடுசுடு நீறுதட வந்திடப மேறிக்
கம்பரிய செம்பொனெடு மாடமதில் கல்வரைவி லாக
அம்பெரிய வெய்தபெரு மானுறைவ தவளிவண லூரே. 1

1. கொம்பு - பூங்கொம்பு. இரிய - தம்மைப் பிரியும்படி. (தாமும் பிரிந்து வந்து) வண்டு, உலவு - திரிகின்ற. கொன்றை - கொன்றைமாலை. புரிநூலொடு - பூணூலொடு. குலாவி - மார்பின்கண் அசைந்து. தம் பரிசினோடு - தம் பரிசுடையாரென்னும் தன்மையோடு. நீறு தட வந்து - திருநீறு பூசி. இடபம் ஏறி, கல் - மேருமலை. வரை-தாம் வரைந்துகொண்ட வில் ஆக, (மதில் எய்த பெருமான்) கம் - ஆகாயத்தின்கண். பருத்த. செம்பொன், (வெள்ளி, இரும்பு இவற்றால்) ஆகிய. நெடும்மாடம் - நெடிய மாடங்களையுடைய. மதில் - திரிபுரங்கள், எரிய அம்பு எய்த பெருமான் உறைவது அவளிவணல்லூரே. செம்பொன் - எனவே. வெண்பொன், கரும்பொன்னும் உபலக்கணத்தாற் பெற்றும், தேனுக்காகக் கொன்றை மரம் சென்று, பூக்கள் பறிக்கப்பட்டு மாலையாகச் சிவபெருமான் மார்பிற் கிடத்தலால், வறுங் கொம்பைப் பிரிந்த வண்டு, அம்மாலையிற் சுற்றித்திரிகின்ற மார்பினன் என்பது "கொம்பு...கொன்றை" என்றதன்கருத்து. அது கொண்டு கருதின் 'தமக்கு இன்பம் கிடைக்குமென்று உலகப் பொருளிற் சென்ற மனம், திரும்பிச் சிவபெருமானை யடையின் பல்வகை இன்பங்களும் பெறலாமென்று உலாவும் - எனவும் ஓர் பொருள்தொனிக்கின்றது. பல்வகை இன்பமும் சிவன் அருளுவன் என்பதை

" அற்புதத்தெய்வம் இதனின் மற்றுண்டே யன்பொடுதன்னை யஞ்செழுத்தின்
சொற்பதத்துள் வைத்துள்ள மள்ளூறுந் தொண்டருக் கெண்டிசைக்கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன் மாளிகையும் பவளவாயவர் பணைமுலையும்
கற்பகப்பொழிலும் முழுதுமாங் கங்கைகொண்ட சோளேச் சரத்தானே "

என்னும் திருவிசைப்பாவால் அறிக. தம் பரிசுடையார் என்பது தலத்து இறைவன் திருப்பெயர்.

ஓமையன கள்ளியன வாகையன கூகைமுர லோசை
ஈமமெரி சூழ்சுட லை வாசமுது காடுநட மாடித்
தூய்மையுடை யக்கொடர வம்விரவி மிக்கொளிது லங்க
ஆமையொடு பூணுமடி கள்ளுறைவ தவளிவண லூரே. 2

நீறுடைய மார்பிலிம வான்மகளொர் பாகநிலை செய்து
கூறுடைய வேடமொடு கூடியழ காயதொரு கோலம்
ஏறுடைய ரேனுமிடு காடிரவி னின்றுநட மாடும்
ஆறுடைய வால்சடையி னுறைவ தவளிவண லூரே. 3

பிணியுமிலர் கேடுமிலர் தோற்றமில ரென்றுலகு பேணிப்
பணியுமடி யார்களன பாவமற வின்னருள்ப யந்து
துணியுடைய தோலுமுடை கோவணமு நாகமுட ரெுங்க
அணியுமழ காகவுடை யானுறைவ தவளிவண லூரே. 4

2. ஓமை கள்ளி, வாகை இம்மரங்களையுடையனவாகிய இடங்களும். கூகை முரல் ஓசை - கோட்டான்கள் கத்தும் ஓசையும். ஈமம் - கொள்ளிகளும். எரி - நெருப்பும். சூழ் - சூழ்ந்த - சுடலையாகிய, (வாசம் - தாம் வாசஞ்செய்யும்). முதுகாட்டில் நடம் ஆடி. தூய்மையுடைய அக்கொடு-அக்குப்பாசி. யோடுஅரவம் - பாம்பும். (விரவி) கலந்து ஒளிமிக்கு. துளங்க - விளங்க. ஆமையோட்டோடு பூணும், அடிகள் உறைவது அவளிவள்நல்லூரே. துளங்க - துலங்க. லள ஒற்றுமை. அசைய எனினுமாம். சுடலையாகிய முதுகாடு இருபெயரொட்டுப் புண்புத்தொகை. வாசம் - இடைப் பிறவரல்.

3. இமவான் மகள் - உமாதேவியாரை. ஓர்பாகம், நிலைசெய்து - பிரியாமற்கொண்டு, கூறுடைய வேடமொடுகூடி அழகாயதொருகோலம் - ஒருபாதி ஆணாகிய தோற்றத்தோடு கூடி அழகாகியகோலம். ஏறு - எவற்றினும் சிறக்க உடைய(வ)ரேனும். இடுகாடு - இடுகாட்டில், (இரவில் நின்று நடம் ஆடும். ஆறு உடைய) வார் - நெடிய. சடையினன். உறைவது - தங்குவது, அவளிவள்நல்லூரே. இக்கோலம் ஏற உடைமை, இடுகாட்டில் இரவில் நின்று நடமாடுதற்கு ஏற்றதன்றாயினும், "இன்ன தன்மையனென்று அறியொண்ணா இறைவன்" ஆகலின், ஆயிற்றென்க ஏற உடையர் - ஏறுடையர் என்றாயது. "தொட்டனைத்தூறும்" என்ற திருக்குறளிற்போல, ஏறுடையர். வார்சடையினன் - என வந்தது ஒருமை பன்மை மயக்கம்; பன்மை - உயர்வுபற்றியது.

4. பிணியும், இறப்பும் பிறப்பும் உடைய நமக்கு, இவையில்லாதவனாகிய சிவபெருமானார் தஞ்சமாவரென்று உலகத்தில் பாராட்டி வணங்

குழலின்வரிவண் டுமுரன்மெல்லியன பொன்மலர்கள்கொண்டு
கழலின்மிசை யிண்டைபுனை வார்கடவு ளென்றமரர் கூடித்
தொழலும்வழி பாடுமுடை யார்துயரு நோயுமிலராவர்
அழலுமழு வேந்துகையி னனுறைவ தவளிவண லூரே. 5

கும் அடியார்களின் (அவற்றிற்குக் காரணமான) பாவம்நீங்க உடையவன் இனிய அருள்தந்து உறைவது (அவளிவனல்லூர்)

எல்லார் பிறப்பும் இறப்பும் இயற்பாவலர்தம்
சொல்லால் அறிந்தோம் சோமேசர் — இல்லிற்
பிறந்த கதையும் கேளோம் பேருலகிலே வாழ்ந்
திறந்த கதையும் ரோட்டிலேம்

எனவும்,

"மற்றத்தெம்வங்கள், வேதனைப்படும் இறக்கும்
பிறக்கும் மேல்வினையும் செய்யும்"

எனவும் வரும் பாடல்கள் இங்கு அறியத்தகும்.

இவற்றையுடைய பிறதேவர்களைப்பற்றிக் கரையேறுவோமென்பது "குருடும் குருடும் குருட்டாட்டமாடிக், குருடும் குருடும் குழிவீழ்ந்தவாறே" என்றபடியே யாம் என்க. பயந்து - பயன் பெறத்தந்து, துணியும் - கிழித் தலையுடைய. தோலும், கோவணமும், உடையும், பாம்பு உடலில் தொங்க அணியும் ஆபரணமும் ஆக (அவை தனக்கு அழகு செய்வனவாக உடையவன்) அடியார்கள் பாவம் அற இன்னருள் பயந்து, தோல் முதலியவை தனக்கு அழகு செய்வனவாக உடையவன் என வினை முடிபு செய்க. இப்பாடலுக்குப் பொழிப்பு உரைக்கப்பட்டது. துணி - துணித்தல் முதனிலைத் தொழிற்பெயர்.

5. அமரர்கூடி, குழலின் - புல்லாங்குழலின் ஓசைபோல, வண்டு முரல் - வண்டுகள் ஒலிக்கின்ற, மெல்லியன - மெல்லியனவாகிய (பூவுலக) மலர்களும். பொன்மலர்கள் - (வானுலகமலர்களாகிய) பொன் மலர்களும் கொண்டு (கட்டிய) இண்டை - இண்டைமாலையை. கடவுள் என்று - (இவரே) கடவுள் என்று, கழலின்மிசை - திருவடியில், புனைவார் - சாத்துவார்கள். தொழுதலும் வழிபாடும் உடையார் - இவற்றின் பயனாக. இவர்கள் உள்ளம்பற்றி வரும் துன்பமும், உடலம்பற்றிவரும் நோயும் இலராவர்கள். (அங்ஙனமாக அருள்புரிந்து) கொதிக்கும் மழுவை ஏந்திய கையையுடையவன் உறைவது அவளிவள் நல்லூரே. இது பின் னீரடிக்கும் பொழிப்பு உரை. தேவர்கள் பொன்னுலகத்தவர்கள். அவர் களுக்குக் கற்பகவிருட்சம் தருவது சொன்மலர் ஆதலால் அம்மலர்களை யும் இங்கு நந்தனவனங்களில் வண்டு மொய்க்கும் மலர்களையும் கலந்து

துஞ்சலில ராயமரர் நின்றுதொழு தேத்தவருள் செய்து
நஞ்சமிட றுண்டுகரி தாகவெளி தாகியொரு நம்பன்
மஞ்சுறநி மிர்ந்துமைந டுங்கவக லத்தொடுவ ளாவி
அஞ்சமத வேழவுரி யானுறைவ தவளிவண லூரே. 6

கூடரவ மொந்தைகுழல் யாழ்முழவி னோடுமிசை செய்யப்
பீடரவ மாகுபட ரம்புசெய்து பேரிடப மோடும்
காடரவ மாகுகனல் கொண்டிரவி னின்றுநட மாடி
ஆடரவ மார்த்தபெரு மானுறைவ தவளிவண லூரே. 7

இண்டைகட்டிப் புனைகின்றனர். பொன் மலர்களில் வண்டு மொய்க்கா தாகலின் இங்ஙனம் கொள்க. அமரர்கூடி வண்டு முரல் மெல்லியன (மலர்களும்) பொன்மலர்கள் கொண்டு இண்டைகட்டி "இவரே (சிவ பெருமான்) கடவுளென்று (உணர்ந்த உள்ளத்தினராய்) கழலின் மிசை புனைவார் என்பது முன்னிரண்டடியின் பொருள்கோள். இண்டை - மாலை விசேடம். வழிபாடு - நூல்வழி, ஆசிரியன் கற்பித்தவழி (ஆசரணை) முறையே நியமமாகச்செய்யும் சரியை கிரியை முதலியன. அசுரர்களால் வரும் துன்பமும், அவர்கள்போரால் வரும் நோயும் அமரர்க்கும் உண்டு. ஆகலின் அவை இலராவர் எனத் தேவர்கள் இங்கு வந்து வழிபட்டுப் பேறுபெறுமாறு கூறியபடி. குழலின் - ஐந்த னுருபு ஒப்புப் பொருள்.

6. அமரர். துஞ்சல் இலராய் - சோம்பலின்றி. நின்று தொழுது ஏத்த அருள்செய்து. நஞ்சம் உண்டு, (அதனால்) மிடறு - கழுத்து. கரிது ஆய - கரியது ஆகிய. வெளிது ஆகி - ஏனைய திருவுருவம் படிகம்போல வெண் மையுடையது ஆகப்பெற்று (உடைய) ஒப்பற்ற. நம்பன் - சிவபெருமான். சதாசிவ மூர்த்தியின் திருவுருவம் படிகம் போன்றது ஆதலின், வெளியது ஆய ஒரு நம்பன் என்றார். மஞ்சு - மேகம்; இங்கு வானத்தைக் குறித்தது, உற - பொருந்த. நிமிர்ந்தமை - யானையுரிக்கும் அவதரம். மதவேழம் அஞ்ச மஞ்சு உற நிமிர்ந்து (அதன் தோலை உரித்து) உமைநடுங்க. அகலத்தோடு- மார்பில். அளாவி - சேர்த்துப் (போர்த்த). உரியான் - தோலையுடையவன். அஞ்ச (உரித்த) மதவேழ உரியான் என்க. போர்த்த. உரித்த, என ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. அன்றி வினை முடிபு கொள்ளுமாறு இல்லை.

7. மொந்தை, குழல், யாழ் முதலிய வாத்தியங்கள் முழவினோடும். கூடு அரவம் - ஒத்துவரும் ஓசைகளாக. இசைசெய்ய - ஒலிக்க. பீடு - அரவம் ஆகு - பெரிய ஓசைதரும். படர் - பரவுகின்ற. அம்பு செய்து- தோள்வீசி யாடும்போது சடையில் உள்ள கங்கைநீர் ததும்பும். ஆதலால்

ஒருவரையு மேல்வலிகொ டேனெனவெ ழுந்தவிற லோனிப்
பெருவரையின் மேலொர்பெரு மானுமுளனோவெனவெகுண்ட
கருவரையு மாழ்கடலு மன்னதிறல் கைகளுடை யோனை
அருவரையி லூன்றியடர்த் தானுறைவ தவளிவண லூரே. 8

பொறிவரிய நாகமுயர் பொங்கணைய ணைந்தபுக ழோனும்
வெறிவரிய வண்டறைய விண்டமலர் மேல்விழுமியோனும்
செறிவரிய தோற்றமொடு வாற்றன்மிக நின்றுசிறி தேயும்
அறிவரிய ஞயபெரு மானுறைவ தவளிவண லூரே. 9

அதனை அஃபுசெய்து - என்பதனுல் தெரிவித்தார். அம்புசெய்து - தண்ணீர் விசிறச்செய்து எனக் கொள்ளல் வேண்டும். பேர் இடபமோடும் - பெரிய இடப வாகனத்தோடும். காடு-சுடுகாட்டில் அரவம் ஆகு-சடசட ஒலிக்கும் ஓசையையுடைய. கனல் கொண்டு - நெருப்பையேந்தி, இரவில் நின்று நடம் ஆடி. அரவம் ஆர்த்த - பாம்பைக் கச்சையாகக் கட்டிய பெருமான். இதன் கருத்து; மொந்தை முதலிய வாத்தியங்கள் ஒலிக்கச் சடையிற் கங்கைநீர் ததும்பக் கனலேந்தி, இரவில், இடபமோடும் நின்று நடம் ஆடிப் பாம்பைக் கட்டிய பெருமான் உறைவது அவளிவள்நல்லூர் என்பதாம். அறக்கடவுளே இடபமாகலான் மகா சங்கார காலத்தும் அழியாது நிற்க, அதனோடும் நின்று நடம் ஆடி என்றார்.

8. மேல் - எனக்குமேல், ஒருவரையும். வலிகொடேன் - வலிமையுடையவராகக் காணப்பொறேன் என எழுந்த. விறலோன் - வலியோனாகிய (இராவணன்) 'இப்பெருவரையின் மேல்ஓர் பெருமானும் உளனோ' எனக் கோபித்த. கருவரையும் - கரியமலையும். ஆழ்கடலும், அன்ன - போன்ற. மலைபோன்ற (திறல்) வலிமை. கடல்போன்ற கைகள் என்க. உடையானை - உடையவனாகிய இராவணனை. அரு, வரையில் - (கைலை) மலையின்கீழ். ஊன்றி - விரல் ஊன்றி. அடர்த்தான் உறைவது அவளிவள்நல்லூரே.

9. பொறி - புள்ளிகளையுடைய. வரி - நெடிய. நாகம் - பாம்பாகிய. உயர் - உயர்ந்த. பொங்கு - உடல் பெருக்கும். அணை - மெத்தையை. அணைந்த - சேர்ந்த. புகழோன் - திருமால். வெறி - வாசனையறிகின்ற. வரிய - கீற்றுக்களையுடைய. (வண்டு) அறைய - ஒலித்து ஊத. விண்ட (அதனால்) விரிந்த, தாமரை மலர்மேல் வசிக்கின்ற. விழுமியோன்-பிரமன். அரிய செறிவு - பிறர்க்கு அரியதாகிய வலிமையையுடைய. தோற்றம் ஒடு - தோற்றத்தோடு. ஆற்றல் மிக நின்று, வினைமுடிக்கும் திறன் மிக. நின்று - (தேடும் தொழிலில்) நின்றும் சிறிதேயும் (அவர்களால்) அறிவு அரியன் ஆய-அறிய முடியாதவனாகிய. பெருமான் உறைவது அவளிவள் நல்லூரே,

கழியருகு பள்ளியிட மாகவடு மீன்கள்கவர் வாரும்
வழியருகு சாரவெயி னின்றடிசி லுள்கிவரு வாரும்
பழியருகி னுரொழிக பான்மையொடு நின்றுதொழுதேத்தும்
அழியருவி தோய்ந்தபெரு மானுறைவ தவளிவண லூரே. 10

ஆனமொழி யானதிற லோர்பரவு மவளிவண லூர்மேல்
போனமொழி நன்மொழி களாயபுகழ் தோணிபுர வூரன்
ஞானமொழி மாலைபல நாடுபுகழ் ஞானசம் பந்தன்
தேனமொழி மாலைபுகழ் வார்துயர்க ளயதிலர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. கழியருகு ஆற்றங்கழி யருகிலிருக்கும். பள்ளி - சமணப்பள்ளி இடமாக நின்று. அடும் - சமைத்து உண்பதற்குரிய (மீன்கள்) கவர்வார் - கொள்பவர்களாகிய அமணரும், வீதியோரங்களில் உச்சிவேளையில் நின்று உணவின் பொருட்டாக வருபவர்களாகிய, பவுத்தரும். உச்சிப் பொழுதில் பிச்சை பெற்று உண்பது. பௌத்த சந்நியாசியின் முறை. மணிமேகலையில்:

"அங்கையிற்கொண்ட பாத்திரம் உடையோன்
கதிர்சுடும் அமையத்துப் பனிமதிமுகத்தோன்"

என்பது அறிக. தொழுது ஏத்தும் அழி அருவி தோய்ந்தபெருமான் - தொழுதேத்தும் அன்பர்கள் தம் கண்களின்றும் அழிந்து வருகின்ற அருவி போன்ற தண்ணீரில் நீராடிய பெருமான். உறைவது அவளிவள்நல்லூர். "பாந்தள் பூணும் பரிகலம் கபாலம், பட்டவர்த்தனம் எருதன்பர் வார்ந்த கண்ணருவி மஞ்சனசாலை மலைமகள் மகிழ்பெருந்தேவி..." என்னும் திருவிசைப்பாவால் தோய்தல் அறிக. பழியருகினுர் - பழிக்கு அடுத்துச் சொல்வதாகிய பாவத்தை யுடையவர்கள்.

11. ஆன - பொருளுடையதாகிய. மொழியான - புகழையுடைய. திறலோர் - மெய்ஞ்ஞானிகள். பரவு - துதிக்கின்ற. அவளிவள்நல்லூர் மேல். தோணிபுரவூரன், ஞானசம்பந்தன், தேனமொழிமாலை புகழ்வார்கள் துயர்கள் தீயது இலர்தாம் ஏ - என்பது வினை முடிபு. போனமொழி - திசைகள்தோறும் பரவிய வார்த்தை நன்மொழிகளாய - நல்ல வார்த்தைக ளாகிய, புகழ். என்பது:- "இசையாற்றிசை போயதுண்டே" என்னும் சிந்தாமணிபோன்றது. புகழ்த் தோணிபுரம் - புகழையுடைய தோணி புரம் - சந்தம் நோக்கித் திரியாதாயிற்று. ஞானம் மொழிமாலை நலநாடு புகழ் - சிவஞானங் கமழ்கின்ற திருப்பதிகங்களால் நல்ல நாடுகளெல் லாம் புகழ்கின்ற ஞானசம்பந்தன். மொழியை மலராகவும், பதிகங்களை மாலையாகவும் உணர்த்தினமையால் (சிவ) ஞானம் - மணம் ஆகிறது. ஏகதேச உருவகம். தேன் - இனிமையையுடைய. துயர்கள் தீயது இலர் - துன்பங்களும், அவற்றின் காரணமான வினையும் இலர் ஆவர்.

# 83 திரு நல்லூர்

## 341 பதிகவரலாறு

சிரபுரச் செம்மலார், மறைவல்லோர் எதிர்கொள்ளச்சென்று, பத்தரும் பரிசனங்களும் உடன் பரவக் கோபுரம் தொழுது பாடிய பரவுசொற் பதிகம் இது.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

வண்டிரிய விண்டமலர் மல்குசடை தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபர மன்பதிய தென்பரத னயலே
நண்டிரிய நாரையிரை தேரவரை மேலருவி முத்தம்
தெண்டிரைகண் மோதவிரி போதுகம ழுந்திருந லூரே. 1

பல்வளரு நாகமரை யாத்துவரை மங்கையொரு பாகம்
மல்வளர்பு யத்திலணை வித்துமகி ழும்பரம னிடமாம்
சொல்வளரி சைக்கிளவி பாடிமட வார்நடம தாடிச்
செல்வமறை யோர்கண்முறை யேத்தவள ருந்திருந லூரே. 2

நீடுவரை மேருவில தாகநிகழ் நாகமழ லம்பால்
கூடலர்கண் மூவெயிலெ ரித்தகுழ கன்குலவு சடைமேல்
ஏடுலவு கொன்றைபுன னின்றுதிக ழுந்நிமல னிடமாம்
சேடுலவு தாமரைக ணீடுவய லார்திருந லூரே. 3

1. (வண்டு இரிய) விண்ட - விரிந்த. (மலர்) மல்கு - நிறைந்த சடை. தாழ-தொங்க. பண்டு - ஆதிகாலந் தொட்டே, எரிய கைக்கொண்ட பரமன் பதி அது என்பர். அதன் - அப்பதியின். அயலே - பக்கத்தில். (நண்டு) இரிய - ஓட. (நாரை இரைதேட). வரைமேல் அருவி முத்தம் - சைய மலைமேல் அருவி அடித்துவரும் முத்தங்களை, காவிரிநதி தெள்ளிய திரைகளால் வீச, அவைமோதுவதால் விரிந்த அரும்புகள் கமழுந்திரு நல்லூர்.

2. வளர்இசை - இசைவளரும். சொல்கிளவி - சொற்களாலாகிய சாகித்தியங்களை (இதனை 'உரு' என்பர் இசைநூலார், இப்பொழுது 'உருப்படி எனக் குழுஉக் குறியாய் வழங்கிவருகிறது.) வளரும் - புகழ் வளரும் திருநல்லூர்.

3. நீடுவரைமேரு - நெடிய மலையாகிய மேரு, (வில் அது ஆக) நிகழ் - பொருந்திய (நாகம்). நாண் ஆக - (என்பது இசையெச்சம்). அழல்

கருகுபுரி மிடறர்கரி காடரெரி கையதனி லேந்தி
அருகுவரு கரியினுரி யதளர்பட வரவரிடம் வினவில்
முருகுவிரி பொழிலின்மண நாறமயிலாலமர மேறித்
திருகுசின மந்திகனி சிந்துமது வார்திருந லூரே. 4

பொடிகொடிரு மார்பர்புரி நூலர்புனல் பொங்கரவு தங்கும்
முடிகொள்சடை தாழவிடை யேறுமுத லாளரவ ரிடமாம்
இடிகொண்முழ வோசையெழிலார்செய்தொழி லாளர்விழமல்க
செடிகொள்வினை யகலமன மினியவர்கள் சேர்திருந லூரே. 5

அம்பால் - (திரிபுரம் எரித்த அம்பின் நுனி நெருப்பு ஆயினபடியால் அழல் அம்பு எனப்பட்டது.) கூடலர் - பகைவர் (காரணப்பெயர்) ஏடுஉலவு - இதழ்களையுடைய. சேடு உலவு தாமரை - உயர்வு பொருந்திய தாமரை. "பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை" என்றபடி.

4. கருகுபுரி - கருகுதலையுடைய. (கறுத்த) மிடறர் - கண்டத்தை யுடையவர். காடு - காட்டில், கை அதனில் எரி ஏந்தி. அருகு - சமீபத்தில் உரி அதளர் - உரித்த தோலையுடையவர். பட அரவர். முருகு - வாசனை, (மயில்) ஆல - ஆட. திருகுசினம் - மாறுபட்ட கோபம். இவ்வாடலுக்குப் பரிசில் வழங்கிலவேயென்று, மரங்களின்மேற் சினந்த மந்திகள், அம் மரங்களினின்று கனிகளை யுதிர்க்கும் திருநல்லூர் எனச் சோலைவளம் கூறியவாறு.

5. பொடிகொள் - திருநீறு பூசிய, திருமார்பர். புனல் - கங்கை. முதல் ஆளர் - முதன்மையுடையவர். இடிகொள் - இடியோசையைக் கொண்ட, முழவு ஓசையுடன். எழில் ஆர் செய்தொழிலாளர் - விழா விற்குரிய சிறப்புக்களை அழகுபொருந்தச் செய்கின்ற தொழிலாளர்களால். விழா - திருவிழா. மல்க - சிறக்க செடிகொள் வினைஅகல - அத்திருவிழாத் தரிசன பலத்தால் துன்பத்தைத் தருகின்ற வினை அகலக் "கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்" ஆதலினால் தரிசித்தோர் பெறும் பலனைக் கூறியருளினர். மனம் இனியவர்கள். (தநுகரணபுவன போகங்கள் வினைக்கேற்ப அமைதலால்) மனம் முதலியன நல்லனவாகப் பெற்ற புண்ணியம் உடையவர்கள்.

புற்றரவர் நெற்றியொர்க ணொற்றைவிடை யூர்வரடை யாளம்
சுற்றமிருள் பற்றியபல் பூதமிசை பாடநசை யாலே
கற்றமறை யுற்றுணர்வர் பற்றலர்கண் முற்றுமெயின் மாளச்
செற்றவ ரிருப்பிடநெ ருக்குபுன லார்திருந லூரே. 6

பொங்கரவ ரங்கமுடன் மேலணிவர் ஞாலமிடு பிச்சை
தங்கரவ மாகவுழி தந்துமெய்து லங்கியவெண் ணீற்றர்
கங்கையர வம்விரவு திங்கள்சடை யடிகளிடம் வினவில்
செங்கயல்வ திக்குதிகொ ளும்புனல தார்திருந லூரே. 7

ஏறுபுகழ் பெற்றதெனி லங்கையவர் கோனையரு வரையில்
சீறியவ னுக்கருளு மெங்கள்சிவ லோகனிட மாகும்
கூறுமடி யார்களிசை பாடிவலம் வந்தயரு மருவிச்
சேறுகமரானவழி யத்திகழ்த ருந்திருந லூரே. 8

6. புற்றில் வாழும் பாம்பை அணிபவர், நெற்றிக்கண்ணோடு ஒரு விடையை ஏறிச் செலுத்துபவர். அடையாளம் - (இவை அடையாளமாக.) சுற்றம் - சுற்றமாக. இருள்பற்றிய - இருளில் விளக்கு ஏந்திய. பல் பூதம் - பலபூதம் இசைபாட (உடையவர்). நசையால் - விருப்பத்தோடு. முனிவர்கள் .மறைகற்று உணரப்படுபவர். பற்றலர்கள் - பகைவர்களின் எயில்முற்றும் மாள - மதில்முழுதும் ஒழியும்படி. செற்றவர் - கோபித்தவர். நெருக்கு புனல் ஆர்-மிகுந்த நீர்வளத்தையுடைய. சந்தம்நோக்கி. நெருங்கு என்பது வலித்தல் விகாரம்பெற்றது. ‘‘பொன்றி மணிவிளக்குப் பூதம் பற்ற’’ என்ற திருத்தாண்டகத்தின்படி இருள்பற்றிய என்பதற்குப் பொருள் கொள்க.

7. அங்கம் - எலும்பை. (உடல்மேல் அணிவர்) ஞாலம் - பூமியிலுள்ளார். இடு(ம்) பிச்சைக்கு. தங்கு - பொருந்திய. அரவம் ஆக - ஆரவாரத்தோடு. உழிதந்து - சுற்றித்திரிந்து. கங்கை. அரவம் (விரவு -) திங்கள் - அணிந்த சடையையுடைய அடிகள். வதி - சேற்றில், செங் கயல் குதிகொளும். புனல்வளம் மிக்க திருநல்லூர்.

8. ஏறுபுகழ் - மிக்க புகழ்பெற்ற. தென் இலங்கையர். கோனை - அரசனை, சீறி - முதற்கண்கோபித்து, (பிழைக்கிரங்கி அவன் வேண்ட) அவனுக்கு அருளும். அடியார்கள் இசைபாடி வலம் வருகையில், அயரும் - (அவர்கள் கண்களினின்றும்) சோரும். அருவி - ஆனந்தக் கண்ணீரருவியானது (அருகிலுள்ள) நில வெடிப்புக்கள் எல்லாம் அழியத் திகழ்தரும் - விளங்கும் திருநல்லூர். மிகையுயர்வு நவிற்சியணி.

மாலுமலர் மேலயனு நேடியறி யாமையெரி யாய
கோலமுடை யானுணர்வு கோதில்புக ழானிடம தாகும்
நாலுமறை யங்கமுத லாறுமெரி மூன்றுதழ லோம்பும்
சீலமுடை யார்கணெடு மாடம்வள ருந்திருந லூரே. 9

கீறுமுடை கோவணமி லாமையிலொ லோவியதவத்தர்
பாறுமுடன் மூடுதுவ ராடையர்கள் வேடமவை பாரேல்
ஏறுமட வாளொடினி தேறிமுனி ருந்தவிடமென்பர்
தேறுமன வாரமுடை யார்குடிசெ யுந்திருந லூரே. 10

திரைகளிரு கரையும்வரு பொன்னில வுந்திருந லூர்மேல்
பரசுதரு பாணியைந லந்திகழ்செய் தோணிபுர நாதன்
உரைசெய்தமிழ் ஞானசம் பந்தனிசை மாலைமொழி வார்போய்
விரைந்துசெய்மலர் தூவவிதி பேணுகதி பேறுபெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

9. மாலும் - திருமாலும், மலர்மேல் (வாழும்) அயனும். நேடி - தேடி அறியாமை - அறியாவாறு (எரி ஆய கோலம் உடையான்) கோதில் உணர்வு - இயல்பாகவே பாசங்களி னீங்கிய, முற்றும் உணர்தலாகிய வியாபக அறிவும், கோது இல் - குற்றமற்ற. புகழான் - புகழுமுடையவன்.

10. கீறும் - கிழிக்கப்படுகின்ற, உடை. (அறுவை, துணி என்னும் காரணப் பெயர் குறிப்பதையும் அறிக) உடையும், கோவணமும் இல்லாமையினால். ஒல் - ஆடையொலித்தல். ஓவிய - நீங்கிய, தவத்தாராகிய சமணத் துறவிகளும். பாறும் உடல் - அழியக்கூடிய உடலை, மூடு துவராடையர்கள் - உடற்பற்று நீங்காதவராய்த் துவராடையால் போர்த்துக்கொள்ளும் பவுத்தத்துறவிகளும், கொண்ட வேடத்தைக் கருதற்க. மடவாளோடு இனிது எருது ஏறித் தொன்றுதொட்டிருந்த இடம், தேறும்-சிவனே முழுமுதற்கடவுள் எனத்தெளிந்த, வாரம்-அன்பு.

11. திரைகள் - அலைகள், இருகரையும் வரு, பொன்னி - காவிரி, நிலவும் - செழிப்பிக்கும், திருநல்லூர், என்றது. மேல் (முதற்பாடலில்) வரைமேலருவி...கமழும் என்றதனாற் குறிஞ்சி நிலமாகக் கருதற்க, மருத நிலமே என்பதற்கு. பரசுதருபாணியை - மழுவேந்திய கரதலம் உடைய சிவபெருமானை, நலம் நிகழ் - வளத்தால் விளங்குகின்ற செய் - வயலை உடைய, தோணிபுரம், நாதன் - தலைவராகிய மொழிவார் - பாடுவோர், விதி - பிரமனும், விரை. - வாசனை.

# 84 திருப்புறவம்

342 பதிகவரலாறு

சீகாழிப் பதிகங்களுள் ஒன்றாய்க், கிளந்தோதப்படாதது.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

பெண்ணிய லுருவினர் பெருகிய புனல்விர வியபிறைக்
கண்ணியர் கடுநடை விடையினர் கழறொழு மடியவர்
நண்ணிய பிணிகெட வருள்புரி பவர்நணு குயர்பதி
புண்ணிய மறையவர் நிறைபுக ழொலிமலி புறவமே. 1

கொக்குடை யிறகொடு பிறையொடு குளிர்சடை முடியினர்
அக்குடை வடமுமொ ரரவமு மலரரை மிசையினில்
திக்குடை மருவிய வுருவினர் திகழ்மலை மகளொடும்
புக்குட னுறைவது புதுமலர் விரைகமழ் புறவமே. 2

1. பெண் - இயல்பொருந்திய. உருவினர் - வடிவம் உடையவர், பெருகிய புனல் - கங்கை. விரவிய - கலந்த. பிறைக்கண்ணியர் - பிறை யாகிய அடையாளமாலையையுடையவர். கண்ணி - இப்பொருளாதலைக் "கண்ணிகார் நறுங்கொன்றை" என்பதாலும் அறிக. (புறம் 1) - கடுநடை விரைந்த நடையையுடைய (விடை) கடி - விரைவு "கடியென்கிளவி ... விரைவே விளக்கம் ... ஆகும்மே" (தொல், சொல் உரி 7) என்பதால் அறிக. அது கடு எனத் திரிந்து நின்றது. (கழல் தொழும் அடியவரது) நண்ணிய - அடைந்த பிணி கெட அருள் புரிபவர், நணுகு - சேரும் உயர்பதி - (புகழ ஒலி) மலி - மிகுந்த புறவமே.

2. கொக்கு உடை இறகு - கொக்குருவோடுவந்த அசுரனைக் கொன்று அதற்கறிகுறியாய் அவ்விறகைத் தலையில் அணிந்தனர். "கொக் கினிற கதணிந்து நின்றாடி தென்கூடல்" என்னும் திருக்கோவையாரிலும் வருவதறிக. இறகோடும். பிறையோடும் குளிர்கின்ற சடைமுடியினர். அக்குஉடைவடமும். - அக்குப்பாசியாலாகிய மாலையும். ஒரு அரவமும், மலர் - விளங்கும். அரைமிசை - இடுப்பில். திக்கு உடை மருவிய உரு வினர் - திகம்பரர் (நிர்வாண வடிவினர்; பிட்சாடன அவதாரம்.) மலை மகளொடும் உறைவதுபுறவமே.

கொங்கியல் சுரிகுழல் வரிவளை யிளமுலை யுமையொரு
பங்கிய றிருவுரு வுடையவர் பரசுவொ டிரலைமெய்
தங்கிய கரதல முடையவர் விடையவ ருறைபதி
பொங்கிய பொருகடல் கொளவதன் மிசையுயர் புறவமே. 3

மாதவ முடைமறை யவனுயிர் கொளவொரு மறலியை
மேதகு திருவடி யிறையுற வுயிரது விலகினர்
சாதக வுருவியல் கானிடை யுமைவெரு வுறவரு
போதக வுரியதண் மருவின ருறைபதி புறவமே. 4

காமனை யழல்கொள விழிசெய்து கருதலர் கடிமதில்
தூமம துறவிறல் சுடர்கொளு வியவிறை தொகுபதி
ஓமமொ டுயர்மறை பிறவிய வகைதனொ டொளிகெழு
பூமக னலரொடு புனல்கொடு வழிபடு புறவமே. 5

3. கொங்கு இயல் - வாசனை பொருந்திய, சுரிகுழல் - சுரிந்த கூந்தல். வரிவளை - வரிகளையுடைய வளையல். (உமை) ஒரு பங்கு இயல் - ஒருபாகம் பொருந்திய, திருஉருஉடையவர்; அர்த்தநாரீசர் (பரசுவொடு - மழுவுடன். பரசு+ஒடு=பரசொடு என்று ஆகற்பாலது, உடம்படுமெய்பெற்றது. "உக்குறள் கெடும்" என்னுது "ஓடும்" என்ற இலேசினுல்.) இரலை - மான், கரதலம் தங்கிய மெய்யுடையவர் எனக் கூட்டுக. பொரு - கரையைமோதும். பொங்கிய - கடல் என்க. கடல் உலகைக் கொள்ள. அக்கடலின்மேல் உயர்ந்து தோன்றிய புறவம்.

4. மறையவன் - மார்க்கண்டேயர். மேதகு - சிறந்த, (திருவடி) இறையுற - சற்றே பொருந்திய மாத்திரத்தில் (உயிர் விலகுவித்தார்) விலகினர் - பிறவினை விகுதி குன்றியது. கான் இடை - காட்டில். (உமை) வெருவுஉற - அஞ்ச. சாதகஉரு - பூதாகிருதியோடு, உரு இயல் - மூன்றும் வேற்றுமைத் தொகை. போதகம் - யானை. அதள் - தோல். மருவினர் - போர்த்தியவர்.

5. காமனை, விழிசெய்து - பார்த்து. கடி - காவல் தூமம் உற - புகையெழுமாறு. விறல்சுடர் கொளுவிய - வலிய நெருப்புப் பற்றச்செய்த. இறை - இறைவன். தொகுபதி - தங்கியிருக்கும் தலம். பூமகன் - பிரமன். (அவன் வழிபாடு பின்னிரண்டடிகளிலும் கூறப்படுகிறது. ஓமம், மந்திரம் இய(ம்) வகை - வாத்திய வர்க்கங்கள். ஒளி - தீபம், அலர், புனல், பிற - ஏனையவும். கொடு - கொண்டு.

சொன்னய முடையவர் சுருதிகள் கருதிய தொழிலினர்
பின்னையர் நடுவுணர் பெருமையர் திருவடி பேணிட
முன்னைய முதல்வினை யறவரு ளினருறை முதுபதி
புன்னையின் முகைநிதி பொதியவிழ் பொழிலணி புறவமே. 6

வரிதரு புலியத ளுடையினர் மழுவெறி படையினர்
பிரிதரு நகுதலை வடமுடி மிசையணி பெருமையர்
எரிதரு முருவின ரிமையவர் தொழுவதொ ரியல்பினர்
புரிதரு குழலுமை யொடுமினி துறைபதி புறவமே 7

6. முன்னிரண்டடிகளிலும் வழிபடும் அடியார் திறன் கூறப்படுகிறது. சொல்நயம் உடையவர். நயம் - இனிய பொருள்களடங்கிய. சொல் - தோத்திர மொழிகளையுடையவர். சுருதிகள் - வேதம் முதலிய நூல்கள். கருதிய - கருதிச் சொல்லப்பட்ட. தொழிலினர் - பணிபுரிபவர். பின்னையர் - பெரியோர்க்குப் பின் நின்று பணிபுரிவோர். இதனை "பூவொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்" என்ற அப்பர் திருவாக்காலும், "பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே" என்ற புறநானூற்றாலும் அறிக. நடு உணர் பெருமையர் - தூல பஞ்சாட்சரத்தில் நடு ஆகிய பதியின் தன்மையை உணரும் பெருமையர், வேதத்தின் நடுவில் பிரதி பாதிக்கப்படும் பொருள் சிவனேயென்ற தன்மையை யுணரும் பெருமையர் எனினும் ஆம். முன்னைய - தொன்றுதொட்டன ஆகிய மாயை, கன்மங்களும். முதல் - ஆணவமும் (ஆகிய) வினை - மலங்கள். ஈற்றடியில், புன்னை யரும்பு பொன்முடிப்பாகவும். அதின் மகரந்தம் பொன் ஆகவும், அது மலர்வது பொதியவிழ்வதாகவும் உருவகித்துச் சோலைவளம் கூறியவாறு, சீகாழி கடலை யடுத்திருப்பதால் நெய்தல் வருணனையும் வயல் சூழ்ந்திருப்பதால் மருதவருணனையும், இவ்விரு வருணனைகளும் பயில ஆங்காங்கு வருவது அறிந்து மகிழத்தக்கது. இரண்டாம் அடியில் முரண்தொடை, நடு - சிவம்.

7. வரிதரு - வரிகளையுடையபுலி. அதள் - தோல். உடையினர் எறி-பகைவர்மேல் (வீசும் மழுப்படையினர்,) பிரிதரு-யாகத்திலிருந்தும் பிரிந்து வந்த, நகுதலை - நகுவெண்டலையை. வடம் - மாலையாக. முடிமிசை - தலையில் அணிபெருமையர். இதிற் பெருமையாவது:- கொல்ல வந்த அதன் வலி கெடுத்து அணியெனக்கொண்டமை. ஆன்மாக்களை வினை வழி அழுத்தும் ஆணவ மலத்தின் வலி கெடுத்து. பேரின்பத்திலழுத்து மாறு செய்யவல்லான்தானே என்பதுணர்த்தி நின்றமை இக்கருத்தை. முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள், சுத்த அநுபோகத்தைத் துய்த்தலணு..."இன்பங் கொடுத்தலிறை இத்தை விளைவித்தல் மலம்.

வசிதரு முருவொடு மலர்தலை யுலகினை வலிசெயும்
நிசிசர னுடலொடு நெடுமுடி யொருபது நெரிவுற
ஓசிதர வொருவிர னிறுவின ரொளிவளர் வெளிபொடி
பொசிதரு திருவுரு வுடையவ ருறைபதி புறவமே. 8

தேனக மருவிய செறிதரு முளரிசெய் தவிசினில்
ஊனக மருவிய புலனுகர் வுணர்வுடை யொருவனும்
வானகம் வரையக மறிகடல் நிலனெனு மெழுவகைப்
போனக மருவின னறிவரி யவர்பதி புறவமே. 9

அன்புடனே கண்டு கொளப்பா" என்னும் உண்மை விளக்கத்தால் உணர்க. எரிதரும் உருவினர், தரும்:- உவமவாசகம்; போன்ற என்னும் பொருளில் வருவதால். புரிதரு - சடைபின்னிய. குழல் (உமை)-ஐம்பால் ஆகிய குழலில். ஒருபால் - புரிதருகுழல் என்றது, உமையொடும் இனிது உறைபதி புறவம்.

8. வசிதரும் உருவொடு - வாளேந்திய கோலத்தோடு, (வசி-வாள்) மலர்தலையுலகினை - இடம் அகன்ற இவ்வுலகத்தை. வலிசெயும் - தன் வலியால். துன்புறுத்திய நிசிசரன் - அரக்கனாகிய இராவணனது (நிசிசரன்-இரவிற் சஞ்சரிப்போன்) உடலொடும், நெடும்முடி ஒருபதும் - பத்துத் தலைகளும், நெரிவு உற - அரைவுற்று. ஓசிதர - கசங்க. (ஒருவிரல்) நிறுவினர் - ஊன்றியருளியவர். வெளிபொடி - வெண்மையை யுடைய தாகிய திருநீறு. (வெள்+இ=வெளி - வெண்மையையுடையது "வெள்ளிப் பொடிப் பவளப் புறம்பூசிய வித்தகனே" என்பதும் காண்க. (அப்பர் திரு விருத்தம்) சந்தம்நோக்கி வெளியென நின்றது விகாரம். பொசிதரு - பூசப் பெற்ற, திரு உரு உடையவர்.

9. அகம் - உள்ளிடத்தில். தேன்மருவிய - தேன்பொருந்திய. செறி தரு - இதழ்நெருங்கிய, தவிசு செய்முளரியினில் எனமாறிக்கூட்டி ஆசன மாகக்கொண்ட தாமரைப்பூவிலிருந்து சிவபெருமான் திருவருளாணை மேற்கொண்டு உயிர்வர்க்கங்கட்குத் தநுகரண புவனபோகங்களைப் படைவிக்கின்ற பிரமன் என்பது இரண்டாம் அடியின் கருத்து:- ஊன் - உடம்பு; தநு. அகம் - மனம் முதலிய கரணம் (உபலட்சணம்). மருவிய (நுகர்பொருள்கள்) பொருந்திய, புலன் - புலம்: இடம்; புவனம், நுகர்வு - போகமுமாகிய இவற்றைப் படைக்கும். உணர்வு உடை - அறிவை யுடைய, ஒருவனும் (பிரமனும்,) ஆகாயம் பூமியாகிய ஏழுஉலகங்களையும் உணவாக உடைய திருமாலும். வரை அகம் - மலைநிலம். பூமி - மறிகடல் நிலன் எனப்பட்டது.

கோசர நுகர்பவர் கொழுகிய துவரன துகிலினர்
பாசுர வினைதரு பளகர்கள் பழிதரு மொழியினர்
நீசரை விடுமினி நினைவுறு நிமலர்த முறைபதி
பூசுரர் மறைபயி னிறைபுக ழொலிமலி புறவமே. 10

போதியல் பொழிலணி புறவநன் னகருறை புனிதனை
வேதிய ரதிபதி மிகுதலை தமிழ்கெழு விரகினன்
ஓதிய வொருபது முரியதொ ரிசைகொள வுரைசெயும்
நீதிய ரவரிரு நிலனிடை நிகழ்தரு பிறவியே. 11

திருச்சிற்றம்பலம்

10. கோசரம் - நீரிற் சஞ்சரிக்கும் மீன்களை. நுகர்பவர் - உண்பவர்களாகிய சமணர்களும். கோ - நீர். துவர் கொழுகியன - மருதந்துவரால் தோய்த்தனவாகிய. (கொழுகிய கு, சாரியை) துகிலினர் - ஆடையை உடையவர்கள். பாசுர வினைதரு - (ஆரியத்தொடு செந்தமிழ்ப்) பயனறிகிலாது வெறும்பாட்டைப் பாடுதலாகிய தொழிலையுடைய. பளகர்கள் - பாவிகள். பழிதரு மொழியர் - பிறரைப் பழித்துப் புறங்கூறும் மொழியை உடையவர்களுமாகிய. நீசரைவிடும்-விடுங்கள் இனி. நினைவுறும்-தியானியுங்கள். நின்மலப் பொருளாகிய சிவபெருமானது உறையும்பதி-புறவமே.

11. போது இயல் - மலர்களையுடைய பொழில் அணி - சோலை சூழ்ந்த (புறவநன்னகர் உறை.) புனிதனை - தூயவுடம்பினனாகிய சிவ பெருமானை. தலைதமிழ்கெழு - மேகம்போற் பொழிகின்ற தமிழையுடைய. தலைதமிழ் - வினைத்தொகை, விரகினன் - சமர்த்தர். அதற்குரியதாகிய இசை பொருந்தும்படி உரை செயும் நீதியர் - பாடும் முறைமை தவறாதோர். தலையல் - மழைபெய்தல். இதனை "தலைப்பெயல் தலை இய தண்ணறுங்கானத்து" என்னும் திருமுருகாற்றுப்படையால் அறிக.

நலமலி தரும்புவனி நிறைசெய்புக ழின்பநனி
    பனிமதி யணைந்த பொழில்சூழ்
பொலமதி லிரும்புகலி யதிபதி விதப்பெருகு
    புனிதகுணன் எந்தம் இறைவன்
பலமலி தருந்தமிழின் வடகலை விடங்கன்மிகு
    பரசமய வென்றி யரிதின்
சலமலி தருங்கழல சரண்நினைவன் என்றனது
    தகுவினைகள் பொன்றும் வகையே.

—ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்

# 85 திருவீழிமிழலை

## 343 பதிகவரலாறு

திருவீழிமிழலையுள் பாடியருளிய திருப்பதிகங்களுள் ஒன்றுய்க், கிளந்தோதப்படாதது.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

மட்டொளி விரிதரு மலர்நிறை சுரிகுழன் மடவரல்
பட்டொளி மணியல்கு லுமையமை யுருவொரு பாகமாக்
கட்டொளிர் புனலொடு கடியர வுடனுறை முடிமிசை
விட்டொளி யுதிர்பிதிர் மதியவர் பதிவிழி மிழலையே. 1

எண்ணிற வரிவளை நெறிகுழ லெழின்மொழி யிளமுலைப்
பெண்ணுறு முடலினர் பெருகிய கடல்விட மிடறினர்
கண்ணுறு நுதலினர் கடியதொர் விடையினர் கனலினர்
விண்ணுறு பிறையணி சடையினர் பதிவிழி மிழலையே. 2

1. மட்டு - வாசனையோடு. ஒளிவிரிதரு - ஒளிபரவும் (மலர் நிறை) சுரிகுழல் - நெளிந்த கூந்தலையுடைய மடவரல் - பெண். பட்டு ஒளி-பட்டு ஆடையில் ஒளியையுடைய. மணி - மேகலாபரணத்தையணிந்த உமை. (மணி - சினையாகுபெயர்) ஒரு பாகம் ஆ(க). அமை - அமைந்த. உரு - வடிவோடு. கட்டு - சடையின்கண் (கட்டப்படுவது என்னும் பொருளில் ஐகார விகுதி புணர்ந்து கெட்டது). ஒளிர் - பிரகாசிக்கின்ற புனலொடு - கங்கை நீரோடு. கடி அரவு - கடிக்கும் பாம்பு, உடன் உறை - சேர வசிக்கின்ற. முடிமிசை-தலையில். விட்டு ஒளி-விட்டுவிட்டுப் பிரகாசிக்கும் கிரணங்கள் உதிர். உதிர்வதுபோற் சொரியும். பிதிர் - கலையையுடைய. மதியவர் - சந்திரனையுடையவராகிய சிவபெருமான். வீழிமிழலை:- சந்தம் நோக்கி நெடில் முதல் குறுகியது.

2. பண் - பாராட்டற்குரிய, நிறம் - நிறம்பொருந்திய. வரி-கீற்றுக்களை யுடைய. வளை. வளையல்களையும், நெறி - தழைத்த, குழல் - கூந்தலையும், எழில்மொழி - அழகிய மொழியையும் (தனபாரத்தையுமுடைய). பெண் - உமாதேவியர், உறும் - பொருந்திய, உடலினர். கடல் விடம் - கடலில் எழுந்த விடம் பொருந்திய, மிடறினர் - கண்டத்தையுடையவர். கண்

மைத்தகு மதர்விழி மலைமக ளுருவொரு பாகமா
வைத்தவர் மதகரி யுரிவைசெய் தவர்தமை மருவினர்
தெத்தென விசைமுரல் சரிதையர் திகழ்தரு மரவினர்
வித்தக நகுதலை யுடையவ ரிடம்விழி மிழலையே. 3

செவ்வழ லெனநனி பெருகிய வுருவினர் செறிதரு
கவ்வழ லரவினர் கதிர்முதிர் மழுவினர் தொழுவிலா
முவ்வழ னிசிசரர் விறலவை யழிதர முதுமதில்
வெவ்வழல் கொளநனி முனிபவர் பதிவிழி மிழலையே. 4

பைங்கண தொருபெரு மழலைவெ ளேற்றினர் பலியெனு
எங்கணு முழிதர்வ ரிமையவர் தொழுதெழு மியல்பினர்
அங்கண ரமரர்க ளடியிணை தொழுதெழ வாரமா
வெங்கண வரவின ருறைதரு பதிவிழி மிழலையே. 5

உறும் நுதலினர் - நெற்றிவிழியை யுடையவர். கடியது - விரைந்து நடப்ப தாகிய ஓர் விடையினர். கனலினர் - (கையிலேந்திய) நெருப்பையுடைய வர். விண்உறு(ம்) பிறை அணி சடையினர் பதி

3. மைதரு - மையணிந்த. மதர் - மதர்த்த விழியையுடைய (உமை உரு) ஒருபாகமா(க) வைத்தவர். உரிவை செய்தவர்-உரித்தவர். உரிவை- வை தொழிற் பெயர் விகுதி. தமை மருவினர் - தம்மை அடைந்த அன்பர்கள். தெத்தென - தாளவொத்துக்களோடு. இசை முரல் - இசை பாடுகின்ற. சரிதையர் - புகழை யுடையவர்.

4. செவ் அழல் - செந்நெருப்பு. என - என்னும்படி நனிபெருகிய - மிகவும் பெருகிய உருவினர். செறி - (அரையில் கட்டிய. கவ் - கவ்விக் கடிக்கும் அழல் - விடத்தையுடைய (அரவினர்) கதிர் முதிர் - ஒளிமிக்க (மழுவினர்). மு அழல் நிசிசரர் - கோபத்தையுடைய மூன்று அசுரர். அழல் - கோபம், சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி'' என வள்ளு வரும் உருவகித்தார் (மூன்று - அழல் - முழ்வழல்) விறல் சுவை - வலி மைகள், அழிதர - அழியவும். மும்மதில் - திரிபுரம் (வெம்மை - அழல் கொள) பற்றி- யெரியவும். நனிமுனிபவர் - மிகவும் கோபிப்பவர். பதி வீழிமிழலை. தொழுவு இலா - தொழுதல் இல்லாத (நிசிசரர்.)

5. பைங்கண்ணது - பசிய கண்ணை யுடையதாகிய. மழலை - சிறுமுழக்கத்தைச் செய்கின்ற. பெரு வெள் ஏற்றினர். வெள்ளிய பெரிய இடபத்தையுடையவர். தருமம் - எவற்றினும் பெரியதாகலின் பெரு ஏறு

பொன்னன புரிதரு சடையினர் பொடியணி வடிவினர்
உன்னினர் வினையவை களைதலை மருவிய வொருவனர்
தென்னென விசைமுரல் சரிதையர் திகழ்தரு மார்பினில்
மின்னென மிளிர்வதொ ரரவினர் பதிவிழி மிழலையே. 6

அக்கினொ டரவரை யணிதிக ழொளியதொ ராமைபூண்
டிக்குக மலிதலை கலனென விடுபலி யேகுவர்
கொக்கரை குழன்முழ விழவொடு மிசைவதொர் சரிதையர்
மிக்கவ ருறைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 7

எனப்பட்டது. "பெரிய விடைமேல் வருவார் அவரெம்பெருமானடிகளே" என வந்தமையும் காண்க. பலி எனு - பிச்சை (இடுமின்) என்று, எங்கணும் - எல்லா இடங்களிலும், எக்கண்ணும் என்றதன் மெலித்தல் விகாரம். உழிதர்வர் - திரிபவர். தேவர்கள் தொழுது எழும் இயல்பின ராகிய தொண்டர்களும், அந்தத் தேவர்களும் தொழுது எழ (உறைபதி) - "தொழப்படுந் தேவர்தம்மாற் றொழுவிக்கும் தன் தொண்டரையே" என்ற திருவிருத்தக்கருத்து.

6. பொன் அ(ன்)ன பொன்போன்ற. புரிதரும்-முறுக்கேறிய (சடையினர்). உன்னினர் - தன்னை நினைப்பவர்களுடைய. வினை அவை - மலங்களை, களைதலை - நீக்குவதை - மருவிய (தொழிலாகப்) பொருந்திய. ஒருவனர் - களைதல் - வேரோடு பிடுங்குதல், வினை - கன்மமலம், அவை யென்றதனுல் ஏனை மாயை ஆணவ மலமும் கொள்ளப்படும். ஒருவனர்- வேதங்களில் ஒன்றென்று எடுத்து ஓதப்பட்டவர்: "ஒருவனென்னும் ஒருவன் காண்க." என்பது திருவாசகம், "ஒன்றென்றது ஒன்றே காண் ஒன்றே பதி" என்ற சிவஞானபோத வெண்பாவும் காண்க. தென் என இசை முரல்சரிதையர் - தென் என்னும் இசைக்குறிப்போடு சங்கீதங்களைப்பாடும் இயல்பினர். மிளிர்வது - பிரகாசிப்பதாகிய, ஓர் அரவினர்.

7. அக்கினேடு - அக்குப்பாசியோடு, அரவு - பாம்பு. அரை - இடுப்பில் (பூண்டும்). அணிதிகழ் ஒளியடு ஓர் ஆமை-அழகால் விளங்குகின்ற, ஒளியையுடையதாகிய ஆமையோட்டை (மார்பில்) பூண்டும், பூண்டு என்பதை முன்னும் கூட்டி எண்ணும்மையை விரிக்க. அக்குக்கு அரை என்றதனுல் ஆமைக்கு மார்பு கொள்க. இக்கு உக - கரும்பின் சுவை சொட்ட என்றது இன்சொற்கள் பேசி என்ற கருத்து. கரும்பின் சுவை - சொல்லினிமை குறிப்பதால் உவம ஆகுபெயர், உக என்றதனுல் கரும்பின் சுவை கொள்க. மலிதலை - கையில் நீங்காது பொருந்திய மண்டையோடு. கலன் என - பாத்திரமாக, பலி ஏகுவர் - பலிக்குச்

பாதமோர் விரலுற மலையடர் பலதலை நெரிதரப்
பூதமொ டடியவர் புனைகழ ரெழுதெழு புகழினர்
ஓதமொ டொலிதிரை படுகடல் விடமுடை மிடறினர்
வேதமொ டுறுதொழின் மதியவர் பதிவிழி மிழலையே. 8

நீரணி மலர்மிசை யுறைபவ னிறைகட லுறுதியில்
நாரண னெனவிவ ரிருவரு நறுமல ரடிமுடி
ஓருணர் வினர்செல லுறலரு முருவினொ டொளிதிகழ்
வீரண ருறைவது வெறிகமழ் பொழில்விழி மிழலையே. 9

செல்வார். கொக்கரை முதலிய வாத்தியங்கள் ஆரவாரிக்க நடக்கும் உற்சவங்களில் அடியார் செய்யும் சிறப்புக்களை ஏற்றுக்கொண்டு காட்சியளிக்கும் இயல்பையுடையவர். கண்ணினுலவர் நல்விழாப் பொலிவு கண்டு ஆர்தல், மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் ஆகையால் அவர்கட்கு எழுந்தருளி அருள் செய்யும் திறன் மூன்றும் அடியிற் குறித்த பொருள். மிக்கவர் - தன்னின் மிக்கவரில்லையாக மேம்பட்டவர். "யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்" என்றபடி (திருவாசகம்).

8. பாதம் ஓர் விரல் உற - பாதத்தில் உள்ள ஓர் விரல் பொருந்த அதனுல், மலை அடர் - பலதலைநெரிபட மலையால் இடர்க்கப்பட்ட பத்துத் தலைகளும் (அரைபடச் செய்து) என ஒரு சொல் வருவித்துரைக்க. புனைகழல் - புனைந்த கழலையுடைய. திருவடி - வினைத்தொகைப் புறத்து அன்மொழி. ஓதமொடு ஒலி - ஆரவாரத்தோடு ஒலிக்கின்ற திரைபடு - அலைகளையுடைய. கடல் விடம் உடை(ய) மிடறினர்-கழுத்தையுடையவர். வேதமொடு - வேதம் ஓதுதலுடன் உறுதொழில் - தமக்குற்றதாகிய ஆறு தொழில்களையும் உடைய. மதியவர் - அறிஞர்களாகிய அந்தணர் வாழும் பதி - திருவீழிமிழலை, ஒன்று அல்லாதன பல என்பது தமிழ் வழக்காதலால் பத்தென்னுது பல என்றுர்.

9. நீர் அணி - குளத்திற்கு அணி யாகிய, மலர்மிசை - தாமரை மலரில் (உறைபவன்). "குளத்துக் கணியென்ப தாமரை" என்பதனுல் நீரணி மலர் என்னப்பட்டது. நீர் - தானி யாகுபெயராய்க் குளத்தைக் குறித்தது. நறுமலர் அடிமுடி - நறும்மணமுள்ள மலர்போன்ற அடியையும், மலரையணிந்த முடியையும், (நறுமலர் அடிமுடி என்னும் தொடரில் அடையை அடியோடும் முடியோடும் கூட்டுமாறு அமைந்திருத்தலின் அவ்வாறே கொள்க.) ஓர் - ஆராயும். (தேடிக்காண வேண்டும் என்னும்) உணர்வினர் - அறிவுடையவர்களாய், மலர் உறைபவன். நாரணன் அடிமுடி ஓர் உணர்வினர் என்றிது எதிர் நிரனிறை. செலல்

இச்சைய ரினிதென இடுபலி படுதலை மகிழ்வதோர்
பிச்சையர் பெருமையை யிறைபொழு தறிவெனவுணர்விலர்
மொச்சைய வமணரு முடைபடு துகிலரு மழிவதோர்
விச்சைய ருறைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 10

உன்னிய வருமறை யொலியினை முறைமிகு பாடல்செய்
இன்னிசை யவருறை யெழிறிகழ் பொழில்விழி மிழலையை
மன்னிய புகலியுண் ஞானசம் பந்தன வண்டமிழ்
சொன்னவர் துயரிலர் வியனுல குறுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

உறல் அரும் - (காண்பது நிற்க) அருகே செல்லத் தொடங்குவதற்கும் அரியதான, "உருவினேடு ஒளிதிகழ் - ஒளியாய் விளங்கிய. வீர அணர் - வீரம் பொருந்தியவர். அணவுதல் - பொருந்துதல். வீரணர் - மரூஉ. இது இறைவனின் முடிவிலாற்றலுடைமை கூறியவாறு.

10. இடுபலி இனிது என இச்சையினராய், மகிழ்வது (ஓர்) பிச்சையர் - மகிழ்ந்தேற்கும் பிச்சையுணவுடையவர். ஓர் அசைநிலை "மார்கழி நீர் ஆடேலோ ரெம்பாவாய்" (திருவாசகம் திருவெம்பாவை) "அஞ்சுவ தோரும் அறனே" என்புழி (திருக்குறள் 366) வந்தமைபோல. அத்தகைய பிச்சையினரெனினும், (அவர்) பெருமையை. இறை - ஒரு சிறிதும். பொழுது - எப்பொழுதும். அறிவு என - (நம்மால்) அறிதல் (முடியும்) என்று. உணர்வு இலர் - (எவராலும்) உணரப்படாதவர். மொச்சைய - (நீராடாமையால்) துர்நாற்றத்தையுடைய, அமணரும், முடை படுதுகிலினர் (ஒலித்துடுத்தாமையால்) முடை நாற்றத்தையுடைய ஆடையைப் போர்ப்பவராகிய பவுத்தரும். அழிவது ஓர் விச்சையர் - அழிவதற்குக் காரணமான வித்தைசெய்பவர். விச்சையர் என்பதற்குக் "குழலன் கோட்டன் குறும்பல்லியத்தன் என்பதற்கு நச்சினார்க்கினியர் உரைத்தாங்கு (திருமுருகாற்றுப் படை) உரைக்க.

11. உன்னிய - (இறைவன் மொழியென்று) கருதப்பட்ட அருமறை யொலியினை, உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம் என்னும் ஒலியை முறைமைமிக்க பாடல்களாகப்பாடுகின்ற, இனிய இசையையுடைய அந்தணர் வாழும் என்பது. முறை...உறை-என்பதன் பொருள். இம்மையில் வரும் துயர் எதுவும் இல்லாதவராய், மறுமையில் முத்தியுலகெய்துவ ரென்பது இறுதிப்பகுதியின் பொருள்.

# 86 திருச்சேறை

## 344 பதிகவரலாறு

தமிழ் விரகர், திருவிரும்பூளை, திருவரதைப் பெரும்பாழி முதலிய சிவதலங்களை வழிபட்டு வந்து, திருச்சேறை அடைந்து, புனைந்த நீடு தமிழ்த்தொடை இத்திருப்பதிகம்.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

முறியுறு நிறமல்கு முகிழ்முலை மலைமகள் வெருவமுன்
வெறியுறு மதகரி யதள்பட வுரிசெய்த விறலினர்
நறியுறு மிதழியின் மலரொடு நதிமதி நகுதலை
செறியுறு சடைமுடி யடிகடம் வளநகர் சேறையே. 1

புனமுடை நறுமலர் பலகொடு தொழுவதொர் புரிவினன்
மனமுடை யடியவர் படுதுயர் களைவதொர் வாய்மையர்
இனமுடை மணியினொ டரசிலை யொளிபெற மிளிர்வதோர்
சினமுதிர் விதியுடை யடிகடம் வளநகர் சேறையே. 2

1. முறியுறு - தளிர்போன்ற (உறு உவமவாசகம்) நிறம் மல்கு - நிறம் பொருந்திய முகிழ் - அரும்புபோன்ற, (கோங்கு, தாமரை இவற்றின் அரும்புகள்) முலை, மலைமகள், வெருவ - அஞ்ச. மதவெறி உறுகரி - எனக்கூட்டுக. அதள் - தோல். பட - உடையாகும்படி. விறல் - வலிமை. நறி - நறுமணமுடையது (ஆகி). உறும்-பொருந்திய. இதழியின் மலரொடு- கொன்றைப்பூவோடு. (நறு+இ=நறி என்றாயது. வெண்மையுடையது வெள்ளி யென்றாயவாறு ("வெள்ளிப் பொடிப் பவளம் புறம்பூசிய" என்புழிப்போல, அப்பர் திருவிருத்தம்) நதி, (கங்கை) மதி, நகுதலை, செறியுறு - நெருங்கிய (சடைமுடியடிகள் தம் வளநகர் சேறையே.)

2. புனம் உடை - வனங்களிலுள்ள. (பல நறுமலர் கொடு) தொழு வது ஓர் புரிவினர், வணங்கும் விருப்பம் உடையவர்கள். மனம் உடை - உறுதிப்பாட்டையுடைய (அடியவர் படு(ம்)துயர்) களைபவர் - ஒழிப்பவர், "உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும்" என்ற திருக்குறளில் (592) உள்ளம் - ஊக்கத்தைக் குறித்ததுபோல. இங்கு மனம் - உறுதிப்பாட்டைக் குறித்தது. அது "வானம் துளங்கி

புரிதரு சடையினர் புலியத ளரையினர் பொடிபுல்கும்
எரிதரு முருவின ரிடபம தேறுவ ரீடுலா
வரிதரு வளையின ரவரவர் மகிழ்தர மனைதொறும்
திரிதரு சரிதைய ருறைதரு வளநகர் சேறையே. 3

துடிபடு மிடையுடை மடவர லுடனொரு பாகமா
இடிபடு குரலுடை விடையினர் படமுடை யரவினர்
பொடிபடு முருவினர் புலியுரி பொலிதரு மரையினர்
செடிபடு சடைமுடி யடிகடம் வளநகர் சேறையே. 4

அந்தர முழிதரு திரிபுர மொருநொடி யளவினில்
மந்தர வரிசிலை யதனிடை யரவரி வாளியால்
வெந்தழி தரவெய்த விடலையர் விடமணி மிடறினர்
செந்தழ னிறமுடை யடிகடம் வளநகர் சேறையே. 5

லென் மண் கம்பமாகிலென்...ஊனமொன்றில்லா வொருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே'' என்றவாறு. வாய்மையர் - நியமத்தையுடையவர். இனம் உடை - கூட்டமான. மணி - கழுத்திற்கட்டும்மணி. அரசு இலை - அரசிலை போன்ற ஓர் அணி. இதுவும் விடையின் கழுத்திற் கட்டுவது. ஒளிபெற - ஒளியையுடையதாக. மிளிர்வது (ஓர்) - பிரகாசிப்பதாகிய. சினம் முதிர் - கோபம் மிக்க. (விடை).

3. புரிதரு - முறுக்கிய. சடையினர். பொடிபுல்கும் எரிதரும் உருவினர் - நீறுபூத்த நெருப்புப்போலும் வடிவையுடையவர். திருமேனிக்கு-நெருப்பு உவமை. இடபம் (அது) ஏறுவர். ஈடு உலாம் - இடப்பட்டதாகிச் சரிகின்ற. வரிதரு - கீற்றுக்களையுடைய. வளையினர் அவரவர் - வளையலை அணிந்தவர்களாகிய அவ்வம்மாதர்கள் - (மகிழ்தர மனைதொறும்) திரிதரு சரிதையர்-திரியும் இயல்புடையவர். (உலாம்வளை - தொடியுலாம் மென்கை மடமாதர் என நால்வர் நான்மணி மாலையிலும் வருவது காண்க.)

4. துடிபடும் இடை உடை - உடுக்கைபோலும் இடையையுடைய (படும் - உவமவாசகம்) மடவரல் உமை - பெண்ணாகிய உமாதேவியார். இடிபடு - இடிபோலும். (குரல் உடை விடையினர்.) பொடி - திருநீறு. பொலிதரு - விளங்குகின்ற. செடிபடு - செடிகளைப்போல் அடர்த்தியான, சடைமுடி அடிகள்.

5. அந்தரம் - ஆகாயத்தில். உழிதரு - சுற்றித்திரிந்த. (திரிபுரம்) மந்தரம் - மலை (சிறப்புப்பெயர், பொதுப் பெயரைக் குறித்தது) வரிசிலை - கட்டமைந்த வில். அதன் இடை-அதில் (இடை ஏழனுருபு) பூட்டும்நாண்.

மத்தர முறுதிறன் மறவர்தம் வடிவுகொ டுருவுடைப்
பத்தொரு பெயருடை விசயனை யசைவுசெய் பரிசினால்
அத்திர மருளுநம் மடிகள தணிகிளிர் மணியணி
சித்திர வளநகர் செறிபொழி றழுவிய சேறையே 6

பாடின ரருமறை முறைமுறை பொருளென வருநடம்
ஆடின ருலகிடை யலர்கொடு மடியவர் துதிசெய
வாடினர் படுதலை யிடுபலி யதுகொடு மகிழ்தரும்
சேடர்தம் வளநகர் செறிபொழி றழுவிய சேறையே. 7

அரவு - பாம்பு ஆக. அரி வாளியால் - திருமாலாகிய அம்பால். அரி - காற்றையும், நெருப்பையும் குறிப்பதால் - சுருங்கச் சொல்லல் என்னும் அழகுபற்றி அவ்விருபொருளும்கொண்டு, அம்பின் அடிப்பாகம் காற்று, நுனிப்பாகம் நெருப்பு, இடைப்பாகம் திருமால் என விளங்க வைத்தமை காண்க. வெந்து, அழிதர - அழிய. (எய்த) விடலையர் - வாலிபர்.

6. மத்தரம் உறுதிறல் - மந்தர மலைபோன்ற வலிமையையுடைய. மறவர் - வேடர். (மந்தரம் - மத்தரம் என வலித்தல் விகாரம்பெற்றது. உறு - உவமவாசகம்) உரு உடை - அழகையுடைய. பத்து. ஒரு பெயருடை - ஒருபத்துப் பெயரையுடைய. விசயனை - அருச்சுனனை. அசைவு செய் பரிசினால் - நோற்பிக்கும் தன்மையினால். அத்திரம் - பாசுபதம் என்னும் அம்பை. அருளும - கொடுத்தருளிய. நம் அடிகள் - நமது பெருமான். மணி அணி-இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட. சித்திரம்-அழகிய (வளநகர்), செறிபொழில் தழுவிய - அடர்ந்த சோலைகளாற் சூழப்பட்ட. சேறை. அணிகிளர் - அழகு மிகுந்த. (அத்திரம் அருளும் நம் அடிகளது) வளநகர் திருச்சேறை யென்க.

7. முறைமுறை அரும்மறை பாடினர் - முறைமைப்படி வரிசையாக அரியவேதம் பாடினர் (முதல்முறை - பாடும் கிரமம். அடுத்தமுறை - இதன்பின் இது பாடுக என்னும் வரிசை) பொருள் என அரும் நடம் ஆடினர் - (ஐந்தொழில் இயற்றும் கடவுள் தாமே என்னும்) தன்மையை யுணர்த்துபவராய் அரிய திருக்கூத்தாடியவர். பொருள் - கடவுள், திருக்கூத்தில் ஐந்தொழிலும் காட்டும் குறி. "தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பிற் - சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாய், ஊன்று மலர்ப்பதத்தே யுற்றதிரோதம் முத்தி, நான்றமலர்ப்பதத்தே நாடு" என்னும் உண்மை விளக்கச் செய்யுளால் அறிக. உலகிடை - உலகில். (மலரும் பூசைக்குரிய பிற பொருளும் கொண்டு) அடியவர் (பூசித்துத்) துதி செய்ய. மலர் கொடும் - மலரும் கொடு எனப் பிரித்துக்

கட்டுர மதுகொடு கயிலைநன் மலைமலி கரமுடை
நிட்டுர னுடலொடு நெடுமுடி யொருபது நெறிசெய்தார்
மட்டுர மலரடி யடியவர் தொழுதெழ வருள்செயும்
சிட்டர்தம் வளநகர் செறிபொழி றழுவிய சேறையே. 8

பன்றியர் பறவையர் பரிசுடை வடிவொடு படர்தர
அன்றிய வவரவ ரடியொடு முடியவை யறிகிலார்
நின்றிரு புடைபட நெடுவெரி நடுவெயொர் நிகழ்தரச்
சென்றுயர் வெளிபட வருளிய வவர்நகர் சேறையே. 9

கூட்டுக. மலரும்-எச்சவும்மை. வாடினர் - வாட்டமுற்றவனாகிய பிரமனின். படுதலை - வறண்ட மண்டையோட்டில். தலை ·கொய்யப்பட்டதனால் வாட்டம் உற்றனன் என்க. வாடினர் - என்றது இழிப்புப்பற்றி.

8. கட்டு உரம் (அது) கொடு - தனது உறுதியான உடல் வலிமை கொண்டு. கைலைநல்மலை நிட்டுரன் - நல்ல கைலைமலைக்குத் தீங்கு இழைத்தோனாகிய இராவணனது (நல்மலையென்றார். தீங்கு செய்தோ னுக்கும் நன்மைசெய்த கருணை நினைந்து) மலிகரம் உடை உடலோடு - அதிகமான (இருபது) கைகளையுடைய உடம்போடு. நெடும் - பெரிய. முடியொருபத்தும் நெரிசெய்தார் - தலை பத்தையும் அரைபடும்படி செய் தருளினார். மட்டு - வாசனையையுடைய. உரம் - வளம் மிக்க. மலர் அடி-மலர்போலும் திருவடிகளை. (அடியவர் தொழுது எழ அருள்செய்யும்) சிட்டர் - நல்லியல்புடையவர். சிட்டன் - சிவபெருமானைக் குறிப்பது. "சிட்டனே சிவலோகனே சிறு நாயினுங் கடையாயவெங். கட்டனேனையும் ஆட்கொள்வான் வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்ற திருவாச கத்தும் காண்க. (திருக்கழுக்குன்றப் பதிகம் 2).

9. பரிசு உடை - தமக்கு ஏற்ற தன்மையையுடைய. வடிவோடு - வடிவங்களுடனே, பன்றியர் - பன்றியானவனும். பறவையானவனும் ஆகிய திருமாலும் பிரமனும். (பன்றியன், பறவையன் என ஒருமையாற் கூறற்பாலது. பன்மையாற்கூறியது; இழிப்புப்பற்றி. அவர் அவர் என்பதும் அது. (படர்தர - காணச்செல்ல. அன்றிய - மாறுபட்ட. அவர் - அத் திருமாலும். அவ்ர் - அப்பிரமனும் (அன்றிய - இப்பொருட்டாதலை "அன்றினார் புரமெரித்தார்க் காலயமெடுக்க எண்ணி" என்னும் பெரிய புராணத்தாலும், சிவஞான சித்தியார் (சூத்திரம் 1. பாட்டு 42) உரை யாலும் அறிக). அடியொடும். முடி அவை - அடியும் முடியுமாகிய அவற்றை. அறிகிலார் - அறிய முடியாதவராகி. நின்று இரு புடைபட - இருபுடைபட்டு நிற்க எனச் எச்சவிகுதி பிரித்துக்கூட்டுக. இருபக்கமும்

துகடுறு விரிதுகி லுடையவ ரமணெனும் வடிவினர்
விகடம துறுசிறு மொழியவை நலமில வினவிடல்
முகிடரு மிளமதி யரவொடு மழகுற முதுநதி
திகடரு சடைமுடி யடிகடம் வளநகர் சேறையே. 10

கற்றநன் மறைபயி லடியவ ரடிதொழு கவினுறு
சிற்றிடை யவளொடு மிடமென வுறைவதோர் சேறைமேல்
குற்றமில் புகலியு ளிகலறு ஞானசம் பந்தன
சொற்றக வுறமொழி பவரழி விலர்துயர் தீருமே. 11

திருச்சிற்றம்பலம்

பொருந்தி நிற்க என்றபடி - நடுவெ - நடுவே. நெடு - நெடிய. எரி - நெருப்புப் பிழம்பாய். நிகழ்தரச்சென்று - தோன்றுமாறு ஓங்கி. உயர் - (யார்) மேலானவர் என்பது. வெளிபட அருளிய - வெளியாகும் வண்ணம் திருவுளங்கொண்ட. அவர் - அந்தச் சிவபெருமான், நகர் சேறையே என்க. உயர்வு என்பதின் பண்புப்பெயர் விகுதி கெட்டது. உயர்வு - உயர்ந்தவரெனப் பொருள்தரலாற் பண்பாகு பெயர்.

10. துகள்துறு - அழுக்கு மிகுந்த. விரிந்த ஆடையை உடையாக உடுத்துக் கொள்வோராகிய பவுத்தரும், அமண் என்னும் வடிவினர் - தோற்றத்தாலேயே இவர்கள் அமணரென்று கண்டு கொள்ளத்தக்க வடிவம் உடையவர் - (சமணர்) விகடம் (அது) உறு - குறும்புத்தனமான. சிறு மொழியவை - அற்ப வார்த்தைகள். நலம் இல. நற்பயன் இல்லாதவை (ஆதலால்) வினவிடல் - கேளற்க. முகிழ்தரும் இளம்மதி - அரும்பை யொத்த பிறைச் சந்திரனை. அரவு ஒடும், அழகு உற, முதுநதி - பழமையான - கங்காநதி. திகழ்தரு - விளங்குகின்ற. சடைமுடி அடிகள் தம் வள(ம்) நகர் - சேறையே - முகிழ்+தரு - முகிடரு. திகழ்+தரு - திகடரு. இவ்வாறு புணர்வதற்கு விதி வீரசோழியத்துக் காண்க.

11. கவின் - அழகு. உறு - பொருந்திய. சிறு இடையவள் - உமாதேவியார், புகலியுள். இகல் அறு - எவரோடும் பகைமையில்லாத, ஞானசம்பந்தன். சொல் - பாடல்களை. சொல் - சினை ஆகுபெயர். தகவு உற - முறையோடு, மொழிபவர், அழிவு இலர் எனவே அவரைப்பற்றிய துயரும் அழிவின்றி நிற்கும் என்னற்க. அவை பற்றற நீங்கும் என்பதாம். "தீர்தல் - பற்றுவிடல்" என்பது தொல், சொல், உரியியல்.

# 87 திரு நள்ளாறு

## 345 பதிகவரலாறு

சண்பையாண்டகையார் திருநள்ளாறரை வணங்கி, நற்றிருவேட்டினைக் கழற்றிக் கைத்தலத்திடைக் கொண்டு, சிவ நாமமே அழியாப் பொருளெனக் காட்ட நெருப்பில் வேவாது நிற்க என்று இவ்வாறு தொடங்கிப் பாடியருளப் பெற்றது இத்திருப்பதிகம்.

**திருவிராகம். பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

தளிரிள வளரொளி தனதெழி றருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலின்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தந் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 1

போதமர் தருபுரி குழலெழின் மலைமகள் பூணணி
சீதம தணிதரு முகிழிள வனமுலை செறிதலின்
நாதம தெழிலுரு வனையநள் ளாறர்தந் நாமமே
மீதம தெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 2

1. வளர் - வளரக்கூடிய. தளிர் - தளிரின். இள ஒளி - இளம் பிரகாசத்தின். எழில் தரு - அழகைத் தருகின்ற. திகழ் - விளங்குகின்ற. மலைமகள் - உமாதேவியார், (குளிர் வளர் இள ஒளி.) வனம் - அழகை உடைய முலை. இணை அவை - இரண்டும். குலவலின் - மகிழ்ந்து தழுவப்பெறுதலால். நளிர்-குளிர்ந்த, (வளர், இள ஒளி.) மருவு - பொருந்திய (நள்ளாறர்தம்) நாமமே - புகழ்களேயாகும் இவை. ஆதலின், மிளிர் - அவர் திருமேனிபோற் பிரகாசிக்கின்ற (வளர் இளம்). எரி இடில் - நெருப்பில் இட்டால். இவை - "போகமார்த்த" எனத் தொடங்கும் இத் திருப்பதிகம் எழுதிய இவ்வேடும் இவைபோல்வனவும். பழுது இலை - பழுது இல்லாதன ஆம். மெய்ம்மை - (இது) சத்தியம். ஐம்பால் மூவிடத்திற்கும் பொது ஆனதால் இல்லை என்னும் குறிப்பு முற்று, இவை என்ற எழுவாய்க்குப் பயனிலையாயிற்று. முதிய, வலிய நெருப்பின் (சிவபெருமான்) திறனை - இளநெருப்பு எரிக்குமா ? என்ற குறிப்பு.

2. போது அமர்தரு - மலர்கள் தங்கிய. புரி - பின்னிய (குழல்). பூண் அணி - ஆபரணத்தையணிந்த. சீதம் (அது) அணிதரு - (இயல்பான குளிர்ச்சியோடு) சந்தனக் குழம்பையும் அணிந்த. சீதம் - பண்பாகு

இட்டுறு மணியணி யிணர்புணர் வளரொளி யெழில்வடம்
கட்டுறு கதிரிள வனமுலை யிணையொடு கலவலின்
நட்டுறு செறிவயன் மருவுநள் ளாறர்தந் நாமமே
இட்டுறு மெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 3

மைச்சணி வரியரி நயனிதொன் மலைமகள் பயனுறு
கச்சணி கதிரிள வனமுலை யவையொடு கலவலின்
நச்சணி மிடறுடை யடிகணள் ளாறர்தந் நாமமே
மெச்சணி யெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 4

பெயர். முகிழ் - அரும்பை ஒத்த, இள, வனம், முலை, செறிதலின் அழுந்தத் தழுவப்படுதலால். நாதம் (அது) நாததத்துவம் - எழில் உரு - அழகிய உருவாகக்கொண்ட. அனைய - அத்தகைய நள்ளாறர்தம். நாமம் - புகழாகிய இவை. மீ - மேலான. தமது - தம்முடையதான. எரியிடில் - நெருப்பிலே இட்டால். பழுது இலை. மெய்ம்மையே. நெருப்பு, சிவபெருமானுக்குரியதென்பது, "தீத்தான் உன் கண்ணிலே, தீத்தான் உன்கையிலே, தீத்தான் உன்றன் புன்சிரிப்பிலே, தீத்தான் உன், மெய்யெல்லாம் புள்ளிருக்கு வேளூரா" என்ற காளமேகப் புலவர் தனிப்பாடலாலும், எரியுள் நின்று ஆடுவர் என்பதாலும், அட்டமூர்த்தங்களுள் நெருப்பு ஆதலாலும் அறிக.

3. இட்டு - பதிக்கப்பட்டு. உறும் - பொருந்திய, மணி அணி இரத்தினங்களின் வரிசைகள். இணர் - பூங்கொத்துக்களைப் போல. புணர் - பொருந்திய. (வளர், ஒளி, எழில்). வடம் - மாலை. கட்டு உறு - அணியப் பெற்ற. கதிர் - ஒளியையுடைய. (இரு தனங்களுடன்). கலவலின் - கலத்தலால், நட்டு - (பயிர்கள்) நடப்பட்டு. உறு - பொருந்திய. (நள்ளாறு) நாமம் - புகழ். இட்டு உறும் - சிறியதாகியுள்ள. இந்த எரியில் இடில், பெரிய நெருப்பின் திறம் அமைந்த இவை எங்ஙனம் பழுதுறும்? பழுது இலவேயாம் என்க. மணிகளின் வரிசைக்குப் பூங்கொத்து உவமை. ஈற்றடியில் இட்டு - இட்டிது என்பதன் மரூஉ. "ஆகாறு அளவு இட்டிது ஆயினும் கேடில்லை" என்னும் திருக்குறளால் அறிக. இனி இட்டு உறும் எரி - உண்டாக்கிய செயற்கை நெருப்பு, இயற்கை நெருப்பின் திறனை என்செயும்? எனினும் ஆம்.

4. மைச்சு - மை அணியப்பெற்றதாய். மைத்து - என்பது மைச்சு என்றாயது எழுத்துப் போலி, அணி - அழகிய. வரி - ரேகையின். அரி - ஒழுங்கு பொருந்திய. நயனி - கண்களையுடையவராகிய. தொல்மகள் - பழமையான உமாதேவியார். பயன் உறு - அபரஞான, பரஞானங்களாகப்



தீயில் இட்ட ஏடு வேகாமல் பச்சையாயிருந்தது

பண்ணியன் மலைமகள் கதிர்விடு பருமணி யணிநிறக்
கண்ணியல் கலசம தனமுலை யிணையொடு கலவலின்
நண்ணிய குளிர்புனல் புகுதுநள் ளாறர்தந் நாமமே
விண்ணிய லெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 5

போதுறு புரிகுழன் மலைமக ளிளவளர் பொன்னணி
சூதுறு தளிர்நிற வனமுலை யவையொடு துதைதலின்
தாதுறு நிறமுடை யடிகணள் ளாறர்தந் நாமமே
மீதுறு மெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 6

பயன் தருதலை உடைய கச்சு அணி. வனம் - அழகிய. (முலையோடு கலவலின்). நஞ்சு அணி - விடத்தை அணிந்த. மிடறு உடை - கண்டத்தை யுடைய. அடிகளாகிய நள்ளாறர்தம் புகழ்களாகிய இவைகள். எரியினில் இடில் பழுதிலை.

5. பண் இயல் - (உலகிற்கு) பண்பாட்டை அமைவித்த. மலைமகள். பண் - கடைக்குறை. இயல் மலைமகள் - வினைத்தொகை. இயல் என்ற சொல்லின் பிறவினை விகுதி குன்றியது. மலைமகள் - உமாதேவியாரின். கதிர் விடு - ஒளி வீசுகின்ற. பரு - பருத்த. மணி - இரத்தினங்கள் பதித்த. அணி - ஆபரணத்தையணிந்த. நிறம் - மார்பிலே உள்ள. கண் இயல் - அழகு பொருந்திய. நண்ணிய குளிர் - குளிர்ச்சியையுடைய. புனல் புகுதும் - நீர்பாயும். நள்ளாறர் விண் இயல் - ஆகாயம் வரை தாவும்.

6. போது உறு - மலர்கள் பொருந்திய. புரிகுழல் - பின்னிய சடையையுடைய. மலைமகள் - உமாதேவியாரின். இள(ம்) வளர் - இளமை மிகுந்த. பொன் அணி - பொன்னுபரணம் அணிந்த. சூது உறு - சொக்கட்டாங்காயை ஒத்த. (உறு - உவமவாசகம்). தளிர் நிறம் - தளிர் போன்ற நிறத்தையுடைய. வனம் - அழகிய முலையோடு. துதைலின் - நெருங்கியிருத்தலால். தாது உறும் நிறம் உடை - பொன்போலும் நிறம் உடைய அடிகள். ("பொன்னொத்த மேனிமேல் வெண்ணீறணிந்து" என்பர் அப்பர்). அடிகளாகிய நள்ளாறர்.

கார்மலி நெறிபுரி சுரிகுழன் மலைமகள் கவினுறு
சீர்மலி தருமணி யணிமுலை திகழ்வொடு செறிதலின்
தார்மலி நகுதலை யுடையநள் ளாறர்தந் நாமமே
ஏர்மலி யெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 7

மன்னிய வளரொளி மலைமகள் தளிர்நிற மதமிகு
பொன்னியன் மணியணி கலசம தனமுலை புணர்தலின்
தன்னியல் தசமுக னெரியநள் ளாறர்தந் நாமமே
மின்னிய லெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 8

கான்முக மயிலியன் மலைமகள் கதிர்விடு கனமிகு
பான்முக மியல்பணை யிணைமுலை துணையொடு பயிறலின்
நான்முக னரியறி வரியநள் ளாறர் தந் நாமமே
மேன்முக வெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே 9

அத்திர நயனிதொன் மலைமகள் பயனுறு மதிசயச்
சித்திர மணியணி திகழ்முலை யிணையொடு செறிதலின்
புத்தரொ டமணர்பொய் பெயருநள் ளாறர் தந் நாமமே
மெய்த்திர ளெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 10

7. கார்மலி - மேகம் போன்ற. மலி - உவமவாசகம், நெறி, செழிப்புடைய. புரி - கட்டப்பட்ட. சுரி - சுரிந்த (குழல் மலைமகளின்) நகு வெண்டலையைச் சிறந்த மாலையாகவுடைய நள்ளாறர்தம் நாமமே.

8. மதம் மிகு - மான்மதமாகிய கஸ்தூரியை மிக அணியப்பெற்ற மதமென நின்றது முதற்குறை. பொன்னியல் - பொன்னுலியன்ற. புணர்தலின் - தழுவுவதால். தன் இயல் - தீமை செய்வதில் தன்னைத்தானே யொத்த. தசமுகன் - இராவணன். நெரிய நள்ளாறர் - நெரிய அடர்த்த நள்ளாறர். அடர்த்த என்ற சொல் வருவித்துரைக்கப்பட்டது. மின் இயல் - ஒளியையுடைய.

9. கான்முகம் - காட்டிடத்துள்ள. மயில் இயல் - மயில் போன்ற சாயல். பால் முகம் இயல் (பால் சுரக்கும் இடமாகப் பொருந்திய - தமக்கு ஞானப்பாலை ஊட்டியருளிய செயலை நினைப்பித்தவாறு) பணை - பருத்த, இணைமுலை உபயதனங்கள். மேல்முக(ம்) எரி - மேல் நோக்கிய நெருப்பு.

10. அத்திரம் நயனி - அம்பு போன்ற கண்களையுடையவள். அதிசயம் - அதிசயம் விளைக்கும். சித்திரம் - பலவகையான. பொய் பெயரும் - பொய்யினின்றும் நீங்கிய நள்ளாறர்.

சிற்றிடை யரிவைதன் வனமுலை யிணையொடு செறிதரும்
நற்றிற முறுகழு மலநகர் ஞானசம் பந்தன
கொற்றவ னெதிரிடை யெரியினி லிடவிவை கூறிய
சொற்றெரி யொருபது மறிபவர் துயரிலர் தூயரே. 11

திருச்சிற்றம்பலம்

11. ஞானசம்பந்தன் கொற்றவன் எதிர் - நின்ற சீர் நெடுமாற நாயனாராகிய அரசர் எதிரில். இடை எரியினில் - நெருப்பு நடுவில். துயர் தூயர் - ஓர் சொல் நயம்.

வகைதகு முத்தமி ழாகரன்
மறைபயில் திருப்பிய வாசகன்
வலகலை வித்தகன் வானவின்
மதியணை பொற்குவை மாளிகை
திகைதிகை மட்டலர் வார்பொழில்
திகழ்புக லிக்கர சாகிய
திருவளர் விப்பிர சிகாமணி
செழுமல யத்தமிழ் கேசரி
மிகமத வெற்றிகொள் வாரண
மிண்டவரு டைக்குலம் யாளிகள்
விரவிரு ளிற்றனி நீள்நெறி
விளைதுயர் மொய்த்துள வேமணி
நகைஎழி விற்குற மாதுன
தருமை நினைக்கிலன் நீஇவண்
நசையின் முழுப்பழியாதன்முன் நணுக
வினிக்கிரி வாணனே.

—ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்

# 88 திருவிளமர்

## 346 பதிகவரலாறு

சண்பைநகர் வேந்தர், திருவாஞ்சியம், தலையாலங்காடு முதலிய தலங்களை வழிபட்டுச் சென்று, மறைக்கும் அரியவர் விளமரைப் போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

மந்தக மணிபெற மலர்வதொர் மதிபுரை நுதல்கரம்
ஒத்தக நகமணி மிளிர்வதொ ரரவின ரொளிகிளர்
அத்தக வடிதொழ வருள்பெரு கண்ணொடு முமையவள்
வித்தக ருறைவது விரிபொழில் வளநகர் விளமரே. 1

பட்டில கியமுலை யரிவைய ருலகினி லிடுபலி
ஒட்டில கிணைமர வடியின ருமையுறு வடிவினர்
சிட்டில கழகிய பொடியினர் விடைமிசை சேர்வதோர்
விட்டில கழகொளி பெயரவ ருறைவது விளமரே. 2

1. மத்தகம் - தலையின்கண், அணிபெற - அழகுற, மலர்வது ஓர்மதி- விளங்கிக்கொண்டிருக்கும் பிறையை. புரை - ஒத்த. நுதல் - நெற்றி. இறைவர் நெற்றிக்கு வேறு பிறை ஒப்பாகாது அவர் அணிந்த பிறையே உவமையாயிற்று. சேக்கிழார் பெருமான் விரைந்து மலையேறும் கண்ணப்ப நாயனுர் செலவுக்கு உவமமாக வேறு கூருது அந்நாயனுர் மன வேகத்தையே உவமை கூறியதும் காண்க. "பூதநாயகன் பால் வைத்த, மனத்தினுங் கடிது வந்து மருந்துகள் பிழிந்து வார்த்தார்" என்பது அது. கரம் - திருக்கரத்தில். ஒத்து - ஏற்றதாகி. அகம் (கண்டவர்) மனம். நக - மகிழ. மணிமிளிர்வதோர் அரவினர்-இரத்தினம் பிரகாசிக்கின்ற பாம்பைக் கங்கணமாக உடையவர்.

2. உலகினில் - உலகத்தில். பட்டு இலகிய - பட்டாடையால் விளங்குகின்ற. அரிவையர் - பெண்கள். இடுபலி ஒட்டு - போடும் பிச் சைக்கு இசைத்துச் செல்கின்ற. இலகு இணை மரவடியினர் - விளங்கும் இரண்டாகிய பாதுகையை உடையவர்:- பிட்சாடன கோலத்தில். உமை உறு - உமையம்மையார் (ஒருபாற்) பொருந்திய, வடிவினர் - திருவுரு வுடையவர். சிட்டு இலகு அழகிய பொடியினர் - வசிட்டு முதலிய இறுதி

அங்கதி ரொளியின ரரையிடை மிளிர்வதொ ரரவொடு
செங்கதி ரெனநிற மனையதொர் செழுமணி மார்பினர்
சங்கதிர் பறைகுழன் முழவினொ டிசைதரு சரிதையர்
வெங்கதி ருறுமழு வுடையவ ரிடமெனில் விளமரே. 3

மாடம தெனவளர் மதிலவை யெரிசெய்வர் விரவுசேர்ப்
பீடென வருமறை யுரைசெய்வர் பெரியபல் சரிதைகள்
பாடல ராடிய சுடலையி லிடமுற நடநவில்
வேடம துடையவர் வியனக ரதுசொலில் விளமரே. 4

களையுடைய மந்திரோச்சாரணத்தோடு அணியக்கூடிய விளங்குகின்ற அழகிய திருநீற்றையுடையவர். இசி விசிடடம் என்பதன் திரிபு, சிட்டு என்று கொண்டு சிறந்த (திருநீறு) எனினும் ஆம். மிசை சேர்வது ஓர் - விடையின்மேல் ஏறிச் செல்வதாகிய. விட்டு இலகு - விட்டு விட்டு பிரகாசிக்கும். அழகு ஒளி - அழகின் தோற்றப் பொலிவோடு. பெயர் அவர் - பெயர்தலை (நடத்தலை) யுடையவர். உறைவது விளமரே. சேர்வ தோர் பெயர் அவர் என்க. மரவடி - மரத்தால் ஆகிய பாதுகை, பிட்சா டன மூர்த்தியின் கோலத்தில் இதனைத் தரித்திருப்பதை யறிக.

"அடியிற்றொடுத்த பாதுகையும் அசைந்த நடையும் இசைமிடறும்
வடியிற் சிறப்ப நடந்தருளி மூழையேந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோன் முனிமகளிர், சுரமங்கையரை மயல்பூட்டிப்
படியிட்டெழுதாப் பேரழகாற் பலிதேர் பகவன் திருவுருவம்"

என்னும் காஞ்சிப் புராணத்தாலும் அறிக. "விட்டில கழகொளி பெய ரவர்" என்பதற்குப் "படியிட்டெழுதாப் பேரழகு" எனபது வியாக்கி யானம்போற் காணப்படுவதை யறிக.

3. அம்கதிர் ஒளியினர். அழகிய ஒளிவீசும் பொலிவையுடையவர். மிளிர்வது - ஒளிர்வது. செங்கதிர் என நிறம் - சூரியன் நிறத்தையொத்த நிறமும். அனையது ஓர் செழும்பணி மார்பினர்-அச்சூரியனை ஒத்த-ஒப்பற்ற செழிய பதுமராகம் முதலிய இரத்தினங்களால் இழைத்த ஆபரணங்களை அணிந்த மார்பும் உடையவர். சங்கு - சங்கும். அதிர் - ஒலிக்கும். பறை, குழல், முழவினோடு இவ்வாத்தியங்களோடு, இசைவதோர் சரிதையர் - இசைவதாகிய திருக்கூத்தை யுடையவர். (சரிதை - இங்கு நடனத்தைக் குறித்து நின்றது) வெம் - கொடிய. கதிர் - ஒளியை உடைய. மழு உடையவர் இடமெனில் - அது விளமர்.

4. மாடம் (அது) என - அது மாடம். என்னும்படி வளர் - உயர்ந்த. மதில் அவை - திரிபுரங்களை எரிசெய்வர். மாடம் அது என ஒருமையும். மதில் அவை எனப் பன்மையும் வந்தமை, ஒவ்வொன்றையும் தனித்தனிக்

பண்டலை மழலைசெ யாழென மொழியுமை பாகமாக்
கொண்டலை குரைகழ லடிதொழு மவர்வினை குறுகிலர்
விண்டலை யமரர்கள் துதிசெய வருள்புரி விறலினர்
வெண்டலை பலிகொளும் விமலர்தம் வளநகர் விளமரே. 5

மனைகடொ றிடுபலி யதுகொள்வர் மதிபொதி சடையினர்
கனைகட லிடுவிட மமுதுசெய் கறையணி மிடறினர்
முனைகெட வருமதி ளெரிசெய்த வவர்கழல் பரவுவார்
வினைகெட வருள்புரி தொழிலினர் செழுநகர் விளமரே. 6

குறிக்கும்போதும், ஒருங்கு குறிக்கும்போதும் முறையே கொள்க. விரவு சீர்ப்பீடு என - பொருந்திய தமது புகழின் பெருமையே பொருளாக (அரும்மறை) உரைசெய்வர் - சொல்லியருள்வர். என்பது வேதங்களிற் கூறப்படுவன சிவபிரானது புகழ்களே என்ற கருத்து. "எவன் நினைத்த மாத்திரையில் சர்வாண்டங்களையும் ஆக்கி அழிக்கவல்லனோ, எவனுடைய ஆணையால் இரு சுடரியங்குவதும், வளியுளர்வதும் வான்பெய்வதும் ஆதியன நிகழ்கின்றவோ, அவனே கடவுள். அவனே தலைவன் அவனே சரண்புகத் தக்கவன்" என்பன போன்றவை. சரிதைகள் - தமது வரலாறுகள். பாடலர் - அடியார்களாற் பாடலாகப் பாடப்படுதலையுடையவர். ஆடிய நெருப்புப் பற்றியெரிந்த. (சுடலையில்) இடம் உற - அரங்கு ஆக (நின்று) நடம் நவில் - நடம் ஆடும். வேடம் (அது) உடையவர் - கோலமுடையவர். (அவரது வியல்) வளத்தாற் பெரிய, நகர்-தலம். திருவிளமர் "வியல் என்கிளவி அகலப் பொருட்டே" என்பது உரியியற் சூத்திரம் 4. இங்கு அது பெரிய என்னும் பொருளில் வந்தது.

5. பண்தலை - பண்ணினிடத்ததாகிய. (பண்ணோடு கூடிய) மழலை செய்யாழ் என - இனிமையைச் செய்கின்ற யாழ்போல. மொழி - பேசுகின்ற. (உமை பாகமாகக்கொண்டு) அலை - அசைகின்ற. குரைகழல் - ஒலிக்கும் வீரகண்டை யணிந்த. (அடிதொழும் அவர் வினை குறுகிலர்) விண்டலை - விண்ணின் இடத்துள்ள. (அமரர்கள் துதிசெய அருள்புரி) விறலினர் - அருட்பெருக்கையுடையவர். மழலை - இனிமைக்கு ஆகியது. காரியவாகுபெயர். விறல் - வலிமை: அருளின் வலிமை; அருட்பெருக்கு.

6. மனைகள்தோறும், இடு, பலி (அது) கொள்வர், மதி. பொதி - தங்கிய. கனைகடல் - ஒலிக்கின்ற கடலில் தோன்றி. அடு - உயிர்களைக் கொல்ல வந்தவிடம். அமுதுசெய் - உண்டதனால் எய்திய. (கறை அணி) மிடறினர் - கழுத்தையுடையவர். மிடற்றினர் - எனற்பாலது. மிடறினர் என நின்றது சந்தம் நோக்கி. முனை - போரில். கெட வரும் - அழிய.

நெறிகமழ் தருமுரை யுணர்வினர் புணர்வுறு மடவரல்
செறிகமழ் தருமுரு வுடையவர் படைபல பயில்பவர்
பொறிகமழ் தருபட வரவினர் விரவிய சடைமிசை
வெறிகமழ் தருமல ரடைபவ ரிடமெனில் விளமரே. 7

தெண்கடல் புடையணி நெடுமதி லிலங்கையர் தலைவனைப்
பண்பட வரைதனி லடர்செய்த பைங்கழல் வடிவினர்
திண்கட லடைபுனல் திகழ்சடை புகுவதொர் சேர்வினர்
விண்கட ல் விடமலி யடிகள்தம் வளநகர் விளமரே 8

வந்தமதிள் - புரங்களை. எரிசெய்த அவர் - மதில், மதிள் என வந்தது. ல. ள வொற்றுமை. தமது திருவடியை வணங்குபவரின் வினைகெட அருள் புரிதலைத் தவிரப் பிறதொழில் இல்லாதவர் என்பது பிற்பகுதியின் கருத்து.

7. நெறி - சரியை முதலிய நான்கு மார்க்கங்களும். கமழ் தரும் - விளங்குகின்ற. உரை - ஆகமங்களால். உணர்வினர் - உலகிற்கு உணர்வுகொளுத்தியவர். என்றது மயர்வறநந்தி முனிகணத்தளித்தமையை நெறி கமழ் தரும் உரை - உணர்வினர் - சைவ நன்னெறியிற் படரும் (அடியார்களின்) உரையிலும், உணர்விலும் இருப்பவர் எனலும் ஆம். இங்கு, கமழ்தரும் உரை என்பது "திருவாய்ப் பொலியச் சிவாயநம வென்று" என்பதுபோற்கொள்க. புணர்வு உறும் மடவரல் - (ஞானத்தில்) சிவமாகிய தம்மின் வேறாகாது ஒன்றிய சத்தியாகிய அம்பிகை. (உருவத்தும்) செறிகமழ்தரும் - (இடப்பாகத்தில்) பொருந்தி விளங்கும் உரு உடையவர், வடிவையுடையவர். படை பல பயில்பவர் - பல ஆயுதங்களையும் பயில்பவர்போற் கொள்பவர். பொறி - புள்ளிகள். கமழ்தரு - பொருந்திய பட அரவினர். விரவிய - கலந்த. சடை மிசை - வெறி - வாசனை. கமழ்தரு - வீசும். மலர் - அடியர் புனைந்த மலர். அடைபவர் - அடையப் பெற்றவர். முதல் இரண்டாம் அடிகளில் கமழ் தரும் என்பது - விளங்கும் என்ற பொருளிலும் மூன்றும் அடியில் பொருந்திய என்ற பொருளிலும் வந்தது.

8. தெண் கடல் - தெளிவான நீரையுடைய கடல். புடை அணி - சுற்றிய, இலங்கையர் தலைவனை. பண்பட அடர் செய்த - நன்றாக அடர்த்த. கழல் வடிவினர் - கழலோடு கூடிய வடிவையுடையவர். கடல் அடை புனல் - கடலையடையும் (கங்கை) நீர். திகழ்சடை புகுவது ஓர்சேர் வினர் - விளங்கும் சடையிற் புகுவதாகிய சேர்க்கையை யுடையவர். விண் - விண்ணை அளாவிப் பரவிய (விடம்) கடல். விடம் - விடக்கறை. மலி - (கண்டத்தின்கண்) பொருந்திய அடிகள்,

தொண்டசை யுறவரு துயருறு காலனை மாள்வுற
அண்டல்செய் திருவரை வெருவுற வாரழ லாயினுர்
கொண்டல்செய் தருதிரு மிடறின ரிடமெனி லளியினம்
விண்டிசை யுறுமலர் நறுமது விரிபொழில் விளமரே. 9

ஒள்ளியர் தொழுதெழ வுலகினி லுரைசெயு மொழிபுல
கொள்ளிய களவினர் குண்டிகை யவர்தவ மறிகிலார்
பள்ளியை மெய்யெனக் கருதன்மின் பரிவொடு பேணுவீர்
வெள்ளிய பிறையணி சடையினர் வளநகர் விளமரே. 10

9. தொண்டு - சிவனுக்கு அடிமை பூணும் திருத்தொண்டின் நிலையே. அசைவு உற - அழிய. வரு - மார்க்கண்டேயர் மேல் வந்த. துயர் உறு - துன்பம் உறுத்தவரும் (காலனை). தொண்டு அசைவு உற என்ற கருத்து. சிவனடியார்க்கு ஒருவர் தீங்கிழைப்பரேல் அது அடிமைத் திறத்தையே அழிப்பதாகும் என்பதாம். அது:- "என்போலிகளும்மை யினித் தெளியார் அடியார் படுவதிதுவேயாகில், அன்பேயமையும்" என்பதாற் கொள்க. (அப்பர் சுவாமிகள் திருமுறை 4. பதிகம் 1. பாட்டு 9.) காலனை மாள்வுறச் (செய்து) பின், அண்டல் செய்து - தன்னையண்டித் தன் ஆணைவழி நிற்றலையும் செய்து, இங்குச் செய்து என்பதனை பின்னும் கூட்டுக. அண்டல், அண்டுதல், அண்டி வாழ்தல் எச்ச உம்மை வருவித்துரைக்க. துயர் உறு என்பதில் பிறவினை விகுதி தொக்குநிறைது. மேல்வெருவுற என்பதும் அது. இருவரை - பிரம விட்டுணுகளாகிய இருவரையும். வெருவுற - அஞ்சுவிக்க. ஆர்கழல் ஆயினுன் - காண்டற்கரிய அழல் வடிவு ஆயினவன். இருவர் என்பது தொகைக் குறிப்பு கொண்டல் செய்தரு - மேகம்போலும் கரிய. திரு மிடற்றினர் - அழகிய கண்டத்தை யுடையவர். அளியினம் - வண்டின் கூட்டங்கள். விண்டு இசை உறு - ஒலியை வெளிப்படுத்திப் பாடுதலை யுடைய. (மலர்) நறும் மது விரி - நல்ல தேனைப் பெருகச் சொரிகின்ற பொழில்.

10. உலகத்து அறிவுடையார்களால் வணங்கியேத்துதற்குரிய மதங்கள் பல உண்டு. (ஒள்ளியர் - அறிவுடையவர்). அவற்றுள் களவி னரும், தவம் அறிகிலாதாரும் ஆகிய சமண பௌத்தர் தம் பள்ளியினர் கூறும் சமய நெறிகளை மெய்யென்று கருதீர்களாய், வெள்ளிய பிறை யணி சடையினர் விளமரைப் பரிவோடு பேணுவீர்களாக. (பரிவு - அன்பு) என்பது இப்பாடலின் திரண்டபொருள். கொள்ளிய - கொள்ளி யனைய. (களவினர்) நீறுபூத்த கொள்ளி - தவவேடம் பூண்ட வஞ்ச கருக்கு உவமை. குண்டிகையர் சமணரும் தவம் அறிகிலார் - பௌத்தரும்

வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள் விகிர்தரைச்
சிந்தையு ளிடைபெற வுரைசெய்த தமிழிவை செழுவிய
அந்தணர் புகலியு ளழகம ரருமறை ஞானசம்
பந்தன மொழியிவை யுரைசெயு மவர்வினை பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்

(குண்டிகையர் எனப்பிரித்துக் கூறினமையின்) பள்ளி என்பது இடவாகு பெயராய் அங்கு உறைவோரையும் அது இலக்கணையால் அவர் கூறும் உபதேசங்களையும் உணர்த்திற்று.

11. விகிர்தர் - (பிறரின்) வேறுபட்டவர். சிந்தையுள் இடைபெறு (இடை - இடம்) என்றது:- "உளம் பெருங்களன் செய்ததும் இலை நெஞ்சே" என்ற திருவாசகத்தின் கருத்து. செழுவிய - செழுமை பொருந்திய (புகலி). அருவினை. பறையும் - நீங்கும்.

வாணில வும்புன லும்பயில்
செஞ்சடை வண்கரு ணை
மலைமா துமையொடு மிவனு
வானென முன்னு ளுரைசெய்தோன்
சேணில வும்புகழ் மாளிகை
நீடிய தென்புக லிக்கரசைத்
திருவா ளனையெழி லருகா
சனிதனை மருவா தவர்கிளைபோல்
நாணில வும்பழி யோகரு தாதய
லாரொரு காளையுடன்
நசைதீர் நிலைகொலை புரிவேடுவர்
பயில் தருகா னதர்வெயிலிற்
கேணில வுங்கிளி பாவையொ
டாயமு யாயெனை யும்மொழியக்
கிறியா லெனதொரு மகள்போ
யுறுதுயர் கெடுவேன் அறிகிலனே.

—ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்.

## 89 திருக்கோச்சைவயம்

347 பதிகவரலாறு

சீகாழிப் பதிகங்களுள் ஒன்றாய், சேக்கிழார் சுவாமிகளால் கிளந் தோதப்படாதது.

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

திருந்துமா களிற்றிள மருப்பொடு
திரண்மணிச் சந்தமுந்திக்
குருந்துமா குரவமுங் குடசமும்
பீலியுஞ் சுமந்துகொண்டு
நிரந்துமா வயல்புகு நீடுகோட்
டாறுசூழ் கொச்சைமேவிப்
பொருந்தினார் திருந்தடி போற்றிவாழ்
நெஞ்சமே புகலதாமே. 1

ஏலமா ரிலவமோ டினமலர்த்
தொகுதியா யெங்குநுந்திக்
கோலமா மிளகொடு கொழுங்கனி
கொன்றையுங் கொண்டுகோட்டா
ருலியா வயல்புகு மணிதரு
கொச்சையே நச்சிமேவும்
நீலமார் கண்டனை நினைமட
நெஞ்சமே யஞ்சனீயே. 2

1. திருந்தும் - திருத்தமான. அழகான என்றபடி. இளம் மருப்பு - இளந்தந்தம். திரள் - திரட்சியான. மணி - இரத்தினங்களையும். சந்தம் - சந்தன மரங்களையும். உந்தி - அடித்துக்கொண்டு. குருந்து, குரவம் குடசம் - மலை மல்லிகை முதலிய மரவகைகளையும். பீலியும் - மயில் தோகைகளையும். நிரந்து - பரவி. நீடுகோட்டு ஆறுசூழ-நெடிய கரைகளை யுடைய காவிரி நதி சூழும். (கொச்சை வயம்) மேவிப் பொருந்தினார் - விரும்பித் தங்கியருளிய பெருமானின், (திருந்து அடிகளை நெஞ்சமே போற்றி வாழ்வாயாக). அது புகல் ஆம் - அத்திருவடி நமக்குச் சரண்புகும் இடமாம். கோட்டாறு.

2. நுந்தி - தள்ளிக்கொண்டு. கோலம் ஆம் - அழகாகிய. ஆலியா - ஆலித்து, ஆரவாரித்து. (கோட்டாறு வயல்புகும் கொச்சையே) நச்சி -

பொன்னுமா மணிகொழித் தெறிபுனற்
கரைகள்வாய் நுரைகளுந்திக்
கன்னிமார் முலைநலங் கவரவந்
தேறுகோட் டாறுசூழ
மன்னினார் மாதொடும் மருவிடங்
கொச்சையே மருவினாளும்
முன்னைநோய் தொடருமா றில்லைகா
ணெஞ்சமே யஞ்சனீயே 3

கந்தமார் கேதகைச் சந்தனக்
காடுசூழ் கதலிமாடே
வந்துமா வள்ளையின் பவரளிக்
குவளையைச் சாடியோடக்
கொந்துவார் குழலினார் குதிகொள்கோட்
டாறுசூழ் கொச்சைமேய
எந்தையா ரடிநினைந் துய்யலாம்
நெஞ்சமே யஞ்சனீயே. 4

மறைகொளுந் திறலினா ராகுதிப்
புகைகள்வா னண்டமிண்டிச்
சிறைகொளும் புனலணிசெழும்பதி
திகழ்மதிற் கொச்சை தன்பால்

விரும்பி. நீலம் ஆர் கண்டனை நினை, அஞ்சிய தேவர்களைக் காத்தமை காட்டும் கண்டம் அது. ஆகையால் நெஞ்சமே நீ அஞ்சுதல் ஒழிவாயாக.

3. மகளிர் மார்பிற்பூசிய சந்தனம் முதலிய வாசனைத் திரவியங் களைக் கவரும் பொருட்டு வந்து பாயும் என்றது தற்குறிப்பேற்ற அணி. முன்னைநோய் - தொன்றுதொட்ட மலநோய் (தொடருமாறு இல்லை).

4. கேதகை - தாழை. கதலி மாடு - வாழையின் பக்கம். வள்ளை யின்பவர் - வள்ளைக் கொடியின் திரளையும், அளிக்குவளையை - (மொய்க் கும்) வண்டுகளையுடைய குவளையையும். சாடி - மோதி. கொந்து - பூங் கொத்து. வார் - நெடிய.

உறைவிட மெனமன மதுகொளும்
　　பிரமனார் சிரமறுத்த
இறைவன தடியிணை யிறைஞ்சிவாழ்
　　நெஞ்சமே யஞ்சனீயே 5

சுற்றமு மக்களுந் தொக்கவத்
　　தக்கனைச் சாடியன்றே
உற்றமால் வரையுமை நங்கையைப்
　　பங்கமா வுள்கினானோர்
குற்றமில்லடியவர் குழுமிய
　　வீதிசூழ் கொச்சைமேவி
நற்றவ மருள்புரி நம்பனை
　　நம்பிடாய் நாளுநெஞ்சே. 6

கொண்டலார் வந்திடக் கோலவார்
　　பொழில்களிற் கூடிமந்தி
கண்டவார் கழைபிடித் தேறிமா
　　முகிறனைக் கதுவுகொச்சை

5. மறை கொ(ள்)ளும் திறலினார் - வேதம் ஓதலாற் பெற்ற வலிமை உடையவர்கள். ஆகுதிப்புகைகள். வான் அண்டமிண்டி - ஆகாயத்தை அளாவ நெருங்கலால். மிண்டி வினையெச்சத்திரிபு. வேள்வி யோம்பலால் கால மழை வழாது பெய்து, வயல் பாத்திகளில் தங்கும் நீர் வளப்பத்தால் அழகுடைத்தாகிய செழும்பதி என்பது முற்பகுதியின் கருத்து. கொச்சை தன்பால் - திருக்கொச்சை வயமாகிய தலத்தினிடம். உறைவு இடம் என மனம் அது கொள்ளும் இறைவன், பிரமனார் சிரம் அறுத்த இறைவன் எனக் கொள்க.

6. தக்கன் மகளான தோடம் நீங்க, இமய மலையரையன் மகளா தற்கும், தன் உடம்பில் ஒரு பங்கில் வைத்தற்கும் நினைத்தருளியவன் என்பது இரண்டாம் அடியின் கருத்து. மால்வரையுமை (ஆக) நங்கை யைப்பங்கம் (ஆக) எனக் கூட்டுக. ஓர் குற்றம் இல் - ஒரு குற்றமும் இல்லாத. அடியவர் குழுமிய வீதிசூழ் கொச்சை மேவி. நல்தவம் - நல்ல தவத்தின் பயன்களை. அருள்புரி நம்பனை நம்புவாயாக.

அண்டவா னவர்களு மமரரு
முனிவரும் பணியவாலம்
உண்டமா கண்டனூர் தம்மையே
யுள்குநீ யஞ்சனெஞ்சே. 7

அடலெயிற் றரக்கனூர் நெருக்கிமா
மலையெடுத் தார்த்தவாய்கள்
உடல்கெடத் திருவிர லூன்றினு
ருறைவிட மொளிகொள்வெள்ளி
மடலிடைப் பவளமு முத்தமுந்
தொத்துவண் புன்னைமாடே
பெடையொடுங் குருகினம் பெருகுதண்
கொச்சையே பேணுநெஞ்சே. 8

7. கோலம் - அழகையுடைய. வார் - நெடிய. பொழில்களில் - சோலைகளில். கொண்டலார் - மேகங்கள். வந்திட - வந்து படிய. (குரங்குகள் கூடிக்கொண்டு தங்களுக்கு முன்னே காணப்படுகின்ற) கழை பிடித்து ஏறி - மூங்கில்களைப்பற்றி ஏறி, மாமுறனை - கரிய அம்மேகத்தை கதுவு - கையாற் பிடிக்கின்ற (கொச்சை). கொண்டல், கொண்டலார் என்று உயர்த்தற்கண் வந்தது. அதன் சிறப்புநோக்கி ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவியும், ஒன்றனைக்கூறும் பன்மைக் கிளவியும்...செல்லா றல்ல என்னும் கிளவியாக்கச் சூத்திரத்தாற் கொள்க (27). தென்றலார் புகுந்துலவும் திருத்தோணிபுரத்துறையும் கொன்றை வார்சடையார் என முன் (திருமுறை 1. திருத்தோணிபுரம் 7) வந்தமையும் காண்க. அமரரும் - தேவர்களும், அண்டவானவர்களும் - அவரொழிந்த, ஏனைய அண்டங்களிலுள்ள, அயன் அரி முதலிய தேவர்களும்.

8. அடல் எயிற்று - வலிய பற்களையுடைய. அரக்கனூர் - இராவணன். (இகழ்ச்சிக் குறிப்பு) வாய்கள். உடல் கெட - உடலோடு நொறுங்க திருவிரல் ஊன்றினுன். வெள்ளி மடல் இடை - வெள்ளியைப்போன்ற மடல்களையுடைய விரிந்த பூக்களின் இடையிடையே. பவளமும் - பவளம் போன்ற பழம் பூக்களும். முத்தமும் - முத்துப்போன்ற அரும்புகளும் உடைய. கொத்து - பூங்கொத்துக்களையுடைய. புன்னைமாடு - புன்னை மரங்களில். குருகு இனம் - பறவையினம், பெடையோடும். பெருகும் - மகிழ்ச்சி மிகும் (கொச்சை).

அரவினிற் றுயிறரு மரியுநற்
　　பிரமனு மன்றயர்ந்து
குரைகழ றிருமுடி யளவிட
　　வரியவர் கொங்குசெம்பொன்
விரீபொழி லிடைமிகு மலைமகண்
　　மகிழ்தர வீற்றிருந்த
கரியநன் மிடறுடைக் கடவுளார்
　　கொச்சையே கருதுநெஞ்சே. 9

கடுமலி யுடலுடை யமணருங்
　　கஞ்சியுண் சாக்கியரும்
இடுமற வுரைதனை யிகழ்பவர்
　　கருதுநம் மீசர்வானோர்
நடுவுறை நம்பனை நான்மறை
　　யவர்பணிந் தேத்தஞாலம்
உடையவன் கொச்சையே யுள்கிவாழ்
　　நெஞ்சமே யஞ்சனீயே. 10

காய்ந்துதங் காலினாற் காலனைச்
　　செற்றவர் கடிகொள்கொச்சை
ஆய்ந்துகொண் டிடமென விருந்தநல்
　　லடிகளை யாதரித்தே

9. அரவினில் துயில்தரும் - பாம்பு அணையில் தூங்கும். அரியும், நல் பிரமனும். அயர்ந்து-சோர்வுற்று, குரைகழல்-ஒலிக்கின்ற வீரகண்டை யையணிந்த திருவடியையும், (திருமுடி அளவிட அரியவர்). கொங்கு - மகரந்தம், செம்பொன் - செவ்விய பொன்னைப் போல. விரி - மலர்களில் விரியப்பெற்ற. பொழில் - சோலை. இடைமிகு - இடையிடையே மிக்குள்ள. மலைமகள் மகிழும்படி கடவுளார் வீற்றிருக்கின்ற கொச்சையையே கருதுங்கள்.

10. கடு மலி உடல் - வெறுக்கத்தக்க துர்நாற்றம் மிக்க உடலை யுடைய. சமணரும் சாக்கியரும் (பௌத்தரும்). இடும் - சொல்லும். அறவுரைதனை - சமயபோதனைகளை. இகழ்பவர்களாகிய அடியார்கள். கருதும் - நினைந்து ஏத்தும் (நம் ஈசர்). வானோர் நடுஉறைநம்பனை - தேவர் கள் தன்னைச் சுற்றித் தொழ அவர் நடுவுள் நாயகராக வீற்றிருந்தருளும் சிவன்.

ஏய்ந்ததொல் புகழ்மிகு மெழின்மறை
ஞானசம் பந்தன்சொன்ன
வாய்ந்தவிம் மாலைகள் வல்லவர்
நல்லவா னுலகின்மேலே. 11

திருச்சிற்றம்பலம்

11. காலனைக் காய்ந்து காலினால் செற்றவர். ஆய்ந்து - இதுவே எவற்றினும் சிறந்ததென ஆராய்ந்து. கொண்டு - தேர்ந்து. கடிகொள் - காவலையுடைய. கொச்சை இடம் என இருந்த அடிகளை ஞானசம்பந்தன் சொன்ன (மாலை). ஆய்ந்த - ஆராய்ந்துணர்த்திய (இம்மாலைகள் வல்லவர். வான் உலகில் மேன்மையுடையவராவர்) மேல் - மேன்மையுடையவர்; ஆகுபெயர்.

அறிவாகி யின்பஞ்செய் தமிழ்வாதில் வென்றந்த
அமணனை வன்குண்டர் கழுவேற முன்கண்ட
செறிமாட வண்சண்பை நகராளி என்தந்தை
திருஞான சம்பந்தன் அணிநீடு திண்குன்றின்
நெறியால மண்டுன்றி முனைநாள் சினங்கொண்டு
நிறைவார் புனந்தின்று மகள்மேல் வருந்துங்க
வெறியார் மதந்தங்கு கதவா ரணங்கொன்ற
வெகுளாத நஞ்சிந்தை விறலா னுளன்பண்டே.

பண்டமுது செய்ததுமை நங்கையருள்
மேவுசிவ ஞானம்
பைந்தரள நன்சிவிகை செம்பொனணி
நீடுகிற தாளங்
கொண்டதரன் உம்பர்பரன் எங்கள்பெரு
மானருள் படைத்துக்
கொடுத்ததமி ழைத்தவ குலத்தவர்களுக்
குலகில் இன்பம்...........

— ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 90 திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்

## 348 பதிகவரலாறு

வேதத்தைத் தமிழால் விரித்த ஞானசம்பந்தர், திரு மணஞ்சேரி, எதிர் கொள்பாடி என்னும் பதிகளை எய்தி, ஒப்பில் பதிகங்கள் பாடி, ஓங்கு வேள்விக்கு உற்று, அங்கு மணவாள நற்கோலத்தைத் தழும்பிய தன்மை யுடன் திருத்துருத்தியில் பகலில் காட்டக்கண்டருளிப் பாடிய தண்டமிழ் மாலை இத்திருப்பதிகம்.

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

ஓங்கிமே லுழிதரு மொலிபுனற்
கங்கையை யொருசடைமேல்
தாங்கினா ரிடுபலி தலைகல
னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினா லுமையொடும் பகலிடம்
புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 1

தூறுசேர் சுடலையிற் சுடரெரி
யாடுவர் துளங்கொளிசேர்
நீறுசாந் தெனவுகந் தணிவர்வெண்
பிறைபுல்கு சடைமுடியார்

---

1. மேலும் மேலும் ஓங்கிப் பரவிவந்த ஓசையையுடைய கங்கை நீரை ஒரு சடைமேல் தாங்கினவர், உலகையே அழிப்பது போல் அவ்வளவு பெருக்குடைய நீரை, ஒரு சடையில் தாங்கினான் என ஓர் நயம். இடுபலி - இடும் பிச்சையைத் தலைகலனாக ஏற்கும், தம் பெருமான், தம்பிரான், தம்மடிகள் - என்பன ஒரு பொருளன; தாமே தமக்குத் தலைவர் என்பது. பாங்கினால் - முறைப்படி, பகற் காலத்துத் தங்குமிடம் நீர்வளம் மிக்க துருத்தியாக உடையவர், இரவுக் காலத்துத் தங்குவது திருவேள்விக் குடியாம், பாங்கினால் - என்றது, பகற் காலத்துத் திருத்துருத்தியிலும், இரவுக்காலத்துத் திருவேள்விக்குடியிலும், தங்கும் முறை பகல் இடம் இரவு இடம் - இடம் என்ற சொற்கள் காலத்தைக் குறித்தன. நீர் - நீரினா லாகும் வளத்துக்கானது காரண ஆகுபெயர்.

நாறுசாந் திளமுலை யரிவையோ
டொருபக லமர்ந்தபிரான்
வீறுசேர் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 2

மழைவள ரிளமதி மலரொடு
தலைபுல்கு வார்சடைமேல்
கழைவளர் புனல்புகக் கண்டவெங்
கண்ணுதற் கபாலியார்தாம்
இழைவளர் துகிலல்கு லரிவையோ
டொருபக லமர்ந்தபிரான்
விழைவளர் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 3

கரும்பன வரிசிலைப் பெருந்தகைக்
காமனைக் கவினழித்த
சுரும்பொடு தேன்மல்கு தூமலர்க்
கொன்றையஞ் சுடர்ச்சடையார்

2. தூறு - புதர்ச்செடிகள், துளங்கு ஒளிசேர் - விளங்கும் ஒளியை யுடைய திருநீற்றைச் சந்தனமாகக்கொண்டு பூசுவர், நாறு - கமழும். சாந்து - சந்தனக் குழம்பையணிந்த, அரிவையோடு - அம்பிகையுடனே. வீறு - செல்வ மிகுதி, துருத்தியாராய் அரிவையொடு ஒருபகல் அமர்ந்த பிரான் இரவிடத்து வேள்விக்குடியில் உறைவர் என வினை முடிவு செய்க.

3. மேகத்திலுள்ள பிறையும், மலரும், நகுவெண்டலையும் பொருந்திய நெடிய சடைமேல், கங்கைநீர் தங்கச்செய்த எமது சிவபெருமான், கழைவளர் புனல் - கரும்பு முதலிய பயிர்களைச் செழிப்பிக்கும் புனல், கண்ட - செய்த என்னும் பொருளில் வருவதைத் "திருநகரம் கண்ட படலம்" என வருதலாலும் அறிக. கண்ணுதலாகிய கபாலியார் என்க. கபாலியர் - தலையோட்டையேந்தியவர், விழை(வு)வளர்துருத்தியார் - மேலும் மேலும் தரிசிக்க ஆசைதரும் திருத்துருத்தியார். அம்பிகையோடும் துருத்தியாராய்ப் பகலில் அமர்ந்தபிரான் இரவிடத்து உறைவது திருவேள்விக்குடியே என இப்பதிகத்து மேல் வரும் பாடல்கள் தோறும் கொள்க.

அரும்பன வனமுலை யரிவையொ
டொருபக லமர்ந்தபிரான்
விரும்பிடம் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 4

வளங்கிளர் மதியமும் பொன்மலர்க்
கொன்றையும் வாளரவும்
களங்கொளச் சடையிடை வைத்தஎங்
கண்ணுதற் கபாலியார்தாம்
துளங்குநூன் மார்பின ரரிவையொ
டொருபக லமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 5

பொறியுலா மடுபுலி யுரிவையர்
வரியராப் பூண்டிலங்கும்
நெறியுலாம் பலிகொளு நீர்மையர்
சீர்மையை நினைப்பரியார்
மறியுலாங் கையினர் மங்கையொ
டொருபக லமர்ந்தபிரான்
வெறியுலாந் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 6

4. அ(ன்)ன கரும்பு வரிசிலைக்காமன் - கரும்பாகிய கட்டமைந்த அத்தகைய வில்லையுடைய மன்மதன், பெருந்தகைக்காமன், கவின் அழித்த - அழகிய உடலை அழித்த, உடலைக்கவின் என்றது தானியாகு பெயர், அரும்பு - தாமரையரும்பு, கோங்கினரும்புமாம். தனக்கு இறுதி நேர்வதோர்ந்தும், தேவர்கள் துயர்தீர்தலைக் கருதி யிறைவன் மேற் சென்றமையிற் பெருந்தகைக் காமன் என்றார்.

5. மதியமும், கொன்றையும், பாம்பும் தமக்கு இடமாகக் கொள்ளச் சடையில் வைத்த காபாலியார், துளங்கும் நூல் - அசையும் பூணூல்.

6. கீற்றுக்களையுடைய, கொல்லும், [illegible] நெடிய பாம்பை அணியாக அணிந்து, வீதியில் திரிந்து, ஏற்பதாகிய பிச்சைத் தன்மையுடையவர், அத்தகு எளியவராயினும், தமது பெருமையினை நினைப்பினும் அறியமுடியாதவர், மறி - மான்கன்று. வெறி - வாசனை.

புரிதரு சடையினர் புலியுரி
யரையினர் பொடியணிந்து
திரிதரு மியல்பினர் திரிபுர
மூன்றையுந் தீவளைத்தார்
வரிதரு வனமுலை மங்கையொ
டொருபக லமர்ந்தபிரான்
விரிதரு துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 7

நீண்டிலங் கவிரொளி நெடுமுடி
யரக்கனிந் நீள்வரையைக்
கீண்டிடந் திடுவனென் றெழுந்தவ
னுள்வினை கீழ்ப்படுத்தார்
பூண்டநூன் மார்பின ரரிவையொ
டொருபக லமர்ந்தபிரான்
வேண்டிடந் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 8

கரைகட லரவணைக் கடவுளுந்
தாமரை நான்முகனும்
குரைகழ லடிதொழக் கூரெரி
யெனநிறங் கொண்டபிரான்
வரைகெழு மகளொடும் பகலிடம்
புகலிடம் வண்பொழில்சூழ்
விரைகமழ் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 9

7. புரிதரும் - முறுக்கிய, சடையினர், தீவளைத்தார் - தீயால் வளைவித்து எரித்தவர், வரிதரு - சந்தனக்கீற்றெழுதிய. வனமுலை; வனம்- அழகு.

8. பதித்த இரத்தினங்களால் நெடுந்தூரம் விளங்கிப் பிரகாசிக்கும் ஒளியுடைய பெரிய முடியையுடைய, அரக்கன் - என்பது முற்பகுதியின் பொழிப்பு. இந்நெடிய மலையைத் தோண்டியெடுத்து அப்பால் இடுவேன் என்றெழுந்தவன், ஆள்வினை - முயற்சி, கீழ்ப்படுத்தார் - மேல்எழாத வாறு அழித்தருளியவர்.

9. கரைகடல் அரவு அணைக்கடவுளும் - ஒலிக்கின்ற கடலில் பாம்பை அணையாகவுடைய திருமாலும், நிறம் - இங்கு வடிவு என்னும்

அயமுக வெயினிலை யமணருங்
குண்டருஞ் சாக்கியரும்
நயமுக வுரையினர் நகுவன
சரிதைகள் செய்துழல்வார்
கயலன வரிநெடுங் கண்ணியொ
டொருபக லமர்ந்தபிரான்
வியனகர்த் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே 10

விண்ணுலாம் விரிபொழில் விரைமணற்
றுருத்திவேள் விக்குடியும்
ஒண்ணுலாம் மொலிகழ லாடுவா
ரரிவையொ டுறைபதியை
நண்ணுலாம் புகலியு ளருமறை
ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணுலா மருந்தமிழ் பாடுவா
ராடுவார் பழியிலரே. 11

திருச்சிற்றம்பலம்

பொருளில் வந்தது இலக்கணை. கூர் எரி - மிக்கநெருப்பு. குரைகழல் அடி - ஒலிக்கும் வீர தண்டையையுடைய. அடி தொழ - (தமது செருக்கு ஒழிந்து தாழ்வுற்றுத்) தொழுமாறு, (நிறங்கொண்டபிரான்) தொழ - காரியப் பொருட்டு வினையெச்சம், வரைகெழும்மகள் - இமவானிற் பிறந்த மகள்.

10. அயம் முகம் வெயில் - பழுக்கக்காய்ச்சிய இரும்பு போற்சுடும் வெயிலில். நிலை (தவமென்று நிற்றலையுடைய துறவிகளாகிய அமணரும், குண்டரும், அவருள் இல்லறத்தாராகிய கொடியோரும். சாக்கியரும் - பௌத்தரும், நயமுக உரையினர் - விரும்பத்தக்க முகத்தோடு பேசுதலை யுடையவர். நகைக்கத்தக்க கதைகளைக் கட்டித் திரிபவர் ஆதலால் அவர் உரையையும், சரிதையையும் கொள்ளாது. துருத்தியார் வேள்விக்குடி யிலிருப்பவர், அவர் அடி சார்ந்து உய்வீர்களாக என்க.

11. துருத்தி:- ஆற்றிடைக் குறையாதலால் விரைமணல் துருத்தி என்றார். திண்(மை)கடைக்குறை, கழல் ஆடுவார் - திருவடியைத் தூக்கி நின்றாடுவார். நண் - அனைவரும் புகலிடமாக அடைவதாகிய - (புகலி) பாடுவார், ஆடுவார் பழி பாவங்கள் இல்லாதவராவர். பாவம், உபலட் சணத்திற் கொள்ளப்பட்டது.

# 91 திருவடகுரங்காடுதுறை

349 **பதிகவரலாறு**

திருவின்னம்பர்த் திருக்கோயிலை வணங்கிச் சென்று, வாலியார் வழிபட்ட வடகுரங்காடுதுறையை அடைந்து, அவ்வழிபாட்டையும் சிறப் பித்துப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

**பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

கோங்கமே குரவமே கொழுமலர்ப்
புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா
திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி யடிகளா
ரிடமென விரும்பினாரே. 1

மந்தமா யிழிமதக் களிற்றிள
மருப்பொடு பொருப்பினல்ல
சந்தமா ரகிலொடு சாதியின்
பலங்களுந் தகையமோதி
உந்துமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
எந்தையா ரிணையடி யிமையவர்
தொழுதெழு மியல்பினாரே. 2

1. கோங்கமே, குரவமே - கோங்கமும், குரவமும் எனப் பொருள் தரலால் ஏகாரம் எண்ணுப்பொருள். கொகுடி முல்லை - முல்லைவகை. விம்மு - பருத்த, பாதிரியாகிய இம்மரங்களை அடித்துக்கொண்டு பெருகும் காவிரியின் வடகரையில் உள்ள குரங்காடுதுறையைச் சடைமுடி அடிகளார் இடமென விரும்பினார் என்க.

2. மந்தமாய் - சிறு அளவினதாக, இழி - சொரியும்; மதம் என்றதனாலும், இளம் மருப்பு என்றதனாலும், யானைக் கன்றுகளின் தந்தங்கள் என்க, தந்தங்களை உந்தும் எனவே யானைக் கன்றுகளையும் உந்தும்

முத்துமா மணியொடு முழைவள
ராரமு முகந்துநுந்தி
எத்துமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
மத்தமா மலரொடு மதிபொதி
சடைமுடி யடிகடம்மேல்
சித்தமா மடியவர் சிவகதி
பெறுவது திண்ணமன்றே. 3

கறியுமா மிளகொடு கதலியின்
பலங்களுங் கலந்துநுந்தி
எறியுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
மறியுலாங் கையினர் மலரடி
தொழுதெழ மருவுமுள்ளக்
குறியினு ரவர்மிகக் கூடுவார்
நீடுவா னுலகினூடே. 4

என்பது அருத்தாபத்தியாற் கொள்ளப்படும். (சந்தனம், அகில், சாதி) யாகிய, பலன்கள் - பயன் தரக் கூடிய இம் மரங்களையும். தகைய - தன்னிடத்து விழ. மோதி - சாடி. உந்தும் - அடித்துவரும் காவிரி. எந்தையார் தமது இணையடியை இமையவர் தொழுது எழும் தன்மை யினர்.

3. முழைவளர் - குகைகளின் அருகிலே வளர்ந்த. ஆரமும் - சந்தன மரங்களையும். முகந்து - வாரி. நுந்தி எத்தும் - தள்ளி மோதும் காவிரி. மாமத்த மலர் - பெருமை பொருந்திய பொன்னூமத்தை மலரோடு. அடிகள் தம்மேல் - அடிகளிடத்து. சித்தமாம் அடியவர் - சித்தம் வைக்கும் அடியவர்.

4. கறியும் - உறைக்கும். மாமிளகு ஒடு - மிக்க மிளகுச் செடிக ளோடு. கறி - கறிப்பு எனவும் வழங்கும். அதனை " ஐயமும் கறிப்பும் ஆகலும் உள்வே " என்னும் உரியியற் சூத்திரத்தாலும், " கடிமிளகு தின்ற கல்லா மந்தி " என்னும் அதன் உரையாலும் அறிக. அவரது மலரடிகளைத் தொழுது எழ எண்ணும் உள்ளக் குறிக்கோளையுடையவர் என்பது. மலரடி......குறியினுர் என்பதன் பொருள். மிகக் கூடுவார் - என்றும் கூடிவாழ்வார்.

கோடிடைச் சொரிந்ததே னதனொடுங்
 கொண்டல்வாய் விண்டமுன்னீர்
காடுடைப் பீலியுங் கடறுடைப்
 பண்டமுங் கலந்துநுந்தி
ஓடுடைக் காவிரி வடகரை
 யடைகுரங் காடுதுறை
பீடுடைச் சடைமுடி யடிகளா
 ரிடமெனப் பேணினரே. 5

கோலமா மலரொடு தூபமுஞ்
 சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினர்
 திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை
 யடைகுரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை
 நினையவல் வினைகள்வீடே. 6

* * * * 7

நீலமா மணிநிறத் தரக்கனை
 யிருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார்
 வழிபட மன்னுகோயில்

5. கோடு இடை - மரக் கிளைகளில் சொரிந்த தேன். கோட்டிடை எனற்பாலது கோடிடை என்றாகியது புறனடையாற் கொள்க. கொண்டல் - மேகம். வாய்விண்ட - பெய்த. முன்னீர் - முதற்பெய்த நீர். "தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து" என்னும் திருமுருகாற்றுப் படையாலும் காண்க. காடு - சோலை. கடறு - வனம். ஓடு உடை - ஓடிவருதலையுடைய காவிரி.

6. வாலியார் வழிபடப் பொருந்தினர்:- தலப்பெயர்க் காரணங் கூறியவாறு. அடுத்த பாட்டிலும் இக் குறிப்பு விளக்கப்படுகிறது. ஆலும் - அசைந்து வருகிற, காவிரி. வல்வினைகள் - எளிதில் நீங்காத கன்மங்கள். வீடு - விடுதலையாம். வீடு - முதனிலைதிரிந்த தொழிற் பெயர்.

7. ... — ... ... ... ...

ஏலமோ டிலையில வங்கமே
யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை
யடைகுரங் காடுதுறையே. 8

பொருந்திறற் பெருங்கைமா வுரித்துமை
யஞ்சவே யொருங்குநோக்கிப்
பெருந்திறத் தநங்கனை யநங்கமா
விழித்ததும் பெருமைபோலும்
வருந்திறற் காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
அருந்திறத் திருவரை யல்லல்கண்
டோங்கிய வடிகளாரே 9

கட்டமண் டேரருங் கடுக்கடின்
கழுக்களுங் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் மறவுரை கொள்ளலும்
பெருவரைப் பண்டமுந்தி

8. ஒல்க - குழைய. "ஒல்கு தீம்பண்டம்" என்பது சீவக சிந்தாமணி. இராவணனை வாலினுற் கட்டிய வாலியார். இலை - பச்சிலை மரம். குறிப்பு :- எட்டாவது பாடல் மண்ணின் மிசை வாழ்வார்கள், பிழைத்தாலும் வந்தடையிற் கண்ணுதலோன் தன்கருணைக் கைக்கொள் ளும் எனக் காட்டவருவது. இப்பதிகத்து வாலியின் பெருமையோடு படுத்தி இராவணனைக் கூறியமை பாராட்டத்தக்கது. வாலியார்:- ஒரு வரைக் கூறும் பன்மைக்கிளவி. (தொல். சொல். சூ. 27).

9. பெருந்திறத்து அநங்கன்; உடல் இன்றியே பெரிதும் வருத்தும் தன்மை பெருந்திறம் என்னப்பட்டது. அநங்கனை - மன்மதனை. அங் அங்கமா - உடம்பு இல்லாதவாறு. அநங்கன் - வாளாபெயராய் நின்றது. அரும் திறத்து - அரிய வலியையுடைய. இருவரை - பிரம விட்டுணுக் களை. அல்லல் கண்டு - துன்புறச் செய்து. ஓங்கிய - அழலாய் ஓங்கிய. வடகுரங்காடுதுறையடிகளார் அநங்கனை அநங்கமா விழித்ததும் பெருமை போலும் என்க.

எட்டுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறைச்
சிட்டனு ரடிதொழச் சிவகதி
பெறுவது திண்ணமாமே. 10

தாழிளங் காவிரி வடகரை
யடைகுரங்காடுதுறைப்
போழிள மதிபொதி புரிதரு
சடைமுடிப் புண்ணியனைக்
காழியா னருமறை ஞானசம்
பந்தன கருதுபாடல்
கோழையா வழைப்பினுங் கூடுவார்
நீடுவா னுலகினூடே 11

திருச்சிற்றம்பலம்

---

10. கட்டு - கட்டுப்பாட்டையுடைய. அமண் (உம்) தேரரும் - அமணரும், பௌத்தரும். அமண்:- தூது, அரசு என்பன போல விகுதி தொக்குநின்றது. கடுக்கள் தின் - கடுக்காய்களைத் தின்கின்ற. கழுக்கள் - கழுந்து போல்பவர். கசிவு - மன விரக்கம். பிட்டர் - விலக்கத்தக்கவரும். மயிர் பறித்த தலையினராதலின் அமணரைக் கழுக்கள் என்றார். பிட்டர் - பிரஷ்டர் என்ற வடசொல்லின் திரிபு. அறவுரை - தர்மோபதேசங்கள். கொள்ளலும் - கொள்ளன்மின் (கொள்ளும் உடம்பாடு) எதிர்மறைப் பன்மை ஏவல் வினை முற்று. கொள் - அல் - உம்; அல் - எதிர்மறை இடைநிலை. உம் - ஏவற் பன்மை விகுதி. வரைப் பண்டம் - மலையில் உள்ள பொருள்கள். அவை :- முதல் ஐந்து பாடல்களிலும் கூறியவை. உந்தி எட்டும் - தள்ளிப் பாயும். மா காவிரி " இடையுரி வடசொலின்" என்னும் நன்னூல் சூத்திர விதிப்படி இயல்பாயிற்று. சிட்டன் - சீலத்தை விரும்புவோன், சிவபிரான். " சிட்டனைச் சிவனை சிவலோகனை " என்பது திருக்குறுந்தொகை.

11. தாழ் - ஓடிப் பாய்கின்ற. " பள்ளந்தாழுறு புனலில் " என்பது திருவாசகம். இளம் காவிரி (மென்புனலையுடைய காவிரி), இளந்தென்றல் என்பதுபோல. கருது - தியானித்துப் பயனெய்தத்தக்க பாடல். கோழையா அழைப்பினும் - கோழைமிடறோடு பாடினாலும். கோழைமிடறு பாடற் கேலாதது " கோழைமிடறாக கவிகோளும் இலவாக இசைகூடும் வகையால் " எனவரும் திருவைகாவூர்ப் பதிகத்தாலும் அறிக. அழைத்தல் - பாடுதல். அழைத்தல் என்பதற்கு மறு சொல் விளித்தல் என்பது. அதன் பிறிதொரு பொருள் பாடுதல் என்பது. இதனை " கொம்பர் இருங்குயில் விளிப்பன காணாய்" என்னும் மணிமேகலையால் அறிக. நீடு - என்றும் அழியாத. வானுலகு - முத்தியுலகம்.

## 92 திருநெல்வேலி

### 350 பதிகவரலாறு

பற்றூர் புரஞ்செற்றூராகிய புற்றூரரவணிவாரைக் கற்றூர் தொழு தேத்துங் கானப்பேர், சுழியல், குற்றாலம், குறும்பலா ஆகிய நற்றூனங் களைக் கும்பிட்டு, திருநெல்வேலியைக் குறுகிப்பாடியருளியது இத் திருப்பதிகம்

**பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

மருந்தவை மந்திர மறுமைநன்
 னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
 சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
 சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலி
 யுறை செல்வர்தாமே. 1

என்றுமோ ரியல்பின ரெனநினை
 வரியவ ரேறதேறிச்
சென்றுதாஞ் செடிச்சியர் மனைதொறும்
 பலிகொளு மியல்பதுவே

1. முல்லை நிலத்தில்கொன்றை மரங்கள் பூத்தமலர்களையுதிர்க்க அருகிலேயுள்ள செருந்தி மரங்கள் பொன் போன்று மலர்கள் விரிக்கும் திருநெல்வேலி என்றது, "செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும்" மாந்தருறைவது எனக்குறித்தவாறு. திருநெல்வேலியுறைவர் செல்வர், அவர் நாமமாகிய திரு ஐந்தெழுத்துக்கள், மருந்து, மந்திரம் மறுமைக்கண் நன்மை விளைக்கும் நெறிகள், மற்றும் எல்லா நன்மைகளும் ஆகும். அன்றியும் தீர்தற்கரிய துயரங்களும் கெடும். பொருந்துதண் -8 ம் பாட லின் உரையிற் காண்க.

துன்றுதண் பொழினுழைந் தெழுவிய
கேதகைப் போதளைந்து
தென்றல்வந் துலவிய திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே 2

பொறிகிள ரரவமும் போழிள
மதியமுங்கங் கையென்னும்
நெறிபடு குழலியைச் சடைமிசைச்
சுலவிவெண் ணீறுபூசிக்
கிறிபட நடந்துநற் கிளிமொழி
யவர்மனங் கவர்வர்போலும்
செறிபொழி றழுவிய திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே. 3

காண்டகு மலைமகள் கதிர்நிலா
முறுவல்செய் தருளவேயும்
பூண்டநா கம்புறங் காடரங்
காநட மாடல்பேணி
ஈண்டுமா மாடங்கண் மாளிகை
மீதெழு கொடிமதியம்
தீண்டிவந் துலவிய திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே. 4

2. நெருங்கிய குளிர்ந்த சோலைகளிற் புகுந்து, தழைத்து எழுந்த தாழம்பூமடல் பொடிகளைத் தமிர்ந்து கொண்டு தென்றல் வந்துலவிய திருநெல்வேலியுறை செல்வர்தாம், என்றும் ஓரியல்பினரென நினைக்க முடியாதவர். (சில சமயம்) காளையில் ஏறிச்சென்று செடிச்சியர் (வேடர்) போன்ற தாழ்குலத்தோர் மனைதோறும் பிச்சையேற்கும் தன்மையும் அவருக்கு உண்டு.

3. நெறிபடு - தழைத்த. குழலியையும், என உம்மையை விரிக்க. கலவி - கலந்தணிந்து (கலவி) இகரம் வினையெச்சவிகுதி, கிறி - விளை யாட்டு, பட - பொருந்த, நடந்து - பிச்சைக்குச் சென்று, கிளிமொழியவர் - தாருகவனத்து முனிபத்தினியர் முதலியோர், மனம் கவர்வர் போலும்.

4. அழகுபொருந்திய உமாதேவியார் ஒளியையுடைய வரிசையான பற்களாற் சிரிப்புடையவராய் அருகிலிருந்தருளவும், அதற்கேற்ற வண்ணம் நடந்து கொள்ளாமல் பாம்பை அணிந்த ஊர்க்குப்புறம்பே உள்ளதாகிய

ஏனவெண் கொம்பொடு மெழில்திகழ்
மத்தமு மிளவரவும்
கூனல்வெண் பிறைதவழ் சடையினர்
கொல்புலித் தோலுடையார்
ஆனினல் ஐந்துகந் தாடுவர்
பாடுவ ரருமறைகள்
தேனில்வண் டமர்பொழிற் றிருநெல்வேலி
யுறைசெல்வர் தாமே. 5

வெடிதரு தலையினர் வேனல்வெள்
ளேற்றினர் விரிசடையர்
பொடியணி மார்பினர் புலியத
ளாடையர் பொங்கரவர்
வடிவுடை மங்கையோர் பங்கினர்
மாதரை மையல்செய்வார்
செடிபடு பொழிலணி திருநெல்வேலி
யுறை செல்வர் தாமே. 6

சுடுகாடு, நாடகமேடையாகக் கூத்தாடுதலைப் பேணியவராய் இருப்பர், திருநெல்வேலியுறை செல்வர், மாடங்களிலும், மாளிகைகளிலும் கட்டியுள்ள கொடி, சந்திரமண்டலம் வரை உயர்ந்து சந்திரனைமோதி உலாவும் திருநெல்வேலி, இன்ன தன்மையன் என்று அறிய ஒண்ணு இயல்பினனென்பது முதலிரண்டடிகளின் கருத்து. பேணி - குறிப்பு வினைமுற்று முற்றெச்சமாயிற்று. "புறங்காடரங்கா நடம் ஆட வல்லாய்" என இத் தொடர் வாகீசர் வாய்மையிலும் வழங்கியுள்ளது.

5. ஏனம் - பன்றி, எழில் திகழ் - அழகு விளங்குகின்ற, மத்தம், பொன்னூமத்தை. கூன், நல், வெண்பிறை, ஆவின் - பசுவிற்கிடைப்பதாகிய. நல் - நல்ல. ஐந்து - பஞ்சகவ்வியத்தை, உகந்து ஆடுவார், அரும் மறைகள் பாடுவார், திருநெல்வேலியுறை செல்வர்தாம், நல் - தூயன ஆகிய, "ஆடினுய் நறுநெய்யொடு பால்தயிர்" என்புழியும் காண்க.

6. வெடிதரு - வெடித்த. தலை - மண்டையோடு. (பிரம கபாலத்தை) தீயில் வெடித்த தலைபோன்றது என்க. வேனல் - வெப்பம். இங்குச் சினத்தைக் குறித்தது. வெள் ஏற்றினர் - வெண்மையையுடைய ஏற்றினர். வெடிதருதலை என்பதை, "குணந்தான் வெளிப்பட்ட...கொடியிடை" என்னும் திருக்கோவையார் போலக் கொள்க. செடி - புதர்கள்.

அக்குலா மரையினர் திரையுலா
முடியின ரடிகளன்று
தக்கனுர் வேள்வியைச் சாடிய
சதுரனுர் கதிர்கொள்செம்மை
புக்கதோர் புரிவினர் வரிதரு
வண்டுபண் முரலுஞ்சோலைத்
திக்கெலாம் புகழுறுந் திருநெல்வேலி
யுறை செல்வர் தாமே. 7

முந்திமா விலங்கலன் றெடுத்தவன்
முடிகடோ ணெரிதரவே
உந்திமா மலரடி யொருவிர
லுகிர்நுதி யாலடர்த்தார்
கந்தமார் தருபொழின் மந்திகள்
பாய்தர மதுத்திவலை
சிந்துபூந் துறைகமழ் திருநெல்வேலி
யுறை செல்வர் தாமே. 8

7. அக்கு - அக்குப்பாசி. உலாம் - அசைகின்ற. அரையினர் - இடுப்பையுடையவர். திரை - (கங்கை) அலைகள். உலாம் - உலாவும். முடியினராகிய அடிகள். தக்கனுர் - உயர்சொற்ருனே குறிப்பு நிலையால் இழிபு விளக்கிற்று என்பர் சேனுவரையர். தொல், சொல் 27 சூ. உரை (சாடிய - அழித்த. சதுரனுர்-திறமையையுடையவர். கதிர்கொள் செம்மை புக்கது. ஓர் புரிவினர் - செவ்வொளி பொருந்திய சடையை யுடையவர், புரிவு - முறுக்குதலை உடைய சடைக்கு ஆயினமையின் தொழிலாகு பெயர், புரிசடை என வருதலுங் காண்க. வரிதரு - கீற்றுக்களையுடைய வண்டு, முரலுதல் - மூக்கால் ஒலித்தல்.

8. மாவிலங்கல் - பெருமையையுடைய, கைலை மலையை, அன்று- முந்தி. எடுத்தவன் முடிகளோடு தோள்நெரிய. உந்தி - அமிழ்த்தி. ஒரு விரலின் நகத்தின் நுனியால் அடர்த்தார். கந்தம் ஆர்தரு - வாசனை நிறைந்த சோலைகளில் குரங்குகள் பாய்வதால் மலர்களிலுள்ள தேன் துளிகள் சிந்து பூந்துறையின்கண் மணக்கின்ற திருநெல்வேலி.

குறிப்பு - இங்குச் சிந்துபூந்துறையைக் குறித்ததுபோலவே இப் பதிகம் முதற்பாடலில் பொருந்துதண் - என்பது கண்ணுதல்என்பதுபோல முன் பின்னுகத் தொக்க தொகையெனக்கொண்டு தண்பொருந்தும் எனத் தாமிரபரணி நதியைக் குறிப்பித்தனர் எனலும் ஆம்.

பைங்கண்வா ளரவணை யவனொடு
பனிமல ரோனுங்காணு
அங்கணு வருளென வவரவர்
முறைமுறை யிறைஞ்சநின்றார்
சங்கநான் மறையவர் நிறைதர
வரிவைய ராடல்பேணத்
திங்களுள் விழமல்கு திருநெல்வேலி
யுறை செல்வர் தாமே. 9

துவருறு விரிதுகி லாடையர்
வேடமில் சமணரென்னும்
அவருறு சிறுசொலை யவமென
நினையுமெம் மண்ணலார்தாம்
கவருறு கொடிமல்கு மாளிகைச்
சூளிகை மயில்களாலத்
திவருறு மதிதவழ் திருநெல்வேலி
யுறை செல்வர் தாமே. 10

9. பைங்கண்வாள் அரவு - பசிய கண்களையும் ஒளியையும் உடைய அரவு; அணையான். காணு - (அடியையும் முடியையும்) காணுமல். அங்கணு - சிவபெருமானே. அங்கணன் - சிவபெருமானுக்கு ஒருபெயர். திங்கள் விழா - நாள் விழா. மல்கு - மாதோற்சவங்களும், நித்தியோற்சவங்களும் பொருந்திய திருநெல்வேலி. கூட்டமாகிய அந்தணர் வேதங்கள் பாடிவரவும், பெண்கள் நாட்டியம் ஆடவும் நடக்கும் திருவிழாக்கள் நான்மறையவர் - நால்வேதங்களையும் பாடி வருபவர்.

10. துவர் உறு - மருந்தந்துவரில் தோய்த்த, துகில் ஆடை - துகிலாகிய ஆடை. (இருபெயரொட்டுப்பண்புத்தொகை) ஆடையர் - பௌத்தர். வேடம் இல் - வேடநெறி நிற்றல் இல்லாத; சமணம். சிறு சொ(ல்)லை-புன்மொழிகளை, அவம் - பயனற்றது, நினையும் - (நினையுங்கள்) ஏவற்பன்மை, எம் அண்ணலார் தாம் திருநெல்வேலியுறை செல்வராவார். அவரையடைந்து உய்யுங்கள் என்பது குறிப்பெச்சத்தாற் பெறவைத்தார். கவர்உறு - கண்டார் மனங்களைக் கவர்கின்ற. மாளிகை, சூளிகை, மேல்வீட்டில் ஓர் உறுப்பு, மயில்கள் ஆட - அதனைக் காண்பதற்கு, திவர் - தேவர்கள், (திவ் - தேவலோகம்) உறு - அடையும் (திருநெல்வேலி) மாளிகைகளில் மதிதவழும் (திருநெல்வேலி).

பெருந்தண்மா மலர்மிசை யயனவ
னனையவர் பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வேலி
யுறை செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த் தடமல்கு புகலியுண்
ஞானசம் பந்தன்சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியாடக்
கெடு மருவினையே. 11

திருச்சிற்றம்பலம்

11. பேணு - பாராட்டத்தக்க, கல்வித்திருந்தும் - கல்வியால் நிரம்பிய மறையவர், அதனால் அயனையனையவர் பாடி, ஆட திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முத்தமிழ்விரகர் ஆகையால் அவர் தமிழ்ப் பாடல்கள் இயற்றமிழ்ப் பாடல்களேயன்றிப் பாடுதற்குரிய இசைப் பாடல்களாகவும் ஆடுதற்குரிய பாடல்களாகவும் உள்ளன என்பது இங்குக் குறித்தவாறு.

கண்டதரு கந்தர்குல மொன்றிமுழு
துங்கழுவி லேறக்
கறுத்தது வினைப்பயன் மனத்திலிறை
காதலது வன்றி
விண்டதுவும் வஞ்சகரை மஞ்சணவு
கின்றமணி மாட
வேணுபுர நாதன்மிகு வேதியர்
சிகாமணி பிரானே.

பிரானை மெய்த்திரு ஞானசம்
பந்தனை மறையவர் பெருமானைக்
குராமலர்ப் பொழிற் கொச்சையர்
நாதனைக் குரைகழ லிணைவாழ்த்திக்
தராதலத்தினி லவனருள் நினைவொடு
தளர்வுறு தமியேனுக்
கிராவினைக் கொடு வந்ததிவ்
வந்திமற் றினிவிடி வறியேனே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 93 திரு அம்பர்மாகாளம்

## 351 பதிகவரலாறு

காழிவாழவந்தருளிய மறைவேந்தர் திருநாவுக்கரசருடனும் தொண்டருடனும் அம்பர்மாகாளத்தில் பெருங்காலங்கள் விருப்பினால் கும்பிட்டு வாழ்ந்திருந்தார். பல பதிகங்களைப் பாடினார். திருப்பணி செய்த கோச்செங்கட்சோழ நாயனாரையும் சிறப்பித்துள்ளார். அத்தமிழிசை மாலையுள் ஒன்று இத் திருப்பதிகம்.

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

படியுளார் விடையினர் பாய்புலித்
தோலினர் பாவநாசர்
பொடிகொண்மா மேனியர் பூதமார்
படையினர் பூணநூலர்
கடிகொண்மா மலரிடு மடியினர்
பிடிநடை மங்கையோடும்
அடிகளா ரருள்புரிந் திருப்பிட
மம்பர்மா காளந்தானே. 1

கையின்மா மழுவினர் கடுவிட
முண்டவெங் காளகண்டர்
செய்யமா மேனிய ரூனம
ருடைதலைப் பலிதிரிவார்
வையமார் பொதுவினின் மறையவர்
தொழுதெழ நடமதாடும்
ஐயன்மா தேவியோ டிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 2

1. படியுள் ஆர் - பூமியிற் பொருந்திய, (விடை) பூதம் ஆர் படையினர் - பூதங்களாகிய நிறைந்த சேனைகளையுடையவர். பூண் அம் நூலர் - பூணநூலர். கடிகொள் - வாசனையையுடைய, மலர் இடும் அடியினர் - (பூசிக்கும் அடியவர்) மலர்களை இடுகின்ற அடியையுடையவர். பிடி - பெண்யானை. மங்கையோடும் அன்பர்களுக்கு அருள்புரிந்து இருக்கும் இடமாவது அம்பர்மாகாளம்.

2. கொடிய விடத்தையுண்டதனால் எய்திய கறுப்பு அமைந்த கழுத்தை உடையவர். ஊன்அமர் - ஊன்பொருந்திய. உடைதலை-உடைந்த

பரவின வடியவர் படுதுயர்
 கெடுப்பவர் பரிவிலார்பால்
கரவினர் கனலன வுருவினர்
 படுதலைப் பலிகொடேகும்
இரவினர் பகலெரி கானிடை
 யாடிய வேடர்பூணும்
அரவின ரரிவையோ டிருப்பிட
 மம்பர்மா காளந்தானே. 3

நீற்றினர் நீண்டவார் சடையினர்
 படையினர் மலர்வெள்ளை
ஏற்றின ரெரிபுரி கரத்தினர்
 புரத்துளா ருயிரைவவ்வும்
கூற்றினர் கொடியிடை முனிவுற
 நனிவருங் குலவுகங்கை
ஆற்றின ரரிவையோ டிருப்பிட
 மம்பர்மா காளந்தானே. 4

மண்டையோட்டில். பலிதிரிவார் - பிச்சையேற்பதற்குத் திரிபவர். வையம் ஆர் பொதுவினில் - உலகமனைத்தினுக்கும் உரியதான சிற்சபையில்; நடம் அது ஆடும் ஐயன்.

3. தம்மைத் துதிக்கும் அடியவர் படும் துயரத்தை அழிப்பவர். அன்பில்லாரிடத்தே ஒளித்துக்கொள்பவர், கனல் அன்ன உருவினர். படுதலை - இறந்தாரது தலையில். பலி கொடு - பிச்சை யேற்றலை மேற்கொண்டு, ஏகும் - ஊர்தோறும் செல்கின்ற. இரவினர் - இரத்தலையுடையவர். பகல் எரி - நண்பகலைப்போலச் சுடுகின்ற. முதுகாட்டில், திருக்கூத்தாடிய திருக்கோலத்தையுடையவர். அரவத்தைப் பூண்டவர், அவர் அரிவையோடு இருக்கும் இடம். அம்பர் மாகாளம். இரவினர் - பகலெரி கான் - என்பது சொன் முரண்.

4. வார் - தொங்கும். (சடையினர்.) படையினர் - ஆயுதங்களை யேந்தியவர். நிமலர் - அடைந்தவரது மலம் இல்லையாகச் செய்பவர். எரிபுரிகரத்தினர் - நெருப்பை விரும்பியேந்தும் கையையுடையவர், திரிபுரத்து அசுரர்களுக்கு உயிரைக் கவரும் யமனாக இருப்பவர். கொடி இடை - பூங்கொடிபோலும் இடையையுடைய உமாதேவியார், முனிவு உற - பிணங்க. நனிவரும் குலவு கங்கை - மிகப் பொருந்திய மகிழ்ச்சியை உடைய கங்கை.

புறத்தின ரகத்துளர் போற்றிசின்
றழுதெழு மன்பர்சிந்தைத்
திறத்தின ரறிவிலாச் செதுமதித்
தக்கன்றன் வேள்விசெற்ற
மறத்தினர் மாதவர் நால்வருக்
காலின்கீ ழருள்புரிந்த
அறத்தின ரரிவையோ டிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 5

பழகமா மலர்பறித் திண்டைகொண்
டிறைஞ்சுவார் பாற்செறிந்த
குழகனர் குணம்புகழ்ந் தேத்துவா
ரவர்பலர் கூடநின்ற
கழகனர் கரியுரித் தாடுகங்
காளர்நங் காளியேத்தும்
அழகன ரரிவையோ டிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 6

5, புறத்தினர் அகத்துளர் - உள்ளும் புறமும் நிறைந்தவர். (அன்பர் சிந்தையின் வண்ணம் வருபவர்.) செதுமதி - அழிதற்கேதுவாகிய புத்தி.

6. பழக - ஒருநாளும் இடைவிடாமல்; எந்நாளும் (மலர் பறித்து இறைஞ்சுவார்) "முட்டாதே தொட்டால் முடிக்க சிவபூசை; விட்டான் நரகில் விழும்" என்ற கருத்து. இனிப் பழக என்பதற்கு உண்மைச் சரியை உபாயச்சரியை என வருவனவற்றுள் உபாயங்கூறியதாகக் கூறலும் ஒன்று. அதை "சரியையோரிரண்டும் தவிராதவர், கிரியையோ ரிரண்டுங் கெழுமுற்றவர்...அரிய தூய மடங்கள் அநந்தமே" என்ற பேரூர்ப் புராணச் செய்யுளாலும் உணர்க. செறிந்த - நீங்காத. தமது குணங்களைப் புகழ்ந்து துதிப்பவர் பலர் கூடும் கழகத்தில் இருப்பவர் என்பது இரண்டாமடியின் கருத்து. கரி உரித்து ஆடு - யானையை யுரித்து அம்மகிழ்ச்சியால் ஆடிய. (கங்காளர்) கங்காளம் - முழு எலும்புக் கூடு. திரு விக்கிரமாவதாரத் திருமாலின் செருக்கடக்கிய அறிகுறி. அம்பன், அம்பாசூரன் என்ற அரக்கரைக் கொன்ற பழிதீரக் காளி பூசித்தமை குறித்து, காளியேத்தும் அழகனர் என்றார்.

சங்கவார் குழையினர் தழலன
வுருவினர் தமதருளே
எங்குமா யிருந்தவ ரருந்தவ
முனிவருக் களித்துகந்தார்
பொங்குமா புனல்பரந் தரிசிலின்
வடகரை திருத்தம்பேணி
அங்கமா ரோதுவா ரிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 7

பொருசிலை மதனனைப் பொடிபட
விழித்தவர் பொழிலிலங்கைக்
குரிசிலைக் குலவரைக் கீழுற
வடர்த்தவர் கோயில்கூறில்
பெருசிலை நலமணி பீலியோ
டேலமும் பெருகநுந்தும்
அரிசிலின் வடகரை யழகம
ரம்பர்மா காளந்தானே 8

7. தமது அருளே எங்குமாய் இருந்தவர் - "யாதொரு பொருளை யாவர் இறைஞ்சினும் அதுபோய்முக்கண், ஆதியையடையும் அம்மா அங்கதுபோலத் தொல்லை, வேதமதுரைக்க நின்ற வியன்புகழனைத்தும் மேலாம், நாதனையணுகும் எல்லா நதிகளும் கடல் சென்றென்ன" என்ற கருத்து. (கந்தபுராணம் உபதேசப்படலம் 17) பரந்தரிசிலின் - பரந்த அரிசிலாற்றை, (திருத்தம் - தீர்த்தம்) அரிசிலாற்றைத் தீர்த்தமாகக் கொண்டு, அதன் வடகரை இருப்பு இடம் அம்பர்மாகாளம்.

8. பொருசிலை - போர்புரியும் வில், மதனன்-மன்மதன், இலங்கைக் குரிசில் - இராவணன் (குரிசில் இங்கு அரசனென்னும் பொருள் மாத்திரை குறித்தது) குலவரை - சிறந்தமலை, (கைலை)குலம் - சிறந்த. "குன்றை நகர்க்குலக் கவியே வல்லான்" என்ற காஞ்சிப்புராணச் செய்யுளாலும் அறிக. பெரியமலையினின்றும், நவமணி முதலியவற்றை மிகுதியும் அடித்துக்கொண்டுவரும் அரிசிலாறு என்பது மூன்றும் அடியின் கருத்து.

வரியரா வதன்மிசைத் துயின்றவன்
றனுமா மலருளானும்
எரியரா வணிகழ லேத்தவொண்
ணுவகை யுயர்ந்துபின்னும்
பிரியரா மடியவர்க் கணியராய்ப்
பணிவிலா தவருக்கென்றும்
அரியரா யரிவையோ டிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 9

சாக்கியக் கயவர்வன் றலைபறிக்
கையரும் பொய்யினூல்
ஆக்கிய மொழியவை பிழையவை
யாதலில் வழிபடுவீர்
வீக்கிய வரவுடைக் கச்சையா
னிச்சையா னவர்கட்கெல்லாம்
ஆக்கிய வரனுறை யம்பர்மா
காளமே யடைமினீரே. 10

9. எரியர் ஆ (க) - நெருப்பு உருவம் உடையராகி, (துயின்றவனும் மலருள்ளானும்; ஏத்த வொண்ணுவகை) உயர்ந்தும் அன்றிப் பிரியராம் அடியவர்க்கு - தம்மிடத்துப் பிரியமுடையவர்களாகிய அடியவர்களுக்கு, அணியர் ஆகியும், பணிதல் இல்லாதவருக்கு அரியர் ஆகியும், (அரிவை யோடு) இருப்பது அம்பர்மாகாளம் என்க.

10. சாக்கியக்கயவர்கள்-பௌத்தர்களாகிய கீழ்மக்களும், (தலைமயிர் பறித்தலையுடைய) கையர் - வஞ்சகர்களும், (பொய்யினுல் சிருட்டித்த நூல்களிலுள்ள) மொழியவை. உபதேசங்கள் - பிழையவை குற்ற முடையவை, (ஆதலால் அவற்றை மெய்யென வழிபடுவீர்களாகிய நீங்கள் அவ்வழிபடுதலினின்று விலகி, அம்பர்மாகாளமேயடைமின்). வீக்கிய அரவுடைக்கச்சையான் - பாம்பைக் கச்சையாகக் கட்டியவன், இச்சையானவர்கட்கு எல்லாம் - தன்னிடத்து விருப்ப முடையவர்களுக்கு எல்லாம். ஆக்கிய - அருளை வைத்த (அரன்,) தலை (பறி) - முதலிற் கூறும் சினையறி கிளவி - மொழியவை - அவை பகுதிப்பொருள் விகுதி, பிழையு - பலவின்பால் வினைமுற்று. வை - விகுதி மேல்விகுதி வருவித் துரைக்கப்பட்டது.

செம்பொன்மா மணிகொழித் தெழுதிரை
வருபுன லரிசில்சூழ்ந்த
அம்பர்மா காளமே கோயிலா
வணங்கிளே டிருந்தகோனைக்
கம்பினுர் நெடுமதிற் காழியுண்
ஞானசம் பந்தன்சொன்ன
நம்பிநாளை மொழிபவர்க் கில்லையாம்
வினைநலம் பெறுவர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

11. (செம்பொன்னையும் இரத்தினங்களையும் கொழித்துக் கிளம்பி அலைவரும் நீரையுடைய அரசிலாறு சூழ்ந்த அம்பர்மாகாளமே கோயிலாக அணங்கிளேடு இருந்த,) கோனை - தலைவனை, கம்பின் ஆர் நெடுமதில் - சங்கு, சுட்ட சுண்ணும்பினுல் சுதை பூசப்பட்ட நெடிய மதில். கம்பு - சுண்ணும்புக்கு ஆனது கருவியாகுபெயர், சொன்ன - சொன்னவற்றை, (வினையாலணையும் பெயர்,) நம்பி - விரும்பி, நம்பு என்பது உரிச்சொல், நாள்மொழிபவர் - நாள்தோறும் பாடுபவர்களுக்கு, வினை இல்லையாம், நலம் பெறுவர்.

ஏன முகத்தவ புத்தரை இந்திர
சித்து மணம்புணர் வுற்ருன்
ஈழவ ஞர்சொரி தொட்டி யினங்களை
வெட்டியி சித்தனர் பட்டர்
தான மிரக்கிற சீதை மடுப்பது
சாதி குடத்தொடு கண்டீர்
சக்கிர வர்த்திகள் சிக்கர மட்டுவர்
தத்துவ மிப்பரி சுண்டே
ஆன புகழ்ப்பயில் விப்ர சிகாமணி
யத்தகு மைப்புரை யுங்கார்
ஆர்பொழில் நீடிய சண்பையர் காவலன்
வண்களியேன் எளியேனே......

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 94 திருவெங்குரு

352 பதிகவரலாறு

சீகாழிக்குரியது. பெரிய புராணத்துள் கிளந்தோதப்படாதது.

திருமுக்கால் பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய
சுண்ணவெண் பொடியணி வீரே
சுண்ணவெண் பொடியணி வீரும தொழுகழல்
எண்ணவல் லாரிடரிலரே. 1

வேதியர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆதிய வருமறை யீரே
ஆதிய வருமறை யீருமை யலர்கொடு
ஓதிய ருணர்வுடையோரே. 2

1. தொழுது எழும் - தொழாநின்று துயில் எழும், சுண்ண வெண் பொடி - சுண்ணம் போன்றதாகிய வெள்ளிய திருநீறு. வெங்குரு மேவிய பொடியணிவீரேயென்க. 'நீறணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும் எழிலுடைமையான், அக்கோலம் தொழுது எழுவார் உள்ளத்து நீங்காது நிற்றலான் ஆண்டுள்ள வினை நீறு ஆம்' என்னும் பேராசிரியர் உரை இங்குக் கருதத்தக்கது. தொழுகழல் - தொழத்தகும் திருவடி, எண்ணுதல் - தியானித்தல், ஆறுகோடி மாயாசத்திகள் வேறு வேறு தம் மாயைகள் தொடங்கித் தடுத்தலின் எண்ணுதலும் அரிதென்பர் எண்ணவல்லார், உம - உம்முடைய (கழல்கள்.)

2. ஆதிய அருமறையீர் - முதன்மையான வேதத்தின் பொருளாய் உள்ளீர், வேதம் பிரபல சுருதி எனப்படுதலின் முதன்மையானது என்னப் பட்டது. இனி ஆதியென்பதற்குப் பழமையான எனலும் ஆம். அலர் கொடு - மலர்கள் கொண்டு (பூசித்து) ஓதியர் - தோத்திரம் செய்பவர்கள், உணர்வு உடையோர் - சிவஞானம் உடையவராவார். இனி ஓதி என்பதற்கு அறிவு எனவும் பொருள் உண்மையால் பூசித்து உணர்பவர் தாம் உணர்வுடையோர், அல்லாதார் உணர்விலிகளே எனலுமாம். அது "உடையரெனப்படுவது ஊக்கம் அஃதிலார் உடையது உடைய ரோமற்று" என்புழிப் போல.

விளங்குதண் பொழிலணி வெங்குருமேவிய
இளம்பிறை யணிசடை யீரே
இளம்பிறை யணிசடை யீரும திணையடி
உளங்கொள வுறுபிணி யிலரே. 3

விண்டலர் பொழிலணி வெங்குரு மேவிய
வண்டமர் வளர்சடை யீரே
வண்டமர் வளர்சடை யீருமை வாழ்த்துமத்
தொண்டர்க டுயர்பிணி யிலரே. 4

மிக்கவர் தொழுதெழு வெங்குரு மேவிய
அக்கினொ டரவசைத் தீரே
அக்கினொ டரவசைத் தீரும் தடியிணை
தக்கவ ருறுவது தவமே. 5

3. விளங்கு - மூவுலகிலும் விளங்கும் பெருமைவாய்ந்த, வெங்குரு என்க. விளங்கும் பொழில் எனக்கொள்ளின், செழிப்புடைய சோலை என்க. என்றும் ஓர் பெற்றியாய்க் கலைவளரப் பெருமையால் - இளம்பிறை யென்னப்பட்டது, "முற்றாத பான் மதியஞ் சூடினனே" என்றார் அப்ப மூர்த்திகளும். சடையீராகிய உமது இரண்டு திருவடிகளையும் நினைக்க உற்ற பிணி நீங்கப்பெறுவார்கள். "மருந்தாய்ப்பிணி தீர்க்க வல்ல அடி" என்ற கருத்து.

4. விண்டு அலர் - முறுக்குடைந்து மலர்கின்ற (பொழில்), வண்டு அமர்சடை - வண்டு விரும்பும் சடை, எனவே மலர்மாலையணிந்த சடை யென்பது பெறப் பட்டது. அமர்தல் - விரும்புதல், (துயர்பிணி, இலர்) துயர் - உள்ளம் பற்றியது, பிணி - உடலம் பற்றியது) இலர் - இல்லாதவர் ஆவார்.

5. மிக்கவர் - அன்பின் மிக்கோர், அக்கினோடு - அக்குப்பாசியோடு, அரவு-பாம்பு. அசைத்தீரே-இடுப்பிற்கட்டியுள்ளீர், தக்கவர் - வழிபடும் அடியவர், (உமது) அடியிணை உறுவது தவமே - திருவடிகளைப் போற்றுவதே சிறந்த தவத்தின் பயனும், தவம் என்பது அதன்பயனைக் குறித்தது. தவத்தின் பயன் அது என் பதனை "எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே, பந்தம் வீடு அவை ஆயபராபரன், அந்தமில் புகழ் ஆரூர் அரனெறி, சிந்தையுள்ளும் சிரத்துளும் தங்கவே." என்னும் திருக்குறுந்தொகை யானும் உணர்க.

வெந்தவெண் பொடியணி வெங்குரு மேவிய
அந்தமில் பெருமையி னீரே
அந்தமில் பெருமையி னீருமை யலர்கொடு
சிந்தைசெய் வோர்வினை சிதைவே. 6

விழமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அழன்மல்கு மங்கையி னீரே
அழன்மல்கு மங்கையி னீருமை யலர்கொடு
தொழவல்லல் கெடுவது துணிவே. 7

வித்தக மறையவர் வெங்குரு மேவிய
மத்தநன் மலர்புனை வீரே
மத்தநன் மலர்புனை வீரும தடிதொழுஞ்
சித்தம துடையவர் திருவே. 8

மேலவர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆலநன் மணிமிடற் றீரே
ஆலநன் மணிமிடற் றீரும தடிதொழுஞ்
சீலம துடையவர் திருவே. 9

6. வெந்த - சுடப்பட்ட, வெண்பொடி - வெண்மையான திருநீறு, அந்தம் - முடிவு, அழிவு. நீறு அணி அந்தம் இல் பெருமையினீர் - திருநீற்றையணிந்து, அதனால்தாம் அழிவு இல்லாதவன், எனக்காட்டும் பெருமையையுடையீர், "சிவனவன் திரடோண்மேல், நீறு நின்றது கண்டனை" என்னும் திருவாசகமும் இக்கருத்தாதல் காண்க.

7. விழ - விழா (விழவு) மல்கும் - தங்கிய, உம்மை அலர் கொடு தொழ அல்லல் கெடுவது) துணிவு - நிச்சயம்.

8. வித்தகம் - சதுரப்பாடு (சாமர்த்தியம்) மறையவர்க்குச் சதுரப்பாடாவது - பல கடவுளர்க்குத் தலைமை கூறும் அதன் பொருளை நடுநிலைமையொடு உணர்ந்து, உண்மையிது உபசாரம் இது என உணரும் வன்மை, மத்தம் மலர் - பொன்னூமத்தை மலர். சித்தம் உடையவர், திரு-என்றது மோட்ச சாம்ராச்சியத்தை "செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே" என்றவாறு.

9. ஆலம் நன்மணிமிடறு - விடம் தங்கிய நல்ல காளகண்டம், சீலம் - வழிபாட்டு முறை. அது "பெரும்புலர்காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி" என்னும் திருநேரிசையிற் கூறியது முதலியன.

விரைமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அரைமல்கு புலியத ளீரே
அரைமல்கு புலியத ளீரும தடியிணை
உரைமல்கு புகழவ ருயர்வே. 10

... ... ... ... 11

திருச்சிற்றம்பலம்

10. அரைமல்கு புலியதளீரே - அரையிற் கட்டிய புலித்தோலை உடையீரே. மல்கு - பொருந்திய, இங்குக் கட்டிய என்னும் பொருளில் வந்தது. உரைமல்கு புகழவர் - வார்த்தையால் உம்மை நிரம்பப்புகழ்தலை யுடையவர், அவர் உயர்வே உண்மையான உயர்வாகும்.

11.

குறிப்பு:— இப்பதிகத்தில் 8, 9, 10 இப்பாசுரங்களில் ஏனைப் பதிகங்களிற் கூறும் முறை இல்லை.

சோனக னுக்கும் எனக்கும் எனத்தரை
அம்மனை சூலதுகொண்டாள்
தும்புரு வாலியை வென்று நிலத்திடை
நின்று துலுக்குகி ருரே.

ஆர்மலி புகலி நாதன் அருளென இரவில் வந்தென்
வார்முலை பயலை தீர மணந்தவர் தணந்து போன
தேரத ரழிய லும்மைச் செய்பிழை எம்ம தில்லை
கார்திரை கஞலி மோதிக் கரைபொருங் கடலி னீரே.

கடன்மேவு புவியேறு கவிநீரர் பெருமான்றன்
தடமாடு மிகுகாழி தகுபேதை யருளாமை
திடமாகில் அணிநீறு செழுமேனி முழுதாடி
மடலேறி எழில்வீதி வருகாதல் ஒழியேனே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 95 திருவின்னம்பர்

353 பதிகவரலாறு

அளவில்லாத ஞானமிர்தம் உண்டவர், திருந்துதேவன்குடி அருந் தமிழ்மாலை புனைந்து, இன்னம்பர்ப்பிரானை இறைஞ்சிப் புனைந்து பரவிய தமிழ்த்தொடைமாலை இது.

திருமுக்கால் பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

எண்டிசைக் கும்புக ழின்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
வண்டிசைக் குஞ்சடை யீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக் குந்தொழி லோரே. 1

யாழ்நரம் பின்னிசை யின்னம்பர் மேவிய
தாழ்தரு சடைமுடி யீரே
தாழ்தரு சடைமுடி யீருமைச் சார்பவர்
ஆழ்துய ரருவினை யிலரே. 2

1. எண்டிசைக்கும் - எட்டுத் திக்குகளிலும். புகழ் இன்னம்பர் - புகழைப் பரப்பிய திரு இன்னம்பர், திசைக்கும் உருபு மயக்கம், (வண்டு) இசைக்கும் - இசைபாடும், இசைக்கும் பெயர் அடியாகப் பிறந்த பெய ரெச்சம். நூல் செய்யலுற்றேன் என்ற பொருளில் "நூற்கலுற்றேன்" என்று கம்பர் கூறியதுபோல். வண்டிசைக்குஞ் சடையீர் என்றது மலர் மாலையணிந்த சடையீர் என்றபடி. உ(ம்)மை வாழ்த்துவார், அரிபிரமனுதி யருக்குத்) தொண்டு இசைக்கும் - இன்னது செய்க என ஏவல் இடும். தொழிலோர் - பதவியையுடையவராவர். தொண்டு - அடிமை. தொழில்- பதவியென்னும் பொருளில் காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. "தொழப்படும் தேவர் தம்மாற்றொழுவிக்கும் தன் தொண்டரையே" என்ற திருவிருத்தத்தின் கருத்து.

2. யாழின் நரம்பிசை முதலிய பலவாத்திய ஓசைகளையுடைய திருவின்னம்பர் என்பது முதலடியின் கருத்து. அது - "குழலொலி யாழொலிகூத்தொலியேத்தொலி யெங்கும் குழாம்பெருகி" என்ற கருத்து. சார்பவர் - சார்புணர்ந்து சார்புகெடச் சார்பவர், பெருந்துயர் நேரினும் அதி னின்றும் நீங்கப்பெறுதலோடு அதற்குக் காரணமாகிய அரிய வினையும் இல்லாதவர் ஆவார்கள். ஆழ்துயர் - பெருந்துயர்.

இளமதி நுதலியொ டின்னம்பர் மேவிய
வளமதி வளர்சடை யீரே
வளமதி வளர்சடை யீருமை வாழ்த்துவார்
உளமதி மிகவுடை யோரே. 3

இடிகுர லிசைமுர லின்னம்பர் மேவிய
கடிகமழ் சடைமுடி யீரே
கடிகமழ் சடைமுடி யீரும கழறொழும்
அடியவ ரருவினை யிலரே. 4

இமையவர் தொழுதெழு மின்னம்பர் மேவிய
உமையொரு கூறுடை யீரே.
உமையொரு கூறுடை யீருமை யுள்குவார்
அமைகில ராகில ரன்பே. 5

எண்ணரும் புகழுடை யின்னம்பர் மேவிய
தண்ணருஞ் சடைமுடி யீரே
தண்ணருஞ் சடைமுடி யீருமைச் சார்பவர்
விண்ணவ ரடைவுடை யோரே. 6

3. இளமதி - பிறைச்சந்திரன் போன்ற. நுதலி - நெற்றியைஉடைய அம்பிகை. வளம் மதி - தன்னொளி, அமுத கிரணமாயிருத்தல், பயிர் பச்சைகளை வளர்த்தல், கடல் கொந்தளிப்பித்தல் முதலிய வளங்களை யுடைய மதி. வளர் - தங்குகின்ற என்னும் பொருள் தரும். உளம் - மனம். மதிமிக உடையோர் - பேரறிவுடையவராவர்.

4. இடிகுரல் இசைமுரல் - இடியின் குரல்போலும் முழவம் முதலிய வாத்திய ஓசை ஒலிக்கும். "முழவதிர மழையென்றஞ்சிச்சிலமந்தியலமந்து மரமேறி முகில் பார்க்கும் திருவையாறே" என முன்னும் (திருமுறை) வந்தமை காண்க. கடி கமழ் - வாசனை வீசும்; சடைமுடி.

5. இமையவர் - தேவர், கண்ணிமையாதவர். இன்னம்பர் மேவிய உடையீர் என்க. உ(ம்)மை நினைப்போர், பேரன்பு படைத்தவர் ஆவர். அன்பு அமைகிலர் - அன்பு அமையமாட்டாதவர். ஆகார் எனவே அன்பு அமையப்பெற்றவர் ஆவர் என்றதாம். இரண்டு எதிர்மறை ஓர் உடம் பாட்டை வலியுறுத்திற்று.

6. எண் அரும் புகழ் உடை - நினைத்தற்கரிய அளவிலாத பெரும் புகழை உடைய இன்னம்பீர், தண் அரும் - அரிய குளிர்ச்சியை உடைய;

எழிறிக ழும்பொழி லின்னம்பர் மேவிய
நிழறிகழ் மேனியி னீரே
நிழறிகழ் மேனியி னீருமை நினைபவர்
குழறிய கொடுவினை யிலரே. 7

ஏத்தரும் புகழணி யின்னம்பர் மேவிய
தூர்த்தனைத் தொலைவுசெய் தீரே
தூர்த்தனைத் தொலைவுசெய் தீருமைத் தொழுபவர்
கூர்த்தநற் குணமுடை யோரே. 8

இயலுளோர் தொழுதெழு மின்னம்பர் மேவிய
அயனுமா லறிவரி யீரே
அயனுமா லறிவரி யீரும தடிதொழும்
இயலுளார் மறுபிறப் பிலரே. 9

சடைமுடியீரே, கங்கைநீரும், சந்திரனும் தங்குதலால் அரிய குளிர்ச்சியுடையதாயிற்று. உம்மைச் சார்வர். விண்ணவர் அடைவு உடையோர் - ஏனைத் தேவர்க்குத் தாம் சார்பாகும் தன்மையுடையவராவார். அடைவு - (சார்பாக) அடைதல், சார்பு - பற்றுக்கோடு.

7. எழில் திகழ் பொழில் - அழகால் விளங்கும் சோலை. பசுமை நிறத்தாலும், பல நிற அரும்பு பூ, காய்கனி இவற்றின் தோற்றத்தாலும் எய்தும் அழகு. நிழல்திகழ் - ஒளியால் விளங்கும் மேனியினீர், உமை நினைபவர் குழறிய இப்பொருட்டு ஆதலை,

"கடு அடுத்த நீர் கொடுவா காடிதாவென்று
நடு நடுத்து நாநடுங்கா முன்னம்—பொடியடுத்த
பாழ்க்கோட்டம் சேரா முன் பன்மாடத் தென்குடந்தைக்
கீழ்க்கோட்டம் செப்பிக் கிட"

என்னும் பதினோராந் திருமுறையாலறிக.

8. ஏத்த அரும் - துதித்தற்கரிய, புகழ். தூர்த்தன் - பரதார விருப்பினனாகிய இரவணன், தொலைவு செய்தீர் - வலிமையழியச் செய்தீர், கூர்த்த - மிகுத்த, நற்குணம் - சத்துவகுணம்.

9. இயல்உளர் - சமய விசேடாதி தீக்கை பெற்ற தகுதியுடைய அடியார், மறுபிறப்பு இலர் ஆவர்.

ஏரமர் பொழிலணி யின்னம்பர் மேவிய
தேரமண் சிதைவுசெய் தீரே
தேரமண் சிதைவுசெய் தீருமைச் சேர்பவர்
ஆர்துய ரருவினை யீரே. 10

ஏடமர் பொழிலணி யின்னம்ப ரீசனை
நாடமர் ஞானசம் பந்தன்
நாடமர் ஞானசம் பந்தன நற்றமிழ்
பாடவல் லார்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

10. ஏர் அமர் - அழகு பொருந்திய என்பதினும் ஏர் என்னும் தலத்துக்கு அணியதாய்ப் பொருந்திய என்பது சிறக்கும், ஏர் - இன்னம் பருக்கு அருகிலுள்ள ஒருவைப்புத்தலம், அது "ஏரார் இன்னம்பரார்," என்னும் திருத்தாண்டகத்தால் அறியத்தகும். அத்தலம் ஏரகரம் என இப்போது வழங்கும், திருஏரகம் என்னும் சாமிமலையும் இதற்கு அணிவித்து, ஆர்தரு- கட்டிய. வினை - அரியவினை, துயர்விக்கும் வினை என இயையும், தேரர் அமணர் என்பது தேரமண் எனமரீஇயது.

11. ஏடு - இதழ், மலருக்கானமையின் சினையாகுபெயர், தேசமெல்லாம் விரும்பும் ஞானசம்பந்தன், நல்தமிழ்பாடவல்லார் பழியிலர் ஆவர்.

ஒழியா தின்புறு பொழில்சூழ் சண்பைமன்
உயர்பார் துன்றிய தகுஞா னன்புகழ்
எழிலா ருங்கவு ணியர்தீ பன்திகழ்
இணையார் செங்கரன் நிகழ்வான் விண்குயின்
பொழியா நின்றன துளிதார் கொன்றைகள்
புலமே துன்றின கலைமான் ஒன்றின
பழிமேல் கொண்டது நுமர்தேர் அன்பொடும்
அருகே வந்தது அதுகாண் மங்கையே.
—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்

# 96 திருநெல்வெண்ணெய்

## 354 பதிகவரலாறு

சண்பைக்காவலர், திருவரத்துறையினை இறைஞ்சிய நாட்களில், அன்பர்களுடன் சென்று வழிபட்டபோது பாடியருளியது இத் திருப்பதிகம்.

திருமுக்கால், பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

நல்வெணெய் விழுதுபெய் தாடுதிர் நாடொறும்
நெல்வெணெய் மேவிய நீரே
நெல்வெணெய் மேவிய நீருமை நாடொறும்
சொல்வண மிடுவது சொல்லே. 1

நிச்சலு மடியவர் தொழுதெழு நெல்வெணெய்க்
கச்சிள வரவசைத் தீரே
கச்சிள வரவசைத் தீருமைக் காண்பவர்
அச்சமோ டருவினை யிலரே. 2

1. நல்வெ (ண்) ணெய் விழுது - நல்ல வெண்ணெயை உருக்கிய நெய்யை. பெய்து - ஏனைய பால், தயிர், கோமயம், கோசலம் என்பவற்றோடு நாள்தோறும் பஞ்சகவ்யமாகக் கூட்டி "நாள்தோறும் ஆடுதிர் - திருமஞ்சனம் கொண்டருள்வீர், உம்மை நாள்தோறும் துதிக்கும் சொற்களே, பயன்தரும் சொல்லெனப்படுவன. வண்ணம் - அழகு, சொல்லுக்கு அழகாவது, சுருங்கச் சொல்லல் முதலிய பத்தும். சொல் இடுவது - துதிப்பது, புகழ்வது, வாழ்த்துவது முதலியன. தீவண்ணர் திறம்ஒருகால் பேசா ராகில்" "பெரும் பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே." "வணங்கத் தலைவைத்து, வார்கழல் வாய் வாழ்த்தவைத்து" என்பன இங்குக் கொள்ளத்தக்கன.

2. நிச்சல் - நித்தல்; நித்தம் நித்தல் என்பதன் போலி, இளஅரவு - இளம்பாம்பைக் கச்சு (ஆக). அசைத்தீரே - கட்டியருளினீரே. என்றும் இளமையுடையவன் ஆகையால் அவனைச்சார்ந்தனவும் இளமையுடையனவே ஆயின, "இளநாகமோடு" என முன்னும் வந்தமை காண்க. (முதல் திருமுறை முதல் பதிகம்) காண்பவர் - தரிசிப்பவர்.

நிரைவிரி தொல்புகழ் நெல்வெணெய் மேவிய
அரைவிரி கோவணத் தீரே
அரைவிரி கோவணத் தீருமை யலர்கொடு
உரைவிரிப் போருயர்ந் தோரே. 3

நீர்மல்கு தொல்புகழ் நெல்வெணெய் மேவிய
ஊர்மல்கி யுறையவல் லீரே
ஊர்மல்கி யுறைவல் லீருமை யுள்குதல்
பார்மல்கு புகழவர் பண்பே. 4

நீடிளம் பொழிலணி நெல்வெணெய் மேவிய
ஆடிளம் பாப்பசைத் தீரே
ஆடிளம் பாப்பசைத் தீருமை யன்பொடு
பாடுள முடையவர் பண்பே. 5

3. நிரை - வரிசை வரிசையாக, விரி - உலகமெங்கும் விரிந்த, (தொல் - புகழ்) அரையின் விரித்துக் கட்டிய கோவணத்தையுடையீரே. உம்மை அலர்கொடு - மலர் முதலியவற்றால் (பூசித்து) - உமது புகழை விரிவாகத்துதித்துப்பாடுவோர் உயர்ந்தோர் ஆவர், பூசித்து என ஒரு சொல் வருவிக்க

4. நீர்மல்கு - நீர்வளம்பொருந்திய, நெல்வெண்ணெய் மேவிய ஊர் - நெல்வெண்ணெயென்னும் பெயர் பொருந்திய ஊரில். மல்கி - நிலைபெற்று, உறையவல்லீர் - வாழ்தலையுடையீர், உம்மை எப்பொழுதும் ஒழியாது நினைத்திருத்தல் உலகில் உயர்ந்த புகழையுடைய சிவஞானிகளின் இயல்பாம். "இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார் பெருமை பிறங்கிற் றுலகு" என்புழியும் (திருக்குறள் 23) இவ்வாறு வருதல் காண்க.

5. நீடு - நெடிய, இளம்பொழில் - இளமரச்சோலை, பாப்பசைத்தீர்- (பாம்பு) அசைத்தீர் - கச்சையாகக் கட்டியருளினீர், உம்மைப் பாடும் விருப்பமுடையவர். பண்பே-சிறந்த பண்பாவது, உளம் - இங்கே விருப்பம் இரண்டாம் அடி "ஆடிளம்பாம்பசைத்தானும்" என அப்பர் வாக்கிலும், வருவது,

நெற்றியோர் கண்ணுடை நெல்வெணெய் மேவிய
பெற்றிகொள் பிறைநுத லீரே
பெற்றிகொள் பிறைநுத லீருமைப் பேணுதல்
கற்றறி வோர்கள்தங் கடனே. 6

நிறையவர் தொழுதெழு நெல்வெணெய் மேவிய
கறையணி மிடறுடை யீரே
கறையணி மிடறுடை யீருமைக் காண்பவர்
உறைவதும் உம்அடிக் கீழே. 7

நெருக்கிய பொழிலணி நெல்வெணெய் மேவிய
றரக்கனை யசைவுசெய் தீரே
அரக்கனை யசைவுசெய் தீருமை யன்புசெய்
திருக்கவல் லாரிட ரிலரே. 8

நிரைவிரி சடைமுடி நெல்வெணய் மேவியன்
றிருவரை யிடர்கள் செய்தீரே
இருவரை யிடர்கள் செய்தீருமை யிசைவொடு
பரவவல் லார்பழி யிலரே. 9

6. பெற்றி கொள் - அடியவர்க்கருள்வதையே தன்மையாகக் கொண்ட பிறைநுதலீர் - பிறைபோன்ற நெற்றியையுடைய உமையம்மையாரை. உரையீர், பிறைநுதல் - அன்மொழித்தொகை, பேணுதல் - பாராட்டி நிட்டை கூடுதல், கற்றறிவோர்கள் தம் கடன் - ஞான நூல்களைக் கற்றறிந்த அறிஞர்களின் கடமையாகும். கல்வியறிவிற்குப் பயன் கூறியவாறு.

7. நிறையவர்-"காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம் உடையவர் களவியலுரை, " உம்மைக் காண்பவர்...கீழே " என்றது, "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே, அறிவுதனையருளினால் அறியாதே அறிந்து ...குழைந்திருப்பையாயிற்...ஆயே" என்ற சாத்திரக் கருத்து.

8. நெருக்கிய - நெருங்கிய என்பதன் வலித்தல் விகாரம். அசைவு செய்தீர் - வலிதளரச் செய்தீர்

9. இருவரை - பிரம விட்டுணுக்களிருவரையும், இடர்கள் செய்தீரே - ஆழ்ந்தும் உயர்ந்தும் காணமாட்டாமை, அதனால் என்செய்தும் என அலமருதல் (தம் செருக்கு நிலைகுலைதல், நாணி நிற்றல், ஆகம்பல

நீக்கிய புனலணி நெல்வெண்ணெய் மேவிய
சாக்கியச் சமண் கொடுத் தீரே
சாக்கியச் சமண்கொடுத் தீருமைச் சார்வது
பாக்கிய முடையவர் பண்பே. 10

நிலமல்கு தொல்புகழ் நெல்வெண்ணெ யீசனை
நலமல்கு ஞானசம் பந்தன்
நலமல்கு ஞானசம் பந்தன் செந்தமிழ்
சொலமல்கு வார்துய ரிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

ஆதலின் இடர்கள் எனப்பன்மையாற் கூறினர். அதனை "ஆழ்ந்து காணார் உயர்ந்தெய்த கில்லார் அலமந்து அவர், தாழ்ந்து தத்தம் முடிசாய நின்றார்க்கிடம் என்பரால்" என்னும் திருக்கேதாரப்பதிகத்தால் அறிக.

10. நீக்கிய - வறுமை, பிணி முதலியவற்றை நீக்கிய, புனல் அணி - நீர் வளம் உடைய. நெல் வெண்ணெய் சாக்கியச்சமண் - சாக்கியரோடு கூடிய சமண். உம்மைப் பற்றுக்கோடாகச் சார்வது, பாக்கியம் உடையவர் பண்பு - "தவமும் தவ முடையார்க்காகும்," "சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது" என்ற கருத்து.

11. ஞானசம்பந்தன செந்தமிழ், சொல மல்குவார் - சொல்வதில் மகிழ்ச்சி மிக்கவர்;—மகிழ்ச்சிமிக்குச் சொல்வோர் (துயர் இலர் ஆவர்).

மங்கை யிடத்தர னைக்கவி
நீரெதி ரோட மதித்தருள்செய்
தங்கு புகழ்ச்சதுர் மாமறை
நாவளர் சைவ சிகாமணிதன்
துங்க மதிற்பிர மாபுர மேவிய
சூழ்பொழில் நின்றுளிர்மென்
கொங்கை யுடைக்கொடி யேரிடை
யாள்குடி கொண்டனன் எம்மனமே,

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 97 திருச் சிறுகுடி

355 பதிகவரலாறு

திருநல்லத்தையும் திருவழுந்தூர்மாடக்கோயிலையும் வழிபட்டதற்கு இடைக்காலத்தில் பணிந்த சிவதலங்கள் பலவுள் ஒன்றுரும் திருச்சிறு குடியில் அருளியது இத் திருப்பதிகம்.

திருமுக்கால். பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

திடமலி மதிளணி சிறுகுடி மேவிய
படமலி யரவுடை யீரே
படமலி யரவுடை யீருமைப் பணிபவர்
அடைவது மமருல கதுவே. 1

சிற்றிடை யுடன்மகிழ் சிறுகுடி மேவிய
சுற்றிய சடைமுடி யீரே
சுற்றிய சடைமுடி யீரும தொழுகழல்
உற்றவ ருறுபிணி யிலரே. 2

தெள்ளிய புனலணி சிறுகுடி மேவிய
துள்ளிய மானுடை யீரே
துள்ளிய மானுடை யீரும தொழுகழல்
உள்ளுதல் செயநல முறுமே. 3

1. திடம் மலி - வலிமைமிக்க. மதிள் - மதில். ல, ள ஒற்றுமை படம் மலி - படத்தையுடைய, உம்மைப் பணிபவர் அடைவது, அமர் உலகு அது - வானவர் உலகிற்கு அப்பாலதாகிய சிவலோகமாம். உரையி லடங்காப் பெருமையது ஆகலின் அது என்று சுட்டளவோடு நிறுத்தப் பட்டது.

2. சிறு இடை - (சிற்றிடை) யையுடைய உமாதேவியாரொடு மகிழ்ந்து சிறுகுடியில் இருக்கும் சடைமுடியீரே. கழல் உற்றவர் - திருவடியைப் பற்றுக்கோடாகக் கொண்டவர். உறு - தம்மைப்பற்றியுற்ற. பிணி - பாச பந்தம், இலர்.

3. தெள்ளிய - தெளிவான. துள்ளிய - துள்ளிக் குதிக்கும். மான் உடையீர் - மானை உடையீர், ஏந்தியுள்ளீர். இனி உடை என்ப தற்கு ஆடையென்றும் பொருள் உண்மையால், மான் தோலை அணிந்

செந்நெல வயலணி சிறுகுடி மேவிய
ஒன்னலர் புரமெரித் தீரே
ஒன்னலர் புரமெரித் தீருமை யுள்குவார்
சொன்னல முடையவர் தொண்டே. 4

செற்றினின் மலிபுனற் சிறுகுடி மேவிய
பெற்றிகொள் பிறைமுடி யீரே
பெற்றிகொள் பிறைமுடி யீருமைப் பேணிநஞ்
சற்றவ ரருவினை யிலரே. 5

செங்கயல் புனலணி சிறுகுடி மேவிய
மங்கையை யிடமுடை யீரே
மங்கையை யிடமுடை யீருமை வாழ்த்துவார்
சங்கைய திலர்நலர் தவமே. 6

தருளினீர் எனலுமாம். "புள்ளியுழை மானின் தோலான் கண்டாய்" என்ற திருமறைக்காட்டுத் திருத்தாண்டகத்தாலும் அறிக. உள்குதல் செய -

4. செந்நெல - செந்நெல் விளைகின்றனவாகிய. வயல் அணி - வயல் சூழ்ந்த. ஒன்னலர் - ஒன்றலர் என்பதன் மரூஉ. ஒன்றலர் - நம்மோடு சேராதவர். தொண்டு - உமது வழிபாட்டைப் பற்றிப் பிறர்க்கு உபதேசிக்கும் தக்கோர் ஆவர். சொல் நலம் - சொல்லும் நலம். நலம் - தகுதி.

5. செற்றினில் - பாத்திகளில். மலிபுனல் - குன்றுது பாயும் நீர் வளமுடைய சிறுகுடி. செறுத்தல்-நீரைத் தேக்குதல். "செறுத்தோறுடைப் பினும் செம்புனலோடுடோர், மறுத்துஞ்சிறை செய்வர் நீர் நசைஇ வாழ்நர்" என்னும் நாலடியாரால் அறிக. செறு - இ - செற்றி. இகரம் வினைமுதற் பொருள் விகுதி. அதனுல் பாத்தியைச் செறுவென்பது காரணப்பெயராம். பெற்றிகொள்பிறை - இறைவன் முடியில் தங்கும் பேற்றைக்கொண்ட பிறை. நஞ்சு - நைந்து, மனம்குழைந்து. நைதல் - உருகுதலுக்குமுன் உறும் நிகழ்ச்சி. இதனை "என்புநைந்து உருகி நெக்குநெக்குருகி என்னும் திருவாசகத்தாலறிக" நஞ்சு - போலி, நைந்து என்பதற்கு வினை முதல் வருவித்துரைக்க, அற்றவரென்பதற்கும் இவ்விதியால் பற்று அற்றவர் என்க. அதன் காரணமாக மேல்வருவினையும் இலராவர். நெஞ்சு என்பது பிழைபட்டது,

6. செங்கயல் - ஒருவகைமீன். கயலையுடைய புனல் சூழ்ந்த சிறுகுடி. நலர்தவம் - நல்தவர் என விகுதி பிரித்துக் கூறுக. நல்லதவத்தை யுடையவர் ஆவர்.

செறிபொழி றழுவிய சிறுகுடி மேவிய
வெறிகமழ் சடைமுடி யீரே
வெறிகமழ் சடைமுடி யீருமை விரும்பிமெய்ந்
நெறியுணர் வோருயர்ந் தோரே. 7

திசையவர் தொழுதெழு சிறுகுடி மேவிய
தசமுக னுரநெரித் தீரே
தசமுக னுரநெரித் தீருமைச் சார்பவர்
வசையறு மதுவழி பாடே. 8

செருவரை வயலமர் சிறுகுடி மேவிய
இருவரை யசைவுசெய் தீரே
இருவரை யசைவுசெய் தீருமை யேத்துவார்
அருவினை யொடுதுய ரிலரே. 9

7. செறி - அடர்ந்த பொழில். வெறி - வாசனை. மெய்ந்நெறி உண்மையான மார்க்கம். சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம் தாசமார்க்கம் என்று சங்கரனையடையும் நன்மார்க்கம் நான்கு எனச் சித்தியாரிற் குறித்தவை. உயர்ந்தோர் அவற்றில் உயர்ந்த சன்மார்க்க நெறியில் நிற்போர் ஆவர்.

8. தசம் - பத்து. உரம் - வலிமை. சார்பவர் - பற்றுக் கோடாக அடைபவர். வசையறும் அது - குற்றம் அற்றதாகிய வழிபாடே வழிபா டெனப் படுவதாம். என் போல்பவர் பறித்திட்ட முகையும் அரும்பும் எல்லாம் அம்போதெனக் கொள்ளும் ஐயன் தன்னடியார் குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுந்தன்மையால் வழிபாடு வசையற்ற தாயிற்று.

9. இருவரை - பிரம விட்டுணுக்களை. இருவர் தொகைக் குறிப்பு. அசைவு - வருத்தம். அருவினை என்பது ஆகாமிய சஞ்சித கன்மங்களை துயர் என்றது பிராரத்த வினையை. அதனையிலர் என்றது, "சிவனும் இவன் செய்தியெலாம் என் செய்தியென்றும் செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்" கொள்வன் ஆகையினால். (சித்தியார் சூ 10-1).

செய்த்தலை புனலணி சிறுகுடி மேவிய
புத்தரொ டமண்புறத் தீரே
புத்தரொ டமண்புறத் தீருமைப் போற்றுதல்
பத்தர்கள் தம்முடைப் பரிசே. 10

தேனமர் பொழிலணி சிறுகுடி மேவிய
மானமர் கரமுடை யீரே
மானமர் கரமுடை யீருமை வாழ்த்திய
ஞானசம் பந்தன தமிழே. 11

திருச்சிற்றம்பலம்

10. செய்த்தலை - வயல்களினிடத்து. புனல் - நீர். அணி - அழகு செய்கின்ற. சிறுகுடி புறத்தீர் - அப்பாற் பட்டீர். உம்மைப் போற்றுதலே பத்தர்கள் தம்முடைய பேறு ஆகக்கொள்வர் (.பரிசு - இங்குப்பேறு) என்றது. கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி வீடும் வேண்டாவிறலின் விளங்கினார் என்ற கருத்து.

11. தேன் அமர் - வண்டுகள் விரும்பும், பொழில். மான் அமர் - மான் தங்கிய, உம்மைப் பரவிய ஞானசம்பந்தன் தமிழே (தனைப்பாட வல்லவர்க்கு அனைத்தும் நல்கும்) என்பது குறிப்பெச்சம்.

மனங்கொண்டு நிறைகொண்டு கலையுங் கொண்டு
மணிநிறமும் இவள்செங்கை வளையுங் கொண்டே
தனங்கொண்ட பெருஞ்செல்வந் திகழுங் கீர்த்திச்
சண்பையர்கோன் திருஞான சம்பந் தற்கு
நனங்கொண்டு மெய்கொண்டு பயலை கொண்டே
நன்னுதலால் அயர்கின்றாள் நடுவே நின்று
மினங்கொண்டு நகைகொண்டு மடவீர் வாளா
என்செயநீர் அலர்தூற்றி எழுகின் றீரே.

— ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 98 திரு வீழிமிழலை

356 பதிகவரலாறு

வெங்குருவேந்தனூர் திருவீழிமிழலையிலிருந்து பாடியருளியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருமுக்கால் பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வெண்மதி தவழ்மதில் மிழலையு ளீர்சடை
ஒண்மதி யணியுடை யீரே
ஒண்மதி யணியுடை யீருமை யுணர்பவர்
கண்மதி மிகுவது கடனே. 1

விதிவழி மறையவர் மிழலையு ளீர்நடம்
சதிவழி வருவதொர் சதிரே
சதிவழி வருவதொர் சதிருடை யீருமை
அதிகுணர் புகழ்வது மழகே. 2

1. வெண் மதி - வானில் ஊரும் மதி. சடை மதி - சடையில் தங்கும் மதி. மதிள் - மதில். ளகரலகர ஒற்றுமை: போலி என்னலாகாது; சாம்பர் என்பதில் ஈற்றெழுத்து உரியதன்று; லகரமே உரியது ஆகலின் ரகரம் போலி. ஒற்றுமை அங்ஙனமன்றி மஞ்சள், மஞ்சல், மங்களம் மங்கலம் என ஈரெழுத்தும் உரியவாய் வருவது. மதியைச் சடையில் அணியாக உடையார். அணி - ஆபரணம். கண் - (உமது திருவடிப் பேற்றையே குறிக்கோளாகக்) கருதும். மதி - புத்தி. மிகுவது - அதிகரிப்பதும். அவர்க்கு இயல்பாய் எய்திடக் கூடிய தன்மையாம். கண் மதி - வினைத்தொகை. கண்ணுதல் இப்பொருளாதலை "விண்ணினோர்கள் விரும்பப்படுபவன், கண்ணினர் கடம்பூர்க்கரக் கோயிலே" என்னுந் திருக்குறுந்தொகையால் அறிக. உணர்பவர் - உம்மையே பதிப்பொருளாக உணர்பவர். கடன் - இயல்பு "மாலறியாக் கடனும் உருவத்தரன்" என்ற திருக்கோவையாரால் அறிக.

2. விதிவழி மறையவர் - விதிவழியில் ஒழுகும் மறையவர். சதிவழி - தாள ஒத்தின்படி. நடம் வருவது - நடித்து ஆவர்த்தம் வருவதும். ஓர் சதிரே - ஒரு அழகே. அதிகுணர் - சத்துவகுணம் உடையோராகிய

விரைமலி பொழிலணி மிழலையு ளீரொரு
வரைமிசை யுறைவதும் வலதே
வரைமிசை யுறைவதொர் வலதுடை யீருமை
உரைசெயு மவைமறை யொலியே. 3

விட்டொழில் பெறுபுகழ் மிழலையு ளீர்கையில்
இட்டெழில் பெறுகிற தெரியே
இட்டெழில் பெறுகிற தெரியுடை யீர்புரம்
அட்டது வரைசிலை யாலே. 4

வேனிகர் கண்ணியர் மிழலையு ளீர்நல
பானிக ருருவுடை யீரே
பானிக ருருவுடை யீரும துடனுமை
தான்மிக வுறைவது தவமே. 5

ஞானிகள். புகழ்வதும் ஒரு அழகே. சதிர் - இங்கு அழகென்னும் பொரு ளில், அச்சொற்குப் பொருள் அனைத்தும் இங்கு ஏற்பதறிக. அதி என்பது மிகுதிப்பொருளது; ஆயினும் இங்குச் சிறப்பு என்னும் பொருளில் வருவ தால் சத்துவ குணம் எனப்பட்டது. குணர்: - மரூஉ.

3. விரை - வாசனை. ஒரு வரை என்றது கைலைமலையை. வலது - திறப்பாடுடையது. வன்மை என்னும் பகுதியடியாகப் பிறந்த குறிப்பு வினை முற்று. ஈற்றடியின் பொருளாவது: - நீரே பொருளாந் தன்மையை உலகிற்கு எடுத்து உரைப்பவை வேதங்களே. அவை வாசகம். அவற் றின் வாச்சியம் அடிகளீர் என்பது குறிப்பெச்சம்.

4. விட்டு எழில் - அழகு தங்கி, அதனாற் புகழ்பெறுகின்ற மிழலை. விட்டு - இப்பொருட்டாதலைப் புறப்பொருள் வெண்பாமாலை வஞ்சிப் படலம் 18 ஆம் பாட்டு உரையான் அறிக. கையில் இட்டு - இடப் பெற்று. அதனால் அழகுடையதாகியதும் நெருப்பே. அழகனைச் சேர்ந் தமையால் அழகில் பொருளும் அழகியதாயிற்று. அது “நாறுபூம் பொழில் நாரையூர் நம்பனுக் காறுசூடினும் அம்ம அழகிதே” என்பதாலும் உணர்க. கையது கனல், எரித்ததும் கனல் ஆயின், வரைசிலை எற்றுக்கு? உமது தன்மை அறிவாரார் என்ற குறிப்பு.

5. வேல் நிகர் கண்ணியர் - வேலையொத்த கண்களையுடைய பெண் கள் வாழும் மிழலை. ந(ல்)ல பால் நிகர் - பாலையொத்த. உரு - நிறம். சதாசிவமூர்த்தியின் நிறம் வெண்மை என்பதால் பால் நிகர் உருவுடையீர் என்னப்பட்டது.

விரைமலி பொழிலணி மிழலையு ளீர்சென்னி
நிரையுற வணிவது நெறியே
நிரையுற வணிவதொர் நெறியுடை யீருமது
அரையுற வணிவன வரவே. 6

விசையுறு புனல்வயன் மிழலையு ளீரர
வசையுற வணிவுடை யீரே
அசையுற வணிவுடை யீருமை யறிபவர்
நசையுறு நாவினர் தாமே. 7

விலங்கலொண் மதிளணி மிழலையு ளீரன்றவ்
இலங்கைமன் னிடர்கெடுத் தீரே
இலங்கைமன் னிடர்கெடுத் தீருமை யேத்துவார்
புலன்களை முனிவது பொருளே. 8

6. செ(ன்)னி நிரை - தலைமாலை. நிரை - வரிசை. வரிசையாகக் கோத்த மாலையையுணர்த்தலால் பண்பாகுபெயர், மண்டையோட்டைக் கோத்தணிந்தது. நெறியே - முறையேபோலும், நெறியென்றது அமுது உண்டும் வானவர் சாவ, விடமுண்டும் சாவான் தான் ஒருவனே எனத் தெரிவித்தற்கு, உமது அரை உற;அணிவதும் அரவே. அரை நாண் ஆகவும் கச்சையாகவும், கோவணமாகவும் அணிந்தமையால், அணிவன எனப் பன்மையாற் கூறினர். அரவு: - (அரவுகள்) பால் பகா அஃறிணைப்பெயர்.

7. அரவு அசைஉற அணிவு உடையீர் - பாம்பை அசையும்படி அணிதலையுடையீர். உம்மை அறிபவரே உண்மைப்பொருளை உபதேசிக்க வல்லுநர் ஆவர். அவர் கூறுவனவற்றை அனைவரும் விரும்பிக் கேட்பவர் என்பது ஈற்றடியின் கருத்து. நசை உறும் - (கேட்போர்) விரும்பும். நாவினர் - பேச்சையுடையவர். நா - கருவியாகுபெயர்.

8. விலங்கல் - மலைபோன்ற. ஒள் மதில் - அழகிய மதில். இடர் கெடுத்தீரே - செருக்கால்தான் உற்று துன்பத்தைப் போற்றுதற்கு இரங்கி இடரை அகற்றியருளினீர். வாசனுமலம் தம்மறிவினும் மிக்குப் புலன்களை யீர்த்துச் செல்லுமாகையின், திருவைந்தெழுத்தால் உம்மைத் துதிப்போர், புலன்களைக் கோபித்து மடக்குவதும் உறுதி. ஏனையோர்க்கு ஆகாது என்பதாம்.

வெற்பமர் பொழிலணி மிழலையு ளீருமை
அற்புத னயனறி யானே
அற்புத னயனறி யாவகை நின்றவ
நற்பத மறிவது நயமே. 9

வித்தக மறையவர் மிழலையு ளீரன்று
புத்தரொ டமணழித் தீரே
புத்தரொ டமணழித் தீருமைப் போற்றுவார்
பத்திசெய் மனமுடை யவரே. 10

விண்பயில் பொழிலணி மிழலையு ளீசனைச்
சண்பையுண் ஞானசம் பந்தன்
சண்பையுண் ஞானசம் பந்தன தமிழிவை
ஒண்பொரு ளுணர்வது முணர்வே. 11

திருச்சிற்றம்பலம்

9. வெற்பு - மலைபோன்ற மாளிகைகள். வெற்பு - உவமை ஆகு பெயர். அது “குன்றொன்றோ டொன்று” என்னும் தென்திருமுல்லை வாயிற் பதிகத்தால் அறிக. அமர் - பொருந்திய, சோலைசூழ்ந்த, மிழலை› (அற்புதன்) அல் - ஐந்து இராத்திரியில். புதன் - ஞானங்களை வெளிப் படுத்தின திருமால், புதன் - வடசொல். அந்த மதத்துக்குப் பாஞ்சராத் திரம் “அஞ்சலினவர்புகழ் அண்ணல்” என்பது. மகாஸ்காந்தம் என்னும் பெயர் வழங்கும். இனி அற்புதன் என்பதற்கு, கண்ணிடந்து பூசித்த அரிய செயலையுடையவன் எனலும் ஆம். அற்புதனோடு அயனும் அறியா தவனுனன். ஒருவினையொடுச்சொல் நின்றது. நின்றவரே! உமது நல்ல திருவடியை அறிவது - உணர்ந்து ஆர்வம் தழைப்பதுவே. நயம் மானிடப் பிறவியெய்தினோர் அடையும் பயனும். நின்ற அந் நற்பதம் என்க.

10. பத்திசெய் மனம் உடையோரே உம்மைப் போற்றத்தக்கவர் என்றது ஈற்றடியின் கருத்து. ஏனையோர் உம்மால் நக்குநிற்கப்படுவோர் ஆவர் என்பது குறிப்பு. “பொக்கமிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்கும் அவர்தமை நாணியே” என்பது திருக்குறுந்தொகை.

11. இவை - இவற்றின். ஒண்பொருள் - சீரிய கருத்தை. உணர் வதும் உணர்வு - உணர்வதுவே உணர்வெனப்படுவது. தேற்றேகாரம் பிரித்துக் கூட்டுக. உம்மை உயர்வு சிறப்பு.

# 99 திரு முதுகுன்றம்

357 **பதிகவரலாறு**

வானநாயகர் திருமுதுகுன்றினை வலங்கொண்டு தேனலம்புதண் கொன்றையார் சேவடி பரவித் தாழ்ந்து எழுந்து சார்த்திய தண்டமிழ்த் தொடை இது.

**திருமுக்கால், பண் - சாதாரி**

திருச்சிற்றம்பலம்

முரசதிர்ந் தெழுதரு முதுகுன்ற மேவிய
பரசமர் படையுடை யீரே
பரசமர் படையுடை யீருமைப் பரவுவார்
அரசர்க ளுலகிலா வாரே. 1

மொய்குழ லாளொடு முதுகுன்ற மேவிய
பையர வம்மசைத் தீரே
பையர வம்மசைத் தீருமைப் பாடுவார்
நைவிலர் நாடொறு நலமே. 2

முழவமர் பொழிலணி முதுகுன்ற மேவிய
மழவிடை யதுவுடை யீரே
மழவிடை யதுவுடை யீருமை வாழ்த்துவார்
பழியொடு பகையிலர் தாமே. 3

1. பூசை - விழாக்காலங்களில் முரசு அதிர்ந்து ஓசை எழும்பும் முதுகுன்றம் மேவிய பரசு படை - மழுவாகிய ஆயுதம். பெயரொட்டு. அமர் - பொருந்திய. உலகில் அரசர்கள் ஆவர். இடைப்பிறவரல். பல நாடுகளுக்கு அரசர் ஆவதால் பன்மையாற் கூறினர்.

2. மொய்குழலாள் - அடர்ந்த கூந்தலையுடைய அம்பிகையோடு முதுகுன்றில் மேவிய அசைத்தருளினீர் என்க. அசைத்தல் - கட்டுதல். பை - பாம்பு. உம்மைப்பாடுவார் நாடோறும் நன்மைகள் குறைவின்றி மிகப்பெறுவர். நைவு - குறைதல்.

3. முழவு அமர் முதுகுன்றம். பொழில் அணி முதுகுன்றம் என இயைக்க. மழவிடை - இளங்காளை. பகை - இங்குப் பூர்வம் என்னும்

முருகமர் பொழிலணி முதுகுன்ற மேவிய
உருவமர் சடைமுடி யீரே
உருவமர் சடைமுடி யீருமை யோதுவார்
திருவொடு தேசினர் தாமே. 4

* * * * 5, 6, 7

முத்தி தருமுயர் முதுகுன்ற மேவிய
பத்து முடியடர்த் தீரே
பத்து முடியடர்த் தீருமைப் பாடுவார்
சித்தநல் லவ்வடி யாரே. 8

முயன்றவ ரருள்பெறு முதுகுன்ற மேவியன்
றியன்றவ ரறிவரி யீரே
இயன்றவ ரறிவரி யீருமை யேத்துவார்
பயன்றலை நிற்பவர் தாமே. 9

மொட்டலர் பொழிலணி முதுகுன்ற மேவிய
கட்டமண் டேரைக்காய்ந் தீரே
கட்டமண் டேரைக்காய்ந் தீருமைக் கருதுவார்
சிட்டர்கள் சீர்பெறு வாரே. 10

பொருளில் வந்தது. பழிக்கு இனம் ஆகலின். "எண்ணுங்காலும் அது வதன் பண்பே" என்பது இலக்கணம் (தொல் - கிளவியாக்கம்).

4. முருகு - வாசனை. உரு அமர் - அழகு பொருந்திய. திரு - ஐசுவரியம். தேசு - தேஜஸ், புகழ்.

5, 6, 7 * * * *

8. முடியத்தும் என்க. சித்தம் நல் - நல்ல சித்தமுடைய அடியவர்.

9. முயன்றவர் - தவம் புரிந்தோர் "தவம் முயல்வார்" என வந்தமை (திருமுறை பதிகம்) அறிக. இயன்றவர் - தம் செருக்காற் காணத் தொடங்கிய பிரம விட்டுணுக்களால் அறிவரியீர். பயன்தலை நிற்பவர் - பயன்பெறுபவர்.

10. கட்டு அமண் - கட்டுப்பாட்டையுடைய அமணரோடு. தேர் - தேரரை. கடைக்குறை. காய்ந்தீர் - கோபித்தருளினீர். உம்மைக்

மூடிய சோலைசூழ் முதுகுன்றத் தீசனை
நாடிய ஞானசம் பந்தன்
நாடிய ஞானசம் பந்தன செந்தமிழ்
பாடிய அவர்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

கருதுவோரே அன்பர்கள் பெறும் சிறப்பைப் பெறுதற்குரியராவர். செம்பொற்பாத மலர்காணுப் பொய்யர் பெறும் பேறத்தனையும் பெறுதற் குரியேன்" என்பதன் எதிர்மறை.

11. மூடிய சோலைசூழ் - மூடுவதுபோல் அடர்ந்த சோலை. பாடிய அவர் பழியிலர் ஆவர் என்க.

எழுகுல வெற்பிவை மிடறில் அடக்குவன்
எறிகட லிற்புனல் குளறி வயிற்றினின்
முழுது மொளித்திர வியையி நிலத்திடை
முடுகுவ னிப்பொழு திவையல விச்சைகள்
கழுமல நற்பதி யதிப தமிழ்க்கடல்
கவுணிய நற்குல திலகன் இணைக்கழல்
தொழுது வழுத்திய பிறரொரு வர்க்குறு
துயர்வரு விப்பனி தரியதொர் விச்சையே.

சயமிகுத்தரு கரைமுருக்கிய தமிழ்பயிற்றிய நாவன்
வியலியற்றிரு மருகலிற்கொடு விடமழித்தருள் நீதன்
கயலுடைப்புனல் வயல்வளத்தகு கழுமலப்பதி நாதன்
இயலுடைக்கழல் தொழநினைப்பவர் இருவினைத்துயர் போமே.

மேதகுந் திகழ்பூக நாகசண் பகசூத
வேரிவண் டறைசோலை யாலைதுன் றியகாழி
நாதனந் தணர்கோனெ ஞானவண் புகழாளி
ஞானசுந் தரன்மேவு தார்நினைந் தயர்வேனை
நீதியன் றனபேசும் யாயுமிந் துவும்வாச
நீடுதென் றலும்வீணை யோசையுங் கரைசேர
மோதுதெண் டிரைசேவல் சேருமன் றிலும்வேயு
முடுதண் பனிவாடை கூடிவன் பகையாமே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 100 திருத்தோணிபுரம்

358 **பதிகவரலாறு**

சீகாழிக்குரியது. விதந்து ஓதப்பட்டது இத் திருப்பதிகம்.

**பண் - பழம்பஞ்சுரம்**

திருச்சிற்றம்பலம்

கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற்
　　காரிகை மாட்டருளி
அரும்பமர் கொங்கை யோர்பான் மகிழ்ந்த
　　வற்புதஞ் செப்பரிதால்
பெரும்பக லேவந்தென் பெண்மை கொண்டு
　　பேர்த்தவர் சேர்ந்தவிடஞ்
சுரும்பமர் சோலைகள் சூழ்ந்த செம்மைத்
　　தோணிபுரந்தானே.

1. கரும்பு அமர்வில்லி - மன்மதன். காய்ந்து - கோபித்து, உருவத்தை அழித்து. காதற்காரிகை மாட்டு - அவனது காதலுக்குரிய மனைவியாகிய இரதி தேவிக்கு. அருளி - (அவள் கண்ணுக்கு மட்டும் உருவம் தோன்றுமாறு) அருள் புரிந்து. அரும்பு - தாமரையரும்பு. கோங்கு அரும்புமாம். அமர் போன்ற உவமவாசகம். கொங்கை - சினையாகு பெயராய் அம்பிகையை யுணர்த்திற்று. இங்கு அற்புதமாவது- மன்மதனால் தாம் அம்பிகையை மணந்ததாகப் பிறர்கருதுமாறு செய்வித்தமையன்றி "முதலுருப்பாதி மாதராவது முணரார்" ஒன்றேடொன் றெவ்வாவேடம் ஒருவனே தரித்துக்கொண்டு நின்றலாலுலகு நீங்கி நின்றனனென்று மோரார்" என்ற சாத்திரக் கருத்துமாம் (சிவஞான சித்தியார் சுபக்கம் 49, 51) கள்வர் கொள்வது இராக்காலம் பெயர் பொருளுமாயிருக்க, இவர் கொண்டது பெரும்பகலில், பெயராப்பொருளை. இது வியப்பு என்னும் குறிப்புத் தோன்றப் பெரும்பகலே வந்தென்பார் பெண்மை என்றார். போர்த்துக்கொண்டார் என்றார். கொண்டு போர்த்தார் விகுதி பிரித்து மாறிக் கூட்டுக; கொண்டார் கைக்கொண்டார் இது தலைவி கூற்று. செம்மை - அறம்மிக்க தோணிபுரம் என்றது சிறிது புண்ணியம் செய்யினும் பெரும் பயன் தரும் தலவிசேடம் அது" எண்மைத்தாய தொழில்களியற்றினும் வண்மைத்தாக வரும் பயனுய்ப்பது" என்னும் பேரூர்ப்புராணத்தாலறிக. செம்மை - செம்பொருள் ஆகுபெயர். இது

கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய்க்
கோமள மாதுமையாள்
பங்கிய லுந்திரு மேனி யெங்கும்
பால்வெள்ளை நீறணிந்து
சங்கியல் வெள்வளை சோர வந்தென்
சாயல்கொண் டார்தமதூர்
துங்கியன் மாளிகை சூழ்ந்த செம்மைத்
தோணி புரந்தானே. 2

மத்தக் களிற்றுரி போர்க்கக் கண்டு
மாதுமை பேதுறலுஞ்
சித்தந் தெளியநின் றாடி யேறார்
தீவண்ணர் சில்பலிக்கென்
றொத்தபடி வந்தென் னுள்ளங் கொண்ட
வொருவர்க் கிடம்போலுந்
துத்தநல் லின்னிசை வண்டு பாடுந்
தோணி புரந்தானே. 3

இப்பொருள்தரலைச் "செம்பொருள் கண்டார்" என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரைத்த உரையாலறிக.

2. கொங்கு இயல் - (இயற்கையாகவே) வாசனைபொருந்திய பூகுழல் - பொலிவுபெற்ற கூந்தலையும். கொவ்வைச்செவ்வாய்-கோவைக் கனிபோன்ற சிவந்த வாயையுமுடைய. கோமளம் மாது - மென்மைத் தன்மை பொருந்திய உமையாள். பங்குஇயலும் - ஓருபாகம் பொருந்திய திருமேனி முழுவதும். பால்போன்ற வெள்ளிய திருநீற்றைப்பூசி. சாயல் - தோற்றப் பொலிவு. துங்கு - (துங்கம்) உயர்வு. ஞானம் - ஞான் என்று வந்ததுபோல (சித்தியார்) துங்கு எனக்கடைக்குறைந்து வந்தது.

3. மத்தம் - மதத்தால் எய்திய மயக்கம். மாதுமை. பேதுறலும் - அஞ்சின அளவில். சித்தம் தெளிய - அவரது மனம் தெளிய (பயம்நீங்கித்) தெளியும்படி. நின்று ஆடி - நின்று திருவிளையாடல் செய்தவர். சில் பலி - சிறிது அளவினதாக இடும் பிச்சை. அது ஐயம்புகூஉம் தவசி கடிஞைப் போற் பையநிறைத்துவிடும் என்ற நாலடியாரால் அறிக. ஒத்தபடிவந்து - பிச்சைக்கு வருவோர்கோலத்துக்கேற்றவிதமாக வந்து. துத்தம் - சப்த சுரத்திலொன்று. உபலட்சணத்தால் ஏழிசைகளையும் கொள்க.

x x x x 4, 5, 6, 7

வள்ள லிருந்த மலையதனை வலஞ்
செய்தல் வாய்மையென
உள்ளங் கொள்ளாது கொதித்தெ ழுந்தன்
றெடுத்தோ னுரநெரிய
மெள்ள விரல்வைத்தெ னுள்ளங் கொண்டார்
மேவு மிடம்போலுந்
துள்ளொலி வெள்ளத்தின்மேன் மிதந்த
தோணி புரந்தானே. 8

வெல்பற வைக்கொடி மாலு மற்றை
விரைமலர் மேலயனும்
பல்பற வைப்படி யாயுயர்ந்தும் பன்றிய
தாய்ப்ப ணிந்துஞ்
செல்வறநீண்டெஞ் சிந்தை கொண்ட
செல்வ ரிடம்போலுந்
தொல்பற வைசுமந் தோங்கு செம்மைத்
தோணி புரந்தானே. 9

---

4, 5, 6, 7 x x x x

8. வள்ளல் - "வேண்டுவார் வேண்டுவதே யீவான்" திருமுறை 6, "ஆசைதீரக்கொடுப்பார்" (திருமுறை 21) என்ற சுருதி வசனத்தாலும் அபுத்தி பூர்வமாக வில்வம் உதிர்த்தல், அவியும் விளக்கைத் தூண்டல் செய்த பிராணிகளுக்கும் வாயினூலாற் சித்திரப்பந்தரியற்றிய சிலந்திக்கும் பேரரசுரிமையளித்தல் ஆகிய புராணவரலாற்றாலும் சிவபெருமானொருவனுக்கே வள்ளல் என்னும் பெயர் அமையும் என்க. உரம் - நெஞ்சு. மெள்ள - மெல்ல லகர ளகர ஒற்றுமை. துள்ஒலி - அலைகள் துள்ளி வீசுவதால் உண்டாகிய ஓசை. மெள்ள விரல் வைத்தமையால் உரம் நெரிந்தது. சற்றே அழுந்தியிருப்பின் உடலும் உயிருமே நெரிந்திருக்கும் என்றபடி.

9. பறவைக்கொடி - கருடக்கொடி. பறவை - பொதுப் பெயர். சிறப்புப்பெயர்ப் பொருளில் வந்தது. பல்பறவைப்படியாய் - பலபறவைகளும் ஒருருவுகொண்டு பறந்தாற்போல. உயர்ந்தும் - உயரப் பறந்து சென்றும், பறந்து பொதுவினை, சிறப்புவினைப் பொருளில் வந்தது. 'உயர்ந்தும் பணிந்தும் உணரான்' என இத் தொடர் திருக்கோவையாரினும் வருவது; இத்தொடர் இங்கு எதிர் நிரனிறைப் பொருளில்

குண்டிகை பீலி தட்டோடு நின்று
 கோசரங் கொள்ளியரும்
மண்டைகை யேந்தி மனங்கொள் கஞ்சி
 யூணரும் வாய்மடிய
இண்டை புனைந்தெரு தேறிவந்தெ
 னெழில்கவர்ந் தாரிடமாம்
தொண்டிசை பாட லருத தொன்மைத்
 தோணி புரந்தானே. 10

தூமரு மாளிகை மாட நீடு
 தோணி புரத்திறையை
மாமறை நான்கினொ டங்க மாறும்
 வல்லவன் வாய்மையினல்
நாமரு கேள்வி நலந்திகழும்
 ஞானசம்பந் தன்சொன்ன
பாமரு பாடல்கள் பத்தும் வல்லார்
 பார்முழு தாள்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

வந்தது. செல்வு - செல்லுதல். வு தொழிற்பெயர் விகுதி, துணிவு, பணிவு என்பவற்றிற்போல, "தொல் பறவை சுமந்து ஓங்கு தோணிபுரம்" "நின்பாதம் எல்லாம் நாலஞ்சு புள்ளினம் ஏந்தினவென்ப" அரசர் அருள்மொழி.

10. குண்டிகை; நினைத்த இடத்தில் நீர் பருகற்கு. பீலி; வழியில் சிற்றுயிர்க்கும் தீங்கு நேராவாறு கூட்டிக்கொண்டு நடப்பதற்கு. தட்டு - தடுக்கு உட்காருவதற்கு உபயோகிப்பர். நின்று கோசரங்கொள்ளியர் சமணர். கோசரம் - கோ என்னும் பல பொருளொருசொல். நீரைக் குறித்தது. சரம் - அந்நீரில் வாழ்வனவாகிய மீன்களைக் குறித்தது. மண்டை - ஒருவகை உண்கலம். மனம் கொள் - விருப்பமான கஞ்சி ஊணர் பவுத்தர். வாய்மடிய - பேச்சு அடங்க. வாய் - கருவியாகுபெயர். தொண்டு - தொண்டர்; சொல்லால் அஃறிணை பொருளால் உயர்திணை வாக்கு மனங்கட்கு அகோசரத்தை அறியார் என்பதே கருத்து.

11. தூமருவு - சுதைதீற்றியதால் வெண்மை நிறம்பொருந்திய மாளிகை. நாமரு (வு) கேள்வி - நாவிற்பொருந்திய உபதேசங்களால் கேள்வி ஞானத்தைப் புகட்டவல்ல ஞானசம்பந்தன். நா என்பது உபதேசத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். பா (மருவு) - பாட்டின் இலக்கணம் அமைந்த. பா - காரிய ஆகுபெயர்.

# 101 திரு இராமேச்சுரம்

## 359 பதிக வரலாறு

**சேதுவில்** செங்கண்மால் பூசித்த சிவபெருமானைப் பாடிப் பணிந்து நாடோறும் வணங்கியேத்திய திருஞானசம்பந்தர், கோதில்புகழ்ப் பாண்டிமாதேவியாரும் மெய்க்குலச்சிறையாரும் போற்றிக் கேட்கப் பாடியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

**பண் - பழம்பஞ்சுரம்**

திருச்சிற்றம்பலம்

திரிதரு மாமணி நாகமாடத்
திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக்க வெரியேந்தி யாடு
நலமேதெரிந் துணர்வார்
எரிகதிர் முத்த மிலங்குகான
லிராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி
விமலர் செயுஞ்செயலே. 1

1. திரிதரு - திரிகின்ற நாகம். திளைத்து - அணிந்து. தீ அழல்வாய் - கொடிய நெருப்பில் நின்று. நரி கதிக்க - பாட. கதித்தல் - சொல்லல் இங்குப் பாடுதல் என்னும் பொருளில் வந்தது. மயானம் ஆதலில் நரி கூவியது பாடல் போலத் தோன்றியது, எரி ஏந்தி ஆடும் நலம்; உயிர்களின் இளைப்பொழித்தற்குச் செய்யும் நன்மை, மயானத்து ஆடல் மகா சங்காரத்தைக் குறிப்பது. எரி கதிர் முத்தம்:- முத்துத் தண்மையுடையதாதலின். எரி - ஒளிக்கு மட்டும் கொள்க. இராமேச்சுரம் மேய விமலர் செயும் செயலாகிய, நாகம் ஆடத் திளைத்து, நரி கதிக்க, எரியேந்தி, அழல்வாய் நின்று ஆடும் நலத்தைத் தெரிந்துணர்வாரே 'மெய்ஞ்ஞானிகளாவார்' என்பது குறிப்பெச்சம். இப்பொருளுக்கு நலமே என்பதின் ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுதல் பொருத்தமாகும்.

பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே
　　புரிவோ டுமைபாடத்
தெறிகிள ரப்பெயர்ந் தெல்லியாடுந்
　　திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரு
　　மிராமேச் சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம்
　　மணாளர் செய்யுஞ்செயலே. 2

அலைவளர் தண்புனல் வார்சடைமே
　　லடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடவாடி
　　மயக்கா வருமாட்சி

2. பொறி - புள்ளிகள், கிளர் - விளங்குகின்ற, பாம்பு, அரை ஆர்த்து - இடுப்பிற் (கச்சையாகக்) கட்டி, அயலே - பக்கத்திலே (நின்று) புரிவோடு உமைபாட அதற்கேற்ப, தெறிகிளர - விரலால் தெறித்துப் பண்ணும் யாழ் முதலியவற்றின் இசை, கிளர - ஒலிக்க, தெறி - தெறித் தல் என்னும் பொருள் தரலால் தொழிற் பெயர், (யாழ்) ஓசைக்கு ஆயினமை ஆகுபெயர், எல்லி - இரவு, எறி கிளர் - வீசுதல் மிக்க வெண்திரை கிளர் - துள்ளும், மறிமான் - மான் கன்றும் மழு(வும்). புல்கும் - தங்கிய, கையையுடைய, உமை மணவாளராகிய பெருமான் :- எல்லியாடும் திறம் தெரிந்துணர்வார். இவை இராமேச்சுரம் மேய (உமை) மணவாளன் செய்யும் செயலே என்பர் என ஒரு சொல்லெச்சம் வரு வித்து வினை முடிவு கூறினும் அமையும். சதி - (மனைவி) யென்ற பொதுச் சொல் வட மொழியில், இறைவியைக் குறித்து வழங்கல் போலத் தமிழில் பிள்ளை (யார்) என்ற பொதுச்சொல் (மூத்த பிள்ளை யார்). முருகக் கடவுளையும் குறித்து வழங்கும். அதுபோல மணாளன் (பதி + வடசொல்) என்ற சொல் இறைவனைக் குறித்தது. எமது ஆளுடைய பிள்ளையார் அருண் மொழியின் திறம் அரிதின் உணரற்பாலது. மணாளன் என்பது சிவபெருமானுக்கு ஒரு பெயர். அது "மஞ்சா போற்றி மணாளா போற்றி" என்னும் போற்றித் திருவகவலாலும், "மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்கட்கணியான் ஆரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்" என்னும் அப்பர் திருவாக்காலும் அறிக. (திருமுறை 4 பதிகம் 21)

3. அலைவளர் தண்புனல் - அலை பெருகி வந்த கங்கை நீரை, வார் - தொங்கும், சடைமேலடங்கச் செய்து. ஒருபாகத்திலுள்ள (தனது

இலைவளர் தாழை முகிழ்விரியு
மிராமேச் சுரமேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந்
தலைவர் செயுஞ்செயலே. 3

மாதன நேரிழை யேர்தடங்கண்
மலையான் மகள்பாடத்
தேதெரி யங்கையி லேந்தியாடுந்
திறமே தெரிந்துணர்வார்
ஏதமி லார்தொழு தேத்திவாழ்த்து
மிராமேச் சுரமேயார்
போதுவெண் டிங்கள்பைங் கொன்றைசூடும்
புனிதர் செயுஞ்செயலே. 4

சூலமோ டொண்மழு நின்றிலங்கச்
சுடுகா டிடமாகக்
கோலநன் மாதுடன் பாடவாடுங்
குணமே குறித்துணர்வார்

காதலி, பாட, ஆடி மயக்க .- (தன் தன்மை இதுவென்று) அறியாவாறு செய்து வரும் மாட்சி, ஏனை மரங்களிற் போலக் கோடு, கவடு, வளார் இன்றித் தழையே யுண்மையால் இம் மரம் தாழையென்னப் பட்டதெனப் பகுதிப் பொருள் கூறுவார் போன்று எமது புகலியர் பெருமான் இலை வளர் தாழை யென்றது போற்றத் தக்கது. 'தலைவளர் ஆடும்' மிக்க தலைகளைக் கோத்த அழகிய நல்ல மாலையைச் சூடும் தலைவர்; தலைமாலை தலைக் கணிந்த தலைவன்.

4. மாதனம் - பெரிய தனங்கள், நேர் இழை - நேரிய ஆபரணங்கள் தே(ய)து - ஒளியுடையதாகிய, எரி - நெருப்பை. தேயு அது, தேயது: (அது பகுதிப் பொருள் விகுதி) தேது என மருவி வந்தது. போது - அரும்பு போன்ற வெண்திங்கள் "முகிழ்வெண்டிங்கள் வளைத்தானை" என்ற திருவாலவாய்த் திருத் தாண்டகத்தால் உணர்க. வினை முடிவு இரண்டாம் பாடலிற் போற்கொள்க. தேசெரியுமாம்.

5. நின்று - கையில் தங்கி, நல்மாது, உமா தேவியார், பாட ஆடும், குணம் - தன்மை, ஏல(ம்)நறும் பொழில் - ஏலம் முதலிய செடிகளை யுடைய நறும் மணம் கமழும் பொழில்.

ஏல நறும்பொழில் வண்டுபாடு
மிராமேச் சுரமேய
நீலமார் கண்ட முடையவெங்கள்
நிமலர் செயுஞ்செயலே. 5

கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக்
காமனைக் காய்ந்தவர்தாம்
இணைபிணை நோக்கிநல் லாளோடாடு
மியல்பின ராகிநல்ல
இணைமலர் மேலன்னம் வைகுகான
லிராமேச் சுரமேய
அணைபிணை புல்கு கரந்தைசூடும்
அடிகள் செயுஞ்செயலே. 6

நீரிஞர் புன்சடை பின்புதாழ
நெடுவெண் மதிசூடி
ஊரிஞர் துஞ்சிருள் பாடியாடும்
உவகை தெரிந்துணர்வார்
ஏறிஞர் பைம்பொழில் பண்டுபாடு
மிராமேச் சுரமேய
காரிஞர் கொன்றைவெண் டிங்கள்சூடுங்
கடவுள் செயுஞ்செயலே. 7

6. கணைபிணை- (மலர்) அம்புகளைக் கோத்த கொடிய(கரும்பு)வில்லை யேந்தியவனாகிய காமனை. இணை-இரண்டாகிய (நோக்கு). பிணை - பெண் மானின் கண் போன்ற. நோக்கி - கண்களை யுடைய அம்மையார், இணை- (இதழ்கள்) அடுக்கிய மலர் - தாமரை மலர். அணை - ஒன்றோடொன்று சேர்த்து. பிணை - கட்டப்பட்ட. புல்கு - பொருந்திய. கரந்தை - கரந்தை மாலை அடிகள் செயும் செயல் எவராலும் அறிய வருவதொன்று அன்று குறிப்பெச்சம்.

7. நீரின் - கங்கை நீரிஞல். ஆர் - நிறைந்த. நெடுவெண் - மிக்க வெண்மையையுடைய. தூங்கும் இரவில் ஆடும். உவகை - மகிழ்ச்சியை ஆராய்ந்து அறிபவர். காரின் ஆர் - கார்காலத்தில் மலர்தலையுடைய. கொன்றை, முதல் அடியில் நெடுவெண்மதி சூடி என்று வந்தமையால், ஈற்றடியில் வரும் வெண்டிங்கள்சூடும் கடவுள் என்பது. சிவபெருமான் என வாளா பெயரளவாய் நின்றது. "மடியிலா மன்னவன் எய்தும்

பொன்றிகழ் சுண்ணவெண் ணீறுபூசிப்
புலித்தோ லுடையாக
மின்றிகழ் சோதியர் பாடலாடன்
மிக்கார் வருமாட்சி
என்றுநல் லோர்கள் பரவியேத்து
மிராமேச் சுரமேயார்
குன்றினு லன்றரக் கன்றடந்தோ
ளடர்த்தார்கொளுங் கொள்கையே. 8

கோவல னன்முக னேக்கொணுத
குழக னழகாய
மேவல னெள்ளெரி யேந்தியாடு
மிமையோ ரிறைமெய்ம்மை
ஏவல னர்புகழ்ந் தேத்திவாழ்த்து
மிராமேச் சுரமேய
சேவல வெல்கொடி யேந்துகொள்கையெம்
மிறைவர் செயுஞ்செயலே. 9

அடியளந்தான் தாஅயது எல்லாம் ஒருங்கு" என்ற திருக்குறளில் வரும் அடி அளந்தான் என்பது போல. இருள் - இலக்கணையாய் இரவை யுணர்த்திற்று.

8. பொன் திகழ் - வெண் பொன்னுகிய வெள்ளியைப் போல் விளங்குகின்ற நீறு பூசி. மின்திகழ் சோதியர் - மின்னலைப்போல விளங் கும் ஒளியையுடையவராய். சோதியர் - முற்றெச்சம். மிக்காராய் வரும் மாட்சி (அனைத்தும்) அரக்கன் தோளடர்த்தாராகிய இராமேச்சுரம் மேயார் கொள்கைகளேயாகும். பொன் திகழ் - பொன்னில் திகழ்வதுபோற் காணப் படுகின்ற எனினுமாம்.

9. நோக்கொ(ண்)ணுத - நோக்க ஒண்ணுத. குழகன்-இளமையை யுடையவன். மேவலன் - அனைவராலும் விரும்பப் படுபவன். மேவுதல்- விரும்புதல். ஏவலன் - அம்பு எய்தலில் வல்லவனுகிய இராமன், இறைவனைப் புகழ்ந்து ஏத்தி வாழ்த்திய தன்மையால். ஏவலனுர் - உயர் சொற்கிளவியாற் குறித்தார். சே - இடபமாகிய. வ(ல்)ல - வல்ல. வெல் கொடி - வெல்லும் கொடியை ஏந்து கொள்கை.

பின்னொடு முன்னிடு தட்டைச்சாத்திப்
பிரட்டே திரிவாரும்
பொன்னெடுஞ் சீவரப் போர்வையார்கள்
புறங்கூறல் கேளாதே
இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலு
மிராமேச் சுரமேய
பன்னெடு வெண்டலை கொண்டுழலும்
பரமர் செயுஞ்செயலே. 10

தேவியை வவ்விய தென்னிலங்கை
யரையன் றிறல்வாட்டி
ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணு
மிராமேச் சுரத்தாரை
நாவியன் ஞானசம் பந்தனல்ல
மொழியா னவின்றேத்தும்
பாவியன் மாலைவல்லா ரவர்தம்வினை
யாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

10. முன் - மார்பிலும். பின் - முதுகின் புறத்திலும். இடு - தொங்க விடப்பட்ட. தட்டை - தடுக்கை. சாத்தி - அணிந்து. பிரட்டே - ஒதுக்கப்பட்ட இடங்களில் திரிபவர்களாகிய சமணரும் சீவரம் என்னும் ஆடையைப் போர்த்தவர்களாகிய புத்தர்களும். புறம் கூறல் - அல்லாத பொருள்களைக் கூறுதலைக் கேளாமல் இனிய நெடிய சோலையில் வண்டுகள் யாழ் ஓசையைப்போல ஒலிக்கும் இராமேச்சுரமேய பரமர் செய்யும் செயலே கேட்டுணர்ந்து உய்தி கூடுமின் என்பதாம். பல்நெடும் வெண்தலை கொண்டு உழலும் - பல்லையுடைய பெரிய வெள்ளிய கபாலம் கைக்கொண்டு (பிச்சைக்குத்) திரியும் (பரமர்).

11. தேவி - சீதை. திறல் வாட்டி - வலிமையை யழித்து. ஏ இயல் - அம்பு எய்யும். வெஞ்சிலை - கொடிய வில்லை யேந்திய. அண்ணல் - வீரனாகிய இராமன். நண்ணும் - போற்றிய. வெஞ்சிலை - "காய்சினவேல்" திருக்கோவையாரிற் போலக் கொள்க. நல்ல மொழி - பயன் தரும் சொற்களாகிய. பா இயல் - பாட்டின் இலக்கணம் வாய்ந்த மாலை. வினை பற்று அறும் - வினை முற்றும் அழியும்.

# 102 திரு நாரையூர்

360 பதிகவரலாறு

திருவாழ்கொளிபுத்தூர் திருக்கடம்பையை வழிபட்டுவருங்கால், திருநாரையூரின் நம்பரைக் கும்பிடும் விருப்பொடு குறுகிக்கூடிய எம்பிரான் கவுணியர் தலைவர் பாடியருளிய வம்பலர் செந்தமிழ் மாலை இத் திருப் பதிகம்.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

காம்பினை வென்றமென் ருேளி பாகங்
கலந்தா னலந்தாங்கு
தேம்புனல் சூழ்திகழ் மாமடு விற்
றிருநாரை யூர்மேய
பூம்புனல் சேர்புரி புன்ச டையான்
புலியின் னுரிதோன்மேல்
பாம்பினை வீக்கிய பண்ட ரங்கன்
பாதம் பணிவோமே. 1

தீவினை யாயின தீர்க்க நின்ருன்
றிருநாரை யூர்மேயான்
பூவினை மேவு சடைமுடி யான்புடை
சூழப் பலபூதம்

1. காம்பினை வென்ற மென்தோளி - மூங்கிலை வென்ற மெல்லிய தோளையுடைய உமாதேவியார். மென்மைத் தன்மையால் வென்றதென்ப தற்கு 'மென்தோளி' என்ருர்; தேம் புனல் - இனிய நீர் சூழ்ந்த சிறந்த பெரிய மடுக்களையுடைய திருநாரையூர். பூம் புனல் - மெல்லிய கங்கை நீர் தங்கிய. புரி - முறுக்கிய. புன் சடையான் - சிறு சடைகளையுடையவன். உரி தோல் - உரித்த தோலாகிய உடையின் பாம்பைக் கச்சையாகக் கட்டிய. பண்டரங்கன் ஆடிய கூத்து பாண்டரங்கம் என்னப்படும். "திருத்தோணிபுரத்துறையும் பண்ட ரங்கன்" என முன்னும் வந்தமை (திருமுறை) காண்க. பண்ட ரங்கன் சிவபெருமானுக்கு ஒரு பெயர்

2. (தீவினை) ஆயின:- முதல் வேற்றுமையின் சொல்லுருபு, தீர்க்க - பற்றற ஒழிக்க. "தீர்தலும் தீர்த்தலும் பற்று விடற்பொருள" என்பது

ஆவினி லைந்துங்கொண் டாட்டுகந்தா
னடங்கார் மதின்மூன்றும்
ஏ வினை யெய்தழித்தான் கழலே
பரவா வெழுவோமே. 2

மாயவன் சேயவன் வெள்ளி யவன்
விடஞ்சேரு மைமிடற்றன்
ஆயவ ளுகியொ ரந்தர மும்மவ
னென்று வரையாகம்
தீயவ னீரவன் பூமி யவன்
றிருநாரை யூர்தன்னில்
மேயவ னைத்தொழு வாரவர் மேல்
வினையாயின வீடுமே. 3

தொல் சொல் உரியியற் சூத்திரம், பல் பூதம் புடை சூழ என மாற்றுக. ஆட்டு உகந்தான் - அபிடேகங் கொள்ளுதலை விரும்பியவன். ஆடு - ஆடுதல்; நீராடுதல்; முதனிலை திரிந்ததொழிற் பெயர். ஏவினை - அம்பை. எய்து - செலுத்தி. அழித்தான். அம்பை எய்ய வில்லை ஆயினும், அம்பின் கூருகிய நெற்றி விழியின் தீயால் எரித்தால் அவ்வாறு உபசரித்தார். பரவா - பரவி. துதித்து. எழுவோம் - அடிமைத் திறத்தில் ஓங்குவோமாக.

3. மாயவன் - கருநிறத்தான். சேயவன் - செந்நிறத்தன். வெள்ளியவன் - வெண்ணிறத்தவன். இவை சதாசிவமூர்த்தியின் ஐம் முகங்களில் முறையே அகோரம், வாமதேவம், சத்தியோசாத முகங்களைக் குறிக்கும், உபலக்கணத்தால் பொன்மை, பளிங்கு நிறங்களையும் உடன் எண்ணித் தற்புருட ஈசான முகங்களையும் கொள்க. ஆயவன் - ஆகியவன். ஓர் அந்தரமும் அவனென்று ஆகி - இவ்வாறே ஒவ்வொரு வேறுபாடும் தானே யென்று ஆகி. வரை ஆகம் - மலை போன்ற உடம்பு. தீயவன் - நெருப்பாயுள்ளவன் நீரவன், பூமியவன், தண்ணீராயும் உள்ளவன்; இன்னும் காற்று, வெளி, பரிதி, மதி, உயிர் இவையும் தன்னுடம்பாக உள்ளவன் எனவும் உபலக்கணத்தாற் கொள்க; அவன் திருநாரையிலிருப்பவன். அவனைத் தொழுவாரது முற்பிறப்பிற் செய்தவினை முழுதும் விட்டு ஒழியும். தொழுதல் கருமமாதலால் இப்பிறப்பின் வினையும், எடுக்கும் பிறப்பின் வினையும் ஒழிதல் கூறல் வேண்டாவாயிற்று என்க. திரிமூர்த்தி நிறமே கொள்க.

திருநாரையூர்



திருக்கோயில்

துஞ்சிரு ளாடுவர் தூமுறுவல்
    துளங்குமு டம்பினராய்
அஞ்சுட ராரெரி யாடு வரார்
    அழலார்வி ழிக்கண்
நஞ்சுமிழ் நாக மரைக்கசைப்பர்
    நலஞேங்கு நாரையூர்
எஞ்சிவ ஞர்க்கடி மைப்படு வார்க்
    கினியில்லை யேதமே. 4

பொங்கி ளங்கொன் றையினர் கடலில்
    விடமுண் டிமையோர்கள்
தங்களை யாரிடர் தீர நின்ற
    தலைவர் சடைமேலோர்
திங்களை வைத்தன லாடலினர்
    திருநாரை யூர்மேய
வெங்கனல் வெண்ணீ றணிய வல்லா
    ரவரே விழுமியரே. 5

4. துஞ்சு - அனைத்தும் ஒடுங்கும். இருள் - இராக்காலமாகிய மகாசங்காரகாலத்தில் ஆடுவாராம், முறுவல் - புன்சிரிப்போடு, அசையும் உடம்பினராகி, அழகிய ஒளிபொருந்திய தீயின் கண் நின்று ஆடுவார். (நெற்றி) விழியினிடத்து நெருப்பையுடையவர். எம் சிவஞர்க்கு - எமது சிவபிராஞர்க்கு அடிமைப்படுவார்க்கு இனியெய்தக் கூடியதுன்பு இல்லை. (ஏதம் - இங்கே துன்பைக் குறித்தது) “சிவனும் இவன் செய்தி யெல்லாம் என் செய்தி யென்றும், செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும் கொள்வன்” (சித்தியார் 10-ம் சூம் 1) ஆதலால்.

5. பொங்கு - தழைத்த (இளம் கொன்றையினர்). கொன்றையினர்- கொன்றையின் நாண் மலரையணிந்தவர். இளமை - இங்குப் புதுமையை யுணர்த்திற்று. பழம் பூ - முதிய பூவைக் குறிக்கும். ஆர் இடர் - ஆர்த்த இடர், பிணித்ததுயர். (வெம்) கனல் வெண்ணீறு அணியவல்லவர் எனினு மாம். அவரே விழுமியவர் - அவரே “யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்” (திருவாசகம், திருவெண்பா 8) ஆவர்.

பாருறு வாய்மையினார் பரவும்
பரமேட்டி பைங்கொன்றைத்
தாருறு மார்புடையான் மலையின்
றலைவன் மலைமகளைச்
சீருறு மாமறுகிற் சிறைவண்
டறையுந் திருநாரை
யூருறை யெம்மிறைவர்க் கிவை
யொன்றொடொன் றொவ்வாவே. 6

கள்ளி யிடுதலை யேந்துகையர்
கரிகாடர் கண்ணுதலர்
வெள்ளிய கோவண வாடைதன்மேல்
மிளிரா டரவார்த்து
நள்ளிரு ணட்டம தாடுவர்
நன்னலனோங்கு நாரையூர்
உள்ளிய போழ்தி லெம்மேல்வரு
வல்வினையாயின வோடுமே. 7

6. பார் - பூமி முற்றும். உறு - (புகழ்) பரவுதலையுடைய. வாய்மையினார் - சைவ சீலத்தையுடையவர்கள். பரவும் - துதிக்கும். பரமேட்டி - மேலான இடத்தில் உள்ளவன் (மேலான யாக சொரூபியாய் உள்ளவன் எனினுமாம்) தார் உறும் மார்பு உடையான் - மாலைகள் அணிந்த மார்பை யுடையவன். மலையின் தலைவன் - கைலை மலையின் தலைவன். "உயர்ந்த தன்மேற்றே யுள்ளுங்காலை" என்றதனால் (தொல், பொருள்). மலை என்ற அளவில் கைலையைக் குறிப்பதறிக. மலைமகளைச் சீர் உறும் - உமா தேவியாரைச் சிறப்போடு தழுவியிருக்கும். சீர் உறும் - மூன்றன் உருபும் பயனும் தொக்க தொகை. திருநாரையூர். மறுகில்சிறைவண்டு அறையும் - பூசி எஞ்சிய மிச்சிலாகிய கலவைகளை வீதியிற் கவிழ்த்தலால் அவற்றில் வண்டுகள் ஒலிக்கும், திருநாரையூர் என்க. இனிப் புலவியி லெறிந்த பூ மாலைகளில் வண்டுகள் மொய்த்து ஒலித்தலுங்கொள்க.

7. கள்ளி - கள்ளிகளையுடைய மயானத்தில். "கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய்" என அப்பர் திருமறைக்காட்டுத் திருத்தாண்டகம் (கூறுவதால். கள்ளி - தானி ஆகு பெயர்). இடு - இடப்பட்ட. தலையேந்துகையர். கரிகாடர் - "கோயில் சுடுகாடு" (திருவாசகம், திருச்சாழல்) ஆக வுடையவர். வெள்ளிய கோவண ஆடை "தூவெளுத்த கோவணத்தை அரையிலார்த்த கீளானை" என்பர். அப்பர் அடிகளும் (கீழ்வேளூர்த்

நாமமெ னப்பல வும்முடையான்
நலஞ்ஞெங்கு நாரையூர்
தாமொம் மெனப்பறையாழ் குழல்
தாளார் கழல்பயில
ஈமவிளக்கெரி சூழ்சுடலை
யியம்பும் மிடுகாட்டில்
சாமமுரைக்கநின் றுடு வானுந்
தழலாய சங்கரனே. 8

ஊனுடைவெண் டலைகொண் டுழல்வா
ஞெளிர்புன் சடைமேலோர்
வானிடைவெண் மதிவைத் துகந்தான்
வரிவண் டியாழ்முரலத்
தேனுடைமா மலரன்னம் வைகுந்
திருநாரை யூர்மேய
ஆனிடையைந் துகந்தா னடியே
பரவா வடைவோமே. 9

திருத்தாண்டகம்) நன்னலன் (நல்+நலன்) நல்ல நலங்கள். உள்ளிய போழ்தில் - நினைத்தமாத்திரத்தில். வல்வினை ஓடும் - ஒளியைக் கண்ட இடத்து இருள் போல ஓடும்.

8. நாமம் என பலவும்:- பல பெயரையும் தமது நாமமாக உடையான் என்றது. "ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்பதிலும் அறிக. தாம் ஓம் எனப்பறை அறையும் - இம் முழவோசைகள், யாழ் குழல் தாள் ஆர் கழல் பயில - யாழும், குழலும், கழலும் ஆகிய இவற்றோசையோடு ஒத்து ஒலிப்ப. ஈம விளக்கு - கொள்ளி. எரிதல் :- நாடக அரங்கிற் கேற்றிய விளக்காக எரிதல். சுடலையில் உண்டாகும் ஓசை ஒலிக்கும். மயானத்தில் சாமம் உரைக்க-அச்சுடலையோசையே சாமவேதம் ஒலிப்பதாகக்கொண்டு ஆடுவானும். தழல் ஆய - அக்கினியே சொரூபமான சங்கரனும் ஆம்.

9. ஊன் உடை - ஊனையுடைய வெண்தலை. கொண்டு - பாத்திர மாகக் கொண்டு. உழல்வான் - பிச்சைக்குத் திரிபவன். சடைமேல். வான் இடை - ஆகாயத்தில் தவழும். (மதி) வைத்து - அணிந்து ("மத்த மும் மதியமும் வைத்திடும் அரன் மகன்" என்ற திருப்புகழிலும் இப் பொருள் ஆண்டமை அறிக.) உகந்தான் - மகிழ்ந்தவன். மா - சிறந்த. மலர் - தாமரை மலரில். "பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை"

தூசுபுனைதுவ ராடை மேவுந்
தொழிலா ருடம்பினிலுள்
மாசு புனைந்துடை நீத்தவர்கண்
மயனீர்மை கேளாதே
தேசுடையீர்கள் தெளிந்தடைமின்
திருநாரை யூர்தன்னில்
பூசுபொடித்த லைவ ரடியா
ரடியே பொருத்தமே. 10

தண்மதி தாழ்பொழில்சூழ் புகலித்
தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்மதி சேர்சடையா னுறையுந்
திருநாரை யூர்தன்மேல்
பண்மதியாற் சொன்ன பாடல் பத்தும்
பயின்றார் வினைபோகி
மண்மதியாது போய்வான் புகுவர்
வானோ ரெதிர்கொளவே. 11

திருச்சிற்றம்பலம்

ஆகையால் மாமலர் - தாமரை மலர் என்க. வரிவண்டு யாழ் போல் ஒலிக்க அவ்வோசையைக் கேட்டுத் தாமரை மலரில் அன்னம் வைகும் திருநாரையூர். அடியையே பரவி அடைவோமாக.

10. தூசு - ஆடையாக. புனை - உடுக்கும். தொழிலார் - பவுத்தர். உடம்பில் - உடம்பிலும். உள் - மனத்திலும். மாசு புனைந்து - அழுக்கையும், அறியாமையையும் அணிந்து. உடை நீத்தவர்கள் - ஆடையை நீக்கியவராகிய சமணர். ஒழிப்பவற்றைக் கொண்டும் கொள்வனவற்றை யொழித்தும் உள்ளவரென்ற குறிப்பு. மயல் நீர்மை - மயக்கும் உபதேசங்களைக் கேளாது. தேசு உடையீர்கள் - மெய்யறிவுடையீர்களே. தெளிந்து - சிவனே பொருளெனத் தெளிவாக உணர்ந்து. பூசு பொடித் தலைவர் - திருநீறு பூசிய தலைவர். அடியே பொருத்தம் ஆம் - பொருந்துவது ஆகும். அவ்வடியையே அடைமின்.

11. தண் மதி தாழ் பொழில் - சந்திரன் தங்கும் சோலை சூழ் புகலித் தமிழ் ஞானசம்பந்தன் திருநாரையூர் தன்மேல் பண்மதியால் சொன்ன. (பயில்வோர்க்கு) இசையறிவு உண்டாகும் வகையாற் பாடிய பாடல் பத்தும் பயின்றார். வினை போகி - வினை நீங்கப் பெற்று. மண் - மண்ணுலக இன்பை. மதியாது போய் வானோர் எதிர் கொள்ள வான் புகுவர்.

# 103 திரு வலம்புரம்

361 **பதிகவரலாறு**

திருத்தலைச்சங்கக்காடு சேர்ந்து, அங்கிருந்த அந்தணர் எல்லாரும் விதிப்படி வழிபட்டு எதிர்கொள்ளச்சென்று, நற்சங்கத்தின் தருமுறை நெறியில் அக்கோயிலை வணங்கிய வாய்மையைப் பாடி, மறையவர் போற்றவந்து, திருவலம்புரத்து இறைவரைத் தொழுது ஏத்திப் பாடியருளியது இத் திருப்பதிகம். (தலைச்சங்காடு தலைச்சங்கை என்பன மரூஉ).

**பண் - பழம்பஞ்சுரம்**

திருச்சிற்றம்பலம்

கொடியுடை மும்மதி லூடுருவக்
குனிவெஞ்சிலை தாங்கி
இடிபட வெய்த வமரர்பிரா
னடியா ரிசைந்தேத்தத்
துடியிடை யாளையொர் பாகமாகத்
துதைந்தா ரிடம்போலும்
வடிவுடை மேதி வயல்படியும்
வலம்புர நன்னகரே. 1

கோத்தகல் லாடையுங் கோவணமுங்
கொடுகொட்டி கொண்டொருகைத்
தேய்த்தன் றநங்கனைத் தேசழித்துத்
திசையார் தொழுதேத்தக்

1. கொடி - துவசம். இடிபட - பேரொலி கிளம்ப (எய்த பிரான்). துடி - உடுக்கை. துதைந்தார் - பிரிவிலா ஒருடம்பாகக் கொண்டவர். போலும் உரையசை. "ஒப்பில்போலி" என்பர் தொல்காப்பியனார். வடிவுடை மேதி - அழகுடைய எருமைகள். தலச்சிறப்பால் அவைகளும் அழகுடையனவாகத் தோன்றும் என்ற குறிப்பு. வலம்புர நன்னகர் துடியிடையாளை ஓர் பாகமாகத் துதைந்தார்க்கிடம் என்க.

2. கோத்த:- அணிந்த என்னும் பொருளில்வந்தது. காவிக் கல்லால் தோய்த்த காவி உடையையும், கோவணமும், ஒரு கையிற் கொடு கொட்டியென்னும் வாத்தியத்தையும் கொண்டு. அநங்கனை - மன்மதனை.

காய்த்தகல் லாலதன் கீழிருந்த
கடவுள் ளிடம்போலும்
வாய்த்தமுத் தீத்தொழி லுன்மறையோர்
வலம்புர நன்னகரே 2

நொய்யதொர் மான்மறி கைவிரலின்
னுனைமே னிலையாக்கி
மெய்யெரி மேனிவெண் ணீறுபூசி
விரிபுன் சடைதாழ
மையிருஞ் சோலை மணங்கமழ
இருந்தா ரிடம்போலும்
வைகலு மாமுழ வம்மதிரும்
வலம்புர நன்னகரே. 3

ஊனம ராக்கை யுடம்புதன்னை
உணரிற் பொருளன்று
தேனமர் கொன்றையி னானடிக்கே
சிறுகாலை யேத்துமினே

தேசு அழித்து - ஒளியுடலைப் போக்கி. தேய்த்து - அழித்து. தேசு - ஆகு பெயர். மறையோர் (வாழும்) வலம்புரம்.

3. நொய்யது - இலேசான உடம்பை யுடையதாகிய மான்கன்று. மானின் உடம்பு நொய்ய தென்றும் அதனாலேயே அது ஏனையவற்றிலும் வேகமாக ஓடக்கூடியதென்றும் வாயு பகவானின் வாகனமாக அதனைக் கூறுவது அதனாலே யென்றும் கூறுப. நுனை - நுனி. நிலை ஆக்கி - நிலையாக நிற்கச் செய்து. மெய் எரி மேனி - உடம்பின் தீப்போன்ற மேனியில் வெண்ணீறுபூசி (மேனி - உடம்பின் தோற்றப் பொலிவு). தாழ - தொங்க. மை - இருளடர்ந்த. இரும் - பெரிய சோலை (மணம்) கமழ - (இருந்தார்) காரண காரியப் பொருளன்றி வந்தது. அது "வாவிதொறும் வண்கமலம் முகங்காட்டச் செங்குமுதம் வாய்கள் காட்டக் காவியிருங் கருங்குவளை கருநெய்தல் கண்காட்டும் கழுமலமே. வைகலும் - நாடோறும் மாமுழவம் அதிரும் என்றது. நித்திய பூசையே திருவிழாப்போற் சிறப்புற நடக்கும் என்ற குறிப்பு.

4. ஊன் அமர் ஆக்கை உடம்பு - தசை முதலியவற்றை வைத்துக் கட்டப்பட்டதாகிய உடம்பு. அமர் - அமர்த்தியெனப் பகுதியே வினையெச்சப் பொருள் தந்தது. "அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி"

ஆனம ரைந்துங்கொண் டாட்டுகந்த
வடிக ளிடம்போலும்
வானவர் நாடொறும் வந்திறைஞ்சும்
வலம்புர நன்னகரே. 4

செற்றெறியுந் திரையார் கலுழிச்
செழுநீர்கிளர் செஞ்சடைமேல்
அற்றறியா தனலாடு நட்ட
மணியார் தடங்கண்ணி
பெற்றறிவா ரெருதேற வல்ல
பெருமா னிடம்போலும்
வற்றறியாப் புனல்வாய்ப் புடைய
வலம்புர நன்னகரே. 5

உண்ணவண் ணத்தொளி நஞ்சமுண்டு
உமையோ டுடனாகிச்
சுண்ணவண் ணப்பொடி மேனிபூசிச்
சுடர்ச்சோதி நின்றிலங்கப்

என்ற திருமுருகாற்றுப் படையிற் போல, அதனோடு "குடி பொன்றி" என்னுந் திருக்குறளிற் போல, பிறவினை விகுதியும் தொக்கு நின்றது. சிறு காலை - இளவயதிலேயே உடம்பு தன்னையுணரில் அது பொருள் அன்று எனலறியலாகும். ஆதலின் அதனைப் பேணுதலையே பொருளாகக் கொள்ளாது. அதனைக் கொன்றையினான் அடிக்கே செலுத்திச் சிறுகாலை ஏத்துமின் என்றவாறு. அவ்வாறு அவனையேத்துதற்கு உரியவிடம் அவன் இருந்த வலம்புர நன்னகராம் என்க.

5. செற்று - மோதி. எறியும் - வீசும். திரை ஆர் - அலைகளை யுடைய. கலுழி - (கங்கை) நதியின் செழுநீர் சடைமேல். அற்று அறியாது - நீங்காது தங்குவதாக. அனல் ஆடும் நட்டம் - அனலின்கண் நின்று ஆடும் திருக்கூத்தின். பெற்று - (பெற்றி) தன்மையை அணி ஆர் அழகு பொருந்திய. தடம் கண்ணி - விசாலமான கண்களையுடைய உமா தேவியார். அறிவார் - அறிவாராக. எருது வல்ல பெருமான்.

6. உண்ண - தேவர்கள் அமுது உண்ணும் பொருட்டு. அண்ணத்து வாசுகி யென்னும் பாம்பின்மேல் வாயில். ஒளி - அடங்கியிருந்த. நஞ்சம் - விடம் (வெளிப்படவே). உண்டு - அதனை உண்டு. உண்ண என்பதற்கு வினை முதலும் செயப்படு பொருளும் வருவிக்க. சுடர் - கதிரையுடைய

பண்ணவண் ணத்தன பாணிசெய்யப்
பயின்றா ரிடம்போலும்
வண்ணவண் ணப்பறை பாணியறா
வலம்புர நன்னகரே. 6

புரிதரு புன்சடை பொன்றயங்கப்
புரிநூல் புரண்டிலங்க
விரைதரு வேழத்தி னீருரிதோள்
மேன்மூடி வேய்புரைதோள்
அரைதரு பூந்துகி லாரணங்கை
அமர்ந்தா ரிடம்போலும்
வரைதரு தொல்புகழ் வாழ்க்கையறா
வலம்புர நன்னகரே. 7

தண்டணை தோளிரு பத்தினொடுந்
தலைபத் துடையானை
ஒண்டணை மாதுமை தானடுங்க
வொருகால் விரலூன்றி

சோதி - ஒளியானது. பண்ண - பண்களினுடைய. வண்ணத்தன - கூறுபாடுகளை யறிந்தனவாகிய பூதங்கள். பாணி செய்ய - பாட. பயின்றார்க்கு - ஆடல் புரிந்தவராகிய சிவபெருமானுக்கு வண்ண வண்ணம் பலவகையான. பறை - வாத்தியங்களின் ( சிறப்புப் பெயர் - பொதுப் பெயர்க்காயிற்று ) பாணி - ஓசை. அறா - நீங்காத வலம்புர நன்னகர்.

7. புரிதரு - முறுக்கிய புன்சடை. பொன்தயங்க - பொன்னைப்போல் ஒளிர, புரிநூல், புரண்டு இலங்க - மார்பில் புரண்டு விளங்க. விரைதரு- விரைந்து செல்ல வல்ல. வேழத்தின் - யானையின். ஈர் உரிதோல் - இழுத்து உரித்த தோலை. மேல் - உடம்பின்மேல். மூடி - போர்த்து. வேய் புரைதோள் - மூங்கிலை யொத்த தோளையுடைய. அரை - இடுப்பில். தரு - அணிந்த. பூந்துகில் - பொலிவுடைய ஆடை. ஆரணங்கு (அருமை =அணங்கு) அரிய தெய்வமாகிய உமாதேவியாரை. அமர்ந்தார் - விரும்பினவராகிய சிவபெருமான். வரை தரு - புலவராற் கவியெழுதிப் புகழப்படும். தொல் புகழ் - பழமையான புகழையுடைய. வாழ்க்கை - குடிமக்களின் செல்வம். அறா - குறையாத. வலம்புர நன்னகர். வரைதரு புகழ் "உயர் குடியுட் பிறப்பின் என்னும் பெயர் பொறிக்கும் பேராண்மை யில்லாக்கடை" என்ற நாலடியாரிலும் காண்க.

8. தண்டு அணை - தண்டு முதலிய ஆயுதங்களைத் தாங்கிய அணை - தம் உடம்போடு ஒன்றாக அணைந்த. மாது

மிண்டது தீர்த்தருள் செய்யவல்ல
விகிர்தர்க் கிடம்போலும்
வண்டணை தன்னெடு வைகுபொழில்
வலம்புர நன்னகரே. 8

தாருறு தாமரை மேலயனுந்
தரணி யளந்தானும்
தேர்வறி யாவகை யாலிகலித்
திகைத்துத் திரிந்தேத்தப்
பேர்வறி யாவகை யானிமிர்ந்த
பெருமா னிடம்போலும்
வாருறு சோலை மணங்கமழும்
வலம்புர நன்னகரே. 9

காவிய நற்றுவ ராடையினர்
கடுநோன்பு மேல்கொள்ளும்
பாவிகள் சொல்லைப் பயின்றறியாப்
பழந்தொண்ட ருள்ளுருக

உமை - உமை அம்பிகை. ஒரு கால் விரல் - (கால் ஒரு விரல்) காலின் ஒரு விரலால் ஊன்றி. மிண்டு - செருக்கை. தீர்த்து - போக்கி. விகிர்தர் - வேறுன தன்மையுடையவர் என்றது. "பிறவாதே தோன்றா காண்பான் துறவாதே யாக்கை துறந்தான் - முறைமையால் யாழ்ந்தான் அதலாதாலியான் ஊழால் உயராதே போங்கிறன்" என்ற திருக்கைலாய ஞான உலாவின் கருத்து. "வண்டு அணை தன்னெடு" வண்டு ஆண் வண்டுகள். அணை தன்னெடு - தாங்கள் சழுவும் பெடைவண்டோடு. வைகு - தங்கும் பொழில்.

9. தார் உறு - தனக்கு மாலையாகப் பொருந்திய. தாமரை மேல் - தாமரை மலர்மேல் தங்கும். அயனும் - பிரமனும் பிரமனுக்குத் தாமரை மலரே மாலை; தாமரை மலரே இருக்கை. இகலி - தம்முள் மாறுபட்டு. தேர்வு - அடி முடி தெரிதலே. அறியா வகையால் - அறியாத தன்மையினுல் திகைத்துத்திரிந்து. ஏத்த - துதிக்குமாறு, பேர்வு அறியாவகையால் நிமிர்ந்த, அசைக்க முடியாத தன்மையோடு ஓங்கிய பெருமான். வார் உறு - நெடிய சோலை. வார் - நெடுமை என்னும் பொருளில் வந்த உரிச்சொல். "வார்தல், போகல், ஒழுகல் மூன்றும், நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள" என்பது தொல்காப்பியம். உரியியல் சூ-ம்.)

10. காவிய கல்துவர் ஆடையினர் - காவியைத் தருவதாகிய நல்ல துவரில் தோய்த்த ஆடையையுடைய பவுத்தர்களும், கடுநோன்பு

ஆவியு ணின்றருள் செய்யவல்ல
வழக ரிடம்போலும்
வாவியி னீர்வயல் வாய்ப்புடைய
வலம்புர நன்னகரே. 10

நல்லிய னுன்மறை யோர்புகலித்
தமிழ்ஞான சம்பந்தன்
வல்லியந் தோலுடை யாடையினன்
வலம்புர நன்னகரைச்
சொல்லிய பாடல்கள் பத்துஞ்சொல்ல
வல்லவர் தொல்வினைபோய்ச்
செல்வன சேவடி சென்றணுகிச்
சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

மேல்கொள் பாவிகள் - இரண்டு உவாவும் அட்டமியும் பட்டினி நோன்பையே மேலாகக்கொண்ட பாவிகளாகிய சமணர்களும் (சொல்லும்) சொல்லைப் பயின்று. அறியா - கேளாத. பழம் தொண்டர் - வழிவழித் தொண்டர்கள். ஆவியுள் நின்று - அவர்கள் ஆன்மாவினுள் நின்று அருள் செய்ய வல்ல அழகர். வாவியில் - குளங்களிலும். வயல் - வயல்களிலும் நீர் வாய்ப்பு உடைய வலம்புரம்.

**11.** நல் இயல் - நல்ல ஒழுக்கத்தையுடைய நால் மறையோர். வல்லியம்தோல் - புலியின் தோலை. உடை ஆடையினன் - இடுப்பில் உடுக்க ஆடையாய்க் கொண்டருளியவன். சிவலோகம் சென்று அணுகி முத்திச் செல்வத்தை யருள்வானாகிய சிவபெருமான் சேவடியைச் சேர்ந்திருப்பர் என ஈற்றடிக்குப் பொருள் கொள்க.

---

வன்பகை யாமக் குண்டரை வென்றோய்
மாமலர் வாளிப் பொருமத வேளைத்
தன்பகை யாகச் சிந்தையுள் நையுந்
தையலை உய்யக் கொண்டருள் செய்யாய்
நின்புகழ் பாடிக் கண்பனி சோரா
நின்றெழில் ஞானு என்றகம் நெக்கிட்
டன்பாக லாமெய்ச் சிந்தையர் இன்பா
அம்பொழின் மாடச் சண்பையர் கோவே.

— ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்,

# 104 திருப் பரிதிநியமம்

362 **பதிகவரலாறு**

அவளிவள்நல்லூரில் தம்பரிசுடையாரை வணங்கிப் பல தலங்களைத் தரிசித்து, பழுதில் சீர்த் திருப்பரிதிநன்னியமம் பணிந்து பாடியருளிய எழுதுமாமறையாம் இசைத் திருப்பதிகம் இது.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

விண்கொண்ட தூமதி சூடிநீடு
விரிபுன் சடைதாழப்
பெண்கொண்ட மார்பில்வெண் ணீறுபூசிப்
பேணார் பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலொ டேர்கவர்ந்த
கள்வர்க் கிடம்போலும்
பண்கொண்ட வண்டினம் பாடியாடும்
பரிதிந் நியமமே. 1

அரவொலி வில்லொலி யம்பினொலி
யடங்கார் புரமூன்றும்
நிரவவல்லார் நிமிர்புன் சடைமே
னிரம்பா மதிசூடி

1. விண் கொண்ட - ஆகாயத்தை இடமாகக் கொண்ட. தூமதி - வெண் பிறையை. நீடு - நெடிய. விரி - விரிந்த. புன் சடை தாழ தொங்க. பேணார் - "இரத்தலின் இன்னாததில்லை" யெனவேப் பேணாத வராய் (பேணார் - முற்றெச்சம்). பலி தேர்ந்து - பிச்சைக்கு வருபவராய் கண்கொண்ட - கண்ணைக் கவரும். சாயலோடு - (எனது) தோற்றப் பொலிவோடு. ஏர் - அழகையும் கவர்ந்த கள்வர்க்கு இடம் போலும். முற் பதிகத்துக்கு உரைத்ததையேயுரைக்க. பண் கொண்ட - இசையை யுடைய. வண்டு இனம் பாடி ஆடும் (- சுற்றித்திரியும் சோலைகளையுடைய) பரிதி நியமம்.

2. அரவு ஒலி - வாசுகியென்னும் பாம்பாகிய நாணின் ஓசையும், வில் ஒலி - மேரு மலையாகிய வில்லின் ஓசையும். அம்பு ஒலி - காற்று

இரவில் புகுந்தெ னெழில்கவர்ந்த
விறைவர்க் கிடம்போலும்
பரவவல் லார்வினை பாழ்படுக்கும்
பரிதிந் நியமமே. 2

வாண்முக வார்குழல் வாணெடுங்கண்
வளைத்தோண் மாதஞ்ச
நீண்முக மாகிய பைங்களிற்றின்
னுரிமே னிகழ்வித்து
நாண்முகங் காட்டி நலங்கவர்ந்த
நாதர்க் கிடம்போலும்
பாண்முக வண்டினம் பாடியாடும்
பரிதிந் நியமமே. 3

வெஞ்சுரஞ் சேர்விளை யாடல்பேணி
விரிபுன் சடைதாழத்
துஞ்சிருண் மாலையும் நண்பகலுந்
துணையார் பலிதேர்ந்து

திருமால் நெருப்பு ஆகிய அம்பின் ஓசையும் ஆம். இவற்றால், அடங்கார் - பகை யசுரர்களது. புரம் மூன்றும் - மூன்று கோட்டைகளையும். நிரவ வல்லார் - அழித்துத் தரையோடு தரையாக்க வல்லவர். நிரம்பாமதி - கலை நிறையாத பிறை. புகுந்து - வந்து.

3. வாள் முகம் - ஒளி பொருந்திய முகத்தையும். வார் குழல் - தொங்கும் கூந்தலையும். வாள் நெடும் கண் - வாள் போன்ற நெடிய கண்களையும். வளைத்தோள் - மூங்கில்போன்ற தோளையும் உடைய. மாது - உமை அம்மையார் அஞ்ச. பைம் களிறு - கரிய யானை (பச்சை, நீலம், கறுப்பு இந்நிறங்களுள் ஒன்றனை மற்றொன்றாகக் கூறுதல் மரபு) மேல் நிகழ்வித்து - உடம்பின்மேற் போர்த்து. நாண் - பிறர்முன் நான் நாணுதலை, முகம் - என்னிடத்து. காட்டி - உண்டாகச்செய்து. நலம் - பெண்மை நலத்தை. பாண் முகம் - மூக்கால் ஒலித்துப் பாடுதலையுடைய வண்டு இனம்.

4. வெம் சுரம் - கொடிய பாலைவனம் போன்ற சுடுகாட்டில். சேர் - அடைவதாகிய. ஓர் ஆடல் - ஒரு திருவிளையாடலை. பேணி - மேற்கொண்டு. இருண் மாலை - பின் மாலையாகிய இரவிலும் நடுப்பகலிலும்.

அஞ்சுரும் பார்குழல் சோரவுள்ளங்
கவர்ந்தார்க் கிடம்போலும்
பஞ்சுரம் பாடிவண்டி யாழ்முரலும்
பரிதிந் நியமமே. 4

நீர்புல்கு புன்சடை நின்றிலங்க
நெடுவெண் மதிசூடித்
தார்புல்கு மார்பில்வெண் ணீறணிந்து
தலையார் பலிதேர்வார்
ஏர்புல்கு சாய லெழில்கவர்ந்த
விறைவர்க் கிடம்போலும்
பார்புல்கு தொல்புக ழால்விளங்கும்
பரிதிந் நியமமே. 5

வெங்கடுங் காட்டகத் தாடல்பேணி
விரிபுன் சடைதாழத்
திங்கள் திருமுடிமேல் விளங்கத்
திசையார் பலிதேர்வார்

துணையார் - பூதங்கள் முதலிய துணையுடையவராய்ப் பலி தேர்ந்து. அம் - அழகிய. சுரும்பு ஆர் - வண்டுகள் ஒலிக்கும். குழல் சோர - கூந்தல் சரிய; கூந்தல் சரிதல், வளை நெகிழ்தல் முதலியன காதல் கொண்டவர் மெய்ப்பாடுகள். உள்ளம் - என் உள்ளத்தை, வண்டுகள் பஞ்சுரம் முதலிய பண்களை வண்டுகள் யாழிசை போல முரன்று பாடும். பாடி முரலும் என்பதன் விகுதி பிரித்து மாறிக் கூட்டுக.

5. தார் - மாலை. புல்கு - பொருந்திய. தலை ஆர் - மண்டையோட்டில் நிறைவிக்கும் பலி தேர்வாராய். ஏர் புல்கு - அழகோடு கூடிய. சாயல் எழில் - மிக்க தோற்றப் பொலிவை. எழில் - எழுச்சி, வளர்ச்சி. பார் புல்கு - உலகம் முழுவதும் பரவிய தொல் புகழார்.

6. திசை - திசைகளில். ஆர் - பொருந்திய ( கிடைக்கக் கூடிய ) பலி தேர்வாராய். சங்கு, சாயல் - எழில். கவர்ந்த - உடம்பில் தங்காதவாறு செய்த என்பது பொருள். புறவின் - முல்லை நிலத்தை யடுத்ததாகிய

சங்கொடு சாய லெழில்கவர்ந்த
    சைவர்க் கிடம்போலும்
பைங்கொடி முல்லை படர்புரவிற்
    பரிதிந் நியமமே 6

பிறைவளர் செஞ்சடை பின்றயங்கப்
    பெரிய மழுவேந்தி
மறையொலி பாடிவெண் ணீறுபூசி
    மனைகள் பலிதேர்வார்
இறைவளை சோர வெழில்கவர்ந்த
    விறைவர்க் கிடம்போலும்
பறையொலி சங்கொலி யால்விளங்கும்
    பரிதிந் நியமமே. 7

ஆசடை வானவர் தானவரோ
    டடியா ரமர்ந்தேத்த
மாசடை யாதவெண் ணீறுபூசி
    மனைகள் பலிதேர்வார்
காசடை மேகலை சோரவுள்ளங்
    கவர்ந்தார்க் கிடம்போலும்
பாசடைத் தாமரை வைகுபொய்கைப்
    பரிதிந் நியமமே. 8

சைவன் - சிவனுக்கு ஒரு பெயர் "சைவா போற்றி தலைவா போற்றி" என்பது திருவாசகம்.

7. பின் தயங்க - பின்புறம் விளங்கித் தொங்க. மனைகள் - வீடுகளில். இறை - முன் கையில் அணிந்த. வளை - வளையல்கள், சோர - நழுவ.

8. ஆசு - பற்றுக் கோடாக. அடை - அடையும், வானவர் தானவரோடு அடியார். மாசு அடையாத - பாவத்தை அடையயாது நீக்க வல்ல என்பது "பராவணமாவது நீறு பாவம் அறுப்பது நீறு" என்னும் திருநீற்றுப் பதிகத்தாலும் அறிக. காசு - மணிகள். அடை - பதிக்கப்பெற்ற. மேகலை "பல் காசு நிரைத்த சில்காழல்குல்" என்பது திருமுருகாற்றுப் படை. பாசடைத்தாமரை - பசிய இலைகளையுடைய தாமரை.

நாடினர் காண்கிலர் நான்முகனுந்
திருமா னயந்தேத்தக்
கூடல ராடல ராகிநாளுங்
குழகர் பலிதேர்வார்
ஏடலர் சோர வெழில்கவர்ந்த
இறைவர்க் கிடம்போலும்
பாடல ராடல ராய்வணங்கும்
பரிதிந் நியமமே. 9

கல்வள ராடையர் கையிலுண்ணுங்
கழுக்க ளிழுக்கான
சொல்வள மாக நினைக்கவேண்டா
சுடுநீ றதுவாடி
நல்வளை சோர நலங்கவர்ந்த
நாதர்க் கிடம்போலும்
பல்வளர் முல்லையங் கொல்லைவேலிப்
பரிதிந் நியமமே. 10

பைபர வம்விரி காந்தள்விம்மு
பரிதிந் நியமத்துத்
தையலொர் பாக மமர்ந்தவனைத்
தமிழ்ஞான சம்பந்தன்

9. தேடிக் காணுதவர்களாகிய நான் முகனும் திருமாலும் உம்மை விரிக்க. கூடலர் - அவர்களிடத்துக் காணக் கூடாதவராகி எம்மிடத்து· ஆடலர் ஆகி - விளையாடுதலை யுடையவராய். நாளும் - நாடோறும். குழகர் - அழகினையுடையவர். ஏடு அலர் - (கூந்தலிலணிந்த) இதழ்களை யுடைய மலர்கள், பாடலர் ஆடலராய் அடியார் வணங்கும்.

10. கல் வளர் - காவிக்கல்லால். வளர் - நிறம் மிகுந்த. ஆடையர் - பவுத்தர். கையில் உண்ணும் கழுக்கள் - (சமணர்) "கழுக்கையர்" எனப் பின்னர் வருவதறிக. இழுக்கு ஆன சொல் - குற்றமுடைய சொற்களை. சொல்வளமாக - பயனுடைய சொல்லாக. பல் வளர் - மாதர் பற்களைப்போல அரும்பு அடர்ந்த (முல்லை) கொல்லை - காடு. வேலி - வேலியாகவுடைய.

11. பை அரவம் விரிகாந்தள் - படத்தையுடைய பாம்பு போல மலர் விரிந்த காந்தட் செடிகள். விம்மு - தழைத்த. படம் விரிந்த மலரையும்

பொய்யிலி மாலை புனைந்தபத்தும்
பரவிப் புகழ்ந்தேத்த
ஐயுற வில்லை பிறப்பறுத்தல்
அவலம் அடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

தண்டு செடியையும் ஒக்கும். காந்தள் - திணைமயக்கம். பொய்யிலி - சிவனுக்கு ஒரு பெயர். ("பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேனானே" அப்பர் திருத்தாண்டகம்). ஆன் - விகுதிமேல் விகுதி. பிறப்பு அறுக்கப் பட்டு அங்கு அவலம் அடையா என்பதற்குச் சற்றும் ஐயுற வில்லை என்க.

கோவின்றிரு முகமீதொடு வருதூதுவ னீர
குளிர்பைம்பொழில் வளநாடெழில் நிதியம்பரி சம்மீ
மாவீரிய ரிவர்தங்கையென் மகுடன்திறம் அமண
மறவெங்குல மறிகின்றிலன் பழியச்சத வரசன்
பாவேறிய மதுரத்தமிழ் விரகன்புக லியர்மன்
பயில்வண்புக ழருகாசனி பணியன்றெனி னமர்காள்
தூவேரியை மடுமின்றுடி யடிமின்படை எழுமின்
தொகுசேனையும் அவனும்பட மலையும்பரி சினியே.

இனியின் றெழுமினிவ் வெறியும் மறியடு
தொழிலும் மிடுகுர வையுமெல்லாம்
நனிசிந் தையினிவள் மிகவன் புறுவதொர்
நசையுண் டதுநரை முதுபெண்டீர்
புனிதன் புகலியர் அதிபன் புனைதமிழ்
விரகன் புயமுறும் அரவிந்தம்
பனிமென் குழலியை அணிமின் துயரொடு
மயலுங் கெடுவது சரதம்மே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 105 திருக் கலிக்காமூர்

## 363 பதிகவரலாறு

மெய்வகை ஞானம் உண்ட வேதியர், தோணிவீற்றிருந்தாரைத் தொழுது வீற்றிருந்த காலத்தில், மயேந்திரப்பள்ளி, குருகாவூர், திருமுல்லைவாயில் உள்ளிட்டு எய்திய பதிகளெல்லாம் இன்புற இறைஞ்சி ஏத்திப் பாடியவற்றுள் ஒன்று இப் பைந்தமிழ்ச் சொல் மாலை.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மடல்வரை யின்மது விம்முசோலை
வயல்சூழ்ந் தழகாருங்
கடல்வரை யோதங் கலந்துமுத்தஞ்
சொரியுங் கலிக்காமூர்
உடல்வரை யின்னுயிர் வாழ்க்கையாய
வொருவன் கழலேத்த
இடர்தொட ராவினை யானசிந்தும்
மிறைவன் னருளாமே. 1

மைவரை போற்றிரை யோடுகூடிப்
புடையே மலிந்தோதங்
கைவரை யால்வளர் சங்கமெங்கும்
மிகுக்குங் கலிக்காமூர்

1. மடல் - பூ இதழ்களில். வரை இல் - அளவற்ற. மது - தேன். விம்மு - மிகவும் ஊற்றெடுக்கும், சோலையும் வயலும் சூழ்ந்து. வரை - மலை போன்ற. ஓதம் - அலைகளில் கலந்து வந்து. முத்தம் - முத்துக்கள். சொரியும் - சொரியப் பெற்ற. உடல் வரையின் - உடலின் எல்லையுள் (தங்கும்). உயிர் - ஆன்மாவின். வாழ்க்கை ஆய - வாழ்தற்குக் காரணம் ஆம் உயிர் ஆகிய. என்றது உடல் உயிர்க்கு இருப்பிடம் ஆதல் போல உயிர் இறைவனுக்கு இருப்பிடம் எவ்வுயிரும் ஈசன் சந்நிதியதாகும் என்னும் கருத்து. தொடர இருக்கும் வினைகள் தொடரமாட்டா; எஞ்சிய வினைகளும் சிதறும்; இறைவன் திருவருட் சத்தி பதியும்; முடிவிலின்பப் பேறும் உறுவர் என்பது ஈற்றடியின் கருத்து.

2. ஓதம் - கடலானது. மைவரைபோல் - மேகம் படியும் மலை போன்ற, திரையோடும் கூடி. (வந்த) வளர் - பருத்த. சங்கம் - சங்குகளை.

மெய்வரை யான்மகள் பாகன்றன்னை
விரும்ப வுடல்வாழும்
ஐவரை யாசறுத் தாளுமென்பர்
அதுவுஞ் சரதமே. 2

தூவிய நீர்மல ரேந்திவையத்
தவர்க டொழுதேத்தக்
காவியி னேர்விழி மாதரென்றுங்
கவினார் கலிக்காழூர்
மேவிய வீசனை யெம்பிரானை
விரும்பி வழிபட்டால்
ஆவியுள் நீங்கல னாதிமூர்த்தி
யமரர் பெருமானே. 3

கை - கரையின் கண்ணே. மிகுக்கும் - மிகக் குவிக்கும், ஓதமானது மலை போல் வரும் அலைகளோடு கலந்து வந்த சங்குகளைக் கரையின் மிகக் குவிக்கும் கலிக்காழூர் என்க. மெய் - உடம்பின்கண். வரையான் மகள் - இமயமலையரையன் மகளாகிய உமையம்மையாரை. பாகன் - இடப்பாகத்தில் உடையவன். உடல்வாழும் ஐவர் - பஞ்சேந்திரியங்கள். ஆசு அறுத்து - பற்றுதலை ஒழித்து. ஆளும் - கொள்வான். சரதம் - நிச்சயமாம் ஆம். பாகன் தன்னை விரும்ப அவன் நமது உடலில் வாழும் ஐவரையறுத்து ஆளும் என்பர் என்பது வினைமுடிபு. ஐவர் இகழ்ச்சிக்குறிப்பு "இவ்வரும் பிறவிப் பௌவ நீர் நீந்தும் ஏழையேற் கென்னுடன் பிறந்த ஐவரும் பகையே" என்னுந் திருவிசைப்பாவிலும் இச்சொல் வருதலை யறிக.

3. தூவிய நீர்மலரை ஏந்திச் சொரிந்து அபிடேகிக்கும் பொருட்டு நீரையும் சொரிந்து. பூசிக்கும் பொருட்டு மலரையும் முறையே ஏந்தி வந்து வையத்தவர்கள் தொழுது ஏத்தவும். காவியின் நேர்விழி மாதர் - நீலோற்பல மலரையொத்த விழிகளையுடைய மாதர்கள், தொழுதேத்தவும் (அதனால் என்றும்). கவின் ஆர் - அழகு நிறைந்த, கலிக்காழூர். தூவிய (நீர் மலரேந்தி) சுருங்கச் சொல்லல் என்னும் அழகு. அது செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். வையத்தவர் - பூமியிலுள்ளவர்களாகிய (ஆடவரும்) காவியின் நேர்விழி மாதரும் தொழுதேத்தக் கவினார் கலிக்காழூர் என்க. மாதர் என, பின்வருதலால் வையத்தவர் என்பது பெண்ணொழி மிகு சொல். தொழுதேத்த இடை நிலைத் தீவகம். ஆதி மூர்த்தியாகிய அவ் அமரர் பெருமான் உயிருள் நீங்கலனும் தன்மை விளங்கத் தோன்றுவன் என்பது ஈற்றடியின் பொருள்.

குன்றுகள் போற்றிரை யுந்தியந்தண்
மணியார் தரமேதி
கன்றுடன் புல்கியா யம்மனைசூழ்
கவினார் கலிக்காமூர்
என்றுண ரூழியும் வாழுமெந்தை
பெருமா னடியேத்தி
நின்றுணர் வாரை நினையகில்லார்
நீசர் நமன்றமரே. 4

வானிடை வாண்மதி மாடந்தீண்ட
மருங்கே கடலோதங்
கானிடை நீழலிற் கண்டல்வாழுங்
கழிசூழ் கலிக்காமூர்
ஆனிடை யைந்துகந் தாடினானை
யமரர் தொழுதேத்த
நானடை வாம்வண மன்புதந்த
நலமே நினைவோமே. 5

துறைவளர் கேதகை மீதுவாசஞ்
சூழ்வான் மலிதென்றல்
கறைவள ருங்கட லோதமென்றுங்
கலிக்குங் கலிக்காமூர்

4. திரை உந்தி - அலைகளால் தள்ளப்பட்டு. அம் தண் - அழகிய குளிர்ச்சி பொருந்திய. மணி - முத்துக்கள். மேதி ஆயம் - எருமைக் கூட்டங்கள். கன்றுடன் - கன்றுகளோடு. புல்கி - சேர்ந்து. மனை சூழ். கவின் ஆர் - மருதத்திணையின் அழகுமிக்க கலிக்காமூர். திணை மயக்கம். என்று உணர். ஊழியும் - சூரியனை முதன் முதலின் அறிந்த கற்பகாலத்திலும் வாழும் எந்தை பெருமான். உலகம் படைக்கப்பட்டநாள் தொட்டுள்ள தலம் அது என்பது கூறியவாறு. ஏத்தி நின்று உணர்வாரை நினையாதவர் நீசர். இங்கே கொடியவரென்னும் பொருட்டு.

5. வான் இடை - ஆகாயத்தில். மதியை மாடம். தீண்ட - அளாவ. மருங்கே - பக்கத்திலே. கடல் ஓதம் - கடல் திரைகள் (மோத). கான் - கடற்கரைச் சோலை. கண்டல் - தாழைகள். வாழும் - செழிக்கும். கழிசூழ் கலிக்காமூர். அன்பு தந்த நலம் - பேருதவி. அமரர் தொழுது ஏத்த:- காரியப்பொருளில் வந்த வினையெச்சம்.

6. துறை - கடல் துறை. கேதகை - தாழை. வாசம் - மகரந்தத்தை (வாசம் - காரிய ஆகு பெயர்) சூழ்வான் - தன் உடல் முழுதும் பூசிக்

மறைவள ரும்பொரு ளாயினானை
மனத்தா னினைந்தேத்த
நிறைவள ரும்புக ழெய்தும்வாதை
நினையா வினைபோமே. 6

கோலநன் மேனியின் மாதர்மைந்தர்
கொணர்மங் கலியத்திற்
காலமும் பொய்க்கினுந் தாம்வழுவா
தியற்றுங் கலிக்காழூர்
ஞாலமுந் தீவளி ஞாயிருய
நம்பன் கழலேத்தி
ஓலமி டாதவ ரூழியென்று
முணர்வைத் துறந்தாரே. 7

கொள்வதன் பொருட்டு. மலி - மிக வீசுகின்ற தென்றற் காற்றோடு. கறை வளரும் - மிகக் கருமையயுடைய கடல். ஓதம் - அலைகள். கலிக்கும் - ஆரவாரிக்கும். மறை வளரும் - வேதத்தில் எவரினும் எடுத்து வற்புறுத்தப்படும் பொருள் ஆயினானை நினைந்து ஏத்த. நிறை (புகழ்) வளரும் புகழ் எய்தும். வாதை - வாதனுமலம். நினையா - நம்மையடைய நினையமாட்டா. வினைகளும் போம்.

7. மாதரும், மைந்தரும். கொணர் - பூசித்தற்குக் கொணர்ந்த. மாங்கலியத்தில் வழிபடற் குரிய சிறந்த பொருள்களால் கால மழை முதலியன பொய்த்தாலும் தமது பூசை சிறிதும் குறையாதபடிப் பூசிக்கும் கலிக்காழூர். சிவன் - மங்கலகரமானவன். ஆகவே அவனைச் சேர்ந்த பொருள்களும், அவனுக்குஉரிய பொருள்களும் மங்களகரமாம். ஆகலால் மாங்கலியம் என்பதற்கு - சிவனைப் பூசித்தற்குரிய பொருள்கள் என்று பொருள். காரணப்பெயர். ஞாலம் - நிலம். வளி - காற்று. ஞாயிறும் ஆய என உம்மையைப் பிரித்துக் கூட்டுக, அது எதிரது தழுவிய எச்ச உம்மையாதலால் அட்டமூர்த்தங்களுள் ஏனையவும் கொள்ளப்படும். அவை :- வான், நீர் மதி, உயிர் என்பன. ஓலமிடுதல் - "ஆரூரா என் றென்றே யலறா நில்லே" "கற்றுமன மெனக் கதறிப் பதறியும்" என்றபடி செய்தல், ஓலமிடாதவர் ஊழிகாலம் வாழ்ந்தாலும் சிவஞானம் கைவரப் பெறுதவர் ஆவர் என்பது ஈற்றடியின் கருத்து. உணர்வு - சிவஞானம்.

ஊரர வந்தலை நீண்முடியா
    ளொலிநீ ருலகாண்டு
காரர வக்கடல் சூழவாழும்
    பதியாங் கலிக்காழூர்
தேரர வல்குலம் பேதையஞ்சத்
    திருந்து வரைபேர்த்தான்
ஆரர வம்பட வைத்தபாத
    முடையா னிடமாமே. 8

அருவரை யேந்திய மாலுமற்றை
    யலர்மே லுறைவானும்
இருவரு மஞ்ச வெரியுருவா
    யெழுந்தான் கலிக்காழூர்
ஒருவரை யான்மகள் பாகன்றன்னை
    யுணர்வாற் றொழுதேத்தத்
திருமரு வுஞ்சிதை வில்லைச்செம்மைத்
    தேசுண் டவர்பாலே. 9

மாசு பிறக்கிய மேனியாரு
    மருவுந் துவராடை
மீசு பிறக்கிய மெய்யினாரு
    மறியா ரவர்தோற்றங்
காசினி நீர்த்திரண் மண்டியெங்கும்
    வளமார் கலிக்காழூர்
ஈசனை யெந்தைபி ரானையேத்தி
    நினைவார் வினைபோமே. 10

8. ஆள்பவருக்கு முடி இன்றியமையாது வேண்டப்படுதலின் ஊரும் பாம்பைத் தலையிற் சுற்றிய முடியால் உலகாண்டு என்றார். "உலகாண்டு" என்பது "மண்ணுலகம் விண்ணுலகம் உம்மதே ஆட்சி" ஆர் அரவம்பட - மிகக் கதற வைத்த பாதம் உடையான்.

9. வரை - கோவர்த்தன மலை. ஒரு - ஒப்பற்ற. செம்மை - முத்தி. தேசு - சிவஞானம். உண்டு - உளதாகும்.

10. மாசு - அழுக்கை. பிறக்கிய - மிகுவித்த. மேனியார் - சமணர் மீசு (மீது) - மேல். பிறக்கிய - விளங்குவித்த. போர்த்த மெய்யினார் - பவுத்தர். பிறங்கிய - பிறக்கிய என ஈரிடத்தும் பிறவினை. மீசு, மீது

ஆழியு ணஞ்சமு தாரவுண்டன்
றமரர்க் கமுதுண்ண
ஊழிதொ றும்முள ராவளித்தா
னுலகத் துயர்கின்ற
காழியுண் ஞானசம் பந்தன்சொன்ன
தமிழாற் கலிக்காழூர்
வாழி யெம்மானை வணங்கியேத்த
மருவா பிணிதானே. 11

திருச்சிற்றம்பலம்

என்பதன் மரூஉ. போலியெனினுமாம். காசினி-பூமி. நீர்த்திரள் - நீர்ப் பெருக்கு.

11. அமுதுண்ணவும் (அதனால்) ஊழிதோறும் உளரா(க) - பல ஊழிகள்தோறும் சாவாமலிருக்கவும் அமரர்க்கு அளித்தான் - (நஞ்சு அமுது ஆர உண்டு) தேவர்களுக்கு அருள் புரிந்தவன். பிணி - உயிரைப்பற்றி நிற்பனவாகிய மலங்கள். மருவா.

சரத மணமலி பரிசம் வருவன
தளர்வில் புகலியர் அதிபன் அதிதரு
வரதன் அணிதமிழ் விரகன் மிகுபுகழ்
மருவு சுருதிநன் மலையின் அமர்தரு
விரத முடையைநின் இடையின் அவள்மனம்
விரைசெய் குழலியை அணைவ தரிதென
விரத மழிதர வருதன் முனம்இனி
எளிய தொருவகை கருது மலையனே.

அயன்நெடிய மாலும்அவ ரறிவரிய தாணுவரன்
அருளினொடு நீடவனி யிடர்முழுது போயகல
வயலணிதென் வீழிமிழ லையின்நிலவு காசின்மலி
மழைபொழியு மானகுண மதுரன்மதி தோய்கனக
செயநிலவு மாடமதில் புடைதழுவு வாசமலி
செறிபொழில் சுலாவிவளர் சிரபுரசு நாதன்முதிர்
பயன்நிலவு ஞானதமிழ் விரகன்மறை ஞானமுணர்
பரமகுரு நாதன்மிகு பரசமய கோளரியே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 106 திரு வலஞ்சுழி

364 பதிகவரலாறு

காழிப் பெரியோராகிய ஞானபோனகர், திருவலஞ்சுழி உடையவர் சேவடியில் பேராதரவுடன் பணிந்தெழுந்து பரவிப் பாடியது இத் திருப் பதிகம்.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பள்ளம தாய படர்சடைமேற்
பயிலுந் திரைக்கங்கை
வெள்ளம தார விரும்பிநின்ற
விகிர்தன் விடையேறும்
வள்ளல் வலஞ்சுழி வாணனென்று
மருவி நினைந்தேத்தி
உள்ள முருக வுணருமின்க
ளுறுநோ யடையாவே. 1

காரணி வெள்ளை மதியஞ்சூடிக்
கமழ்புன் சடைதன்மேல்
தாரணி கொன்றையுந் தண்ணெருக்குந்
தழைய நுழைவித்து
வாரணி கொங்கைநல் லாள்தனொடும்
வலஞ்சுழி மேவியவர்
ஊரணி பெய்பலி கொண்டுகந்த
வுவகை யறியோமே. 2

1. பள்ளம் போன்ற சடைமீது கங்கைப் பெருக்கு தங்க விரும்பி நின்ற, விகிர்தன் - வேறுபட்ட தன்மையையுடையவன். தண்ணீர் தேங்கி நிற்குமிடம் பள்ளம் ஆகையினால், சடையைப் பள்ளம் என்றார். வள்ளல் வலஞ்சுழியில் (வாழ்நன் என்பதன் மரூஉ வாணன்) வாழுபவன் என்று அங்கேபோய்ச் சேர்ந்து, நினைந்து, ஏத்தி உள்ளம் உருக உணருமின்கள்.

2. கார் அணி - மேகத்துக்கு அழகுசெய்கின்ற. வெள்ளை - வெண்மையான். தே கமழ் - இயற்கையாக மணம் வீசுகின்ற. புன்சடை

பொன்னிய லுந்திரு மேனிதன்மேற்
புரிநூல் பொலிவித்து
மின்னிய லுஞ்சடை தாழவேழ
வுரிபோர்த் தரவாட
மன்னிய மாமறை யோர்கள்போற்றும்
வலஞ்சுழி வாணர்தம்மேல்
உன்னிய சிந்தையி னீங்ககில்லார்க்
குயர்வாம் பிணிபோமே. 3

விடையொரு பாலொரு பால்விரும்பு
மெல்லியல் புல்கியதோர்
சடையொரு பாலொரு பாலிடங்கொள்
தாழ்குழல் போற்றிசைப்ப
நடையொரு பாலொரு பால்சிலம்பு
நாளும் வலஞ்சுழிசேர்
அடையொரு பாலடை யாதசெய்யுஞ்
செய்கை யறியோமே. 4

தழைய - மகாதேவனாகிய சிவன் அணியப்பெறுதலால் என்றும் வாடாத தன்மையுற. நுழைவித்து - செருகி, ந(ல்)லாள் தன்னோடும் வலஞ்சுழி மேவியவர். ஊர் அணி - வரிசையான ஊர்கள். " இன்னமை வேண் டின் இரவு எழுக " என்பது துன்புறுதற்குரிய பலிகொண்டே மகிழ்ச்சி யுறுவராளுல் அவர் செய்கை சிற்றறிவோம் எங்ஙனம் அறிவோம் என்பார், பெய்பலி கொண்டுகந்த உவகையறியோமே என்றார்.

3. மின் இயலும் - ஒளி பொருந்திய, சடை. தாழ - தொங்க. அரவு ஆட வலஞ்சுழிவாணராயிருப்பவர் என்க. உயர்வு ஆம் - முத்தி எய்தும். உயர்வு ஆகுபெயர். உன்னிய சிந்தையின் நீங்ககில்லார் என்றது "ஓயாதே உள்குவார்" என்ற கருத்து (திருவாசகம்).

4. விடை ஒருபால் - இடபம் ஒருபுறம், ஒருபால்.............. மெல்லியல் - ஒருபுறம் அம்பிகை. மெல்லியல் புல்கியதோர் சடை - கங்காதேவி தங்கியதாகிய சடை. ஒருபால் (மெல்லியல் என்ற தொடரை மீளவும் கூட்டிப் பொருள்க " பாதமலர் சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை " என்னும் திருவாசகத்திற்போல. இடம் ஒருபால் கொள் குழல் என்று கூட்டி இடப்பக்கமாகிய ஒருபால் பொருந்திய குழல் என்க நடை ஒருபால் - ஏறுபோற் பீடுநடை நடக்கும் திருவடி ஒருபால். நடை - காரிய ஆகுபெயர். சிலம்பு ஒருபால் - சிலம்பு அணிந்த

கையம ரும்மழு நாகம்வீணை
கலைமான் மறியேந்தி
மெய்யம ரும்பொடிப் பூசிவீசுங்
குழையார் தருதோடும்
பையம ரும்மர வாடவாடும்
படர்சடை யார்க்கிடமாம்
மையம ரும்பொழில் சூழும்வேலி
வலஞ்சுழி மாநகரே. 5

தண்டொடு சூலந் தழையவேந்தித்
தைய லொருபாகம்
கண்டிடு பெய்பலி பேணிநாணுர்
கரியி னுரிதோலர்
வண்டிடு மொய்பொழில் சூழ்ந்தமாட
வலஞ்சுழி மன்னியவர்
தொண்டொடு கூடித் துதைந்துநின்ற
தொடர்பைத் தொடர்வோமே. 6

திருவடி ஒருபால். சிலம்பு - தானி ஆகு பெயர். ஒருபால் - வேறு ஓரிடத்தும். அடையாத - இல்லாததாகிய. அடை(வு) - முறைமையையும். (அடை - விகுதிபுணர்ந்துகெட்ட பண்புப் பெயராக). செய்யும் செய்கை - பொருந்தாதன செய்யும் செய்கையும். சிற்றறிவுடையேம் எங்ஙனம் என்பது ஈற்றடியின் கருத்து.

5 கையின்கண் விரும்பத்தக்க, நாகம், வீணை, கலைமான் கன்று, இவற்றையேந்தி, மெய் - உடம்பில். அமர்தல் - விரும்புதல். வீசும் - ஒளியை வீசுகின்ற (எனச் செயப்படுபொருள் வருவிக்க) குழையும். ஆர் தரு - பொருந்திய, தோடும், அரவும் ஆடும்படி, திருக்கூத்தாடும் சடையார்க்கிடம். மை - கருமை. பொழில் வேலியாகச் சூழும் வலஞ்சுழி.

6. தழைய - ஒளிமிக. ஒருபாகம் கண்டு - ஒருபால் குடிகொண்டு. இடுதல் - போடுதல். பெய்தல் - வார்த்தல்; எனவே இட்டும், வார்த்தும் ஈயும் பிச்சை என்பது இடுபெய்பலி என்பதன் பொருளாகக் கொள்க. தொண்டு - தொண்டர். தொடர்பைத் தொடர்வோம் - பின்பற்றுவோம்.

கல்லிய லும்மலை யங்கைநீங்க
வளைத்து வளையாதார்
சொல்லிய லும்மதின் மூன்றுஞ்செற்ற
சுடரா னிடர்நீங்க
மல்லிய லுந்திர டோளெம்மாதி
வலஞ்சுழி மாநகரே
புல்கிய வேந்தனைப் புல்கியேத்தி
யிருப்பவர் புண்ணியரே. 7

வெஞ்சின வாளரக்கன் வரையை
விறலா லெடுத்தான்றோள்
அஞ்சுமொ ராறிரு நான்குமொன்று
மடர்த்தா ரழகாய
நஞ்சிருள் கண்டத்து நாதரென்று
நணுகு மிடம்போலும்
மஞ்சுல வும்பொழில் வண்டுகெண்டும்
வலஞ்சுழி மாநகரே. 8

7. கல் இயலும் மலை - கல்லின் தன்மை பொருந்திய மலை, மேரு. நீங்க - (கல்லின் தன்மை) வளையாமை நீங்க. அம்கை - அழகியகையால், வளைத்து. வளையாதார் - செருக்குற்ற திரிபுரத்தசுரர். சொல் இயலும் - பழிச்சொல்லுக்கு இடமாகிய, மதில். செற்ற - அழித்த. சுடரான் - ஒளிவடி வானவன். இடர் நீங்க - அடியாருக்கு இடர் நீங்கும் பொருட்டு. மல் இயலும் - மற்போர்ப் பயின்ற. திரள் தோள் - திரண்ட தோளையுடைய. எம் ஆதி - எமது முதல்வனும், திருவலஞ்சுழியாகிய பெரிய தலத்தையே. புல்கிய - இடமாகக் கொண்டருளிய. வேந்தனை - அரசனுமாகிய சிவ பெருமானை. ஆன்மாக்கள் குடிகளாக அவற்றை ஆளுந் தன்மையால் இறைவனை ' வேந்தன் ' என்றார். " வேந்தாகி விண்ணவர்க்கும் மண் ணவர்க்கும் நெறிகாட்டும் விகிர்தனாகி " என்றார் முன்னும். (திருமுறை பதிகம் 130. பாட்டு 6.) " அரைசே போற்றி " என்றார் திருவாசகத்

8. அரக்கன் தோள்; அஞ்சு, ஓர் ஆறு, இருநான்கும், ஒன்றும் அடர்த்தவர் - (5 × 6 × 8 × 1) இருபதையும் நெருக்கியவர். பொழில் வண்டு கெண்டும் - சோலையில் உள்ள மலர்களில் வண்டுகள் கால் விரலால் ஊரும் வலஞ்சுழி.

ஏடிய னான்முகன் சீர்நெடுமா
லெனநின் றவர்காணார்
கூடிய கூரெரி யாய்நிமிர்ந்த
குழக ருலகேத்த
வாடிய வெண்டலை கையிலேந்தி
வலஞ்சுழி மேயவெம்மான்
பாடிய நான்மறை யாளர்செய்யுஞ்
சரிதை பலபலவே. 9

குண்டரும் புத்தருங் கூறையின்றிக்
குழுவா ருரைநீத்துத்
தொண்டருந் தன்றொழில் பேணநின்ற
கழலா னழலாடி
வண்டம ரும்பொழின் மல்குபொன்னி
வலஞ்சுழி வாணனெம்மான்
பண்டொரு வேள்வி முனிந்துசெற்ற
பரிசே பகர்வோமே. 10

9. ஏடு இயல் நான்முகன் - இதழ்களை உடைய தாமரை மலரில் தங்கும் பிரமன். ஏடு - பூவிதழ். அது மலருக்கு ஆனது சினை ஆகு பெயர். பொதுப்பெயர், சிறப்புப்பெயர்க்கு வரும் முறையால் தாமரை மலருக்காயிற்று. காணார் - காணாதவர்களாக, எரியாய் நிகழ்ந்த குழகர். வாடிய வெண் தலை - உலர்ந்த தலையோடு, பிச்சைப் பாத்திரம். சரிதை - திருவிளையாடல்கள். காணார் - முற்றெச்சம்.

10. குண்டர் - தீவினைக்கஞ்சாதவர்; ஆததாயிகள் என்பர் வட நூலார். கறை இன்றிக் குழுவார் குண்டர் எனக் கூட்டுக. ஆடையின்றிக் கூட்டமாயிருப்பவர் என்பது பொருள். தொண்டு அரும் தன் தொழில் பேண - தொண்டர்கள் பிறர் செய்தற்கரிய தனது பணிவிடைகளைப் போற்றிச்செய்ய. தொண்டு - தொண்டர்; பண்பாகுபெயர். வலஞ்சுழிவாணர் - வலஞ்சுழியில் வாழ்பவர். பண்டு - முற்காலத்தில். ஒரு வேள்வி - தக்கனுடைய வேள்வியை. முனிந்து - கோபித்து. செற்ற - அழித்த. பரிசே - தன்மையையே. பகர்வோம் - புகழ்ந்து பேசுவோமாக. திருவாசகத் திருவுந்தியார் இருபது பாடல்களுள் பதின்மூன்று பாடல்கள் தக்கன் வேள்வி தகர்த்தமையைக் கூறுவது காண்க,

வாழியெம் மானெனக் கெந்தைமேய
வலஞ்சுழி மாநகர்மேல்
காழியுண் ஞானசம் பந்தன்சொன்ன
கருத்தின் றமிழ்மாலை
ஆழியிவ் வையகத் தேத்தவல்லா
ரவர்க்குந் தமருக்குந்
ஊழி யொருபெரு மின்பமோர்க்கு
முருவும் முயர்வாமே. 11

திருச்சிற்றம்பலம்

11. கருத்து இன்தமிழ் மாலை - சிறந்த பயனைத் தரும் கருத்துக்கள் அடங்கிய தமிழ்மாலை. தமிழ்மாலை ஏத்தவல்லார்க்கும் அவர் சுற்றத்தாருக் கும் உருவும் உயர்வாம். (புகழுடம்பும் உயர்வுடையும்) உயர்ந்த புகழ் அடைவர் என்பது கருத்து. ஏத்தவல்லாரன்றி அவர் தமரும் உயர் வடைவரென்றது - " மூவேழ் சுற்றம் முரனுறுநரகிடை ஆழாமே அருள் அரசே போற்றி " என்ற திருவாசகத்தாலும் அறிக.

அரியாருங் கிரிநெறியெங் ஙனநீர் வந்தீர்
அழகிதினிப் பயமில்லை அந்திக்கப்பால்
தெரியாபுன் சிறுநெறிகள் எந்தம் வாழ்விச்
சிறுகுடியின் றிரவிங்கே சிரமந் தீர்ந்திச்
சுரியார்மென் குழலியொடும் விடியச் சென்று
தொகுபுகழ்சேர் திருஞான சம்பந் தன்றன்
வரியாரும் பொழிலுமெழில் மதிலுந் தோற்றும்
வயற்புகலிப் பதிஇனிது மருவ லாமே.

ஆமாண்பொன் கூட்டகத்த அஞ்சொல்இளம் பைங்கிளியே
பாமாலை யாழ்முரியப் பாணழியப் பண்டருள்செய்
மாமான சுந்தரன்வண் சம்பந்த மாமுனிஎங்
கோமான்றன் புகழொருகால் இன்புறநீ கூறுயே
கொச்சையர்கோன் றன்புகழ்யான் இன்புறநீ கூறுயே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 107 திரு நாரையூர்

365 **பதிகவரலாறு**

பதிகம் 360 பார்க்க.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கடலிடை வெங்கடு நஞ்சமுண்ட
 கடவுள் விடையேறி
உடலிடை யிற்பொடிப் பூசவல்லா
 னுமையோ டொருபாகன்
அடலிடை யிற்சிலை தாங்கியெய்த
 வம்மா னடியார்மேல்
நடலைவி னைத்தொகை தீர்த்துகந்தானிட
 நாரை யூர்தானே. 1

விண்ணின்மின் னேர்மதி துத்திநாகம்
 விரிபூ மலர்க்கொன்றை
பெண்ணின்முன் னேமிக வைத்துகந்த
 பெருமா னெரியாடி

1. கடலிடை நஞ்சம் - கடலில் தோன்றிய நஞ்சம். உடலிடையில் - உடம்பில், பொடிபூசவல்லான். " நீறணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும் எழிலுடைமையான் அக்கோலம் தொழுவார் உள்ளத்து நீங்காது நிற்ற லான் ஆண்டுள்ளவினை நீறு ஆம் " என்னும் திருக்கோவையாருரை (118) இங்குக் கொள்ளத்தக்கது. நடலை வினைத்தொகை - துன்பம் தரும் கன்மங்களின் கூட்டம். நடலை இப்பொருட்டாதலை. " நடலை வாழ்வு கொண்டு என்செய்தீர் நாணிலீர் " என்னும் அப்பர் பெருமான் திருவாக் காலும் (திருக்குறுந்தொகை பதி. 204. பா. 4.) அறிக. பலதிறத்தான் வந்து தொகுதலின் கன்மம் வினைத்தொகை எனப்பட்டது.

2. மதி - பிறையையும். துத்திநாகம் - படப்புள்ளிகளையுடைய பாம்பையும். விரிபூமலர்க் கொன்றை - விரிந்த பொலிவையுடைய கொன்றை மலரையும். பெண்ணின் முன்னே - கங்காதேவிக்கு முன். (சடையில்) வைத்து - அணிந்து. மிக உகந்த - மிகவும் மகிழ்ந்த

நண்ணிய தன்னடி யார்களோடுந்
திருநாரை யூரானென்
றெண்ணுமி னும்வினை போகும்வண்ண
மிறைஞ்சுந் நிறைவாமே. 2

தோடொரு காதொரு காதுசேர்ந்த
குழையா னிழைதோன்றும்
பீடொரு கால்பிரி யாதுநின்ற
பிறையான் மறையோதி
நாடொரு காலமுஞ் சேரநின்றதிரு
நாரை யூரானைப்
பாடுமி னீர்பழி போகும்வண்ணம்
பயிலு முயர்வாமே. 3

வெண்ணில வஞ்சடை சேரவைத்து
விளங்குந் தலையேந்திப்
பெண்ணி லமர்ந்தொரு கூறதாய
பெருமா னருளார்ந்த
அண்ணன் மன்னியுறை கோயிலாகு
மணிநாரை யூர்தன்னை
நண்ணல மர்ந்துறை வாக்குமின்க
ணடலை கரிசறுமே. 4

பெருமான். இறைஞ்சும் நிறைவாமே - வணங்குங்கள் இன்பம் குறை யாது வரும். இறைஞ்சும் - பன்மை ஏவல் வினைமுற்று.

3. தோடு ஒருகாது ஒருகாது சேர்ந்த குழையான் - இடக்காதில் தோடும், வலக்காதில் குழையும் அணிந்தவன். பீடு ஒருகால் பிரியாது நின்ற - ஒருகாலத்திலும் பெருமை நீங்காமல் நிலைத்து நின்ற, பிறையான். பழிபோகும் வண்ணம் பயிலும் - பழி முதலிய தீமைகள் நீங்குமாறு இடை விடாது போற்றுங்கள்.

4. நிலவம் - நிலவு. அம்சாரியை. சேர - பொருந்த. திருநாரையூர் தன்னை, நண்ணல் அமர்ந்து - விரும்பி அடைந்து. (அமர்தல் - விரும்பல்) உறவு ஆக்குமின்கள் - அன்பைச் செலுத்துங்கள். உறவு - அன்பு “உறவு கோல் நட்டு உணர்வு கயிற்றினால் முறுகவாங்கிக் கடைய குமே” என்ற அப்பர்பெருமான் திருவாக்காலறிக.

வானமர் தீவளி நீர்நிலனுய்
வழங்கும் பழியாகும்
ஊனம ரின்னுயிர் தீங்குகுற்ற
முறைவாற் பிறிதின்றி
நானம ரும்பொரு ளாகிநின்ருன்
றிருநாரை யூரெந்தை
கோனவ னைக்குறு கக்குறுகா
கொடுவல் வினைதானே. 5

கொக்கிற குங்குளிர் சென்னிமத்தங்
குலாய மலர்சூடி
அக்கர வோடரை யார்த்துகந்த
வழகன் குழகாக
நக்கம ருந்திரு மேனியாளன்றிரு
நாரை யூர்மேவிப்
புக்கம ரும்மனத் தோர்கடம்மைப்
புணரும் புகருனே. 6

5. வான் - ஆகாயமும். அமர் - அதன்கண் அடங்கும், தீ வளி முதலியவையுமாகிய பஞ்சபூத சம்பந்தமாய்த் திரிகின்ற. பழியாகும் ஊன் - பழிக்கு இடமாகிய உடம்பில். அமர் - தங்குகிற. இன் உயிர் - இனிய உயிர். தீங்கு - தீமைதருவதாகிய. குற்றம் உறைவு ஆல் - பாவத்திற்கு இடமாயிருத்தலினுல். பிறிது இன்றி - (அதின் நீங்கி, நன்மைபெறும் வழி) வேறென்றும் இன்மையால். நான் - அடியேன். அமரும் - விரும்பி அடையும். பொருள் ஆகி நின்றுன் - பற்றுக்கோடாகிய பொருளாகி நின்றவன். (திருநாரையூரெந்தை). கோன் - அவனே தலைவன். அவனைக் குறுக - அவனைச் சரணம் அடைந்தால். வல்வினை - முற்கூறிய தீமைகளும், அவற்றின் காரணமாகிய பாவமும், அவற்றிற்கு ஏதுவாகிய வலிய கன்மமலங்களும். குறுகா - நம்மைவந்தடையமாட்டா.

6. சென்னி - தலையின்கண். கொக்கு இறகு - கொக்கின் இறகும். குளிர் மத்தம் - குளிர்கின்ற பொன் ஊமத்தையின். குலாய - செழித்த. மலர் - மலரும். (உம்மையை மேலுங் கூட்டுக). சிவபெருமான் கொக்கின் இறகு அணிவர் என்பதைத் திருக்கோவையாரில் காண்க. அரை ஆர்த்து - இடுப்பில் கட்டி. உகந்த - விரும்பிய. குழகு ஆக - இளமையோடு. நக்கு அமரும் திருமேனி ஆளன் - ஆடை இல்லாமையை விரும்பிய திருவுடம்பை உடையுவன். நக்கு - இது நக்கம் என்பதன்

ஊழியு மின்பமுங் காலமாகி
யுயருந் தவமாகி
ஏழிசை யின்பொருள் வாழும்வாழ்க்கை
வினையின் புணர்ப்பாகி
நாழிகை யும்பல ஞாயிறுகிநளிர்
நாரை யூர்தன்னில்
வாழியர் மேதகு மைந்தர்செய்யும்
வகையின் விளைவாமே. 7

கூசமிலா தரக்கன் வரையைக்
குலுங்க வெடுத்தான்றேள்
நாசம தாகி யிறவடர்த்த
விரலான் கரவாதார்
பேசவி யப்பொடு பேணநின்ற
பெரியோ னிடம்போலும்
தேசமு றப்புகழ் செம்மைபெற்ற
திருநாரை யூர்தானே. 8

கடைக்குறை. நக்கம் வடசொல். மேவிப்புக்கு - போய்ச்சேர்ந்து. புகல் - திருவருட்சத்தி பதிதல். புணரும் - கூடும்.

7. ஊழியும் - பெருங்கால எல்லையாகிய பிரளயகாலமும். காலம் - கார் முதலிய பருவகாலமும். ஏழு இசையின் பொருளாகி - ஏழிசையின் பயனாகியும். வாழும் வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி - உலக வாழ்க்கையில் நிகழும் வினைகளின் சேர்க்கையாகி. நாழிகையும் - சிறு கால எல்லையாகிய நாழிகையும். பல ஞாயிறு ஆகி - பல தினங்களும் ஆகி. (இவைகளெல்லாம்). நளிர் - குளிர்ச்சிபொருந்திய. மைந்தர் செய்யும் - சிவபெருமான் செய்யும். வகையின் விளைவாம் - திருவிளையாடல்களின் வகைகளினால் விளைந்த விளைவேயாகும். இங்கே ஞாயிறு நாள் என்னப் பட்டது இலக்கணை.

8. கூசம் - கூசுதல் (அம் - தொழிற்பெயர் விகுதி). இற - ஒழிய. கரவாதார் - வஞ்சமற்ற அடியார்கள்,

பூமக னும்மவ னைப்பயந்த
புயலார் நிறத்தானும்
ஆமள வுந்திரிந் தேத்திக்காண்ட
லறிதற் கரியானூர்
பாமரு வுங்குணத் தோர்களீண் டிப்
பலவும் பணிசெய்யும்
தேமரு வுந்திகழ் சோலைசூழ்ந்த
திருநாரை யூர்தானே 9

வெற்றரை யாகிய வேடங்காட்டித்
திரிவார் துவராடை
உற்றரை யோர்க ளுரைக்குஞ்சொல்லை
யுணரா தெழுமின்கள்
குற்றமி லாததோர் கொள்கையெம்மான்
குழகன் றொழிலாரப்
பெற்றர வாட்டிவரும் பெருமான்றிரை
நாரை யூர்சேர்வே 10

9. பூமகனும் - பிரமனும். அவனைப் பயந்த - அவனைப் பெற்ற. புயலார் நிறத்தான் - மேகம் போன்ற நிறத்தை உடைய திருமால். நாசமதாகி இற - அழிந்து ஒழிய. அடர்த்த - நெருக்கிய. ஆம் அளவும் - தம்மால் இயன்றவரை முற்றிலும். பாமருவும் குணத்தோர் - நீதிநூல்களில் சொல்லிய நற்குண நற்செய்கை உடையவர்கள். ஈண்டி - கூடி.

10. வெற்றரையாகிய வேடம் - நிர்வாணக்கோலம். காட்டித் திரிபவர் சமணர். துவர் ஆடை உற்ற அரையோர்கள் - பௌத்தர்கள். உற்றரை - உற்ற + அரை, பெயரெச்ச விகுதி அகரம் தொக்கது. (தொழில் ஆரப்பெற்று) அரவு ஆட்டிவரும் பெருமான் என்பது "பச்சைத்தாள் அரவாட்டீ" என்ற திருவாசகத்திலும் வருவது. சிவபெருமான் பாம்பை ஆட்டிவரும் தன்மை தன் அடியார் அஞ்சத்தக்க வினைகளைப்போக்கும் தொழிலையுடையவன் தானேயென்பது அறிவித்தற்கு. அக் கருத்தே தொழில் ஆரப்பெற்றும் என்பதாற் குறித்தபொருளாம். தொழில் - தான் அடியார்க்குச் செய்யும் அருள். ஆரப்பெற்று - அதை நிறைவேற்றி.

பாடிய லுந்திரை சூழ்புக
 திருஞான சம்பந்தன்
சேடிய லும்புக ழோங்குசெம்மைத்
 திருநாரை யூரான்மேல்
பாடிய தண்டமிழ் மாலைபத்தும்
 பரவித் திரிந்தாக
வாடிய சிந்தையி னார்க்குநீங்கு
 மவலக் கடல்தானே. 11

திருச்சிற்றம்பலம்

11. பாடு இயலும் - ஓசை உடைய. திரைசூழ் - கடல் சூழ்ந்த. சேடு இயலும் - பெருமை பொருந்திய.

கூற தாகமெய் யடிமை தான்எனை யுடைய கொச்சைய ரதிபதி
வீற தார்தமிழ் விரகன் மேதகு புகழி னான்இவன் மிகுவனச்
சேற தார்தரு திரள்க ளைக்கன செழுமுலைக்குரி யவர்சினத்
தேறு தானிது தழுவி னரென இடிகொள் மாமுர சதிருமே.

சதுரன் புகலியர் அதிபன்கூர்
 தவசுந் தரகவு ணியர்தஞ்சீர்
முதல்வன் புகலியர் அதிபன்தாள்
 முறைவந் தடையலர் நகரம்போல்
எதிர்வந் தனர்விறல் கெடவெம்போர்
 எரிவெங் கணைசொரி யுரிமின்கார்
அதிர்கின் றனவிது பருவஞ்சே
 ரலர்தம் பதிமதில் இடிமின்னே.

மின்னு மாகத் தெழிலி யுஞ்சேர்
 மிகுபொன் மாடப் புகலி நாதன்
துன்னு ஞானத் தெம்பி ரான்மெய்த்
 தொங்கைசெய் பாடற் பதிகம் அன்னுள்
பொன்னும் மாநல் தரள முந்தன்
 பொருக யற்கண் டனநி றைத்தாள்
இன்னும் ஏகிப் பொருள் படைப்பான்
 எங்கு னேநான் எண்ணு மாறே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 108 திரு ஆலவாய்

366 பதிகவரலாறு

வையகம் உய்யவந்த வள்ளலார் தலைமேற் குவித்த கையும் அக மலர்ச்சி காட்டுங் கண்ணும் உடைய திருநீற்றுத்தொண்டர் வெள்ளம்சூழத் திருவாலவாயுள் புகுந்து, நோக்கத்தகாத சமணரை நோக்கி வாதுசெய்ய, தேவரீர்க்குத் திருவுள்ளமோ என்று அருளை வினவி, மெய்ம்மைநோக்கி நுவன்ற தமிழ்மாலை இத் திருப்பதிகம்.

நாலடி மேல்வைப்பு பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லியமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னாயபரமனே
ஞால நின்புக ழேவேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே 1

1. வேதவேள்வி - வேதத்தையும் வேள்வியையும். நிந்தனைசெய்து உழல் - பழித்துத் திரிகின்ற. ஆதம் இல்லி - பயன்பெறுதவர்களாகிய. அமணொடு - சமணர்களோடு. ஆதம் இல்லி ஒருமைச்சொல் அமணொடு தேரரை என்ற பன்மையோடு சேர்வது வழு அமைதியால் கொள்க. 'ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப' என்பதுபோல. எல்லாச் சமயங் களிலும் சொல்லப்படும் கடவுள் சிவன் ஒருவனே ஆகவும், ஒரு சமயத்தை அழிக்கப்புகுவது அவன் திருவுள்ளத்திற்கு ஏற்குமா? என்பதை உணர்த்த "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்று வினவுகிறார். ஆயினும் சைவ நன்னெறி பரவுதல் இன்றியமையாமையின் ஞால நின்புகழே மிக வேண்டும் என வற்புறுத்தியும் வேண்டுகிறார். ஆதி - சிவபெருமானுக்குரிய பெயர்.

வைதி கத்தின் வழியொழு காதவக்
கைத வம்முடைக் காரமண் தேரரை
எய்தி வாதுசெ யத்திரு வுள்ளமே
மைதி கழ்தரு மாமணி கண்டனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே 2

மறைவ ழக்கமி லாதமா பாவிகள்
பறித லைக்கையர் பாயுடுப் பார்களை
முறிய வாதுசெ யத்திரு வுள்ளமே
மறியு லாங்கையின் மாமழு வாளனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயிலு றையுமெம் மாதியே 3

அறுத்த வங்கமா றுயின நீர்மையைக்
கறுத்த வாழமண் கையர்க ள்தம்மொடும்
செறுத்து வாதுசெயத்திரு வுள்ளமே
முறித்த வாண்மதிக் கண்ணி முதல்வனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே 4

2. வைதிகம் - வேதத்திற் சொல்லும் நெறி. கைதவம் வஞ்சனை. காரமண் - நெற்றியில் நீறு பூசாமையாலும், நீராடாமையாலும், ஒளி குன்றிய தன்மையாலும் காரமண் எனப்பட்டனர். எய்தி - நின்று.

3. மறை வழக்கம் - மறையின்படி ஒழுகுதல். வழக்கம் - தொழிற் பெயர்; நடத்தல் என்பது பொருள். பறிதலை - பறிக்கப்பட்ட தலையை உடைய. கையர் - வஞ்சகர். முறிய - தோற்க. மறி - மான் கன்று.

4. அறுத்த - வரையறுத்துக்கூறிய. அங்கம் ஆறு ஆயின நீர்மையை- வேதத்தின் அங்கங்கள் ஆறு ஆயின தன்மையை. கறுத்த - கோபித்த. (கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள என்பது தொல்காப்பியம் உரி இயல்). வாழ் அமண் கையர்கள் - வாழ்க்கையையுடைய அமணர்களாகிய கீழோர். வாழ் என்பது பகுதியே நின்று தொழிற் பெயர் உணர்த்திற்று. செறுத்து - தடுத்து. "செறுத்தோறு உடைப்பினும் செம்புனலோடு ஊடார்" என்பது நாலடியார். முறித்த - வளைத்த. கண்ணி - தலைமாலை.

அந்த ணாளர் புரியு மருமறை
சிந்தை செய்யா அருகர் திறங்களைச்
சிந்த வாதுசெ யத்திரு வுள்ளமே
வெந்த நீற தணியும் விகிர்தனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே 5

வேட்டு வேள்விசெ யும்பொரு ளைவிளி
மூட்டு சிந்தை முருட்டமண் குண்டரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே
காட்டி லானை யுரித்தவெங் கள்வனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே 6

அழல தோம்பு மருமறை யோர்திறம்
விழல தென்னு மருகர் திறத்திறம்
கழல வாதுசெ யத்திரு வுள்ளமே
தழலி லங்கு திருவுருச் சைவனே
ஞாலநின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம் மாதியே. 7

---

5. அந்தணாளர் - அந்தணர் "அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத". என்பன சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாக்கு. புரியும் - செய்கின்ற. அருமறை - அரிய வேதக்கிரியைகளை காரண ஆகுபெயர். சிந்தை செய்யா - நினைத்துப் பார்க்காத. திறங்களை - வலிமைகளை. சிந்த - சிதற.

6. வேட்டு - விரும்பி. பொருளை - காரியத்தை. விளிமூட்டு - இகழ்ச்சி செய்கின்ற. விளி இப்பொருளாதலை "கூற்றத்தைக் கையால் விளித்தற்று" என்ற திருக்குறளிற் காண்க. முருடு அமண் - வன்னெஞ்சை உடைய அமணர். முருடு - இலேசில் பிளக்க முடியாத கட்டை. "வன்பராய் முருடு ஒக்கும் என் சிந்தை" என்பது திருவாசகம். முருடு இங்குப் பண்பாகுபெயர். ஓட்டி வாது செய - வாது செய்து ஓட்ட என வினையெச்ச விகுதி மாறிக் கூட்டுக. காட்டிலானை - காட்டில் வாழும் யானை. வனசரம். ஏனைய கிரிசரம், நதிசரம் என்பன.

7. அழல் (அது) ஓம்பும் - அக்கினி காரியங்களைச் செய்துவரும். திறம் - தன்மை, விழலது - விழலின் தன்மையது; பயனற்றது. விழல்- பயனற்ற ஒரு வகைப்புல். திறத்திறம் - பலவகைப்பட்ட திறமைகள்.

நீற்று மேனிய ராயினர் மேலுற்ற
காற்றுக் கொள்ளவு நில்லா வமணரைத்
தேற்றி வாதுசெ யத்திரு வுள்ளமே
ஆற்ற வாள ரக்கற்கு மருளிணுய்
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம் மாதியே. 8

நீல மேனி யமணர் திறத்துநின்
சீலம் வாதுசெ யத்திரு வுள்ளமே
மாலு நான்முக னுங்காண் பரியதோர்
கோல மேனிய தாகிய குன்றமே
ஞாலநின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 9

அன்று முப்புரஞ் செற்ற வழகநின்
துன்று பொற்கழல் பேணு வருகரைத்
தென்ற வாதுசெ யத்திரு வுள்ளமே
கன்று சாக்கியர் காணுத் தலைவனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம் மாதியே. 10

திறம் - வகை. தன்மை "எத்திறத்து ஆசான் உவக்கும்" என்பது நன்னூல். கழல - தங்கள் சமயத்தினின்றும் விலக. சைவன் - சிவன்.

8. திருநிறு பூசியவர்மேல் பட்டு வீசும் காற்றடிக்கும் இடத்திலும் நில்லாத சமணர் என்பது முன் இரண்டடியின் கருத்து. தேற்றி - அவர்கள் பிழையைத் தெளிவித்து. அரக்கர்க்கும் - இழிவு சிறப்பும்மை. ஆற்ற - மிகவும். அருளிணுய் - அருள் புரிந்தவனே என்ற குறிப்பு தீமை செய்தவர்களுக்கும் பேரருள் புரியும் பெருங்கருணைக் கடல் ஆகையினுல் தீயவர்களாகிய அமணர் திறத்தும் அக்கருணை காட்டின் சைவம் குன்றுமே என்னும் கருத்து.

9. நீலமேனி அமணர் - மேல் உ-ஆம் பாட்டில் காரமண் என்பதற்கு உரைத்தது உரைக்க. நீலம், பச்சை, கருமை, இவற்றுள் ஒன்றை மற்ருென்ருகக் கூறுவது மரபு. திறத்து - எதிரில். நின் சீலம் - உமது சமயக் கொள்கையை. குன்றம் - நெருப்பு மலை (அண்ணுமலை) யாய் நின்றமையைக் குறிக்கிறது.

10. தென்ற. கன்று - கோபிக்கின்ற.

கூட லாலவாய்க் கோனை விடைகொண்டு
வாடன் மேனி யமணரை வாட்டிட
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தவிப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. 11

திருச்சிற்றம்பலம்

11. கூடல் ஆலவாய் - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. நான்கு மாடங்கள் கூடுதலையுடைய ஆலவாய் எனினும் ஆம். விடை கொண்டு - வாதில் வென்றழிக்க உத்தரவு பெற்றுக்கொண்டு. வாடல் மேனி அமணர் - பட்டினி நோன்பிகள் "உண்ணு நோன்பிதன்னொடும் சூளுற்று" என்பது மணிமேகலை.

மாறி லாத பொடிநீ றேறு கோல வடிவும்
வம்பு பம்பு குழலுங் துங்க கொங்கை யிணையு
மூறி ஏறு பதிகத் தோசை நேச நுகர்வு
*மொத்த சித்து நடையுஞ் சித்த பத்தி மிகையும்
வீற தேறும் வயல்சூழ் காழி ஞான பெருமான்
வென்றி துன்று கழலின் ஒன்றி நின்ற பணியுந்
தேறல் போலும் மொழியுஞ் சேல்கள் போலும் விழியுஞ்
சிந்தை கொண்ட பரிசும் நன்றிம் மங்கை தவமே.

கைதவத்தால் என்னிடைக்கு நீவந்த
தறியேனோ கலதிப் பாணா
மெய்த்தவத்தார் உயிரனைய மிகுசைவ
சிகாமணியை வேணுக் கோனைச்
செய்தவத்தால் விதிவாய்த்த செழுமலையா
ரவனுடைய செம்பொற் றிண்டோள்
எய்தவத்தால் விளிவெனக்கென் யாதுக்கு
நீபலபொய் இசைக்கின் றாயே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

* ஓத்தொசித்த நடையோ?

## 109 திருக்கயிலாயமும் – திருவானைக்காவும், திருமயேந்திரமும் – திருவாரூரும்

367 பதிகவரலாறு

சண்பை ஏந்தலார் வெண்ணாவல் ஆனைக்கா, மயேந்திரம், திருக்கயிலை, திருவாரூர் நான்கு தலத்தும் மேவிய வேதப்பொருளானாரைத் திருவானைக்காவின்கண் புகழ்ந்து பாடி, எல்லையில் இன்பம் உற்றது இத்திருப்பதிகம்,

மண்ணது வுண்டரி மலரோன்காணா
வெண்ணாவல் விரும்புமயேந்திரமும்
கண்ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணலா ரூராதி யானைக்காவே. 1

வந்துமா லயனவர் காண்பரியார்
வெந்தவெண் ணீறணி மயேந்திரமும்
கந்தவார் சடையுடைக் கயிலையாரும்
அந்தணா ரூராதி யானைக்காவே. 2

மாலயன் றேடிய மயேந்திரரும்
காலனை யுயிர்கொண்ட கயிலையாரும்
வேலைய தோங்கும்வெண் ணாவலாரும்
ஆலையா ரூராதி யானைக்காவே. 3

1. மண் அது உண்ட அரி - பூமியை உண்ட திருமால். உண்டரி - பெயரெச்சத்து விகுதி அகரம் தொகுத்தல் விகாரம். பிரம விட்டுணுக்கள் காணமுடியாத மயேந்திர மலையில் எழுந்தருளியிருப்பவரும், காட்சி மிக்க திருக்கயிலையில் எழுந்தருளியிருப்பவரும், தலைமையமைந்த திருவாரூர் முதல்வரும், ஆகிய சிவபெருமானது தலம் வெண்ணாவல் மரத்தின்கீழ் தங்க விரும்பிய திருவானைக்காவே யாகும் என்பது பொழிப்புரை. கண் என்பது கருவி ஆகுபெயர். அண்ணல் - தலைமை.

2. கந்தவார் சடை - வாசனை பொருந்திய நெடிய சடையையுடைய.

3. வேலை (அது) ஓங்கும் வெண்ணாவல் - கடல்போல் நீர் பொங்கப் பெற்ற வெண்ணாவல். பஞ்சபூதத் தலங்களில் அப்புத்தலம் ஆதலாலும்,

கருடனை யேறரி யயனோர்காணார்
வெருள்விடை யேறிய மயேந்திரரும்
கருடரு கண்டத்தெங் கயிலையாரும்
அருளனு ரூராதி யானைக்காவே. 4

மதுசூதன னுன்முகன் வணங்கரியார்
மதியது சொல்லிய மயேந்திரரும்
கதிர்முலை புல்கிய கயிலையாரும்
அதியனு ரூராதி யானைக்காவே. 5

அப்பர் அடிகள் "செழுநீர் திரளச்சென்று ஆடினேனே" எனக் கூறிய வாறு, இறைவனே நீர்வடிவாய் இருத்தலாலும், வேலையது ஓங்கும் என்று கூறப்பட்டது. ஆலை ஆரூர் - கருப்பங்கழனிகளையுடைய திருவாரூர் ஆலை என்பது தானியாகுபெயர்.

4. அரி அயனோர் காணார் - திருமால், பிரமன் முதலியோரால் காணப்படாதவராகிய. காணார் - செயப்படு பொருள் விகுதி குன்றிய முற்றெச்சம். வெருள் விடை - பகைவர் அஞ்சத்தக்க விடை, கருள்தரு கண்டத்து - கருமை பொருந்திய கழுத்தை உடைய. அருளன்-அருளையே திருமேனியாக உடையவன். அது "உருமேனி தரித்துக் கொண்ட தென்றலும் உருவிறந்த அருமேனியதுவுங் கண்டோம், அருவுரு ஆன போது, திருமேனி உபயம் பெற்றோம் செப்பிய மூன்று நந்தம், கருமேனி கழிக்கவந்த கருணையின் விளைவுகாணே" என்னும் சித்தியார் முதற் சூத்திரம் 55-ஆம் செய்யுளால் அறிக.

5. மது சூதனன் - மது என்னும் அசுரனைக் கொன்றவனாகிய திருமால்வணங்கரியார். (வணங்க × அரியார்). மதியது சொல்லிய மயேந்திரரும் - ஆகமங்களை உபதேசித்தருளிய மகேந்திர மலையில் எழுந் தருளியிருப்பவரும். அது "மன்னுமாமலை மகேந்திரமதனில் சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்" என்னும் திருவாசகம் கீர்த்தித் திருவக வலால் அறிக. கதிர் முலை புல்கிய - ஒளிபொருந்திய தனபாரங்களை உடைய உமாதேவியார் தழுவிய. அதியன் - எவர்க்கும் மேம்பட்டவ னாகிய சிவபெருமான். "யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்" என்பது திருவாசகம். அதியன், வடசொல் அடியாகப் பிறந்த பெயர்ப் பகுபதம்.

சக்கரம் வேண்டுமால் பிரமன்காணா
மிக்கவர் கயிலை மயேந்திரரும்
தக்கனைத் தலையரி தழலுருவர்
அக்கணி யவராரூ ரானைக்காவே. 6

கண்ணனு நான்முகன் காண்பரியார்
வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்
அண்ணலா ரூராதி யானைக்காவே. 7

கடல்வண்ண னுன்முகன் காண்பரியார்
தடவரை யரக்கனைத் தலைநெறித்தார்
விடமது வுண்டவெம் மயேந்திரரும்
அடல்விடையா ரூராதி யானைக்காவே. 8

ஆதிமா லயனவர் காண்பரியார்
வேதங்கள் துதிசெயு மயேந்திரரும்
காதிலோர் குழையுடைக் கயிலையாரும்
ஆதியா ரூரெந்தை யானைக்காவே. 9

6. சக்கரம் வேண்டும் மால் - சக்கராயுதத்தை வேண்டிப் பெற்ற திருமாலும். காணா - காணப்படாத. மிக்கவர் - யாவரினும் மேம்பட்டவராகிய. அக்கு அணியவர் - உருத்திராக்கங்களை அணியாகக் கொண்டவர்.

7. கண்ணன் - கரிய நிறத்தையுடைய திருமால். கிருட்டிணன் என்பதன் சிதைவு.

8. கடல் வண்ணன் - கடல்போலும் கரிய நிறத்தை உடைய திருமால். த்டவரையரக்கனைத் தலைநெரித்தார் - பெரிய கயிலைமலையின் கீழ் இராவணனைத் தலையை நெரித்தவர். அடல் விடை ஆரூர் - வலிய விடையை ஏறிய திருவாரூரரும். ஆரூர் என்பது ஆரூரர் என்னும் பொருளில் வந்துள்ளது.

9. ஆதிமால் அயன் அவர் - தொன்றுதொட்டுத் திருமால் அயன் முதலியோர், காண்பரியார். வேதங்கடுதி செயும் - வேதங்கள் × துதி செயும். ஆதி - (நான்காம் அடியில் வரும் ஆதி). முதன்மையானவர் என்னும் பொருளது.

அறிவி லமண்புத்த ரறிவுகொள்ளேல்
வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்
மறிகட லோனயன் றேடத்தானும்
அறிவரு கயிலையோ னானைக்காவே. 10

ஏனமா லயனவர் காண்பரியார்
கானமார் கயிலைநன் மயேந்திரரும்
ஆனவா ரூராதி யானைக்காவை
ஞானசம் பந்தன் றமிழ்சொல்லுமே. 11

திருச்சிற்றம்பலம்

10. வெறிய மான் கரத்து ஆரூரர் - மருண்டு நோக்குதலையுடைய மானை ஏந்திய கையையுடைய ஆரூரர். வெறிய - குறிப்புப் பெயரெச்சம். ஆரூர் - என்பதற்குமேல் எட்டாவது பாட்டுக் குறிப்புக் காண்க. மறி - மடக்கி வீசும் அலைகளையுடைய. கடலோன் - பாற்கடலில் துயில்வோனாகிய திருமால்- அறிவு அரு - அறிவதற்கரிய.

11. ஏனம் மால் - பன்றி உருவமெடுத்த திருமால். கானம் ஆர் கயிலை - சோலைகள் சூழ்ந்த கயிலை. தமிழ் சொல்லுமே - தமிழைப் பாடுவீர்களாக. பாடின் பெறலரும் பயன் பெறுவீர் என்பது குறிப்பெச்சம். பதிகக்குறிப்பு:- ஒவ்வொரு பாடலிலும் நான்கு தலங்கள் குறிக்கப்பட்டதாதலால் கூடற் சதுக்கம் என்னப்பட்டது. சதுஷ்கம் என்பது வடசொல். ஒவ்வொரு பாடலிலும் திருமாலும் பிரமனும் காணமுடியாதவர் என்று குறிக்கப்படுகிறது. திருமாலின் பல தன்மைகள் பதிகத்தில் குறிக்கப்படுகின்றன. நான்கு தலங்களையும் சொன்னபோதிலும், ஒவ்வொரு பாசுரமும் “ ஆனைக்காவே ” என்று முடிகின்றது. முதல் எட்டுப் பாடல்கள், ஆரூர் ஆதி (ஆனைக்கா) என்றே முடிகின்றன. ஒன்பதாவது பாடல் “ ஆரூர் எந்தை ” என்று முடிகின்றது. பத்தாவது பாடல் “ கயிலையோன் ஆனைக்கா ” என்று முடிகிறது. பதினோராவது பாடல் இந்நான்கு தலங்களிலும் எழுந்தருளியிருப்பவனது திருவானைக்காவை ஞானசம்பந்தன் பாடிய தமிழ் என்று வருகிறது.

# 110 திருப் பிரமபுரம்

367 பதிக வரலாறு

தாளம் பெற்ற சண்பைக் கோமான், திருத் தோணிமிசை மேவி னார் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நின்று பாடிய தமிழ் வேதத்துள் ஒன்று இத்திருப்பதிகம்.

ஈரடி பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வரமதேகொளா வுரமதேசெயும்
புரமெரித்தவன் பிரமநற்புரத்
தரனுமமே பரவுவார்கள்சீர்
விரவுநீள் புவியே. 1

சேணுலாமதில் வேணுமண்ணுளோர்
காணமன்றலார் வேணுநற்புரத்
தாணுவின்கழல் பேணுகின்றவ
ராணியொத் தவரே. 2

1. வரம் அதே கொளா - வரம் பெற்ற பயனை அடையாமல். உரம் அதே செயும் - தங்கள் வலிமைக் குரிய தீங்கையே செய்த, திரிபுரங்களை எரித்தவனாகிய பிரமபுரத்திலுள்ள சிவபெருமானின் புகழையே துதித்துப் போற்றும் அடியார்களின் பெருமை இவ்வகன்ற பூமிமுழுதும் பரவும் என்பது இப் பாட்டின் பொழிப்பு.

2. சேண் உலாம் மதில் - ஆகாயத்தை அளாவிய மதில். வேணு - விண்ணுளோர் இறங்குவதற்கு வைத்த மூங்கிலால் செய்த ஏணியைப் போல். மண்ணுளோர் காண - பூவுலகில் உள்ளோர் காணும்படி (பொருந்திய). மன்றல் ஆர் - வாசனை மிகுந்த. வேணுபுரத்தில் எழுந் தருளிய சிவபெருமானின் திருவடிகளைப் பாராட்டிப்போற்றுபவர் யாவரும் சிறந்தவராவர் என்பது பிற்பகுதியின் பொழிப்பு. பொருந்திய என ஒரு சொல் வருவிக்க. தாணு - சிவபெருமான். ஆணி - உரையாணிப் பொன்.

அகலமார்தரைப் புகலுநான்மறைக்
இகலியோர்கள்வாழ் புகலிமாநகர்ப்
பகல்செய்வோனெதிர்ச் சகலசேகர
னகிலநா யகனே. 3

துங்கமாகரி பங்கமாவடுஞ்
செங்கையானிகழ் வெங்குருத்திகழ்
அங்கணனடி தங்கையாற்றொழத்
தங்குமோ வினையே. 4

காணியொண்பொருட் கற்றவர்க்கீகை
யுடைமையோரவர் காதல்செய்யுநற்
றோணிவண்புரத் தாணியென்பவர்
தூமதி யினரே. 5

ஏந்தராவெதிர் வாய்ந்தநுண்ணிடைப்
பூந்தணோதியாள் சேர்ந்தபங்கினன்
பூந்தராய்தொழு மாந்தர்மேனிமேற்
சேர்ந்திரா வினையே. 6

3. அகலம் ஆர் - இடம் அகன்ற. தரை - பூமியிலுள்ளாரால். புகலும் - சிறப்பித்துச் சொல்லப் பெறுகின்ற. நான்மறைக்கு இகலியோர் - நான்கு வேதங்களிலும் வாதிட்டு வென்றவர். பகல் செய்வோன் - சூரியனுக்கு. எதிர் - எதிராகிய. சகலன் - கலையோடு கூடியவனாகிய சந்திரனை. சேகரன் - முடியில் அணிந்த சிவபெருமான்.

4. துங்கம் - உயர்வு. பங்கம் ஆ - துன்புறும்படி. அடும் - கொன்று தோலை உரித்த. நிகழ் - பொருந்திய. வெங்குருத்திகழ் அங்கணன் - வெங்குரு என்னும் தலத்தில் விளங்குகின்ற சிவபெருமானது.

5. காணி - நிலங்களையும். ஒண்பொருள் - நல் வழியால் ஈட்டிய பொருள்களையும், புலவர்களுக்குக் கொடை கொடுக்கும் தன்மையுடையோர் விரும்பி வாழ்கின்ற திருத்தோணி புரத்தின்கண் அரிய பொருளாய் இருப்பவனே என்று துதிப்போர் தூய சிவஞானம் படைப்பர் என்பது ஈற்றுப் பகுதியின் பொழிப்பு. ஆணி என்பதற்கு இரண்டாம் பாட்டில் உரைத்தது உரைக்க.

6. ஏந்து - படம் விரிக்கும். அரா எதிர் - பாம்பிற்கு ஒப்பு. வாய்ந்த - பொருந்திய. நுண்ணிடை - சிற்றிடையையும். பூ - பூவை யணிந்த.

சுரபுரத்தினைத் துயர்செய்தாரகன்
துஞ்சவெஞ்சினக் காளியைத்தருஞ்
சிரபுரத்துளா னென்னவல்லவர்
சித்திபெற்றவரே. 7

உறவுமாகியற் றவர்களுக்குமா
நெதிகொடுத்துநீள் புவியிலங்குசீர்ப்
புறவமாநகர்க் கிறைவனேயெனத்
தெறகிலா வினையே. 8

பண்புசேரிலங் கைக்குநாதனன்
முடிகள்பத்தையுங் கெடநெரித்தவன்
சண்பையாதியைத் தொழுமவர்களைச்
சாதியா வினையே. 9

தண் - குளிர்ந்த. ஓதியாள் - கூந்தலையும் உடைய அம்பிகை. வினை - பிணி முதலிய துன்பங்கள். மேனிமேல் சேர்ந்திரா - உடம்பைப்பற்றி நில்லா விலகிவிடும் என்பது.

7. சுரபுரத்தினை-தேவருலகை. துயர்செய்-துன்புறுத்திய (தாரகன்) அசுரர்களுக்குப் பற்றுக் கோடாயிருந்த மகிடாசுரன் ஒழியத் துர்க்கையை அம்பிகையின் அம்சத்தினின்றும் தோற்றுவித்தருளிய, சிரபுரத்திலுள்ள சிவன் என்ன அட்டமா சித்திகளும் கைகூடும். புரம் - இங்கு உலகு என்னும் பொருளில் வந்தது.

8. அற்றவர்க்கு - வறியோர்க்கு. உறவும் ஆகி - (தம் செல்வப் பெருக்கைக் கருதாது) உறவினர்போல ஆகியும். மாநெதி கொடுத்து - மிக்க செல்வத்தைக் கொடுத்து. நீள்புவி இலங்குசீர் - (இவ்வாறு உதவி புரிந்துவருந் தன்மையால்.) நெடிய பூமி முழுதும் புகழ் விளங்கும், புறவமாநகர். தெறகிலா வினை - அழிக்கவந்த வினை (தாம், அழிந்துவிடும்).

9. பண்புசேர் இலங்கைக்கு நாதன் என்றது - "எழில் செய் கூகை" என்ற சிந்தாமணியிற் போலக் கொள்க. சாதியா - துன்புறுத்தா

ஆழியங்கையிற் கொண்டமாலய
    னறிவொணாததோர் வடிவுகொண்டவன்
காழிமாநகர்க் கடவுணாமமே
    கற்றல்நற் றவமே. 10

விச்சையொன்றிலாச் சமணர்சாக்கியப்
    பிச்சர்தங்களைக் கரிசறுத்தவன்
கொச்சைமாநகர்க் கன்புசெய்பவர்
    குணங்கள் கூறுமினே. 11

கழுமலத்தினுட் கடவுள்பாதமே
    கருதுஞானசம் பந்தனின்தமிழ்
முழுதும்வல்லவர்க் கின்பமேதரு
    முக்கணெம் மிறையே. 12

திருச்சிற்றம்பலம்

10. கடவுள் நாமமே கற்றல் நல்தவம் - கடவுளின் புகழைக் கற்றலே நல்ல தவமாகும்.

11. விச்சை யொன்று இலா - மெய்யுணர்வு வரும் கல்வியறிவு ஒரு சிறிதுமில்லாத. பிச்சர் பித்தர் என்பதன் போலி. கரிசு அறுத்தவன் - தீமையாகிய வேரையறுத்தவன், அன்பு செய்பவர் குணங்கள் கூறுமின் நல்லார் குணங்களுரைப்பதுவும் நன்றேயென்றபடி.

12. திருக்கழுமலத்துள் கடவுள் பாதத்தைக் கருதிய ஞானசம்பந்தனின் தமிழ் வல்லவர்க்கு முக்கண் எம் மிறை இன்பமே தரும் என்பது இப்பாட்டின் பொருள்கோள்.

இசையை முகந்தெழு மிடறு மிதிங்கிவண்
    இடுகரணங்களின் இயல்பும் வளம்பொலி
திசைதிசை துன்றிய பொழில்சுல வுந்திகழ்
    சிரபு மன்றகு தமிழ்விர கன்பல
நசைமிகு வண்புகழ் பயிலு மதங்கிதன்
    நளிர்முலை செங்கயல் விழிநகை கண்டபின்
வசைதகு மென்குல மவைமுழு துங்கொள
    மதிவளர் சிந்தனை மயல்வரு கின்றதே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 111 திரு வீழி மிழலை

## 369 பதிக வரலாறு

சிரபுரத்து அந்தணர் மீண்டு சென்ற பின்பு, கவுணியப் பிள்ளையார், ஓங்கிய திருநாவுக்கரசரோடும் விரவிப் பெருகிய நண்புகூர மேவி இனிது உறையும் நாளில் பரவிப் பணிந்து சாத்திய தமிழ்த் தொடைமாலை இத் திருப்பதிகம்.

ஈரடி. பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வேலினேர்தரு கண்ணினாளுமை
பங்கனங்கணன் மிழலைமாநகர்
ஆலநீழலின் மேவினானடிக்
கன்பர்துன்பிலரே. 1

விளங்குநான்மறை வல்லவேதியர்
மல்குசீர்வளர் மிழலையானடி
உளங்கொள்வார்தமை யுளங்கொள்வார்வினை
யொல்லை யாசறுமே. 2

விசையினோடெழு பசையுநஞ்சினை
யசைவுசெய்தவன் மிழலைமாநகர்
இசையுமீசனை நசையின்மேவினான்
மிசைசெய்யா வினையே. 3

1. வேலின் நேர்தரு - வேலை ஒத்த.

2. நான் மறை வல்ல வேதியர் மல்குசீர் வளர்மிழலை என்பது தில்லை மூவாயிரம்; திருவீழிமிழலை ஐந்நூறு; என்னும் பழமொழிப்படி அந்தணர்கள் மிகுதியைக் குறித்ததாம். திருவிசைப்பாவில் 'ஐந்நூற்று அந்தணர் ஏத்தும் எண்ணில் பல்கோடி குணத்தர் ஏர்வீழி, இவர் நம்மை ஆளுடையாரே' என்று சேந்தனார் கூறுவதுங் கொள்க. (பாட்டு 9.) வினை ஆசு அறும் - வினை பற்று அற நீங்கும்.

3. விசையினோடு எழு - வேகமாகப் பரவிய. பசையும் நஞ்சினை - பற்றிக் கொல்லும் விடத்தை. அசைவு செய்தவன் - உண்டவன்- நசையின் மேவினால் - விருப்பத்தோடு அடைந்தால். மிசை - மிகை; ஈங்கு.

வென்றிசேர்கொடி மூடுமாமதிண்
மிழலைமாநகர் மேவிநாடொறும்
நின்றவாதிதன் னடிநினைப்பவர்
துன்பமொன் றிலரே. 4

போதகந்தனை யுரிசெய்தோன்புய
னேர்வரும்பொழின் மிழலைமாநகர்
ஆதரஞ்செய்த வடிகள்பாதம்
அலாலொர்பற் றிலமே. 5

தக்கன்வேள்வியைச் சாடினார்மணி
தொக்கமாளிகை மிழலைமேவிய
நக்கனாரடி தொழுவர்மேல்வினை
நாடொறுங் கெடுமே. 6

போரணவுமுப் புரமெரித்தவன்
பொழில்கள்சூழ்தரு மிழலைமாநகர்ச்
சேருமீசனைச் சிந்தைசெய்பவர்
தீவினை கெடுமே 7

இரக்கமிஃறொழி லரக்கனாருட
னெருக்கினான்மிகு மிழலையானடி
சிரக்கொள்பூவென வொருக்கினார்புகழ்
பரக்குநீள் புவியே. 8

4. வென்றிசேர் கொடி - வெற்றியினால் எடுத்த கொடிகள். மூடும் - வானை மூடுகின்ற. மாமதிள் - உயர்ந்த மதிலையுடைய. நாடொறும் நின்ற - என்றும் நிலைபெற்று நின்ற. ஒன்று - ஒரு சிறிதும்.

5. போதகம் - யானை. புயல் நேர் வரும் - மேகங்கள் படியும். ஆதரம் தங்கிய அடிகள் - விரும்பித் தங்கிய சிவபெருமான்.

6. சாடினார் - மோதி அழித்தார். மணி தொக்க மாளிகை - இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற மாளிகை. நக்கனார் - ஆடையில்லாதவர், தொழுவார்மேல் - தொழுவார்கள் இடத்து.

7. போர் அணவு - போரை மேற்கொண்ட.

8 இரக்கமிஃறொழில் (இரக்கம் இல் தொழில்) - "குறில் வழிலளத்தவ் அணையின் ஆய்தம் ஆகவும் பெறும் அல்வழியானே" என்பது விதி. சிரக்கொள் பூவென (சிரம் கொள் பூவென) - தலையில் அணியும்

துன்றுபூமகன் பன்றியானவ
 னொன்றுமோர்கிலா மிழலையானடி
சென்றுபூம்புன னின்றுதூவினார்
 நன்றுசேர் பவரே. 9

புத்தர்கைச்சமண் பித்தர்பொய்க்குவை
 வைத்தவித்தகன் மிழலைமாநகர்
சித்தம்வைத்தவ ரித்தலத்தினுண்
 மெய்த்தவத் தவரே. 10

சந்தமார்பொழின் மிழலையீசனைச்
 சண்பைஞானசம் பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழ் பத்தும்வல்லவர்
 பத்தரா குவரே. 11

திருச்சிற்றம்பலம்

பூவைப்போல. எதுகை நோக்கி சிரக்கொள் என வலித்தது. ஒருக்கினார் - சிந்தையை ஒருமைப் படுத்தினவர்.

9. துன்று பூமகன் - (பூ துன்று மகன்) பூவில் வாழும் பிரமன். சென்று - திருவீழிமிழலைக்குச் சென்று. மிழலையானடி - அக்கடவுளின் திருவடிகளில். பூம் புனல் தூவினார் - பூவையும் நீரையும் தூவினவர்கள். பூம் புனல் - பூவும் நீரும். பூவோடு நீர் கூறுவதை "பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு" எனவும், "பூவொடு நீர் சுமந்தேத்தி" எனவும் வரும் அப்பர் வாக்கால் அறிக. நன்று சேர்பவர் - முத்தி அடைபவர்.

10. கை - அற்பத்தனத்தை உடைய. சமண் பித்தர் - பித்தராகிய சமணர். "ஏதம் கொண்டு ஊதியம் போக விடுதலின்" பித்தர் என்பார். பொய்க்குவை வைத்த வித்தகன் - பொய்க் குவியலாகிய உபதேசங்களைத் தோற்க வைத்த சாமர்த்தியசாலி. வித்தகன் - ஞான சொரூபர்.

11. சந்தம் ஆர் பொழில் - சந்தன மரங்கள் நிறைந்த சோலை. பந்தம் ஆர் தமிழ் - கேட்டார்ப் பிணிக்கும் தகையவாயின தமிழ்.

# 112 திருப் பல்லவனீச்சரம்

370 **பதிகவரலாறு**

திருஞானசம்பந்தர், பல்லவனீச்சரத்தில், பாம்பணிந்த சாம்பசிவ மூர்த்தியை ஏத்திப் பாடியருளியது இவ்விசைப்பதிகம்.

ஈரடி பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பரசுபாணியர் பாடல்வீணையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தரசுபேணி நின்று
ரிவர்தன்மை யறிவாரார். 1

பட்டநெற்றியர் நட்டமாடுவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திட்டமா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 2

பவளமேனியர் திகழுநீற்றினர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தழகரா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 3

1. பரசு பாணியர் - பரசு என்னும் ஆயுதத்தைக் கையில் ஏந்தியவர். பாடல் வீணையர் - பாடுதலுக்குரிய கருவியாகிய வீணையை உடையவர் என்றது ஒன்றோடொன்று மாறுபட்ட தன்மையை உடையவர். ஆகையினால் இவர் தன்மை அறிவார் யார் என்றார்.

2. பட்டம் - வீரர் நெற்றியில் அணியும் ஓர் அணிகலன். அது இராமாயணத்தில் "நுதலணி ஓடையில் பிறங்கும் வீரபட்டிகை" என வருவதால் அறிக. நட்டம் - திருக்கூத்து.

3. பவளமேனியர் - செந்நிறம் பொருந்திய உடம்பை உடையவர். அது "வெள்ளிப் பொடி பவளப் புறம் பூசிய வேதியனே" என்ற திருவிருத்தத்தாலும்; "பவளமே மகுடம், பவளமே திருவாய், பவளமே

பண்ணில்யாழினர் பயிலுமொந்தையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தண்ணலா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 4

பல்லிலோட்டினர் பலிகொண்டுண்பவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தெல்லியாட் டுகந்தா
ரிவர்தன்மை யறிவாரார். 5

பச்சைமேனியர் பிச்சைகொள்பவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திச்சையா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 6

பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தெங்குமா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 7

திருவுடம்பு " என்னும் திருவிசைப்பாவாலும் அறிக. அழகராய் இருப்பார்: - பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறு கண்டார் மனங்கவரும் தோற்றத்தால் அழகராய் இருப்பார் என்றார்.

4. பண்ணில் யாழினர் - பண்ணோடு கூடிய யாழை உடையவர். ஏழன் உருபு மூன்றின் பொருளில் வந்ததால் வேற்றுமை மயக்கம். மொந்தை - ஒருவகை வாத்தியம்.

5. பல்லில் ஓட்டினர் - பல் இல்லாத மண்டை ஓட்டைப் பிச்சைப் பாத்திரமாக உடையவர். எல்லி ஆட்டு உகந்தார் - இரவில் ஆடுதலில் விருப்பம் உடையவர், ஆட்டு - முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

6. பச்சைமேனியர் - சிவபெருமானுக்குப் பச்சை நிறம் உண்டென்பது " பச்சை நிறம் உடையர் பாலர், சாலப் பழையர், பிழையெல்லாம் தவிர்த்து ஆட்கொள்வார்" எனவரும் திருவிடைமருதூர்த் திருத்தாண்டகத்தால் அறிக. சதாசிவமூர்த்தியின் ஐம்முகங்களில் ஒன்றாகிய சத்தியோ ஜாதம் பச்சை நிறம் உடையது என்றும், அது அத்திருத்தாண்டகத்துப் பாலர் என அடுத்துக் குறித்தமையால் அறியப்படும் எனவும் கூறுப.

7. எங்குமாய்ப் பல்லவனீச்சரத்து இருப்பார் என்றது:- அகண்டிதன் ஆகி எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் அடியாரை ஆட்கொள்வான்

பாதங்கைதொழ வேதமோதுவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தாதியா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 8

படிகொண்மேனியர் கடிகொள்கொன்றையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தடிகளா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 9

பறைகொள்பாணியர் பிறைகொள்சென்னியர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திறைவரா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். 10

வானமாள்வதற் கூனமொன்றிலை
மாதர்பல்லவ னீச்சரத்தானை
ஞானசம்பந்த னற்றமிழ்
சொல்லவல்லவர் நல்லவரே. 11

திருச்சிற்றம்பலம்

வேண்டி, குருலிங்கசங்கமங்களில் கண்டனுய்த் தோன்றும் தன்மை விளக்கியவாறு. கண்டன் சிறு அளவில் காணப்படுபவன். “ கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே ” என்ற திருநேரிசையால் அறிக.

8. பாதம் கை தொழ - தமது திருவடிகளைக் கையால் தொழுது உய்தி கூடும் பொருட்டு. வேதம் ஓதுவார் - வேதம் முதலிய நீதிகளை உபதேசித்தருள்பவர். வேதம் - என்பது உபலட்சணம்.

9. படிகொள் - பல்வேறு வடிவங்களில் திருவுடம்பு கொள்பவர். கடி - வாசனை.

10. பறை - வாத்தியம்.

11. ஊனம் - தடை. மாதர் - அழகிய.

# 113 திருக் கழுமலம்

## 371 பதிக வரலாறு

தென்னாட்டமண்மாசு அறுத்துத், திருநீறே போற்றுவித்த திருஞான சம்பந்தர், மீண்டடைந்து, திருப்புகலியில் திருத்தோணிநாதர் கோயிலைத் தொழுது, உள்ளம் உள் அலைத்து எழும் ஆனந்தம் பொழியப் பணிந்து ஏத்திப் பாடியது இத் திருப்பதிகம்.

திருவியமகம் பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

உற்றுமை சேர்வது மெய்யினையே
உணர்வது நின்னருண் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே
கனல்விழி காய்வது காமனையே
அற்ற மறைப்பது முன்பணியே
அமரர்கள் செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே
பிரம புரத்தை யுகந்தனையே. 1

1. பிரமபுரத்தை உகந்தனையே - திருப்பிரமபுரத்தை விரும்பியருளிய பெருமானே!. உமை - உமாதேவியார். உற்று - பிரியாது பொருந்தி. மெய்யினை - உமது திருவுடம்பை. உணர்வதும் - சிவஞானிகள் அறிவதும். நின் அருள் மெய்யினையே - உனது உண்மையான அருளையே. கற்றவர் - ஞானநூலைக் கற்ற துறவிகள். காய்வது - வெறுப்பது. கா - காத்திருந்த. மனையே - மனைவி முதலியவற்றையே என்றது மனைவி முதலிய மூவகை ஏடணையையும். கனல்விழி - நெற்றிக்கண். காய்வது - எரித்தது. காமனையே - மன்மதனையே. முன்பக்கத்தில் படம் விரித்துக் கோவணமாகத் தங்கி. அற்றம் மறைப்பது - உனது மானத்தைக்காப்பது. பணியே - பாம்பே. அமரர்கள் செய்வதும் உன் பணியே - உனது பணிவிடையே யாம். பெற்று முகந்தது கந்தனையே - பெற்று வாரி எடுத்து அணைத்தது முருகக் கடவுளையே. காமனை - உடற்பற்றுக்கு ஆகுபெயர். காவடிபோல உடம்பைக் குறித்தது. சுமக்கும்மனை.

சதிமிக வந்த சலந்தரனே
தடிசிர நேர்கொள் சலந்தரனே
அதிரொளி சேர்திகி ரிப்படையா
லமர்ந்தன ரும்பர்து திப்படையால்
மதிதவழ் வெற்பது கைச்சிலையே
மருவிட மேற்பது கைச்சிலையே
விதியினி லிட்ட விரும்பரனே
வேணு புரத்தை விரும்பரனே. 2

காதம ரத்திகழ் தோடினனே
கானவ னுய்க்கடி தோடினனே
பாதம தாற்கூற் றுதைத்தனனே
பார்த்த னுடலம் புதைத்தனனே
தாதவிழ் கொன்றை தரித்தனனே
சார்ந்த வினையத ரித்தனனே
போத மமரு முரைப்பொருளே
புகலி யமர்ந்த பரம்பொருளே. 3

2. சதி - வஞ்சனை. சலந்தரன் - சலந்தரனை. தடிசிரம் - தலையை வெட்டுவதற்குரிய. சலந்தரனே - வஞ்சகத்தையுடையவனே. வஞ்சகமாவது காலால் சக்கரம்போல் கோடுகிழித்து அதை எடுக்கச் சொல்லியது. அதிர் - கண்டார் நடுங்கத் தக்க. திகிரிப் படையால் - அச்சலந்தரனைக் கொன்ற சக்கராயுதத்தால். உம்பர் - தேவர்கள். துதிப்பு - துதித்தல். அமர்ந்தனர் - மகிழ்ச்சியுற்றனர் .அடை - முதல் நிலைத் தொழிற்பெயர். மதிதவழ் வெற்பது கைச்சிலையே - சந்திர மண்டலத்தை அளாவிய மேரு மலை கையிலேந்திய வில்லாம். மரு(வு)விடம் ஏற்பது கைச்சிலையே - பொருந்திய நஞ்சை உணவாக ஏற்பதில் வெறுத்திலீர். விதியினில் - விதித்த முறையில் உலகர் ஒழுகுவதில். இட்ட(ம்) விருப்பத்தை உடைய. இரும் - பெரிய. பரனே - மேலான கடவுளே!. இட்டம் + இரும்பரன் - மவ்வீறொற்றொழிந்து உயிரீறு ஒத்தது. இட்டு அவிரும் எனலே தகும். வேணு புரத்தை விரும்பு அரனே - வேணுபுரத்தை விரும்புகின்ற சிவபெருமானே.

3. புகலியை அமர்ந்த - விரும்பி யுறைகின்ற பரம்பொருளே கடவுளே. காது அமரத்திகழ்தோடினனே - காதில் பொருந்த விளங்குகின்ற தோட்டையுணிந்தவர். கானவன் ஆய் - வேடுவனாகி. கடிது

மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே
மகிழ்ந்தரை சேர்வது மாசுணமே
மெய்த்துடல் பூசுவர் மேன்மதியே
வேதம தோதுவர் மேன்மதியே
பொய்த்தலை யோடுறு மத்தமதே
புரிசடை வைத்தது மத்தமதே
வித்தக ராகிய வெங்குருவே
விரும்பி யமர்ந்தனர் வெங்குருவே. 4

உடன்பயில் கின்றனன் மாதவனே
உறுபொறி காய்ந்திசை மாதவனே
திடம்பட மாமறை கண்டனனே
திரிகுண மேவிய கண்டனனே

ஓடினனே - மிக விரைந்து சென்றவர். (பாதம் அதால்) கூற்று - யமனை உதைத்தனனே. பார்த்தன் - அருச்சுனனது. உடலம் - உடம்பை. புதைத்தனனே - பாசுபத அத்திரம் கொடுத்து அதனால் கவசம்போல் மூடினவர். தாது அவிழ் - மகரந்தத் தோடு மலர்ந்த. தன் அன்பர்களுக்கு சார்ந்த - பொருந்திய. வினை (அது) அரித்தனனே - கொன்றருளியவர். போதம் அமரும் உரைப் பொருளே - சிவஞானக் கருத்தடங்கிய உபதேச மொழியின் பொருளாயுள்ளவன்.

4. மைத்திகழ் நஞ்சு உமிழ்மாசுணமே - கரிய நிறம் விளங்கும் நஞ்சைக் கக்கும் பாம்பே. மகிழ்ந்து அரை - இடுப்பில் சேர்வது அரை ஞாணாகவும் கோவணமாகவும் சேர்வது. மாசு(ண்)ணமே மெய்த்து உடல் பூசுவர் - சிறந்த திருநீற்றையே உடம்பின்மேற் பூசுவதாகிய சந்தன மாக்த் திருமேனியிற் பூசுவர். சுண்ணம், பொடி, திருநீறு, மெய்த்து - உடம்பிற் பூசுவதாகிய சந்தனத்தைக் குறித்தது, "சாந்தமும் வெண்ணீறு" என்ற திருவிசைப்பாவின் கருத்து. மேல் மதியே - (தலை) மேல் (இருப்பதும்) சந்திரனே. மேல் மதியே வேதமது ஓதுவர் - மேலான புத்தியைத் தரும் கருத்துக்களை வேதம் முதலிய நூல்களால் ஓதியருளியவர் (அவ்வாறு ஓதியருளும்) வித்தகர் ஆகிய எம் குருவே. சமர்த்தராகிய எமது குரு நாதன் விரும்பி அமர்ந்தனர். வெங்குருவே - வெங்குருவென்னும் தலத்தில் விரும்பி அமர்ந்தனர்.

5. உடன் பயில்கின்றனன் மாதவன் - தம்மோடு கூடவே யிருக்கும் பேறுடை யவன் திருமால். ஏனெனில், உறு - தம் வழியிற் செல்லுகின்ற.

படங்கொ ளரவரை செய்தனனே
பகடுரி கொண்டரை செய்தனனே
தொடர்ந்த துயர்க்கொரு நஞ்சிவனே
தோணி புரத்துறை நஞ்சிவனே. 5

திகழ்கைய தும்புகை தங்கழலே
தேவர் தொழுவதுந் தங்கழலே
இகழ்பவர் தாமொரு மானிடமே
யிருந்தனு வோடெழின் மானிடமே
மிகவரு நீர்கொளு மஞ்சடையே
மின்னிகர் கின்றது மஞ்சடையே
தகவிர தங்கொள்வர் சுந்தரரே
தக்க தராயுறை சுந்தரரே. 6

பொறி - இந்திரியங்களை. காய்ந்து இசை - தமதுபாடல் மடக்கிச் செலுத்திய. மாதவன் - பெருந் தவஞ்செய்தோனாதலினால் பொறிகளை யடக்குதல் அவர்க்கு ஆகும் என்க. "சென்ற விடத்தாற் செலவிடா தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு" என்னும் திருக்குறள் கொண்டு அறிக. திடம்பட - உறுதிப்பாடு அமைய. மாமறை - சிறந்த வேதங்களை. கண்டனன் - செய்தருளியவர். வேதத்தை யருளியவரும் சிவபெருமானே யென்பது. இதனை "உம்பர் நாயகன் திருவாக்கிற் பிரணவம் உதித்தது, அதனிடை வேதம் பிறந்தன" என்னும் திருவிளையாடற் புராணத்தால் அறிக. (வேதத்துக்கு 804). திரிகுணம் மேவிய - முக்குண வயப்பட்டுச் செய்தனவாகிய புறச் சமயக் கொள்கைகளை. கண்டனன் - கண்டனம் செய்வோன். படங்கொள் அரவு, அரை செய்தனனே - அரையிலணிந்தவன். பகடு - யானையின். உரிகொண்டு - தோலையுரித்து. அரை செய்தனன் - அதை அழித்தவன். (தொடர்ந்த) துயர்க்கு - துன்பங்களுக்கு. ஒரு நஞ்சு இவனே - ஒருவிடம்போல் நின்று அழிப்பவன் இவனே. பிற தெய்வங்கள் வேதனைப்படும், இறக்கும், பிறக்கும், மேல் வினையும் செய்யும் ஆதலால் இவையிலாதான் அறிந்தருள் செய்வன் எனப் பிரிநிலை ஏகாரம் வைத்தார். சிவன் வெங்குருமேவிய நம் சிவனே என்க.

6. திகழ் - விளங்குகின்ற, கையதுவும் புகை தங்கு, அழலே, நெருப்பே, தேவர்தேவர் (கள்) தொழுவதும், தம் கழலே - தமது திருவடியையேயாம். இகழ்பவர் - தம்மை அலட்சியம் செய்தவர்களாகிய. தாம் - தாருகவனத்துமுனிவர் (ஏவிய) ஒருமான், இடம் - இடக்கரத்தில் உள்ளது. இரும்தனுவோடு - பக்குவ ஆன்மாக்களுக்கு (உபதேசிக்கும்பொருட்டு)

ஓர்வரு கண்க ளிணைக்கயலே
யுமையவள் கண்க ளிணைக்கழலே
ஏர்மரு வுங்கழ னாகமதே
யெழில்கொளு தாசன நாகமதே
நீர்வரு கொந்தள கங்கையதே
நெடுஞ்சடை மேவிய கங்கையதே
சேர்வரு யோக தியம்பகனே
சிரபுர மேய தியம்பகனே. 7

அவர்தம் பெருமைபொருந்தியஉடம்பிற்கு. எழில்-அழகிய. மானிடவடிவமே என்றது "மானிடரை ஆட்கொள்ள மானிட வடிவங்கொண்டு வருவன்" என்ற கருத்து. அது "அருபரத் தொருவன் அவனியில்வந்து, குருபரனாகி யருளியகொள்கை" எனவும், "இம்மண் புகுந்து மனிதரை யாட் கொள்ளும் வள்ளல்" எனவும் வரும் திருவாசகத்தால் அறிக. மிகவரும், நீர் கொளும் - தண்ணீரைத் தன்னகத்து அடக்கிய. மஞ்சு - மேகங்கள். அணைவு - தம்மிடம் சேர்தலையுடையது. என்றது சிவபெருமான் சடா பாரத்தில் மேகங்கள் இருப்பதைக் குறித்தது. இதனைத் திருவிளையாடல் நான்மாடக்கூடலான படலத்தால் அறிக. மின் - மின்னலை. நிகர்கின்றதும் - ஒப்பதுவும். அம்சடையே - அழகிய சடையே. தக - தகுமாறு. விரதம் - மனத்தையடக்கல் முதலிய விரதங்காத்தலை. கொள்வர் - பாராட்டியேற்றுக் கொள்பவராகிய சுந்தரர். கொள்வர் - இவ்வுலகிற்குத் தலைவர். "விரதமெல்லாம் மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்" எனவும், "விரதங் கொண் டாடவல் லானும்" எனவும் வரும் அப்பர் திருவாக்கிலும் ஒலிக்கிறது. வசுந்தரர் எனற்பாலது சுந்தரர் என நின்றது முதற் குறை. தக்க தராய் - பூந்தராய். உறை - வீற்றிருக்கும், சுந்தரர் அழகர்.

7. ஓர்வு அரு - மாலற நேயம் மலிந்தவர் வேடத்தை அரனென நினைக்காத. கண்கள் - இணைக்க - அன்பரோடு மருவுதற்கு அயல் - புறம்பானவை. வேடத்தைக் கண்டு நினைப்பிக்கும் கருவியாகலான் கண்கள்மேல் வைத்து ஓதினாரேனும், மாந்தர்மேல் வைத்துக் கூறியதாகக் கொள்க. எனவே வேடத்தை மதியாதவர் திருக்கூட்டத்திற்குப் புறம்பு என்ற கருத்தாம். உமையவள் கண்கள், இணைக்கயல் - இரு மீன்களுக்கு ஒப்பாகும். ஏர் மருவும் - அழகு பொருந்திய. கழல் - வீரக்கண்டையாக இருப்பது. நாகம் அது - பாம்பாம். எழில் கொள் - அழகிய. உதா சனன் - அக்கினி. ஆகம் அது - திருவுடம்பாக இருப்பது. நீர்வரு - நீர் மயமான. கொந்து அளகம் - கொத்தான கூந்தல். கையது - ஒழுங்காய் உள்ளது. கங்கையது - கங்கையாகிய மங்கைக்கு உரியது. ஒரு மங்கையே நீர்மயமாக இருப்பாளேயானால் அவளது சாங்கமும் நீர்மயு

ஈண்டு துயிலம ரப்பினனே
யிருங்க ணிடந்தடி யப்பினனே
தீண்டல ரும்பரி சக்கரமே
திகழ்ந்தொளி சேர்வது சக்கரமே
வேண்டி வருந்த நகைத்தலையே
மிகைத்தவ ரோடு நகைத்தலையே
பூண்டன சேர லுமாபதியே
புறவ மமர்ந்த வுமாபதியே. 8

நின்மணி வாயது நீழலையே
நேசம தானவர் நீழலையே
உன்னி மனத்தெழு சங்கமதே
யொளியத னேடுரு சங்கமதே

---

மானதே என்று கொள்வதற்கு நீர்வரு கொந்தளகம் என்று கூறினர். சேர்வரு - சேர்தற்கரிய. யோகம் - யோகநிலையைக் காட்டிய. தியம் பகன் - மூன்று கண்களை உடையவன். தியம்பகன் - திரியம்பகன் என்பதன் மரூஉ. சிரபுரம், மேய - எழுந்தருளிய. தீ - நெருப்பாகிய. அம்பு - அம்பைக்கொண்ட. அகன் - கையினிடத்தை உடையவன். தீ - குறுக்கல்வி காரமாய் தி என நின்றது. அகம் - இடம்.

8. ஈண்டு - இங்கே (திருவீழிமிழலையில்). துயில் அமர் அப்பினன் - கடலில் தூங்கும் திருமால். அப்பு - தண்ணீர், கடலைக் குறித்தது தானி யாகுபெயர். இரும் - பெரிய. கண் - கண்ணை. இடந்து - தோண்டி. அடி - திருவடியின்கண். அப்பினன் - சேர்த்தான். தீண்டல் அரும் - தீண்டுவதற்கு அரிய. பரிசு - தன்மையுடன். அக்கரம் - அந்தக்கரத்தில். திகழ்ந்து - விளங்கி ஒளிசேர்வது - ஒளி உடையதாய் இருப்பது. சக்கரம் - சக்கர ஆயுதமாம். வேண்டி - (தாருகவனத்து முனிவர்) விரும்பி. வருந்த - யாகம் செய்து சிரமப்பட (தோன்றிய). நகைத்தலை - நகுவெண் டலையானது. அவரோடு - அம்முனிவரோடு. மிகைத்து - மிக்க மாறு கொண்டு. நகைத்தலையே பூண்டனர் - நகைத்தலை உடையதாக. பூண் டனர் - தலைக்கண் அணிந்தனர். சிவனைக் கொல்லவந்த நகுவெண்டலை சிரிப்பது, அம் முனிவரைப் பரிகசிப்பதைப் போலக் காணும்படி அதனை அணிந்தனர் என்பது கருத்து. புறவு அமர்ந்த உமாபதி, சேரலும் - சேர் வதும். மா - எவற்றிலும் சிறந்த (அடியார் உள்ளமாகிய). பதி - இட மாம். "மலர்மிசை ஏகினன்" என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரைத்தது இங்குக் கொள்க.

9. நின்மணிவாயது - உமது ஆராய்ச்சி மணி கட்டிய, கோயிலின் திருவாயிலினுடைய. நீழலையே - நிழலையே. நேசமது ஆனவர் - விருப்ப

கன்னிய ரைக்கவ ருங்களனே
கடல்விட முண்டக ருங்களனே
மன்னிவ ரைப்பதி சண்பையதே
வாரி வயன்மலி சண்பையதே. 9

இலங்கை யரக்கர் தமக்கிறையே
யிடந்து கயிலை யெடுக்கிறையே
புலன்கள் கெடவுடன் பாடினனே
பொறிகள் கெடவுடன் பாடினனே
இலங்கிய மேனி யிராவணனே
யெய்து பெயரு மிராவணனே
கலந்தருள் பெற்றது மாவசியே
காழி யரனடி மாவசியே. 10

மாகக் கொண்டவர்; என்றது திருக்கோயிலில் வழிபாடுசெய்து வாயிலில் காத்திருக்கும் அடியர் என்றபடி. "மூவாவுருவத்து முக்கண் முதல்வ .........காவாய் எனக் கடைதூங்கும் மணி" என்ற அப்பர் வாக்கின்படி மணிவாய் என்பதற்குப் பொருள் கொள்ளப்பட்டது. வாய் - வாயில். நீளலை (அவ்வடியவரினின்றும்) நீங்கமாட்டாய். உன்னி மனத்து - மனத்தில் உம்மை நினைத்து. எழு - எழுகின்ற. சங்க(ம)ம் - அடியார். ஒளியதனோடு - சைவ தேஜஸோடு. உறு - வருகின்ற. சங்கமது - கூட்டமாகும். சங்கம்; சங்கமம் என்பதன் மரூஉ. கடவுள் வெளிப்படும் நிலைகளாகிய குரு, லிங்க, சங்கமங்களில் ஒன்று. கன்னியரை - முனிபத்தினியரை. கவரும் - மனம் கவர்ந்த. களன் - கள்ளன். கடல் விடமுண்ட, கருங்களன் - கரிய கழுத்தை உடையவன்.

10. இலங்கை அரக்கர் தமக்கு, இறை - அரசனாகிய இராவணன். கயிலை(யை) இடந்து எடுக்க இறையே சிறிதளவில். புலன்கள் கெட - இந்திரியங்கள் எல்லாம் மயங்கச் (சோர்ந்து). உடன்பாடினனே - (தான் பிழைக்கும் வண்ணம்) உடனே பாடினன். பொறிகள் - ஐம்பொறி முதலிய கரணங்கள். கெட - பழைய செருக்கு நிலைகெட்டு (பத்தி நிலையில் செல்ல). உடன்பாடினனே - அவனுடைய பாடலுக்கு இறைவர் உடன் பட்டவராகி. இலங்கியமேனி இராவணன் - விளங்கின உடம்பையுடைய இராவணனுக்கு. எய்தும் பெயரும் இராவணனே - அதனால் உண்டான பெயரும் அழுதவன் என்பதாம். கலந்து அருள்பெற்றதும் மாவசியே - அருளிற் கலந்து அவன் பெற்றதும் சிறந்த வாளாயுதமாம். (வசி - வாள்) "வசி கூர்மை வசியம் வாளே" என்பது நிகண்டு. காழி அரன் அடி, மாவசி - சிறந்த வசீகரத்தை உடையதாகும்.

கண்ணிகழ் புண்டரி கத்தினனே
கலந்திரி புண்டரி கத்தினனே
மண்ணிக ழும்பரி சேனமதே
வானக மேய்வகை சேனமதே
நண்ணி யடிமுடி யெய்தலரே
நளிர்மலி சோலையி லெய்தவரே
பண்ணியல் கொச்சை பசுபதியே
பசுமிக வூர்வர் பசுபதியே. 11

பருமதின் மதுரைமன் னவையெதிரே
பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே
வசையொடு மலர்கெட வருகரனே

11. கண் நிகழ் புண்டரிகத்தினனே - கண்ணனது பொருந்திய தாமரையாக உள்ளவன்; தாமரைக் கண்ணனாகிய திருமாலும். கலந்து - அவனோடு சேர்ந்து. இரி - திரிந்த. புண்டரீகத்தினன் - (உந்திக்கமலத்தில் தோன்றியவனாகிய) பிரமனும். மண் நிகழும் பரிசு - பூமியைத் தோண்டும் தன்மையை உடைய. ஏனம் அதே - பன்றியாகவும். வானகம் ஏய் - ஆகாயத்தில் பறக்கின்ற. சேனம் அது - கழுகாகவும். பிரமன் வானிற் பறக்க எடுத்த வடிவம் அன்னமாகவும் எமது ஆளுடையபிள்ளையார் வானிற் பறக்கும் கழுகாகவே அதனைக் கூறினர். நண்ணி அடிமுடி எய்தலரே - சேர்ந்து அடிமுடியையும் அடையாதவர் ஆயினர். நளிர்மலி சோலையில் எய்து அலர் - குளிர்ச்சிமிக்க சோலையில் உள்ள மலர்கள். பண் இயல் - சிவபூசை பண்ணுதற்குப் பொருந்திய. கொச்சை - கொச்சைவயம் என்னும் தலத்திலுள்ள. பசுபதியே - ஆன்மவர்க்கங் களுக்குத் தலைவராய், அதனால் பசுபதி என்னும் பெயர் படைத்தவர். பசு - ஆனேற்றை. மிக - என்றும். ஊர்வர் - ஏறுவார்; அதனால் பசு பதியே - பசுபதி என்னும் பெயர் படைத்தவரும் ஆவர். பசுபதி - என்ற சொல் பசுக்களுக்கு (ஆன்மாக்களுக்கு)ப் பதியாம் தன்மையாலும், பசு ஏறுதலாலும், எய்திய பெயர் என்பது இங்குத் தெளிவிக்கப்பட்டது.

12. பருமதில் மதுரை மன் அவை எதிரே - பருத்த மதில்களை உடைய மதுரை அரசன் சபையின் முன். பதிகம் அது எழுது இலை அவை - பனை ஏடும் அதில் எழுதிய பாடலும் ஆகியவைகள். (அவை - என்று பன்மையால் கூறினமையால் இங்ஙனம் கூறப்பட்டது.) வருநதி இடை - வரும் வைகையாற்றில். மிசை - மேலே. எதிரே வரு - எதி

கருதலி லிசைமுர றருமருளே
கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே
வல்லவர் தம்மிடர் திடமொழியே. 12

திருச்சிற்றம்பலம்

வரச்செய்த. கரன் - செய்கையை உடையவன். வரு - என்பதில் பிற வினை விகுதி தொக்கு நின்றது. வசையொடும் அலர்கெட - சைவர் களுக்குவந்த பழியும், பழிதூற்றலும் கெடுமாறு. அருகு அரன் சமணர்களை அழித்தவன். அருகு - அருகர். அரன் - ஹரன்; அழித்தவன். கருதலில் - நினைக்கவும் முடியாதபடி. இசை - சைவர் அடைந்த புகழ். முரல்தரும் - உலகம் முழுவதும் ஒலிக்கும்படிச் செய்த. மருள் - வியப்பு. கழுமலம் அமர் இறைதரும் அருளே - கழுமலத்தில் எழுந்தருளியுள்ள சிவ பெருமான் செய்த திருவருட் பெருக்கே யாகும். மருவிய - அவ்வருளைப் பெற்ற. தமிழ் விரகன - முத்தமிழ் விரகரது. மொழி - இப்பாடல்களை. வல்லவர் - வல்லவர்களது. இடர் திடம் ஒழி - இடர் ஒழிதல் நிச்சயம். ஒழி - முதனிலைத் தொழிற் பெயர்.

வருகின் றனன்என் றனதுள் ளமுநின்
வசமே நிறுவிக் குறைகொண் டுதணித்
தருகும் புனல்வெஞ் சுரம்யான் அமரும்
மதுநீ இறையுன் னினையா தெனின்முன்
கருகும் புயல்சேர் மதில்வண் புகலிக்
கவிஞன் பயில்செந் தமிழா கரன்மெய்ப்
பெருகுந் திருவா ரருள்பே ணலர்போற்
பிழைசெய் தனைவந் ததர்பெண் கொடியே.

கொடிநீடு விடையுடைய பெருமானை அடிபரவு
குணமேதை கவுணியர்கள் குலதீப சுபசரிதன்
அடியேன திடர்முழுதும் அறவீசு தமிழ்விரகன்
அணியான புகலிநகர் அணையான கனைகடலின்
முடிநீடு பெருவலைகொ டலையூடு புகுவனுமர்
முறையேவு பணிபுரிவன் அணிதோணி புனைவனவை
படியாரும் நிகரரிய வரியாரும் மதர்நயனி
பணைவார்மென் முலைநுளையர் மடமாதுன் அருள்பெறினே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 114 திரு வேகம்பம்

372 பதிக வரலாறு.

பெறுதற்கு அரிய பேற்றை உலகம் உய்யவேண்டிப் பெற்றருளிய பிள்ளையார், அறப்பெருஞ் செல்வக் காமக்கோட்டம் அணைந்து இறைஞ்சித் திருவேகாம்பரத்து அமர்ந்த செழுஞ்சுடரைத் தப்பாது உள்ளுருகிப் பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம்.

திருவியமகம் பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பாயுமால்விடை மேலொரு பாகனே
பாவைதன்னுரு மேலொரு பாகனே
தூயவானவர் வேதத் துவனியே
சோதிமாலெரி வேதத் துவனியே
ஆயுநன்பொரு ணுண்பொரு ளாதியே
யாலநீழ லரும்பொரு ளாதியே
காயவின்மதன் பட்டது கம்பமே
கண்ணுதற்பர மற்கிடங் கம்பமே. 1

1. பாயும் மால் விடைமேல், ஒரு பாகன் - செலுத்துபவன். பாவை - பெண்ணை. தன் உருமேல் - தன் உடம்பின்மேல். ஒருபாகன் - ஒருபாகத்தில் உடையவன். வேதத்துவனி - வேதத்தின் முழக்கம் மால் - பெரிய. எரி - எரிகின்ற. வேதத்து - வெம்மையையுடைய. வனியே - நெருப்பே. எரிவன்னி - வினைத் தொகை. வேது - வெம்மை. அத்து - சாரியை ஆயும் - ஆராயத்தக்க. நன் பொருள் - நல்ல கருத்துக்கள் எல்லாவற்றிலும். நுண்பொருள் - நுட்பமான கருத்தாக. ஆதி - ஆவாய். அரும் பொருள் ஆதியே - கிடைத்தற்கு அரிய பொருளாயுள்ள முதல்வனே. காய - போர் புரிய (வந்த). வில்மதன் - வில்லையுடைய மன்மதன். பட்டது - முதற்கண் அடைந்தது. கம்பம் - நடுக்கமேயாம். காய - காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. காமன் பட்டது கம்பம் என்பதை "நந்தி தேவர் காப்பும் ஆணையும் உற்று நோக்கி நெடிதுயிர்த்து உள்ம் துளங்கி விம்மினான்" எனவரும் காம தகனப் படலத்தான் அறிக. கம்பம்:- ஏகம்பம் என்பது கம்பம் என முதற் குறைந்து நின்றது. ஏக × ஆம்பரம் = ஏகாம்பரம் - (ஒற்றை மாமரம்) ஏகம்பம் என மருவிற்று. வேதத்து × வனி = வேத விதிப்படி வளர்க்கப்பெறும் வேள்வித் தீ என்லே பொருந்துவது.

சடையணிந்ததும் வெண்டலை மாலையே
　　தம்முடம்பிலும் வெண்டலை மாலையே
படையிலங்கையிற் சூலம தென்பதே
　　பரந்திலங்கையிற் சூலம தென்பதே
புடைபரப்பன பூதக ணங்களே
　　போற்றிசைப்பன பூதக ணங்களே
கடைகடோறு மிரப்பது மிச்சையே
　　கம்பமேவி யிருப்பது மிச்சையே. 2

வெள்ளெருக்கொடு தும்பை மிலைச்சையே
　　வேறுமுன்செலத் தும்பை மிலைச்சையே
அள்ளிநீறது பூசுவ தாகமே
　　யானமாசுண மூசுவ தாகமே

---

2. சடையணிந்தது வெண்டலையாகிய மாலை - (நகுவெண்தலை) தம் உடம்பிலும் வெள்ளிய தலையைக் கோத்தமாலை. படையில் - ஆயுதத்தைப்போல் அழகிய கை விரலால். சூல் - தோண்டிய. அம் - அழகு செய்வதாகிய அணிகலன். அது - அத்திருமாலின் கண். என்பது - என்க. சூலம் - சூல் + அம் எனப்பிரிக்க. சூலுதல் - தோண்டுதல். "நுங்கு சூன்றிட்டனன்" என்னும் நாலடியாரிற் காண்க. அம் - அழகு. அது அணிகலனுக்கு ஆனது - காரிய ஆகு பெயர். அப்பொதுப்பெயர் சிறப்புப் பெயராகிய மோதிரத்துக்கு ஆயிற்று. மச்சாவதாரத்தின் செருக்கையடக்க உருத்திர பகவான் திருமாலின் கண்ணைக் கை விரலால் தோண்ட அது விரலுக்கு அணிகலமாகிய கணையாழியாயிற்று என்ற வரலாறு. இதனை "வெருவாழி கொள்பவனே விரலாழி கொடுப்பவனே, மருவாழி யென்றுரைக்கும் மடைப்பள்ளி காப்பவனே" என்னும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய வாட்போக்கிக் கலம்பகத்தால் அறிக. அங்கை - விரலைக் குறித்தது. முதலாகுபெயர் என்பது வியங்கோள். பரந்து - ஒளி பரந்து. இலங்கு - விளங்குகின்ற அயில் - ஆயுதமாவது. சூலம் (அது) என்பதே - சூலம் என்பதாம். அயில் - இங்குப் பொதுப் பெயராய் ஆயுதம் என்னும் பொருள் தந்து நின்றது. புடை பரப்பன பூததணங்களே - பக்கத்தில் பரந்து வருவன பூத கணங்களே. போற்றிசைப்பன - துதி சொல்வன. கடை - வீட்டு வாயில். மிச்சையே - உணவு மிசை (தல்) முதனிலை திரிந்த தொழிற் பெயர். இச்சை - விருப்பம்.

3. மிலைச்சை - சூடினவன். வேறு - வேருகி முன் செல்ல. தும்பை - தும்புக் கயிற்றை இடபத்துக்குக் கட்டியவனே. தாகம் - விருப்பம்.

புள்ளியாடை யுடுப்ப துகத்துமே
    போனவூழி யுடுப்ப துகத்துமே
கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே
    காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 3

முற்றலாமை யணிந்த முதல்வரே
    மூரியாமை யணிந்த முதல்வரே
பற்றிவாளர வாட்டும் பரிசரே
    பாலுநெய்யுகந் தாட்டும் பரிசரே
வற்றலோடு கலம்பலி தேர்வதே
    வானினோடு கலம்பலி தேர்வதே
கற்றிலாமனங் கம்ப மிருப்பதே
    காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 4

மாசுணம் - பாம்புகள். மூசுவது - மூடுவது. ஆகமே - உடம்பையே. புள்ளி ஆடை உடுப்பதும் கத்து - புள்ளியை யுடைய ஆடையாக உடுப்பது கத்துமே. ஊழி - பிரளய காலத்தில். போன - தனுகரண புவன போகங்கள் அழியப்பெற்ற உயிர்களை. உடுப்பது - தன்னுள் ஒடுக்கிக் கொள்வது. உகத்தும் - ஒவ்வோர் உகத்திலும். உடுப்பது - ஒடுக்கிக் கொள்வதென்னும் பொருளில் வந்தது. கள் உலாம் - தேன் பொருந்திய. மலர் - மலரையணிந்த. கம்பம் - (உலகைத் தாங்கும்) தூண். சிவபெருமான். இலக்கண நூலார் இதனை வெளிப்படையென்ப. நடக்கும் மலை யென்பபோல. இருப்பு முதலிற் பெயர்ச் சொல்லாயும், பின் தொழிற் பெயராயும் பொருளுணர்த்திற்று. கள்...கம்பம் - கரும்பு. 'ஆணந்தத்தேன் காட்டும் முக்கட் கரும்பு' (சிதம் பரமும் மணிக்கோவை 15) நகர்வளம் குறித்தது இது.

4. முற்றல் ஆமை அணிந்த முதல்வர் - ஆமை ஓட்டை அணிந்த முதல்வர். முதல்வர் - தலைவர். மூரி - வலிய. ஆமை - ஆனேற்றை. அணிந்த - அழகு செய்து ஏறிய. முதல்வர் - முதலில் தோன்றியவர். பரிசர் - தன்மை உடையவர். வாள் அரவு - ஒளி பொருந்திய பாம்பை. பற்றி - பிடித்து. ஆட்டும் - ஆட்டுகின்ற. பரிசர் - தன்மையுடையவர். ஆட்டும் - அபிடேகம் செய்யப்பெறும். பரிசர் - பெருமையையுடையவர். இனி வாளரவு ஆட்டும் பரிசர் என்பதற்கு, போர்வீரர் கையிற் பற்றும் பரிசையைப் போலப் பாம்பைப்பற்றி ஆட்டி வருபவர் என்றகருத்தாகவும் கொள்ளலாம். வற்றல் ஓடு - வற்றிய மண்டையோடாகிய. கலம் - பாத்திரத்தில் பலிதேர்வது (அவர்) பிச்சை யெடுப்பது. வானினோடு - தேவர்

வேடனாகி விசையற் கருளியே
வேலைநஞ்ச மிசையற் கருளியே
ஆடுபாம்பரை யார்த்த துடையதே
யஞ்சுபூதம மார்த்த துடையதே
கோடுவான்மதிக் கண்ணி யழகிதே
குற்றமின்மதிக் கண்ணி யழகிதே
காடுவாழ்பதி யாவது மும்மதே
கம்பமாபதி யாவது மும்மதே. 5

இரும்புகைக்கொடி தங்கழல் கையதே
யிமயமாமக டங்கழல் கையதே
அரும்புமொய்த்த மலர்ப்பொறை தாங்கியே
யாழியான்றன் மலர்ப்பொறை தாங்கியே

உலகிலுள்ளவர்களுடன். கலம் (ஏனையுலகிலுமுள்ள) கலம் - சற்பாத்திரங்களாகிய அடியார்கள். தேர்வது - ஆராய்வதும். பலி - (அவருக்குச் செய்யும்) பூசை முறைகளையேயாம் (பலி-பூசை). கற்றிலா - (அவரைக்) கல்லாத. மனம் - மனம். கம்பம் இருப்பு (அது)-இருப்புத் தூண்போன்றது.

5. விசயற்கு - அருச்சுனனுக்கு. அருளி - அருள் செய்தோன். நஞ்சு, மிசையால் - உண்டலால். கருளி - (கண்டம்) கறுப்பு அடைந்தவர் கருள் - கருமை. ஆடும் பாம்பு அரை ஆர்த்தது உடையது - ஆடும் பாம்பை அரையில் கச்சாக்கட்டிய உடையின் மேலது. அஞ்சு பூதமும் - ஐம்பூத முதலிய தத்துவங்களாலும். ஆர்த்தது - பிணைக்கப்பட்டதாகிய இவ்வுலகம். துடையது - அவரால் அழிக்கப் பட்டது என்றது உலகிற்குச் சங்கார கருத்தா சிவன் என்பது. கோடு வான்மதி - வளைந்த ஆகாயத்தில் வருகின்ற பிறையாகிய. கண்ணி - தலைமாலை. அழகிது - அழகியதாக உள்ளது. குற்றம் இல் - களங்கமில்லாத. மதி - மெய்யடியார்களின். மதி - அன்போடு கூடிய அறிவால் வீசும். கண்ணி - வலையானது. அழகிது - உணர்தற்கு இனிமையானது என்றது. "பத்தி வலையிற் படுவோன்" என்ற கருத்து. காடுவாழ் பதியாவதும் உம்மதே - சுடு காட்டில் வாழ்வது உமது இருப்பிடமானால். கம்பமாபதி ஆவது உம்மதே - காஞ்சி புரமாகிய சிறந்த நகரமும் உம்முடையது என்று சொல்லலாகுமா? என்றது.

6. இரும் - பெரிய (புகைக்கொடி தங்கு). அழல் - நெருப்பு. கையது - கையின் கண்ணது. தம்கழல் - தமது திருவடி. இமயமாமகள் - உமாதேவியாரின். கையது - கையால் வருடப்படுவது. "மாலைதாழ்

பெரும்பகனட மாடுதல் செய்துமே
பேதைமார்மனம் வாடுதல் செய்துமே
கரும்புமொய்த்தெழு கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 6

முதிரமங்கை தவஞ்செய்த காலமே
முன்புமங்கை தவஞ்செய்த காலமே
வெதிர்களோடகில் சந்தமு ருட்டியே
வேழமோடகில் சந்த முருட்டியே
அதிரவாறு வரத்தழு வத்தொடே
யானையாடு வரத்தழு வத்தொடே
கதிர்கொள்பூண்முலைக் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 7

---

குழல் மாமலையாள் செங்கை சீலமாக வருடச் சிவந்தன" என்னும் தடுத்தாட் கொண்ட புராணக் கருத்து. (192) அரும்பும் - அரும்புகளும். மொய்த்த - வண்டுகள் மொய்க்கப் பெற்ற. மலர் - மலர்களும். பொறை - பாரமாக. தாங்கி - தாங்கினவன். அன்பரிட்டமையாகலின் பொறையாயினுந்தாங்கினன் "எம்போலிகள் பறித்திட்ட அரும்பும் முகையும்" என்னும் அப்பர் வாக்கால், மலரேயன்றி அரும்பும் பூசைக்காதல் அறிக. ஆழியான் தன் - திருமாலின் மலர். பரந்த - பெரிய. பொறை - உடலெலும்பாகிய கங்காளத்தை. தாங்கி - சுமப்பவன். (உடல் எலும்புக் கூட்டுக்குக் கங்காளம் என்று பெயர்.) "கங்காளம் தோள்மீது காதலித்தான் காணேடி" என்பது திருவாசகம். திருமாலின் திருவிக்கிரமாவதாரத்திற் செருக்கை யடக்கி அதற்கறிகுறியாக அவன் உடலெலும்பைச் சிவபெருமான் தாங்குவர். ஏனையரெவரும் அழிவர் எனலை விளக்குதற்குக், "கண்டவிடம் நித்தியத்தைக் காட்டவும் கங்காளம் முதல், அண்டவிடந் தர வைத்தாய் அம்புயம் செய்குற்றம் எவன்" என்னும் வாட்போக்கிக் கலம்பகத்தால் அறிக. பெரும் பகல், நடம் ஆடுதல் செய்தும், பேதையர் மனம் - தாருகவனத்து முனிபத்தினிமார் மனம். வாடுதல் செய்தும் - வாடச் செய்தீர் என்றது திருக்கூத்து. எவருக்கும் மகிழச் செய்விப்பதாகவும், பேதையரை மட்டும் வாட்டியது என்பது புதுமை என்ற கருத்து. செய்தும் - செய்தீர். தன்மை முன்னிலைக்கண் வந்தது. அது "நாமரையாமத்தென்னே வந்து வைகி நயந்ததுவே என்ற திருக்கோவையாரிலும் "கடந்தவரோ நாம்" என்னக் கம்பராமாயணத்தும் வருதல் காண்க. நான்காவது அடியின் பொருள் விளங்கிற்றிலது.

7. முதிரம் மங்கை - மேகம் போலும் நிறத்தையுடைய அம்பிகை. தவம் செய்த-இமயமலையில் இளமைப்பருவத்தே சிவபிரானைக்கணவராகப் பெறத் தவம் செய்த. காலம் முன்பும் - முற்காலத்திலும். (அம்பிகையைக்

பண்டரக்க னெடுத்த பலத்தையே
பாய்ந்தரக்க னெடுத்த பலத்தையே
கொண்டரக்கிய துங்கால் விரலையே
கோளரக்கிய துங்கால் விரலையே
உண்டுழன்றது முண்டத் தலையிலே
யுடுபதிக்கிட முண்டத் தலையிலே
கண்டநஞ்ச மடக்கினை கம்பமே
கடவுணீயிடங் கொண்டது கம்பமே. 8

---

கிழவடிவம் கொண்டு பரிசோதித்தற்கு வந்ததுபோலவே) அம் கை தவம் செய்தகாலம் - அம்பிகை கம்பையாற்றில் தவம் புரிந்த இக்காலத்திலும், (ஆற்றைப் பெருக்கிப் பரிசோதித்தலாகிய) அம் கைதவம் செய்தகாலம் - அழகிய வஞ்சனை செய்ய வந்த சமயத்தில். கைதவம் - நன்மையை விளைக்கவந்தமையின், அழகிய என்று விசேடிக்கப்பட்டது. வெதிர்க ளோடு அகில்சந்தம், முருட்டி - மூங்கில் மரங்களோடு, அகில், சந்தன மரங்களையும், (ஏனைய) முருட்டு மரங்களையும். வேழம் - யானை முதலிய மிருகங்களை. ஓடகில் சந்தம் - ஓடமுடியாதபடி. உருட்டி - உருட்டிக் கொண்டு. அதிர - ஒலிக்கும்படியாக. ஆறு - கம்பையாறு. அழுவத் தொடே - பரப்போடு. வரத்து - வருதலால். (வரத்து - தொழிற்பெயர் மூன்றனுருபுத்தொகை). ஆன் ஐ ஆடுவர - பஞ்சகவ்வியம் அபிடேகம் கொள்வோராகிய சிவபெருமானை. (இரண்டனுருபாகிய 'ஐ' செய்யு ளாதலின் அகரமாகத் திரிந்து நின்றது). தழுவத்தொடே - தழுவத்தொடு தலால் (தொடு - முதனிலைத் தொழிற் பெயர்). முலை - முலைத் தழும்பு. (காரண ஆகுபெயர்). கம்பம் - தம்பம்போல் உறுதியான அவர்மார்பில் இருப்பது.

8. பண்டு, அரக்கன் - இராவணன். எடுத்த - கைலையையெடுத்த பலத்த வலிமையை. பாய்ந்து - மேற்சென்று. அரக்கல் - சிதறுவித்தலால். நெடுத்த-மிக்க. அபலத்தையே-வலியின்மையையே. கொண்டு-கொள்வித்து (பிறவினை விகுதி குன்றியது) அரக்கியதும் - கால்விரலை அழுத்தியதும். கோள் - முனிவரேவலால் கொலை செய்யும்பொருட்டு. அரக்கியது - அடர்த்துவந்தமையை. கால்வும் - கக்கியதும் - (நீக்கியதும்) இரலையே- மான்கன்றே என்றது முனிவர் வேள்வியினின்று கொல்லவந்த மான் கன்றைக் கையிலேந்திய வரலாறு. உம்கால் என்பதைக் கால்+உம் என்று மாற்றிக் கால்வும்எனக. "தொட்டனைத் தூறும்" என்ற திருக்குறளிற்போல உம்மை பிரித்துக் கூறப்பட்டது. உண்டு - பிச்சை யெடுத்துண்டு. உழன்றதும் - திரிந்ததும். தலைமுண்டத்திலே - தலைமண்டையோட்டிலே. உடுபதி - சந்திரன். அத்தலையில் - அந்தத்தலையில். இடம் உண்டு -

தூணியான சுடர்விடு சோதியே
சுத்தமான சுடர்விடு சோதியே
பேணியோடு பிரமப் பறவையே
பித்தனான பிரமப் பறவையே
சேணினோடு கீழூழி திரிந்துமே
சித்தமோடு கீழூழி திரிந்துமே
காணநின்றன ருற்றது கம்பமே
கடவுணீயிட முற்றது கம்பமே. 9

ஒருடம்பினை யீருரு வாகவே
யுன்பொருட்டிற மீருரு வாகவே
ஆருமெய்தற் கரிது பெரிதுமே
யாற்றவெய்தர் கரிது பெரிதுமே
தேரரும்மறி யாது திகைப்பரே
சித்தமும்மறி யாது திகைப்பரே
கார்நிறத்தம ணர்க்கொரு கம்பமே
கடவுணீயிடங் கொண்டது கம்பமே. 10

தங்குவதற்கு இடம் உண்டு. ஒரு கம்பமே - உலகைத் தாங்கும் தூண் போன்ற சிவபெருமானே. கண்டம் - கழுத்து.

9. தூணி - அம்பறாத் தூணியாகிய நெற்றி விழியினின்றும். ஆன - தோன்றிய. சுடர்விடு - ஒளிவீசும். சோதி - அக்கினிப் பொறிகள். சுத்தமான - இயல்பாகவே பாசங்களின் நீங்கிய. சுடர்விடு - ஞானமயமாகிய. சோதி - முருகக்கடவுளாம். நெற்றிவிழிப்பொறி அம்பாகநின்று காமனை எரித்தலால் நெற்றிவிழி தூணியாயிற்று. பேணி-தன்வலிமையைப் பாராட்டி. ஓடு - முடிகாண்பான் சென்ற. பிரமம் - பெரிய. பறவை - பறத்தலையுடைய, பித்தனான, பிரமப்பறவை - பிரமனாகிய அன்னப்பறவை. சேணினோடு-ஆகாயத்திலும். (திருமாலாகிய பன்றி) கீழ் - பாதாளத்திலும். ஊழிதிரிந்து - ஊழிக்காலம் திரிந்து. சித்தமோடு - தங்கள் மனச்செருக்கோடு. கீழ் - தங்கள் கீழ்மைத் தன்மையும். ஊழி - முறையே. திரிந்து - மாறுபட்டு. காண நின்றனர் - உம்மைக் காண நின்ற அவர்கள். உற்றது - கண்டது. கம்பமே - அக்கினி ஸ்தம்பமாகிய உமது வடிவத்தையே. ஊழ் - முறை. ஊழ் + இ = ஊழி முறையை யுடையது. வினைமுதற் பொருள் விகுதி.

10. ஓர் உடம்பினை - யானையின் ஓர் உடம்பை. ஈர் - உரித்ததாகிய தோல். உருஆக - உடம்பில் (போர்வை) ஆகவும். ஈர் - ஈர்தல்,

கந்தமார்பொழில் சூழ்தரு கம்பமே
காதல்செய்பவர் தீர்த்திடு கம்மமே
புந்திசெய்வது விரும்பிப் புகலியே
பூசுரன்றன் விரும்பிப் புகலியே
அந்தமில்பொரு ளாயின கொண்டுமே
யண்ணலின்பொரு ளாயின கொண்டுமே
பந்தனின்னியல் பாடிய பத்துமே
பாடவல்லவ ராயின பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

முதனிலைத் தொழிற்பெயர் இங்கு ஆகுபெயர். உன் பொருள் திறம் - உம்முடைய உண்மைத் தன்மை. ஈர் உரு ஆக - சத்தி சிவம் என்னும் இரண்டு திறத்தது ஆகவும். ஆரும் - உமது உடம்பில் கலந்த. மெய்தன் - அம்பிகையின் திருவுடம்பின். கரிது - கரிய நிறம். பெரிது - மிகவும் ஒளிவாய்ந்தது. ஆற்றல் - ஆன்ம முயற்சியினுல், எய்தற்குப், பெரிதும் அரிது - உம்முடைய திருவடி முற்றிலும் அடைய முடியாதது. தேரரும் - புத்தரும். சித்தமும் - அவர் அறிவுகளும். மறியா - தம் நிலைமை மாறமாட்டா. துதி கைப்பர் - ஆதலால் உம்மைத் துதித்தலை வெறுப்பர். ஒரு கம்பமே - உம்மை நினைத்தாலே ஒரு பெரிய நடுக்கம். மழைத்துளி போல வந்தீண்டலால் அறிவுகள் எனப்பட்டது.

11. கம்பமே - திரு ஏகம்பத்தையே. காதல் செய்பவர் - விரும்புபவர்கள். தீர்ந்திடு(தல்) உகு அம்பம் - (வருந்திச்) சொரிகின்ற துக்கக் கண்ணீர், தீர்த்திடுதல் முதனிலைத் தொழிற்பெயர். அம்பம் அம் சாரியை அம்பு - தண்ணீர். புந்தி செய்து - எல்லாம் சிவன் செயலாகப் பாவித்து. விரும்பி - விருப்பங்கொண்டு. புகலியே - சீகாழியையே இருப்பிடமாகக் கொண்ட. பூசுரன்தன் - சம்பந்தப் பெருமானின் விரும்பிப் புகலியே - விரும்பிச் சரண்புக்க, இடமானவன். அந்தமில் பொருள் ஆயின கொண்டு - அறிவிலாப் பொருளாந்தன்மையை உட்கொண்டு. அண்ணலின் - சிவபெருமானின், பொருளாயினகொண்டு-புகழை விஷயமாகக்கொண்டு பாடிய பத்தும் வல்லவர்க்கு. ஆயின - உரியஆயின. பத்தும் - பத்தியின் வகைகளும் - ஆயின என்ற பண்பைப் பயனிலையாற் பத்தியின் வகைகள் என எழுவாய் கூறப்பட்டு, பத்தியின் வகைகள் பத்திசெலுத்தும் வகைகள்.

# 115 திரு இயமகம்

373 பதிகவரலாறு

அகத்திருளாகிய அறியாமை கெட உலகில் திருவவதாரம் புரிந்தருளிய சண்பை மன்னர், திருவாலவாய்ச் சொக்கநாதரைப் பாடித், திருநீலகண்டப்பாணர்க்கு அருளிய திறமும் போற்றியது இத் திருப்பதிகம்.

**திருவியமகம் பண் - பழம்பஞ்சுரம்**

திருச்சிற்றம்பலம்

ஆலநீழ லுகந்த திருக்கையே
யானபாட லுகந்த திருக்கையே
பாலினேர்மொழி யாளொரு பங்கனே
பாதமோதலர் சேர்புர புங்கனே
கோலநீறணி மேதகு பூதனே
கோதிலார்மன மேவிய பூதனே
ஆலநஞ்சமு துண்ட களத்தனே
யாலவாயுறை யண்டர் களத்தனே. 1

1. ஆலம் நீழல் - கல்லாலின் நீழலில். உகந்தது - விரும்பியது. இருக்கை - இருப்பிடம். இருக்கை - வேதத்தை. ஓர் பங்கன் - ஒரு பங்கில். இடப்பாகத்தில் உடையவன். பாதம் ஓதலர் சேர் புரபங்கன் - தமது திருவடியைத் துதியாதவராகிய அசுரர் இருந்த திரிபுரத்தை அழித்தவன். கோலம் நீறு அணி - அழகிய திருநீற்றைப் பூசிய. மேதகுபூதனே - சிறந்த பூதகணங்களை உடையவனே. கோது இலார் - குற்றமற்ற அடியாரது. மனம் மேவிய - மனத்தின் கண் தங்கிய பூதன் - உயிர்க்கு உயிராய் இருப்பவனே. பூதம் - உயிர். 'பூதம் யாவையின் உள் அலர் போதென' எனவரும் சேக்கிழார் திருவாக்கால் அறிக. (திருமலைச் சிறப்பு 33-ம்பாடல்) களத்தன் - கண்டத்தை உடையவன். அண்டர்கள் அத்தன் - தேவர்களுக்குத் தந்தைமேவி அபூதனெனலே பொருந்துவது. பொருந்திக் காணப்படாதவன்.

பாதியாவுடன் கொண்டது மாலையே
பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலையே
கோதினீறது பூசிடு மாகனே
கொண்டநற்கையின் மானிட மாகனே
நாதனுமொடொறு மாடுவ தானையே
நாடியன்றுரி செய்தது மானையே
வேதநூல்பயில் கின்றது வாயிலே
விகிர்தனூர்திரு வாலநல் வாயிலே. 2

காடுநீட துறப்பல கத்தனே
காதலால்னினை வார்தம கத்தனே
பாடுபேயொடு பூதம சிக்கவ
பல்பிணத்தசை நாடிய சிக்கவே
நீடுமாநட மாடவி ருப்பனே
நின்னடித்தொழ நாளுமி ருப்பனே
ஆடனீள்சடை மேவிய வப்பனே
யாலவாயினின் மேவிய வப்பனே. 3

2. பாதியா - உடம்பில் பாதியாக மாலை - திருமாலை (சங்கர நாராயண வடிவம்) ஆகன் - மார்பை உடையவன் கையில் மான்இடம், ஆகன் - ஆகியவன். ஆகு+அன்=இரண்டு உறுப்பால் முடிந்த பகுபதம். ஆடுவது ஆன் ஐ - அபிடேகம்கொள்வது பஞ்சகவ்யம். உரிசெய்ததும் - உரித்ததும். வேதநூல் பயில்கின்றது - வேதநூலைப் படிப்பது. வாயிலே - தமது திருவாயினால். விகிர்தன், ஊர் நல் திருவாலவாயில் - ஊராக இருப்பது நல்ல திருவாலவாயில்.

3. நீடது - பரவியதாகிய. காடு - சுடுகாட்டில். பலகத்தனே - எல்லா வற்றிற்கும் கர்த்தாவாய் இருப்பவனே. அகத்தனே - மனதில்இருப்பவனே. பூதம் - பூதகணங்கள். மசிக்க - குழைவித்து. பல்பிணத்தசை நாடி அசிக்கவே - பலபிணத்தினுடைய சதைகளை விரும்பி உண்ண. நடமாட விருப்பன் - திருக்கூத்தாடுதலில் விருப்பமுடையவன். இருப்பான் - இருப்போன். ஆடல்-அசைதலையுடைய. சடைமேவிய அப்பன் - சடையில் பொருந்திய தண்ணீரை உடையவன். அப்பன் - சர்வலோகத் தந்தை.

பண்டயன்றலை யொன்று மறுத்தியே
பாதமோதினர் பாவ மறுத்தியே
துண்டவெண்பிறை சென்னி யிருத்தியே
தூயவெள்ளெரு தேறியி ருத்தியே
கண்டுகாமனை வேவ விழித்தியே
காதலில்லவர் தம்மை யிழித்தியே
அண்டநாயக னேமிகு கண்டனே
யாலவாயினின் மேவிய கண்டனே. 4

சென்றுதாதை யுகுத்தனன் பாலையே
சீறியன்பு செகுத்தனன் பாலையே
வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலையே
வீடவெட்டிடக் கண்டுமுன் காலையே
நின்றமாணியை யோடின கங்கையால்
நிலவமல்கி யுதித்தன கங்கையால்
அன்றுநின்னுரு வாகத் தடவியே
யாலவாயர ருகத் தடவியே. 5

4. அறுத்தி - அறுத்தாய். பாதம்ஓதினர் பாவம்மறுத்தி - பாதத்தைத் துதிப்பவர்களுக்கு பாவம் உண்டு என்பாரை மறுத்து இல்லை என்று கூறுவாய். இருத்தி - இருக்கமெய்தவன். ஏறிஇருத்தி - ஏறிஇருப்பாய். இருத்தி - முதலது வினையால் அணையும் பெயர். மற்றது வினைமுற்று. விழித்தி - விழித்துப்பார்த்தாய். காதல் இல்லவர் தம்மை - அன்புஇல்லாவர்களை. இழித்தி - கீழ்ப்படச்செய்வாய். அண்டநாயகனே-தேவர்களுக்குத் தலைவனே. அண்டர் நாயகன் "சிலவிகாரமாம் உயர்திணை" என்பது விதி. மிகுகண்டனே - குற்றங்களை நீக்குபவன் என்பதில் பண்புப்பெயர் விகுதியாகிய ஐகாரம் கெட்டது. ( "பிழையெல்லாம் தவிரப்பணிப்பானை" என்றதன்கருத்து ) மேவிய × அகண்டன் - எழுந்தருளியுள்ள அளவிட முடியாதவன். மேவிய என்னும் பெயரெச்சத்து விகுதி விகாரத்தால் தொக்கது. "தொட்டனைத்தூறும் மணற்கேணி" - என்ற திருக்குறளிற் போல.

5. முன்காலை - முற்காலத்தில். நன்பாலை - அபிடேகத்திற்கு வைத்த நல்லபாலை. தாதை - தந்தையாகிய எச்சதத்தன், சென்று - போய். சீறி - சினந்து. உகுத்தனன் - கவிழ்த்து. அன்பு - அன்போடு செய்யும் பூசையை. செகுத்தனன்பால் (ஐ) - அழித்த அவனிடத்தில். மழுக்கொண்டு - கிடந்த கோலை மழுவாகக் கொண்டு. முன்காலை-முன்கால்களை. வீட - துண்டித்து

நக்கமேகுவர் நாடுமோ ரூருமே
நாதன்மேனியின் மாசுண மூருமே
தக்கபூமனைச் சுற்றக் கருளொடே
தாரமுய்த்தது பாணற் கருளொடே
மிக்கதென்னவன் றேவிக் கணியையே
மெல்லநல்கிய தொண்டர்க் கணியையே
அக்கினுரமு துண்கல னோடுமே
யாலவாயர னுருமை யோடுமே. 6

விழ. வெட்டிட - வெட்ட. நின்றமாணியை - அங்கேயிருந்த பிரமச்சாரியாகிய அவ்விசாரசருமரை கண்டு - பார்த்து. ஓடினகங்கையால் - பரந்தகங்கைநதி முதலியவற்றை அணிந்தகோலத்தோடு. உதித்து - இடபவாகனத்தின்மேல் வெளிப்பட்டருளி அனகம் - அவர்செய்தபர்தகம் புண்ணியமான தன்மையினாலே. அன்று - அன்றைக்கு. நின்னுருவாகத் தடவி - மானிடஉருவம்மாறி நினது வடிவமாகக் கையால் தடவினவனே! ஆலவாய்அரன் - ஆலவாயில் எழுந்தருளிய சிவபெருமானே. அகத்தது - உமது உடம்பில் அணிவதாகிய ஆடை, மாலை முதலியவற்றையும். அடு - உமக்கென்று சமைத்த. அவி - உணவையும் அல்லவா? அன்று நீர் அருளியது. உகுத்தனிடன் - முற்றெச்சம். அன்பு - பூசைக்கு, ஆகுபெயர் ஓடினகங்கையால் - ஆல், ஒடுப்பொருளில் வந்தது. சிவபெருமான் வந்த கோலம் "செறிந்தசடை நீண்முடியாரும் தேவியோடும் விடையேறி" எனவும் தடவினமை "மடுத்தகருணையால் உச்சிமோந்து மகிழ்ந்தருள" எனவும், (நின்னுருவாக) உருமாறினமை "செங்கண்விடையார் திருமலர்க்கை தீண்டப்பெற்ற சிறுவனார், அங்கண்மாயை யாக்கையின் மேலளவின்றுயர்ந்த சிவமயமாய்" எனவும், ஆகத்தது அடு அவியும் அருளியது-"நாம் உண்டகலமும், உடுப்பனவும் சூடுவனவும் உனக்காக" எனவும், சேக்கிழார் பெருமான் அருளிச்செய்கின்றார். ஆகத்தது-ஆகத்து என விகாரமுற்றது. அருளியது என்பது அவாய் நிலையான் வந்தது. "எல்லாம் மழை" என்ற திருக்குறளிற்போல.

6. நாடும் - நாடுகளிலும் ஓர் ஊரும் - ஒவ்வொரு ஊர்தோறும். நக்கம் மேகுவர் - ஆடையில்லாத கோலத்தோடு பிச்சைக்குச் செல்வர். மேனியில் - திருமேனியில். மாசுணம் - பாம்பு. ஊரும் - ஊர்ந்துகொண்டிருக்கும். "தக்க பூமனைச் சுற்றக் கருளொடே தாரமுய்த்தது பாணற்கருளொடே" என்றது திருவாலவாயில் தரிசிக்கவந்த திருநீலகண்டயாழ்ப் பாணரை கோயிலுக்கு அழைத்துவரும்படி அடியார்களுக்குச் சிவபெருமான் கனவில் ஏவ, அவ்வாறே வந்து அவர்பாடும்பொழுது அவர்க்குப் பொற்பலகை தந்த திருவிளையாடலை சம்பந்தப்பெருமான்

வெய்யவன்பல் லுகுத்தது குட்டியே
வெங்கண்மாசுணங் கையது குட்டியே
ஐயனேயன லாடிய மெய்யனே
யன்பினால்நினை வார்க்கருண் மெய்யனே
வையமுய்யவன் றுண்டது காளமே
வள்ளல்கையது மேவுகங் காளமே
ஐயமேற்ப துரைப்பது வீணையே
யாலவாயரன் கையது வீணையே. 7

அருளிச்செய்தது. தக்க - சிறந்த. பூ - பொலிவுற்ற. மனை - திருநீல கண்ட யாழ்ப்பாணர் தங்கியிருந்த மனையில். சுற்ற - அடியார் சுற்றிக் கொண்டு அழைக்க. கருளொடு - இரவில் கனவில் அவர்களுக்கு அருளியபடி. பாணற்கு - அவ்வாறு வந்து கோயிலில் பாடிய திரு நீல கண்ட யாழ்ப்பாணர்க்கு, அருளோடு உய்த்தது - அருளோடுசெலுத்தியது. தாரம் - உயர்ந்த பொருளாகிய பொற்பலகை. கருள் - கருமைநிறம். மும்மடியாகுபெயராய் வந்தது. கருமை இருட்டுக்கானது பண்பாகு பெயர். இரவுக்கானது தானியாகுபெயர். இரவு, கனவிற்கானது கால வாகுபெயர். இவ்வரலாறு பெரிய புராணத்தில் "தொண்டர்க்கெல்லாம் மற்றை நாட் கனவில் ஏவ, அருட்பெரும் பாணனாரை தெற்றினார் புரங்கள் செற்றார் திருமுன்பு கொண்டு புக்கார்" "மாமறை பாடவல்லார் முன் பிருந்து யாழிற்கூட்டல் முதல்வரைப் பாடுகின்றார்" "பாணர் பாடும் சந்த யாழ் தரையில் சீதம் தாக்கில் வீக்கு அழியுமென்று சுந்தரப் பலகை முன் நீரிடுமெனத் தொண்டர் இட்டார்" எனக்கூறப்படுகிறது. (திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் புராணம் பாடல்கள் 3, 4, 6.) சேக்கிழார்பெருமான் இப்பதிகத்து ஆறும்பாடலில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருநீலகண்ட யாழ்ப்பாணரைக் குறித்தனர் என்பதை "திருவியமகத்தினுள்ளும் திரு நீலகண்டப் பாணர்க்கு அருளிய திறமும் போற்றி" என அருளிச் செய் கின்றார். (திருஞானசம்பந்தர் புராணம் 870-ம் பாடல்) பாணற்கு - பாண பத்திரர்க்கு. அருளொடு - கிருபையோடு. தென்னவன் தேவி-மங்கையர்க் கரசியார்க்கு. அணியை - மங்கிலியம் முதலிய ஆபரணங்களை, மெல்ல நல்கிய - மெல்லக்கொடுத்தருளிய என்றது "பாண்டிமாதேவியார் தமது பொற்பின் பயிலும் நெடுமங்கல நாண் பாதுகாத்தும் பையவே செல்க" என்று இக்கருத்தைச் சேக்கிழார் சுவாமிகள் விளக்குகிறார்.

7. வெய்யவன் - சூரியன். பல் உகுத்தது குட்டி - பல்லை உதிர்த்தது கையால் குட்டி. கையது - கையில். வெங்கண் - கொடிய. மாசுணங் குட்டி - பாம்புக்குட்டி. கையது - கையில் இருப்பது. அனலாடிய மெய்யனே - நெருப்பில் ஆடிய உடம்பை உடையவன். அருள் மெய்யன்-

தோள்கள்பத்தொடு பத்து மயக்கியே
தொக்கதேவர் செருக்கை மயக்கியே
வாளரக்க னிலத்துக் களித்துமே
வந்தமால்வரை கண்டு களித்துமே
நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே
நின்விரற்றலை யான்மத மத்தனே
ஆளுமாதி முறித்தது மெய்கொலோ
வாலவாயர னுய்த்தது மெய்கொலோ. 8

பங்கயத்துள நான்முகன் மாலொடே
பாதநீண்முடி நேடிட மாலொடே
துங்கநற்றழ லின்னுரு வாயுமே
தூயபாடல் பயின்றது வாயுமே
செங்கயற்கணி னாரிடு பிச்சையே
சென்றுகொண்டுரை செய்வது பிச்சையே
அங்கியைத் திகழ்விப்ப திடக்கையே
யாலவா யரனார திடக்கையே. 9

நிச்சயமாக அருள்பவன். காளம் - விடத்தை. வள்ளல் - கடவுளது. கையது - கையில் இருப்பது. மேவு கங்காளம் - பொருந்திய எலும்புக் கூடு. ஐயம் ஏற்பது - பிச்சை எடுப்பதும். வீண் - பயனற்றது

8. தோள்கள் பத்தொடு பத்து மயங்கி - இருபது தோள் வலிமை யையும் சேர்த்து. தேவர் செருக்கை, மயக்கி - மயங்கச்செய்து (அழித்து) இது திக்குவிசயம்பண்ணின காலத்தின் நிகழ்ச்சி. வந்த - தன்னைத் தடுக்க வந்த (வந்த - நின்ற என்னும் பொருட்டுளது) உகளித்து - துள்ளி (உகள் - பகுதி) உன்மத்தன் - ஒன்றும் தெரியாதவன் ஆகி. நின்விரல் தலையால் - உமது விரல் நுனியால். மதம் - தனது மதம். அத்தன் - அழிந்தவனாகி. ஆளும் - அனைத்து உலகையும் ஆளுகின்ற. ஆதி - முதல்வராகியதாம். முறித்தது - முறியச்செய்தது. மெய்கொலோ - அவனது உடம்பைத் தானோ? ஆலவாய், அரன் - அரனே! உய்த்ததும் - வரங்கொடுத்து அவனை மீளச் செலுத்தியதும். மெய்கொலோ - உண்மை யான வரலாறுதானோ?

9. மாலொடு - திருமாலொடு. நேடிட - தேட. மாலொடு - மயக்கத்தோடு, துங்கம் நல் தழலின் உரு ஆயும் - உயர்ந்த நல்ல அக்கினி வடிவமாயும். தூயபாடல் பயின்றது வாயுமே - அவருடையவாயும் தங்கள் பிழையை மன்னித்து அருள்புரியும்படி தூயபாடல்களைப் பாடியது.

தேரரோ டமணர்க்குநல் கானையே
தேவர்நாடொறுஞ் சேர்வது கானையே
கோரமட்டது புண்ட ரிகைத்தையே
கொண்டநீள்கழல் புண்ட ரிகத்தையே
நேரிலூர்க ளழித்தது நாகமே
நீள்சடைத் திகழ்கின்றது நாகமே
ஆரமாக வுகந்தது மென்பதே
யாலவாயர ஞரிட மென்பதே. 10

ஈனஞானிக டம்மொடு விரகனே
யேறுபல்பொருண் முத்தமிழ் விரகனே
ஆனகாழியுண் ஞானசம் பந்தனே
யாலவாயினின் மேயசம் பந்தனே
ஆனவானவர் வாயினு ளத்தனே
யன்பரானவர் வாயினு ளத்தனே
நானுரைத்தன செந்தமிழ் பத்துமே
வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

செங்கயல் க(ண்)ணினர் - முனிவர்பத்தினிகள். இடு - இட்ட. பிச்சை - பிச்சையை. சென்று - போய். கொண்டு - ஏற்று. உரை செய்வது - பேசுவது. பிச்சை - அவர்களுக்குப் பித்து உண்டாக்கும் விதத்தையே.

10 நல்கானை - அருள் செய்யாதவனை. கானை-(கடம்ப) வனத்தை. கோரம் அட்டது புண்டரிகத்தை - கொடும் தன்மையைக் கொன்று ஒழித்தது புலியை. கொண்ட நீள்கழல் புண்டரிகத்தையே - திருமால் இட்ட கண்ணாகிய தாமரைப்பூவை கொண்டன திருவடிகளே. நேரில் ஊர்கள் அழித்தது நாகமே - தமக்கு விரோதமாகிய திரிபுரத்து அசுரர் ஊர்களை அழித்த (மகாமேரு) மலையாம். என்புஅது - எலும்பு. ஆரமாக உகந்தது - மாலையாக விரும்பியது. அரனார் இடம் என்பது ஆலவாய்.

11. ஈனஞானிகள் தம்மொடு விரகனே - அறிவிலிகளுடன் சேராத சூழ்ச்சியை உடையவன். விரகு - சூழ்ச்சி. ஏறுபல்பொருள் - பல பொருள்களை அடக்கிய. முத்தமிழ்விரகன். சம்பந்தன் - உரிமையுடையவன் ஆன - பொருந்திய. வானவர், வாயினுள் - வாயினுள் துதிக்கப்படுகின்ற. அத்தன் - சர்வலோகநாயகன். அன்பரானவர் - அடியார்களுக்கு. வாய் - வாய்த்த. இன் - இனிய. உளத்தன் - உள்ளத்தில் இருப்பவன்.

# 116 திருவீழிமிழலை

374 பதிகவரலாறு

திருவீழிமிழலையில் வழிபட்டுக் கொண்டிருந்த காலத்தில் பாடியருளிய தமிழ்த் தொடைமாலைகளுள் ஒன்று இத்திருப்பதிகம்.

திருவியமகம் பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

துன்றுகொன்றைநஞ் சடையதே தூய கண்டநஞ் சடையதே
கன்றின் மானிடக் கையதே கல்லின் மானிடக் கையதே
என்று மேறுவ திடவமே யென்னி டைப்பலி யிடவமே
நின்ற தும்மிழலை யுள்ளுமே நீரெனைச் சிறிது முள்ளுமே. 1

ஓதி வாயதும் மறைகளே யுரைப்ப தும்பல மறைகளே
பாதி கொண்டதும் மாதையே பணிகின் றேன்மிக மாதையே
காது சேர்கனங் குழையரே காத லார்கனங் குழையரே
வீதி வாய்மிகும் வேதியா மிழலை மேவிய வேதியா 2

1. நம் - உமது. இடவமு அமைதி. இத்திருமுறை 114 ஆவது பதிகம் ஆரும்பாடலில் காண்க. நஞ்சு அடையது - நஞ்சு அடைதலை உடையது. அடை - முதல் நிலைத்தொழிற்பெயர். கன்றின்மான் - மான் கன்று, இடக்கையது. கல்லின் - இமயமலையின் மான் - மகளாகிய மான் போன்ற உமாதேவியார். இடம்கைஅது - இடப்பக்கத்தில் இருப்பது, மான் என்பதற்கு ஏற்ப கையது என ஒன்றன் பாலால் முடித்தார். கை - பக்கம். பலியிட - நான் பிச்சைஇட. என்இடை - என்னிடத்திற்கு. வம் - வருவீராக. வம்மின் என்பது வம் என நின்றது. "கதுமெனக் கரைந்து வம்மெனக்கூஉய்" என்பது மதுரைக் காஞ்சி. "செய்யாய் என்னும் முன்னிலைவினைச்சொல் செய்யென்கிளவி ஆகிடன் உடைத்தே" என்பது தொல்காப்பியம். நின்றதுமிழலையுள்ளும் - நின்றதும் என்பதின் உம்மை அசை. வம்என்பது ஏவற்பகுதி; பன்மை 'மனிதர்காள் இங்கே வம்'

2. மறைகளே - வேதங்களே. மறைகளே - பிறர் எவர்க்கும் தெரிய அரிய பொருள்கள். மறை - இரகசியம். மாதை - பெண்ணை மிகும்மாதை - மிகும் அழகை. குழையர் - குண்டலத்தை உடையவர். காதலார் - காதல் செய்யும் பெண்களின். கனம் - மனத்திண்மையை.

பாடு கின்றபண் டாரமே பத்த ரன்னபண் டாரமே
சூடு கின்றது மத்தமே தொழுத வென்னையுன் மத்தமே
நீடு செய்வதுந் தக்கதே நின்ன ரைத்திகழ்ந் தக்கதே
நாடு சேர்மிழலை யூருமே நாக நஞ்சழலை யூருமே. 3

கட்டுகின்ற கழ லுகமே காய்ந்ததும் மதன லுகமே
இட்டமாவ திசை பாடலே யிசைந்த நூலினமர் பாடலே
கொட்டுவான் முழவம் வாணனே குலாயசீர் மிழலை வாணனே
நட்ட மாடுவது சந்தியே நானுய்தற் கிரவு சந்தியே. 4

3. (பாடுகின்ற) பண்டாரம் - சைவ அடியார். பண்டாரம் - நீதிநிலை. மத்தம் - பொன்னூமத்தை, (தொழுத என்னை உன் மத்தம் நீடு செய்வது) தக்கதே - தகுமா? அரை - இடுப்பில். திகழ்ந்தது - விளங்குவது. அக்கு அதே - அக்குப்பாசியே. திகழ்ந்தது - திகழ்ந்தென மருவி நின்றது. நாடு சேர் - மிழலை நாட்டைச் சேர்ந்த, மிழலை ஊரும் - உமது ஊராவதும். மிழலை வெண்ணிநாட்டிலொன்றுளதாகலின், இங்குக் குறித்தது மிழலை நாட்டினதென்பார் 'நாடுசேர்' என எங்கள் சம்பந்தப்பெருமான் அருளினூர். இதனை, "மிழலைநாட்டு மிழலை, வெண்ணி நாட்டு மிழலையே" என்ற வன்றொண்டப் பெருந்தகையார் வாக்காலறிக. (திருமுறை 7, பதிகம் 12-5) நஞ்ச - நைந்த. அழல் - விடம். ஐகாரம் சாரியை, நாகம், ஊரும் - உமது உடம்பில் ஊரும் "நாதன் மேனியில் மாசுணம் ஊருமே" என மேல் முற்பதிகம் ஆறும்பாடலில் வந்ததூஉம் காண்க.

4. கழல் - வீரகண்டை. நாகமே - பாம்பே. (மதனன்) ஆகம் - உடம்பு. காய்ந்ததும் - எரித்ததும்,இட்டமாவது - விருப்பம் ஆவது, இசை பாடல் - அடியார் இசைபாடக் கேட்டலில், அதனை, "கோழைமிடறாக கவிகோளுமிலவாக இசைகூடும் வகையால் ஏழையடியாரவர்கள் யாவை சொன, சொன்மகிழும் ஈசன்" எனவும் "அளப்பில கீதம் சொன்னார்க் கடிகடாம் அருளுமாறே" எனவும் வரும் திருப்பதிகங்களால் உணர்க. இசைந்த - பொருந்திய, நூலின் - நூலின் அமைதிக்கு. அமர்பு - ஏற்ற தாயிருப்பது. ஆடலே - அவர் திருக்கூத்தே. பரத சாத்திர முறையே ஆடுகின்றனர் என்ற கருத்து. அவ்வாடலுக்கு வாணன் முழவங் கொட்டு பவன். மிழலை வாணன் - அவர் மிழலையில் வாழ்பவர். நட்டம் ஆடுவது - திருக்கூத்தாடுவது. சந்தி என்னும் நாடக உறுப்பின்படியேயாம். சந்தி யாவது நாடக நூலின் ஒரு சிறந்த பகுதி. அது, நெற்பயிர் வளர்ந்து, நிமிர்ந்து, கருக்கொண்டு, காய்த்து, வளைந்து முடிசாய்வது போன்றது. இது நூலின் இலக்கணமாயினும் ஆடுதலிலும் நுதலிய பொருளை அங்ஙனம்

ஒவி லாதிடுங் கரணமே யுன்னு மென்னுடைக் கரணமே
ஏவு சேர்வுநின் ஞாணையே யருளி னின்னபொற் ருணையே
பாவி யாதுரை மெய்யிலே பயின்ற நின்னடி மெய்யிலே
மேவி னுன்விறற் கண்ணனே மிழலை மேயமுக் கண்ணனே. 5

வாய்ந்த மேனியெரி வண்ணமே மகிழ்ந்து பாடுவது வண்ணமே
காய்ந்து வீழ்ந்தவன் காலனே கடுநடஞ் செயுங் காலனே
போந்த தெம்மிடை யிரவிலே புகுமிடைக் கள்வ மிரவிலே
வேய்ந்ததும் மிழலை யென்பதே விரும்பியேயணிவ தென்பதே. 6

அமைத்துக் காட்டுக என்னும் வழியை இங்கே நமது சம்பந்தப் பெருமான் விளக்கியருளுகிருர். "சந்தியிற்றொடர்ந்து" என்பது தண்டியலங்காரம் "சந்தியின் வளர்ந்து" என்பர் திருவாவடுதுறை ஆதீனம் கச்சியப்ப முனிவர். (பேரூர்ப்புராணம் நாட்டுப்படலம்) நான், உய்தற்கு - காமன் வாதையினின்றும் பிழைப்பதற்கு. இரவு - இராக்காலம். சந்தி - சந்து செய்விப்பதாகும். தலைவிகூற்று.

5. ஓவிலாது - (மகாசங்கார காலம் வரையும்) ஓயாமல். இடும் (சத்தியைச் செலுத்தி ஐந்தொழிலையும்) நடத்தும். கரணம் - சிறந்த கரண பூதராய் இருப்பவரே "யாதுசிறந்த காரணம் அது கரணம்" என்பது தருக்க நூல். கரணம் - ( என்னுடைய ) மனமுதலிய அகக்கருவிகள். உன்னும் - உம்மையே நினைக்கும். ஏவு - மன்மதபாணம். சேர்வும் - என் மேல்தைப்பதும், நின் ஆணையே - உமது ஆணையின்படிதானே? நின்ன - உம்முடைய. பொற்றாள் - பொன்போன்ற திருவடிகளை. அருளின் - அருளினுல். நை(தல்)ஏ - துன்புறுதல் எனக்கு நேருமா? நை - நைதல். ஏ - வினுப்பொருட்டு. இதுவும் தலைவி கூற்று. பரவியது - (உம்மை மனத்துக்) கருதாது. உரை - உரைப்பன. மெய்இல் - உண்மையில்லா தனவே. இல் - பகுதியே நின்று வினைமுற்றுப்பொருளையுணர்த்திற்று. "பெறுவதுகொள்வாரும் கள்வரும்நேர்" என்ற திருக்குறளிற்போல. (814) விறல் - வலியோனுகிய, கண்ணன் - திருமால். உன்அடி - உமது திருவடியை. மெய்யிலே - உண்மையாகவே. மேவினுன் - பொருந்தப் பெற்றான்.

6. மேனி, எரிவண்ணம் - தீயின்வண்ணம். பாடுவது - தேவரீர் பாடுவதும். வண்ணம் - பலவண்ணப்பாடல்களேயோ, வண்ணம் சந்தம் இவை தாளத்தோடு பாடற்குரிய இயலிசைப் பாடல்கள். காலன் - யமன், கால்களையுடையவன். எம்மிடைப்போந்தது - எங்கள் வீட்டிற்கு வந்தது

அப்பி யன்றகண் ணயனுமே யமரர் கோமகனு மயனுமே
ஒப்பி லின்றமரர் தருவதே யொண்கையா லமரர் தருவதே
மெய்ப்ப யின்றவ ரிருக்கையே மிழலை யூரும திருக்கையே
செப்புமின் னெருது மேயுமே சேர்வுமக் கெருது மேயுமே. 7

தானவக்குலம் விளக்கியே தாரகைச் செல விளக்கியே
வான டர்த்த கயிலாயமே வந்து மேவு கயிலாயமே
தானெ டுத்தவல் லரக்கனே தடமுடித் திரள ரக்கனே
மேன டைச்செல விருப்பனே மிழலை நற்பதி விருப்பனே. 8

இரவில் - பிச்சையேற்றலைமுன்னிட்டு. உம்மிடை - உம்மோடு. இரவில் - இராக்காலத்தில். கள்வம் - கள்ளத்தனமாகப்புணர்வோம். இடை - உருபு மயக்கம். (அணிவது) என்பு. (அது) எலும்பு - தலைவிகூற்று.

7. அப்பு - கடலில். இயன்ற-தூங்குகின்ற. கண் - கண்ணையுடைய ஐயனும்-திருமாலும். அயனும் - பிரமனும். ஐயன் - அயன் என வந்தது போலி. அப்பு - ஆகுபெயர். அமருக்கு நீருவது. ஒப்பு இல் - ஒப்பு இல்லாதது. ஒண் - சிறந்த. கையால் - கையினால். அமரர்தரு அதே - தேவர்களின் கற்பக விருட்சமே ஆயினீர். திருமால் முதலியதேவர்கட் கெல்லாம் கேட்டவற்றை ஒப்பின்றி வழங்கி வருவதால் உமது திருக்கரம் கற்பகவிருட்சத்துக்குச் சமமாகும் என்பது முன்னிரண்டடிகளின் கருத்து. மெய் - மெய்யுணர்தலோடு. பயின்றவர் - தவம்புரிவோர்களின்உள்ளமே இருக்கை - உமது இருப்பிடமாம். செப்புமின் - சொல்வீராக. எருது மேயுமே - உமக்கென்றுள்ள விளைபுலமாகிய என் பெண்மை நலத்தில் மன்மதன் அம்பாகிய எருது மேயலாகுமா? தலைவி கூற்று. குறிப்புருவருகம். சேர்வு - அதை ஓட்ட அங்கு வருவதற்கு நான்கனுருபுத்தொகை. உமக்கு எருது ஏயும் - உமக்கு எருதும் இருக்குமே.

8. தானவர்குலம் - அசுர குலத்தை. விளக்கி - (சிவனைப் பகைத்த எவ்வலியினோரும் அழிவரென்பதை) விளக்கினீர். தாரகை - தாரகை முதலாக ஒளிதரும் பொருளெல்லாவற்றின். செலவு - ஒளிவீசுவதை. இளக்கி - உமது பேரொளியாற் குன்றச் செய்தீர். தாரகை - உபலட்சணம். இளகுதல் - திண்மை குலைதல். வான் - தேவர்களை. அடர்த்த - மோதிய. கையில் ஆயம் - கையின் வலிமை மிகுதியினால். ஆயம் - கூட்டம். இங்கே வலிமையின் மிகுதியைக் குறித்தது. கயிலாயம் எடுத்த அரக்கன். தடமுடித்திரள் அரக்கனே - பெரிய தலையின் கூட்டங்கள் நொறுங்கப் பட்டவன் ஆனான். மேல் நடைச்செல - (விமானத்திலின்றி) நடையாகச் செல்ல. இருப்பன் - இருப்பீர். இட வழுவமைதி.

காய மிக்கதொரு பன்றியே கலந்த நின்னவுரு பன்றியே
ஏய விப்புவி மயங்கவே யிருவர் தாமன மயங்கவே
தூய மெய்த்திர ளகண்டனே தோன்றி நின்றமணி கண்டனே
மேய வித்துயில் விலக்கணா மிழலை மேவிய விலக்கணா. 9

கஞ்சியைக் குலவு கையரே கலக்கமா ரமணர் கையரே
அஞ்ச வாதிலருள் செய்யநீ யணைந்திடும் பரிசு செய்யநீ
வஞ்சனே வரவும் வல்லையே மதித்தெ னைச்சிறிதும் வல்லையே
வெஞ்ச லின்றிவரு வித்தகா மிழலைசே ரும்விறல் வித்தகா. 10

9. காயம் மிக்கது ஒரு பன்றி - பெரிய உடம்பையுடைய திருமாலாகிய பன்றியும். இருவர் - பிரமனுமாகிய இருவரும். இப்புவி - இப்பூமியில். மயங்க - சேர. நின்ன உருபு அன்றி - உமது அடிமுடிகளின் உருவம் தங்களாற் காணப்படுவ தொன்று அல்லாமையினால், மனம் மயங்க - மனம் கலங்க. மெய்த்திரள் - உடம்பாகிய அக்கினிப் பிழம்பு, அகண்டனே - அளவிடப்படாதவனாகி. தோன்றி நின்ற மணி கண்டனே - அவர்கட்கு முன் வெளிப்படுகின்ற நீலகண்டத்தை யுடையவரே. மேய - நான் இப்போது உற்ற, இத்துயில் - இப்பொய்த் தூக்கத்தை. தூக்கம்பிடியாத. அண்ணா - தலைவனே. விலக்கு - நீக்குவீராக. இலக்கணா - அழகனே, லட்சணம் என்பது வடசொல். அண்ணா - தலைவனே என்ற பொருளில் "அண்ணாவுன்னையல்லால் இனியாரை நினைக் கேனே" எனப் பயின்று வருவது காண்க.

10. கஞ்சியை - கஞ்சியை. குலாவு - கொண்டாடிப்பற்றி. கையா - கையையுடையவர்களாகிய பவுத்தர். கஞ்சி - தானியாகுபெயர். கையர் - வஞ்சகர். வாதில் அஞ்ச அருள் - வாதில் தோற்று அஞ்ச அருளிய. செய்ய - செய்யோனாகிய நீ. அணைந்திடும் பரிசு செய்ய தழுவும் சூழ்ச்சி, செய்வதை நீ வஞ்சனே - நீக்கும் வஞ்சகனே. (வினைத்தொகை). எனைச்சிறிதும் - சிறிதளவேனும், மதித்து வல்லையே - விரைவில் வரவும் வல்லையே. வருவீரா. அடியருக்கு பகைவர் அஞ்ச - அடியருக்கு அருளும் செவ்வியோனாகிய நீ காமன் அஞ்சுமாறு எனக்கும் அருளுவை என் பாள் (செய்ய-) நடுநிலைமையோனாகிய நீ என்றாள். எஞ்சல் இன்றி - குறைதல் இல்லாமல். வரு - மேன்மேலும் வருகின்ற. இவ் - இத்துய ரங்கள், தகா - எனக்குத் தகா. (இவ் + தகா = இத்தகா என்றாயிற்று. புறனடைச் சூத்திர விதியால் உ - ம் "பூசனை ஈசனார்க்குப் போற்ற இக் காட்டினோம்" (இவ் × காட்டினோமே என்னும் திருநேரிசை) வித்தகா- சதுரப்பாட்டை உடையவனே! அவிஎனல் ஆகாதோ?

மேய செஞ்சடையி னப்பனே மிழலைமே வியவெ'னப்பனே
ஏயு மாசெய விருப்பனே யிசைந்த வாசெய விருப்பனே
காய வர்க்கசம் பந்தனே காழி ஞானசம் பந்தனே
வாயுரைத்த தமிழ் பத்துமே வல்லவர்க்கு மிவை பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

11. சடையின் அப்பன் - சடையில் தரித்த நீரையுடையவன். என் அப்பனே - எந்தையே. ஏயும் ஆ(று) - பொருந்திய விதமாக. செய - முத்தொழிலையும் உன் சந்நிதியில் அவரவர் செய்ய. இருப்பனே - வாளா இருப்பவனே! என்பது "மூவண்ணல் தன் சந்நிதி முத்தொழில் செய்ய வாளா மேவண்ணல்" என்னும் திருவிளையாடற் புராணத்தில் வருங் கருத்து. காயவர்க்கம் - ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களோடு - அசம் பந்தனே (தோயந்தும்) தோய்வில்லாமலிருப்பவனே. வர்க்க × அசம் பந்தன் - வர்க்க சம்பந்தன் என மருவி வந்தது. காயம் - முதற்குறை. (காயவர்க்கம் - உடற்கூட்டம். பிறப்பிலான்)

பெறுபயன் மிகப்புவியுள் அருளுவன பிற்றைமுறை
பெருநெறி யளிப்பனபல் பிறவியை யொழிச்சுவன
உறுதுய ரளிப்பனமுன் உமைதிரு வருட்பெருக
உடையன நதிப்புனலின் எதிர்பஃறி உய்த்தனபுன்
நறுமுறு குரைச்சமணை நிரைகழு நிறுத்தியன
நணிகத வடைத்தனது னருவிட மகற்றியன
துறுபொழில் மதிற்புறவ முதுபதிமன் ஒப்பரிய
தொழில்பல மிகுத்ததமிழ் விரகன கவித்தொகையே.

தொகுவார்பொழில் சுற்றிய வான்மதி தோயு மதிற்கனமார்
தொலையாததிருப் பொழில் மாளிகை மாட நெருக்கியசீர்
மிகுகாழிமன் முத்தமி ழாகரன் மேதகு பொற்புனைதார்
விரையார்கம லக்கழ லேதுணை யாக நினைப்பவர்தாம்
*மகராதர நித்தில நீர்நிலை யார்புவி யுத்தமராய்
வரலாறு பிழைப்பினி %னூழி யிலக்கிதமா
தகுவாழ்வு நிலைத்தெழில் சேரற மான பயிற்றுவர்மா
சது ரால்வினை செற்றதன் மேலணு கார்பிற விக்கடலே.

—ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்,

*மகராகரமோ? %ஒருசீர் இல்லை

# 117 சீகாழி

375 பதிகவரலாறு

திருநாவுக்கரசரொடு திருக்காழியில் வழிபட்டிருந்து, பிரியாத நண்பொடும் அவர் பலதலங்களைத் தரிசிக்கப் போந்தபின் செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களை அருளினார் சண்பைவேந்தர். அவற்றுள் ஒன்றாக வந்த சொற்சீர் மாலைமாற்று இத்திருப்பதிகம்.

பதிகக்குறிப்பு: மாலைமாற்று என்பது முதலிலிருந்து இறுதிவரை படித்தால் அமையும் பாடலே, இறுதியிலிருந்து முதல்வரை, படிப்பினும் அமைவது. அதைச்சிறுவர்கட்குக் குடகு, விகடகவி என்று கூறிக் காட்டுவர். சொல்லணியில், கூடசதுக்கம், கோமூத்திரி. சுழிகுளம், மாலை மாற்று இவைகளை மிறைக்கவிஎன்பர். எளிதில் பொருள் காணமுடியாத பாடல் என்பது அதன்பொருள். மாதவச்சிவஞானயோகிகள் காஞ்சிப் புராணத்திலும், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை திரு நாகைக் காரோணப்புராணத்திலும் இவைபோன்ற கவிதைகளை யமைத்துள்ளனர்.

திருமாலைமாற்று பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா. 1

1. யாம் - ஆன்மாக்களாகிய நாங்கள் கடவுளென்றால். ஆமா - அதுபொருந்துமா? நீ - நீயே கடவுளென்றால். ஆம்ஆம் - முற்றிலும் தகு வதாகும். (ஏகான்மவாதிகளை மறுத்தது.) மாயாழீ - பேரியாழ் என்னும் வீணையை வாசிப்பவனே. ("எம்மிறை நல்வீணை வாசிக்குமே என்பது அப்பர் திருவிருத்தம்) காமா - யாவரும் விரும்பத்தக்க கட்டழகனே. காண் - (தீயவும் நல்லவாம் சிவனைச்சேரின் என்பதை யாவரும்) காணுமாறு பூண்ட. நாகா - பாம்புகளையுடையவனே, காணாகாமா - கை, கால் முதலிய அவயவங்கள் காணாதனவாச்செய்தகாமனையுடையவனே. (காமனை யுருவழித்தவனே.) சினைவினை முதன்மேல் நின்றது. காழீயா - சீகாழிப்பதியில் எழுந்தருளியிருப்பவனே. மாமாயா - இலக்குமிக்குக்

யாகாயாழீ காயாகா தாயாராரா தாயாயா
யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா. 2

தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா. 3

கணவனுன திருமாலாகவும் வருபவனே (நான்கனுருபும்பயனும் தொக்க தொகை) "நாரணன்காண் நான்முகன்காண்" என்பது திருத்தாண்டகம். மா-கரியதாகிய. மாயா - மாயைமுதலிய மலங்களினின்றும். நீ - எம்மை விடுவிப்பாயாக. மலம்கரியதென்பதை "ஒருபொருளுங் காட்டாது இருளுருவம் காட்டும், இரு பொருளும் காட்டாதிது" என்னும் திருவருட் பயனுலறிக. (இருண்மலநிலே. 3) மாயா - வடசொல், உபலட்சணம்.

2. யாகா - யாகசொரூபியே. யாழீ - யாழ்வாசிப்பவனே. காயா - அடியாருக்கு அருள வருகையில் உருவத்திருமேனி கொள்பவனே. காதா - சங்காரகருத்தாவே. காதுதல் - செல்லுதல். வடசொல். யார்ஆர் - எவரெவருக்கும். ஆ - (பெற்றவள்) ஆகும். தாய் ஆயாய் - தாயானவனே. (ஆ + தாய் - வினைத்தொகை) ஆயா - ஆராயமுடியாத. தார் - மாலே. ஆர்ஆயா - ஆத்திப்பூவாகக் கொண்டவனே. (சிவனுக்குரிய மாலேகளில் திருவாத்தியும் ஒன்று) தாகஆயா - காதல் கொண்ட முனிபத்தினிகளாகிய மகளிர்கூட்டத்தை யுடையவனே (தாகஆயன் குளாம்பல், மராடிஎன்பது போற்கொள்க) காழீயா! யா - துன்பங்கள் எவற்றினின்றும் கா - எம்மைக் காப்பாயாக.

3. தாவா - அழியாத. மூவா - மூப்பில்லாத (என்றும் இளமையாய் உள்ள) தாசா - தசகாரியத்தால் அடையும் பொருளாக உள்ளவனே. காழீநாதா - சீகாழிக்குத்தலேவனே! நீ - எவரும் சஞ்சரிப்பதற்கு அஞ்சி நீக்குகின்ற, யாமா - நள்ளிரவில் நட்டமாடும் பயின்றுடும் நாதனே. மா - பெருமை வாய்ந்தவனே! (பண்பாகுபெயர்) மா - ஐராவணமாகிய யானேயின்மேல், யா நீ - ஏறிவருபவனே! தாநாழி - (தான + ஆழி) = கொடையில் கடல்போன்றவனே. சா - சாவதினின்றும். கா - காப்பாற்றுவாயாக. காசா - இரத்தினம் போன்ற ஒளியை உடையனே! தா - கேட்டவரங்களே எல்லாம் தருவாயாக. வா - என் முன் எழுந்தருள்வாயாக. மூ - எவற்றினும் முன்னே தோன்றிய வாதா - காற்று முதலாக உள்ள ஐம்பூத

$ ஆரமும் பூண்டிலர்போலும் ஆமையணிந்திலர்போலும் (ஆர் + அம் அம்தனி மொழிக்கண் வந்தசாரியை, ஆர் - திருஆத்தி. திருமுறை 2. திருப்பிரமபுரம்.

நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ. 4

யாகாலாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயமே லாகாயா. 5

வடிவாய் உள்ள. தாவா மூவா இத்தொடர்கருத்து, "சாவா மூவாச் சிங்கமே" எனச் சிறிது மாறி அப்பர் வாக்கில் வருவது காண்க.

தசகாரியமாவது:- தத்துவரூபம்; தத்துவதரிசனம்; தத்துவநீக்கம்; ஆன்மரூபம்; ஆன்மதரிசனம்; ஆன்மநீக்கம்; சிவரூபம்; சிவதரிசனம்; சிவயோகம்; சிவபோகம் என்பன. (சுத்திக்கு நீக்கம் என்று கொண்டார் இக்குறிப்புரை எழுதினவர்,

யாகம் - வடசொல். மா-இங்கு இரண்டாயிரம் கொம்புகளை உடைய ஐராவணத்தைக் குறித்தது. தான + ஆழி - தீர்க்கசந்தி. கருணைக்கடல் என்றதுபோல் கொடைக்கடல் என்றார். காசா:- 'மழபாடியுள் மாணிக்கமே' என்ற சுந்தரமூர்த்திகள் வாக்கால் அறிக. வாதம் - காற்று. உப இலக்கணத்தால் ஏனைய பூதங்களையும் தழுவிற்று.

இலக்கணக்குறிப்பு : மூவாத்தாசா என்று மிக வேண்டியது இயல்பாயிற்று. காரணம் வருமொழித் தகரம் வடமொழியின் மெல்லோசை உடைத்து ஆதலின். தாசன் - தத்திதாந்த பதம்.

4. நீவா - என்றும் மாறுத. வாயா - உண்மைப் பொருளானவனே. கா - தாங்கிய. யாழீ - வீணையினையுடையவனே. வான்நோவாராமே - கொடிய பிறவித் துயரம் எம்மை எய்தாமல், காவா - (காகா) வந்து காத்தருள்வாயாகா, வான் - தேவர்கள். நோவாவா - துன்பமடையாவாறு. மேரா - மேரு மலையை ஏந்தியவனே. காழீயா - சீகாழிப் பதியுள் எழுந்தருளியுள்ளவனே. காயா - ஆகாய சொரூபியே. வாவாநீ - நீ விரைந்து வருவாயாக. வாய்-உண்மை. காயாழி - வினைத்தொகை. வான் நோ நல்ல பாம்பு என்பதைப்போல. வான் - கொடுமையின் மிகுதி என்னும் பொருளில் வந்தது. காயா - முதற்குறை. வாவா - அடுக்கு; விரைவுப் பொருட்டு.

5. யா-எவையும் வணங்கத்தக்க. யா - எவற்றிற்கும் காலா - கால வடிவமாக உள்ளவனே. மேயா - எவற்றினுள்ளும் எள்ளில் எண்ணெய் போல் வியாபித்து இருப்பவனே. மேதாவீ - அறிவில் மேம்பட்டவனே. தாய் ஆவி - எவ்வுயிருக்கும் தாயாகவும் உயிராகவும் உள்ளவனே. வீயாதா - என்றும் அழிவில்லாதவனே. வீ-கின்னரம் முதலிய பறவைகள்

மேலேபோகா மேதேழீ காலாலேகா லானுயே
யேனுலாகா லேலாகா ழீதேமேகா போலேமே. 6

நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ. 7

(தாம்-அசை) மே - தன்னருகாமையில் வந்து விழும்படியாக. யாழீ - வீணைவாசிப்பவனே. யாம் - நாங்கள் மேல் - மேற்கொண்டு. ஆகு - ஆவனவற்றிற்கு. ஆயா - ஆயாதவாறு. கா - எம்மைக் காப்பாயாக (இலக்கணக்குறிப்பு) காலதத்துவமாகஉள்ளவன் சிவபெருமானே என்பது "காலமே உனை என்று கொல் காண்பதே" (திருவாசகம்) ஆயா - ஈறு கெட்ட எதிர் மறைவினை எச்சம். ஈற்றுத் தொடரில் ஆய்தலாவது. "மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கேபுகுமாறும் அண்ணு எண்ணக்கடவேனு" என்பது (திருவாசகக்கருத்து) வீதாமேயாழி யாழிசையிற்பறவைகள் வந்து வீழ்வதைக் காந்தருவதத்தையாரிலம்பகத்தாலும் அறிக. யாழீ - என்பதற்கு "குழலன்கோட்டன்" என்ற திருமுருகாற்றுப் படைக்கு நச்சினுர்க்கினியர் உரைத்தது உரைக்க.

6. மேலேபோகாமே - மார்க்கண்டேயர் மீது எமன் போகாமல் தேழீ - கடுங்குரலால் உரப்பினவனுய். காலாலே - காலினுலே. கால் ஆனுயே - (அவ்வெமனுக்கு) காலன் ஆனவனே. ஏல் - பொருந்திய. நால்-சனகர் முதலிய நால்வருக்கும். ஆகி - குருவாகிய. ஆல் - கல்லால மரத்தில். ஏலா - எற்றவனே. காழீதே - சீகாழியிலுள்ள தெய்வமே. மேகா - (திருமால் மேகவடிவங்கொண்டு வாகனமாகி நிற்க) அந்த மேகத்தை வாகனமாகக் கொண்டருளியவனே. போலோமே - யாங்கள் உமது பல்கணத்தில் ஒருவராக எண்ணப்படுதற்கு அத்திருமாலை ஏத்திலோமோ ?

7. நீயா - (உம்மை) நீங்குதல் அறியாத மாநீ (மாணீ) - உமாதேவியை உடையவனே. ஏயா - ஒப்பற்ற. மாதா - தாயே, ஏழீ - ஏழிசை வடிவாய் உள்ளவனே. காநீதானே - நீயே வலியவந்து என்னைக் காப்பாயாக. நே - அன்பார்ந்த இடத்தை. தாநீ-இடமாக உடையவனே. காழிவேதா - சீகாழியில் எழுந்தருளியுள்ள வேதசொரூபியே. மாய் - எம்மைக்கொல்லும். ஆநீ - துன்பங்களை. நீ மாயாயேந - நீ கொல்ல மாட்டாயா ? மான் - மானைப்போன்றவர். மாநீ - மானை உடையவன். ஏழீ - ஏழ்தொகைக் குறிப்பாக இசையை உணர்த்தியது. "ஏழிசையாய் இசைப்பயனுய்" சுந்தரமூர்த்திகளின் வாக்கினுலும் அறிக. காநீதானே - "அழையாமே அருள் நல்குமே" என்னும் திருவோத்தூர்த் திருப்பதிகத்தில்

நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி ராவணனே. 8

காலேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேலேகா. 9

நமது அடிகளார் கூறினமை காண்க. தாரீ - தானத்தை (இடத்தை உடையவனே) எங்களைக் கொல்லும் துன்பத்தை நீ கொல்லமாட்டாயா? என்பது ஓர் நயம்.

8. நேணவராவிழயாசைழியே, நே, அணவர், ஆ, விழ, யா, ஆசை, இழியே. நே அணவர் - (உமது திருவடியில்) நேயம் பொருந்தும் அடியவராம், ஆ - பசுக்கள். விழ - தன் வயமற்றுக் கிடக்க. யா - (யாத்த) கட்டிய, ஆசை - ஆசையாகிய கயிற்றை இழியே - அவிழ்த்து விடுபவனே. அடியவரைப் பசுவென்று, ஆசையைக் கயிறென்றமை யால் ஏகதேச உருவகம். நேணவர் - நே + அணவர் எனவும், யாசைழியே - யா, அசை, இழியே எனவும் பதம் பிரித்துக் கொள்க. யா + ஆசை = வினைத்தொகை; நேணவர் - யாசைழியே இவ்விரு தொடரும் மரூஉ முடிபின. வேகதளேரியளாயுழிகா - வேக(ம்) அதரி ஏரி, அளாய உழி, காவேகம். விலங்குகளில் வேகமாய் ஓடவல்ல - மானின், அதள் தோலையணிந்த, ஏரி - அழகனே. (ஏர் - அழகு, இகர விகுதி ஆண்பாலில் வந்தது. அளாய உழி - துன்பங்கள் எம்மைச் சூழ்ந்த விடத்து. கா - காப்பாற்றுவாயாக. அளாய என்பதற்கு வினை முதல் வருவித்து உரைக்கப்பட்டது. காழியு(ள்)ளாய்! அரிளேதகவே. அரு, இளவு, ஏது, அகவே. ஏதம் - குற்றம். அது கடைக் குறைந்து ஏது என நின்றது. இளவு - சிறுமைத் தன்மை. இளப்பம், இளந்தலை, இளக்காரம், எனவும் வழங்கும். உகரம் - பண்புப்பெயர் விகுதி. அஃகவே என்பது அகவே என நின்றது. அருஏதம் - மன்னித்தற்கரிய குற்றங்கள். இளவு - (எமது) சிறுமைத் தன்மையால் செய்தனவாதலின், அஃகவே - அவை மன்னிக்கத் தக்கன ஆகுக. (அஃகுதல் - சுருங்குதல் இங்குக் குறைந்து மன்னிக்கற்பாலது என்னும் பொருளில் வந்தது.) ஏழிசை இராவணனே - ஏழிசை பாடிய இராவணனுமல்லவா பெரும் பிழையும் மன்னிக்கப் பெற்றுத் திருவருளுக்குப் பாத்திரமாயினன். யா - முன் னிலையசை. செருக்கினால் செய்த பெரும் பிழையை மன்னித்த கருணை சிறுமையாற் செய்த பிழைகளை மன்னிக்கவும் தகும்மன்றடி யுவாறு.

9. காலே - காற்றுருகி யெங்கும் கலந்தவனே. மாலே - எவர்க்கும் மாயம் செய்பவனே. மால் - மயக்கம், மாயம் - மாயமென்னும்

வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட ளோகரதே
தேரகளோடம ணேநினையே யேயொழிகாவண மேயுரிவே. 10

நேரகழாமித யாசழிதா யேனனியேனனி ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயாதமி ழாகரனே. 11

திருச்சிற்றம்பலம்

திருமாலுக்கும் மாயம்செய்பவனுகையினுல் சிவபெருமானுக்கு மாயனென்ருெருபெயர் "மறவனை யன்று பன்றிப் பின்சென்ற மாயனை" என்னும் சுந்தரமூர்த்தி நாயனுர் திருநள்ளாற்றுப் பதிகத்தாலும் "மாயனே மறிகடல் விடமுண்டவானவா" என்னும் திருவாசகம் செத்திலாப் பத்தானும் அறிக. மே - சிறந்த. பூ - மலர்ந்த. பூ மேல் ஏ(ய்) - பிரமனும். மாலே - மாலும். காலே - திருவடியையும். மேலே - திருமுடியையும். காண் - காணலே. நீ - ஒழித்த. காழீ - வைரத்தன்மையனே. காழீ! காண் - கடைக்கணி. கால் ஈ - திருவடியைத் தருக. கா :-

10. வேரி-மணம். ஏண்-பெருமை. நவம் - புதுமை காழியாயே:- ஏனை-துன்பத்தையும். நீள்நேம்-மிக்க அன்பையும். அடு-முறையேஒழி(த்தலும்) அள் - அள்ளிக்கொள்ளுதலுமாகிய செய்கை. ஓகரது ஏ - யோகிகளுடைய செய்கையே. தேரகளோடு-தேரர்களின் உபதேசங்களோடு. அமணே - அமணர்களின் உபதேசங்களையும். நினை - நினைத்தலையும். ஏய் - அவரோடு பொருந்துதலையும். ஒழி - ஒழிப்பிப்பீராக. காவணமே-அந்நெறிகளிற் சேராமற்காக்கும் திறம். உரிவே-உமக்கு உரியவேயாகும். உரிவே - உரியவே என்பதன் மரூஉ.

11. நேர் - நேர்மையை. அகழ் ஆம் - கல்லியெறிவதாகிய. இதய ஆசு-மனத்துக் கண் எழும் (காம வெகுளி மயக்கம் என்னும்) முக் குற்றங்களையும். அழி - அழிக்கவல்லவனே. அழீ என்பதன் குறுக்கல்விகாரம். தாய் ஏல் நன் நீயே - உலகுக்கெல்லாம் தாயாந்தன்மையை யேற்கத் தக்கவன் நீ ஒருவனே. "மூவேழுலகுக்கும் தாயே" என்ற திருவாசகத்தும் அறிக (புணர்ச்சிப்பத்து) வாழ்+ந்+அன்=வாணன் என்ருகியதுபோல ஏல்+ந+அன்=ஏனன் என்ருகியது. நல் - நன்மை புரிவதில். நீள் - மிக்கோனே. நீள் முதனிலைத் தொழிற்பெயராய் ஆகுபெயர்ப் பொருளில் நின்று குறுக்கல் விகாரமுற்ற விளிவேற்றுமை. ஆய் உழிகா - தளர்ந்த இடத்துக் காப்பாயாக. தமிழாகரன் - தமிழே உடம்பாக உடைய திருஞானசம்பந்தனேன். காழியுளானின் - சீகாழிப் பதியானைப்பற்றிய. நையே - கேட்டோர்மனம் குழைப்பதாகிய இப்பாடல்களை. நினையே - நினைத்துப் பாடவே. தாழ்(வு), குறைவும் - இசையா - உண்டாகா.

# 118 திருக் கழுமலம்

376 பதிக வரலாறு

தொண்டரோடும், திருநாவுக்கரசரும் தாமும், அன்பும் நண்பும் பொங்கியதாகலின், கும்பிட்டு வரும் நாளில் பாடிய சொன்மாலைகளுள் ஒன்று இத்திருப்பதிகம்.

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

மடன்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும்
வன்னியு மத்தமுஞ் சடைமேற்
படலொலி திரைகண் மோதிய கங்கைத்
தலைவனூர் தம்மிடம் பகரில்
விடலொலி பரந்த வெண்டிரை முத்த
மிப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக்
கடலொலி யோத மோதவந் தலைக்குங்
கழுமல நகரென லாமே. 1

மின்னிய வரவும் வெறிமலர் பலவும்
விரும்பிய திங்களுந் தங்கு
சென்னிய துடையான் றேவர்தம் பெருமான்
சேயிழை யொடுமுறை விடமாம்
பொன்னியன் மணியு முரிகரி மருப்புஞ்
சந்தமு முந்துவன் றிரைகள்
கன்னிய ராடக் கடலொலி மலியுங்
கழுமல நகரென லாமே 2

1 மடல் - இதழ். படல் ஒலி - (ஒலிபடல்) ஒலிபொருந்துதலை உடைய. விடல் - வீசுவதால். ஒலி பரவிய. வெண்திரை - வெண்மையாகிய அலைகள்.

2. முரி - வளைந்த.

சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபந்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனூர் தங்கிட மெங்கும்
ஊருறு பதிக ளுலகுடன் பொங்கி
யொலிபுனல் கொளவுடன் மிதந்த
காருறு செம்மை நன்மையான் மிக்க
கழுமல நகரென லாமே. 3

மண்ணினு ரேத்த வானுளார் பரச
வந்தரத் தமரர்கள் போற்றப்
பண்ணினு ரெல்லாம் பலபல வேட
முடையவர் பயில்விட மெங்கும்
எண்ணினுன் மிக்கா ரியல்பினு னிறைந்தா
ரேந்திழை யவரொடு மைந்தர்
கண்ணினு லின்பங் கண்டொளி பரக்குங்
கழுமல நகரென லாமே. 4

சுருதியான் றலையும் நாமகண் மூக்குஞ்
சுடரவன் கரமுமுன் னியங்கு
பரிதியான் பல்லு மிறுத்தவர்க் கருளும்
பரமனூர் பயின்றினி திருக்கை
விருதினுன் மறையு மங்கமோ ராறும்
வேள்வியும் வேட்டவர் ஞானங்
கருதினு ருலகிற் கருத்துடை யார்சேர்
கழுமல நகரென லாமே. 5

3. சைவனூர் - சிவனுக்கு ஒரு பெயர். ஊர்உறுபதிகள் - பல ஊர்களுக்குத் தலைமையாய் உற்ற நகரங்கள். கார்உறுசெம்மை - பருவ காலத்தில் பெய்தலும் மிகுமழையும் குறைமழையும் இல்லாமையுமாம்.

4. பரச - துதிக்க. அமரர் - தேவர். வானுளோர் அவர் ஒழிந்த பிரம விட்டுணுக்கள் முதலியோர்.

5. சுருதியான் - பிர்மா. சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் :- கணவனுக்குத் தலையும் மனைவிக்கு மூக்கும் போயினது என்பது ஓர் நயம். சுடரவன் - அக்நி. கரம் - கையை (வெட்டினமை) "வெய்யவன்

புற்றில்வா ளரவு மாமையும் பூண்ட
புனிதனார் பனிமலர்க் கொன்றை
பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த
படிறனார் பயின்றினி திருக்கை
செற்றுவன் றிரைக ளொன்றொடொன் றோடிச்
செயிர்த்துவண் சங்கொடு வங்கங்
கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங்
கழுமல நகரென லாமே. 6

அலைபுனற் கங்கை தங்கிய சடையா
ரடனெடு மதிலொரு மூன்று
கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட
குழகனார் கோயில தென்பர்
மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு
மற்றுமற் றிடையிடை யெங்குங்
கலைகளித் தேறிக் கானலில் வாழுங்
கழுமல நகரென லாமே. 7

ஒருக்கமுன் னினையாத் தக்கன்றன் வேள்வி
யுடைதர வுழறிய படையார்
அரக்கனை வரையா லாற்றலன் றழித்த
வழகனா ரமர்ந்துறை கோயில்
பரக்குவண் புகழார் பழியவை பார்த்துப்
பலபல வறங்களே பயிற்றிக்
கரக்குமா றறியா வண்மையால் வாழுங்
கழுமல நகரென லாமே. 8

அங்கி விழுங்கத் திரட்டிய கையைத் தரித்தான் என்று உந்தீபற" என்பது திருவாசகம்.

6. படிறனார் - வஞ்சகர். காலில் தேய்த்த மதியையே தலையில் வைத்தமையின் படிறனார் என்றார். (படிறு - வேறு கருத்து உண்மை)

7. கண்ட - செய்த. சிறப்புவினை பொதுவினைக்காயிற்று.

8. உழறிய - உழற்றிய; கலங்கச் செய்த. இசைநோக்கி உழறிய என்று ஆயிற்று. பயிற்றி - மிகச்செய்து.

அருவரை பொறுத்த வாற்றலி னானு
மணிகிளர் தாமரை யானும்
இருவரு மேத்த வெரியுரு வான
விறைவனு றுறைவிடம் வினவில்
ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ண
மொலிபுனல் வெள்ளமுன் பரப்பக்
கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங்
கழுமல நகரென லாமே. 9

உரிந்துய ருருவி லுடைதவிர்ந் தாரு
மத்துகில் போர்த்துழல் வாருந்
தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச்
செம்மையார் நன்மையா லுறைவாங்
குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை
மல்லிகை சண்பகம் வேங்கை
கருந்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங்
கழுமல நகரென லாமே. 10

கானலங் கழனி யோதம்வந் துலவுங்
கழுமல நகருறை வார்மேல்
ஞானசம் பந்த னற்றமிழ் மாலை
நன்மையா லுரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி
யுள்ளமு மொருவழிக் கொண்டு
வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்
மற்றிதற் காணையும் நமதே. 11

திருச்சிற்றம்பலம்

9. அருவரை - கோவர்த்தனமாலை. கருவரை - கரியமலைபோன்ற மலை - அன்மொழித்தொகை.

10. உரிந்து - ஆடை உரிந்து. (உடையை நீக்கி). ஒரு கூட்டத்தார் ஆடையே இல்லாதவர். மற்றொரு கூட்டத்தார் ஒன்றுக்கு ஐந்தாக ஆடை போர்த்தவர் என ஒரு நயம். அத்துகில் - ஐந்து என்னும் குறிப்பில்வந்த பண்டறிசுட்டு.

11. கானல் - கடற்கரைச்சோலை. கானல் கழனி என வருவதால் கீழ்பால் நெய்தல் நிலமும், ஏனைப்பால் மருதநிலமும் உள்ளமை குறித்த வாறு.

# 119 திரு வீழிமிழலை

377 பதிகவரலாறு பதிகம் 116 பார்க்க :

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

புள்ளித்தோ லாடை பூண்பது நாகம்
பூசுசாந் தம்பொடி நீறு
கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டங்
காளியைக் குணஞ்செய்கூத் துடையோன்
அள்ளற்கா ராமை யகடுவான் மதிய
மேய்க்கமுட் டாழைக ளானை
வெள்ளைக் கொம்பினும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே 1

இசைந்தவா றடியா ரிடுதுவல் வானோ
ரிழுகுசந் தனத்திளங் கமலப்
பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய் கரப்பாய்
பத்திசெய் யாதவர் பக்கல்
அசும்புபாய் கழனி யலர்கயன் முதலோ
டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை
விசும்புதூர்ப் பனபோல் விம்மிய வீழி
மிழலையா னெனவினை கெடுமே 2

நிருத்தன்ஆ றங்கன் நீற்றன்நான் மறையன்
நீலமார் மிடற்றன்நெற் றிக்கண்
ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கு முயிரா
யுளனிலன் கேடிலி யுமைகோன்

1. ஆமையின் வயிறு சந்திரனையும், தாழம்பூ யானைக்கொம்பையும் ஒக்கும் எனக் கூறிய உவமை நயம் அறிந்து மகிழத்தக்கது.

2. துவல் - (தூவல் என்பதன் விகாரம்) மலர் - அடியார் இடும் தூவல்.

திருத்தமாய் நாளு மாடுநீர்ப் பொய்கை
சிறியவ ரறிவினின் மிக்க
விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 3

தாங்கருங் காலந் தவிரவந் திருவர்
தம்மொடுங் கூடினா ரங்கம்
பாங்கினாற் றரித்துப் பண்டுபோ லெல்லாம்
பண்ணிய கண்ணுதற் பரமர்
தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச்
செண்பகம் வண்பலா விலுப்பை
வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி
மிழலையா னெனவினை கெடுமே 4

கூசுமா மயானங் கோயில்வா யிற்கட்
குடவயிற் றனசில பூதம்
பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி
பாதிநற் பொங்கர வரையோன்
வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர்
மலரணைந் தெழுந்தவான் தென்றல்
வீசுமாம் பொழிற்றேன் றுவலைசேர் வீழி
மிழலையா னெனவினை கெடுமே 5

3, திருத்தம் - தீர்த்தம்.

4. வெயில் புகா - மரங்களின் அடர்த்தியால் வெயிலும் நுழையாத சோலை. "வெயில் நுழைபு அறியாக்குயில் நுழைபொதும்பர்" என்பது மணிமேகலை. தாங்க அரும் காலம் - மகாசங்காரகாலத்தில் தவிர - தம் தொழிலும் நீங்க இருவர் தம்மொடுங் கூடினார். பிரமன் திருமாலிடத்தும் திருமால் உருத்திரபகவானிடத்திலுமாகக் கூடினார். ஒடுங்கினவர்களாகிய அவ்விருவரின், அங்கம் - எலும்புகளை.

5. கூசும் - எவரும் அடைவதற்குக் கூசுகின்ற. குடவயிறு - குடம் போலும் வயிறு.

பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்
பங்கயத் தயனுமோர் பாலர்
ஆதியாய் நடுவா யந்தமாய் நின்ற
வடிகளா ரமரர்கட் கமரர்
போதுசேர் சென்னிப் புரூரவாப் பணிசெய்
பூசுரர் பூமக னனைய
வேதியர் வேதத் தொலியறா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 6

தன்றவம் பெரிய சலந்தர னுடலந்
தடிந்தசக் கரமெனக் கருளென்
றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத்
திறையவன் பிறையணி சடையன்
நின்றநாள் காலை யிருந்தநாண் மாலை
கிடந்தமண் மேல்வரு கலியை
வென்றவே தியர்கள் விழாவறா வீழி
மிழலையா னெனவினை கெடுமே 7

கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த
கரமுரஞ் சிரநெறிந் தலற
அடுத்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க
வருளினன் றடமிகு நெடுவாள்

6. பாதியோர் மாதர்-உடம்பிற் பாதியில் ஒரு பெண்ணையுடையவர். மாலுமோர் பாகர் பங்கயத்தனுமோர் பாகர் என்றது ஏகபாத திரிமூர்த்தி வடிவம். புரூரவா : சந்திரகுலத்து அரசன் ; பாண்டவர் முன்னோன் இங்கு அவன் திருப்பணி செய்த வரலாறு கூறுகிறது. இவ்வாறே கோச் செங்கட்சோழர் திருப்பணி முதலியவற்றைக் கூறுதல் மேற் காண்க.

7. ஆலயத்திற்கு விண்ணிழி விமானம் என்று பெயர். அது திரு மாலால் கொணர்ந்து தாபிக்கப்பெற்றது எனல் இரண்டாம் அடியில் குறித்த பொருள்.

படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள்
பதங்களை யோதப்பா டிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே 8

அளவிட லுற்ற வயனொடு மாலு
மண்டமண் கெண்டியுங் காணா
முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த
முக்கணெம் முதல்வனை முத்தைத்
தளையவிழ் கமலத் தவிசின்மே லன்னந்
தன்னிளம் பெடையொடும் புல்கி
விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக்கு
மிழலையா னெனவினை கெடுமே 9

கஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக்
கலதிகள் கட்டுரை விட்டு
அஞ்சித்தே விரிய வெழுந்தநஞ் சதனை
யுண்டம ரர்க்கமு தருளி
இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின்
குலையொடும் பழம்விழத் தெங்கின்
மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே 10

8. கடுத்த - சினத்த. இராவணன் திருவைந்தெழுத்தை ஓதி, சிவனுக்கு இழைத்த பிழையினின்றும் தப்பினர் என்பது இரண்டாமடியில் குறித்த பொருள். இதனைப் ''பண்டை இராவணன்பாடி உய்ந்தனன்'' என மேல் வந்தமை (இத்திருமுறை பதிகம் 22, பாடல் எட்டில்) காண்க.

9. கெண்டி - இடந்து. தாமரைப்பூ சிம்மாசனமாகவும் அதன்மேல் பெடையோடிருந்த அன்னம் அரசியோடு வீற்றிருக்கும் அரசனாகவும், கழனிகளில் விளைந்த நெற்கதிர்கள் வெண்சாமரையாகவும் உருவகித்தமை அறிந்து மகிழத்தக்கது.

10. மிகஉயர்ந்த வாழைமரத்தின் கனிகள், மதிலின்மேல் உதிருமாறு அவற்றின் உயர்ந்த கமுகின் பழக்குலை விழ அவற்றினும் உயர்ந்த தென்னைமரங்களின் உச்சியில் மேகம் படியும் சோலைகள் சூழ்ந்த திருவீழிமிழலை என்பது பின்னிரண்டடிகளின் கருத்து.

வேந்தர்வந் திறைஞ்ச வேதியர் வீழி
மிழலையுள் விண்ணிழி விமானத்
தேய்ந்ததன் றேவி யோடுறை கின்ற
வீசனை யெம்பெரு மானைத்
தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன்
றூமொழி ஞானசம் பந்தன்
வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை
வானவர் வழிபடு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

11. தேவியோடுறைகின்ற ஈசனை:- இறைவன் இங்குத் திருமணக் கோலத்தோடு வீற்றிருந்தருளும் தன்மை கூறப்படுகின்றது.

உறுதிமுலை தாழ எனையிகழும் நீதி
உனதுமன மார முழுவதும தாக
அறுதிபெறு மாதர் பெயல்தருதல் தானும்
அழகிதினி யானுன் அருள்புனைவ தாக
பெறுதி இவைநீ என் அடிபணிதல் மேவு
பெருமைகெட நீடு படிறுழிபொன் மாட
நறைகமழு வாச வளர்பொழில் சுலாவும்
நனிபுகலி நாத தமிழ்விரக நீயே.

நீமதித் துன்னிநினை யேன்மட நெஞ்சமே
காமதிக் கார்பொழிற் காழி
நாமதிக் கும்புகழ் ஞானசம் பந்தன்ஒண்
பூமதிக் குங்குழல் போற்றே

— ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 120 திரு ஆலவாய்

3378 பதிக வரலாறு

திருவாலவாய் இது என்று அடியார் காட்டக்கண்டு அறிந்த சண்பை அண்ணலார், துணைக்கைமலர் குவித்து, பேரன்பால் பண்இசை பாடிப் பணிந்து, "மங்கையர்க்கரசி" என்று எடுத்து, குலச்சிறையார்பணியும் சிறப்பித்து, "எண்டிசைபரவும் ஆலவாயாவது இதுவே" என்று பாடியது இந்நற்பதிகம்.

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகன்நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவா யாவது மிதுவே. 1

வெற்றவே யடியா ரடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளைநீ றணியும்
கொற்றவன் றனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவிநின் றேத்தும்

1. வரிவளைக்கைமடமானி-வரிகளையுடைய வளையல்களை அணிந்த இளமைவாய்ந்தமானி-மானுபரணரென்று சோழர்கள் சொல்லப்படுவதால். மானி - சோழர் குடியிற் பிறந்தார் என்பதால் "வரி வளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்" எனத் திருத்தொண்டத்தொகையில் வருகிறது.

2. வெள்ளை நீறணியும் கொற்றவன் தனக்கு மந்திரி :- இதனால் அரசன் சைவத்தினின்று சமணம் புக்கமை அறியலாகிறது. ஒற்றை -

ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ
னுலகினி லியற்கையை யொழித்திட்
டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற
ஆலவா யாவது மிதுவே 2

செந்துவர் வாயாள் சேலன கண்ணுள்
சிவன்றிரு நீற்றினை வளர்க்கும்
பந்தணை விரலாள் பாண்டிமா தேவி
பணிசெயப் பாரிட நிலவும்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந்
தண்ணெருக் கம்மலர் வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே 3

கணங்களாய் வரினுந் தமியராய் வரினு
மடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங்
கோபுரஞ் சூழ்மணிக் கோயில்
மணங்கமழ் கொன்றை வாளரா மதியம்
வன்னிவன் கூவிளமாலை
அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே 4

செய்யதா மரைமே லன்னமே அனைய
சேயிழை திருநுதற் செல்வி
பையரா வல்குற் பாண்டிமா தேவி
நாடொறும் பணிந்தினி தேத்த

ஒப்பற்ற. அற்றவர்க்கு - அகப்பற்றும் புறப்பற்றும் விட்டுத் தன்னையே கருதும் அன்பர்க்கு. அற்ற - தானும் அத்தகைய அன்புடைய (சிவன்). அற்ற என்பது அன்புடைய என்னும் பொருளதோ ?

3. பந்தணை விரலாள்-மகளிர் விரல் நுனியின் திரட்சிக்குப் பந்தினை உவமை கூறுதல் மரபு.

4. அணங்கு - தெய்வப்பெண் (இங்கே கங்கை).

வெய்யவேற் சூலம் பாசமங் குசமான்
விரிகதிர் மழுவுடன் றரித்த
ஐயனு ருமையோ டின்புறு கின்ற
வாலவா யாவது மிதுவே 5

நலமில ராக நலமதுண் டாக
நாடவர் நாடறி கின்ற
குலமில ராகக் குலமதுண் டாகத்
தவம்பணி குலச்சிறை பரவுப்
கலிமலி கரத்தன் மூவிலை வேலன்
கரியுரி மூடிய கண்டன்
அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே 6

முத்தின்றாழ் வடமுஞ் சந்தனக் குழம்பு
நீறுந்தன் மார்பினின் முயங்கப்
பத்தியார் கின்ற பாண்டிமா தேவி
பாங்கொடு பணிசெய நின்ற
சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே
சுடர்மர கதமடுத் தாற்போல்
அத்தனு ருமையோ டின்புறு கின்ற
வாலவா யாவது மிதுவே

5. செய்யதாமரைமேல் அன்னம்-இலக்குமி. (முதற்பாட்டில் பங்கயச் செல்வி என்பதுவுங் காண்க.)

6, தவம்பணி-தவமாகக்கொண்டு அடியாரைப் பணிகின்ற. "எவ ரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி ஈசன் திறமே பேணி" என்ற திருத்தாண்டகக் கருத்து இப்பாடலின் முற்பகுதிக்குக்கொள்க.

7. முத்தின் தாழ்வடம் பாண்டியர்க்கே சிறப்பாய் உரியது. பளிங் கின் பெருமலை-சதாசிவ மூர்த்தியின் திருமேனி பளிங்குபோன்றது என்ப.

நாவணங் கியல்பா மஞ்செழுத் தோதி
நல்லராய் நல்லியல் பாகும்
கோவணம் பூதி சாதனங் கண்டாற்
றொழுதெழு குலச்சிறை போற்ற
ஏவணங் கியல்பா மிராவணன் றிண்டோ
ளிருபது நெரிதர வூன்றி
ஆவணங் கொண்ட சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே 8

மண்ணெலா நிகழ மன்னனாய் மன்னு
மணிமுடிச் சோழன்றன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி
பாங்கினாற் பணிசெய்து பரவ
விண்ணுளா ரிருவர் கீழொடு மேலு
மளப்பரி தாம்வகை நின்ற
அண்ணலா ருமையோ டின்புறு கின்ற
வாலவா யாவது மிதுவே 9

தொண்டரா யுள்ளோர் திசைதிசை தோறுந்
தொழுதுதன் குணத்தினைக் குலாவக்
கண்டுநா டோறு மின்புறு கின்ற

. . . . . .

குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள்
குறியின்க ணெறியிடை வாரா
அண்டநா யகன்றா னமர்ந்துவீற் றிருந்த
வாலவா யாவது மிதுவே 10

8. நா - அணங்கு இயல்பாம் ஐந்தெழுத்து ஓதி :- அணங்கு - அழகுசெய்வது. இது "நாவினுக்கருங்கலம் நமச்சிவாயவே" என்ற கருத்து.

9. மண்ணெலாம்நிகழ - உலகமுழுதும் ஒரு செங்கோல் ஆட்சியின் கீழ் நடைபெற.

10. தன் குணத்தினைக் குலாவக்கண்டு - (தனது-சிவபெருமானது) குணங்களைப்பாராட்டும் அடியார்களைக்கண்டு மகிழ்கின்ற குலச்சிறை.

பன்னலம் புணரும் பாண்டிமாதேவி
குலச்சிறை யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீ ராலவா யீசன்
றிருவடி யாங்கவை போற்றிக்
கன்னலம் பெரிய காழியுண் ஞான
சம்பந்தன் செந்தமி ழிவைகொண்
டின்னலம் பாட வல்லவ ரிமையோ
ரேத்தவீற் றிருப்பவ ரினிதே. 11

திருச்சிற்றம்பலம்

11. பல்நலம் - பலவிதமான செல்வ நலன்கள். புணரும்-ஒருங்கே அமையப்பெற்ற. அந்நலம் - அத்தகைய வளம் கன்னல் (அம்) கழனி - கருப்பங் கழனிகளை உடைய.

போற்றி செய்தரன் பொற்கழல் பூண்டதே
புந்தி யானுந்தம் பொற்கழல் பூண்டதே
மாற்றி யிட்டது வல்விட வாதையே
மன்னு குண்டரை வென்றது வாதையே
ஆற்றெ திர்ப்புனல் உற்றதந் தோணியே
ஆன தன்பதி யாவ(து)அம் தோணியே
நாற்றி சைக்கவி ஞானசம் பந்தனே
நல்ல நாமமும் ஞானசம் பந்தனே

அம்புந்து கண்ணிமைக்கு மான நுதல்வியர்க்கும்
வம்புந்து கோதை மலர்வாடுஞ் — சம்பந்தன்
காமரு கழுமல மனையாள்
ஆமிவள் அணங்கலள் அடிநிலத் தனவே

— ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 121 திருப்பந்தணைநல்லூர்

379 பதிக வரலாறு

திருப்பனந்தாள் வழிபாட்டுக்குப் பின்னர்ப் பந்தணைநல்லூரைப் பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - புறநீர்மை

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை
யிவைசொல்லி யுலகெழுந் தேத்தக்
கடறினு ராவர் காற்றுளா ராவர்
காதலித் துறைதரு கோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க்
கோவணங் கொண்டுகூத் தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 1

கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங்
காட்டுளார் நாட்டுளா ரெனவும்
வழியுளா ரெனவு மலையுளா ரெனவு
மண்ணுளார் விண்ணுளா ரெனவும்
சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மறியார்
தொண்டர்வாம் வந்தன சொல்லும்
பழியுளார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 2

காட்டினு ரெனவு நாட்டினு ரெனவுங்
கடுந்தொழிற் காலனைக் காலால்
வீட்டினு ரெனவுஞ் சாந்த வெண்ணீறு
பூசியோர் வெண்மதி சடைமேல்

1. கடறு - காடு. கொடிறனார் - உறுதியானவர்.

2. தொண்டர் கூற்றுக்கள் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமைக்குக் காரண பூதராய் இருத்தலின் 'பழியுளார்' என்றார்.

சூட்டினு ரெனவுஞ் சுவடுதா மறியார்
சொல்லுள சொல்லுநால் வேதப்
பாட்டினுர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 3

முருகினுர் பொழில்சூ ழுலகினு ரேத்த
மொய்த்தபல் கணங்களின் துயர்கண்
டுருகினு ராகி யுறுதிபோந் துள்ள
மொண்மையா லொளிதிகழ் மேனி
கருகினு ரெல்லாங் கைதொழு தேத்தக்
கடலுணஞ் சமுதமா வாங்கிப்
பருகினுர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 4

பொன்னினுர் கொன்றை யிருவடங் கிடந்து
பொறிகிளர் பூணநூல் புரள
மின்னினு ருருவின் மிளிர்வதோ ரரவ
மேவுவெண் ணீறுமெய் பூசித்
துன்னினுர் நால்வர்க் கறமமர்ந் தருளித்
தொன்மையார் தோற்றமுங் கேடும்
பன்னினுர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 5

ஒண்பொனு ரனைய வண்ணல்வாழ் கெனவு
முமையவள் கணவன்வாழ் கெனவும்
அண்பினுர் பிரியா ரல்லுநன் பகலு
மடியவ ரடியிணை தொழவே

3. சொல்லுள சொல்லும் - எத்தனை புகழ்கள் உளவோ அத்தனையும் சொல்லப்பெற்ற (பசுபதியார்). சொல் - என்பது சொல்லாகு பெயர்.

4. வாங்கிப் பருகினுர் - எடுத்துண்டார்.

5. வடம் - மாலை. அறம் - இங்கே சரியை கிரியை இரண்டையும் குறிக்கும். திருக்களிற்றுப்படியார் "நல்ல சிவதன்மத்தால்" எனக் கூறுவது அறிக.

நண்பினு ரெல்லா நல்லரென் றேத்த
அல்லவர் தீயரென் றேத்தும்
பண்பினுர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 6

எற்றினு ரேது மிடைகொள்வா ரில்லை
யிருநிலம் வானுல கெல்லை
தெற்றினுர் தங்கள் காரண மாகச்
செருமலைந் தடியிணை சேர்வான்
முற்றினுர் வாழு மும்மதில் வேவ
மூவிலைச் சூலமு மழுவும்
பற்றினுர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 7

ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப
வோசையா லாடல ருத
கலிசெய்த பூதங் கையினு லிடவே
காலினுற் பாய்தலு மரக்கன்

6. அண்பினுர் - அணுகப்பெற்றவர்களாகி. பிரியார் - பிரியாமல் (அடியிணைத்தொழ). இரண்டும் முற்றெச்சம். வினைதீர்த்தற்கண் இறைவன் புரியும் அறக்கருணை மறக்கருணைகளில் மறக்கருணை பின்னர் இன்பம் தருவதாயினும் முதற்கண் துன்பமாகத் தோற்றலின் அஃதறியார் தீயர் என்றுகூறி நன்மை அறிந்த பின்னர்த் துதிப்பர் என்னுங் கருத்தால் "எல்லாம் நல்லவர் என்றேத்த ... ... ... தீயர் என்றேத்தும்" என்று கூறினுர். மறக்கருணைக்கும் அறக்கருணைக்கும் உதாரணமாக "மண்ணுளே சில வியாதி மருத்துவ னருத்தியோடுந், திண்ணமாயறுத்துக் கீறித்தீர்த்திடுஞ் சில ... ... ... கொடுத்துத் தீர்ப்பன். அண்ணலு மின்பத் துன்பம் அருத்தியே வினையறுப்பன்" (சித்தியார் சூம். 2, பாட்டு. 35) கூறுமாறு அறிக.

7. தங்களுக்கு எய்தும் நன்மை ஏதுமில்லாமலேயே வானுலகையும் மண்ணுலகையும் மோதித் துன்புறுத்தியவர். (திரிபுரத்தசுரர்) என்பது முதலடியின் பொருள். எற்றுதல் - மோதுதல். தெற்றல் - அழிப்பித்தல். எற்றினுர் - முற்றெச்சம்.

வலிகொள்வர் புலியி னுரிகொள்வ ரேனை
வாழ்வுநன் றனுமோர் தலையில்
பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 8

சேற்றினுர் பொய்கைத் தாமரை யானுஞ்
செங்கண்மா லிவரிரு கூருத்
தோற்றினுர் தோற்றத் தொன்மையை யறியார்
துணைமையும் பெருமையுந் தம்மில்
சாற்றினுர் சாற்றி யாற்றலோ மென்னச்
சரண்கொடுத் தவர்செய்த பாவம்
பாற்றினுர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே 8

... ... ... ... 10

கல்லிசை பூணக் கலையொலி யோவாக்
கழுமல முதுபதி தன்னில்
நல்லிசை யாளன் புல்லிசை கேளா
நற்றமிழ் ஞானசம் பந்தன்
பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி
மேவிய பந்தணை நல்லூர்
சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேல்
தொல்வினை சூழகி லாவே 11

திருச்சிற்றம்பலம்

8. பூதரம் - மலை. (பூதம் - மரூஉ) கையினுலிட-பெயர்த்தெடுத் தற்குக் கையினைச் செலுத்த. (கையினுல் உருபு மயக்கம்) இது அரக்கன் செயல். காலினுற் பாய்தல். இது இறைவன் செயல். "ஏனை ... ... ... பலிகொள்வர்" என்றது செல்வ வாழ்க்கையில் ஒரு குறைவு மில்லா தவர். ஆயினும், மண்டை ஓட்டில் பிச்சை எடுப்பர் என அசதி யாடியவாறு.

9. பாற்றினுர் - நீக்கினுர்.

10. .... ... ... ...

11. கல்லிசை - கற்கும் ஓசை. பல்லிசை - பற்கள் பொருந்திய (மண்டையோடு).

# 122 திரு ஓமாம்புலியூர்

380 பதிகவரலாறு

பந்தணைநல்லூரைப் பணிந்து பாடியபின், தீங்குதீர் மாமறைச்செம்மை யந்தணர் ஓங்கும் ஓமாம் புலியூர் வந்துற்றுப் பாடியருளியது இத் திருப் பதிகம்.

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

பூங்கொடி மடவா ளுமையொரு பாகம்
புரிதரு சடைமுடி யடிகள்
வீங்கிரு ணட்ட மாடுமெம் விகிர்தர்
விருப்பொடு முறைவிடம் வினவில்
தேங்கமழ் பொழிலிற் செழுமலர் கோதிச்
செறிதரு வண்டிசை பாடும்
ஓங்கிய புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே 1

சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத்
தழலுமிழ் சக்கரம் படைத்த
எம்பெரு மானா ரிமையவ ரேத்த
வினிதினங் குறைவிடம் வினவில்
அம்பர மாகி யழலுமிழ் புகையி
னாகுதி யான்மழை பொழியும்
உம்பர்க ளேத்து மோமமாம் புலியூ
ருடையவர் வடதளியதுவே. 2

1. கோதுதல் - கிளறுதல்; உணர்தல். இவை ஒருபொருட்கிளவி. "வீங்கிருள் நட்டமாடும் எம் விகிர்தர்" "நள்ளிருள் நட்டம் பயின்றாடும் நாதனே" என இக்கருத்துத் திருவாசகத்திலும் வருகிறது. தளி-கோயில்.

2. பொழியும் - ஏத்தும் என்னும் பெயரெச்சங்கள் ஓமாம்புலியூர் என்னும் பெயர் கொண்டு முடிந்தது.

பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப்
படர்சடைக் கரந்தநீர்க் கங்கை
தாங்குத றவிர்த்துத் தராதலத் திழித்த
தத்துவ னுறைவிடம் வினவில்
ஆங்கெரி மூன்று மமர்ந்துட னிருந்த
வங்கையா லாகுதி வேட்கும்
ஓங்கிய மறையோ ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 3

புற்றர வணிந்து நீறுமெய் பூசிப்
பூதங்கள் சூழ்தர வூரூர்
பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும்
பிரானவ னுறைவிடம் வினவில்
கற்றநால் வேத மங்கமோ ராறுங்
கருத்தினா ரருத்தியாற் றெரியும்
உற்றபல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 4

நிலத்தவர் வான மாள்பவர் கீழோர்
துயர்கெட நெடியமாற் கருளால்
அலைத்தவல் லசுர ராசற வாழி
யளித்தவ னுறைவிடம் வினவில்
சலத்தினாற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்
தன்மையார் நன்மையான் மிக்க
உலப்பில்பல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 5

3. தத்துவன் - தத்துவ சொரூபியாய் இருப்பவன்.

4. பெய்பலி கொள்ளும்பிரான்:- என்றது "குடிப்பது கூழ் கொப்ப ளிப்பதுபன்னீர்" என்பது போலும் ஓர் நயம்.

5. "சலத்தினால் பொருள்கள் வேண்டுதல் செய்யார்" "சலத்தாற் பொருள் ... ... ... ... ... பெய்திரீ இயற்று (குறள்) என்ற திருக்குறள் கருத்து. சலம் - தருக்கபரிபாடை. இங்குத் தீயவினைகளைக் குறித்தது. ஆளுடைய பிள்ளையார், திருக்குறட்கருத்தை அமைத்துப் பாடினமைக்கு இது ஒரு சான்று.

மணந்திகழ் திசைக ளெட்டுமே ழிசையு
மலியுமா றங்கமை வேள்வி
இணைந்தநால் வேத மூன்றெரி யிரண்டு
பிறப்பென வொருமையா லுணரும்
குணங்களு மவற்றின் கொள்பொருள் குற்ற
மற்றவை யுற்றது மெல்லாம்
உணர்ந்தவர் வாழு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 6

7

தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி
தானுடை யரக்கனொண் கயிலை
அலைவது செய்த வவன்றிறல் கெடுத்த
வாதியா ருறைவிடம் வினவில்
மலையென வோங்கு மாளிகை நிலவு
மாமதின் மாற்றல ரென்றும்
உலவுபல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே 8

கள்ளவிழ் மலர்மே லிருந்தவன் கரியோ
னென்றிவர் காண்பரி தாய
ஒள்ளெரி யுருவ ருமையவ ளோடு
முகந்தினி துறைவிடம் வினவில்

6. 'திசைகள் எட்டு இசை ஏழு... ... ... ... ...ஒருமை இவ்வாறு வருவதனை எண்ணலங்காரம் என்பர் "மாதவச் சிவஞான யோகிகள்" "ஒரு கோட்டன் இரு செவியன்" என்னும் சிவஞானசித்தியாரில் காண்க.

7. ... ... ... ... ... ... ... ... ...

8. அலைவு (அது) செய்த:- அசைக்கத்தொடங்கிய மலையென ஓங்கும் மாளிகை. மாளிகைக்கு மலை உவமை. தென் திருமுல்லை வாயில் (4) திருப்பதிகத்தில் "குன்றொன் றொடொன்று குழுமி" என உருவகித்து இருத்தலையும் (திருமுறை 2) அறிக. செய்குன்று.

பள்ளநீர் வாளை பாய்தரு கழனிப்
பனிமலர்ச் சோலைசூ ழாலை
ஒள்ளிய புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே 9

தெள்ளிய ரல்லாத் தேரரோ டமணர்
தடுக்கொடு சீவர முடுக்கும்
கள்ளமார் மனத்துக் கலதிகட் கருளாக்
கடவுளா ருறைவிடம் வினவில்
நள்ளிருள் யாம நான்மறை தெரிந்து
நலந்திகழ் மூன்றெரி யோம்பும்
ஒள்ளியார் வாழு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே 10

விளைதரு வயலுள் வெயில்செறி பவள
மேதிகண் மேய்புலத் திடறி
ஒளிதர மல்கு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யரனைக்
களிதரு நிவப்பிற் காண்டகு செல்வக்
காழியுண் ஞானசம் பந்தன்
அளிதரு பாடல் பத்தும்வல் லார்க
ளமரலோ கத்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

9. பள்ளநீர் - பள்ளத்தில் தங்கியநீர். வாளைபாய் தரு - வாளை மீன்கள் பாய்கின்ற.

10. கலதிகள் - கலகம்செய்பவர்கள்.

11. களிதரு நிவப்பிற்காண்டகு செல்வம் - களிப்பை உண்டாக்கத் தக்க மிகுந்த காணத்தக்க செல்வம்.

# 123 திருக்கோணமலை

## 381 பதிகவரலாறு

சேதுவின்கண் செங்கண்மால் பூசைசெய்த சிவபெருமானைப் பாடிப் பணிந்து போற்றி வாழ்ந்திருந்த காலத்தில், ஆழிபுடைசூழ்ந்து ஒலிக்கும் ஈழத்தில் மன்னு திருக்கோணமலையை மகிழ்ந்த செங்கண்மழவிடையாரை வணங்கிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே. 1

கடிதென வந்த கரிதனை யுரித்து
அவ்வுரி மேனிமேற் போர்ப்பர்
பிடியன நடையாள் பெய்வளை மடந்தை
பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமு னித்திலஞ் சுமந்து
குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமா மலையமர்ந் தாரே. 2

1. கரைகெழுசந்து - கரையில் ஒதுக்கப்பட்ட சந்தன மரங்கள் கார்அகில்பிளவு - கரிய அகில் கட்டை. வரன்றி - வாரி. ஓதம் - அலை ஓதம் நித்திலம் கொழிக்கும் கோணமாமலை:- இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றப்பட்டது.

2. கொடிது என - (கேட்டோர்) கொடிது என்று கூறும்படியாக.

பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம்
படர்சடை முடியிடை வைத்தார்
கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக
மாகமுன் கலந்தவர் மதின்மேல்
தனித்தபே ருருவ விழித்தழ லுகந்
தாங்கிய மேருவெஞ் சிலையாக்
குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே 3

பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப்
பாங்குடை மதனனைப் பொடியா
விழித்தவன் தேவி வேண்டமுன் கொடுத்த
விமலனூர் கமலமார் பாதர்
தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ்
செம்பொனு மிப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங்
கோணமா மலையமர்ந் தாரே. 4

தாயினு நல்ல தலைவரென் றடியார்
தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினும் மனத்தும் மருவிநின் றகலா
மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பா னீக்கி
நுழைதரு நூலினர் ஞாலம்
கோயிலுஞ் சுனையும் கடலுடன் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. 5

3. பனித்திளந்திங்கள் - குளிர்ந்த இளம்பிறை. பனித்த - பெயர்ச்சொல் அடியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். "பனித்தசடையும்" என் அப்பர் வாக்கிலும் பயில்கிறது. பனித்த + இளம் = பனித்திளம். பெயரெச்ச விகுதி கெட்டது. பனித்த: தெரிகிலேயே.

4. உலகத்தை அழிப்பது போலும் பெருக்கெடுத்துவந்த கங்கையை ஒரு சிறு திவலையாக்கி ஒரு சடையின் ஒரு உரோமத்தின் நுனியில் வைத்தது அதைப் பழிப்பதுபோலும் இருந்தது என்பது (பழித்து) என் பதனால் பெறப்படுகிறது. தெழித்து - உரப்பி (மிக்க ஒலியைச்செய்து).

5. கோயிலும் சுனையும் கடலுடன் சூழ்ந்த கோணமாமலை. இன்றும் இதனை நேரில் காணலாம்.

பரிந்துநன் மனத்தால் வழிபடுமாணி
தன்னுயிர் மேல்வரும் கூற்றைத்
திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ்
செம்மையார் நம்மையாளுடையார்
விரிந்துயர் மௌவன் மாதவி புன்னை
வேங்கைவண் செருந்திசெண் பகத்தின்
குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில் சூழ்
கோணமா மலையமர்ந் தாரே. 6

7

எடுத்தவன் றருக்கை யிழித்தவர் விரலா
லேத்திட வாத்தமாம் பேறு
தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு
மிறப்பறி யாதவர் வேள்வி
தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை
தன்னருட் பெருமையும் வாழ்வும்
கொடுத்தவர் விரும்பும் பெரும்புகழாளர்
கோணமா மலையமர்ந் தாரே 8

அருவரா தொருகை வெண்டலையேந்தி
யகந்தொறும் பலியுடன் புக்க
பெருவரா யுறையு நீர்மையர் சீர்மைப்
பெருங்கடல் வண்ணனும் பிரமன்
இருவரு மறியா வண்ணமொள் ளெரியா
யுயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்கும்
குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக்
கோணமா மலையமர்ந் தாரே. 9

6. மௌவல் - மல்லிகை.

(7.)

8. வேள்விதடுத்தவர் - தக்கன் வேள்வியைத் தடுத்தவர்.

9. குருவர் - குரு ஆனவர்.

நின்றுணுஞ் சமணு மிருந்துணுந் தேரு
நெறியலா தனபுறங் கூற
வென்றுநஞ் சுண்ணும் பரிசின ரொருபான்
மெல்லிய லொடுமுட னாகித்
துன்றுமொண் பௌவ மவ்வலுஞ் சூழ்ந்து
தாழ்ந்துறு திரைபல மோதிச்
குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங்
கோணமா மலையமர்ந் தாரே 10

குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்தன்
உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே. 11

திருச்சிற்றம்பலம்

10. சமணர் நின்றுண்பவர். பௌத்தர் - இருந்துண்பவர். எமது பெருமான் நஞ்சுண்பவர் என்பது ஓர் நயம்.

11. உயர்ந்தோர் சுற்றமும் ஆக. சுற்றம் - சூழ இருப்பவர்.

யாரேஎம் போல அருளுடையார் இன்கமலத்
தாரேயுஞ் சென்னித் தமிழ்விரகன் — சீரேயுங்
கொச்சை வயன்றன் குரைகழற்கே மெச்சி
அடிமைசெயப் பெற்றேன் அறிந்து.

— ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

# 124 திருக் குருகாவூர் வெள்ளடை

382 பதிகவரலாறு

தேசம்போற்றும் நேசராய சண்பையர் கோமகனுர், வாசம் செய்யும் பொழில் சூழும் குருகாவூரை இன்புற இறைஞ்சிப் பாடியருளியது இத்தமிழ்ச்சொல்மாலை.

பண் - அந்தாளிக் குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் ணீறணி மார்பில் ருேல்புனைந்
தெண்ணரும் பல்கண மேத்தநின் றுடுவர்
விண்ணவர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக ஞரே 1

திரைபுல்கு கங்கை திகழ்சடை வைத்து
வரைமக ளோடுட ஞடுதிர் மல்கு
விரைகமழ் தண்பொழில் வெள்ளடை மேவிய
அரைமல்கு வாளர வாட்டுகந் தீரே 2

அடையலர் தொன்னகர் மூன்றெரித் தன்ன
நடைமட மங்கையொர் பாக நயந்து
விடையுகந் தேறுதிர் வெள்ளடை மேவிய
சடையமர் வெண்பிறைச் சங்கர னீரே 3

---

1. பதினெண்கணம், பூதகணம், பேய்க்கணம், முனிகணம், உருத்திரபல்கணம் என. இவையொவ்வொன்றிலும் பல ஆதலின் எண்ணரும் பல்கணம் என்ருர்.

2. அரவு ஆட்டு உகந்தீர் - பாம்பை ஆட்டுதலை விரும்பினீர்.

3. அடையர் - பகைவர்; நகர்மூன்று - திரிபுரம்.

வளங்கிளர் கங்கை மடவர லோடு
களம்பட ஆடுதிர் காடரங் காக
விளங்கிய தண்பொழில் வெள்ளடை மேவிய
இளம்பிறை சேர்சடை யெம்பெரு மானே 4

சுரிகுழ னல்ல துடியிடை யோடு
பொரிபுல்கு காட்டிடை யாடுதிர் பொங்க
விரிதரு பைம்பொழில் வெள்ளடை மேவிய
எரிமழு வாட்படை யெந்தை பிரானே 5

காவியங் கண்மட வாளொடுங் காட்டிடைத்
தீயக லேந்திநின் றுடுதிர் தேன்மலர்
மேவிய தண்பொழில் வெள்ளடை மேவிய
ஆவினி லைந்துகொண் டாட்டுகந் தீரே 6

... ... ... 7, 8, 9, 10, 11

திருச்சிற்றம்பலம்

4. வளம் கிளர் கங்கை - பாய்தலால் வளங்கள் அதிகரித்தற்குக் காரணமாகிய கங்கை. அரங்கு ஆக - காடு அரங்கு களம் ஆகப் பட ஆடுதிர் எனக்கூட்டிச் சுடுகாடு அரங்கினிடமாகக் கொண்டு ஆடுதிர் எனப் பொருள் கூறுக.

5. (நல்ல) சுரிகுழல் துடியிடை - சுரிந்த கூந்தலையும் உடுக்கை போன்ற இடையையும் உடைய அம்பிகை. அன்மொழித்தொகை. பன் மொழித்தொடர். பொரிபுல்கு காட்டிடை-வெப்பத்தின் மிகுதியால் மரங்கள் முதலியவை பொரி பொருந்திய சுடுகாடு.

6. தீயகல் ஏந்திநின்று ஆடுதிர் என்பது "கரதலத்தில் தமருகமும் எரியகலும் பிடித்து ஆடி" எனச் சுந்தரமூர்த்திகள் திருவாக்கில் வருவதும் காண்க.

7, 8, 9, 10. 11. ... ... ... ...

# 125. திருநல்லூர்ப் பெருமணம்

383 பதிகவரலாறு

அலகில்லாத மெய்ஞ்ஞானத்தின் எல்லை அடைவுறும் குறிப்பால், தொண்டர் கூட்டமும் பெருங்கிளையும் மல்கிச் சூழக் கோயிலை அடைந்தார் தவநெறி வளர்க்கவந்த ஞானசம்பந்தர். "பவம் அற என்னை முன்னுள் ஆண்ட அப் பண்பு கூட நவமலர்ப்பாதம் கூட்டும் என்னும் நல்லுணர்வு" நல்கியது திருவருள். பிறவிப் பாசம் தீர்த்தலைச் செம்பொருளாகக் கொண்டு "நாதனே நல்லூர் மேவும் பெருமண நம்பனே உன் பாத மெய்ந் நீழல் சேரும் பருவம் ஈது" என்று பாடியருளியது இக் "காதல் மெய்ப் பதிகம்"

பண் - அந்தாளிக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணம் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே 1

1. **திருமணத்தில் தமக்கு விருப்பில்லை என்பதைக் குறித்தது:** தொண்டர் - அடியார்கள் சூழ்ந்த. நல்லூர்ப்பெருமணம் - திருநல்லூர்ப்பெருமணம் எனும் தலத்தில். மேய-மேவிய. நம்பானே-சிவபெருமானே. பெருமணம்-மிக்க மணமாகிய பொருள்கள். ஊர் - பொருந்திய. சொல் - பாடல்களாகிய மலர்களை. சூடலரே - சூடுதலை உடையீர்! கல் ஊர் - அம்மியின்மேல் மனைவியின் காலை வைத்தல் முதலிய சடங்குகளை உடையதாகிய, பெருமணம் - பெரிய திருமணம். வேண்டா - எனக்கு வேண்டா- கழுமலம் - திருக்கழுமலம் முதலாகிய. பல்லூர் - பலதலங்களிலும் (நான் - பாடிய), பாட்டு - தேவாரப் பதிகங்களும். மெய் ஆய்த்தில - மெய்யாக வில்லையா ? எத்தலத்திலேனும் எனக்குத் திருமணம் வேண்டுமென்று கேட்டதுண்டா ? ஆய்த்து-ஆயது. "நரரிடைப் பாலன் செய்தபாதகம் நன்மையாய்த்தே" என்ற சித்தியாரிற்போல. கல்லூர்ப் பெருமணம்:- கல்லூர் + பெருமணம் இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை. மெய்யாய்த்தில-இதில் வினா எழுத்து மறைந்து நின்றது. "தெருளில்நீர் இது செப்புதற்காம்" என்ற பெரிய புராணம் போல (பாடல் 9). சொல்லூர் பெருமணம் ஏகதேச உருவகம். சொல் - பாடலுக்கானது ஆகுபெயர். நம்பன், நம்பான் என ஈற்றயல் நீண்டு விளித்தது. ஏகாரம் ஈற்றசை.

தருமணவ லோதஞ்சேர் தண்கட னித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
வருமணங் கூட்டி மணஞ்செயு நல்லூர்ப்
பெருமணத் தான்பெண்ணோர் பாகங் கொண்டானே 2

அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே 3

வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்
நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே 4

2. **சிறுமியர் விளையாட்டு:** பாவை நல்லார்கள்-பதுமைபோன்ற சிறுமியர்கள். தரு - பொருந்திய. மணல்-மணலோடு. ஓதம்-அலைகள். சேர் - வீசிக்குவித்த. தண்கடல் நித்திலம் - குவிந்த கடலில் உண்டாகிய முத்துக்களையே. பருமணலாகக்கொண்டு - பருத்த மணலாகக்கொண்டு. வரும்மணம் கூட்டி-பொருந்திய மணத்தை உடைய மலர் முதலியவைகளை. கூட்டி - வைத்துக்கொண்டு. மணம் செயும் - மணம் செய்து விளையாடு கின்ற (நல்லூர்ப்பெருமணம்) பெண் ஓர் பாகம் கொண்டான் - பெண்ணை இடப்பாகத்தில் கொண்டவன். கடந்த ஞானிகளுக்கே இல்லறத்தார் நடத்தும் மனைவாழ்க்கை வீதியில் சிறுமியர்கள் மணம்செய்து விளையாடும் விளையாட்டைப் போன்று தோன்றும் என்பது இப்பாடலால் குறிக்கப்பெறுகிறது. பெண் ஓர்பாகம் கொண்டான் ஆதலின் என்னையும் இவ்வாறு அருளினான்.

3. **அடியவர் பெருமை:** நன்புஉறு - முத்தியை அடைகின்ற நன்பு - பு பண்புப்பெயர் விகுதி. ஆகுபெயர். ''இணையடி ஏத்துவார் துன்புறுவாரல்லர் தொண்டு செய்வார்'' தாம் செய்வன சிவனுக்கு என்றும் வருவன அனைத்தும் அவன் அருள் என்றும் தொண்டுசெய்வார் ஆகலின் இணையடி புத்திபண்ணி ஏத்துவார் துன்புறுவாரல்லர் என்று கூறினார்.

4. **இறைவன் கோலம்:** வல்லியம் தோல் - புலித்தோல் வன்மைக்கு இனமாகத் திரிந்தது. செவிக் கினிமை கருதி. உடை ஆர்ப்பது- உடையாக இடுப்பில உடுப்பது; வேழத்துரிப் போர்ப்பது - யானையின் தோல் போர்வையாகப் போர்ப்பது. விரி கோவணம் - படம் விரித்த

ஏறுகந் தீரிடு காட்டெரி யாடிவெண்
ணீறுகந் தீர்நிரை யார்விரி தேன்கொன்றை
நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீருமை கூறுகந் தீரே 5

சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
நட்டக்கொட் டாட்டறு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே 6

மேகத்த கண்டன்எண் தோளன்வெண் ணீற்றுமை
பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த
நாகத்தன் நல்லூர்ப் பெருமணத் தான்நல்ல
போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே 7

பாம்பினை கோவணமாகக் கட்டுவது. விரி - முதனிலை தொழிற்பெயர். ஆகுபெயர். நல்லியலார் - நற்பண்புகளை உடைய மெய்யடியார் இவை நல்லூர்ப் பெருமண வாழ்க்கை எம் புண்ணியனுர்க் கோலங்களாம்.

5. **இறைவன் செயல் :** ஏறு - இடபத்தை. உகந்தீர் - விரும்பி ஏறினீர். நிறை - வரிசையாக. ஆர் - பொருந்திய. விரி - மலர்ந்த. தேன் - தேனை உடைய. கொன்றை-கொன்றை மலரின். நாறு - மணம் வீசுதலை. உகந்தீர் - விரும்பினீர். நாறு - நாறுதல் (நல்லூர்ப் பெரு மணத்து) வேறுகந்தீர் - வேறுக விரும்பினீர்!

6. **தலச்சிறப்பு :** சிட்டப்பட்டார்க் கெளியன் - நியமம் தவறாது வழிபடுபவர்களுக்கு எளியவன். வேட்டுவப் பட்டம் கட்டும் சென்னி யான் - வேடுவக் கோலத்தில் நெற்றிப் பட்டம் கட்டிய தலையினை உடைய வன். நட்டம் - நாட்டியங்களின், கொட்டுவாத்திய ஓசையும். ஆட்டு - திருவிழா முதலான கொண்டாட்டங்களின். ஓசையும் அறு - ஒழியாத இட்டப்பட்டால் ஒத்திரால் ஏனைத்தலங்களிலும் மிகவிருப்பம் உடையவர் போல் காணப்படுகின்றீர். எம்பிரான் நீர்-எமது தலைவராகிய நீர். ஆல் - அசை.

7. **அம்பிகையின் சிறப்பு :** மேகத்தகண்டன்-காளமேகம்போலும் கரிய கண்டத்தை உடையவன். எண்தோளன்-எட்டுத்தோள்களையுடை யவன். வெண்ணீற்றுமை பாகத்தன் - திருவெண்ணீற்றுமையம்மையை இடப்பாகத்தில் உடையுவர், பந்தித்த-கச்சையாகக் கட்டிய. நாகத்தன்-

திருநல்லூர்ப்பெருமணத்தில்: (ஆச்சாள்புரம்)



கோயில் முன்பார்வை.

திருநல்லூர்ப்பெருமணத்தில் :



சிவசோதியில் கலந்தது.

தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே 8

ஏலுந்தண் டாமரை யானு மியல்புடை
மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே 9

ஆத ரமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்
நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய
வேதன தாள்தொழ வீடெளி தாமே 10

பாம்பை உடையவன். (நல்லூர்ப் பெருமணத்தான்). நல்ல போகத்தன்- உமையம்மையை இடப்பாகத்தில் உடையவனுகி மிக்கபோகத்தை உடையவன்போல் காணப்படினும். யோகத்தைப் புரிந்தான் - உண்மையில் அவன் யோகத்தையேசெய்தான்.

8. **வேண்டுகோள் :** தக்கு இருந்தீர்-தகஇருந்தீர். உக்கு இருந்து ஒல்க - உடல் நொறுங்கிக் குழைய. வரைக்கீழ் இட்டு - கைலைமலையின் கீழ் அழுத்தி. நக்கு இருந்தீர் - சிரித்துக்கொண்டிருந்தீர். அன்று - இது அக்காலத்துச் செய்தது. இன்று - இன்றைக்கும் இராவணனைத் தன் வழியில் செல்ல அருளியதைப்போல. எமை - எங்களை. போக்கு - உமது திருவடியில் சேர்வதற்கு. அருளீர் - அருளுவீர்களாக.

9. **இறைவன் பெருமை :** தம்மாண்பு - தமது பெருமையை. (தாமரையானும் மாலும் அறிகின்றிலர்). தம்பாட்டு - தம்முடைய பாடல், மாமறை நாலும் என்பர்). (அதுபோலவே) தம் கோயில் - தமது கோயில் நல்லூர்ப் பெருமணம் என்பர்.

10. **அனைவரையும் அழைத்தல் :** நாதனைத் தலைவனும் (நல்லூர் பெருமணம் மேவிய) வேதன் - வேதங்களின் பொருளாகியவனுமாகிய சிவபெருமானின். தாள்தொழ - திருவடிகளை வணங்க. வீடு - (அரியதாகிய) முத்திஉலகம். எளிதாம் - எளியதாகும், ஆதர் - அறிவிலிகள்.

நறும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே 11

திருச்சிற்றம்பலம்

11. நறும்பொழில் - நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த. காழியுள்-சீர்காழியுள் அவதரித்தருளியவராகிய. ஞானசம்பந்தன் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாராகிய யான். பெறும்-பெறுதற்குரிய, பதம்-பதவியை. அருளும் நல்லூர்ப் பெருமணத்தானை - திருநல்லூர்ப்பெருமணத்தில் எழுந்தருளிய சிவலோகத் தியாகேச மூர்த்தியை, உறும்-திருவடியில் இரண்டறக் கலக்கும். பொருளால் - கருத்தோடு. சொன்ன - பாடிய. ஒண்தமிழ் - சிறந்த பயனைத் தரவல்ல, தமிழ்-இத்தமிழ்ப் பதிகத்தை. வல்லார் - பொருள் அமைதியோடு இன்னிசையால் மனங்கசிந்து பாடவல்லார்க்குப் பழிபாவம் அறும். (அதுவன்றியும்), அவலம் - பிறவித்துன்பம். இலர்-இலராவர். "அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் எய்துவர்" என்பது குறிப்பு.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிய
மூன்று திருமுறைகளும் குறிப்புரைகளும் முற்றும்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவடி வாழ்க !

குருஞானசம்பந்தர் குரைகழல் வெல்க !!

## மூன்றாவது திருமுறை

# பாட்டு முதற்குறிப்பகராதி

திருஞானசம்பந்தர் அருளிய திருமுறைகளின்

# சொல்லகராதிச் சுருக்கம்



எண்களுள் முன்னது பதிகத்தையும் பின்னது பாடலையும் குறிக்கும்.

உ

குருபாதம்

# ஆதீன வெளியீடுகள்

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 1 | குருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு சமூகமாலை முதலியன | 1924 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1944 |
| 2 | நித்திய கன்மநெறி (மூலம்) | 1927 |
| 3 | திருமுல்லைவாயிற்புராணம் | ,, |
| 4 | திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் | ,, |
| 5 | சித்தாந்தநிச்சயம் | 1928 |
| 6 | சம்பிரதாயதீபம் | ,, |
| 7 | வருணாச்சிரம சந்திரிகை (வடமொழி) | 1930 |
| 8 | சிகாரத்தினமாலை | ,, |
| 9 | திருப்பதிகமும் பஞ்சரத்தினமும் | ,, |
| 10 | தசமணிமாலை | ,, |
| 11 | ஞானசம்பந்த குருராயவட்டகமும் சந்திரகலாமாலையும் | ,, |
| 12 | திருவையாற்றுப் புராணம் | ,, |
| 13 | சிவானந்தபோதசாரம் | 1931 |
| 14 | சோடசகலாப் பிராசாத ஷட்கம் | ,, |
| 15 | சைவசந்யாச பத்ததி (வடமொழி) | 1932 |
| 16 | சிவபோகசாரமும், சொக்கநாத வெண்பாவும் ஆங்கிலத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1936 |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1950 |
| | ,, (நான்காம் பதிப்பு) | 1953 |
| 17 | சிவப்பிரகாசக்கட்டளை ஆங்கிலத்துடன் | 1932 |
| | (இரண்டாம் பதிப்பு) | 1939 |
| 18 | 23-வது மகாசந்நிதானத்தின்மீது பலர் பாடிய தோத்திரப் பாடல்கள் | 1933 |
| 19 | திருத்துருத்திப் புராணம் மூலமும் வசனமும் | ,, |
| 20 | ஞானசரிதை | 1934 |
| 21 | முத்திநிச்சயம் சிற்றுரையுடன் | ,, |

| | | |
|---|---|---|
| 22 | அறிவானந்த சமுத்திரம் | 1935 |
| 23 | பண்டாரமும்மணிக்கோவை குறிப்புரையுடன் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 24 | இந்துமத பாலபாடம் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 25 | சிதம்பரச் செய்யுட்கோவை உரையுடன் | 1937 |
| 26 | திருவையாற்றுத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 27 | கிளிவிடுதூது | 1938 |
| 28 | திருமுலைப்பால் சிறப்பு | 1939 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1941 |
| 29 | பதி பசு பாசத்தொகை | 1940 |
| 30 | ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் நான்மணிமாலை | ,, |
| 31 | திருபுவனத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 32 | கீர்த்தித் திருவகவல் | 1941 |
| 33 | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறும் பாசுரங்களும் | ,, |
| 34 | வைத்தீசுவரன்கோயில் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 35 | திருத்தொண்டத் தொகையும் அசபாநடனப் பதிகமும் | ,, |
| 36 | குங்குலியக்கலய நாயனார் அன்பின்திறம் | ,, |
| 37 | திருக்கடவூர்த் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 38 | திருவையாற்றுத் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 39 | புள்ளிருக்குவேளூர்ப் புராணம் | ,, |
| 40 | சித்தாந்த சைவ வினாவிடை | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 41 | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1941 |
| 42 | ஆச்சாள்புரத் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1955 |
| 43 | திருவையாற்றுத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1948 |
| 44 | சுப்பிரமணியர் திருவவதாரமும் கந்தர்கலிவெண்பாவும் | 1941 |
| 45 | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு | ,, |
| 46 | சிவபூஜாவிதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 47 | சைவானுட்டானவிதி | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 48 | திருக்கடவூர் உலா குறிப்புரையுடன் | 1941 |

| | | |
|---|---|---|
| 49 | திருப்பாடல்கள் | 1942 |
| 50 | விநாயகர் அகவல்கள் | ,, |
| 51 | சீகாழித் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| 52 | மெய்கண்ட சாத்திரம் மூலம் | 1942 |
| 53 | திருக்கற்குடித் தலவரலாறு | 1943 |
| 54 | நீதிநெறிவிளக்கம் உரைவளத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 55 | திருவாரூர் நான்மணிமாலை மூலமும் வசனமும் | 1943 |
| 56 | சகலகலாவல்லிமாலை உரையுடன் | ,, |
| 57 | கந்தரனுபூதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1945 |
| 58 | குற்றாலத் தலவரலாறு | 1943 |
| 59 | திருக்குறுக்கைத் தலவரலாறு | ,, |
| 60 | திருபுவனம் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |
| 61 | திருக்கடவூர்த் தலவரலாறு | 1943 |
| | (இரண்டாம் பதிப்பு) | 1954 |
| 62 | புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 63 | திருப்பனந்தாள் தலவரலாறு | 1943 |
| 64 | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு ஆட்சிமலர் | ,, |
| 65 | அப்பர் சுவாமிகள் புராணம் C. K. S. விரிவுரையுடன் | 1944 |
| 66 | மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருமுறைத் திருநாள் நிகழ்ச்சிகள் | ,, |
| 67 | சிவஞானபோதச் சூத்திரக் கட்டுரை | ,, |
| 68 | ஞானசம்பந்தர் வழங்கிய ஞானவுரை | 1945 |
| 69 | சிவப்பிரகாசம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 70 | தருமபுர ஆதீன நூல்நிலையப் புத்தகப்பட்டி | ,, |
| 71 | புள்ளிருக்குவேளூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 72 | பஞ்சாவரணத்தோத்திரங்கள் | 1945 |
| 73 | சிதம்பரத்துத் திருப்பதிகங்கள் | ,, |
| 74 | தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா | ,, |
| | (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 75 | திருவேட்களத் திருப்பதிகங்கள் | ,, |
| 76 | திருநெல்வாயில் திருப்பதிகம் | ,, |
| 77 | திருக்கழிப்பாலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 78 | திருநாரையூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 79 | தருமபுர ஆதீன ஆவணிமூலத் திருநாள் | ,, |

| | | |
|---|---|---|
| 80 | ஆச்சாள்புரத் திருப்பதிகம் | 1945 |
| 81 | திருமயேந்திரப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 82 | திருத்துருத்தித் திருப்பதிகங்கள் | ,, |
| | (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 83 | திருமங்கலக்குடித் திருப்பதிகங்கள் | 1945 |
| 84 | திருக்கோளிலித் திருப்பதிகங்கள் | ,, |
| 85 | திருக்கடவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 86 | சிவஞானபோதம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1945 |
| 87 | சோமவார விரதம் } | |
| 88 | திருநீறு } முதற்பதிப்பு | ,, |
| 89 | உருத்திராக்கம் } இரண்டாம் பதிப்பு | 1949 |
| 90 | ஐந்தெழுத்து } மூன்றாம் பதிப்பு | 1953 |
| 91 | கந்தர்சட்டி விரதச்சிறப்பு திருமுருகாற்றுப்படையுடன் | 1946 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 92 | திருவருட்பயன் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 93 | தென்திருமுல்லைவாயில் திருப்பதிகம் | ,, |
| 94 | ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை | 1946 |
| 95 | திருக்கலிக்காமூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 96 | தருமபுர ஆதீனப் பாடசாலைகளின் நிர்ணயவிதிகள் | ,, |
| 97 | திருநெல்வேலித் திருப்பதிகம் | ,, |
| 98 | திலகவதியார் (உரைநடை) | ,, |
| 99 | சீகாழித் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |
| 100 | திருக்கோலக்காத் திருப்பதிகம் | 1946 |
| 101 | திருக்குருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 102 | திருச்சாய்க்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 103 | திருப்பல்லவனீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 104 | திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள் | ,, |
| 105 | கீழைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 106 | சித்தாந்தத்திரயம்-ஆங்கிலமொழிபெயர்புடன் | ,, |
| 107 | ஸ்ரீகண்டன் 'ஓர் சிறு நாடகம்' | ,, |
| 108 | திருமுலைப்பால் திருவிழாச் சிறப்பு | ,, |
| 109 | முத்திநிச்சயப்பேருரை என்னும் வெள்ளியம்பலவாண மாபாடியம் | 1947 |
| 110 | மிருகேந்திரம்-தமிழ் மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 111 | நடராஜ சதகம் | ,, |
| 112 | உண்மைவிளக்கம் (ஆங்கில மொழிபெயர்ப்புடன்) | ,, |
| 113 | திருக்கண்ணார்கோயில் திருப்பதிகம் | ,, |
| 114 | சுவாமிநாதசுவாமி தோத்திரங்கள் | ,, |

| | | |
|---|---|---|
| 115 | திருநள்ளாற்றுத் திருப்பதிகங்கள் | 1946 |
| 116 | திருக்கடைமுடித் திருப்பதிகம் | ,, |
| 117 | திருப்பறியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 118 | திருவிளநகர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 119 | திருநின்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 120 | திருஆக்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 121 | திருக்கடவூர் மயானத் திருப்பதிகங்கள் | ,, |
| 122 | மாயூரத் திருப்பதிகங்கள் | ,, |
| 123 | திருநீடூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 124 | திருப்புன்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 125 | திருஅன்னியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 126 | திருத்தருமபுரத் திருப்பதிகம் | ,, |
| 127 | ஆலயவழிபாடு (தோத்திரங்களுடன்) | ,, |
| 128 | திருவேள்விக்குடித் திருப்பதிகங்கள் | 1947 |
| 129 | திருஎதிர்கொள்பாடித் திருப்பதிகம் | ,, |
| 130 | திருமயிலாப்பூர்த் திருப்பதிகம் | ,, |
| 131 | திருஒற்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 132 | திருஞானசம்பந்தர் புராணம் முதல் நூறு பாடல்கள் C. K. S. விரிவுரையுடன் | ,, |
| 133 | திருமணஞ்சேரித் திருப்பதிகங்கள் | ,, |
| 134 | இருபா இருபஃது ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 135 | திருக்குறுக்கைத் திருப்பதிகம் | ,, |
| 136 | தருமபுர ஆதீனப் பாடசாலை 6-வது ஆண்டு அறிக்கை | ,, |
| 137 | திருக்கருப்பறியலூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 138 | 25-வது மகாசந்நிதானம் முதலாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 139 | திருக்குரக்குக்காத் திருப்பதிகம் | ,, |
| 140 | திருஅஞ்சைக்களத் திருப்பதிகம் | ,, |
| 141 | திருப்பழமண்ணிப்படிக்கரைத் திருப்பதிகம் | ,, |
| 142 | திருவாழ்கொளிப்புத்தூர்த் திருப்பதிகம் | ,, |
| 143 | திருஓமாம்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 144 | சிவபோகசாரம் விரிவுரையுடனும் ஆங்கில மொழிபெயர்ப்புடனும் | ,, |
| 145 | திருக்கானாட்டுமுள்ளூர்த் திருப்பதிகம் | ,, |
| 146 | துள்ளிவருகுதுவேல் | ,, |
| 147 | திருக்கடம்பூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 148 | திருஅவிநாசித் திருப்பதிகங்கள் | ,, |
| 149 | திருமுருகன்பூண்டித் திருப்பதிகம் | ,, |
| 150 | திருவெம்பாவை திருப்பதிகம் விளக்கத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1951 |
| 151 | திருவலஞ்சுழித் திருப்பதிகங்கள் | ,, |

| | | |
|---|---|---|
| 152 | 25-வது மகாசந்நிதானம் இரண்டாவதாண்டு ஆட்சி அறிக்கை | 1948 |
| 153 | திருப்பந்தணைநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 154 | திருக்கஞ்சனூர்த் திருப்பதிகம் | ,, |
| 155 | திருக்கோடிக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 156 | திருவாப்பாடித் திருப்பதிகம் | ,, |
| 157 | சிவஞான சித்தியார் சுபக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 158 | அபிராமி அந்தாதி-விரிவுரையுடன் | 1948 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 159 | திருச்சேய்ஞலூர்த் திருப்பதிகம் | 1948 |
| 160 | தருமபுர ஆதீனப் பண்டாரசாத்திரம் முதல் தொகுதி | ,, |
| 161 | நல்வழி | 1948 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 162 | சுவாமிநாதன் பிரபாவம் | 1943 |
| 163 | திருந்துதேவன்குடித் திருப்பதிகம் | ,, |
| 164 | இன்பம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 165 | அறுபத்துமூவர் | 1948 |
| 166 | திருவியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 167 | மெய்கண்ட நூற்பொருட் சிறப்பு | ,, |
| 168 | திருக்கொட்டையூர்த் திருப்பதிகம் | ,, |
| 169 | திருஇன்னம்பர் திருப்பதிகம் | ,, |
| 170 | பழநி ஸ்ரீ தண்டாயுதபாணி தோத்திரங்கள் | ,, |
| 171 | 25-வது மகாசந்நிதானம் மூன்றாவதாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 172 | திருப்பாதிரிப்புலியூர் திருப்பதிகம் | ,, |
| 173 | திருப்புறம்பயத் திருப்பதிகம் | ,, |
| 174 | திருவிசயமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 175 | சைவத் திருமுறைகள்-வசனநூல் | ,, |
| 176 | அமைதி | ,, |
| 177 | திருவைகாவூர்த் திருப்பதிகம் | ,, |
| 178 | திருச்சிவபுரத் திருப்பதிகம் | ,, |
| 179 | மதுரைத் திருப்பதிகம்-தலவரலாற்றுடன் | ,, |
| 180 | திருப்பரங்குன்றத் திருப்பதிகம் | ,, |
| 181 | திருவடகுரங்காடுத்துறைத் திருப்பதிகம் | ,, |
| 182 | திருப்பழனத் திருப்பதிகம் | 1949 |
| 183 | திருக்குறள் கதைகள் எண்பது | ,, |
| 184 | சிதம்பரம்-பதிகங்களுடன் | ,, |

| | | |
|---|---|---|
| 185 | திருப்பெரும்புலியூர்த் திருப்பதிகம் | 1949 |
| 186 | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு விழா நிகழ்ச்சி | ,, |
| 187 | திருநெய்த்தானத் திருப்பதிகம் | ,, |
| 188 | திருக்கண்டியூர்த் திருப்பதிகம் | ,, |
| 189 | திருவாரூர் (பதிகங்களுடன் ஆராய்ச்சி நூல்) | ,, |
| 190 | திருவாலம்பொழில் திருப்பதிகம் | ,, |
| 191 | தாயுமானவர் மடல் குறிப்புரையுடன் | ,, |
| 192 | ஆதீனக் கோயில்கள் கல்வெட்டுக்களுடன் | ,, |
| 193 | திருத்தொண்டர் கீதம் | ,, |
| 194 | திருமழபாடித் திருப்பதிகங்கள் | ,, |
| 195 | திருமுருகாற்றுப்படையும் கோளறு திருப்பதிகமும் | ,, |
| 196 | ஆபத்துத்தாரணர்மாலை அஷ்டோத்திர சதநாமங்களுடன் | ,, |
| 197 | திருப்பழுவூர்த் திருப்பதிகம் | ,, |
| 198 | அபிராமி அந்தாதி மூலம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1953 |
| 199 | திருக்கானூர்த் திருப்பதிகங்கள் | 1949 |
| 200 | திருஅன்பிலாலந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 201 | திருத்திணைநகர்த் திருப்பதிகம் | ,, |
| 202 | திருவாசகம் நூலாராய்ச்சிக் குறிப்புரைகளுடன் | ,, |
| 203 | தருமபுர ஆதீனப் பல்கலைக்கல்லூரி 3-வது ஆண்டு அறிக்கை | ,, |
| 204 | சிவாலய தத்துவமும் கும்பாபிஷேக மகத்துவமும் | ,, |
| 205 | திருமாந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 206 | தருமபுர ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 207 | வாரவழிபாடு | ,, |
| 208 | திருவானைக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 209 | சைவம்: ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 210 | திருவிடைமருதூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 211 | தமிழ் இசை | ,, |
| 212 | திருவாவடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 213 | திருவீழிமிழலைத் திருப்பதிகங்கள் | 1950 |
| 214 | சிவராஜ்யா: ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 215 | திருச்செம்பொன்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 216 | கும்பகோணம் திருப்பதிகங்களுடன் | ,, |
| 217 | திருவாரூர் மும்மணிக்கோவை C. K. S. விரிவுரையுடன் | ,, |
| 218 | திருக்கருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 219 | திருப்பாற்றுறைத் திருப்பதிகம் | ,, |

